# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு

## நான்காஞ் சிலம்பு

இதழாசிரியகூட்டத் தலைவர்;
கா. சுப்பிரமணிய பிள்ளை,
எம். ஏ., எம். எல்., அட்வகேட்.

திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்
லிமிடெட்

குரோதன - அட்சய

**The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly, Ltd,,
Tinnevelly & Madras.**

# உள்ளுறை

[* இக்குறியிடப்பட்ட பொருள்கள் நான்காஞ் சிலம்பில் முடிவுபெறாது ஐந்தாவது சிலம்பில் தொடர்புபெறுவன.]

---

## திருவுருவப் படங்கள்



திருநெல்வேலி காந்திமதியம்மை சோயில் பொற்றாமரைக்குளம்

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள்தோறும் வெளிவருவது

| சிலம்பு ச | மெய்கண்டார் யாண்டு-எாஅ தைத்திங்கள் 1926ஹு ஜனவரிமூ—பிப்ரவரிமூ | பரல் க |
|---|---|---|

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## தமிழர் மணமுறை

[கா. சுப்பிரமணிய பிள்ளை M.A., M.L.]

மக்களுள் இல்லற வாழ்க்கை இனிதாகப் பயன்மிக நடைபெறுவதற்கு மணமுறையானது செவ்வனே அமைதல்வேண்டும்.

"காதன் மனையாளுங் காதலனு மாறின்றித்
தீதில் ஒருகருமஞ் செய்பவே."

என்றவண்ணம் இல்வாழ்க்கையை நடத்தும் தலைவனும் தலைவியும் ஒத்த மனமுடையராய் நற்செய்கைகள் செய்யக் கடமைப்பட்டுள்ளார். இருவருக்கும் உணர்ச்சியொருமை முதற்கண்ணேயே

அமைந்திருப்பதுகண்டு வாழ்க்கைப்படுதல் ஒரு முறை. அமை தற்கேற்ற பான்மை யிருத்தல்கண்டு மணம்புரிதலுங் கொள்ளத் தக்கது. அனையதன்மை உளதா? இலதா? வென்று ஆராய்ந்து முடிவு செய்யாமல் ஓர் ஆண் மகனும் ஒரு பெண் மகளும் இல்லற வாழ்க்கை தொடங்குதல் நற்பயன் தரினும் தரும், தராது இடர் விளைக்கினும் விளைக்கும். மணம் ஆயபின் இருவர் மனமும் ஒத்திருந்தால் முன்னையது நிகழும். ஒவ்வாவிடின் இல்லறம் செம்மையாக நடைபெறாதாகலானும் இருவரது புணர்ப்பையும் ஒழித்தல் எளிதன்றாகலானும் பின்னையது நிகழுமென்பது தெளிவு. இக்கருத்துக்களை உள்ளத்தில் பதித்துக்கொள்ளாமல் தலைவன் தலைவியர் கூட்டுறவு ஏற்படுவது பிற்காலத்து முறையாக அமைந்தது.

ஓர் இளைஞனது பெற்றோரும் ஒரு சிறுமியின் தாய் தந்தை யரும் தமது சிறு மகாரது மணத்தினை முடிப்பதற்குத் தமது கருத்து ஒப்புமை ஒன்றினையே நாடுகின்றார்கள். சிறுவர் இரு வரும் மணம் என்பது இத்தகையது என்று அறிந்து அதற்குத் தமது இணக்கத்தைத் தெரிவிக்க இயலாத காலத்து அன்னோரது பெற்றோர் மணம் முடிக்கக் கருதின், அவர்கள் தங்கள் கருத் தொற்றுமையையே கருதக் கூடுமேயன்றி மணமக்களது இசை வினை அறியமுடியாது. குழந்தை மணம் நடக்கும் இடங்களி லெல்லாம் இக்குறை நிகழற்பாலதே. மணம் முடிந்து இல்வாழ்க் கை தொடங்கும் போதுதான் அம் மணத்தால் நேரும் குறை பாடுகளை மணமக்கள் உணர்வார்கள். அவ்வுணர்ச்சி பிறந்த காலத்தே மணமக்கள் தமது தொடர்பை நீக்க முயன்றால், அஃது அவர்களுக்கு எளிதானதொன்றல்ல. ஈராயிரமாண்டு கட்கு முந்திய பண்டைக்காலத்தே தமிழகத்தில் வாழ்ந்த நன் மக்கள் தலைவன் தலைவியரது உள்ள ஒற்றுமையால் ஏற்பட்ட மணவாழ்க்கையினையே சிறந்ததெனக் கொண்டாரென்பது அகப் பொருள் நூல்களால் இனிது விளங்கும். அகப்பொருள் இலக் கணத்துள் கூறிய முறை மிக அரியதாய ஓர் எடுத்துக் காட்டாக அமைந்துள்ளதெனினும் அஃது உலகியலோடு முற்றிலும் பொருத்தமில்லாததல்ல. ஆசிரியர் நச்சினார்க்கினியர் ஐந்திணை

ஒழுக்கத்தைப்பற்றிப் பின்வருமாறு கூறுதல் காண்க. "இஃதில்ல தெனப்படாது உலகியலேயாம். உலகியலின்றேல், ஆகாயப்பூ நாறிற்றென்றுழி அது சூடக் கருதுவாருமின்றி மயங்கக் கூறினு னென்று உலகம் இழித்திடப்படுதலின் இதுவும் இழித்திடப் படும்." "யாதானும் ஒரோவழி ஒரு சாரார் மாட்டு உலகியலான் நிகழும் ஒழுக்கத்தினை எல்லார்க்கும் பொதுவாக்கி இடமுங் காலமும் நியமித்துச் செய்யுள் செய்தலைச் செய்யுள் வழக்கு" என்றார். ஆதலால் தமிழகத்து வழங்கிய மணமுறையுள் சிறந்த தொன்றனையே அகப்பொருள் இலக்கணம் அடிப்படையாகக் கொண்டுள்ளது. இருவரது கருத்தொற்றுமையை உணர்வதற்கு எதுவாகிய **களவொழுக்கம்** நிகழாமலும் **கற்பெனப்படும் இல்லற வாழ்க்கை** நிகழ்ந்திருத்தல் கூடும். இருவருடைய காட்சி முத லியன நிகழ்ந்தபின் அமையும் கற்பொழுக்கம் சிறந்ததென்பது **களவியலுரையுள்** கூறப்பட்டது. அதன் கடு-ம் சூத்திரத்துள் "கற்பெனப்படுவது களவின் வழித்தே" என்னும் பகுதிக்குக் 'கற்பென்பதற்குச் சிறப்பென்பது களவின் வழித்து' என்று பொருள் உரைக்கப்பட்டது. களவின் வழி நிகழாதேயும் உண்டு உலகக் கற்பு. அஃது இத்துணைச் சிறப்பு இன்று என்றற்குச் சொல்லப்பட்டது என்றதுங் காண்க.

ஓர் பொழிலகத்தே யாதல் அல்லது பிற எவ்விடத்தே யாதல் தலைவன் தலைவி என்பார்க்குக் காட்சி முதலியன நிகழ்ந்து அன்னோரது குறிப்பறிவு முற்றுப்பெற வேண்டுமென்பதே அகப்பொருள் இலக்கணத்திலும் அதன் வழித்தாய இலக்கியங் களிலும் நன்கு நாட்டப் பெற்றது. பல பிறவிகளிலும் ஒத்த அன்பினராய் இல்வாழ்க்கை நடத்திய இரண்டு உயிர்கள் இப் பிறப்பிலே ஆணும் பெண்ணுமாக ஒருவரையொருவர் தலைப் பட்ட ஞான்று அன்னோரது உழுவலன்பு வெளிப்பட்டு அவ்விரு வரையும் ஒற்றுமைப்படுத்தும். **மணிமேகலை** யென்பாள் அருந் துறவு பூண்டபின்னும், **உதயகுமாரன்** என்பானைக் கண்டவுடன், பிறர் ஒருவர்பாலும் செல்லாத தனதுள்ளம் அவன்பாற் சென்ற தைக் குறித்து அதற்குக் காரணம் யாதென வினவியகாலை எழுந்த விடை இதற்கு ஓர் எடுத்துக்காட்டாம்.

"நினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉ
மனக்கினி யாற்குநீ மகளா யதூஉம்
பண்டும் பண்டும் பல்பிறப் புளவாற்
கண்ட பிறவியே யல்ல காரிகை" (மணிமேகலை)

கம்பராமாயணத்தில், சனகன் வில் முறிபடுவதற்கு முன்னமே சீராமனும் சிதையும் ஒருவரை யொருவர் கண்டு காதலுற்றதாக மொழிந்தமை காண்க.

"எண்ணரு நலத்தினா ளிணைய ணின்றுழி
கண்ணொடு கண்ணிணை கவ்வி யொன்றையொன்
றுண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
அண்ணலு நோக்கினா னவளு நோக்கினாள்" (இராமாயணம்)

'இருவரு மாறிப்புக் கிதய மெய்தினார்
ஒருங்கிய இரண்டுடற்கு உயிரொன் றாயினார்' ( ,, )

பெரிய புராணத்திற் பரவையாரும் ஸ்ரீ சுந்தரமூர்த்தியைக் காதலுடன் கண்டதைப் பின்வருஞ் செய்யுளிற் காண்க.

"தண்டாள மணித்தோடுந் தகைத்தோடுங் கடைபிறவே
கெண்டைநெடுங் கண்வியப்பக் கிளரொளிப்பூ ணாரவேனை
பண்டர்பிரான் றிருவருளா லயலறியா மனம்விரும்பப்
பண்டைவிதி கடைகூட்டப் பரவையா ருங்கண்டார்."
(பேரியபுராணம்)

ஒத்த அன்பில்லாதவர்கள் தலைப்பட்டபோது கருத்தொற்றுமை நிகழக் காரணமில்லை. கருத்தொற்றுமை யில்லாதவர்கள் மணவாழ்க்கை நிறுத்தும் கருத்தில்லாது தவறிய ஒழுக்கத்தைக் கைக்கொண்டால் அவர்கள் அரசனால் ஒறுக்கப்படுதல் பண்டை வழக்காக இருந்தது. இருவருள் ஒருவர்க்கு மாத்திரம் மற்றொருவரிடம் அன்பு நிகழ்தல் வெளிப்படையாயின் அது **கைக்கிளை** எனப்படும். கைக்கிளை என்பது இருவாது தாய் தந்தையர் கருத்திற் கிணங்க மணம் ஏற்படுவதையும் தன்னுள் அடக்கி நிற்கும். வலிந்து கோடலும் பொருத்த மில்லாது கோடலும் **பெருந்திணையாகும்.** கைக்கிளை என்பது ஒருதலைக்காமம் எனப்

படும்; பெருந்திணை என்பது ஒவ்வாக் காமம். இருவாது அன்பி னாலும் நேர்வது ஐந்திணை எனப்படும்.

"கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப"

என்றார் ஆசிரியர் **தொல்காப்பியனார்**. இவைகளே தமிழ்நூல் கூறும் முறைகளாகும். இலக்கணங் கூறப்புகுந்தார் தமிழ்நூல் முறைகளை வடநூல் முறைகளோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளார்கள். ஐந்திணை ஒழுக்கம் கந்தருவ ஒழுக்கத்தோடு ஒத்ததென்று **தொல்காப்பியத்துள்ளும், களவியலுள்ளும்** கூறப்பட்டது.

"மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்லியாழ்த் துணைமையோ ரியல்பே"

"அந்தண ரருமறை மன்றல் எட்டனுள்
கந்தருவ வழக்க மென்மனார் புலவர்"

இப்பகுதிகள் பிற்கால இடைச் செருகல் என்று கொள்வாரு முளர். களவியலுரையுள் 'அருமறை' என்பது வேதம் என்று சுட்டப்பட்டது. வேதத்துள் எண்வகை மணம் தெளிவாகக் கூறப்படவில்லை. ரிக் வேதத்துள் "பெண்கள் பெரும்பான்மை யும் நாயகர்களை அவர்களது செல்வத்தின் பொருட்டுத் தெரிந் தெடுக்கின்றார்கள். நற்பெண்டிர் தம்பால் அன்புடையாரையே நாடுவார்கள்" என்று கூறப்பட்டிருக்கிறது. எண்வகை மணத் துள்ளும் சுயம்வரம் ஒன்றெனத் தெளிவாகக் கூறவியலாது. இம் மணங்கள் மிருதி நூலாராலும் கற்ப சூத்திரக் காரராலும் வேத காலத்திற்குப் பின்னரே கூறப்பட்டன. 'அருமறை' என்ற சொற்றொடர் வடமொழியுள் வைதிகச் சார்பாய எந்நூலையும் குறிக்க வழங்கிய காலத்தே மேற்கூறிய அக இலக்கண நூற்பகு திகள் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும். எண்வகை மணத்தை யும் எழுதிணையுள் அடக்கிக் கூறுவதுண்டு.

எண்வகை மணமாவன:—

"அறநிலை யொப்பே பொருள்கோ டெய்வம்
யாழோர் கூட்டமரும் பொருள் வினையே

யிராக்கதம் பேய்நிலை யென்றிக் கூறிய
மறையோர் மன்ற லெட்டிவை யவற்றுட்
டுறையமை நல்லியாழ்த் துணைமையோ ரியல்பிதன்
பொருண்மை யென்மனார் புலமை யோரே"

(களவியலுரை)

அறநிலை என்னும் பிரமயென்பது சஅ யாண்டு பிரமசாரியா யிருந்தவனுக்கு கஉ வயதுடைய பெண்ணை வாழ்க்கைத் துணையாகக் கொடுப்பது. சஅ வயதுவரை ஒழுக்கந் தவறாது நன்னெறிக்கடைப்பிடித்துத் தமது உடம்பைப் போற்றி இல்வாழ்க்கைக்குத் தக்கவண்ணம் அமைத்துக் கொள்ளும் பேரறிவாளரைக் காண்பது மிகவும் அருமை. அவ்வளவு வயதில் இல்லற வாழ்க்கையை முடித்து மறுமையை நோக்கி நிற்பாரே இக்காலத்தில் மிகப்பலர். இவ்வகையான மணத்தைச் செய்து கொள்ளும் இருவாது கருத்தொருமை எளிதில் தெரியற்பாலதன்று. களவியலுள் தலைவிக்கு கஉ ஆண்டும் தலைவனுக்கு கசு ஆண்டும் கூறப்பட்டது. பிரம மணத்துள் தலைவன் தலைவிபால் அன்பு வைத்தல் எளிது. ஆனல் தலைவி தலைவன்மாட்டுக்காதல் கூறுதல் திண்ணமல்ல. ஆதலால், அது கைக்கிளையின்பாற்படும். இவ்வகை மணம் தமிழ் நாட்டில் என்று மிருந்ததாகத் தெரியவில்லை. ஆதலால் அதனைப்பற்றித் தமிழர் கருத வேண்டியது யாதுமில்லை.

பிரசாபத்திய மென்பது மைத்துன வகையிலுள்ளார் பெண் வேண்டிச் சென்றால் மறாது கொடுப்பது. முறைப் பெண் மணம் என்பது இதன் சார்பாக இன்றும் தமிழர்க்குள் உள்ளதே. தலைவன் தலைவி யாவோர் நெருங்கிப் பழகுவதற்கு இருவாது குடும்பத்திற்குமுள்ள உறவு இடங்கொடுத்து நிற்றலின் இஃது ஐந்திணை யொழுக்கத்தோடு ஒருசார் ஒற்றுமையுடையது. களவின்றிக் கற்பு நிகழுமிடத்து இம்மணமுறை தழுவற் பாலதே. நெருங்கிய இனத்தாருள் மணம் நிகழுவது அன்னோரது உடல் வலிக்கு எற்றதன்று என்று ஒருவகை நூலோர் கூறுகின்றார்கள். வேறுசிலர் இருதிறத்தார்பாலும் நோய் முதலிய உடற்குற்றம்

இல்லாதவிடத்து இத்தகைய மணமுறையால் யாதும் இழுக்கில்லை என்கின்றார்கள். இதனுள்ளும் கைக்கிளை நிகழற்பாலதே மகட்கொடைக்குரிய இனத்தாருள் இம்மணம் நிகழ்தலின் இதனை **ஒப்பு** என்பர்.

**ஆரிடமென்பது** ஆரிய முனிவரது முறையாகத் தெரிகின்றது. அது பொற்கொம்பு, பொற்குளம்பு முதலியவற்றையுடைய பசுவினையும் காளையையும் பெண்ணிற்கு உரிமைப்பொருளாக மணஞ்செய் காலத்தே கொடுப்பது.

**தெய்வம்** என்னும் மணம் வேள்வியாசிரியர்க்கு வேள்வித்தீ முன் வைத்துப் பெண்ணை மணஞ் செய்து கொடுப்பது. இதுவும் தமிழ் வழக்கன்று.

**காந்தருவ**மென்பது கந்தருவர்க்குள் இருவர் ஒத்தால் தாமே கூடும் கூட்டமென்று ஆரியத்துள் கூறப்பட்டது. கந்தருவர் என்னும் ஒருவகைத் தேவர்க்குள் முதலில் நடைபெற்றதாக ஆரியர்கள் கருதுகின்றார்கள். ஆதல்பற்றி இது யாழோர் கூட்டமென்னப்படும். இது தமிழரது ஐந்திணை யொழுக்கத்தோடு ஒத்ததென்று கூறப்பட்டது.

இனி, **அசுர**மென்பது எதாவது வீரச் செய்கை செய்தோனுக்கு ஓர் பெண்ணை மணஞ்செய்து கொடுப்பது. விரும்பினார்பால் மாலை சூட்டி மணஞ் செய்யும் சுயம்வரம் என்னும் முறையும் இதனுள் அடங்குமென்ப. இதுவும் தமிழ் நாட்டில் சிறப்பாக நடைபெறவில்லை.

**இராக்கத** மென்பது வலிந்து ஒரு பெண்ணைத் தானே கொள்வது. இது தக்கதோர் முறையன்று. அவ்வாறே துயின்றாளைக் கொள்வதும், களித்தாளைக் கொள்வதுமாம். தன்னின் மூத்தாளை மணப்பதும் இதிலடங்குமென்ப. அது முன்னையன போல் பெருங் குற்றமாக சில வகுப்பினரால் கருதப்படவில்லை. **ஷேக்ஸ்பியர்** என்னும் ஆங்கிலப்புலவர் தன்னினும் 7வயது மூத்த ஒரு பெண்ணை மணந்ததாக அவரது சரித்திரங் கூறுகின்றது.

தமிழரது மணமுறைகளை ஆரிய மணமுறைகளோடு பிறழக் கொள்ளாது வேறு பிரித்து ஆராய்ச்சி செய்து அவற்றுள் சிறந்த முறையினையே இக்காலத்தில் கடைப்பிடித்தல் நலம் பயப்பதாகும். தமிழ் நன்மக்கள் குழந்தை மணத்தைப் பெரும் பாலும் இதுவரை கைக்கொள்ளாமலிருப்பதால், வாழ்க்கைப் படும் இருவருடைய கருத்தொருமையைத் தீர்மானிப்பதற்கு உள்ள இடையூறுகளில் ஒன்றில்லை யென்பது தெளிவு. சிறுமியர்களுக்கு அவரவர்களுக்குத் தக்க கல்வியினைப் பயிற்று தல் வேண்டும். நமது பெண் மக்களுக்குச் சிறப்பாக இல்லாண் மையும், சமையல் முறையும், பிள்ளைகளை வளர்க்கு முறையும், தலைவனோடு ஒத்த கருத்துடையயாய்ப் பொருள் முதலியவற் றைச் செட்டாகச் செலவு செய்து குடும்பத்தைப் பாதுகாக் கும் முறைமையும், வறியார்க்கும் தக்கார்க்கும் தமது அளவிற் கேற்ப உதவும் வண்மையும், அடக்கமும் ஏனையகலைகளோடு பயிற்றப்படுதல் வேண்டும. முத்தமிழும் அவர்களுக்குக் கற் பிக்கப்படலாம். காலத்திற் கேற்றவாறு நாகரிக ஒழுக்கங்களை யும் அவர்களுக்குக் கற்பித்தல் குற்றமாகாது. பொருட் செல வினை வறிதே விளக்கும் வீண்வழக்கங்களை அகற்றவேண்டிய உணர்வும் அவர்களுக்கு ஈதற்பாலது. ஆண்மக்களுக்கும் ஏனைக் கல்விகளோடு தமது பிழைப்பிற்குரிய ஊதியம் ஈட்டப் பயன்படும் தொழிற் கல்வியும் நல்லொழுக்கமும் பயிற்றப்படுதல் வேண்டும். இரு பாலார்க்கும் நன்னெறியும் பயன்மிக்க கல்வியும் கைவந்த பின்னர் அவர்கள் மணவாழ்க்கை புகுதற்பாலர். அன்னோர் மணம் புரியுமுன் காட்சியாலும் கேள்வியாலும் தத்தமக்கு உரி யாரைத்தேர்ந்து கொள்ளும் உரிமையுடையராதல் வேண்டும்.

அவ்வுரிமையைத் தக்கவாறு கையாளுவோர் இனிய மண வாழ்க்கையுடையராவர். மணம் புரியுங் காலை இருபாலாரும் தத்தம் கடமைகளை உணர்தற்குரிய உறுதிமொழிகளும் நெறிச் செயல்களுமே நிகழவேண்டும். பொருள்விளங்காததும் பய னில்லாததுமான நெறிச்செயல்கள் விலக்கப்படல்வேண்டும். ஒத்த குணம், அழகு, கல்வி முதலியவற்றின் பின்னரே செல்வம் என்பது கருதற்பாலது. மணவிழாவிற்கும் நகைகட்கும் பெரும்

பொருள் செலவிட்டு நம்மில் பலர் வறியராயினராகலின் அத் துணைச் செலவில்லாமல் இன்பந்தரு முறையாகத் தமிழ் மக்கள் மணம் நடைபெறவேண்டும். மணத்தின் இருதிறத்தார்க்கும் உப சாரங்கள், வரிசைகள் முதலிய வெளியாடம்பரங்கள் காரணமாக உளதாகும் மன வேற்றுமையை அறவே ஒழித்தல் வேண்டும். கணவன் மனைவி என்னும் இருவரது பெற்றோரும்; சுற்றத்தாரும் தமது நன்மக்களது கருத்தொருமைபற்றி நிகழும் நல்வாழ்க்கை யினையே தமது முழுநோக்கமாகக் கைக்கொள்ளவேண்டும். ஏனை ஆரவாரங்களையும் அவைபற்றிவரும் அளவற்ற ஒற்றுமைக் குறைவுகளையும் பொருட்படுத்தாது நெகிழவிடவேண்டும்.

காதலன் காதலியாய இருவரது கருத்தொருமையை அவர் களின் செம்மையான இல்வாழ்க்கையின் வைத்துக்கண்டு மகிழ்ந்த செவிலித்தாய் கூற்று பின்வரும் குறுந்தொகைச் செய்யு ளொன்றில் அமைந்துள்ளதைக் காண்க.

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கங் கழாஅது உடீஇக்
குவளை உண்கண் குய்ப்புகை கமழத்
தான்றுழந்து அட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே."

ஓர் தலைவி தனது கணவனுக்கு உணவு செப்பஞ் செய்யுங்காலை, தயிர் கடைந்த கையைக் கழுவுவதன் முன்னே அடுப்பின்மேல் கொதித்துக் கொண்டிருந்த நறுமணமிக்க புளிக் குழம்பு பாகந் தவறிவிடக் கூடாதென்று தெரிந்து, விரைந்து, கழுவாக் கை யோடு நெகிழ்ந்த தனது தூய ஆடையினையும் கட்டிக்கொண்டு அஃது அழுக்குப் படுதலையும் தங்கண்ணுள் தாளிதப்புகை பாய் வதையும் பொருட்படுத்தாது, அக்குழம்பினைச் சமைத்து முடித்து, தயிரும் அன்னமும் அதுவுங் கலந்து கணவனுக்கு இட, அவன் அவ்வுணவினை இனிது இனிதெனக் கூறி உண்ணு தலைக் கண்டு, மகிழ்ந்தனள். அதனைக் கண்ட செவிலித்தாய்

இருவரது மனவாழ்க்கைச் சிறப்பினைப் பெரிதும் பாராட்டி நற்றாய்க்கு உரைத்தாள். இச்செய்புளிற் காணும் அரும் பெருங் கருத்துக்களை ஈண்டுவிரிக்கிற் பெருகுமென விடுத்தாம.

இதுகாறுங் கூறியவற்றால் தமிழரது இன்பவாழ்க்கை **கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை** என்னும் மூவகை யொழுக்கங்களை அடிப்படையாக வுடையதென்றும், ஆரியரது எண் வகை மணத்துள் **ஒப்பு, கந்தருவம், அசுரம்** என்னும் ஒரு சில இவற்றோடு ஒக்குமென்றும், இப்பொழுது தமிழருள் நடைபெறும் மணமுறை பண்டைச் சிறப்பு முறையைத் தழுவியதல்ல வென்றும், பண்டைக் கொள்கைக்கு எற்றவாறு இக்காலத்துத் தமிழ் நன் மக்களுக்கு ஒத்த கல்வியறி வொழுக்கங்கள் பயிற்றப்படுதல் வேண்டுமென்றும், ஒத்த நலனுடைய ஆடவரும் பெண்டிரும் தத்தம் வாழ்க்கைக் கடமைகளை உணர்ந்து வாழ்க்கைக்குத் தகுதியாய பின்னரே தமது கருத் தொருமையையே முதன்மையாகக் கொண்டு பயனில் செயல்களை ஒழித்து இனிய எளிதாய முறையில் தத்தம் மணச் செயல்களை நடத்திக்கொள்ள வேண்டுமென்றும், அதனை இல்லறவாழ்க்கைக்குரிய இருநிறத்தாரும் அவர்களைச் சார்ந்தாரும போற்றி வாழ வேண்டுமென்றும் உய்த்துணர்ந்து கொள்க.

---

## சிதம்பர தரிசனம்

[S. A. திருமலைக்கொழுந்துப் பிள்ளை B. A.,]

**குமரகுருபரன**து அருளைச் சிறு பிராயத்திலேயே பெற்று ஊமைத் தன்மை நீங்கி, அருளால் வாய்திறந்து **'கந்தர் கலி வெண்பா'** வெனும் அற்புதப் பிரபந்தத்தைப் பாடிய குமரகுருபர சுவாமிகள் சிதம்பர தரிசனத்தால் முத்திசித்திக்கு மென்பதை அன்பர்கள் யாவரும் கேட்டு உள்ளம் மகிழுமாறு சிவபெருமானர் பக்கல் செய்யும் விண்ணப்பத்தின் கருத்தை நோக்குக.

எ, பிரபு; மண்ணையும் விண்ணையும் அவற்றுள்ள சராசரப் பகுதிகளனைத்தையும் படைத்தது தமருகமாகிய உடுக்கையைக் கொண்ட நினது **கரம்**. இங்ஙனம் படைத்த பிரபஞ்சத் தொகுதி

யைக் காப்பது நினது அபயகரம்; இங்ஙனம் படைத்துக் காத்த உலகங்களடங்கலேயும் ஒன்று மில்லேயாம் வண்ணம் உருத் தெரியாம லழிப்பது ஊழித் தீயைக்கொண்ட வோர் கரம்; சிவகோடிகளே அவரவர்க்குரிய வினைவழி யாட்டிப் போகங்களேப் புசிப்பிக்கச் செய்வது நினது ஊன்றிய பாதம்; பக்குவம் வாய்ந்த ஆன்ம கோடிகளுக்கு அளவைகடந்த பேரானந்தத்தைக் கொடுப்பது நினது குஞ்சித பதமாம். இங்ஙனம் பஞ்ச கிருத்தியங்களே யியற்றுவிப்பது நினது சரீரமே. இங்ஙனம் உலகனைத்தையுமீன்ற பரம மாதாவாகிய சிவகாமி யம்மையார் காண நீ பஞ்ச கிருத்திய பரமானந்தத் தாண்டவம் புரியும் அற்புதத்தை யென் சொல்வேன்! நோயை வெல்லவல்ல கடுமைகொண்ட ஓர் மருந்தை நேரே குழந்தைக்கு ஊட்டின் அக்குழந்தையினது பசியகுடல் அம்மருந்தின் கொடூரத்தைத் தாங்கலாற்றது குழவி சாதலுங் கூடுமென்பதை யுணர்ந்த தாய் அக்கொடிய மருந்தைத் தானே யுண்டு குழந்தைக்கு முலேயமுத மீந்து அதனேக் காப்பதையொப்ப ஆன்மாக்கள் யாவும் ஈடேறும்வண்ணம் சித்சபையின் கண்ணே இவ் வைந்தொழி லமைந்த பரமானந்தத் தாண்டவம் புரிகின்றனே.

ஆன்மாக்கள் உய்தற் பொருட்டு நீ அருளிய அறங்கள் பலவாம். அவை யாவும் இல்லறம் துறவறமெனும் இரண்டனுளடங்கும்.

இல்லறமோ, கலேகள் யாவுங் கற்று கற்புடை மங்கையை மணந்து அன்பையும் அருளேயுந் தாங்கி முகமலர்ச்சியுடன் விருந்தினரை மகிழ்வித்து, துறவிகளே மனங்கோணுது பேணி ஐவகை வேள்விகளே முற்றுவித்து, பிறர்மனே நயவாது தகாத நாட்களே யொழித்து புத்திரப் பேறு காரணமாக மனேவி தோளேத் தோய்ந்து இன்பந்துய்ப்பதுவாம்.

துறவறமோ மற்றும் கடுமையது. தூய சிந்தையொடு மலேயையேனும் காட்டகத்தையேனும் அடுத்து கந்தமூலாதிகளே யருந்தி வெயிற் காலத்திற் பஞ்சாக்கினி மத்தியிலும் குளிர் காலத்தில் தண்ணீரிலும் மூழ்கித் தவம்புரியும் பெற்றியது.

ஆகவே ஆற்றலும் அறிவுங் குன்றிய எம்மனோர்க்கு இவ்வி ரண்டில் ஒன்றும் புரிதற் கியலாது. உய்யும் நெறி வேறேதேனும் எளிதான துளதோவென மனம் அலமரா நிற்கையிற் சில பேரியோர் எதிர்ப்படவே, அவரை வினவாநிற்புழி அன்னோர்! 'முத்திமா நகரங்கள் மூன்று. அவை திருவாரூர், காசி, தில்லை. திருவாரூர் பிறக்க முத்தியும், காசி இறக்க முத்தியும், தில்லை தரி சிக்க முத்தியளிக்கு' மெனக் கூறினர். ஆரூரிற் பிறத்தல் தானே நேர்படினல்லது செயற்கையா லடைதற்பாலதன்று. காசியி லிறக்க வேண்டுமானால் தேகத்தை விட்டு அறத்தால் ஈட்டப் பட்ட பொருளைக் கைக்கொண்டு இடைவழியில் சாகாது காசிப் பதியைக் கிட்டிச் சாங்காறும் அந்நகரை விட்டு நீங்காதுறைவ தாற் போதருவதாம். இங்ஙனம் புரிகையும் எளியதன்று. சிற் றுயிர்கள்பாற் கருணை கொண்டு சிற்றம்பலத்தில் நட்டம் பயி லும் பெருமானே, 'நினது ஆனந்தத் தாண்டவத்தை இந்தச் சிதம்பரப் பதிக்கண் ஓர் முறை தரிசித்து முத்தியைப் பெறலாம். இதுவே முத்திக்கு எளிதான வழியென நினைத்து நினது பரமா னந்தத் தாண்டவத்தைத் தரிசித்தேன். இதுபற்றியே நான் நினது சந்நிதானத்தை யடைந்ததூஉம் எனக்கு நின்பாற் றக்க பற்றும் அன்புமில்லாமையை நோக்கி 'நீமுத்திக்கு அருகனன்று' என வென்னைத் தள்ளிவிடக் கூடாது.

நோய்தீரும் வேட்கை யுடையோன் அது தீரும் மருந்தை உள்ளபடி மகிழ்ச்சியுடன் அருந்தினும் சரி, மிக்க வெறுப்புடன் அருந்தினும் சரி. உட்புகுந்த மாத்திரையானே அம்மருந்து அந்நோயைப் போக்குவது சரதமே. அங்ஙனமே நான் காண முத்திதரும் நினது தில்லைப்பதியில் நின்னைத் தரிசித்தேன். எனக்கு நின்பால் கசிந்த அன்பிருப்பினுஞ் சரி, என தன்பு பொய்யேயாயினுஞ் சரி; தரிசனஞ் செய்தது மெய்யே யாதலின் முத்தியை யளிப்பது நின்கடனாகும்.

தமிழ்ச் சுவைக்கண் விருப்பமுள்ளோர் மேலைக் கருத்தைக் கொண்ட அகவலைப் பாடஞ் செய்க. சிதம்பர மும்மணிக் கோவையிலுள்ளது. இப்பிரபந்தம் குமரகுருபரர் அருளிய பிரபந் தத்திரட்டிலுள்ளது.

# சிதம்பரம்

[S. A. திருமலைக்கொழுந்துப் பிள்ளை, B. A.]

(சிற்றம்பலம்)

சிதம்பரம் என்பது சித் அம்பலம் என இருசொற் கூடிய மொழி ; அறிவாகாசம் என்று பொருள்.

ஆகவே நடராஜன் என்பதன் மெய்ப்பொருள் 'அறிவுமய மான ஆகாசத்திற் றூண்டவம் புரிவோன்' என்பதாம். ஆகவே நடராஜப் பெருமானே சேதனப் பிரபஞ்சத்தை வினைவழியாட்டு விக்கும் சூத்ரதாரனுவான்.

சிதம்பரம் புண்டரீக புரமெனவும் பெயர்பெறும். மாந்த ருக்கு ஹிருதயமாகிய தாமரை தேக நடுவுள் உயிர்த் தானமாக வமைந்திருப்பதுபோல் பிரபஞ்ச ரூபனுன விராட்புருடனுக்கு இருதயத் தானமாவது சிதம்பரமே. இதுவே புண்டரீக புரமாம். [புண்டரீகம்=தாமரை]

சிற்றம்பலம் என்பதை ஓராற்றுல் வடமொழிப் பதமாகிய 'சிதம்பரம்' என்பதன் திரிபாகக் கொள்ளற் பாற்று. ஆயினும் சிற்றம்பலமென்பது சிறிய ஆகாசமெனப் பொருள்பட்டு தகர வித்தையைக் குறிக்குமென்பதே மெய்ப் பொருளாகும். தகர வித்தையின் இரகசியத்தை ஆன்றோர் பக்கல் கேட்டுணர்க. 'எல்லாம் வெளியே யென்று எச்சமயத்தவரும் வந்திறைஞ்சா நிற்பர் !' எனத் **தாயுமான சுவாமிகள்** கூறினர். இச்சிற்றம்பலம் சமயாதீதத் தலமாகலின் இஃது 'போது' எனவுங் கூறப்படும்.

'முத்தி தரும் தெய்வசபை' எனத் **தாயுமானவர்** வற்புறுத் திய இடமும் இதுவேயாம்.

கன்னெஞ்சத்தவரையும் கனிவித்து முத்திக்கு வழிகாட்டும் புண்ணிய பூமியும் இதுவேயாம்.

**அப்பர் சுவாமிகள்** 'இனித்த முடைய எடுத்த பொற்பாத முங் காணப் பெற்றால், மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம்

மாநிலத்தே' யெனவும் சிதம்பரத்தை முதல் முதல் தரிசிப் போரைப் பரமனுர் 'என்று வந்தாய்' என வழைப்பது போன்ற திருக்குறிப்பு அன்பர்கட்கு வெளிப்படு மெனவும் கூறியதை யெல்லாம் மனத்துட் கொண்டு சிதம்பர தரிசனத்தை எவரும் ஆவலோடு விரும்பக்கடவர்.

வைணவர் இத்தலத்தை 'சித்திர கூடம்' என்பர்; துருக் கர் 'சிலேமான்தகத்' எனக்கூறு நிற்பர்.

---

# சேக்கிழார் பெரிய புராணம்

[வேலூர் C. S. இராஜாப்பிள்ளை.]

(கூ-ம் சிலம்பு இஉகூ-ம் பக்கத் தொடர்ச்சி)

மேலும், இந்நாடு தண்டகன் என்னும் மன்னவனுல் ஆளப் பெற்றமையால் தண்டக நாடெனவுங் கூறப்படும். இந்நாட்டைத் தண்டகன் ஆண்டுவருங் காலத்து ஒருநாள் வேட்டைக் கோலம் பூண்டு, கானகத்தெய்தி பல்வகைய மாக்களைக்கொன்று, வேட்டை முடித்து இளைப்பாற, ஓர் நீர் நிலே தேடிச் சென்ற காலே இடையிற் பார்க்கவ முனிவர் வாழும் பன்னகசாலே நேர் படக்கண்டு, ஆண்டெய்தி முனிவரின்றித் தனியே வதிந்த அம்முனிவர் பத்தினியைக் கண்ணுற்று, காதன்மீக்கூர, கவலே பெரிதுங் கொண்டு, தடுமாறுளத்தனுய்த் தகாதென்பது முணு ராணுய், அம்மாதவர் மனைவியைக் கைப்பற்றி ஈர்த்தனன். இச் சமயம் முனிவர் வந்து நிகழ்ந்தன தெரிந்து, ஆற்ருெணுக் கோபத்தோடு அவனை நோக்கி, 'ஏ தண்டக! நீயும், நினைத் தற்கும் அரிய இத்தீத் தொழில் புரிய முயன்ற உன்னை விலக்கா தொழிந்த உன் மந்திரிமார்களும் வேடர்களாக உன்னுல் ஆளப் படும் தண்டக நாடும், சிவாலயம் ஒழித்து ஒழிந்தன வனைத்தும் பாழடைக' வெனச் சாபமிட்டனர்.

> குணமென்னுங் குன்றேறி நின்ருர் வெகுளி
> கணமேயுங் காத்த லரிது

என்பது பொய்யா மொழியன்ருே! ஆகலின் உடனே அவர்களும்

வேடர்களாயினர்கள். நகரங்களும் பாழ்பட்டன. முனிவர் சாபத்தால் வேடனாகிய அச் சிந்துமேதன் (தண்டகன் வேடனாய காலத்து அவன் பெயர்) மீட்டும் அவர் தம் பொன்னடிக் கமலஞ் சென்னி மேற்கொண்டு சிறியேங்க ளறியாமற் செய்த பிழையத்தனையும் பொறுத் தெம்மைப் புரந்தருள வேண்டுமெனப் புகன்றருள, "நீர்கிழிய வெய்த வடுப்போலமாறுமே சீரொழுகு சான்றோர் சினம்" என்பது ஆன்றோர் துணிபாகலின், முனிவர் பெருமானும் உடனே தமது சீற்றந் தணிந்து, அவர்களை நோக்கி உங்கள் நாட்டிற்குக் கரிகாலன் என்னும் சோழபூபதி வருவான் அவனைக் கண்ட மாத்திரத்தே உங்களைப்பற்றிய சாப மகலும் உங்கள் நாடும் எல்லா நலனும் எய்திச் சீர்பெறும் என்றுரைத்தனர். இவ்வாறு வேடர்களாய் அலைந்து திரியுங் காலத்து சின்னாட் சென்றபின், வடதிசை நோக்கிச் சென்ற வளவர் பெருமான் கரிகாலன், காஞ்சி நகரத்தை யணுக, சிந்துமேதன் எதிர்ப்பட்டுத் தன் சாபம் நீங்கி, அவனிடம் அந்நாட்டின் வளமனைத்தும் விரிவாகக்கூற, கேட்ட வளவர்பிரான் அதனை நான்கு காதப் பரப்புடைய விசாலமான நகரமாக்கி, 24 கோட்டங்களாக வகுத்து, சோழநாட்டிலிருந்து (48000) நாற்பத் தெண்ணாயிரங் குடிகளை ஏற்றினான். இதனால் அந்நாடு முன்னையினும் பன்மடங்கு சீர் பெற்றுப் பொலிவுற்றது. இது திருக்குறிப்புத் தொண்டர் புராணம் செய்யுள் அரு :—

"என்றுமுள்ள இந்நகர்....................விளங்கும்"

என்பதனானும் உணரக் கிடக்கின்றது.

இவ்வாறு பலவகையானும் மேற்பட்டுவிளங்கும் தொண்டை வள நாட்டிற் புலியூர்க் கோட்டத்து நிலவுங் குன்றத்தூரிற் பெருமை மிக்க வேளாண் மரபில், சேக்கிழார் குடியில், அருண்மொழித் தேவர், பாலறுவாயர் என இரு பெரியார் தோன்றினர்கள். இருவருட் பெரியாராகிய அருண்மொழித் தேவர், தாம் பிறந்த குலத்தை விளக்கஞ் செய்ததனாற் சேக்கிழாரென்னும் பெயர்பெற்று வாழ்ந்தனர். நிற்க, இப்பெரியார் பிறந்த வேளாளர் குலத்தின் பெருமையை ஈண்டுச் சிறிது கூறுவாம்.

உமையம்மை, முழுமுதற்கடவுளிடத்துத் தாம்பெற்ற எட்டுழக் கீராழி நெல்லையும், அவள் கொடுக்கப் பெற்று, உழவு தொழிலாற் பெருக்கி, முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்த பெரியோர்களது குலம் இவ்வேளாளர் குலமேயாம். இஃது சேக்கிழார் பிள்ளைத் தமிழ்

"அறியும்வகை அறமெலாம் பொலியஇரு நாழிநெல்
லளந்து அப்பிரான் கொடுத்த
அனையமா தேவிஏற்று எற்றகை யுயர்த்தமக
ளால்உயிர்த் தோர்க ளேநன்
னெறியும்நல னும்பெருக வுளரெனல் குறித்து அவர்கை
நீட்டப் பணிந்து வாங்கி
நீடுங் கொழுக்கொடுதம் மனையுதவி யால்நனி
நிரம்பப் பெருக்கு குடியுட்
செறியுமொரு குடியாய சேவையர் குலாதிபன்"

என்பதனாலும், 'இமயமலையரையன்.........தலைவர் பெரும்புகழ் உலகிற் றழைத்ததன்றே' (சேக்கிழார் புராணம் செ. கரு) என்பதனாலும் உணரக்கூடும்.

இன்னும் பழையனூர் நீலியாற் பீடிக்கப்பட்டுத் தம்மைப் புகலாகவடைந்த வணிகனிடங் தாங்கூறிய சொற்பிழையாது செந்தீக் குழியின் முழுகிச் சிவனடி பிரியாது வாழும் எழுபதின்மர் பிறந்ததும் இக்குலமே யாம்.

திருநாவலூரர் பாடிய திருத்தொண்டத் தொகையிற் குறிக்கப்பட்ட நாயன்மார்களில் பதின்மூவர் வேளாளரென்பது போதரும்: அவர் திருப்பெயர்களாவன :—

"வாயிலார் சத்தியார் விறல்சேர்மிண்டர் வாக்கரையர்
சாக்கியர் கோட்புலிக் கஞ்சாறர்
ஏயர்கோன் கலிக்காமர் முனைவித்தாக்கு மினையான்றன்
குடிமாறர் மூர்க்கர் செங்கைத்
தாயனர் செருத் துணையார் செருவில்வெம் போர்
சாரித்த முனைய டுவார்"

என்பனவாம். இவ் வேளாளரைப் பற்றிய ஆராய்ச்சி விரியுமாக லின் இதை விடுத்து மேற்செல்வாம்.

இத்தகைய புகழ்மிக்க வேளாளர் குலத்திற் பிறந்த அருண் மொழித் தேவர் இளமைப் பருவத்திலேயே எல்லா நூல்களையும் இனிதுணர்ந்து நிறைவுடையராய்த் தம் பதியாகிய குன்றத்தூரில் வாழ்வாராயினர்.

இவர் அநபாயன் என்னுஞ் சோழ மன்னவன் காலத்தே யிருந்தவர். இவ் வநபாய சோழப் பேரரசரே திருத்தொண்டர் புராண மியற்றுவித்தவர். இது பெரியபுராணப் பாயிரம்

"மேய விவ்வுரை கொண்டு விரும்புமாஞ்,
சேய வன்திருப் பேரம் பலஞ்செய்ய
தூய பொன்னணி சோழனீ டூழிபா
ராய சீரந பாய னரசவை" (செய்யுள் அ.)

என்பதனானுந் தெளியப்படும். இவ் வநபாயன் திருமுறைகண்ட இராஜராஜனுடைய திருமகன் கங்கைகொண்ட இராஜேந்திர னுடைய திருமகள் அம்மங்கைதேவியின் வயிற்றிற்பிறந்து, தங் கள் நாடாகிய வெங்கைமண்டலத்திற்கும், தனது பாட்டன் நாடாகிய சோழமண்டலத்திற்கும், அரசனாகி முடி சூடி, உபய குலோத்துங்கன், விஜயதரன், திருநீற்றுச்சோழன், அபயன், அநபாயன், ஜயதரன், ரசிகன், ராஜசேகரிவன்மன் முதலிய சிறப்புப் பெயர்களெய்தி, திருவாரூர் திருக்குடந்தை, தஞ்சை எனுமிடங்களைத் தலைநகராக்கொண்டு 1070—1118. வரை ஆக 48 ஆண்டுகள் ஆட்சிசெய்தவன். பின்னர்வரும் பெரியார் திரு வாய் மொழிகள் இவற்றை நன்கு புலப்படுத்தும்.

அவை:—கலிங்கத்துப்பரணி-கடவுள் வாழ்த்து 2, 4-12

"அருமறைகள் நெறிகாட்ட அயன்பயந்த
நிலமகளை அண்டங் காக்கும்,
உரிமையினிற் கைப்பிடித்த வுபயகுலோத்
தமனபயன் வாழ்க வென்றே"

"அந்நெடுமா லுதரம்போ லருளபயன் றனிக்கவிகை
இந்நெடுமா நிலமனைத்தும் பொலிந்தினிது வாழ்கவென்றே"

இதனை,

நலத்தி னுயரும் பழையனூர்
நாளும் பொலியு மவையகத்து
நலிவு புரிநீ லியைக்கண்டு
நடுங்கா நின்ற வணிகனுக்கு
நிலத்தி னியனின் னுயிர்க்கிறுதி
நேரு மாயி னியாமெல்லாம்
நெருப்பின் முழுகி யுயிர் துறப்போம்
நீயோ ருதியென் றுரைத்தபடி
வலத்தி னுயரச் சொற்றவரு
வண்ண மெழுநாக் குழிமுழுகி
வடவா ரணியத் தாடொருவர்
மலர்த்தா ளடைந்த எழுபதின்பர்
குலத்தி னுதித்தா ருண்மழைபெய்
கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக்
கோமான் வருக வருகவே.

என்ற **சேக்கிழார்பிள்ளைத்தமிழ்**-வாரானைப் பருவம். ௬-வது செய்யு ளாலும்; திருக்குறிப்புத்தொண்டர் புராணம்-செய். ௩, சேக்கிழார் புராணம்-செய். ௰௫, இவற்றானு முணரலாம்.

சேரநாட்டில் நிகழ்ந்த அரசர்கலகத்தால் சிதறித் தம்மை யடைந்த வணிக மாதினை உடன் பிறந்தாளாக ஏற்று, உரிமை யளித்து, பின் அந்நாடு செம்மை பெற்று அவள்கொழுநன் தேடி யடைந்தகாலை அவனை மைத்துனக் கேண்மை பூண்டொழுகி, பல வரிசைப் பொருள்களுடன் அனுப்பிய பெரியார் பிறந்ததும் இக்குலமேயாம்.

இது-**சேக்கிழார் பிள்ளைத்தமிழ்**. வாரானைப்பருவம். செ. எ.

"அண்ட மளவும்.................
மயங்கல் கண்டு தங்கையெனும்
வாய்மை கொடுமைத் துனக்கேண்மை
கொண்ட குலம்"

எனவும், பெரியபுராணம்

ஆணையாமென நீறுகண் டடிச்சேர னென்னுஞ்
சேணுலாவுசீர்ச் சேரனார் திருமலை நாட்டு
வாணிலாவு பூண் வயவர்கள் மைத்துனக் கேண்மை
பேணநீடிய முறையது பெருந்தொண்டை நாடு

எனவும், தொண்டை மண்டல சதகம்

'கொத்தலர் கோதை வியன்பாண்டி மண்டலக் கொம்பைத் தம்பால், வைத்திருந் தாங்கவ டன்கேள்வன் றேடி வாவவற்கே, உய்த்திரு வோர்க்கும் வரிசையு மாற்றி யுடனுஞ் சென்று, மைத் துனக் கேண்மை படைத்ததன் றேதொண்டை மண்டலமே, எனவுங் கூறுகின்றது.

பெரியபுராணமுந் தொண்டைமண்டல சதகமும் சோநாடும், பாண்டிநாடு மெனக் கூறுதல் கவனித்திடுக.

ஓரிரண்டு திருக்குலமு நிலைபெறவந்
தொருகுடைக்கீழ் கடலுந் நிக்கும்
ஈரிரண்டு படைத்துடைய இரவிகுலோத்
தமனபயன் வாழ்க வென்றே. (க-பரணி செ. ௰உ)

அவதாரம்—ரூ.

இருள்முழுது மகற்றும் விதுகுலத்தோன் றேவி
இகல்விளங்கு தபனகுலத் திராச ராசன்
அருள்திருவின் திருவயிற்றில் வந்து தோன்றி
ஆலிலையில் அவதரித் தானவனே மீள.

என்பனவாம். இன்னும்,

எறிபத்த நாயனார் புராணம் செ. 2
சண்டேசுர நாயனார் புரா. செ. 4

| | |
|---|---|
| திருஞான சம்பந்தர் புரா. | செ. 847 |
| இயற்பகை நாயனர் புரா. | செ. 1 |
| மனுநீதி கண்ட புரா. | செ. 13 |
| புகழ்ச் சோழர் புரா. | செ. 8 |
| கோச் செங்கட் சோழர் புரா. | செ. 14 |

இத் திருப்பாடல்களும், இவைபோற் பலவிடங்களும் இம்மன்னன் மாண்பினைக் காட்டுவனவாம்.

(தொடரும்)

---

## தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்

[மதுரை ஆ. கார்மேகக் கோனர்]

இவன், படைப்புக் காலந்தொட்டு மேம்பட்டு, வந்த பழங் குடியினரான ஈண்டிய சிறப்பிற் பாண்டியர் மாபிற் றோன்றிச் சங்க நாளில் பீடு மிக்க மாட மதுரையில் அறங்கடைப்பிடித்த செங்கோ லுட னமர்ந்து மறஞ் சாய்த்தெழுந்த வலனுயர் திண் டோளினனாய் எண்டிசை புகழ இறைமை தாங்கித் திகழ்ந் தோனாவன்.

நெடுஞ்செழியன் என்பது இவனதியற் பெயராம். நெடுஞ் செழியன் என்னும் இப்பெயருடைய பாண்டியன் மற்றொருவ னும் சங்க நூல்களுட் காணப்படுகின்றான். இவர்களுள் ஒரு வனை ஒருவனினின்றும் 'பிரித்துணர்தற்கு மற்றவன் ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் எனவும் இவன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் எனவும் அவர்களது சிறப்பியல்பைப் புலப்படுத்தும் அடைமொழியுடன் கூறப்படுவர். இவர்களுள் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியனுக்குச் சிறிது பிற்பட்டு விளங்கி யிருந்தவனாவன்; இது இந்நெடுஞ்செழியனோடு பொருத யானைக்கட் சேய்மாந்தரஞ் சேரலிரும்பொறை முதலிய அரசர் செய்திகளான் அறியப்படுவது. ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் புகார் நகரத்து வணிகர் குலதிலகனாகிய கோவ

லனை ஆராயாது கொல்வித்தமைக் கிரங்கித் தனது புரைதீர் கற்பிற் றேவியுடன் அரசு கட்டிலிற் றுஞ்சி வல்வினை வளைத்த கோலை உயிராணி கொடுத்து நிமிர்த்தவன். அவன் துஞ்சிய பின்னர் (சில திங்களுள்) கொற்கை நகரத்திருந்த இளஞ்செழிய னும் வெற்றிவேற்செழியன் பாண்டிய நாட்டின் அரசுரிமையை எய்தினனெனச் *சிலப்பதிகாரம் கூறுதலான் இத் தலையாலங்கா னத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் இவ்வெற்றிவேற் செழிய னுக்குப் பின்னரே முடிசூடியவனாதல் வேண்டும். இதனால் இவன் இச்செழியனுக்கு மகனும் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழி யனுக்குப் பேரனுமாவன்; †இங்ஙனம் இவன் அந்நெடுஞ்செழிய னுக்குப் பேரனாய், அவனுக்கு அணுகிய காலத்திலேயே விளக்க முற்றிருந்தமையானன்றே ஆரியப் படை கடந்த நெடுஞ்செழி யன் காலத்திலேயே முதியராயிருந்தவர்களென் றறியப்படுகின்ற பரணர் என்னும் புலவர் பெருமானும் மதுரைக் கணக்காயனாரும்

'வில் கெழுதானைப் பசும்பூட்பாண்டியன்' (அகம்-162)

எனவும்,

'மறங்கெழு தானை யரச ருள்ளும்
அறங்கடைப் பிடித்த செங்கோ லுடனமர்
மறஞ்சாய்த் தெழுந்த வலனுயர் திணிதோட்
பலர்புகழ் திருவிற் பசும்பூட் பாண்டியன்' (அகம்-338)

எனவும், முறையே புகழ்ந்து பாடுவாராயினர்.

இங்ஙனம் இவர்களாற் குறித்த பசும்பூட் பாண்டியன் என் னும் பெயர் இந்நெடுஞ் செழியனது பெயரே யாமென்பதனை இடைக்குன்றூர்கிழார் இவனை 76-ம் புறப்பாட்டில் 'நாடுகெழு திருவிற் பசும்பூட் செழியன்' எனக் குறித்திருத்தலே நன்கு தெளிவிக்கும். அன்றியும் இவன் பெருஞ்செயலாக

---

* உரைபெறு கட்டுரை 27-ம் காதை, 114-138 பார்க்க.

† வெற்றிவேற்செழியன் இளஞ்செழியன் என்னும் பெயருமுடை மையான் இவன் ஆரியப்படைகடந்த நெடுஞ் செழியனுக்குத் தம்பி முறையினனாதலும் பொருந்தும்.

'ஓம்பா வீகை மாவே ளேவ்வி
புனலம் புதவின் மிழலையொடு.........
.........முத்தூறு தந்த
கொற்ற நீள்குடைக் கொடித்தேர்ச் செழிய'

என 24-ம் புறப்பாட்டுக்குறித்த இதனையே, (எவ்வியின் மிழலை நாட்டையும் அந்நாட்டு உறத்தூரையும் கவர்ந்ததை)

"யாழிசை மறுகின் நீடூர் கிழவோன்
வாய்வா ளேவ்வி யேவன் மேவார்
நெடுமிடல் சாய்த்த பசும்பூட் பொருந்திலர்
அரிமண வாயி லுறத்தூ ராங்கட்
கள்ளுடைப் பெருஞ்சோற் றெல்லிமி ழன்ன
கவ்வை யாகின்றாற் பெரிதே"......... (அகம் 266)

எனப் பரணர் பசும்பூட் பெயரொடு குறித்திருத்தலும் இதனை வலியுறுத்தும். பசும்பூண் என்பதும் இவன் பெயர். இப் பெயர் வழக்காற்றைப் பெரும்பூட் சென்னி, பொலம்பூட் கிள்ளி, செம் பூட் சேய் என்ற அரசர் பெயர்களாலும் அறியலாகும்.*

வெற்றிவேற் செழியன் விஷயமாக அறியப்படும் செய்தி சங்க நூல்களுள் வேறு காணப் பெறாமையின் அவன் அரசு தாங்கிய சில்லாண்டுகட்குள்ளேயே இறந்துபட்டு, இந் நெடுஞ் செழியன் மிக இளைஞனாய காலத்தே அரசியல் அடைந்தா னெனக் கோடல் தகும். இந் நெடுஞ்செழியன் காலத்தும் சிறிது முன்னருமிருந்த புலவர்களாற் பாடப்பெற்றுள்ள பாண்டிய மன்னர்களை அவர்களது † பாடல்கொண்டும் வேறு செய்தி

---

* பரணரது காலத்தவரான கபிலரால் பாரிமகளிரை மணந்துகொள்ளுமாறு வேண்டப்பட்ட இருங்கோவேண்மானும், கபிலரது பிரிவுக்கு வருந்திய (புறம்-53) யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறையும் இச் செழியனாற் போரில் வெல்லப்பட்டவர்களா யிருத்தலையும் ஈண்டைக்கு நோக்குக.

† புறம் 55—56, 57—59.

கொண்டும் ஆராய்ந்து இவனோடு தொடர்பு படுத்தப் புகுந்தால் கீழ்க் கண்டவாறு அவர்களைக்காட்டுதல் பொருந்தும்.

இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறன்
|
ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியன்
|
வெற்றிவேற்செழியன் (அல்லது)
சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன்
|
தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்.

இந் நெடுஞ்செழியனுக்குப் பின்னர்த் தோன்றியோன் பாண்டியன் **உக்கிரப் பெருவழுதி.** இத்தொடர்பு முறையை இவர்களது பெயர் முறையும் வலியுறுத்துதல் காண்க. இவர்களுள் உக்கிரப் பெருவழுதியும் ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியனும் ஒருவனேயாமெனச் சில *சரித்திர அறிஞர் கருதுவர். அங்ஙனம் அவர்கள் கருதுவது ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் அவைக்களத்துப் பெரும் புலவரான **கூலவாணிகன் சாத்தனர்** தமது **மணிமேகலைக்** காப்பியத்துள் 'தெய்வம் தொழா அள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யும் பெரு மழை என்றவப், **பொய்யில் புலவன் பொருளுரை** தேருய்' எனத் **திருக்குறளையும் திருவள்ளுவரையும்** ஒருங்கே கிளர்ந்தெடுத்தோதியுள்ளமைகொண்டு **திருக்குறள்** ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் காலத்தே விளக்க முற்றிருந்ததென்று அறியப் படுகின்றமையோடு 'திருக்குறள் உக்கிரப்பெருவழுதியின் அவையில் அரங்கேறிய' தென்னும் கர்ன பரம்பரைச் செய்தியைப் பொருத்துதற்கே போலும். இவ்விரு பெயரும் வெவ்வேறு பாண்டியர்களைத் குறிக்குமெனக் கொள்ளுதற்குரிய † சான்று

---

* See "Tamil Literature Sangam Period." (p. 65) by Mr. G. S. Duraisamy

† இவர்களைப்பற்றிய புறப்பாடல்கள், களவியலுரைப் பாயிரம் முதலியன.

கள் பல சங்கநூல்களுள் காணக்கிடக்கின்றமையின் இக்கருத்துப் பிழைபாடுடையதே யாகும்.

திருக்குறள் அரங்கேறியது பற்றி வழங்கும் இக்கதையை ஆராயின் கலையுணர் புலமையிற் றலைமை நோக்கி விதிமுறை பிறழாது முதுநிலம் புரந்த, உக்கிர்ப்பெருவழுதி, திருக்குறளாம் தமிழ்மறையில் தனக்கிருந்த அளவற்ற பற்றுள்ளத்தால்,

"நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த—நூன்முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சம்
சிந்திக்க கேட்க செவி."

எனப் புகழ்ந்து தன் காலத்தும் முன் காலத்துமிருந்த நல்லிசைப் புலவர்கள் பலர் திருக்குறளைப் போற்றி யுரைத்த பாடல்களை ஒரு வழிப்படத் தொகுத்து, மேற் காட்டிய தனது பாடலையும் இடை மடுத்துத் 'திருவள்ளுவமாலை'யென ஒரு நூல் வெளிப்படுப்ப, அதுபற்றிய வரலாறே பிற்காலத்து இங்ஙனம் பிறழக் கிளைத்து வழங்கியிருத்தல் கூடுமென்று கருதலாகும். இதுபற்றி ஈண்டு விரிப்பிற்பெருகும்.

ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் துஞ்சிய பின்னர்க் கண்ணகியிட்ட சாபம் கூட்டியமையான் பாண்டியநாடு சிலவாண்டுகள் வரை மழைவறங் கூர்ந்து வற்கட மிகுந்து வெப்பு நோயுங் குருவுந் தொடர்ந்து தன்னிலை குலைய, வெற்றிவேற்செழியன், சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குப் பத்தினிக் கோட்டம் சமைத்து நித்தல் விழாவணி செய்வதன் * முன்னரேதான், நங்கைக்குப் பொற்கொல்லராயிரவரைக்கொன்று களவேள்வியால் விழாவொடு சாந்திசெய்ய வசிவளங் கூர்ந்து நாடு மலிந்து நோயிகந்ததென்று,†சிலப்பதிகாரத்தான் அறியப்படினும் வெற்றிவேற்செழியனது குறுகிய நாள் ஆட்சிக்குள் நாடு தனது பழையநிலை முழுதையும் அடைந்திருக்க வியலாது; ஆகையான் நாட்டை வளமுறச் செய்தற்குரிய முயற்சிகளை நம் செழியனும்

---

* சிலப். நீர்ப்படை 27, 28, 29 -ஆம் அடிகளைப் பார்க்க.

† உரைபெறு கட்டுரை.

மேற்கொள்ள வேண்டியது இன்றியமையாததாக விருந்திருக்கும். இதனாலன்றோ!

"முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்
பரந்து பட்ட வியன் ஞாலம்
தாளிற் றந்து தம்புகழ் நிறீஇ
யொருதா மாகிய வுரவோ ரும்பல்!
......................................
மல்லன்மூதூர் வயவேந்தே!
செல்லு முலகத்துச் செல்வம் வேண்டினும்
ஞாலங் காவலர் தோள்வலி முருக்கி
யொருநீ யாகல் வேண்டினுஞ் சிறந்த
நல்லிசை நிறுத்தல் வேண்டினு மற்றதன்
றகுதி கேளினி மிகுதி யாள!
நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே
உண்டி முதற்றே யுணவின் பிண்டம்
உணவெனப் படுவது நிலத்தொடு நீரே.
நீரும் நிலனும் புணரி யோரீண்
டுடம்பும் உயிரும் படைத்திசி னோரே
......................................
நிலனெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோ ரம்ம விவட்டட் டோரே
தள்ளா தோரிவட் டள்ளா தோரே" (புறம்-ாஅ)

எனக் குடபுலவியனார் என்னும் நல்லிசைப் புலவர் செழியனுக்கு இம் முதுமொழி யமுதைச் செவிகொளப் பெய்தனர். பின்னர் இவன் குளந்தொட்டு வளம்பெருக்கித் தனது நாட்டைத் திருந்திய நிலையிற் பொருந்தச் செய்தனன் என்பதும் மதுரை நகரை ஆழ்கிடங்கு சூழ்ந்த புரிசைகளோடும் வையையன்ன மாந்தர் வழக்கறாத மறுகுகளோடும் விழாக்கொடி விசயக்கொடி நுடங்கும் மாடங்களோடும் *அல்லங்காடி நாளங்காடிகளோடும்

* அந்திக்கடை.

அழகுடன் விளங்குமாறு செய்திருந்தனன் என்பதும் இந்நகரில் யவனர் முதலிய மொழிபெயர் தேய மாக்கள் வாணிகம் விரும்பி வந்து தங்கியிருந்தனர் என்பதும் இவனைத் தலைவனாகக்கொண்ட * மதுரைக்காஞ்சி சதுரப்பட விரித்துரைக்கின்றது. இவன் கைத்தொழில், வாணிகம், ஓவியம், சிற்பம் முதலியன நன்னிலை யுறச் செய்தவன் என அப் பாட்டாலும் பிறவற்றாலும் அறிய லாகும். இவனது அரசியல் நாகரிகம் பின்னர் விரிக்கப்படும். இவன் கல்வி கேள்வியினும் வீர முதலியவற்றினும் சிறந்து குடி தழீஇக் கோலோச்சி வருங்கால் இவன் மிக விளைஞனா யிருத்த லின் எண்மையில் இவனது நாட்டைக் கவர்ந்து விடலாகுமெனக் கருதி, இரு பெரு வேந்தரும், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் என்னும் வேளிர் ஐவரும் ஒருங்கு குழீஇச் செழியனை இழித்துக் கூறிப் பெரும்படை யொடு போந்து வையை நீர் முற்றலன்றி நேரார் போர் முற்றி யறியாத மதுரை மூதூர்ப் புரிசையைச் சூழ்ந்தனர். செழியன் சினமிகுத்து 'என்னை மதிலினைக் காக்கும் நொச்சி வேந்த ருக்கக் கருதி உழிஞை சூடி வந்த இவர்களையே மீள நொச்சி வேந்தர்களாக்குவேன்'' என்பது புலப்பட வேப்ப மாலையோடு உழிஞைமாலை மிலைந்து. ‡

'நகுதக் கனரே நாடுமிக் கூறுநர்
இளைய னிவனென வுளையக் கூறிப்
படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையுந் தேரு மாவும்
படையமை மறவரு முடையம் யாமென்
றுறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச்
சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை
யருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொ

---

* 332 அடி முதல் 430 வரை பார்க்க.

† மதிலினை வளைத்தலும் காத்தலும் உழிஞையே யென்பது தொல் காப்பியர் கருத்து; இதனை முறையே உழிஞை, நொச்சி என்பது பன் னிரு படல ஆசிரியர் முதலியோர் கொள்கை.

‡ (புறம், 76, 77.)

டொருங் ககப்படேஎ ளுயிற் பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது
கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே ளுகுக
ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் றலைவ ளுகக
உலகமோடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர்பாடாது வரைக வென்னிலவரை
புரப்போர் புன்கண்கூர
இரப்போர்க் கீயா வின்மையா னுறவே'

என வஞ்சினங் கூறி அஞ்சாது போர்க் கெழுந்தான்.

(தொடரும்)

---

# கண்ணகி கற்பு மாண்பு

[திருச்சி பண்டிதர், மு. வேங்கடசாமி நாட்டார்]

(ஙு-ம் சிலம்பு, ௩கசஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

கண்ணகி நல்லாள் காவிரிப்பூம்பட்டினத்திலே பெருஞ் செல்வமும் பெரு வண்மையுமுடைய மாநாய்கன் குலமகளென்பதும், திருவிலுஞ் சிறந்த அழகுடையா ளென்பதும், அவள் கணவனுகிய கோவலன் அரசனே டொருங்குவைத் தெண்ணப்படும் ஒப்பற்ற குடிகளுள்ளே யாவரினும் மிக்க செல்வமும் ஈகையுமுடைய மாசாத்துவான் மைந்தனென்பதும் நாம் அறிந்தனவே. கோவலன் கண்ணகியை மணந்தபின்றை அவள்பால் எவ்வளவு காதலுடையனு யிருந்தானென்பதும், அவன் அவளை நோக்கி,

"மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே
அரும்பெறற் பாவாய் ஆருயிர் மருந்தே
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே

மலையிடைப் பிறவா மணியே யென்கோ
அலையிடைப் பிறவா அமிழ்தே யென்கோ
யாழிடைப் பிறவா இசையே யென்கோ
தாழிருங் கூந்தற் றையால் நின்னை''

என்றிங்ஙனம் கூறும் நலம்பாராட்டுரைகளால் வெளிப்படும் பல்லாற்றானுஞ் சிறந்தவர்களாய் உருவும் திருவும் முதலியவற்றால் தம்முள் ஒப்புமை யுடையாராய இத் தலைமகனும் தலைமகளும் இங்ஙனம் காதற் கிழமையுடையாராய்க் கூடி இன்பந் துய்த்து இல்லற நிகழ்த்து நாளிலே அதற்கும் ஓர் இடையறவு நேர்ந்தது. உலக இன்பம் எத்துணைச் சிறந்த தொன்றாயினும் நிலைபே றுடைய தன்றே! அழகிற் சிறந்தாளும் ஆடல் பாடல்களில் வல்லாளுமாகிய மாதவியென்னும் கணிகை வயத்தனாயினான் கோவலன். கண்ணகியோ தனித்திருப்பாளாயினள். கோவலன் தன் அருமந்த மனைவியைப் பிரிந்து பரத்தைவயத்தனாய் ஒழுக்கந் துறந்ததேயன்றி, தன் பெற்றோர், தன்னை 'வேறுபடு திருவின் வீறு பெறக் காண' விழைந்தவர் அளித்தபொருட் குவிய லனைத்தையு மிழந்தான். அவ்வளவோ, கண்ணகியின் எண்ணரிய கலன்களையும் தொலைத்தான். இப்பொழுது கண்ணகி எந்நிலையளாவள்! சாவிற் சாதல், நோவின் நோதல், ஒண்பொருள் கொடுத்தல், நன்கினிது மொழிதல், புணர்வு நனிவேட்டல், பிரிவு நனியிரங்கல் என்பன அன்புடையார்க்குள்ள ஆறுகுணங்கள் என்பர். காதலென்பதோ

''யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
யாரினும் யாரினு மென்று''

என்றவாறு, காரணமின்றியும் அதனை நுட்பமாகக் கற்பித்துக் கொண்டு ஊடு மியல்பினது. கற்புடை மகளிர்க்குத் தம் கணவரைச் சிறிது பொழுது பிரிந்திருப்பதும் பெரிய துன்பமாம். அவர் தாம் கெடும்பொழுது பிரிந்திருக்கும்படி தம்மை நீத்தகன்றதே யன்றி ஓர் கணிகையை மருவியும் உறைகின்றாரென்னில் அம்மகளிரின் துன்பத்தை எங்ஙனம் உரைத்தல் சாலும்? தங்கணவர் தம்மைப் பிரிந்திருப்பது, தமக்கேயுரிய உடனுறை

வின்பத்தை அவர் பிறர்க்களிப்பது, அவர் அதனை நுகர்வது, கணவருக்குண்டாகிய ஒழுக்கக்கேடு, அதனுலுண்டாகும் பழி, தமது மனையறத்திற்கு நேர்ந்த சிதைவு என்றின்னோன்ன வற்றால் அவரது உள்ளம் எரியினிழுதாகிச் சிதைந்தொழியு மன்றே? இந்நிலைமையில் கண்ணகியின் பண்பிருந்தவாறென்னை? தனது துன்பமனைத்தையும் பொறுத்தாள்; அது புறந்தோன்ரு மலும் மறைத்தாள். கணவன் ஓர் கணிகையுடன் நுகரும் இன் பத்திற்குத் தன் அணிகலன்களை யெல்லாம் கொடுத்தாள். அவன் அக்கணிகையை வெறுத்து வந்து, 'பொய்யை மெய்யாகக் கொண்டொழுகும் சலதியோடாடி, என் குலத்தார் தேடிய மலை போலும் நிதியெல்லாம் இழந்து வறுமையுற்றது எனக்கு மிகுந்த நாணைத்தருகின்றது' என்று கூறியவழி, மாதவிக்குக் கொடுக்கப் பொருளில்லாது வருந்துகின்றானெனக் கருதி 'நலங்கேழ் முறுவல் நகைமுகங் காட்டிச், சிலம்புள கொள்ளும்' என்றிருந் தாள். கற்பென்பது எவ்வெக்குணங்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருப்பதென்பதும், அதனியல் பின்னதென்பதும் யாவ ரும் அறிதற்கரியனபோலும்? கம்பர்

'அன்பென்ப தொன்றின்றன்மை யமரரு மறிந்ததன்ருல்'
எனக்கூறியது கற்பிற்கும் ஒத்ததெனல் சாலும்.

இனி, கோவலனைப் பிரிந்திருந்த நாளில் கண்ணகியின் மன நிலை எவ்வாறிருந்ததென இனிதறியக் கிடக்கும் சான்று ஒன் றுளது. கண்ணகியளித்த காற்சிலம்பைப் பெற்ற கோவலன் 'இச்சிலம்பு முதலாகச் சென்றகலனோடு உலந்த பொருளீட்டுத லுற்றேன் மலர்ந்தசீர் மாட மதுரையகத்துச்சென்று' என்று கூறிக், கண்ணகியையும் உடனழைத்துக்கொண்டு ஞாயிறு தோன்றுமுன் புறப்பட்டுக் காவிரி வடகரை வழியாக ஒருகாத தூரம் வந்து கவுந்தியடிகள் என்னும் தவமாதைக்கண்டு கண் ணகியோடும் அவரை வணங்கினன். பின் அம்மூவரும் புறப் பட்டு மேற்கு நோக்கிவந்து காவிரியைக்கடந்து உறையூரை யெய்திப் பின் அங்கு நின்றும் காட்டுவழியாக நடந்து சென்று பாண்டிநாட்டு மதுரை மூதூரைக்கண்டனர். கவுந்தியடிகள்

அங்கு வந்த மாதரி யென்னும் ஆய்ச்சியர் தலைவியிடம் கண்ணகியை அடைக்கலமாக ஒப்புவிக்க, மாதரி கோவலன் கண்ணகி இருவரையும் அழைத்துச்சென்று ஓர்புதிய மனையில் இருக்கச் செய்து, தன் மகளாகிய ஐயை யென்பாளைக் கண்ணகிக்குத் துணையாக இருத்தி, சமைத்தற்குரிய பல்வகைப் பொருளும் கொண்டுவந்து கொடுத்தனள். கண்ணகி தன் கைவன்மைக் கேற்றவாறு பல்வேறு கறிகளுடன் அடிசிலாக்கிக் கணவனை ஆதனத்திருத்திக் குமரி வாழையின் குருத்தினை விரித்து அமுது படைத்து 'அடிகள் அமுதமுண்க' என்று உபசரித்து ஊட்டி, அதனை யினிதாக உண்டிருந்த கோவலற்கு வெற்றிலைச்சுருளும் அடைக்காயும் தந்தனள். அப்பொழுது கோவலன் கண்ணகியை வருகவென அருகழைத் தணைத்து, 'கண்ணகியின் மெல்லிய அடிகள் கற்களையுடைய சுரநெறியைக் கடத்தற்கும் வன்மையுடையனவோ' என்று கொடியகாட்டில் நடந்துவந்ததற் கிரங்கி "எம்முது குரவர் என்னுற்றனர்கொல்? மாயங்கொல்லோ வல்வினை கொல்லோ ? யானுளங் கலங்கி யாவது மறியேன் ; வீணரோடும் பரத்தரோடுங்கூடி நல்லொழுக்கத்தை யிழந்த எனக்குத் தீக்கதி யன்றி நற்கதியுண்டாமோ ? அதுவேயுமன்றி இருமுது குரவர்க்கு ஏவல் செய்தலுந் தப்பினேன் ; இளமையிலேயே பேரறிவுடையளாய நினக்கும் சிறுமை செய்தேன் ; இவ்வொழுக்கம் வழு வென்பதும் பார்த்திலேன் ; நீயோ இங்கே வருவதற்கு எழுக வென்ற வளவில் எழுந்தாய்" என்றிங்ஙனம் இரங்கிக் கூறினான். இவ்வார்த்தைகளைக் கேட்டுக் கண்ணகி கூறும் பொருண்மொழிகளே அவளுடைய உயரிய பண்புகளனைத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கச் செய்கின்றன. அவை:

"அறவோர்க் களித்தலு மந்தண ரோம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் இழந்த என்னைநும்
பெருமகள் தன்னொடும் பெரும்பெயர்த் தலைத்தாள்
மன்பெருஞ் சிறப்பின் மாநிதிக் கிழவன்
முந்தை நில்லா முனிவிகந் தனனா
அற்புளஞ் சிறந்தாங் கருண்மொழி யளைஇ

எற்பா ராட்ட யானகத் தொளித்த
நோயுந் துன்பமும் நொடிவது போலும்என்
வாயின் முறுவற்கவர் உள்ளகம் வருந்தப்
போற்ரு வொழுக்கம் புரிந்தீர் யாவதும்
மாற்ரு வுள்ள வாழ்க்கையே னாதலின்
ஏற்றெழுந் தனன் யான்."

என்பன. இதற்குமுன் கண்ணகி கோவலனிடம் பேசிய வார்த்தையாக அறியக்கிடப்பன, அவன் மாதவிமேல் வெறுப்புற்று வந்து இரங்கிக் கூறிய காலையில் 'சிலம்புள கொள்ளும்' எனக் கூறியதும், காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து வழிக்கொண்டு ஒரு காத தூரம் வந்தவளவில் 'மதுரை மூதூர் யாது' என வினவியதுமே யாகும். கணவன் தன்னைப் பிரிந்து மாதவியை மருவியிருந்தமை குறித்தாதல், அதனால் தன் வாழ்க்கைக் குண்டாகிய முட்டுப்பாடு முதலியன குறித்தாதல் ஒரு வார்த்தையேனும் கூறிற்றிலள். இப்பொழுதுதான் அவைகளைக் குறித்துப் பேசுதற்கு ஓர் செவ்வி வாய்த்தது. கோவலன் தான் நல்லொழுக்கந் துறந்ததும், தனக்குத் துன்ப மிழைத்ததும் முதலியவற்றைக் கூறியதுடன், அவனுடைய தாய் தந்தையரைப்பற்றியும் நினைக்குமாறு செய்தான். இந்த நிலைமையில், தன்னை அருகழைத்து அணைத்துக்கொண்டிருக்கிற கணவன் முன்பு கண்ணகி யாதும் உரையாடாது எங்ஙனம் வாய்வாளாமை மேற்கொண் டிருத்தல் கூடும்? கணவனுடன் சில சொற்கள் பேசுவது அவளுக்குக் கடப்பாடாயிற்று. இங்கே தன் கணவனால் குறிப்பிடப்பெற்ற தன் வாழ்க்கையைப்பற்றியன்றி வேறு தான் பேசுதற்கு யாவை யுள? அன்றியும் தன் கணவன் கூறியவற்றிற்கு மறுமொழி யொன்றுங் கூருதிருப்பது இயற்கையன்றே? இங்கே தன் வாழ்க்கையைப் பற்றி யாது கூறுவது? கணவன் யாதும் பிழை செய்திலன் என்று கூறி அவனைத் தேற்றுவதா? அங்ஙனமாயின் அது சிறிதும் உண்மையொடு பொருந்தியதன்று. கணவன் செய்தது பிழையென்றும், அதனால் தனக்குண்டாய துன்பம் பெரிதென்றும் கூறுவதா? தான்செய்த தவற்றினை யுணர்ந்து இரங்கிக் கூறுகின்ற தன் ஆருயிர்க் காதலன் முன்பு, அவன் தன்

பெருமையெல்லா மிழந்து சிறுமையுற்றிருக்கும் இந்நிலைமையில் தான் அங்ஙனம் கூறுவது பொருந்துவதன்றே. மற்றும், கணவன் இன்புறத் தான் எவ்வகைத் துன்பமும் உழத்தற்கு ஒருப்பட்டிருக்கும் கற்புடை மகள் எங்ஙனம் கணவனெதிரே தன் துன்பத்தைப் பெரிதாகக் கூறி அவனுக்கு மேலும் துன்பம் விளைவிப்பாள்? ஆக, இப்பொழுது கண்ணகி கூறுவன உண்மைக்கு மாறாகாமலும், சமயம் நேர்ந்துழி கணவன் தன் பிழையை உணரும்படி செய்து அவனைத் திருத்தவேண்டிய தன் கடமைக்கும் கற்பிற்கும் பொருந்தவும், கணவற்கு இன்னாமை மிகுதற்கேதுவாகாமலுமுள்ள இரண்டு செய்திகளாம். ஒன்று தன் கணவனது போற்றா வொழுக்கத்தால் தான் ஆற்றவேண்டிய மனையறமாகிய கடப்பாடு ஆற்றப்படாமை. மற்றொன்று தன் மாமன் மாமிகளுக்கு உண்டாகிய வருத்தம்.

(தொடரும்)

---

# ஓர் ஐயமறுப்பு

[கோயமுத்தூர், அ. கந்தசாமி பிள்ளை]

ஐயமாவது—பலதலையாய உணர்வு; இதுவோ, அதுவோ, என்று ஒரு பொருளில் ஐயம் நிகழும்பொழுது, ஒரு சிறப்புத் தன்மை பற்றுக்கோடாக ஒரு தலை துணிந்து உண்மை யுணரப்படும்.

நன்னூலின் ஆசிரியராகிய பவணநந்தியாரைத் தன்னிடத்தவராகக் கொங்கு மண்டல சதகம் கூறும்; தொண்டைமண்டல சதகமும் அவ்வாறே கூறும், ஆதலின், பவணநந்தியார் கொங்கு நாட்டினரோ? தொண்டை நாட்டினரோ? வென்னும் ஐயம் நிகழ்கிறது. அச் சதகப் பாடல்களாவன:—

"கங்கக் குரிசி லுரைக்கநன் னூலைக் கனிந்துபுகல்
துங்கப் புலமைப் பவணந்தி மாமுனி தோன்றிவளர்
கொங்கிற் குறும்பு தனிலாதி நாத குருவிளங்கும்
மங்குற் பொழிற்சன காபுர முங்கொங்கு மண்டலமே." (47)

தன்னூர்ச் சனகையிற் சன்மதிமாமுனி தந்தமைந்தன்
நன்னா லுரைத்த பவணந்திமாமுனி நற்பதியும்
சின்னூலுரைத்த குணவீர பண்டிதன் சேர்பதியும்
மன்னுபுரத் திருவன்னமின்னே தொண்டை மண்டலமே. ()

என்பனவாம்.

இப்பாடல்களால் மேற்கூறியவாறு நிகழும் ஐயத்தின் நீங்கி, ஒரு தலை துணிதற்குப் பற்றுக் கோடான ஆதாரம் வேறு காண்கிலேம்; எனினும், இப்பாடல்களில் அமைந்து நிற்கும் சில சொற்றொடர்களே அவ்வையத்தை நீக்கும் தன்மையனவாய் இருக்கின்றன.

. . . . . . . . . .

இது, அப்பாடல்களை இரண்டொருமுறை யூன்றிப் படிப்பதினாலும் தோன்றக் கூடியதே.

. . . . . . . . . .

ஒருவருக்குத் தாம் பிறந்து வளர்ந்த ஊர், தம்மூர் ஆகும். அல்லது, பிறந்து வளர்ந்த ஊர் வேறாயிருந்து, அவர் வாழ்ந்து வரும் ஊரும் தம்மூர் எனத் தக்கதே. ஆதலின், பவண நந்தியாருக்குக், கொங்குநாடு, தொண்டைநாடு என்னும் இரண்டில், ஒன்று, பிறந்துவளர்ந்த நாடாகவும், மற்றொன்று, தாம்வாழ்ந்து வந்த நாடாகவும் கொள்ளப்படும்.

இக்கருத்தைத்தரும் சொற்கள் அப்பாடல்களில் அமைந்து நிற்பதைக் கவனிப்போம் —

தொண்டை மண்டல சதகத்தில், "தன்னூர்ச் சனகையிற் சன்மதி மாமுனி தந்தமைந்தன்...பவணந்தி" என்ற சொற்றொடரும், "பவணந்தி மாமுனி நற்பதியும்......தொண்டைமண்டலம்" என்ற சொற்றொடரும் இங்குப் பற்றுக்கோடாக இருக்கின்றன. அவற்றுள் முதலது, 'சன்மதி முனிவருக்குத் தன்னூராகிய சனகையிற் பிறந்தவர் பவணந்தி' என்னும் கருத்தினது. இதிலுள்ள "தன்னூர்ச்சனகை" என்னுந் தொடர் சன்மதி முனிவரது ஊர் வேறு என்றும், அவ்வூர் இத்தொண்டை நாட்டைச் சார்ந்ததன்றென்றும் குறிப்பதாகிறது.

அடுத்த சொற்றொடர் 'பவண நந்தியாருக்கு வாழ்ந்து வாற் கேற்றதாயிருந்த ஊர் தொண்டை நாட்டினது' என்னுங் கருத்தினது. இதிலுள்ள "நற்பதி" என்னுந் தொடர், வேறு நாட்டினராகிய அவர், யாதோ ஒரு காரணத்தினல் இந்நாட்டில் வாழ்ந்து வர நேர்ந்தது என்று குறிப்பதாகிறது.

ஆகவே, தொண்டை மண்டல சதகத்தால் நாம் அறிவது, பவணநந்தியார் வொழ்ந்து வந்தது அம் மண்டலத்தில் என்பதாம்.

எனவே, பவண நந்தியார் பிறந்து வளர்ந்தது கோங்கு மண்டலத்தில் என்பது இனிது போதருகின்றது. இக்கருத்தைத் தெளிவுறக் காட்டும் சொற்றொடர் கொங்கு மண்டல சதகத்தில், "பவணந்திமாமுனி தோன்றிவளர்........சனகாபுரம் கொங்கு மண்டலம்......" என்பதாம். இச்சனகாபுரம் கொங்குநாட்டின் உட்பிரிவில் இதன்பாற்படும் என்பதைத் தெளிவுறக் காட்டும். மற்றொரு சொற்றொடர் "குறும்புதனில்..........சனகாபுரம் கொங்கு மண்டலம்" என்பதாம்.

எனவே, கொங்கு மண்டலத்தின் உள்நாடு இருபத்து நான் கனுளொன்றாகிய குறும்பு நாட்டினைச் சார்ந்த சனகாபுரத்தில் பிறந்து வளர்ந்து கலைபயின்று தமிழ்ப் புலமை நடாத்திவிளங்கிய ஆசிரியர் பவணநந்தியார் யாதாமொரு பொருட்டினாற்றொண்டை நாடுசென்று வசித்து வருவாராயினர் என்பது போதருகின்றது.

ஒருவர் தமக்கினிய தமது நாடுவிட்டுப் பிற நாடு போவது, கல்வி, செல்வம், ஆரோக்கியம், உற்றார்க்குதவல் என்னும் இவற்றில் ஒன்றுபற்றி நேர்வதாம்.

தன் கண், ஒரு தமிழ்ச் சங்கம், கொங்குவேள் மாக்கதை, சிலப்பதிகாரவுரை, சில இலக்கணநூல் ஆகிய இவற்றைத் தோற்றுவித்ததும், இன்றளவும் தமிழ்ப் புலவரைப் பெரிதும் போற்றி வருவதும் ஆரோக்கியத்து நிலைக்களமாகி யிருப்பதுமாகிய இக் கொங்கு நாட்டைவிட்டு ஆசிரியர் பவணநந்தியார் பிறிதொரு நாடு சேரக் காரணமில்லை. பின், உற்றார்க்குதவல் என்னும் ஒன்று பற்றி இன்றியமையாத தன்மையால் தம் நாடு நீங்கித் தொண்டை நாட்டிற் சில காலம் வாழ்ந்து வந்தவராவர், என்பதே

பொருத்த முடைத்தாம். இதுபற்றிப், பிற்காலத்தோர் இவரை யிந்நாட்டினரென்று கூற, அதுகொண்டு சரித்திரக்காரர்கள் அவ்வாறு கூறலும் வழக்கே யாமென்க.

இக்கொங்குமண்டல சதகத்தில் "கொங்கிற் குறும்புதனில்" என்னும் தொடர் எங்களை வாழ்விக்க அவதரித்தருளிய பெருமான் அடிகளாகிய **சுந்தரமூர்த்தி சுவாமிகளின்** வாய்மையைப் பொன்னேபோற் போற்றியது என்பதும் இங்கு அறியத்தக்கது. அது,

> "**கோங்கிற் குறும்பிற்** குரக்குத் தளியாய் குழகாகுற்றாலா
> மங்குற் றிரிவாய் வானோர் தலைவா வாய்மூர்மணவாளா
> சங்கக் குழையார் செவியா அழகா அவியாஅனலேந்தீ
> கங்குற் புறங்காட் டாடீ யடியார் கவலைகளையாயே"
>
> (ஊர்த்தொகை—2)

என்னும் **தமிழ் மறையிற்** கண்டதாம். இவற்றால், இரண்டு நூல்களில் கூறிய ஒரு பொருளை, ஐயத்தின் நீங்கித் தெளிதல் பெறுதும்.

முற்றிற்று

---

# வண்ணாரப் பெரியாண்டி

[வேலூர் க. ப. சந்தோஷம் B.A. L.T.]

**பெரியாண்டி** என்ற பெயர்கொண்ட வண்ணானொருவனிருக்கின்றான். இவன் வண்ணார்கட்கெல்லாம் மூத்தவனாதலாலும் அழுக்கை நீக்குவதில் இணையற்றவனாதலாலும் பெரியாண்டி எனப் பெயர் கொண்டான். இவன் பலவிடங்களிலும் வாழ்ந்து பலவகை யழுக்குகளின் தன்மையையுணர்ந்து தனது நோக்கினாலேயே அழுக்கைப் போக்கவல்லவனாய் விளங்குகின்றான். குடியில் வண்ணானாயினும் இவனைக்கண்டு பேசுதலெவர்க்கு மரிது. தன்மீது உண்மையான அன்புடையவரை இவ்வண்ணாரப்பெருமகன் எங்ஙனமாகவோ அறிந்து அவர்களை மாத்திரம் தன்னிடமழைத்துப் பேசுகின்றானாம். வேறெவரையும் அவன்

தன்னை யணுகவொட்டான். வெட்டவெளி வெளுப்பானென்று இவனுக்கு மற்றொரு பெயர் வழங்குவதாகச்சிலர் கூறுகின்றனர். இவனைக் காணவேண்டுமென்று நெடுநாள் மிகவும் விரும்பிய நண்பரொருவர் பலவகையினும் வருந்திமுயன்று அவனுறை விடத்தை நெருங்கியபோது, இந்த வண்ணாப்பெருமகனுடைய ஏவலாளர்கள் அவர் முன்வந்து "உமக்குத்துணி வெளுக்கும் வண்ணானை ஏற்றபடி உணராத நீர் எமது தலைவனை வந்து எங்ஙனங் காணக்கூடும்?" என்று கூறினர். இதைக் கேட்ட நண்பர் உளந்தளர்ந்து "உங்கள் தலைவனைக் காணவேண்டு மென்று பன்னாள் மிகவும் வருந்தி நடந்து இங்கு வந்தேன். விரும்பிவந்த என்னைத் திரும்பிப் போகச் சொல்வது தகுமா?" என்றுகேட்க, ஏவலாளர்கள் சிறிதும் இரக்கமற்றவராய் "பெரி யாண்டி கட்டளையை மீறி நடக்க எவராலுமாகாது. நீர் திரும் பாவிடின் தீங்குநேரும்" என்றுரைத்தனர். நெஞ்சுபுண்ணாகிய எமது நண்பர் சென்றவழியே மீண்டு வண்ணார்களின் பழக்க வழக்கங்களை ஊன்றி ஆராய்ந்து பார்த்துத் தாமறிந்தவற்றைப் பின்வருமாறு எமக்குத் தெரிவித்தனர்.

## அழுக்கெடுத்தல்

அழுக்கெடுப்பது வண்ணான்தொழில். இது இருவகைப் படும்; அழுக்குத்துணிகளை வீடுவீடாய்ச் சென்று சேர்ப்பது ஒன்று; துணிகளிலுள்ள அழுக்கை நீக்கித் தூய்மை செய்தல் மற்றொன்று. இவ்விரண்டில் முதலது அவ்வளவு சீருடைய தன்று; இரண்டாவதோ சாலவுஞ் சிறப்புடையது. முதலாவது கூறியது இழிதொழில்; இரண்டாவது குறித்தது நற்றொழில். இவ்விரு தொழிலையும் ஒருங்கே செய்யும் வண்ணான் குன்றிமணி யைப்போல் முற்புறம் கருமையும் பிற்புறம் செம்மையும் வாய்ந் தவன். குன்றிமணியில் கருமை குறிது, செம்மை பெரிது; வண் ணான் தொழில் குற்றங்குறைந்தும் குணம்பெருகியும் உளது. **தமிழ்க்கடலின்** ஆழத்தையும் அகலத்தையும் அளவிட்டறிந்த நிறைமொழி வள்ளலாகிய **வள்ளுவர்** போலித்துறவிகளைப்பற்றிப் பேசுமிடத்து,

"புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து." (கூடாவொழுக்கம்)

என்றார். இதில் குன்றிமணியைப் போலித்துறவிகட்கு ஒப்பிட்டிருக்கிறது. இதனால் வண்ணானையும் போலித்துறவிக்கு ஒப்பிடலாகாது. வண்ணானைப்பற்றி வள்ளுவர் பேசியிருப்பாராயின் மேற்கண்டவாறு அவர் புகழ்ந்திருப்பாரென்பது திண்ணம். திருவள்ளுவரும் ஒருவண்ணானென்ற உண்மையைப் பலர் இன்னு மறிந்திலர். அது பின்னால் விளக்கப்படும்.

அடையாளம் போட்டிருக்கவும் ஒருவர் துணியையெடுத்து மற்றொருவர்க்குக் கொடுத்து ஊதியமும் உதையும் வண்ணான் பெறுவதுமுண்டு. பலர்க்குப் பயன்படக் கூடிய ஒன்றை ஒருவனே யணிந்து இன்ப நுகர்வது தவறெனக் கருதி கண்ணிற்கினிய ஆடைகள் தன் கைவரும்போது ஒன்றிரண்டை வண்ணான் பிறர்க்களித்துப் பெருங் களிப்பெய்துவான். இதில் தவறென்ன விருக்கிறது? 'ஆடையிழந்தவன் கைபோல உதவுவதே நட்பு' என்றார் பெரியோர். ஆடை யிழந்தவன் கையைவிட அதிக நன்றாய் வண்ணானுடைய கை ஆடையில்லார்க்கு உதவி செய்ய முந்துவதால் அவன்மீது குறை கூறுபவர் ஈரமில்லா நெஞ்சமுடையவரே யாவர். தான் வெளுத்த வெளுப்பு நன்றோ அன்றோ என்ற ஐயம் வண்ணானுள்ளத்தில் சிறுபான்மை நிகழ்வதுண்டு. அப்போதவன் தனது ஐயத்தைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டு உயர்ந்த உடைகளைத் தானே யணிந்து பார்ப்பான். இதை யறியாத பலர் அவன்மீது அவதூறு கூறுவது முண்டு.

## தப்பிப் பிழைத்தல்

இது சிறப்பாய் வண்ணானுடைய வேலை. ஆடைகளைத் தப்புவதனால் அவன் பிழைக்கிறான். உயிர் வாழ்வதற்கென்று மக்களால் அமைக்கப்பட்ட குற்றமற்ற பலதுறைகளில் வண்ணான் துறையுமொன்று. தப்பான வழிகளிலிறங்கி பொருள் தேடுவதைக் காட்டினும் தப்புந் தொழிலில் நின்று ஊதியம் பெறுவது நன்றென்பதை யார் தான் ஒப்பார்? இழுக்குள்ள தொழில் செய்து இல்வாழ்வார் தம்மினும் அழுக்கறுத்து நாட்கழிக்கும்

வண்ணான் சிறந்தவனே யாவான். தொழுது உண்பதைவிட உழுது உண்பது இனிது என்றாள் ஔவை; பிழைசெய்து பிழைப்பதைவிட தப்பிப் பிழைத்தல் இனிதென் றுரைக்கிறான் வண்ணான். சட்டங்களைமீறி நடப்போர் பலர் ஓடி ஒளித்தும் வடிவம் மாறியும் துரைத்தனத்தார் கைக்குத் தப்பிப் பிழைக் கிறார்கள். இங்ஙனந் தப்பிப் பிழைக்கும் நாணமில்லா வீணரை வண்ணானோடு சேர்ப்பது பெருங் குற்றமாகும். தப்புச்செய்து தப்பும் மக்களை பிழையின்றிப் பிழைக்கும் வண்ணானோடு சேர்ப் பது பெருங் குற்றமாகும். தப்புச் செய்து தப்பும் மக்களை பிழையின்றிப் பிழைக்கும் வண்ணானோடு சேர்ப்பது தகுமா? வையகமெல்லாம் வண்ணானிடம் கற்றுக்கொள்ள வேண்டிய பாடமொன்றுண்டு. மக்களுக்கு வருந் தீமைகள் எண்ணில. இடையூறுகளும் இக்கட்டுகளும் இடையறாது அவர்களைத் தொடர்கின்றன. ஏக்கங்களும் எண்ணங்களும் எந்நேரமும் அவர் களை வாட்டுகின்றன. துன்பமுந் தொல்லையு மவர்களை வருத்து கின்றன. என்ன செய்வார் ஏழை மக்கள்? "தப்பிப் பிழைப்ப தெங்ஙனம்?" என வாடுகின்றார்கள். "தப்பிப் பிழையுங்கள்" என்கிறான் வண்ணான்.

(தொடரும்)

---

# குரோதன வருஷம் மகாசிவராத்திரி நிர்ணயம்

[திருவாவடுதுறை இ. மு. சுப்பிரமணிய பிள்ளை]

மகாசிவராத்திரி உத்தமோத்தமமான சிவவிரதம். இவ் விரதத்தில் உபவாசம், விழித்திருத்தல், சிவபூசை இம்மூன்றும் முக்கியம். இது முறைப்படி அநுட்டித்தவர்களுக்கு அளவற்ற பயன்தரும் பெருமையுடையது.

மாசி மாதத்தில் கிருஷ்ண பக்கம் சதுர்த்தசியில் மகாசிவ ராத்திரி அநுட்டிக்கத் தக்கது. திரயோதசி தேவி வடிவமும், சதுர்த்தசி சிவ வடிவமும் ஆவதால் நடுநிசியில் சதுர்த்தசியும் முன்னர்த் திரயோதசியும் இருந்தால் உத்தமம். அற்பம் திர

யோதசியும் மற்றது சதுர்த்தசியும், அல்லது அதிகம் திரயோதசியும் அற்பம் சதுர்த்தசியுமாக இருந்தாலும், நாள் முழுவதும் சதுர்த்தசியிருந்து அருணோதயத்தில் திரயோதசி யிருந்தாலும் சிவராத்திரியேயாம். அமாவாசை சற்றுச் சேர்ந்தாலும் மகா தோஷம். திரயோதசி, சதுர்த்தசி, அமாவாசை மூன்றும்கூடும் நாளில் திருவோண நக்ஷத்திரம் கூடினால் அதம சிவராத்திரி. அதை அநுட்டித்தால் அகோராத்திரத்தால் சிவாக்கினியில் நூறு விரித்தி ஓமஞ் செய்யவேண்டும்.

மகா சிவராத்திரி விரதத்தின் இலக்கணம் இவ்வாறிருக்க இக்குரோதன ஹுத்தில் இச்சிவவிரதம் தைமீ 29உ என்று சில பஞ்சாங்கங்கள் குறித்திருக்கின்றன. அவை திருநெல்வேலி திரு. வெங்கட குருநாத சாஸ்திரிகணித்ததும், மருத்துவக்குடி திரு. சாமிநாத ஜோதிஷர் கணித்ததும், திரு. C. G. ராஜன் கணித்த ஆனந்தபோதினிப் பஞ்சாங்கமும் முதலியன. நாமோ நம்முடைய 'சைவப் பஞ்சாங்கத்தில்' இவ்விரதம் மாசிமீ 29உ என்று குறித்திருக்கிறோம். நம்மைப்போலவே பருத்தித்துறை திரு. சுப்பிரமணிய சாஸ்திரி கணிக்கும் யாழ்ப்பாணம் பஞ்சாங்கம், திரு. சிங்கார சுப்பிரமணிய சாஸ்திரி கணிக்கும் ஆற்காடு சர்வ முகூர்த்தப் பஞ்சாங்கம், திரு. கொண்டய்யங்கார் கணிக்கும் இராமநாதபுரம் பஞ்சாங்கம், திரு. கூடலிங்கம் பிள்ளை கணிக்கும் மதுரைப் பஞ்சாங்கம், திருச்செந்தூர்ப் பஞ்சாங்கம் முதலியவைகளில் மாசிமாதம் 29-ந்தேதியே சிவராத்திரிஎன்று குறித்துள்ளன. சாஸ்திரப்படி மாசிமீ தான் சிவராத்திரி விரதம் அநுட்டிக்கவேண்டும்; தைமாதங் கூடாது. மாசிமாதம் 29உ திரயோதசி 21-4-வரையாம்; அதன்மேல் அன்று முழுவதும் சதுர்த்தசியே. ஆதலின் இதுவே சிவராத்திரி விரதம் அநுட்டிக்க வேண்டிய உத்தமமான காலம். தைமீ 29உயில் சதுர்த்தசி 50—34 வரைதான்; அதன்மேல் அமாவாசையாம். ஆதலின், அன்று மாதமே புரண்டிருப்பதோடு அமாவாசை சம்பந்தமும் இருத்தலினாலே அன்று இவ் விரதத்தை அடித்தால் பெரும் பாவமாம். இவ் வுண்மைகளை யெடுத்துக் காட்டும் நிர்ணய வசனங்களை இனி ஆராய்வாம்.

(1) **காரணகமம்**—"கும்பம்கதே சவிதரி, பக்ஷ சுக்லே தரே சுபே,। நிரயோதசி சமாயுக்த சதுர்த்தச்யாம் மகாநிசி." இதன் பொருள் வருமாறு — "கும்பராசியில் சூரியன் வந்த மாதத்தில் கிருஷ்ண பக்ஷத்தில் நிரயோதசியோடு கூடிய சதுர்த் தசியில் மகாநிசி."

(2) **காமிகம்** — "கும்பம்கதே திவாநாதே கிருஷ்ணேயாது சதுர்த்தசி." இதன் பொருள் "கும்பரவியாகிய கிருஷ்ண பக்ஷம் சதுர்த்தசி."

(3) **சிந்தியம்**—"**சௌர பக்ஷ மாகமாசே** கிருஷ்ண பக்ஷ சதுர்த்தசி, தஸ்யாம் நிரயோதசி யுக்தாம் சிவராத்திரி விரதம் சரேத்." இதன் பொருள் "சௌரமான பக்ஷத்தில் மாசி மாதம் கிருஷ்ணபக்ஷத் திரயோதசியோடு கூடிய சதுர்த்தசியில் சிவாத் திரி விரதத்தை யநுட்டிப்பானாக."

(4) **சிந்தியவிசுவசாதாக்கியம்**—"ஸ்தாபனம் புரோக்ஷணம் தீக்ஷா சிவராத்திரி சிரோத்சவ: சௌர மாஸே ஷீ கர்த்தவ்யம் சாந்திர மாஸே பவித்ரகம்." இதன் பொருள் "ஸ்தாபனம், புரோக்ஷணம், தீக்ஷை, சிவராத்திரி, சிரோத்சவம் இவைகள் சௌர மாசங்களில் செய்யத்தக்கன. சாந்திர மாசத்தில் பவித்திரோத் சவம்."

(5) **சிந்தியம்**—"ஸௌர மாஸே விரதம் குர்யாத் சாந்திர மாஸே நகாரயேத்." இதன்பொருள் "சௌரமானத்தில் விரதத் தைச் செய்க. சாந்திரமானத்தில் செய்யாதொழிக."

(6) **புரோத் கீதம்**—"யதாகும்ப கதஸ்சூர ஸமா ஸோமாக சம்ச்ஞ:" இதன்பொருள் "கும்பத்தில் சூரியன் வந்தமாதம் மாசி யென்ற பெயருடையது."

(7) **காமிகம்**—"ஹித்வா நிரயோதசி மிஸ்ராம் தர்ஸயுக்தாம் பிரகுர்வதே, சாராத்திரிர்பயதா பும்ஸாம் நிருபஸ்ய சலனம் பவேத்." இதன்பொருள் "நிரயோதசியோடு கூடியதை விடுத்து அமாவாசையோடு கூடியதை அநுட்டித்தால் அந்தச் சிவராத்திரி புருஷர்களுக்குப் பயத்தைத் தரும். அரசருக்குக் கெடுதி யுண்டாம்."

(8) **சந்தானம்**—"கலாமாத்ரம் சிரீவாலி சாராத்ரி: கர்ம நாசினி." இதன்பொருள் "கலாமாத்திரம் அமாவாசையோடு கூடினால் அந்த ராத்திரி புண்ணிய கருமத்தை நாசஞ் செய்யும்."

இதுகாறும் எடுத்துக்காட்டிய **ஆகமப்** பிரமாணங்களால் விரதங்களைச் சௌரமானத்தில் தான் அநுட்டிக்க வேண்டும் என்றும், சாந்திரமானத்தில் அநுட்டித்தல் பெருங்குற்ற மென்றும், சூரியன் கும்பத்தில் வரும் மாதமே மாகம், மாசி என்று பெயர் பெறும் என்றும், அமாவாசையோடு கூடினதினத்தில் சிவராத்திரி விரதத்தை யநுட்டித்தால் மனிதர்கள் மிகுந்த கேடுகளை யடைவார்கள் அதனால் அரசர்களுக்கும் பெருங்கேடுகள் உண்டாகும் என்றும், அதனால் இக் குரோதனஞு-ல் தைமீ-ல் சிலர் கூறுகிறபடி சிவராத்திரி விரதம் அநுட்டித்தல் கூடாதென்றும், தைமீ 29உ சதுர்த்தசி அமாவாசையோடும் சம்பந்தப் பட்டிருப்பதால் அன்று ராஜவிசுவாசமுள்ளவர்கள் தம் நலம் பேணுபவர்கள் ஒருவரும் சிவராத்திரி விரதம் கொள்ளக்கூடாதென்றும் அறிகிறோம்.

சௌரமானமும் சாந்திரமானமும் ஒன்றே. எவ்வாறென்றால் கும்பராசியில் சூரியன் வருகிற மாதமே கும்பரவியென்றும் மாசியென்றும் மாகமென்றும் பெயர் பெறும். இனி சாந்திரமானப்படியும் **அமரகோசம் லிங்காபட்டீய** வியாக்யானத்தில் "மகா நக்ஷத்திர யுக்தா பூர்ணிமாமாகிச அஸ்மின் இதிமாக: என்று வரும் மாகமாத இலக்கணத்தை ஆராய்வாம். இதன் பொருள் "மகா நக்ஷத்திரத்துடன் கூடின பௌர்ணிமை இதனிடத்திலிருக்கிறது. அதனால் இது மாக மாசமெனப்படும்." அதாவது சந்திரன் பூர்ண கலைகளுடன் மக நக்ஷத்திரத்தில் வரும் மாதமே மாகமெனப்படும். கும்பராசியில் சூரியனிருக்கும் மாதத்தில்தான் மக நக்ஷத்திரத்தில் பௌர்ணிமை வரும். நிகழும் குரோதனஞுலும் மாசி மகத்தில் பௌர்ணிமை வருகிறது காண்க. இதனால் சௌரமான மெனப்படும் கும்பரவியும் சாந்திரமான மெனப்படும் மாகமும் ஒன்றே. இவ்வுண்மைக்கு மாறாகச் சிலர் பிற்காலத்தில் வளர்பிறைப் பிரதமை முதல் அமாவாசை முடியவுள்ளது ஒரு மாதமென்றும் ஒவ்வொரு மாதத்திலும்வரும்

முதல் அமாவாசையோடு தங்கள் மாதம் முடியுமென்றும் கொண்டு அம் மாதத்தில் விரதங்களை அநுட்டிக்கத் தொடங்கினர். இவைகள்தான் சாந்திரமான மாதங்களென்கின்றனர். சௌர மாதப் பெயர்களே திரித்து இச்சாந்திர மாதங்களுக்கு இடப் பட்டுள்ளன. இதற்குச்சான்று என்னையெனில் இப்போதும் உரிய சௌர மாதங்களில் முடியாமல் அதன்முன் சௌரமாதத்தில் முடிகிற இச்சாந்திர மாதம் அதிமாதமென்று தள்ளப்படுகிறது. அதாவது அது பொய்யான மாதம். உண்மையான சாந்திர மாதமென்பது அப்பேர்க்குரிய சௌர மாதத்தின் சம்பந்தமடைவதுதான். பொய் மாதம் சௌர மாதத்தில் இல்லை. இதனால் ஒரு சாராரால் சாந்திரமாத மென்னும் இவை சௌர மாதத்தின் பேர்கொண்ட மாதமாகின்றன. "பேர் கொண்ட பார்ப்பான் பிரான் தன்னை அர்ச்சிக்கில் உலகுக்குப் பல கெடுதிகள் வரும்" என்று **திருமூலர்** அருளியது போலவே, இப் பேர்கொண்ட மாதத்தில் விரதங்களை அநுட்டித்தால் பல பெருங் கேடுகள் உண்டாகும். இதுபற்றியே "ஸர்வேஷாம் சௌரமாநகம், பார்த்தே சாலய யேஷ்வேஷீ சௌரமாநே நகாரயேத் சௌரமானம் விஹாயாத சாந்திராதிபி: க்ருதீதத்யதி ஆயு ஸ்ரீ புத்ரநாசஞ் சதக்கர்மம் நிஷ்பலம் பவேத்," (இதன் பொருள் சௌரமானத்தை விடுத்து சாந்திரமானத்தில் விரதங்களை யநுட்டிப்பவர்களுக்கு ஆயுள், செல்வம், குடும்பம் இவை நாசமாம்) என்னும் இதுபோன்ற ஆகம வசனங்கள் தோன்றின. உண்மைக்கு மாறுன இச் சாந்திரமானிகளுக்கும் ஆகமம் விதியமைக்கின்றது. அது வருமாறு:—

**காமிகாகமம்**—"மகாஸ்தே சவிதரி மாக ஸ்நானம் சமாசரேத், மாகஸ்நான விதாந்தேச சிவாத்திரி சமாசரேத்। ததாப்யத்ர விசேஷோஸ்தி மாகாந்தம் மகரேயதி புனஸ்திரும் சதுதினம் சைவ மாகஸ்நானம் சமாசரேத்। அந்தே கிருஷ்ண சதுர்த்தஸ்யாம் சிவாத்திரி விரதம் சரேத்। விவாஹாதௌசு அபகத புஷ்யஸ்யேவ மகா கத மாகஸ்ய நிஷேதஸ் மாணுது மகாகத மாக கிருஷ்ண சதுர்த்தசி தியாஜ்யா கும்பகத மாக கிருஷ்ண சதுர்த் தஸ்யேவ கிராஹ்யா." இதன் பொருள் வருமாறு: மகாத்தில்

சூரியனிருக்கும் பொழுது (தை மாதத்தில்) மாக ஸ்நானம் செய்வாயாக. மாக ஸ்நான விரத முடிவில் சிவராத்திரியை அநுட்டிப்பாயாக. । அதிலும் விசேஷமுளது. மகர ரவியாகிய தை மாதத்தில் சாந்திரமானமாகம் (மாசி) முடிவடைந்து விடுமேயானால், மறுபடியும் முப்பது நாள் மாக ஸ்நானம் செய்க. । (அப்படிச் செய்தபின்) கடைசியில் கிருஷ்ண பக்ஷ சதுர்த்தசியில் சிவராத்திரி விரதம் அநுட்டிப்பாயாக. விவாக முதலியதில் மார்கழியில் வரும் தை மாதம்போல தையில்வரும் மாசி (சிவராத்திரிக்கு) நீக்கப்படுவதால், தையில்வரும் மாசி மாச கிருஷ்ண சதுர்த்தசி நீக்கத்தக்கது. மாசியில் வரும் கிருஷ்ண சதுர்த்தசியே கொள்ளத்தக்கது.

இனி இச்சாந்திரமானிகளின் பிரமாண நூல்களாகிய சுமார்த்த விரதசூடாமணியும் வைத்தியநாத தீக்ஷிதியமும் யாது கூறுகின்றன என்பதைப் பார்ப்போம்.

**சுமார்த்த விரதசூடாமணி**-"அமாந்தமாஸே ந மாககிருஷ்ண சதுர்த்தஸ்யாம் மகாசிவராத்திரி விரத:। மாக கிருஷ்ணத்வஞ் சாத்ராமாந்த மாஸ பரத்வேந அதையேவ சதுர்த்தஸ்யாந்து கிருஷ்ணுயாம் பால்குனே சிவபூஜநம்.। மஹதாமபி பாபானும் திருஷ்டாவை நிஷ்கிருதி: புராந திருஷ்டா குருவதாம் பும்சாம் குதுயுக்தாம் திதிம் சிவாம்." இதன்பொருள் "அமாவாசை யீற்றிலுள்ள மாதத்தில் மாகமாச கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசியில் மகாசிவராத்திரி விரதம் கூடாது.। மாக கிருஷ்ண சதுர்த்தசியும் இவண் அமாவாசை யீற்றிலுள்ள மாச சம்பந்தம் பெரு. அதனாலேயே சாந்திரமானப்படி மாசியில் வரும் பால்குன மாதத்தில் (சௌர மாசி மாதத்தில்) கிருஷ்ண சதுர்த்தசியில் சிவராத்திரி பூஜை.। முன்னர் மகாபாவங்களுக்கும் பிராயச்சித்தம் காணப்பட்டது. அமாவாசையோடு கூடிய சதுர்த்தசியில் சிவராத்திரி விரதம் அநுட்டிக்கிற புருடர்களுக்குப் பிராயச்சித்தம் காணப்படவில்லை.

**வைத்தியநாத தீக்ஷிதீயம்**—"ஜயாயோகஸ்ய பிரசஸ்தத்வாத் தர்ஸயோகஸ்ய நிந்திதத்வாச்ய பூர்வேத் யுரேயோபவாச:" இதன்பொருள் "திரயோதசிச் சேர்க்கை புகழப்படுவதாலும்

அமாவாசைச் சேர்க்கை தூஷிக்கப்படுவதாலும் முன் தினத்தி லேயே உபவாசம்.''

மேலேகாட்டிய பிரமாணங்களின்படி நிகழும் குரோதனஹு தைமீ 29உ இரவில் அமாவாசை வந்துவிடுகிறபடியினாலே அது அமாந்த மாதமாகவும் அமாவாசை சம்பந்தப்பட்ட நாளாகவும் இருக்கிறபடியினாலே அன்று சிவராத்திரி விரதம் கூடாது. மாசிமீ 29உ இகழப்படும் அமாவாசை சம்பந்தப்படாமல் புகழப்படும் திரயோதசியோடு கூடிய சதுர்த்தசியாகிய பொய்ப் பால்குன மாதத்தில் தான் மகாசிவராத்திரி விரதம் அநுட்டிக்க வேண்டும். தைமீ 29உ அநுட்டிப்பதனால் ஏற்படும் மகாபாவத் திற்குப் பிராயச்சித்தமே கிடையாது.' என்னும் உண்மைகள் புலனாகின்றன. இதனால் முதலிலே காட்டிய ஆகமப்பிரமாணங் களுக்கும் பின்னர்க் காட்டிய சுமார்த்த விரதசூடாமணி முதலிய சாந்திரமான நூற் பிரமாணங்களுக்கும் முரண் சற்றும் காணப் படவில்லை. சாந்திரமானிகளுக்கு ஜோதிஷம்பற்றிச் சிறிது சந் தேகம் தோன்றுவதாக வைத்துக்கொண்டாலும் இச்சிவராத்திரி விரதம் பாரார்த்த ஆத்மார்த்த சிவபூஜை சம்பந்தமா யிருப்ப தால் சிவாகமத்தையே பிரமாணமாகக் கொண்டு அநுட்டிக்க வேண்டும். இவ்வுண்மையை மகுடாகமம் நன்கு கூறுகின்றது.

**மகுடாகமம்**—"யஸ்மிங்காலே விரோதோஸ்தி ஜோதிஷோக் தா கமோக்தயோகோ ஜோதிஷோக்தம் விஹாயைவ ஆகமோக் தம் சமாசரேத். பூஜோப யோகியச்சாஸ்திரம் தச்சாஸ்திரம்ஹி பிரதாநகம்.'' இதன்பொருள் "ஜோதிஷத்துக்கும் ஆகமத்துக் கும் விரோதம் உண்டாகும்போது ஜோதிஷத்தை நீக்கி ஆகம வசனத்தை ஆசரிக்கவேண்டும். ஏனெனில் பூஜை எந்த சாஸ்தி ரப்படி செய்யப்படுகிறதோ அந்த சாஸ்திரமல்லவா பிரதானம்.''

இக் குரோதனஹுத்திற் போலவே சென்ற பராபவஹுத் திலும் தைமீல் அமாவாசை சம்பந்தப்பட்டதினத்தில் சிவராத்திரி அநுட்டிக்க வேண்டுமென்று இப் போலிச் சாந்திரமானிகள்கூற உண்மை யாராய்ச்சியில் பலத்த வாதம் நிகழ்ந்தது. அப்போது சுவாமி, விருதை, சிவஞானயோகிகள் மிக முயன்று பல உண்மை களை யெடுத்தாராய்ந்து பல துண்டுப் பிரசுரங்கள் வெளியிட்ட

னர். அவர்கள் தையில் சிவராத்திரி அநுட்டிப்பது பெருங் கொடும் பாவம் என்ற உண்மையை நிலைநாட்டினபோது அக் கருத்தை யநுசரித்து ஸ்ரீலஸ்ரீ திருவாவடுதுறை பண்டார சந்நிதிகள், ஸ்ரீலஸ்ரீ தர்மபுரம் பண்டார சந்நிதிகள், ஸ்ரீலஸ்ரீ சூரியனார் கோவில் பண்டார சந்நிதிகள், சேலம் திருச்செங்கோடு ஆதிசைவ சபையார், வேதாரண்ய ஆதிசைவ சபையார், ஸ்ரீ காளஹஸ்தி ஆதிசைவ சபையார் முதலிய அநந்த ஞாதாக்களும் சாஸ்திரோக்தமாய் மாசி மாதந்தான் சிவராத்திரியென்று தீர்மானித்திருக்கிறார்கள். மேலும் அக் காலத்தில் திருவாவடுதுறை யாதீனம் பண்டார சந்நிதியாக இருந்த மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகள் பரம கருணையோடும் சுவாமி. விருதை. சிவஞானயோகிகளுக்கு பின்வரும் ஆகம வசனத்தை எடுத்துத் தந்தருளி சிவராத்திரி விரதம் மாசியீ தான் என்பதை நிர்த்தாரணம் செய்தருளினார்கள். அவ்வசனம் வருமாறு—

சிந்தியம் —

"சிம்ஹேது ரவிசம் பிராப்தே ரோகிணி சகிதாஷ்டமி
ததாதி கணனம் கிருத்வா சாசீதி சதுருத்தரா
சதோர்பேத தினந்தேது சிவராத்திரி இதி நிஸ்சய:"

இதன்பொருள் "சிம்ம ராசியில் சூரியன் அடைந்த காலமாகிய ஆவணி மாதத்தில் ரோகிணி நக்ஷத்திரத்தோடு கூடிய அஷ்டமி திதி தினமுதல் எண்ணி நூற்றெண்பத்து நாலாவது (184) நாளின் கடைசியில் சிவராத்திரி யென்பது நிச்சயம்." இக் கணக்கின்படி இக் குரோதனஹூத்திலும் சிவராத்திரியை நிச்சயிப்போம். இக் குரோதனஹூ ஆவணியீ 26உ அஷ்டமி 40—41, உரோகிணி 6—17, ஆதலால் அதுமுதல் எண்ணினால் ஆவணியில் நாள் 6, புரட்டாசி 31, ஐப்பசி 30, கார்த்திகை 29, மார்கழி 30, தை 29, மாசி 29; ஆக நாள் 184. மாசியீ 29உ தான் சிவராத்திரி யென்பது இந்தக் கணனத்தால் நிச்சயப்படுகிறது. ஆதலால் இந்தக் கணனப்படி எந்த வருடத்திலும் சிவராத்திரியைச் சந்தேகமின்றித் தீர்மானிக்கலாம். (இதிலும் விசேட. விதி 184-ம் நாள் சதுர்த்தசி யில்லாவிடினும் பங்குனிக்குச் சென்றாலும் மாசியின் சதுர்த்தசி தினத்தில் கொள்வதுதான் சரி.)

சென்ற பராபவஸூ ல் சிவாத்திரி மாசிமீ தான் என்பதை ஆதரித்த பெரியோர்களில் காஞ்சிகாமகோடி பீடாதிபதி கும்ப கோணம் ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகளும் ஒருவர். 1920ஸூ செப் டம்பர்மீ 24௳ வெள்ளிக்கிழமை மாலை 5 மணிக்கு மாயூரத்தில் ராஜாங்தோட்டத்தில் வைத்து சுவாமி. விருதை. சிவஞானயோகி களைத் தமிழ் வைத்தியம் பற்றிய பிரசங்கம் செய்யும்படி தாமே அழைப்புப்பத்திரிகை விடுத்தும் கூடிய அம்மகாசபையில் தாமே தலைமை வகித்தும் பேசும்போது ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் தாம் முன் பராபவஸூ ல் சிவாத்திரி மாசிமீ தான் என்று எடுத்தியம்பி ஸ்ரீ யோகிகளை ஆதரித்தமையை நன்ருக எடுத்துப் பேசினுர்கள். நம்முடைய **"சைவப் பஞ்சாங்கம்"** தோன்றிய முதல் வருடமாகிய சித்தார்த்திஸூத்திலே மாசிமீ 5௳ சிவாத் திரி வந்ததாக சாந்திரமானிகளாகிய சிலசுமார்த்தர்கள் அமா தோஷமடைந்ததாகிய 6௳ தான் சிவாத்திரி யென்றனர். அப் போது திருவாவடுதுறை யாதீனம் மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகமூர்த்திகள் கருணைகூர்ந்து நம் **"சைவப் பஞ்சாங்கத்தில்"** கண்டபடி சிவாத்திரியை அநுட்டிக்க என்று பலவிடங்களுக்கும், பல பத்திரிகைகளுக்கும் தந்தியனுப்பி யருளினுர்கள். நிகழும் குரோதனஸூ ல் "அகில பாரத ஆதி சைவப் பிராமண மகா ஜனசபையார்" **தீபாவலிப்பண்டிகையை** ஐப்பசிமீ ல் தான் கொண்டாட வேண்டுமென்று தீர்மானித்தது போலவே சிவராத்திரியும் தைமீ கூடாது மாசிமீ 29௳ தான் அநுட்டிக்கவேண்டு மென்று தீர்மானித்துப் பிரசுரஞ் செய்திருக் கிருர்கள்.

இதுவரை ஆராய்ந்த இக்கட்டுரையினுல் தைமீ 29௳ மாதமே புரட்டாக இருப்பதோடு பிராயச்சித்தமற்ற மகாபாவ மென்று சொல்லும் அமாதோஷமும் அடைந்திருப்பதனுல் சில பஞ்சாங்கங்களிற் கண்டபடி அன்று சிவாத்திரி அநுட்டிக்கக் கூடாதென்பதும், உத்தமமான மாசிமீ 29௳ தான் சிவாத்திரி விரதம் அநுட்டிக்க வேண்டுமென்பதும் நிலைபெறுகின்றமை காண்க. இதனுல் மகா ஜனங்கள் யாவரும் தைமீ 29௳ சிவாத் திரியை அநுட்டிக்காமல் மாசிமீ 29௳ வெள்ளிக்கிழமை யன்று அநுட்டித்து பெருஞ் சிவபுண்ணியத்தை அடைவார்களாக.

பெண்கள் பக்கம்.

# இருபெண்மணிகளின் உரையாடல்

[நெல்லை. வே. மாணிக்கவாசகம்பிள்ளை எழுதியது]

**கோமதி**—காந்திமதி! இன்று நமது நெல்லைமா நகரில் எழுந்தருளியிருக்கும் காந்திமதி அம்பிகையின் திருக்கலியாணச் சிறப்பின் எட்டாவது நாள். இவ்வூஞ்சல் மண்டபத்தில் நமது அம்பிகை எவ்வளவு அழகொடும் அருளொடும் வீற்றிருக்கின்றாள். அவளது முழுமதியன்ன முகத்தையும் திருவருள் பொழியுந் திருவிழிகளையும் பொற்கோல்கள் (தங்கக்கோலாட்டுகள்) பொருந்திய பொற்கைகளையும் நவமணித்தண்டைக ளணிந்த நற்றாள்களையும் நோக்க நோக்க நமக்குண்டாகும் அகமகிழ்வுக்கும் பத்திக்கும் ஓரளவில்லை. அழகு பொழிதிருமேனியில் அணிந்திருக்கும் பசும்பட்டினழகுதான் என்னை! ஆ, ஆ, நமது மனதைப் பத்திவலையிற் படுத்தவே நமது உயர் சைவசித்தாந்த நெறியில் உருவவழிபாட்டினை ஆன்றோர் எற்படுத்தி யுள்ளார். இவ்வழிபாட்டானன்றி நமக்குப் பத்தியும் மன ஒருமையும் உருக்கமும் உண்டாகாவென்பது திண்ணம்.

**காந்திமதி**—கோமதி! நீ சொல்வது முற்றும் உண்மையே. அம்பாளைப் பார்க்கப் பார்க்கக் கண்கள் களிகூர்கின்றன. நாம் இருவரும் உருகிப்பாடுவோம். இருவரும் கேட்டார் மனங் கரைய மிகவும் இனிமையாகப் பாடியபின் கீழ் வருமாறு பேசுகிறார்கள்.

**கா.** கோமதி! இங்கு இப்பொற்றாமரையின் நற்காற்று வீசுவதால் இச்சலவைக் கற்களிலிருந்து சிறிது உரையாடுவோம்.

**கோ.** காந்திமதி! நாம் பேசுங்கால் பயனில நீக்கிப் பயனுடைய சொற்களையே பேசவேண்டுமென்று நமது தெய்வப் புலவர் கூறியுள்ளாராகலின் பெரும்பயன் பயக்குஞ் சொற்களையே பேசவேண்டும்.

**கா.** கோமதி! நீ கூறுவது நன்றே. வீண்பேச்சு கலகம் விளைக்கும். நற்பேச்சு உறுதி பயக்கும். ஆகையால் நற்பயனளிக்கும் பொருளைக்குறித்தே ஈண்டுப் பேசுவோம்.

**கோ.** காந்திமதி—நீ எப்பொழுதும் தலையில் ஒரு செண்பக மலர் சூடிவருவது வழக்கம். இப்பொழுது சின்னுட்களாக நீ எது பூச்சூடுவதில்லை?

**கா.** கோமதி—எனது வீட்டிலிருந்த செண்பக மரம் ஒரு திங்கட்கு முன் பட்டதினுல் நான் செண்பகப் பூச்சூடும் வழக்கம் தடைப்பட்டது. ஆ! அந்த மரம் இருக்கும்போது எனது இல்லத்தின் எம் மருங்கினும் இனிய மணம் வீசினது. அத்தகைய மரம் அழிந்துவிட்டது. அந்த மரம் ஒரு காலத்தில் உண்டாகி, வளர்ந்து நின்று, இப்பொழுது பட்டது. இப்படியே ஒவ்வொரு பொருளையும் இவ்வுலகத்திற படைத்துக் காத்து அழிக்குங் கடவுளொருவர் உண்டு என்பது எப்பொருளை நோக்கினும் நுண்ணுணர் வுடையார்க்கு இனிது விளங்கும். இது பற்றியே திருவள்ளுவப் பெருந்தகையார் இவ்வுலகத்துப் பொருளை வைத்துக் கடவுளது உண்மைக்கு எடுத்துக் காட்டுக் கூறுகிறார்.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

**கோ.** காந்திமதி! கடவுள் எல்லாப் பொருளையும் நமது பயன் நோக்கிப் படைத்திருக்கிறார். நம்மைப் படைத்தது அவரை வணங்கி முத்தி யின்பம் பெறும் பொருட்டே யாம்.

**கா.** கோமதி! நாம் கடவுளை எப்படி வணங்கவேண்டும்.

**கோ.** காந்திமதி! நாம் கடவுளை எப்பொழுதும் மனதில் நினைக்கவேண்டும். அவரது அருளையும் பெருமையையும் பற்றிப் பேசவேண்டும். அவாது புகழ்மாலைகளைப் பாடவேண்டும். அவரைக் கைகளாலும் தலையினுலும் வணங்கவேண்டும். கால்களினுல் அவரது திருக்கோயிலுக்குச் சென்று வலம் வரவேண்டும். இப்படி நினைத்தல், வாழ்த்தல், வணங்கல்கள் செய்யின் நமக்குக் கடவுள்மீது அன்பு வளரும். அவரும் நமது அன்பு நிறைந்த உள்ளத்தில் உயிர்க்குயிராய் நின்று உதவிபுரிய விரைந்து எழுந்தருளுவார். சிவபெருமான் நமது சிந்தை குடிகொண்டானுயின் முத்தியடைவது திண்ணம்.

(தொடரும்)



திருச்செந்தூர் முருகன் திருக்கோயில்.

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்
திங்கள்தோறும் வெளிவருவது

சிலம்பு ச } மெய்கண்டான் யாண்டு-எாகூ மாசித்திங்கள் 1926ஆ பிப்ரவரிமீ—மார்ச்சுமீ { பரல் உ

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## கண்ணகி கற்புமாண்பு

[பண்டிதர் மு. வேங்கடசாமி நாட்டார்.]

(கூஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

மனையறம் ஆற்றப்படாமை

"அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை"

என்பதனால் உணர்த்தப்படுகின்றது. இங்கே முற்கூறிய அற·வோர்க்களித்தல் முதலியவற்றை இறுதிக்கட் கூறிய விருந்தெ

திர் கோடல் என்பதனுள் அடக்கலும் சாலும். அதுவே 'தொல்லோர் சிறப்பின்' எனவும் விசேடிக்கப்பட்டுளது. இல்வாழ்வார்க்கு இன்றியமையாத அறமாவது விருந்தோம்பலே என்பது ஆன்றோர் துணிபு. தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் இல்லறவியலில் இல்வாழ்க்கையின் சிறப்பும், வாழ்க்கைத் துணைநலமும், மக்கட்பேறும், இல்லறம் புரிவார்க்குச் சிறந்த குணமாகிய அன்புடைமையும் முறையே கூறிப்போந்து, அவரியற்ற வேண்டிய அறங்களைக் கூறுவான் றொடங்கி முதற்கண் விருந்தோம்பலையே கூறுதலுங் காண்க. அவ்வதிகாரத்தொடக்கத்தே

"இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு"

என விருந்தோம்பலின் இன்றியமையாமை கூறப்பட்டது.

பழந்தமிழ்நூல் பலவற்றுள்ளும் இவ்வாறே இவ்வறம் சிறப்பிக்கப்படுவது காணலாகும். குறிஞ்சிப்பாட்டில், தலைவன் தலைவியை வரைந்துகொண்டு இல்லறம் நிகழ்த்துதல் கூறி அவளைத் தெளிவித்தா னென்னுமிடத்து,

"வசையில் வான்றிணைப் புரையோர் கடும்பொடு
விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை
நின்னோ டுண்டலும் புரைவதென் றாங்கு
அறம்புணை யாகத் தேற்றி"

எனக்கூறியிருப்பதுங் காண்க. இவ்வறமானது ஒத்த அன்பினராய கணவனும் மனைவியும் கூடியிருந்தல்லது ஒருவராற் செய்யற் பாலதன்று. இவ்வுண்மை, சீதா பிராட்டி இராவணனால் இலங்கையிற் சிறை வைக்கப்பட் டிருந்தபொழுது தன் ஆருயிர் நாயகனாகிய இராமபிரானது தனிமைக்கு வருந்தினமை கூறுமுகத்தால்,

"அருந்து மெல்லட காரிட அருந்துமென் றழுங்கும்
விருந்து கண்டபோ தென்னுறு மோவென வெதும்பும்"

எனக் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பநாடரால் அழகுறப் புலப்

படுத்தப்படுகின்றது. தன் அருமந்த நாயகனைப் பிரிந்து கொடியவர்களாகிய அரக்கர்களின் ஊரில் தனியே காவலிலிருந்துகொண்டிருக்கும் தனது துன்பத்தைக் காட்டிலும் தன் நாயகனுக்குள தாம் துன்பமே சீதைக்குப் பெரிதாய்த் தோன்றிற்று. உலக முழுதுக்குந் தலைவனாகிய பெருமான் காட்டிலே மிக எளிமையுற்று அங்கே கிடைக்கும் கீரையை உணவாக உண்ணும்படி நேர்ந்ததே என்னும் வருத்தத்தின்மேல், அதனைத் தானும் தானிருந்து முகமன்கூறி ஊட்ட உண்ணுதற்கிலனாயினனே என்னும் வருத்தம் முதற்கண் உளதாயிற்று. எனவே எளிய புல்லரிசிக் கூழாயினும் அடகாயினும் மாண்புடைய மனைவியால் உபசரித் தூட்டப்படுமேல் அஃது இனிதாமென்பதாயிற்று. உயர் குணனெல்லாம் ஒருங்குடைய தன் நாயகன் தானிருந்து உண்பிக்காமையா னெய்தும் வருத்தத்தினும் பிறிதொன்றா னெய்தும் வருத்தம் பெரிதாமென்று பின் சீதை ஏங்குகின்றாள். அவ்வருத்தந்தான் விருந்தினரைக் கண்டவிடத்து அவரை உண்பிக்கப் பெறாமையா னெய்துவதாம். இதனானே தாமியற்ற வேண்டும் அறமாகிய கடப்பாட்டினை யியற்றுதற்கண் நேரும் முட்டுப்பாடே சான்றோர்க்கு எவற்றினும் பெருந் துன்பமாம் என்பது பெறப்படும். நாயகியாகிய தானின்றி நாயகனாகிய இராமபிரானால் விருந்தோம்பலாகிய அறம் இயற்றப்படுவதன்றே யெனவும், அதனால் விருந்தினரைக் கண்டுழி அவன் எங்ஙனந் துயருழக்குமோ வெனவும் சீதை உளம் வெதும்பினாளென்க. மனைவியின்றிக் கணவனால் அறம் நிகழ்த்தப்படாதென்பது இதனாற் போந்தது. இனி, கண்ணகியோ நாயகனாகிய கோவலன் தன்னைப் பிரிந்திருந்தமையால் விருந்தோம்பலாகிய இல்லறம் தன்னால் இயற்றப்படாமை குறித்து வருந்துவாளாயினள். 'விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை' என்பதனால் அதுவே அவட்குப் பெரியதோ ரிழப்பாகத் தோன்றிற்றென்பதும், தானெய்தலாகும் இன்பத்தை யிழந்தது அங்ஙனந் தோன்றிய தின்றென்பதும் பெற்றாம். இல்வாழ்க்கையிற் புகும் ஓர் நங்கை எத்துணைப் பேரறிவும், பெருநோக்கமும் உடையளாதல் வேண்டுமென்பதை இது தெளிவு படுத்துகின்றது.

இனி, மாமன் மாமிகளுக்குண்டாகிய வருத்தம் ஒருவகை நிகழ்ச்சியின் மேலிட்டு,

> "நும், பெருமகள் தன்னொடும் பெரும் பெயர்த் தலைத்தாள்
> மன்பெருஞ் சிறப்பின் மாநிதிக் கிழவன்
> முந்தை நில்லா முனிவிகந் தனனா
> அற்புளஞ் சிறந்தாங் கருண்மொழி யளைஇ
> எற்பாராட்ட யானகத் தொளித்த
> நோயுந் துன்பமும் நொடிவது போலுமென்
> வாயின் முறுவற்கவர் உள்ளகம் வருந்த"

என்பதனால் உணர்த்தப்படுகின்றது. பெருமைமிக்க நும் தாயும் தந்தையும் என்னைக் கண்டு, நீர் என் முன்பு நில்லாமையால் உளதாம் வெறுப்புச் சிறிதும் புறந்தோன்றாமல் நான் காந் தொழுகினேனாக, அவர்கள் அது தெரிந்து தம் உள்ளத்தின் மிக்க அன்போடே அருள் கலந்த மொழியால் என் பொறுமையைப் பாராட்டுதல்செய்து, அவர்கள் வருந்தாமைப் பொருட்டு நான் என் வாயிலே தோற்றுவிக்கும் பொய்ம்முறுவலைக் கண்டு, அஃது, என்நெஞ்சிலே ஒளித்த மெய்வருத்தமும் மனக்கவலையும் வெளிப்பட்டு வாய்திறந்து சொல்வதுபோலே யிருந்ததென்று உளம் வருந்தா நின்றனர்; என்பது இதன் பொருள். இங்ஙனம் அவர் வருந்த நீர் போற்றா வொழுக்கத்தை விரும்பினீர் என்று கண்ணகி கோவலனை நோக்கிக் கூறினாள். இங்கே கோவலனுடைய தாயும் தந்தையும் தம் புதல்வனைக் குறித்து வருந்துதலின்றிக், கண்ணகியுற்ற துன்பத்திற்கே வருந்துதலும், அவளது பொறையைப் பாராட்டுதலும் அவர்களின் உயர் குணத்தைப் புலப்படுத்துகின்றன. மாமன் மாமிகளாயுள்ளோர் தம் மருகிதிறத்து எத்தகைய அன்புடையரா யிருக்கவேண்டு மென்பது இதனாற் பெறப்படும். கண்ணகியோ தனக்குண்டாய வருத்தத்தைச் சிறிதுங் கருதாது, தன் மாமன் மாமிகளுக்குண்டாய வருத்தத்திற்கு இறங்குகின்றாள். இதைப் பார்க்கிலும் அவளது உயர் குணத்திற்கு வேறென்ன சான்றுவேண்டும்? கண்ணகி கோவலனது பொருந்தா வொழுக்கத்தை இங்கெடுத்துக்காட்டுந்

திறன் மிகவும் போற்றற் குரியது. அவனதொழுக்கம் தீதென் பதனை அவனுடைய அருமைத் தாயும் தந்தையும் மனம் வருந்து தற்குக் காரணமாயுள்ள தென்பதனாற் குறித்திடுகின்றாள். இதனால் ஒருவன் தன் தாய் தந்தையர் உளம் வருந்துதற்குக் காரணமான தீயவொழுக்கத்தை மேவுதல் சிறிதும் அடாததொன் றென்னும் நீதி புலப்படுத்தப்படுகின்றது. இங்ஙனம் நீர் போற்றா வொழுக்க முடையீராயினும் யான் நுமது வார்த்தையைச் சிறிதும் மாற்றாத உள்ள வாழ்க்கையேனாகலின் யான் அதற்கு மனம் பொருந்தி யெழுந்தேன் என்று கூறினாள். இதனால் ஓர் கற்புடைய மாதின் முதற் கடன் தன் கணவன் சொல்லை மனத்தாலும் மாற்றி நடவாமை யென்பது போதருகின்றது.

"கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை"

என்னும் அமிழ்தமொழி இங்கே சிந்திக்கற்பாலது.

(தொடரும்)

---

## உலகம்

[மு. சி. பூரணலிங்கம் பிள்ளை. B.A., L.T.,]

விண்ணுலகம் மண்ணுலகம் கீழுலகம் என்று உலகம் மூவகைப்பட்டுளது. விண்ணுலகம் விசும்பென்றும், மேலுலகம் புத்தேளுலகமென்றும், மண்ணுலகம் ஞாலமென்றும், மாஞால மென்றும், வைப்பு, வையகம், வையமென்றும், கீழுலகம் அளறு, இன்னாவுலகமென்றும் நாயனாருளிய வாயுறைவாழ்த்தில் வழங்கியிருப்பதைக் கற்றறிந்தோர் காணுவர். உலகம் உலகு என்று குறுகி வருதலுமுண்டு. சைவசித்தாந்த நூல்களிற் கூறப்படும் முப்பொருளில் உலகமொன்றாம். ஏனைய விரண்டும் கடவுளும் உயிருமாம். நம் பொய்யில்புலவர் 'உலகியற்றியான்' என்று கடவுளைக் குறித்துளர்.

"இரந்து முயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக வுலகியற்றி யான்" (அதி-௱௬௨)

இக்குறள் சைவசித்தாந்த வுண்மையை வற்புறுத்துகின்றதா வென்று ஐயுறுவாருமுளர்.

"அகரமுதல வெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு" (அதி-க)

உலகுக்கு முழுமுதல்வன் கடவுளென்பது வெளிப்படை. உலக மென்பது உலகத்திலுள்ள அசையும்பொருள் அசையாப்பொரு ளனைத்தையும் குறிப்பதன்றி அறிவிற்சிறந்த மக்களையுங் கொள் ளும். உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே என்பது பெரியார் வாக்கு

"வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று." (அதி. உ)

"நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு." (உ)

"இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு." (௪)

"உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்." (௱௪௰)

"கெடுவாக வையா துலகம் நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு." (௱௬)

"ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு." (உ௱௬)

"ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில்." (உ௱௩)

"தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்." (உ௱௭)

"மழித்தலும் நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்." (உ௮)

"நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு." (௯௪)

"இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு." (ருஅ)

"செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு," (ருக)

"தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்." (சயி)

"உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு." (சரு)

"எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு." (சரு)

"எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு." (சஎ)

"நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு." (ருஉ)

"பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிபு." (ருச)

"வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி." (ருரு)

"குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
னடிதழீஇ நிற்கு முலகு." ( ,, )

"கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
யுண்மையா னுண்டிவ் வுலகு." (ருஅ)

"கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு." ( ,, )

"உள்ள மிலாதவர் எய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு." (கூயி)

"வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு." (கூஉ)

"செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல்." (௬௪)

"எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு." (௬௭)

"கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு." (௮௧)

"அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
இன்மையா வையா துலகு." (௮௫)

"பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கட் டங்கிற் றுலகு." (௮௮)

"இளிவரின் வாழாத மான முடையார்
ஒளிதொழு தேத்து முலகு." (௯௭)

"நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்பு பாராட்டு முலகு." (௱)

"பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்." (,,)

"பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு." (௱௨)

"குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு." (௱௩)

"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு." (௩)

"உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லாந் தலை." (௩௰)

"சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா
லுழந்து முழவே தலை." (௱௪)

"உழுவா ருலகத்தார்க் காணி யஃதாற்றா
தெழுவாரை யெல்லாம் பொறுத்து." (,,)

"வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கண ரில்." (கஉ௰)

வையம், வைப்பு, வையகமென்ற மொழிகள் வழங்கியுள்ள குறள்கள் பின்வருவனவாம்.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்." (ரு)

"அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை." (கசு)

"கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று
மாறாநீர் வையக் கணி." (எக)

"உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்." (அரு)

"நலக்குரியார் யாரெனில் நாமநீர் வைப்பிற்
பிறர்க்குரியாள் தோள்தோயா தார்." (கரு)

"உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து." (ங)

"ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து." (ஙசு)

"இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின்." (ருரு)

"கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது." (ாசு)

"அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு." (அ)

"செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமு
வானகமு மாற்ற லரிது." (கக)

வையகம் ஒக்க வானகக் கிளவியாக்கம் குறிக்கற்பாலது. இதுவன்றி வானுலகம், புத்தேளுலகம் ஆகிய மொழிகள் வழங்கி வருங் குறள்களாவன.

"தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்." (உ)

"பெற்றுற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு." (௬)

"புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
ஒப்புரவி னல்ல பிற." (உஉ)

"நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றுது புத்தே ளுலகு." (உ௪)

"கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு." (உ௯)

"புகழின்றுற் புத்தேணுட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை." (௯எ)

"புலத்தலிற புத்தேணு டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்ன ரகத்து." (க௩௩)

அவ்வுலகம் இவ்வுலகமென்று மேலுலகத்தையும் பூவுலகத்தையும் எதிரதாகக் காட்டிய குறள் இஃதாம்.

"அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு." (உ௫)

பற்றுஞ் செருக்குமிலாதவர் தேவருலகத்திற்கு மேலான வுலகெய்துவர் என்று நாயனர் கூறியுளர்.

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்." (௩௫)

மேலுலக முண்டோ வென்று ஐயுறுவாருள ரென்பதும் பொய்யாமொழியா ரறிந்ததொன்றும்.

"நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று." (உ௩)

ஞாலமென்னுஞ் சொல் பல குறள்களில் வந்துளது.

"இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று." (௱௬)

"நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்." (௱௨)

"நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்." (௱)

"விரைந்து தொழில்கேட்கு ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார் பெறின்." (அ

"துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
னளியின்மை வாழு முயிர்க்கு." (ருசு)

"ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின்." (சசு)

"காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்." ( ,, )

"காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு
ஞாலத்தின் மாணப் பெரிது." (கக)

"பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில்." (கரு)

"அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி." (உரு)

நரகமென்பதைக் குறிக்குங் கிளவி அளறுகும். அதனை இன்னாவுலக மென்றும் அழைத்துளார்.

"உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு." (உசு)

"அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல்." (உரு)

இதுகாறும் வரைந்துதவிய குறள்களால் செந்நாப்போதார் கொள்கைகள் பல விளக்க முறுகின்றன. அவையாவன. கடவுளுளர். உலகியற்றியவர் அவரே. நிலையாமை இவ்வுலகின் தன்மை.

நேற்றிருந்தா ரின்றிங்கில்லை யென்பதை எவருமறிவர். ஆதலால் ஒழுக்கஞ் சிறந்தது. அறஞ்செய்தல் தலை. அறம் இன்பம் விளைக்கும். அறம் இன்பத்திற்கும் இன்றியமையாதது. பொருளும் நல்வழியில் தேடவேண்டும். ஈட்டிய பொருளை யீதலும் வேண்டும். அன்பால் அருள் எய்தலாம். கண்ணோட்டம் மக்கட்குப் புகழ் தரும். கண்ணோட்டமின்றிச் கொலை புலை புரிவார் அளறுக்குரியராவர். நல்லறஞ் செய்வார் நன்னிலை யடைவர். அன்னாருக்கு இவ்வுலகமே உம்பர்பதியாகும். வானுலக முண்டு. ஐயுறவேண்டாம். ஐயுறுவோரும் பெரியாரொழுக்கங் கைப்பிடித்தலால் பயன் பெறுவர். தெள்ளியராதல் முதற் பயனும். தெள்ளியார் கள்ளவொழுக்கங் கைக்கொளார். அன்னார் இவ்வுலகில் கமலநீர்போன்று ஒட்டி யொட்டாதிருப்பர், மெய்ப்பொருள் விழைவர். இதுவே பிறப்பின் பயன், பிறவியை அறுக்குங் கருவி. இவ்வரிய பெரிய வுண்மைகளைப் புகட்டுங் குறள்களில் ஒரு பொருள் குறிக்கும் பல சொற்களைக் கண்கூடாகக் காணலாம்.

உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலாவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

---

# தேவார உரை

[சேப்பறை. ஸ்ரீமத் சிதம்பரசுவாமிகள்]

திருச்சிற்றம்பலம்

தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதிசூடி
காடுடைய சுடலைப்பொடிபூசி யென்னுள்ளங் கவர்கள்வன்
எடுடைய மலரான்முனைநாட் பணிந்தேத்த வருள்செய்த
பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மானிவனன்றே.

[திருஞானசம்பந்தர்-பிரமபுரத் தேவாரம்]

திருச்சிற்றம்பலம்

**எனதத்த!** சிறியேற்கு இத்திருவருளீந்தார் ஈண்டுளராய இவரே. அவர் தம் இயல்பென்னையோவெனின் வகுத்தோதுதும்.

அவர் தாம் திருச்செவி முதலிய திருவங்கமுடையரன்றி அனங்க ராயினாரல்லர். அவர் அறவடிவுடைய திருவிடையேறியோர்; அன்றியும் திருச்சடையின்கண் பிறையொன்று சூடியோர்; மேலும் திருவெண்ணீறு சண்ணித்துடையராயினர். இனி நமதுளங் கொள்ளாமைபோலாது எனதுளம் எனதாக வொட்டாது தனதாகக்கொண்டருளும் ஓர் தோன்றாப்பொருளன்றித் தோன்றும் பொருளன்று. சொன்ன அன்னோர் இத்திருப்பதியுள் எழுந்தருளி வைகும் பெருமானே பிறண்டுவைகும் பிறரல்லரென்க.

'செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வம்—செல்வத்து ளெல்லாந் தலை' எனவும், செவியான் வருஞ் செல்வமாவது கேள்வியா னெல்லாப் பொருளேயு மறிதல் எனவும் "செவி யுணர்விற் கேள்வி யுடையா ரவியுணர்வின்—ஆன்றாரோடொப்பர் நிலத்து" எனவும் வருவனவற்றாலும் பிறவாற்றானும் யாம் எல்லாப் பொருளேயும் அறிதற் கருவியாய இந்திரியம் ஐந்தனுள் அருவியல்பறியும் அறிவாற்றலில்லாத ஏனை யிந்திரிய நான்கிலும் அஃதறிதலாற்றுங் கருவியாய் மேம்படுதலின் செவியிந்திரியஞ் சிறப்புடைத்தாதல் உயர்ந்தோ ரெல்லாருக்கு மொப்ப முடிந்ததொன்றேயாம்.

இனி, எமதிறைவன் செயலெல்லாம் உலகச் செயலோடொக்கு மென்பதூஉம் அவ்வாறே அவர்க்கெல்லா மொப்ப முடிந்தது.

அதனானே எமது செவி ஏனைக்கருவிகளினுஞ் சிறப்புடைத்தாய் யாம் எல்லாப் பொருளேயும் அறிதற் கேதுவாயவா றெவ்வாறு அவ்வாறே எமதிறைவன் திருக்கரணங்களுள் வைத்து அவன் திருச்செவியும் முறை குறை முதலிய வேண்டியார் வேண்டியவாறு வேண்டிக்கோடல் எல்லாமே என்றுகோடற் கருவியாய் மேம்பட்டு நிற்றலின் சிறப்புடைத்தாதல் பெற்றாம்.

அற்றேல் "குணங் குறியொன்றில்லான்" என் றித்தொடக்கத்துச் சுருதிகள் பலவேறுண்மையின் அவற்கு அவையென்று கோடற் கருவியாய திருச்செவி முதலிய திருக்கருவிகள் உள

வென்றல் சாலாதுபோலு மெனின் அற்றன்று. இறைவனியல்பு உலகியல்போ டொக்குமென மேலோதினமாகலின் ஆகலா மென்பது. இவற்றியல்பெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும். வறி யானொருவன் ஒரு பொருளுடையான்மாட்டுச் சென்று ஆண்டு தன் குறை தீர்த்துபகரித்தற்குரிய கருவியாய அவன் காப்பெரு மையே முதற்கண் எடுத்துக்கொண்டு மாண்கை நீண்கை வண்கை, என்று இத் தொடக்கத்தால் அதனைச் சிறப்பித் தோதிப் பின்னர் பிறவற்றையு மெடுத்தோதுமாறு யாம் காண்டும் அவ்வாறே எமது பரமாசாரியப்பரம்பொருளும் தாம் ஈண்டு எடுத்துக் கொண்டருளிய திருப்பா முறையினை முறை யானே இறைவன் ஏன்றுகோடற் கருவியாய் மேம்பட்டு நிற்ற லின் அப்பெற்றித்தாய அவன் திருச்செவியினை எழுவாய்க்கண் எடுத்துக் கொண்டருளிய அதற்குரிய திருவணி விசேடம்பற்றி அதனைச் சிறப்பித்தருளி "தோடுடைய செவியன்" என இவ் வாறுபதேசித்தருளினரென்பது.

இவ்வாற்றானே அத்திருப்பா இறைவன் திருவுருவிற் சென்று தலைக்கூடுதற்குரிய நெறி அவன் திருச்செவியேயாம். ஆகலான் அஃது அம்முறையானே போந்து இறைவன் திருவுள் ளத்தோ டியைந்து கிடந்ததென்பது.

அற்றேல் அஃதவ்வாறே எமதிறைவற்குரிய திருச்செவி யன்று, எமதிறைவிக்குரிய திருச்செவியேயாம். திருத்தோடு அவற்கன்றி அவட்கே யுரிமை யுடைத்தாகலான் எனின் அது பற்றி ஆண்டு இழுக்கென்னை?

"வடிவம் பிறிதேல் மதியும் பிறிதாம்
உடனம் பிகைசே ருடையா னொருமைப்
படிவம் புருட பணிபெண் பணியென்
றிடுமிங் கிதிலே திசையு மிசையீர்."

என்னும் திருமொழி யுண்மையானென்பது. இதனை இன்னும் ஈண்டுரைத்தவாறுபற்றி விரித்துணர்ந்துகொள்க.

அஃதேல் அஃதஃதாமாயினும் ஆசிரியர் ஆண்டு இறைவன் திருச்செவியைச் சிறப்பிக்கு முறையை விடுத்து, இறைவி திருச் செவியைச் சிறப்பித்தது. முறைமாறிக் கோடலாமன்றே, அம்முறை மாறிக் கோடலானும் பயன் விசேட மென்னை யெனின் அற்றேல் ஈண்டு நின்னைவினவுதும், வினவுமாறு; அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வமென உபதேசித்தருளிய சிற்றம்மையார் அதனை அத்தனும் அம்மையும் முன்னறிதெய்வம் என மாறி யுபதேசித்தருளுக. அம்முறை மாறிக் கோடலானும் பயன் விசேடமென்னை, நீ அதற்கு ஆண்டிறுக்கு மிறையே இதற்கு யாமீண்டிறுக்கு மிறையுமாம். ஆகலான் அதுபற்றி ஆசங்கை யென்னை யென்றொழிக. அற்றன்று அதுவும் யாம் ஆசிங்கித்தற்குரியதோர் சங்கையே ஆகலின் அதனை யாசங்கிக்கு முகத்தான் அஃதிதற்கு அமைதியாகாதாலெனின் அற்றேல் அத னியல்பு முன்னர்ச் சுருங்க வெடுத்தோதுதும். ஞாலத்துத் தோன்றுங் குழவியெல்லாம் தம்முகங்கீழாய் இந்நிலமேல் நோக்குமுன் யாது மறியாவாய் நோக்கியவாறே முன்னர் அன்னையை அறிந்தே பின்னர் அத்தனை அறிதலுங் கண்டாம் அவ்வாறே அவ்விருவாது உபகார விசேடங்களின் தாரதம்மிய மாம். அதுபற்றி அவரை யென்றுகோடன் முறையும் அம் முறையானே முற் பிற்பாடு படுமன்றே.

அஃதொப்ப ஆசிரியர் தாமழுதருளியபோது ஆண்டெழுந் தருளிய இறைவ னிறைவி இருவருள் ஒருவரையும் அறியார் போன்று நிற்ப இறைவியார் இறைவர் திருவாணை மேற்கொண்டு சென்றருளிப் பிள்ளையார் திருப்புறந்தைவந்து திருக்கண்ணீர் துடைத்தருளுங்கால் முதற்கண் ஆசிரியர் திருநோக்குக் கெதிர்ப் பட்டருளினர் இறைவியார், பின்னர் இறைவனார் அதற்கெதிர்ப் பட் டருளினர், முற்பிற் பாடாய அவ்வுபகார விசேடம்பற்றி எமது பரமாசாரியப் பரம்பொருள் இறைவி திருவணி அமைந்த திருச்செவியை முறையானே எழுவாய்க்கண் எடுத்துக் கொண் டருளினரென்பது.

இனி அதுவு முளப்படப் பிறிதோராற்றானும் ஓரமைதியாமாறு காட்டுதும். எமதிறைவன் ஆதிக்கண் ஆக்கியருளிய முதனூலை

அனந்தேசுரருக்கு உபதேசித்தருள, அவர் அவ்வாறே ஸ்ரீகண்ட ருத்திரருக்கும் அவர் அவ்வாறே உரிய பிறர்க்கும் உபதேசிப்ப அவ்வாறே அவரவர் சுரோத்திரம்பற்றிக் கேட்டுக் கோடல் காரணத்தான் அந்நூல் சுருதியெனப்படும். அஃதின்னும் அன்னபிற காரணங்களால் அன்ன வேறு பிறபெயரும் பெறுமென்றோதுப.

இனி எல்லாவியல்பானும் வடமொழி தென்மொழி யிரண்டுந் தம்முளொப்பனவாகலான் அவ்விரு வேறுமொழியினும் முதனூலும் பிறநூலுமுளவாயினுக், தம்முளொக்கு மாகலான் சிவ பரம்பொருள் வடமொழியுள் ஆக்கியருளிய முதனூல் சுரோத்திர வியைபுடைமைபற்றி சுருதியெனப் பட்டவாறே எமது பரமாசாரியப் பரம்பொருள் தாம் ஆக்கியருளிய இப்பரம நூலும் அவ்வடமொழிச் சுருதியோடொப்பத் தென்மொழிச்சுருதியே யாம். ஆகலின் அஃதிவ்வேதுபற்றி யென்பது தேற்றி யருளுவார் அத்திருச்செவியை முதற்கண் ஈண்டெடுத்துக் கொண்டாரென்பது.

இருந்தவாற்றான் இந்நூல் தமிழ்மொழிச் சுருதியாதல் பெறப்பட்டது.

பிராஹ்மணம் என்பது ஆதேசம் என்று சொல்லப்படும். அதாவது கட்டளையிடவேண்டிய காரியங்களை ஏவுகின்ற வேதத்தின் பாகமாகும்: அங்ஙனமே தமிழ்வேதத்தினும் "ஆளில்லையெம் பெருமானவை யட்டித்தரப்பணியே" எனவும் "முதலைதாச்சொல்லு காலனையே'' எனவும், கூற்றாயினவாறு விலக்ககலீர்" எனவும். "கண்ணினுலுமைக் காணக்கதவினைத் திண்ணமாகத் திறந்தருள் செய்மினே" எனவும், வருந் திருப்பதிகங்களும் இன்னோரன்ன பிற திருப்பதிகங்களும பிராஹ்மணம் போலுள்ளன வென்றறிக.

இனி அநுவாகமென்பது ஒருவிடயத்தைப் பூரணமாக வெடுத்துரைக்கும் வாக்கிய சமுதாயமாம். வேதசாகையின் பேதத்துள் வைத்து இதுவும் ஒன்றாம்.

பஞ்சாதியென்பது பத்து வாக்கியம் கொண்டதாம். இவ்வாறாய பஞ்சாதிகள் ஓர் அநுவாகத்துட் பலவும், வரும் அன்றி

மூன்று இரண்டும் வரும். சில அநுவாகங்களில் பஞ்சாதிக் கணக்கின்மேல் அதிக வாக்கியங்கள் இருப்பதுமுண்டு. தமிழ் வேதத்துள் ஒவ்வொரு திருப்பதிகங்களும் சாகைபோல விளங்கலின் அநுவாகத்தை யொத்தனவாகும். பத்து வாக்கிய சமுதாய மடங்கிய பஞ்சாதிகள் தம்முட் பொருந்த நின்றாற்போல இத்திருப்பதிகங்களும் பத்துப்பாசுரங்கள் தம்முட் பொருந்தநிற்றலும் அனுவாகத்தின்கட் பஞ்சாதியொன்று இரண்டு மூன்று வருதல் போல இத்திருப்பதிகங்களுள்ளும் திருநாவுக்கரசுசுவாமிகள் அருளிச்செய்த "நெய்தற் குருகுதன் பிள்ளையென்றெண்ணி" என வரூஉந் திருக்கழிப்பாலைத் திருப்பதிகத்தின் மூன்று திருப்பாசுரங்களும் "படையார் மழுவொன்று பற்றி" என வரூஉந் திருப்பிரமபுரத் திருப்பதிகத்தில் ஒருபாசுரமும் "நெடியமால் பிரமனோடு நீரெனும் பிலயங் கொள்ள" என வரூஉந் திருக்குறுக்கை வீரட்டானத் திருப்பதிகத்தில் இரண்டு திருப்பாசுரங்களும் "தம்மானங் காப்பதாகி" என்னுங் குறைந்த திருநேரிசையெனப் பெரிய திருப்பதிகத்தில் ஆறு திருப்பாசுரங்களும் சுந்தரமூர்த்திசுவாமிகள் அருளிச்செய்த "திருவும் வண்மையும் திண்டிற லரசும்" என வரூஉந் திருநின்றியூர் திருப்பதிகத்தில் எழு திருப்பாசுரங்களும் திருஞானசம்பந்தசுவாமிகள் அருளிச்செய்த "சுண்ணவெண்ணீறணி மார்பிற் றோல்புனைந்து" என வரூஉந் திருக்குருகாவூர் வெள்ளடைத் திருப்பதிகத்தில் ஆறு திருப்பாசுரங்களும் "நல்லார் தீமேவும் தொழிலார் நால்வேதம்" என வரூஉஞ் சீகாழித் திருப்பதிகத்தில் எழு திருப்பாசுரங்களும் இன்னு மின்னோரன்ன பிறவும் வருதலுங் காண்க. சிவபிரான் தமிழ்வேதத்தில் சில திருப்பதிகங்களில் திருப்பாசுரங்கள் பத்தும் பதினொன்றுமாய நியத மழிய ஒன்று இரண்டு மூன்று ஆறு எழு முதலியவாகச் செய்ததூஉம் இப்பெற்றி அறிவுறுத்தற்குப் போலும். இன்னும் "அவளான் வந்த ஆக்க மிவ்வாழ்க்கையெல்லாம்" என்பதனானும் அதற்கு ஈண்டோதிப் போந்த வாழ்வெல்லாம் சிவசத்தி மணந்த தனைய வாழ்வென்பதனானும் உயிர்கட்கு நிகழும் வாழ்வெல்லாம் எமதிறைவியார் உபகாரம் இல்வழி நிகழாது. அஃதுள் வழியே நிகழுமென்பது பெறப்பட்டது. படவே, இவ்வுலக

இரு ளோட்டுதற்கண் கதிர் கதிரோற்கு முற்பட்டு நின்றோட்டு மாறெப்ப எமது அகவிருளை யோட்டுதற்கண் இறைவியே இறைவற்கு முற்பட்டு நின்றோட்டுவாளென்பது பெற்றாம்.

இவ்வுலகக் குழவிகள் வாழும் வாழ்க்கைக்கு அவற்றைப் பெற்றாள் இயற்றுமுபகாரமாய் முற்பட் டுபகரிக்குமா றெவ்வாறு அவ்வாறே ஏனைப்பேரின்ப வாழ்வுக்கு இறைவியார் உபகாரமே முற்பட் டுபகரித்தருளுமென்பது.

இனி யாம் ஈண்டுக் காணப்படுந் தோடு முதலிய அணிகல மெல்லாம் எவ்வாறு தம்மை ஆக்குமொரு வினைமுதல் இல்வழி இலவாய், அஃதுள்வழி உளவாவன வன்றி அவை தாம் இயல் பானே உள்ளன வல்ல, அவ்வாறே எம்மாற்காணப்படும் இவ் வுலகுந் தன்னை ஆக்குங் கருத்தாவா னுயதொரு காரியப் பொருளாமல்லது அஃதியற்கைப் பொருளாதல் செல்லாதென அங்ஙன முபதேசித் தருளுமுகத்தாற் காணப்படும். இவ் வுலகையாக்கும் வினை முதலாய காணப்படாத கடவுளுள னென்பது தேற்றியருளுவார் 'தோடு' என இங்ஙனம் அத் தோட்டினை முதற்கணெடுத்துக் கொண்டருளினு ரென்பதாம்.

ஆகவே, இவ்வுலகம் ஒரு கருத்தாவை யுடைத்து, காரியப் பொருளாகலான் தோடுபோலும் என்னும் அனுமானம் பற்றியும் அஃதற்றே யாதல் தெற்றெனவறிகவென உபதேசித்தருளியவா றாயிற்று. எனவே இவ்வுலகம் ஒரு கருத்தாவாற் செய்யப்படும் ஒரு காரியப் பொருளாவதன்று. அஃதியற்கையா னுள்ளதொரு நித்தப்பொருளேயாமென்னும் உலோகாயதர் மீமாம்சர்களையும், அஃது வித்தழியும் அவ் வழிவுபாட்டின்கண் அங்குரம் தோன்று மாறெப்ப அவ்வச் சார்புபற்றித் தானே தோன்றுமென்னுஞ் சவுத்திராந்திகர் முதலியோரையும், அஃது சூனியத்திற்றானே தோன்றுமென்னும் மாத்திமிகர் முதலியோரையும்,

அஃதுள நிலதாய்த்தானே தோன்றுமென்னுஞ் சமணரை யும் அது செய்வான் செய்பொருளிரண்டுமொன்றாத லியல்பா னுடைத்தென்னும் மாயாவாதிகளையும் மறுத்தருளி தோடு முத

வியஅணிகலங்கள் எவ்வாறு செய்வானையின்றித் தாமே செயப்படு பெருளாவனவல்ல அவ்வாறே இவ்வுலகும் ஒரு செய்வானையின்றித் தானே செயப்படு பொருளாகாது; மேலும் அவ்விரண்டுந் தம்முளொன்றுதல் யாது மேலாமையின் அவ் விருபொருளுமொருபொருளாதல் யாதும் எலாதென இவ்வாறு இவ்வுலகிற்கு முதற்கடவுளுண்மையும் அவையிரண்டுந் தம்முள் வேறாதலும் வலியுறுத்தருளியவாறாயிற்று.

அற்றேல் அஃதவ்வாறே தத்தம் வினைமுதலால் காரியப்படுதல் பொதுமையான் இவ்வுலகப்பொருளெவற்றிற்கு மொக்குமன்றே, அஃதங்ஙனமாக அவற்றுள் இஃதொழித்தொழிந்த தொன்றனை ஈண்டெடுத்துக் காட்டினு மஃதமையும். அஃதற்றாகவும் ஈண்டு இதனையே யெடுத்துக் கொண்டதெற்றுக் கெனின், நன்றேயோதினுய் அஃது ஈண்டு ஒருவமையொடு படுத்துக்காட்டுதும். எமது பரமாசாரியப் பரம்பொருள் சிவபரம் பொருளையே முதற்பொருளாகக் கைக்கொண்டு வழிபடுதலுடைத்து என இவ்வாறு அத்தலைமைப் பொருளியல்பு இது என வெடுத்தோதவே அப்பரமாசாரியப் பரம்பொருளை வழிபடுந் தலைமையில் பொருளாய யாமும் அவ் வியல்புடையமென்பது ஓதாமையே யினிதுவிளங்குமன்றே இதுவுமதுவாமாகலான்.

அஃதேல் அஃதஃதாமாயினும் சேதன சேதனமென்னுமிருவேறுபொருளின் கூட்டத்தானுயது இவ்வுலகமென்றோதுப. அவற்றுள் சேதனப்பொருள் முன்னையதும் எனையதுபின்னையதுமாம். ஆகவே, அவ்வமைதி ஈண்டைக் கமையாது போலுமெனின், அற்றன்று. சேதனப்பொருள் அசேதனப்பொருளொப்பதொரு காரியப் பொருளாகாமையானென்பது.

அற்றேல் இவ்வுலகம் இவ் விருவேறுபொருளும் தம்முளியையு மவ்வியையபே பிறிதென்றோதுப. ஆகலான் நீயிர் மேல் இவ்வுலகமெல்லாங் காரியப்பொருளா மென்றல் யாதுஞ் செல்லாதாய் அதனுள் ஒருசா ரியைந்தும் ஒருசா ரியையாதுமாய் முடியுமாகலான், அது மயில் நடமொப்பதொன்றாய் ஒன்றை நிறுவும்

வழியொன்றுவிட் டொழியுமாலோவெனின், அற்றன்று. வான் வழியின் வந்திழியுங் கால் தூய்தாய நீர் பின்னர் உவர் நிலத்துப் புக்குழி அச்சார்புபற்றி அப்பெயரொழிந்து உவரெனப் பெயர் மாறு காண்டும். அவ்வாறே ஈண்டும் வைத்துக் கண்டு கோடுமாகலானென்பது.

அற்றேல் ஆண்டுப் புக்க தொழித்த தொழிந்தநீர் அப் பெயர் பெறுமையின் அவ்வாறே அஃதீண்டுங் கொள்ளப்படு மாலோவெனின், அற்றன்று. ஒப்பெனப் படுவது ஒரு புடை யொப்பே, பிறிதன்மையானென்பது. ஆயவாற்ருன் இவ்வுலகம் அவ் விருவேறு பொருளுந் தம்மு ளியைந்து நின்றதோர் இயை பிற்ருமாயினும் அவற்றுள் சேதனப்பொரு ளொருவாற்ருற் காரி யப் பொருளும் ஒரு வாற்ருற் காரியப்பொருளாகாமையாதலும், அவ்வாறன்றி அசேதனப்பொரு ளெல்லாவற்ருனுங் காரியப் பொருளாதலும் ஆய வேறுபாடு தம்முட் சிறிதுடையவாமாகலா னும் அக்காரியப்பாட்டின் மிகுதிப்பாடு அசேதனப் பொருட்கே யாகலானும் அதனுன் அதுவே காரியப்பொருளும் அவை தம்முட் சிறந்தபொருள் பொன்னும் அதனுனும் அணிகல மெவற்றினுஞ் சிறந்த அணிகலந் தோடுமேயாம். ஆகலான் அஃதங்ஙனமாதல் அமைவுடைத்தாமாறு காண்க. அற்றேல் அஃதங்ஙமாம். ஆயினும் பொன் மணி யிரண்டனுள் மணியே சிறப்புடைப்பொருள் போலுமெனின் அஃதொக்கும், ஆயினும் அஃதவ்வாருதலும் இதன் பற்றுக்கோட்டையின்றித் தனித் தமையமட்டாமையின் அது சாலுமாறு காண்க. அஃதற்ருயி னும் அணிகலங்களுள் வைத்து முடியணி சிறந்த தென்னுமோ வெனின் என்னும் என்னை? அவ்வணிகலம் இரண்டனுள், காதணி முடியணியின்றித் தனித்துத் தன்னையணிந்தாரை அழகு செய்பவல்லும் ஆகலானும் ஏனையது அன்னதன்ருக லானும் என்பது.

அஃதேல் அஃதங்ஙனமாக இறைவன்திருத்தோடு இவ்வுலக அணியொப்பக் காரியப் பொருளாகாமையான் அஃதீண்டைக் கமையாது போலுமெனின் அற்றன்று. தோடென்னும் அச்சத்

தம் பொதுமைபற்றி இவ்வுலகத்தோடும் ஆண்டுத் தழுவப்பட்டு நிற்றலின் அத்தோட்டின் சாதியென்பதே கருத்தா மாகலான் அஃதமையாமையாண்டய தென்றொழிக. இஃதெமது பரமா சாரியப் பரம்பொருளின் திருக்கருத்தாதல் "எப்பொருளு மாக் குவா னீசனே யெனுமுணர்வும்" என அது தெரிந்துணர்ந்து உபதேசித்தருளிய எமதாசிரியர் சேக்கிழார் திருவாக்கானு முணர்க.

(தொடரும்)

---

# அலங்காரம்

[S. A. திருமலைக்கொழுந்துப்பிள்ளை. B., A.,]

மகளிர்க்கு ஆபரணம் அணிவதால் அழகு மேம்பட்டுத் தோன்றுவதுபோல் கவிஞர் தாமியற்றுஞ் செய்யுள்களில் அலங் காரத்தை ஏற்றுவதுண்டு. தமிழைச் சிலர் ஐந்திலக்கணம் பொருந் தியதெனக் கருதுப. அவை **எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி** யெனுமைந்துமாம். அணி என்பதுவே அலங்காரம்.

ஆசிரியர் **தொல்காப்பியனார்** தமிழிலக்கணத்தை முப்பகுதி களாகிய **எழுத்து, சொல், பொருள்** எனும் மூன்றுளடக்கி, யாப் பியலையும், அணியியலையும் **பொருளதிகாரத்**துள்ள உவமையியலில் அலங்காரவமைதி யடக்கங் கொண்டது.

அலங்காரம் சொற்சுவை பயக்கும் சொல்லலங்காரமென வும், பொருட்சுவை பயக்கும் பொருளலங்காரமெனவும் இரு வகைப்படும்.

சொல்லலங்காரம் மோனை, எதுகை, மடக்கு, ஏகபாதம், கோ முத்திரி முதலாய பாகுபாடுகளைப் பெறும். நற்றமிழ்வல்ல ஞான சம்பந்தரது பாசுரங்களுட் சில இவற்றை யினிது விளக்கும்.

இவண் பொருட் சுவை பயக்கும் அலங்காரங்களை மட்டும் சிறிது உதாரண முகத்தால் விளக்குதும். செய்யுட்கு மிகச்

சிறந்த அணிகள் உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம் எனும் மூன்றுமேயாம். தற்குறிப்பேற்றம் வடமொழியில் உத்பிரே க்ஷை யெனப் பெயர்பெறும். காவியங்களுட் பேரழகைப் பயப் பது தற்குறிப் பேற்றமே.

## க. உவமை

'குமாரக்கடவுள் மயில்வாகனத் தெழுந்தருளும் கோலம் இள ஞாயிறு நீலக்கடலுள் உதயமாவதை நிகர்க்கும். இவண் செவ் வேளாகிய குமரக் கடவுளது வண்ணம் எழுஞாயிற்றை யொக்கு மெனவும், அவர் ஏறும் மயில்வாகனம் நீலக்கடலை யொக்கு மென வும் காணலாகும். இஃது வண்ணவுவமம். சூரிய வுதயத்தால் கண்ணிற்குள்ள இருள் தீர்வதுபோல், முருகதரிசனம் மக்க ளது உள்ளத்திருளைப் போக்கவல்லதாகுமென வினையுவமமும் அறிந்து கொள்ளற்பாற்று.

**திருத்தக்கதேவர்** தாமியற்றிய **சிந்தாமணி**யுள் நெல் விளை வதை வர்ணிக்கும் அமைதியைக் கண்டின்புறுக.

> "சொல்லருஞ்சூற்பசும்பாம்பின்றோற்றம்போல்
> மெல்லவேகருவிருந்தீன் றுமேலலார்
> செல்வமேபோற்றலைநிறுவித்தேர்ந்தநூற்
> கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே."

சொல் என்பது நெற்பயிர். நெற்பயிர் கருக் கொள்வது பச்சைப்பாம்பு சூல் கொள்வதை நிகர்க்கு மெனவும், கதிர் தலை யெடுத்து நிற்பது கீழ்மக்கட்கு செல்வச் செருக்காற் போதரும் வணங்காத் தலையெடுப்பை நிகர்க்குமெனவும், கதிர்கள் முற்றித் தலைசாய்ந்து நிற்பது கல்விகேள்விகளாற் போறிவுதயமான ஆன் றோரது அடக்கத்தை நிகர்க்கு மெனவும் விளக்கப்பட்டன.

அன்றியும் நெற்பயிர் கருக்கொண்டமையைச் சூல்கொண்ட பச்சைப் பாம்பிற் குவமித்த அழகை நன்கு காண்க. நடுவே பருத்து இருநுனிகளும் சிறுகியிருக்கும் உவமை யன்றியும், பசும்பாம்பைப் பிரட்டித்தள்ளின் அதனது அடிப்பாகம் வெளுத்

திருப்பதைப்போல் கருவைக்கொண்ட நெற்கதிரும் ஓர்புறம் சிறிது வேளுத்திருப்பதும் கவனங் கொள்ளற்பாற்று. நெல் விளைவை விளக்கங் காட்டப்புகுந்த ஆசிரியர் எத்தகைய உறுதிகளை நமக்கு எடுத்துக் காட்டி அறிவிற்கு அமுதத்தை யூட்டா நின்றார்.

"ஆகா தெனினும் அகத்துநெய் யுண்டாகிற்
போகா தெறும்பு புறஞ்சுற்றும்—யாதும்
கொடாஅ ரெனினும் உடையாரைப் பற்றி
விடாஅ ருலகத் தவர்" (நாலடியார் - ௩௩௯)

செல்வப் பொருள் நிறையப் பெற்றவர் மகா லோபிகளாக விருப்பினும் நெய்க்கலயத்தை எறும்பு விடாது சுற்றித் திரிவது போல் பேதமை வயப்பட்ட மாந்தர் அன்னோரைவிடாது சுற்றித் திரிவரெனக் காட்டப்பட்டது,

"சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்" (குறள் - ௧௰௭௮)

கீழ்மக்களாகிய கயவரது செல்வம் எளிதே பயன்படாது; ஒறுப்பவர்க்கே பயன்படுமென்பதாம்.

## உ. உருவகம்

ஒருபொருளை மற்றோர் பொருளாகக் கூறுவது உருவகம்; உவமையோ ஒருபொருள் மற்றோர் பொருளை நிகர்க்கு மெனக் கூறும்.

இவன் போர்முகத்திற் புலி; இஃது உருவகம். இவன் போர்முகத்திற் புலியை யொப்பன்; இஃது உவமை.

ஆங்கில நூலுடையார் உருவகத்தை Metaphor எனவும் உவமையை Simile எனவும் கூறுப.

மீனாக்ஷி, அங்கயற்கண்ணி, பத்மாக்ஷி, நீலாக்ஷி எனும் பதங்களில் உருவகம் மறைந்து உறைவதைக் காண்க.

"தேனுகர் வண்டு மதுதனை யுண்டு
    தியங்கியே கிடப்பதைக் கண்டு
தானதை நாவற் கனியென மதித்து
    தடக்கையால் எடுத்துமுன் பார்த்தாள்
வானுறு மதியம் வந்ததென் றெண்ணி
    மலர்க்கரம் குவியுமென் றஞ்சி
போனது வண்டோ பறந்தது பழமோ
    யாதென மருண்டு நின்றனனே."

மேலைச் செய்யுளில் உருவகவணி மருட்சியணியோடு கலந்து மிக்க இன்பத்தைப் பயவாநின்றது. தேனுட் படிந்து மூர்ச்சித்துக் கிடந்த கருவண்டை நாவற்கனியென மதித்துப் பேதையள் கையால் எடுத்து நோக்கவே, அவளது அங்கையை மலர்ந்த தாமரை மலரென வண்டு மதித்தது ஓர் மருட்சி, பின்னர் அஃது அத் தையலது வதனத்தை சந்திரபிம்பமெனமதித்தோர் மருட்சி. இதில் தற்குறிப்பேற்றமும் சிறிது கலந்துளது.

திருச்சிற்றம்பலக் கோவையாருள் முதற் செய்யுள் வருமாறு:—

"திருவளர் தாமரை சீர்வளர்
    காவிக ளீசர் தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங்
    காந்தள் கொண்டோங்கு தெய்வ
மருவளர் மாலையோர் வல்லியின்
    ஒல்கியன நடை வாய்ந்து
உருவளர் காமன்றன் வென்றிக்
    கொடி போன் றொளிர்கின்றதே."

இஃது தலைவன் தலைவியை முதன்முதற் கண்டபோழ்து, அவனிடமெழுந்த வியப்பு இத்தகையதென்பதை விளக்கிற்று.

'அழகுவளரும் தாமரை மலரையும் அதனுள் இரண்டு நீலோற்பல மலரையும் அதன்கிழ் நிறம் வாய்ந்து ஓர் குமிழ

மலரையும் மற்றும் அதன்கீழ் கோங்கின் அரும்பு இரண்டையும், மற்றும் அதன்கீழ் பைங்காந்தள் மலரிரண்டையுங்கொண்ட தெய்வீக மணங்கமழும் ஓர்மாலை கொடியைப்போல் இனிதசைந்து அன்ன நடையையுங் கொண்டு மன்மதன் மூன்றுலகத்தையும் வெல்லுதற்கு உயர்த்திய வெற்றிக்கொடிபோற் பிரகாசியா நின்றதே' என வியந்தவாறு.

இவண் முகத்தை தாமரை யெனவும், விழிகளை காவிகள் (நீலோற்பலம்) எனவும், மூக்கை குமிழ மலரெனவும், கொங்கைகளைக் கொங்கரும் பெனவும் அங்கைகளை காந்தளெனவும் கூறியதால் உருவகமும் வல்லியினெல்கி யெனவும் காமன்றன் வென்றிக் கொடிபோல் எனவும் கூறியதால் உவமையும், அன்னநடை வாய்ந்த தென்பதால் தற்குறிப்பேற்றமும் அமைந்திருப்பதைக் காண்க.

## ௬. தற்குறிப் பேற்றம்

தற்குறிப்பேற்ற மென்பது ஒன்று வாளா நிகழப் புலவன் தனது குறிப்பை யதன்கண் ஏற்றுதலாம்.

இராமபிரான் மிதிலையை நோக்கிச் சென்றபோழ்து, அந்நகரத்தின் மாடங்களிலுயர்த்திய கொடிகள் காற்றால் ஆடிக் கொண்டிருப்பதை வருணிக்க நினைத்த **கம்பர்** தமது குறிப்பை யதன்கண் ஏற்றுவிக்கும் அழகை நோக்குக.

"மையறு மலரி னீங்கி யான்செய் மாதவத்தின் வந்து
செய்யவ ளிருந்தா ளென்ன செழுமணிக் கொடிக ளென்னும்
கைகளை யினிது நீட்டி கடிநகர் கமலச் செங்கண்
ஐயனை யொல்லை வாவென் றழைப்பது போன்ற தம்மா."

இவண் **கம்பர்** மிதிலையாநகரை இராமபிரானுக்கு மாமியாராகப் பாவித்து, அவள் தன் வயிற்றிலுதித்த இலக்குமிதேவியாகிய சீதையை மணஞ்செய்து கொள்வதற்காக மருகனைக் கடிதில் வரும்படி அழைப்பதாகக் கூறுகின்றார். நிற்க.

இரவுவாவே காமுகர்படும் அவத்தையை விளக்கப்புகுந்த **கல்லாடர்** எவ்வளவு இனிதாய் அன்னோது விரகதாபத்தை சிங்காரச் சுவை பயக்க மொழியலுற்றார்.

> "வேள் சரத் துடைக்குனர் கோலம் நோக்கி
> இருள் மகள் கொண்ட குறுநகை போல"

பிச்சி பூத்தது

இருட்டில் பிச்சி வெடித்து மலர்வதை இருள் மகளது சிரிப்பை யொக்கு மெனவும், மலரும்போது யாதொரு ஒலியும் பிறவாமையால் அச்சிரிப்பைப் புன்முறுவலெனவும் வருணித்த அழகு சாலவும் வியக்கத்தக்கது. இருள் மகள் குறுநகை கொண்டது தூர்த்தர்படும் விரகதாபத்தை நோக்கி யென்பதாற் தற் குறிப்பேற்றம் விளங்கிக் கிடந்தது.

## மற்றுஞ் சில அலங்காரங்கள்

### நிரை நிரையணி

> "காமனை யயனை நாமக் காலனை
> கண்ணால் உகிரால் மலர்கொள் காலாற்
> சுட்டும் கொய்தும் உதைத்தும் தணித்த"

எனக் **கல்லாடர்** பரமசிவனாது வீரத்தைப் புகழ்ந்த இடத்தில் நிரைநிரையணியையும் அமைத்துளார்.

அடுக்குகள் மூன்று :

காமனைக் கண்ணாற் சுட்டும், அயனை உகிராற் கொய்தும், காலனைக் காலாலுதைத்தும் மூவாது கொட்டத்தை யடக்கினு ரென வுரைத்தார்.

உகிர் என்பது நகம். மலர் கொள்காலென்றது அடியவர் அர்ச்சிக்கும் மலர்களை எற்றுக் கொள்ளும் பாதமெனப் பொருள் படும்.

### மருட்சியணி

**திருஞானசம்பந்த மூர்த்திகள்** அருளிய கீழ்வரும் **திருவை யாற்றுப்** பதிகச் செய்யுள் மருட்சியணிக்குத் தக்க எடுத்துக் காட்டாகும்.

"புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந் திட்டைம் மேலுந்தி
அலமந்த போதாக வஞ்சேலென்
றருள்செய்வா னமருங் கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி
முகில் பார்க்கும் திருவையாறே"

இவண் நடமாடும் மகளிரை ஆடும் மயிலாகவும், முழவின் அதிர்ச்சியை இடி முழக்கமாகவும் நினைத்து மந்திகள் மழை வருமோவென மருண்டு நடுக்கங் கொண்டதாக வருணித்த அழகைக் காண்க.

ஐமேலுந்தி என்பதில் ஐ என்பது கோழை! கோழை மேனோக்கி எழுந்து நிற்ப என்பது பொருள்.

காசியில் இறக்க முத்தி யென்பதுபோல் பஞ்சநத திருத்தல மாகிய திருவையாறும் இறப்பவரை முத்தியங்கரையிற் சேர்க்கும் புண்ணிய பூமியாம்.

## வியப்பணி

பின் வரும் **தேவாரச்** செய்யுள் அதிசயோக்தி எனப்படும் வியப்பணியை இனிது விளக்கும்.

"செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வ முயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேத்தும் செல்வஞ் செல்வமே"

இவண் சிதம்பரத்திலுள்ள மாடங்கள் மிக்குயர்ந்து வானி லூரும் சந்திரனைத் தழுவுமெனக் கூறப்பட்டுளது. இங்ஙனம் கூறுவது வியப்பைப் பயக்குமன்றே.

மற்றும் அணிகள் பலவுள. அவற்றை அறிஞர்பால் கேட்டுத் தெளிந்து கொள்க.

## அநுமார் துதி

மகாகவியாகிய **கம்பர்** தாம் பாடிய **இராமாயணத்**தில் அநுமாரைப்பற்றித் துதித்த பாட்டு சாலவும் அழகிது. அஃது பின் வருமாறு

"அஞ்சிலே யொன்று பெற்றான் அஞ்சிலே யொன்றைத் தாவி
அஞ்சிலே யொன்றாறாக வாரியர்க்காக வேகி
அஞ்சிலே யொன்று பெற்ற வணங்கைக் கண்டய லாரூரில்
அஞ்சிலே யொன்றை வைத்தான் அவனம்மை வளித்துக் காப்பான்"

அஞ்சு என்பது ஐந்தாகிய பஞ்சபூதங்களை யுணர்த்தும். அவை மண், நீர், தீ, காற்று, ஆகாயம். செய்யுட்குப் பொருள் வருமாறு :

பஞ்ச பூதங்களி லொன்றாகிய வாயுபகவான் பெற்ற மைந்தனாகிய அனுமான் ஐம்பூதங்களி லொன்றாகிய சமுத்திரத்தைத் தாண்டி ஐம்பூதங்களி லொன்றாகிய ஆகாயத்தின் வாயிலாக உத்தமனான இராமபிரான் பொருட்டு இலங்காபுரிக்குச் சென்று ஐம்பூதங்களி லொன்றாகிய மண்ணிலுதித்த தெய்வப் பெண்ணாகிய சீதாப்பிராட்டியாரைக் கண்டு தரிசித்து பகைவரூராகிய இலங்கையில் பஞ்சபூதங்களி லொன்றாகிய நெருப்பை வைத்து அந்நகரத்தைச் சுட்டெரித்த பெரியோன் நமக்கருள்புரிந்து நம்மைக் காப்பாற்றுவான்.

அன்றியும் இராமபிரான் அநுமாரது பெருமையை இலக்குமணற் கெடுத்துரைப்பதையுங் காண்க.

"தன்பெருங் குணத்தாற் றன்னிற்
றானலா தொப்பி லாதான்"

---

# அட்சய வருட உலக சாதகம்

| | | | |
|---|---|---|---|
| பு | ஆ சந் | | ரா லக் |
| சு | | | |
| செ வி | | | |
| கே | | சனி | |

| | | | |
|---|---|---|---|
| | ஆ | லக் | ரா சந் சனி |
| சு | | | செ |
| | | | புத |
| கே | | | வி |

[இயாழ்ப்பாணம் க. குமரையா]

## வருடபலன்

இலக்கிஞதிபதியும் நான்காதிபதியுமாகிய புதன் நீசம் பெற்றுப் பத்தாமிடத்து நிற்றலாலும் லக்கினத்தில் ராகு நிற்றலாலும் உலகினர் செயற்பாலன விடற்பாலனவாகிய செயல்களைச் சிறிதுமுணராதவர்களாய் காமக்குரோத முதலான குணங்களின் வயப்பட்டுத் தற்கொலை தீக்கொலை முதலியவற்றிற் றலைப்படுதலும், அரிய அறிஞர்கள் தாமே இவரைத்தேடிச் சென்று பல்லாற்ருனும் புத்தி புகட்டினும் அவையிற்றை யிகழ்ந்து தத்தம் மனம் போனவாறே உண்மையென்று பிதற்றலும், தீமைபயப்பனவும் பொருளை யழிப்பனவுமாகிய செயல்களையே நன்மை பயப்பன வென முரணியுணர்ந்து கைப்பொருள் முற்றையும் வாளா விறைத்து துன்பத்தையும் நல்குரவையுமே பயனுகப்பெற்றுக் கோடலும், நோயும் அங்கவூறுபாடு முடைய புதல்வர்களையே பெரும்பாலு முயிர்த்தலும் ஆச்சிரம தருமந் தலைதடுமாறலு முண்டாகும்.

இரண்டாமிடத் ததிபனுகிய சந்திரன் பகைபெற்றுச் சூரியனுடன் கூடி செவ்வாய் சனிகளின் நோக்கம் பெற்று பதினேராமிடத்து நிற்றலின் தேசபாஷைகளை விருத்திசெய்யவேண்டுமென்று முயற்சித்தலும் அவை யவ்வனமாதலும், சொல்வன்மை குறைதலினல் மெய் பொய்போல சாதிக்கப்படுதலும், இல்லறம் பூண்ட மணமகன் மணமகள் இருவரும் ஒருவரையொருவர்

வசீகரப்படுத்த வேண்டுமென்னுமவாவின் வசப்படுதலும், நல்ல செயல்களுக்கு இவ்வருடம் தகுதியற்றதெனத் தத்தமக்குள்ளே உரையாடிக் கொள்ளுதலும் ஆன்மலாபத்திற்குரிய அரியநூல் களைப் பயிறலும், இடமிடங்கடோறும் நல்லாசிரியர்களால் தேச நன்மைக் கேற்ற வித்தியாசாலை, சங்கம் முதலியன தாபிக்கப்படு தலும் அறியாமை நீங்க வழி தோன்றவில்லையென இரங்கலு முண்டாம்.

மூன்றாதிபதியாகிய சூரியன் உச்சம் பெற்று இரண்டாதிப னாகிய சந்திரனுடன் கூடிச் செவ்வாய் சனிகள் நோக்கப் பதி னோரமிடத்து நிற்றலின் தாம் விரும்பிய போகங்களைத் துய்த்த லும் அடிமை யாட்களால் பொருட் செலவும் மனம்போனவாறு ஆராய்வின்றிச் செல்லுதலும் தத்தம் வல்லமையை வெளியிடலும் ஒருவரையொருவர் துணையாகத் தழுவுதலும் அணிகளில் பணச் செலவும், தென்புலத்தார், தெய்வம் முதலிய வழிபாடுகளிற் பணச்செலவு முண்டாம்.

ஐந்து பன்னிரண்டிற் கதிபனாகிய சுக்கிரன் நட்புப்பெற்று ஒன்பதாமிடத்திருப்ப ஒன்பதா மதிபதியாகிய சனி உச்சம் பெற் றுக் கிரகமாறுதலென்னும் யோகம் பொருந்த நிற்றலால் நற் செயல்க ளிடையீடின்றி நிகழ்தல் தீச்செயல்கள் குன்றல் பூர்வ புண்ணியத்தான் ஞானவுணர்ச்சியுண்டாதல் இடமிடங்கடோறும் கல்வி, அறம், ஒற்றுமை முதலியவற்றைப் பற்றிக் கட்டுரைகூறல் அறிவு, அழகு, திடகாத்திரமுடைய புத்திரர் தோன்றல் இவரிற் பெரும்பாலார் நோயுறல் சிறுபாலார் இறத்தல் தீச்செய லின்மை யாகிய இவை யுண்டாம்.

ஆறும் பதினொராமிடங்கட் கதிபனாகிய செவ்வாய் உச்சம் பெற்று, 7, 10,க் கதிபனாகி நீசம் பெற்ற வியாழனைக் கூடி 8-ம் இடத்தி நிற்ப 11ம் இடத்து சூரிய சந்திரர் நிற்றலின் திருடர், அக்கினி, ஆயுதம் முதலியவற்றாற் சீவர்கள் ஊறுபாடும் மரணமு மடைதலு முண்டாம். இன்னும் ஆயுளை வளர்த்தற்கேற்ற அறச் செயலில்லாமை எவ்வகைப்பட்ட முயற்சிகளிலும் ஊக்கத்திற் கேற்ற ஆக்கமின்மை காரணமின்றிக் குடும்பங்களிலும் சினேகிதர்

களிலும் பகை தோன்றல், தேச நன்மையின்பொருட்டுச் செய் முயற்சிகள் இளைப்புறல், வைசூரி, பேதி முதலிய நோய்களினால் பீடிக்கப்படல் அச்சம் ஆகிய இவையுமுண்டாம்.

## அட்சய வருட ராச நிச்சயம்

நிச்சைத்திர சுத்தவாராதிபன் செவ்வாயாதலால் இவ்வருடத்திற்கு இராச செவ்வாயேயாம். அதிகசைத்திர சுத்தவாராதிபன் சந்திரனாதலால் இராசா சந்திரரென்பாருஞ் சிலருளர். அதிக சைத்திர சுத்தம் திதிநிர்ணயங்களுக்கு விலக்கப்பட்டிருத்தலானும் நிச்சைத்திர சுத்தம் விதிக்கப்பட்டிருத்தலானும், "மீன பூருவ பிரதமை அரசனும்" என்று உள்ளமுடையான் சோதிடர் ஓதுதலானும் சந்திரனை இராசாவாகக் கொள்ளற்க. செவ்வாயையே இராசாவாகக் கொள்க.

இங்ஙனமே யாழ்ப்பாணம் கொக்குவில் இரகுநாதையர் பஞ்சாங்ககாரரும், திருவாவடுதுறையாதீன சோதிட வித்துவான் இ. மு. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் தாம் கணித்த **சைவப் பஞ்சாங்கத்திலும்** செவ்வாயையே வருகிற **அட்சய** வருட ராசாவெனக்கொண்டது காண்க.

இஃதிங்ஙனமாகவும் இக்கருத்தறியாத யாழ்ப்பாணம் பருத்தித்துறை பிரம்மஸ்ரீ ச. சுப்பிரமணிய சாஸ்திரிகள் தம் பஞ்சாங்கத்தில் சந்திரனை இராசாவாகக் கூறியிருக்கிறார். இங்ஙனங்கோடல் பங்குனிமாதத்து அமாவாசை கழித்த பிரதமை வந்த வாராதிபன் பிறக்கிற வருடத்திற்கு இராசா என்ற பொது விதியையுணர்ந்தமையானும் அதிக நிச்சைத்திர சுத்தங்களுளவென்றும் அவற்றில் அதிக சைத்திர சுத்தம் தள்ளத்தக்கதும் நிச்சைத்திர சுத்தம் கொள்ளத்தக்கதும் என்று சொல்லிய சிறப்பு விதியை யுற்று நோக்காமையானும் வந்த குற்றமென்பது தெற்றென விளங்கிற்று.

அன்றியும் சந்திரன் ராசாவாதலால் நல்ல மழையும் பயிர் விருத்தியும் கோதுமை சம்பாநெல் கரும்பு என்னு மிவை நன்றாகப் பலித்தலும் சுபிக்ஷமும் தேக சுகமும் சனங்களாற் கருமங்

களில் முயலுதலுண்டாமென்று மேற்படி சாஸ்திரிகள் பலன் கூறுகின்றார்.

இப்பலன்களுண்டாமென்று துணிந்து செவ்வாய் இராசாவாதலால் வரும் தீப்பலன்களை நீக்குதற் கேற்கவுபாயம் சூழாதுவாளா மாளாமல் விழிப்பாயிருங்கள். நிற்க, இச்சாஸ்திரிகள் தாமியற்றிய "சொற்பொருள் விளக்கம்" என்னும் தமிழகராதியில் தம்மைப் "பிரபலசோதிட கணித சித்தாந்தி," என்று வெளிப்படுத்தியிருந்தும், பாரம்பரிய சோதிட மரபிலுதித்த கருணாகர சங்கத்தலைவர், திருவாளர் பெ. வே. கணபதிப் பிள்ளை சோதிடரவர்களின் பிரிய நண்பராயிருந்தும் சிலகாலம் அவரோடு அளவளாவிப் பஞ்சாங்கங்களைக் கணித்து வந்தும் சில நூல்களின் உரையாசிரியராயிருந்தும் இவ்வண்ணம் சாத்திர விதிகளுக்கு முரணியுரைப்பின் அதிநுட்ப புத்தியுடையாரென்று தம்மை யுலகினர் மதிப்பாரென வுள்ளினர்போலும்.

---

# பதி பசு பாச விளக்கம்

[ஓர் கடிதம்]

[யாழ்ப்பாணம். திரு. க. சோமசுந்தரம் பிள்ளை.]

நம்பிக்கை யுள்ளார் நலியா தருளியுந்
தும்பிக்கை யுள்ளான் றுணை.

சீரானை யுரியானைத் தந்தையெனப் பெற்றானைச்
செவ்வே ளென்னும்
பேரானை யன்பருளும் போரானைத் தீவினைகள்
பெயர்க்கு நல்லை
யூரானைப் புள்ளிமயி லூர்ந்தானைப் புயசைலத்
தொளிசேர் நீலத்
தாரானைத் தன்னையெற்குத் தந்தானைத்
தாள்வணங்கிச் சார்ந்து வாழ்வாம்.

வஞ்சகத்தினி லொன்றிடான் மாதுயரீயும்
அஞ்சகத்தினி லொன்றிடாதழித் தழிவெய்தும்
வெஞ்சகத்தினி லொன்றிடா மெய்க்குருபாதம்
நெஞ்சகத்தினி லொன்றுமா நிறுவிவாழ்ந்திடுவாம். (க)

மன்னுயிர்த் தொகைவாயிலும் வண்டரி மூறும்
பொன்னிதழ்க் கமலத்தினுஞ் செந்தமிழ்ப்புலவர்
தன்னகத்தினுஞ் சதுர்மறைத் தலையிலுமிருப்பள்
என்னிசைத் தமிழுவிலிருக்கு மேந்திழையே. (உ)

பூவிற்றாமரை சுடரினிற் சூரியன் புகலும்
பாவிற்றூன்வெளை பாடையிற் பைந்தமிழ் பரவுந்
தேவிலாயிழை பாகனைப் போனனி சிறக்குந்
தாவிலாச் சமயங்களிற் சைவசித்தாந்தம். (ங)

மற்றுநானறி யளவையிற் சைவசித்தாந்தத்
துற்றமேன்மையை யொருசிறி தறைகுவ னுணர்தி
பற்றுநீக்கிய வெனக்கொரு பற்றதாய்ப் பிறந்த
வெற்றிவேற் பெயர்தரித்திடு சோதர! விருப்பால். (ச)

விமலிந்திடு நான்மறை முடிவினில் விளங்கு
மதிமலிந்திடு சைவநற் றிறமது வகுப்பில்
பதிமலிந்திடு முயிர்த்தொகை ; பசுத்துவம், கன்மம்
துதிமலிந்திடு மாயையோ ரிரண்டெனச் சொல்வர். (ரு)

## அநாதி நித்தியப் பொருள்

ஒன்றதாகிய கடவுளு மொருமுடிவில்லா
தொன்றுமன்னுயிர் வருக்கமு மோதிருள் கன்மம்
துன்றுமோரிரு மாயையு மாகவே சொல்ல
நின்றவாறிரண் டாதியில் நித்தியப் பொருளே. (சு)

## பதி யியல்பு

சாதலும் பிறந்திடுதலும் தனக்கிலான் யாவன்
ஓதுமன்னவன் பதியென வுரைத்திடப் படுவன்
சாதலும பிறந்திடுதலும் தமக்குள யாவை
ஓதுமன்னவை பசுக்களென் றுரைத்திடப் படுமால். (எ

தாமரைத்தலே யிருந்திடு தலைவனுஞ் சாற்று
தூமணித்துள வணிந்திடு தோன்றலுஞ் சுருதி
மாமறைத்தலே யியம்பிய வானவர் யாருந்
தாமரித்திடு பசுக்களே ; சங்கரன் பதியே. (அ)

ஊரிலாதவன் குணங்குறி யிலாதவ னுரைக்கும்
பேரிலாதவன் முன்னொடு பின்னிலான் பிறிதோர்
சாரிலாதவன் ஒப்பிலா னுயர்விலான் தழைத்த
சீருலாஞ்சிவ ஞானத்தா லறிபவன் சிவனே. (கூ)

பெரியனுகுவன் சிறியவ னுகுவன் பேசில்
அரியனுகுவன் எளியனுமாகுவ னகன்று
விரியுமெவ்வுல கெங்கணும் வியாபியாய் விளங்கி
உரியகட்டு வீடொன்றிலா துற்றவன் சிவனே. (௰)

உய்வணந்தெரியா திருண்மலத்திலே யுயங்கி
*மெய்வணம்விடுத் திருளெனவிளங்கு மன்னுயிரை
உய்வணந் திருவுளத் தெழுகருணே கொண்டோவா
ஐவணத் தொழில் செய்குவன் சத்தியாலவனே. (கக)

சுத்தமாகிய வருவமோர் நான்குசொல் லுபயம்
வைத்ததொன்று மற்றுருவ நான்கென வமைத்து
முத்திறத் தினிலொன்பது பேதமாய் முதல்வன்
வித்தகத் திருத்தொழி லைந்துமு ஞற்றுவன் விருப்பால். ()

சுத்தமாயையிற் கிருத்தியந் தான்செய்வர் சொல்ல
சுத்தமாயையி லனந்தரைப் பகுதியின் ருெழிலுக்
கொத்தருத்திரர் தம்மையே வாயிலா வுறுவித்
தத்தனூரவ ரைந்தொழில் செய்குவ ரறிதி. (கங)

படைத்தலேமுத லைந்தொழில் பண்ணுவ னுகில்
கிடைத்திடும் பெரும்விகாரமா மவற்கெனிற் கேணீ
அடைத்த பல்விட மாவினே யடைந்திடா வாறு
படைத்த லாதியாற் ருெடக்குருன் ருயிலாப் பரமன். (கச)

---

* மெய்வணம் - சொருபநிலே

ஆதவன்முன மவன்பெயர்க் கல்லெரி யருளும்
போதலர்ந்திடும் புலர்ந்திடும் பூமிநீர் வற்றும்
ஆதவன்றனக் கங்கொரு விகாரமு மடையா
தீதான்புடை யொற்றிவைத் தறிகுதித் தேர்ந்து. (க௫)

ஓதுமைந்தொழில் தம்முளே யேனைய வொழியக்
காதுமத்தொழில் செய்வதென் கண்ணுத லென்றால்
வாதைதீர்த்தணு வர்க்கத்தை யாற்றிடல் வாம்பில்
போதநல்கிடு மருட்டொழி லைந்தொழில் புகலில். (க௬)

## பதிகுணம்

அளவில் ஞானமு மளவிலாவாற்றலு மடங்கா
அளவில்பே ரருளும் படைத்த ளுநியே பாச
அளவில் நீங்கியே அளவிலா வின்பமுற்றபலார்
அளவிலே தடைப்படா வருகுணமுள னண்ணல். (க௭)

சுருதிநிர்க்குண னென்றதென் னென்றிடிற் சொலக்கேள்
கருதுமாயையின் முக்குணங் கடந்தவன்; கருத்துப்
பெரிதும் வல்லர்போ லாற்றவாய் பிளந்துபல் பேயர்
திரிவெனும் பொருள் கொள்ளுவர் நரகினிற் றிளைக்க. (க௮)

## பதிவடிவு

மந்திரங்களும பதங்களும் புவனமும் வன்னம்
வந்ததத்துவங் கலைகளும் வடிவமா மன்றி
எந்தை எம்பிரா னென்னையா ளிறையவர்க்கென்றும்
முந்து போருள் வடிவமாய் வருமென மொழிவர். (க௯)

## பதிநாமம்

எல்லவர்க்கு மில்லாததோர் மங்கல நாமம்
சொல்லில் வெம்பவந் துடைத்திடு தூல்லியநாமம்
பல்வகைப் பொருளுந் தரும்பரம நன்னுமம்
செல்லுமெம் பெருமாற் குயர்சிவ னெனுநாமம். (உ0)

என்னையுந்தன தின்னடித் தொழும்பினுக் கெடுத்துப்
பொன்னின் சேவடி கழிமுடைப் புன்சிரம் பொறித்த
அன்னை பாகனுக் காயிர மாயிர நாமம்
இன்னும் பன்னுவர் சிவனென்ப தியற்பெய ராமே. (உக)

### பதியருண்முறை

போகியாயிருந் துயிர்கட்குப் போகத்தை யுதவும்
யோகியாயிருந் துயிர்கட்கு யோகத்தை யுதவும்
தேகமேவிய சாமசாங்கட்குச் சிவனே
ஏகநாயக னுள்ளொடு புறம்புமா யிருப்பன். (உஉ)

மாசுபற்றிய வுயிரெனும் பொன்னினை மன்னு
மேசலில் பிறப்பிறப்பெனு நெருப்பிடை யிட்டுத்
தூசுநீக்கிடு ஞானமா மருந்தினைத் தூவி
ஆசகற்று தட்டானெங்க ளரனெனு மண்ணல். (உங)

வேதநான்கையு மாகமத் திறனையும் வேறு
போதமானவை யாவையுங் கடந்திடு புனித
நாதனார்திற னுரைத் திடுவது நாடில்
ஆதவன்றனைக் காத்தினாற் பற்றல்போ லாமே. (உச)

### பசுவியல்பு

ஈசன்றன்மைக ளொருசில கூறின னினிமேற்
பாசமேவிய பசுவியல் பகருவன் பசுக்கள்
ஈசன்போலவே நித்தமாய் வியாபக மாகித்
தேசுசார்ந்திடு பளிங்கினி லதுவதாய்த் திகழும். (உரு)

இருளினால் மறைக்கப்படு மிச்சையு மெய்து
கிரியையும் மினுஞானமு முடையதாய்க் கேடில்
பொருளதாயிரு ணீங்கிய போதா னருளுக்
குரியதாய்ச் சதசத்தென வுள்ளதா லுயிரே. (உசு)

(தொடரும்)

# தமிழ் நிதி

## சிவஞான முனிவரும் தவசுப்பிள்ளையும்

[S. A. திருமலைக்கொழுந்துப் பிள்ளை]

ஓர் சமயம் யாதவச் சிவஞான முனிவரையடுத்து அடிகளது தவசுப்பிள்ளை, 'இன்று யாது செய்ய'வெனப் பணிந்துநின்ற போழ்து முனிவர்பிரான் அவனை நோக்கி,

"சற்றே துவயலரை தம்பியொரு பச்சடிவை
வற்றலேதேனும் வறுத்துவை — குற்றமில்லை
காயமிட்டுக் கீரைகடை கம்மெனவே மிளகுக்
காயரைத்து வைப்பாய் கறி";

எனப் பணித்தன ரென்ப. இவ் வெண்பாவால் நாம் அறியற் பாலது யாதெனின் சுவாமிகள் தாம் அருந்தும் போஜனமே உடற்கு நோயணுகா மருந்து மாமாறு கட்டளையிட்ட சதுர்ப் பாடாமென்க. எங்ஙனமெனின் 'சற்றே துவையலரை 'என்றது 'நெய்யில்லா வுண்டிபாழ்' எனப்படுதலால் அத்தகைய (பசுவின்) நெய்யையிட்டு முதற்கண் சில கவளங்களைக் கொள்ளற் பொருட்டாம். அறிவிற்கு அரிய வேலை கொடுப்பவர்க் கெல்லாம் சிறிது நெய் உணவிலும்போழ்து வேண்டற் பாலதன்றே. 'பச்சடிவை' என்றது பித்தத்தைத் தணித்தற் பொருட்டென்க. 'வற்றலேதேனும் வறுத்துவை' என்றது சுண்ட வற்றலையேனும் மணத்தக்காளி வற்றலையேனும் குறிக்கும். இதனாற் றொண்டையிலேனும் மார்பகத்தேனுமுள்ள கபம் கண்டிக்கப்படு மென்க. வற்றலுண்டியால் இங்ஙனம் சிலேஷ்மம் மிஞ்சாமற் காக்கப்படும். 'காயமிட்டுக் கீரை கடைதல்' வாய்வை யடக்கற் பொருட்டு. அன்றியும் கீரையால் மலம் நெகிழ்ச்சியுற்று மலவுபாதை எளிதாய்ப் பரிகரிக்கப்படும். 'காயமிட்ட கீரை'யால் இங்ஙனம் வாத மிகாமற் காக்கப்படுமாறறிக. 'கம்மெனவே மிளகுக் காயரைத்து வைப்பாய் கறி' எனக் கட்டளையிட்டது உண்ணும் போஜனம் நாவிற் கினிதாகவும் எளிதே ஜீரணத்தை விளைக்க வல்லதாகவும்

கருதி என்க. ஆகவே, இங்ஙனம் வாத பித்த சிலேஷ்மங்கள் அளவில் மிகாமலும் குறையாமலும் அமையவே நோயற்ற வாழ்வு போதரும். 'தம்பி' என விளித்தலால் சுவாமிகட்குத் தமது பணிவிடை புரியும் பரிஜாரகன்பால் வகித்த அருட்டன்மை விளங்கிற்று.

சுவாமிகள் தவசுப்பிள்ளைக்குக் கட்டளையிட்டது இராஜ போஜனமன்று; யோகிகட்கேற்ற உண்டியாமென்க. நோயணுகா வண்ணம் அறிஞர் அயிலவேண்டிய வாகாரமு மிதுவேயாம். சுவாமிகள் ஈண்டுக் குறித்தது இரவுண்டி யென்பதை உய்த் துணர்ந்து கொள்க.

---

திருவாதவூரடிகளாகிய

**மாணிக்கவாசகசுவாமிகள்**

திருவாய்மலர்ந்தருளிய

திருவாசகத்தில் திருப்படையாட்சியில்

முதற்றிருவிருத்தத்திற்கு

## தி. விசாகப்பெருமாளையரவர்களியற்றிய வுரை

### ஆசிரியவிருத்தம்

கண்களிரண்டுமவன்கழல்கண்டு களிப்பனவாகாதே
காரிகையார்கடம்வாழ்விலென்வாழ்வு கடைப்படுமாகாதே
மண்களில்வந்துபிறந்திடுமாறு மறந்திடுமாகாதே
மாலறியாமலர்ப்பாதமிரண்டும் வணங்குதுமாகாதே
பண்களிகூர்தருபாடலொடாடல் பயின்றிடுமாகாதே
பாண்டிநன்னாடுடையான்படையாட்சிகள்பாடுதுமாகாதே
விண்களிகூர்வதோர்வேதகம்வந்து வெளிப்படுமாகாதே
மீன்வலைவீசியகானவன்வந்துவெளிப்படுமாயிடிலே. க

என்பது செய்யு ளென்னுதலிற்றோ வெனின் படையாட்சி யோடு பாசறைக்கட்சென்ற தலைவன் சத்தனாதலால் அவன் வருவலென வுரைத்த பருவமும் வந்தது, அவனும் வருவன் என்

ருற்றுவித்த பாங்கிக்குத் தலைவி அவன் வெளிப்படின் றனக் குளதாம் போகாநந்தப்பேற்றைக் கூறுதலை யுணர்த்துத னுத விற்று.

(இ - ள்.) கலவனுருக்கொடு வலைவீசி மீனினைப்படுத்த சிவ னெனுந் றலைவன்வந்து வெளிப்படி னுண் டென்னிரண்டு கண்களு மவன்றிருக்கழல்கண்டு களிப்பனவாகிய நிகழ்ச்சியு முளதாகாது. பிரிவறியாது தன்றலைவருடன் புணர்ந்து நிற்கு மேனை மாதர் வாழ்வினின்று மென்வாழ்வு கடைப்படுமாறு மாகா தினி மண்ணுல கங்களின் வந்து பிறந்திடுமாறு மறந்திடுமாறு முளதாகாது. திரு மாலறியாத் திருமலர்ப்பாத மிரண்டனையும் வணங்குதுமென்று சொல்லுஞ் சொன்னிகழ்ச்சியு முளதாகாது. களிப்பினைமிகத் தரும் பண்ணினைப் பொருந்திய பாடலோடாடல் பயின்றிடுமாறு முளதாகாது. நல்வள நிறைந்த திருப்பாண்டி நாடதனையே திருப் படை வீடாகவுடையான் படையாட்சிகள் பாடுதுமென்று சொல் லுஞ் சொன்னிகழ்ச்சியு முளதாகா திருமலமுடைய பிரளயாகலர் களிகூரத்தக்கதாக மான் மழு சதுர்ப்புயத்தோடு வந்து வெளிப் படுமாறு வெளிப்படுதலு முளதாகாது. ஆண்டு யான் சிவபோக மென்னுஞ் சிவாநுபூதி சொரூபியாவே னென்பதாம். ஈண்டு தலைவி சிவன்முத்தன். தலைவன் சத்தனாகிய பரமசிவன். பாங்கி திருவருளென வறிக. சைவாகமத்து முத்தியினு மும்முதலுமுண் டென்பதினுன் முத்தியினுமாண்டா னடிமையிருக்க விவ்வாறு கூறலாகாதெனின், அறியாது கூறினுய் மலமாயாகன்மங்களோடு கூடித் திரோதப்பட்டுச் சனன மரண முற்றுவரு மான்மா விரு வினையு மொருகாலத்தே வந்து புசிக்கைக்குச் சமமுற்றவெல்லை யிற்போன பலகோடி பவங்களிலே செய்துவந்த சரியாகிரியா யோகத் தவப்பயனுன் மலபரிபாகப்பட்டுச் சிவஞானத்தைப் பெற்றுத் திருவருடாரகமாக நின்று சிவகரணங்களெல்லாஞ் சிவ கரணங்களாய்ச் சிவனுடொன்ருய்ச் சாயுச்சியமாவன்; சாயுச்சிய மாமிடத்து வேருய் நின்று கலப்பின் கலத்தல் கூடாமையானும் ஒன்ருய்நின்று கலப்பின் கலத்தலின்மையானும் அப்பொடுகலந்த வுப்புப்போல வேறறநின்று சாயுச்சியமாவன்; ஆனவிடத்து மூன்று முதலு மிருக்கினு மவை முன்புபோலச் சீவித்து நிற்பன

வுஞ் செய்யாமனிற்கும்; நிற்கவே ஆன்மா சிவனோடு அத்துவித மாய் நிற்பனுதலா லாண்டு சிவனையுஞ் சுட்டி யறியா னிதுவிது வென்று சுட்டி யறியப்பட்டனவெல்லாம் விடையமாய்ப் பொய்ப் பொருளாமாதலி னவ்வாறு அவை பொய்ப்பொருளென வறிந்த விடத்தே சுட்டற்ற வுண்மையாகிய சிவரூபமாவன்; அங்ஙனஞ் சிவரூபனுனஃ முத்தாத்மாவினுலே யிவ்வாறு சுட்டியறிதலின்று மாதலி னிவ்வாறு கூறுதலாமெனக் கொள்க. இதனைச் சிவஞான போதம் - அ - கூ - ம - மக - ஆஞ் சூத்திரங்களாலு மிந்நான்கு சூத்திரங்களின் பொருள்களை விரித்துச் சித்தியார் சிவப்பிரகாசங் களிற் கூறிய திருவிருத்தங்களாலு மறிக; ஏகாரங்களிற்றசை தேற்றமெனினு மமையும். அன்றி வினுவாகக் கொண்டாமெனப் பொருள் கொள்ளின் காரிகையார்க டம்வாழ்விலென் /வாழ்வு கடைப்படுமாகாதே யென்பதைத் திலதருப்பணஞ் செய்யல் வேண்டும். இது முதலிய பல குற்றங்களுண்டாம். அவற்றை விரிப்பிற் பெருகுமென்றொழிந்தாம். இச்செய்யுளிற் கூறப்படு மாகாதென்னு மொழிகட்கு ஆமெனப் பொருள்கூறினுகாதோ வெனி னுகாது, என்னெனின் யாண்டும் எதிர்மறையை யுடன் பாடாகக் கூறுதற் கிலக்கண மின்மையின். செய்யா யென்னு முன்னிலை யொருமை யேவலெதிர்மறை வினைமுற்றை யுடன் பாட்டு வினைமுற்ருகப் பொருள் கொள்ளுதல்போ லிதனையும் பொருள் கொள்ளுதலாகாதோவெனின் ஆகாது; என்னெனின் அதனை யெதிர்மறை வினைமுற்ருகப் பொருள் கொள்ளுமிடத்து எதிர்மறையாகார மிடையிற் புணர்ந்து கெட்டு நின்றதாகவு முடன்பாட்டு வினைமுற்ருகப் பொருள் கொள்ளுமிடத்து அவ் வெதிர்மறை யாகாரம் வேண்டாது நிற்பதாகவும் கொள்ளுதலானு மிதனிடத்தில் எதிர்மறை யாகாரம் புணர்ந்து நிற்றலி னுடன் பாடாகக் கொள்ளுதற் கேலாமையானு மென்க. கண்களிரண் டாவன - ஞானக் கண்ணு மூனக் கண்ணுமாம். ஏனையவற்றை விரித்துக் கடாவிடைகளாகக் கூறுதற் கிஃதமையமன்றெனவிடுத் தனம்.

---

# வண்ணாரப் பெரியாண்டி

[K. P. சந்தோஷம் B.A., L.T.]

(கூஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

## தப்பிப் பிழைத்தல்

"தப்பிப் பிழைமின்" என்கிறான் வண்ணான். "இப்பிறவி தப்பிடின் எப்பிறவி வாய்க்குமோ ? எது நேருமோ ? என்ற ஏக்கங் கொண்ட மைந்தரெல்லாம் உயிர் தப்ப வழிதேடித் தவிக்குங்கால், ஏகாந்தப் பெருவெளியில் அழுக்கெடுக்கும் ஏகாலியாகிய பெரியாண்டி யவர்களை யணுகி, "தப்பவகை யறியீர்; நீர் பிழைக்கும் முறை யறியீர்; தப்பவேண்டின் நம்மிடம் வம்மின்" என்று கூவி யழைக்கின்றானாம்.

## வெளுத்தல்

பொழுது விடியும்போது 'கிழக்கு வெளுத்தது' என்று சொல்வது மரபு. கிழக்கு தானே வெளுப்பதில்லை; அது வெளுக்கப்படுகிறது. கிழக்கை வெளுக்கச் செய்கிறவன் சூரியன். இருளாகிய அழுக்கால் மூடப்படும் வையகத்தை வெளுக்கின்ற வண்ணனாகிய சூரியனிலிருந்து தாங்கள் நேரே தோன்றியவர்கள் என்று வண்ணார் சொல்லிக்கொள்ளுகிறார்கள். ஆனால் வண்ணாரப் பெரியாண்டியின் வழிவந்தவர்களென்று அவர்கள் சொல்லிக் கொள்வதில்லை. ஒவ்வொருநாளும் உலகத்தை மூடும் இருளை யகற்றி, வையகத்தில் மக்களாலும் விலங்குகளாலும் தோன்றுகின்ற மலத்தையும் நாற்றத்தையும் காய்ந்துகொன்று யாவற்றையுந் தூய்மைசெய்கின்ற மேலோனாகிய கதிரவனின் கான்முளைகளாய்த் தாங்கள் வந்திருக்க, பொய் சொல்லத் தெரியாமல் நாடிழந்து மனையிழந்து மகவிழந்து சுடுகாட்டில் நின்ற அரிச்சந்திரன் தோன்றிய அயோத்தி மன்னர்குலம் சூரியகுலம் என்று புராண இதிகாசங்கள் கூறுவதை வண்ணான் கேட்டுக் குலுங்க நகைக்கிறான்.

"போர் வந்திடில் இவண்சேர்வந்திடும் எலாம்
யார் இறவார்கள்? யார் அறிவார்கள்

முடிதன் அடிவிழில் யாரெடுத்து அணியார்?
அரச வமிசக் கிரமம் ஓரில்
இப்படியே முதலுற்பவம் இருக்கும்
சிலதலை முறையாப் பலவருடஞ் செலில்
இந்துவில் இரவியில் வந்தோர் எனவே
மூட வுலகம் மொழியும்"

என்று மனோன்மணீயத்திற் கண்டிருப்பதை வண்ணார் மிகவும் போற்றிப் பேசுகின்றனர். கடுங்கதிர் பரப்பி ஞாயிறு உச்சியி லிருந்து காயும்போது, நிழலைத் தேடியோடி வீட்டிற்குட்புகும் மற்ற மக்களைப்போல் வண்ணான் சூரியனுக் கஞ்சி ஒளிப்பதில்லை. தன் மூதாதையாகிய வண்ணாரச் சூரியனிடம் தனக்குள்ள அன் பைக் காட்டும்பொருட்டு வண்ணான் வெயிலில் நின்று வேலை செய்கிறான். குடை பிடிப்பதும் காலிற் செருப்பணிதலும் கதிர வன் மைந்தர்க்குத் தகாத செயல்களென்று பெரும்பாலும் வண் ணார் அவ்வழக்கங்களைக் கைக்கொள்வதில்லை. இது பெரிதும் வியத்தற்குரிது. விண்ணிற் கருமுகிலெழுந்து பரந்து ஞாயிற்றை மறைத்துப் பெருமழை பெய்யும்போது வண்ணார் தங்கள் வே லைக்குப் போகமாட்டார்கள்; ஏனெனின், அழகு நிறைந்த தங் கள் முன்னோனை மேகங்கள் மறைத்து, அவனது ஒளியைக் குறைத்து, அவன் பெருமையைக் கெடுப்பதைக்காண அவர்கள் மனஞ்சகிப்பதில்லை. இங்ஙனந் தங்கள் குலப்பெருமைக்குக் குறைவு வரும்போது வண்ணார் ஒத்துழையாமையைக் கையாடு கின்றார்கள். உண்மை இப்படியிருக்க, அயோத்தி மன்னர்கள் சூரியகுலத்தவர் என்று எவ்வாறு ஒருவர் சொல்லக்கூடும்? "அந்த அயோத்தி மன்னர்களுக்குக் குடியின் தன்மை தெரியுமா? அவர்க ளுக்குக் குடிக்கத்தான் தெரியுமா? எங்களைப்போல் உயர்குடியர் எவருமில்லை. ஆதலின, எங்கள் குடியைத் தாழ்த்திப் பேசுவோர் கல்வி கேள்விகளில் தேர்ச்சி யடையாத கிழோரே யாவர்" என்று வாது செய்கின்றார் வண்ணார்.

ஒரு பொருள் எந்நிறமுடையதாயிருப்பினும் பரிதியின் கதிர் நெடுநாள் அதன்மீது படுமாயின் அது வெண்மை நிறமாக

மாறிவிடும். இதுதான் வெளுத்தல். துணிகளை வெயிலில்போட்டு வைத்தால் இதன் உண்மை தெரியும். சூரியனும் ஒரு வண்ணு னென்பதற்கு இதைவிட வேறு சான்று வேண்டியதில்லை. குந்தி யின் மூத்த புத்திரனுதலால் பாண்டவர்க்குத் தமையனென்றும், ஈகையிற் சிறந்தவனென்றும் பாரதத்தில் சொல்லப்படுகிற கர் ணன் என்பவனைச் சூரிய புத்திரனென்று கூறுவார்கள். இது இதிகாசத்திற் காணப்படுவதாயினும் வண்ணர் இதை ஒத்துக் கொள்ளுகிறார்கள். அங்கதேசத்தரசனும் துரியோதனனுக்குப் பக்கத்துணையுமாகிய கர்ணன் பாண்டவர்களுடைய படைகளை வெளு, வெளு என்று வெளுத்தானுகையால், அவன் தினகரன் மைந்தன் என்பதிற் சந்தேகமில்லை என்று வண்ணர் மொழிகின் றனர்.

(தொடரும்)

---

<u>பெண்கள் பக்கம்</u>

# இருபெண்மணிகளின் உரையாடல்

[நெல்லை வே. மாணிக்கவாசகம் பிள்ளை]

(சஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

'மலர்மிசை யேகினுன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.'

நாம் அவரைச் சேர்தலால் (இடைவிடாது நினைத்தலால்) அவரது இன்பக் கடலில் முழுகுவோம். நமக்குத் துன்ப மென்பது பெற்றகாலத்தும் தோன்றாது. விருப்பும் வெறுப்பு மின்றி நன்றாங் காலத்தும் அன்றாங் காலத்தும் ஒரு தன்மைய ராகும் உரனுடையராவோம். நமது அப்பர்சுவாமிகள் சரித்திரம் உனக்குத் தெரியுமென நினைக்கிறேன். அவர்களைச் சமணர்கள் நீற்றறையிலிட்டனர். கல்லைக்கட்டிக் கடலில் தாழ்த்தினர். யானையைக்கொண்டு இடரச்செய்தனர். பொறுத்தற்கரிய இக் கொடுஞ்செயல்களால் அவர்க்குச்சிறிதும் துன்பம் வரவில்லை.

**கா.** கோமதி! மாசி மகத்தன்று இந்தப் பொற்றாமரையில் அப்பர்சுவாமிகளுக்குத் தெப்பம் நடக்கும்போது நான் பார்த்திருக்கிறேன். அவர் கையில் பொன்னாற் செய்த புல்செதுக்கி ஒன்று வைத்திருப்பார். தெப்பம் நடக்குமுன் யானை அவரைச் சுற்றி வருவதேயன்றி மிதிப்பதில்லையே.

**கோ.** காந்திமதி! நீ சொல்வது மிகவுஞ் சரி. அவர் கையில் பிடித்திருக்கும் கருவிகொண்டு திருக்கோயில்களில் புல், கல் முதலியவற்றை எடுத்து எறியும் உழவாரப் பணிவிடை புரிந்து வந்தார். அப் பணிவிடை செய்யும்போது ஒருநாள் புல், கல் இவற்றோடு மணிகளும் மாணிக்கங்களும் கிடந்தன. சுவாமிகள் பற்றற்ற பரமனடியே சிந்திக்கப் பெற்றாராகலின் மாணிக்கத்தை மண்ணாக மதித்து எட்பகவும் பற்றுள்ளமின்றி வீசி யெறிந்தார். வேண்டுதல் சிறிதுமில்லா வேளாண் முனிவர் இவரன்றோ. நெஞ்சத்தை நின்மலன் இடமாக வைத்ததினால் சமணர்கள் இடர விட்ட யானையும் அவரை வலம்வந்தது, நீற்றறையும் தண்மை மிக்க பொய்கையாயிற்று. திருவைந்தெழுத்தை மறவாது செப்பினதினால் கல்லுந் தெப்பமாக மிதந்தது.

வாலறிவினை நினைப்பதும் வாழ்த்துவதுமன்றி கைகளாலும் தலையாலும் குவிதலும் வணங்கலும் நமது கடமையாகும். இக் கடன் இயற்றாதார் தாம்பெற்ற தலை முதலிய உறுப்புக்களாற் பயன் பெற்றிலர்.

கோளிற் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

**கா.** கோமதி முத்தியடைய முதல்வனை வழிபடும் முறையினை நன்குணர்ந்தேன். இன்று நமது உரையாடல் எனக்குப் பெரும் பயன் அளித்தது. நாம் ஏதோ பேச நினைத்தோம். அது நமது **திருக்குறளின்** முதலதிகாரமாகிய **கடவுள் வாழ்த்தைப்** பற்றிய உரையாடலாக அமைந்தது நமது புண்ணியமே. இவ்வாறே இனியும் திங்கட்கு (மாதத்திற்கு) ஒரு முறையாவது நாம் இருவரும் திருக்குறட் பொருளைப்பற்றி உரையாடுவோமாயின் நமது அறிவும் ஒழுக்கமும் பக்தியும் பெருகும்.

கோ. காந்திமதி! திருவருட்டுணையால் அப்படியே செய்வோம்.

'சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கியைம் புலன்க ளார
வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த இச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே!

---

## திருநெல்வேலித்
## தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம்

இச்சங்கத்தாரால் மூன்றாவது ஆண்டாக நாளது குரோதன வருடம் 1101-ம் ஆண்டு ஐப்பசித் திங்கள் 15, 16 ஆந் தேதிகளில் தஞ்சை, தூத்துக்குடி, ஒட்டப்பிடாரம், திருவனந்தபுரம், நாகர் கோயில், திருநெல்வேலி முதலிய இடங்களில் நடத்தப்பட்ட திருக்குறள், சமயபாடம், பெரியபுராணம் முதலிய பரீட்சைகளில் தேர்ச்சி பெற்றவர்களின் விவரம்.

### I. சமயபாடம் - முதற் பிரிவு
### (முதல் வகுப்பு)

(1) திரு. அ. வீ. வீரபத்திர பிள்ளை
ஆசிரியர், கம்மவார் பாடசாலை, ஒட்டப்பிடாரம்.

(2) ,, ப. வே. நவநீதம்
உயர்தர கலாசாலை, ஊரத்தநாடு, தஞ்சை ஜில்லா.

### (3-வது வகுப்பு)

(3) ,, K. A. கோபால்,
வாகையடித் தெரு, கோட்டாறு (தென் திருவாங்கூர்)

(4) ,, L. ஓவுரெட்டி, கம்மவார் பாடசாலை, ஒட்டப்பிடாரம்

(5) ,, அ. ரெங்கசாமி,
மாணவன், கம்மவார் பாடசாலை, ஒட்டப்பிடாரம்.

(6) திரு. D. லெட்சுமி,
மாணவி, செந்தமிழ்ப் பாடசாலை, திருவனந்தபுரம்.

சமயபாடம் - இரண்டாம் பிரிவு

(இரண்டாம் வகுப்பு)

(1) ,, ப. ஆனந்தம் பிள்ளை,
செந்தமிழ்ப் பாடசாலை, திருவனந்தபுரம்.

சமயபாடம்-மூன்றாம் பிரிவு

(முதல் வகுப்பு)

(1) ,, ரா. திருவாய்மொழிப் பெருமாள், பி.எ. வகுப்பு மாணவன்
இந்து கலாசாலை, திருநெல்வேலி.

II. திருத்தொண்டர் புராணம் என்னும்
பெரிய புராணம் - முதற்பிரிவு

(இரண்டாம் வகுப்பு)

(1) ,, K. A. கோபால், வாகையடித் தெரு, கோட்டாறு.

நான்காம் பிரிவு

(இரண்டாம் வகுப்பு)

(1) ,, ப. வே. நவநீதம்,
உயர்தர கலாசாலை, ஊரத்தநாடு-தஞ்சை ஜில்லா.

III. திருக்குறள் - உரை
ஆடவர் பகுதி - முதற் பிரிவு

(முதல் வகுப்பு)

(1) ,, R. S. சுப்பிரமணியன்,
பட்டுக்கோட்டை (தஞ்சை.)

(2) ,, ச. பிரமநாயகம் உடன்குடி. (திருநெல்வேலிஜில்லா.)

(3) ,, சிவ. குழந்தை வேலுப்பிள்ளை,
தெற்குப் புதுத்தெரு, திருநெல்வேலி.

(மூன்றாவது வகுப்பு)

(4) ,, சு. வேலாயுதம், வடக்குத் தெரு, சிந்துபூந்துறை.

(5) திரு. V. சுப்பிரமணிய பிள்ளை,
பாப்பான்குளம், (அம்பாசமுத்திரம் தாலுகா)

## பெண்டிர் பகுதி - முதற் பிரிவு

(இரண்டாவது வகுப்பு)

(6) ,, சீதா லெட்சுமி,
மாணவி, செந்தமிழ்ப் பாடசாலை, திருவனந்தபுரம்.

(மூன்றாவது வகுப்பு)

(7) ,, K. முத்தம்மாள்
(8) ,, மீ. சிவகாமியம்மாள்
(9) ,, S. குப்பம்மாள்,
} செந்தமிழ்ப் பாடசாலை, திருவனந்தபுரம்.

## திருக்குறள் மூலபாடம்
## இரண்டாம் பிரிவு

(மூன்றாம் வகுப்பு)

(10) ,, S. இராமசாமி
(11) ,, ஆ. சுந்தரம் பிள்ளை
(12) ,, K. கமலாட்சி
} செந்தமிழ்ப் பாடசாலை, திருவனந்தபுரம்.

## மூன்றாம் பிரிவு

(மூன்றாவது வகுப்பு)

(1) ,, D. லெட்சுமி,
செந்தமிழ்ப் பாடசாலை, திருவனந்தபுரம்.

## திருக்குறள் உரை
## பெண்டிர் பகுதி - ௩ம். பிரிவு

(மூன்றாவது வகுப்பு)

(2) ,, D. லெட்சுமி,
செந்தமிழ்ப் பாடசாலை, திருவனந்தபுரம்.

## திருக்குறள் உரை-ஆடவர் பகுதி-௨.

(இரண்டாவது வகுப்பு)

(1) ,, K. L. ஷண்முகம்,

(மூன்றாவது வகுப்பு)

(2) ,, K. A. வேங்கடராம், கோட்டாறு.
(3) ,, கா. மு. இசைக்காடும்பெருமாள்

## திருக்குறள் உரை-ஆடவர் பகுதி-ச

(முதல்வகுப்பு)

(1) திரு. A. சிவசுப்பிரமணியன்,

ஆசிரியர், போர்டுபாடசாலை, பாப்பான்குளம், திருநெல்வேலி.

திருக்குறள் மூலபாடப் பரீட்சையின் ஏனைய பகுதிகளிற் றேர்ச்சி பெற்றவர்கள் பெயர் 'செல்வி' மூன்றும் இதழில் வெளிவரும்.

---

# மதிப்புரை

பண்டாரசாத்திரம்:—இதுவரை வெளிவராமல் ஏட்டுச் சுவடியிலிருந்த ஓர் அரிய சைவசித்தாந்த நூல். இது திருவாவடுதுறை யாதீனப் பண்டாரச் சந்நிதிகளாற் செய்யப்பட்டது. ஆதலால் 'பண்டார சாத்திரம்' எனப்பட்டது. எண்ணிற் பதினான்காய் சித்தாந்த சாத்திரம் பதினான்கு போல இதுவும் 14 நூல்களாகும். இது சீகாழி திருவாளர். K. சிதம்பரநாத முதலியாரவர்கள் விருப்பத்திற்கிணங்க, அவர்களின் இளைய சகோதரராகிய திருவாளர் ச. சதாசிவ முதலியாரவர்களாற் பல பிரதிகளைக் கொண்டு ஒப்பு நோக்கி செம்மையான முறையில் அச்சிடப்பட்டிருக்கிறது. இதிலடங்கிய நூல்களின் வரலாறும் ஆசிரியர்களின் வரலாறும் முகவுரையில் விளக்கமாய்க் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இது மெய்கண்டசாத்திர வுண்மைகளை விளக்க எழுந்த நூல்கள் என்பது பற்றிச் சென்னை, சட்டகலாசாலைப் பேராசிரியரும் அட்வக்கேட்டுமான திருவாளர். கா. சுப்பிரமணிய பிள்ளை (எம். ஏ., எம். எல்.,) அவர்கள் எழுதிய முன்னுரையால் நூல் வரலாறும் நூற்பொருள் விளக்கமும் தெள்ளிதில் விளங்கும். இதுவரை வெளிவராதிருந்து புதிதாய் வெளிவந்த அரிய 'சித்தாந்த நூல்' ஆதலால் பலர் ஆவலாய் எதிர்பார்த்திருந்து சைவர்கள் ஒவ்வொருவரும் வாங்கிக் கற்கத்தகுவது. இதன் விலை ரூ. 2-0-0. வேண்டுவோர் திருவாளர். சிதம்பர முதலியார் அவர்கள், பென்ஷன் சப்ரிஜிஸ்ட்ரார், வடக்குவீதி, சீயாழி என்ற விலாசத்தாருக்கு அல்லது நமது கழகத்திற்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

தொண்டைமண்டல சதகம் பொழிப்புரையும் சரித்விளக்கமும்:—இதன் நூலாசிரியர் படிக்காசுத்தம்பிரான். இது தொண்டைமண்டலத்தில் உள்ள மூர்த்தி, தலம், தீர்த்தம் முதலிய சிறப்புக்களும் அந்நாட்டில் சிறந்து விளங்கிய அரசர் பிரபுக்கள், வள்ளல்கள், புலவர்கள், அடியார்கள் முதலியவர்கள் வரலாறுகளும் இயற்றிய நூல்களும் அரங்கேற்றிய செய்திகளும் விரித்துக்கூறும் அரியதொரு வரலாற்று நூல். இதன் உரையாசிரியர் திருவாளர். சி. கு. நாராயணசாமி முதலியாரவர்கள் இதற்குப் புதியதொரு பொழிப்புரையும் சரிதவிளக்கமும் மிக ஆராய்ந்து எழுதியிருப்பதாகத் தெரிகிறது. இதன் விலை ரூ. 2. வேண்டுவோர் சி. கு. நாராயணசாமி முதலியார், 76, தாமஸ் வீதி, கோயமுத்தூர் என்ற விலாசத்திற்கு எழுதிப் பெற்றுக்கொள்க.



திருநெல்வேலி, நெல்லையப்பர் கோயிலுள்ள ஓர் அழகிய சிற்பம்.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது

| சிலம்பு ச | மெய்கண்டார் யாண்டு-எஉஎ பங்குனித்திங்கள்<br>1926ஆ மார்ச்சு மீ—ஏப்ரல் மீ | பரல் ரு |
|---|---|---|

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## சாணக்கிய நீதி நூல்

[கா. சுப்பிரமணிய பிள்ளை M.A., M.L.]

இதுவே, கௌடில்லியர் அர்த்தசாத்திரமெனவும் பெயர் பெறும். சாணக்கியர், கௌடில்லியர், விஷ்ணுகுப்தர் என்னும் பெயர்கள் சந்திரகுப்தன் என்னும் மகதநாட்டரசனது மந்திரியின் பெயர்களாகும். நந்தர் என்பார் தோல்வியடைவதற்கும் மௌரிய அரசனாகிய சந்திரகுப்தர் வெற்றியடைதற்கும் இச்சாணக்கியரே காரணராக விருந்தாரென்று சரித்திரம் கூறுகின்றது.

இவர் ஓரரசன் மற்றோரரசனை வென்று அவன் நாட்டைக் கைப் பற்றுவதற்குப் பயன்படுத்தும் சூழ்ச்சிகளனைத்தையும் ஒருங்கு திரட்டி இந்நூலை யியற்றியுள்ளார். இவரது நூலிற் பெரும்பகுதி ஒற்றாடலைப்பற்றியும், மருந்து, மந்திரம், தந்திரம் என்னும் இவை களால் நல்வழியாகவோ தீவழியாகவோ வெற்றியெய்தற்குரிய முயற்சிகளைப்பற்றியுமே பேசுகின்றது. அரசன் ஒரு மனித னிடத்திலும் நம்பிக்கை வையாது தன் அமைச்சராயினுமாகுக, குடிகளாயினுமாகுக, எதிரிகளாயினுமாகுக, யாவரையும் பலவகை யான ஒற்றர்வாயிலாகச் சோதனைசெய்தலும்,வேண்டாதவர்களைக் கபடமாகத் தண்டித்தல் அல்லது கொலைசெய்தல் என்பதைக் கைக்கோடலும், அரசர்க்கு நிதிவேண்டிய காலத்துப் பலவகை வரிகள் விதித்துக் குடிகள் நலனைக் கவனியாது பணஞ்சேர்த்த லும், கபடமாகிய பலவகைச் சூழ்ச்சிகளாலும் செல்வர்கள் சொத்தைக் கவர்தலும், உண்மையைக் கண்டுபிடிப்பதற்குக் குற் றஞ் சாட்டப்பட்டவர்களைத் துன்புறுத்தலும், இவைபோன்ற சூழ்ச்சிகள் பலவற்றை மேற்கொள்ளுதலுமாகிய அரசதந்திர முயற்சியைப் பற்றியே இந்நூல் பெரிதும் கூறுவதால், ஐரோப் பாக்கண்டத்தில் இத்தாலிநாட்டில்: மாக்கியவல்லி (Machiavelli) என்பவர் எழுதிய அரசாங்க நூலோடு இஃதொக்குமென்று கூறுதல் மிகையாகாது. 'காதம்பரி' நூலாசிரியராகிய பாணர் என்பவர் இந்த அர்த்தசாத்திரத்தை மிகவும் கண்டித்துக் கூறுவாராயினர். இரக்கமற்றதும் கொடுமை மிக்கதுமாகிய கொள்கையை இந்நூல் கூறுவதென்றும் இந்நூலைக் கைக் கொள்ளும் அரசர் வன்னெஞ்சும், குறளிவித்தைப் பயிற்சியும் உடைய குருக்களைத் தங்கள் போதகாசிரியராகவும், பிறரை வஞ்சிக்கு மனமுடைய அமைச்சர்களைத் தமது ஆலோசனைக் குரியராகவும் கருதுவரென்றும்; பிற அரசரது பணத்தைக் கொள்ளைகொள்ளும் நோக்கத்தை எப்போதும் உடையராவரென் றும், உயிர்க்கு இறுதிசெய்யும் உபாயங்கூறும் நூல்களையே பயில்வரென்றும்,அன்பு மிக்க உடன்பிறந்தாரையும் கொலைசெய்வ ரென்றும் 'காதம்பரி' ஆசிரியர் குறித்துள்ளார்—இங்ஙனம் அவர் வேடிக்கையாகக் குறித்தாரோ உண்மையாகக் குறித்தாரோ

விளங்கவில்லை. இது ஒருபுறமிருப்ப இந்நூலிற் குறித்துள்ள பழக்கங்களுட் சில பின்னுளில் இல்லாமற்போயின. அவைகளாவன:—

(1) கணவனுக்கும் மனைவிக்குஞ் சண்டை வந்தக்கால் விலகிக்கோடல்.

(2) பெண்கள் மறுமணம்புரிதல்.

(3) பிராமணர் மேல்வருணங்களில் மணந்து கொண்ட பெண்ணோடு சூத்திரப்பெண்ணையும் மணத்தல்.

(4) பிராமணர், கள்ளும் ஊனும் புசித்தல்.

(5) அவர்கள் படைக்கலத் தொழிலைக் கைக்கொள்ளுதல் என்பனவாம்.

இந்நூலாசிரியரது முதல்நோக்கம் எவ்வழியிலாயினும் அரசன் வெற்றியடைதல் வேண்டுமென்பதே. ஆயினும் அவர் சிற்சில உயரிய கருத்துக்களையும் தமது நூலுட் குறித்துள்ளார். அவற்றுட் சிலவற்றிற்கும் திருவள்ளுவர் கருத்திற்கும் ஒற்றுமை காணப்படுகின்றது. இங்ஙனம் பெரியநூலாசிரியரது பனுவல்களிலே சிற்சில கருத்தொப்புமை அமைதல் இயல்பே. திருக்குறளையும் அதற்குப் பன்னூறாண்டுகட்குப் பின் இயற்றப்பட்ட (Shakespeare) செகப்பிரியரது ஆங்கில நூல்களையும் ஒத்துப்பார்ப்பவர்கட்கு இவ்வுண்மை விளங்கும். ஆசிரியர் சிவஞானசுவாமிகளின் கற்பனைகள் சிலவற்றிற்கும் ஆங்கில கவியாகிய (Gray) கிரே என்பவருடைய புனைந்துரைகள் சிலவற்றிற்கும் ஒற்றுமை காணப்படுகின்றது. பெருமக்கள் நினைவில் ஒத்த கருத்துக்கள் நிகழ்வது இயல்பெனக் கொள்ள வேண்டும். அங்ஙனம் கொள்ளாது ஒருவரை யொருவர் பார்த்துப் படித்தாரென்று கூறுதல் அறிவிற்குப் பொருந்துவதன்றாம். திருவள்ளுவர்நூலையும், வடநூலையும் ஒத்துப்பார்ப்பவர்கள் இவ்வுண்மையை நினைவில் வைத்துக்கொள்ளுதல் வேண்டும். சாணக்கிய நீதிநூலிலே அரசியற்கு அங்கமாகக் கூறப்பட்டவைகள், திருக்குறள் இறைமாட்சியுள்ளும் பிறிதொருமுறையில்

மொழியப்பட்டுள்ளன. சாணக்கிய நூலினுள் அரசு, அமைச்சு, நாடு, அரண், நிதி, படை, நட்பு என்னும் இவை அரசியற்குரியன என்பது சொல்லப்பட்டது. ஓரசன், படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்னும் ஆறினையும் உடையனுயிருத்தல்வேண்டு மென்று ஆசிரியர் திருவள்ளுவர் கூறினர். சாணக்கியரும் திருவள்ளுவரும் கூறிய முறை வேறுதல்காண்க. ஆசிரியர் திருவள்ளுவர் கூறுவது சுருக்கமும் தெளிவும் பயின்றதாக வும் சாணக்கியர் செப்புவது பலசொற்கோவையாகவும் காண்கின் ேரும். திருவள்ளுவர் கருத்தை இறைமாட்சியுட் காண்க.

சாணக்கியர் கூறுவதாவது:—

அரசன் உயரிய குடும்பத்துப் பிறந்தவனுகவும், திறமை யுடையவனுகவும், உண்மையுடையவனுகவும், மூத்தோர்வாயிலா கப் பொருள்களை அறிவோனுகவும், மன எழுச்சியுடையவனுக வும், பக்கத்து அரசர்களை யடக்குவோனுகவும், தக்க மந்திரிகளு டைய சங்கம் உடையவனுகவும், காரியங்களை ஒழுங்கு படுத்தும் ஆசையுடையவனுகவும், கூரிய அறிவும், உறுதியான நினைவும் தகுதியும் அடக்கமும் உடையவனுகவும், பதிலுக்குப் பதில் நன்மை தீமை செய்யும் ஆற்றல் உடையவனுகவும், எதிரியின் குறைகளை உணரவும் அவை காரணமாக அற்றம்பார்த்துத் தான் வெற்றியடையவும் வல்லவனுகவும், முகமலர்ச்சியுடையவனுகவும் மூத்தோர் வழக்கங்களை அனுசரிப்பவனுகவும், இன்னும் பல நற்குணங்களையுடையவனுகவும் இருத்தல் வேண்டுமென்று கூறப் பட்டது. திருவள்ளுவர் கூறும் சுருக்கமுறை சாணக்கிய நூலுட் காண்டலரிது. காலமறிதல் என்பதைப்பற்றிப் பேசுமிடத்து, அதனுள்

"பகல்வெல்லும் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது" (காலமறிதல்)

என்னும் திருக்குறட் கருத்துக் காணப்படுகின்றது. இக்கருத்துப் பிறர்கூற்ருக அந்நூலுட் கூறப்பட்டமையால் ஆசிரியர் திருவள் ளுவனர் கருத்தினையே சாணக்கிய நீதிநூலார் அங்ஙனங் குறித்

தனர் போலும். இந்நீதிநூலார் தமக்கு முன்னிருந்த நீதிநூல்களின் சாரங்களையே தொகுத்துக் கூறுவதாக இந்நூற் றொடக்கத்திற் சொல்லியிருத்தல் காண்க.

தேவகுருவையும் அசுரகுருவையும் வழிபட்டு சாணக்கியர் இந்நூல் இயற்றுகின்றாராதலின் வடநூற் கருத்துக்களும் தென்னூற் கருத்துக்களும் இந்நூலுட் பயில்வனவாகக் கருத இடமுண்டு. சுக்கிரர் அசுரகுருவாகக் கூறப்படுதலாலும், அசுருட் சிறந்த சூரபன்மன் முதலியோர் தென்னாட்டினராதலாலும், சாணக்கியநூலுட் தென்னாட்டுக் கருத்துக்கள் கலந்துள்ளன வென்பது யூகிக்கப்படும். ஆசிரியர் திருவள்ளுவரது நூல் சாணக்கியத்திற்கு எவ்வாற்றானும் பிற்பட்டதென் றுரைத்தல் எளிதல்ல. பிற்பட்டதே என்று கொள்வார்க்கும் திருவள்ளுவர் சாணக்கியரைப் பின்பற்றி நூல்செய்தாரென்று செப்புதல் இயலாததொன்றே. திருவள்ளுவரதுநூலின் நோக்கும் போக்கும் சாணக்கியத்திற்கு முற்றும் வேறுபட்டனவே. இரண்டொரு கருத்துக்களின் ஒற்றுமைபற்றித் திருக்குறட் பொருட்பாலினைச் சாணக்கியத்தின் வழிவந்ததென்று கூறவொண்ணாது. (Shakespeare) சேகப்பிரியர் நூல் திருவள்ளுவரின் வழிவந்ததென்று கூறுமுறையோடு அஃதொக்கும். சிற்சில கருத்தொருமைபற்றி ஆசிரியர் திருவள்ளுவர் வடநூல் மதம்பற்றிக் கூறினாரென்று செப்புதல் மிகவும் வழுவியதோர் முறையாகும்.

சாணக்கியர் முதலிய வடநூலார் திருவள்ளுவர் மதம்பற்றிக் கூறினாரென்றல் மிகவும் பொருத்தமாகும். தமிழ்நூற் கருத்துக்களை வடநூலார் தமது நூலுட்கொண்டமையைக் காலஞ்சென்ற சென்னைக், கிறித்தவ கலாசாலைத், தலைமைத் தமிழாசிரியர் வி. கோ. சூரியநாராயணசாஸ்திரியார் B. A., அவர்கள் தாம் எழுதிய 'தமிழ்மொழி வரலாறு' என்னு நூலுள்=வடமொழிக் கலப்பு என்ற பகுதியுள், 'தமிழரிடத்திருந்த பல அரியவிஷயங்களையும் மொழிபெயர்த்துத் தமிழர் அறியுமுன்னரே அவற்றைத் தாமறிந்தனபோலவும், வடமொழியினின்றுமே தமிழிற்கு அவை வந்தனபோலவும் காட்டினர்.' என்று கூறியுள்ளார். ஆசிரியர்

திருவள்ளுவர் நூலை இரண்டாம் நூற்றாண்டு நூல்களாகிய மணி மேகலை, சிலப்பதிகாரங்களில் மேற்கோள் காட்டிய காரணம் ஒன்றினால் இரண்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்டது திருக்குறள் என்பது தெளிவாகுமேயன்றி இரண்டாம் நூற்றாண்டு அல்லது முதல்நூற்றாண்டிற்றான் அஃது எழுந்ததென்று முடிவாகக் கொள்ள இடமில்லை. சங்கநூலுட்போந்த ஒளவையார் முதலியோர் திருவள்ளுவரது உடன்பிறப்பெனக் கொள்வதற்குக் கர்ண பரம்பரைக் கதையன்றி வேறு சிறந்த ஆதாரங் கிடைத்திலது. ஒளவையார் பாணர் மரபினைச் சேர்ந்தவரென்று தோன்றுகிறது. திருவள்ளுவர் வள்ளுவர் மரபில் வளர்ந்ததாகக் கூறுகின்றார்கள். அவர் வேளாண்குலத்துப் பெண்ணை மணந்ததாகவுங் கூறுகின்றார்கள். வள்ளுவராயிருந்து வேளாண் குலத்திற் பெண் கொண்டிருத்தல் கூடுமாவென்பது ஓர் ஆசங்கை. திருவள்ளுவமாலை திருவள்ளுவர் காலத்துச் செய்யப்பட்டதாகத் தோன்றவில்லை. திருவள்ளுவமாலையின் ஆராய்ச்சி பின்னர்ச் செய்யப்படும். திருவள்ளுவர் நூலுள் வேளாண்மையைப் பற்றியும், வேளாளர் தொழிலாகிய உழவைப் பற்றியுமே சிறந்த உரைகள் காணப்படுகின்றன. அவரது உவமைகளுட் சில உழவின் சார்பாகவே அமைந்துள்ளன.

'வானென்னும் வைப்புக்கோர் வித்து' (நீத்தார்பெருமை)

'வித்து மிடல்வேண்டும் கொல்லோ.' (விருந்தோம்பல்)

என்று வெவ்வே றதிகாரங்களில் வருவனவுங் காண்க.

உழவு தொழிற்கு இன்றியமையாத மழையைப்பற்றி ஆசிரியர் சிறப்பித்தோதினர். ஆனால் நெய்தற்றொழிலைப்பற்றி யாதும் விதந்தோதியதாகத் தெரியவில்லை. ஒளவையார் முதலியோரைப்போல மூவேந்தரையாவது, குறுநில மன்னரையாவது திருவள்ளுவர் பாடியதாகத் தெரியவில்லை. திருவிளையாடற்புராணத்துள்ளும், இடைக்காடன் பிணக்குத்தீர்த்த படலமும், சங்கப்பலகைதந்தபடலமும் திருவள்ளுவரைப்பற்றி யாதுங்கூறவில்லை. திருவள்ளுவர் நூலுட் சிலமொழிகள் வடமொழியோ

தென்மொழியோவென்று ஐயுறுதற்கு ஏதுவாய் நிற்கின்றன. வடமொழித் தத்துவசாத்திரங்களுட் பயிலும் முக்குணம், ஆன்மா, பிரமம், நான்கு வருணம் முதலிய சொற்களுள் ஒன்றும் திருவள்ளுவர் நூலுட் காணப்படா. திருவள்ளுவர் 'அந்தணர்' என்றது ஆரியப் பிராமணரையன்று. மேலோர் தாழ்ந்தோர் என்ற வேறுபாடு செயல்பற்றி யமைந்ததாகவும் குடி, குலம் என்பன பரம்பரை யொழுக்கம்பற்றி யமைந்ததாகவும் திருக்குறள் குறிப்பதேயொழிய நாற்குலத்தைப்பற்றிய விவரம் யாண்டுங் காணப்படவேயில்லை. திருவள்ளுவநூலினை ஆராய்ந்து பார்ப்பார்க்குத் தொல்காப்பியத்தில் நான்கு வருணத்தைக் குறிக்கும் சூத்திரங்கள் எழுவதற்கு முன்னேயே ஆசிரியர் திருவள்ளுவனூரால் அது இயற்றப்பட்டதென்பது தெளிவே.

'ஆவோ டல்லது யகர முதலாது'

என்ற தொல்காப்பியச் சூத்திரத்திற்குமாறாக திருவள்ளுவநூலுள் யவனர், யூபம், யோகம் முதலிய சொற்களுள் ஒன்றுங் காணப்படவில்லை. யவனர், யூபம் என்பன புறநானூற்றுள் வருவன காண்க. முதுகுடுமிப்பெருவழுதியைப் பாடிய பாடலுள்

'யூபம்நட்ட வியன்களம் பலகொல்'

என வருதல் காண்க.

முதுகுடுமிப்பெருவழுதியின் காலம் மிகவும் பழமையானது. அக்காலத்துச் சொல்வழக்குக்கூடத் திருக்குறளுட் காணப்படவில்லை. களவொழுக்கம் கந்தருவாத ஒழுக்கம் என்று கோடற்குச் சிறிதுந் திருக்குறள் இடந்தாவில்லை. தொல்காப்பியப் பொருளதிகாரத்துட் போந்த பழமையான தமிழ்க்கருத்துக்களே திருவள்ளுவருட் பயிலக் காண்கின்றோம. எண்வகை மணத்துள் யாதுந் திருவள்ளுவர் நூலுட் குறிக்கப்படவில்லை. சமணர், புத்தர் முதலியோரைப்பற்றிய விவரமுந் திருக்குறளுட் காணப்படவில்லை. காமம், கருமம், தெய்வம் என்ற சொற்கள் தொல்காப்பியந் திருக்குறள் என்னும் இரண்டினுங் காணப்படுகின்றன. இவற்

றைத் தமிழ்ச்சொல்லெனக் கூற இடமுண்டு. இதுகாறுங் கூறிய வாற்ருல் திருவள்ளுவர் நூல் தொல்காப்பியத்திற்குப் பின்னர் சமணசமயம் புத்தசமயம் முதலியன உலகத்தில் உண்டாவதற்கு முன்னரே தோன்றிய **தமிழ்முதனூ**லென்பது யூகிக்கப்படும்.

கி. மு. 6-வது நூற்ருண்டிற்ருன் புத்த சமணசமயங்கள் தோன்றின. அவற்றிற்கு முந்தியுள்ள திருக்குறணூல் கி.மு. 321-ல் தோன்றிய சாணக்கியநூலுக்கு மிகவும் முற்பட்டதென்பது தெளிவு. இக்காரணத்தால் சாணக்கியர் முதலியோர் திருவள்ளுவர் நூலுட்போந்த சில கருத்துக்களைத் தமது நூலகத்துட் கொண்டாரென்பது யூகிக்கப்படும்.

இனி, சாணக்கிய நூலுட்போந்த பொருட்டொகுதியை ஒருவாறு சுட்டுதும்.

(தொடரும்)

---

# சேக்கிழார் பெரியபுராணம்

[வேலூர், C. S. இராஜாப்பிள்ளை]

(உம்-ம் பக்கத் தொடர்ச்சி)

இவ் அநபாய சோழபூபதி அருண்மொழித் தேவருடைய சிறந்த குணங்களைக் கேள்வியுற்று, அவரைத் தம்மிடம் வருவித்து முதன்மந்திரியாக்கி, உபயகுலோத்தமன் உத்தமசோழப் பல்லவனென்னும் பட்டப்பெயர்களளித்து, வாழ்ந்துவருவானாயினன்.

அக்காலத்தில் சேக்கிழார்சுவாமிகள் திருநாகேச்சுரத்தில் அன்புடையராக விருந்து அதனல் தம் பதியாகிய குன்றத்தூரிலும் திருநாகேச்சுரமென ஒரு ஆலய மெடுப்பித்தாரெனக் கூறப்படுதலினுலும், இப்பெரியார் சரித முழுதும் உற்றுநோக்குழி சிலகாலமே மந்திரக் கிழமை பூண்டொழுகினரென்பது பெறப்படுதலினுலும் மன்னர் பெருமான் குடந்தையில் அமர்ந்த காலமே இவர் மந்திரியாராக இருந்தகால மென்பது உணரக்

கிடக்கின்றது. அக்காலத்தில் உலகத்திற் பெரும்பாலோர் சமண சமயப் பெருங்காவியமாகிய சிந்தாமணியை மிகவும் பாராட்டிக் கொண்டிருந்தமையால், அரசனும் அவ்வாறே அந்நூலினிடத்து மிக்க அன்புடையவனாய் ஒழுகினான். அதுகண்ட மந்திரத் தலைவர், மன்னனை நோக்கி, அரசே! தாம் விரும்பிக் கேட்குங் கதை சிவகதையாயின் மிக்க நலம் பயக்குமே யென, அக்கதை யாண்டுளது? இடையிற் போந்ததோ? பழமை வாய்ந்ததோ? என விரும்பிக் கேட்க,

சேக்கிழார் குரிசில் நம்பியாரூரர் திருத்தொண்டத் தொகை பாடியது முதலாக நம்பியாண்டார் நம்பிகள் திருவந்தாதி பாடிய திருக அனைத்தையும் எடுத்துக்கூற, கேட்ட மன்னன் மகிழ்ச்சி மிகவெய்தி, இதனை ஓர் சிறந்த காவியமாகச் செய்து தரவேண்டுமென்று பல வரிசைகளை அளித்து அனுப்ப அதனைப்பெற்றுச் சேக்கிழார் சுவாமிகள் தில்லையம்பதியில் வந்தமர்ந்தனர். என்னை? திருவாரூர்த் தியாகப்பெருமான் திருத்தொண்டத் தொகைக்கு முதலாவதாக அடியெடுத்துக் கொடுக்கப்பெற்ற தில்லைவாழந்தணர் வாழுந் தலமாகலானும், திருமுறைகள் சேமிக்கப் பெற்ற தலமாகலானும், நடராஜப் பெருமான் சோழமன்னவர்க்குக் குலதெய்வப் பெருமானாகலானும், தில்லையம்பலம் இவ் அநபாயனாற் பொன்னோடு வேயப்பெற்றதாகலானும், திருவாரூரில் உள்ள அநபாயன் சாசனங்களில் "வியாக்கிர கிரகத்தில் உள்ள ஸ்ரீமந் நடனராஜ மூர்த்தியை உபாசனா மூர்த்தியாகக் கொண்டான்" என்பது போதரலானும் இவைபோன்ற பல காரணங்களானும் தில்லையம்பதியே எற்புடைத்தாகலின் என்க.

தில்லையை யடைந்த தெய்வப்புலமைச் சேக்கிழார் பெருமான், சிவனுருவாய்த் திகழுஞ் சிவகங்கையில் நீராடித் தம் நியமங்கள் முடித்துப் பொன்னம்பலமடைந்து, உடல் புளகித் தென்பெலா நெக்குருக விழிநீர்கள் ஊற்றெடுப்பப் பெருமானே! உமது அடியார் பெருமையை எடுத்துரைக்க அடியெடுத்தருள்க வென வேண்ட, அப்பொழுது இலகுமன்றினிலாடுவாரருளினா லசரீரி வாக்கு **உலகேலாம்** என அடியெடுத்தருள, அத

னைக் கேட்ட அந்தணர்கள் ஆநந்தத் தாண்டவமூர்த்திக் கணிந்த மாலையும்: பரிவட்டமுந் திருநீறுங் கொண்டு நமது மந்திரத் தலைவர்க்குச் சாத்திக் கழிபேருவகை பூத்தனர்.

தொண்டர்சீர்பரவுங் குன்றைவேந்தரும் இன்பக் கடலிற் றிளைத்து எல்லையிலா மகிழ்வெய்தி திருநெறித்தமிழ்த் தலைவர்களை உளத்தே நினைத்து, விபூதியும் உருத்திராக்கமு மணிந்து, ஆயிரக்கால் மண்டபங் குறுகி ஆண்டமர்ந்து அசரீரி யருளியதையே முதலாகக் கொண்டு திருவருள் உணர்த்தியவாறே புராணத்தை 4253 செய்யுட்களாற் பாடிமுடித்துத் திருத்தொண்டர் புராணமெனப் பெயரிட்டு ஓர் அழகிய கவளிகையில் வைத்தருளினர்.

இச் செய்தியை ஒற்றரால் உணர்ந்த மன்னர் பெருமான், நால்வகைச் சேனையும் புடைசூழத் தில்லைநகர்ச் சார, அதனையுணர்ந்த தில்லைவாழந்தணர் முதலிய பெரியாரும், சேக்கிழார் சுவாமிகளும் எதிர்கொண்டு வாழ்த்த, அப்போது

"முண்டமாட திருமுடியு மிட்டதிரு முண்டமுங் கவசமுந்துணைக்
குண்டலங்களு மிரண்டு காதினும் வடிந்தலைந்த குழையுந்திருக்
கண்டமாலை கரமாலையுஞ் சிரசு மாலையுங் கவின்விளங்கத்"

தோன்றிய பெருந்தகைமைச் சேக்கிழாரைக் கண்டு தன்னையறியாது கைகள் சென்னிமேற் குவிய, திருவடிகளில் விழுந்து வணங்கினன். பின்னர் அனைவரும் புடைசூழ ஆலயமடைந்து தங் குலதெய்வமாகுந் தாண்டவப் பெருமானைக் கண்டு களித்து நிற்க, அக்காலத்து அசரீரியாக

"சேக்கிழானமது தொண்டர்சீர்பரவ காமகிழ்ந்துலகமென்று நம், வாக்கினு லடியெடுத்துரைத்திட வரைந்து நூல் செய்து முடித்தனன், காக்கும்வேல்வளவ நீயிதைக்கடிது கேள்" என ஒரு திருவாக்கு நிகழ அதனைச் சிலம்பொலியுடன் கேட்டு, பல பெரியாரையுங் கூட்டித் திருத்தொண்டர் புராணத்தை அரங்கேற்றுவித்து, அத் திருமுறையையும் சேக்கிழார் பெருமானை

யும் யானைமீதெழுந் தருளுவித்துத் தானுமேறித் தன் கைகளால் வெண்சாமரம் வீசிக்கொண்டு நகர்வலஞ் செய்வித்து, அதனைச் சபாநாயகர் முன்னிலையில் வைத்து வணங்கி அவர்க்குத் தொண்டர்சீர் பரவுவார் என்று பட்டப்பெயரளித்து ஞானமுடி சூட்டி மீண்டும் வழிபட்டு, இத் திருத்தொண்டர் புராணத்தைப் பன்னிரண்டாந் திருமுறையாக வகுத்துச் செப்பேட்டில் எழுதுவித்து நடராஜப் பெருமான் சந்நிதியில் ஏற்றுவித்தான். அப்பால் அவரது உடன்பிறந்த பாலறுவாயரைத் தனக்கு மந்திரியாக் கொண்டு, தொண்டர்சீர்பரவுவாரைத் தில்லைநகர்க் கண்ணே இருக்கச்செய்து செங்கோல் செலுத்துவானாயினன். சேக்கிழார் பிரானும் பின் சில ஆண்டுகள் தில்லையில் வதிந்து குஞ்சித பாத நிழலில் இரண்டறக் கலந்தருளினர். தில்லைவாழந்தணரே முதலாகச் சீர்படைத்த தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி, ஒல்லைபவர் புராணகதை யுலகறிய விரித்துணர்த்த, செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழாரடி போற்றி.

இதுகாறுங் கூறியவாற்றாற் பாலிநாட்டின் பெருமையும், அந்நாட்டின் வேறு பெயர்களும், அப்பெயர்க் காரணமும், காஞ்சி நகரச் சிறப்பும், வேளாண் மரபின் மாண்பும், அம்மரபிலுதித்த சேக்கிழார் பெருமையும், புராணம் பாடிய வரலாறும் ஒருவாறு சுருக்கி உரைக்கப் பெற்றன. மேல் பெரிய புராணத்தைப் பற்றி ஆராய்வோம்.

(தொடரும்)

---

# தேவார உரை

[சேப்பறை ஸ்ரீமத் சிதம்பரசுவாமிகள்]

(௯௯-ம் பக்கத் தொடர்ச்சி)

அற்றேல், எப்பொருளு மாக்குவானீசனே யெனு முணர்வு மென அஃதான் டுணர்வுபற்றி உபதேசித்தருளுதலின் அஃதப் பரமாசாரியப் பரம்பொருளின் சிருணர்வுத் துணையேயாம்.

அது உணர்த்தியருளுந் திருப்பாவுள் அமையாது போலு மெனின், நின்னுணர்வு நல்லுணர்வேயாம். அற்றேல் ஆசிரிய ருணர்ச்சியும் உணர்ச்சிவழியா னிகழுந் திருப்பாவும் தம்முள் வேறுமே கொல்லோ, அற்றன்று. எவ்வாறு நினைக்குதும் அவ் வாறு மொழிகுதும், அம்முறையும் இம்முறையோ டொக்கு மாகலான் உணர்ச்சி யுடையார் எவ்வாறுணருப, அவ்வாறே யுணர்த்தியருளுப. ஆகலான் அஃது அதனுள் அமையாமை யாங் ஙனமென்றொழிக.

அற்றேல், அஃதற்றுமாயினும் ஆசிரியர் சேக்கிழார் அடை யாளங்கள் சாற்றி யென்புழி இதனையு முடன்வைத் துபதேசித் தருளினா ரல்லராகலான் இஃதிண்டைக் கமையாது போலு மெனின் அற்றன்று. எமதாசிரியர் "சிவனடியே" யென்னுந் திருப்பாவுள் பரமாசாரியப் பரம்பொருளின் உணர்ச்சி நிகழ்ச்சியா மாறும் "எப்பொருளு மாக்குவா னீசனே" யென்னும் திருப்பா வுள் அவ்வுணர்ச்சிப் பயனுமாறும் உபதேசித்தருளின ராகலான், அவ்வறிவின்பயன் அதனுள் இடைபருதெஞ்ஞான்று முதற் பொருள் சிவபரம்பொருளேயென வொருதலையான் அறிவறிந்து கோடலென்பது தெற்றெனப் பெற்றும்.

அற்றேல், அப்பரமாசாரியப் பரம்பொருளும் யாமும் பேரறிவு சிற்றறிவுபற்றி மேருவும் அணுவுமெனப்படும். ஆகவே, அத்துணைச் சிற்றறிவுடையராய யாமும் முதற்பொருள் சிவ பரம்பொருளே யெனக்கோடும் அஃதங்ஙனமாக அப்பேரறிவுப் பேறுபற்றி ஆம்பயன் விசேடமின்றாம்போலுமெனின் அற் றன்று. எம திம்மேற்கோளெல்லாம் அவ்வியல்பஃகி உண்மை யொப்பத் தோன்றும் போலி மேற்கோளேயாம், உண்மை மேற் கோளன்மையா னென்பது.

அஃதேல் இஃதென்னை பாவம் நீயிர் இஃதங்ஙன மோதவே யாமெல்லாம் சிவநெறியுடையராகாது ஏனைப் புறநெறியுடைய ரெனவே முடியும் போலு மெனின், நன்றேயோதினுய், அதுவே யெங்கருத்து மாகலானென்பது.

அப் பரமாசாரியப் பரம்பொருள்மாட்டு நிகழும் பரமாநுபவ நிகழ்ச்சியும் சிவபரம்பொருள் ஆண்டாண் டெழுந்தருளிவந்தரு ளும் பரமகாருண்ணிய நிகழ்ச்சியும் அன்ன பிறவும் எம்பால் யாதுமின்மையின் அதுவே எம்மியல்பெல்லாம் போலியாதற் கமையுஞ் சான்றாதலறிக.

அற்றேல் இஃதங்ஙனமேயாயின் அஃதிங்ஙனமென நீயிரோ தும் ஒத்தும் அதன் பயனும் போலியாமாலோவெனின், அற்றேல் ஆசிரியர் நீலகண்டப்பெரும்பாணனர் அருமையுடைத் திருப் பதிகத்தை யாழினுற் பயிற்றுவது கேட்டார் நீயிர் திருப்பதிகத் திற் சிறந்த ஓசை அளவு பெறக் கருவியினின் அமைத்தியற்று மத ஞனே அகிலமெல்லாம் வளர இசை நிகழ்வதென விளம்புதலும் அது கேட்டருளிய ஆசிரியர் அப்பரமாசாரியர் திருவடிகளை வணங்கி அளவில் திருப்பதிக விசை அளவுபடாவகை இவர்க ளன்றி யேனை உலகினுள்ளோருந் தெரிந்து உண்மை யறிந்து உய்தற்பொருட்டுத் திருப்பதிகம் பாடியருளுமாறு வேண்டிக் கொள்ள ஆசிரியராண்டருளிச்செய்த எண்பெருகும் அப்பதிக இசை நரம்பினிட அஃதடங்காமையின் அஃதொழிந்து மெய்ப் பிரிவும் பயமுமுற இப்பெரியோ ரருளிச்செய்த திருப்பதிகத் திசை யாழினேற்பேனெனக் செப்பியது இக்கருவியை யான் தொடுதலினன்றே எனத் தெளிந்து அதனை யுடைத்தொழித்து மெனவோங்குங்காற் தடுத்தருளிய பரமாசாரியப்பரம்பொருள் ஆளுடையாளுடனேகூடச் செய்யசடையாரளித்த திருவரு ளின் பெருமையெல்லாம் இக்கருவியின் அளவுபடுமோ, படாதா யினும் நந்தமியல்புக் கேற்ப வையகத்தோரறிவுற இக்கருவி யளவையி னியற்றல் வழக்காம். ஆகலான் இந்த யாழினைக் கொண்டே இறைவர் திருப்பதிக விசை இதனினெய்தவந்த வாறே பாடி வாசிப்பீரென ஆண்டாற்றி யருளிய சிராணையும் போலியாய் முடியுமன்றே, முடியாமையின் அவ்வாணை அப்பதிகப் பொருட்கு மொக்கும் ஆகலான் எந்தமியல்புக்கேற்ப எமதறி வினிளவைப் பற்றி யோதல் வழக்காதலும் அப்பரமாசாரியப் பரம்பொருளின் சிராணையேயாகலான் அஃதங்ஙனமாமாறு யாங்ஙன மென்றெழிக.

அல்லதூஉம் யாமிந்நூற்பொருள் கேட்புழி அதுகேட்பிப்போன் கேட்பிக்கு மெவற்றையும் கேட்டுவைத்தும் எம்மனம் அவற்றிற் பெரிதும் அழுந்தா தொழிதல் நோக்கி எம்மை நீ மடவோருண் மடவோரென்னு மன்றே. இந்நூற்பொருள் யாதுங் கேளாதாரன்றோ மடவோருண்மடவோர். ஆண்டுக் கேட்பிப்போன் அவ்வாறோதியது யாமும் அவ்வியல்புடையமென்னுங் கருத்தன்று. எம்மனம் புலன்வழிப் போகாது மடங்கி அக்கேட்கும் பொருளினெருங்கி இனிதழுந்துமாறு அஃதழுந்துவிக்குமோர் உபாயநெறியே பிறிதன்றாம். ஆகலான் யாம் மேற்புறநெறியுடைய ரென்றோதியதூஉம் அவ்வாறே யாமெனக் கொள்க. இன்னும் இப்பொருள் கேட்குந் தவமில்லாத புந்நெறியுடையர் போலாது ஒருவாற்றான் அவையெல்லா மொருங்குடையார்போன்றும் எமதறிவழுந்திப் புலனெறியொழிந் துய்ப்பு நன்னெறியின் நிலைபெறாது உழிதருமாறு நோக்கி அதனை நிலைபெறுத்தும் ஒருபாயமே பிறிதன்றென்க.

அல்லதூஉம் யாமீண்டோதுவவெல்லாம் புதுவதுபடைத்துக்கொண் டோதினமல்லம். உள்ளவாறுணர்ந்து உணர்ந்தவாறுபதேசித்தருளு மாசிரியன்மார் பேருபதேசப்பொருளேயல்லது வேறன்மையின் அதுபோலியாகாமை தெரிந்துணர்ந்துகொள்க.

இன்னு மிஃதிவ்வாறோதும் யாமித்துணை யோதவல்லவாற்றான் யாமிஃதோதவல்லோமெனப் பிறர்க் கோதுமாற்றான் தருக்குற்றுக் கெட்டொழிதுமன்றே. அஃதங்ஙனமாகாது அப்பரமாசாரியப் பரம்பொருளின் திருவடியு ளடங்கிநின் றுணருமுறையானுணர்ந் துய்தற்பொருட்டு அஃதோதியதூஉமா மெனக் கொள்க. அது நிற்க.

இனி 'அப்பொருள் தான், ஆளுடையா னடியார்களெனு முணர்வும்' என்பது பயனுக்குப் பயனுமெனக் கொள்க. எனவே அபர அறிவின் பயன் எப்பொருளு மாக்குவா னீசனே யெனு முணர்வும் பர அறிவின் பயன் அப்பொருள்தான் ஆளுடையான் அடியார்களெனும் அறிவும் ஆம். அவற்றிற் கேது இப்படியாலிது

வன்றித் தம்மியல்புகொண்டியலுந் துப்புரவில்லார் நெறிகள் துக ளாகச் சூழ்ந்தெழுதலுமாமென உபதேசித்தருளுவாருயிற்று.

இவ்வீசனே யென்னும் அவ்வுணர்வுநிகழ்ச்சி யித்துணை அரிய பெரிய சீரிதாதற் சிறப்புநோக்கியன்றே எம்மையாண் டருளிய மணிவாசகப்பரம்பொருள்! எண்ணிறந்த பலவேறு பிழைப்புக்களை எடுத்துக்காட்டியருளித் தெய்வ மென்பதோர் சித்தமுண்டாகி யென உபதேசித்தருளியதூஉ மென்பது.

அற்றேல் இஃதற்றுக அப்பரம்பொருள்தான் ஆளுடையா னடியார்களெனு மறிவுமென்பதன் தாற்பரிய மென்னையெனின் அது "அறிவறியான் றனையறிய வாக்கையாக்கி" யென்னுந திருப்பாப் பொருள்பற்றி அறிந்துகொள்க.

ஒருவனுக் கெப்பொருளு மாக்குவா னீசனே யெனு முணர்வு பரம்பரையான் நிகழவே பாச பசுக்களின் இருவேறு இயல்பும் உள்ளவாறுணரும் அவ்வுணர்வு நிகழும், அது நிகழவே இறைவனது இருவேறியல்புமுள்ளவாறுணருமுணர்வு நிகழ்ந்து முற்றுப்பெறும். அது "சிவமூர்த்தியென் றெழுவார் சிந்தை யுள்ளே யுற்றதோ ருலகமெல்லாங் காட்டுவா"னென்பதுபற்றி யுணர்ந்து கொள்க.

இனி இஃதித்துணையிற்றெழிந்து பிறிதோராற்றானுமஃ தோதும், தோடு எனச் சிறப்புடைப் பொருளாயை சிறப்பணி யெடுத்துபதேசித்தருளவே அவ்வுபலக்கணத்தாற் பொருட் பிரபஞ்சமெல்லாம் அடங்கும்.

செவியெனச் சத்தமறிகருவி யெடுத்தோதவே சத்தப் பிர பஞ்சமெல்லாம் பெறப்படும். படவே அச்சிவபரம்பொருள் அவ் விருவேறு பிரபஞ்சங்கள்பற்றி நிகழும் ஐந்தொழில் நிகழ்த்து மாறும் பெற்றும். பெறவே அவ்வைந்தொழில் புரியும் வினைமுதல் அவனொருவனே யென்பது தேற்றியருளுவார். அவற்றை முதற்க ணெடுத்துக்கொண் டுபதேசித்தருளினரென்பது. இதனாற் போந்த பொருளாவது ஒருவனுடைப்பொருளும் அவற்றை நடாத்தும் முறையும் முதற்க ணெடுத்துக்காட்டுமாற்றான் அவற்

றை யுடையான் மேம்பாடு காட்டற்பாற்றென்னு நியாயம்பற்றி உடைப்பொருளாய உலகமும் அவற்றைக் காரியப்படுத்து மாறுங் காட்டியருளுமாற்றாற் சிவபரம்பொருளின் மேம்பாடு தேற்றியருளுவார். அதுபற்றி அவற்றை முதற்கணெடுத்துக் கொண்டருளினரெனக் கொள்க. விரிப்பிற் பெருகும்.

இன்னுமோராற்றானும் அது விடுக்குமாறு காண்க:— ஒரு பொருளே யாயினுந் தம்முளிடையீடு சிறிதாய்த் தம்மு ளொத்த இருவேறு பொருள்கள் ஒரு பொருளேயாய்த் தம் முளியைந்துநிற்குமோ ரியைபுடையது தோடு, அவ்வாறே இறைவன் ஒரு பொருளேயாம். ஆயினுங் குணகுணி வேறு பாட்டால் சத்தி சிவமென இருவேறு திறப்பட்டுத் தம்மு ளொத்து நின்று இவ்வுலகை நடாத்தியருளுமென்பது வேதாகம நூற்றுணிபு.

ஆயவாற்றான் அங்ஙனமாய அத்தன்மை இத்தன்மைத் தென்பது தேற்றியருளுவார் அதனை முதற்க ணெடுத்துக்கொண் டருளினரென்பது.

அற்றேல் இவ்வியல்பு மூக்கணிக்கண்ணு முண்மையின் ஆண்டு அதிவியாத்தியாலோவெனின் அற்றன்று, மூக்கணியாய் தம்முட் கூட்டுவனவாய இருவேறு பொருளுந் தம்முள் இடை யீடு பெரிதுடையவாகலானுங் காதணியி னிருபகுதியினிடையீடு அவ்வாறன்றி அறச்சிறிதாகலானுமென்பது.

அல்லதூஉம் மூக்கணி பின்னையது பிறர்க்குப் புலனாகாது. அதனகத்தே காந்துடைமையின் அதுபற்றி அது, தன்னை யணிந் தாரை யழகு செய்யுமாறின்மையானும் அன்ன பிறவாற்றானு மென்பது, ஆகலான் அம்மூக்கணியுட் பின்னையது முன்னையது நிற்றற்பற்றுக் கோடாதன் மாத்திரையே பிறிதன்றெனக் கொள்க.

(தொடரும்)

# சைவ சமயத்தின் தற்கால நிலை

[எஸ். சச்சிதாநந்தம் பிள்ளை B.A. L.T.]

"பண்டேமிக நான்செய்த பாக்கியத்தாற்
பரஞ்சோதி நின்னாமம் பயிலப்பெற்றேன்" (சுந்தரர்)

"ஞாலநின் புகழே மிகவேண்டும் தென்
னாலவாயி லுறையுமெம் மாதியே" (சம்பந்தர்)

சிவ சம்பந்தமே 'சைவம்' என்னப்படும். இதை உணர்ந்து இன்புறுதற்கு நன்கமைக்கப்பட்ட நெறியே சைவ சமயமாகும். இச்சமயத்தின் தற்கால நிலைமையை விளக்கிச் சைவ நன்மக்கள் செய்யவேண்டிய சமயக் கடமைகளிற் சிலவற்றை யவர்க்கு நினைப்பூட்டி, அவற்றை நிறைவேற்றும் வழிகளையுங் குறிப்பிடுதல் இந்தக் கட்டுரையின் நோக்கம். ஒரு சமயத்தின் நிலைமையை யாராயப்புகுவோர் அச் சமயமாகியநெறியின் இயல்பையும் அந்நெறியைப் பின்பற்றுஞ் சமயிகளையும் பற்றிப் பேசுதல் முறைமை. இதன்படி சைவ சமயத்தின் தத்துவக் கோட்பாடுகளையும், சமய அமைப்புகளையும், சமய ஒழுக்கங்களையும் எடுத்துக் காட்டுதல் நேரிதாம். எனினும் இடச்சுருக்கங் கருதி இப்பகுதிகளை விளக்க முயலாது, சைவத்தின் சிறப்புகள் சிலவற்றைமட்டுங் காட்டி மேற்செல்வாம்.

மக்கள் அறிவுணர் வாராய்ச்சிகட்குப் பொருளாயிருக்கக் கூடியனவெல்லாம் உலகு (=பாசம்), உயிர் (=பசு), கடவுள் (=பதி) என்னும் முப்பகுதியுளடங்கும். "பலகலை யாகம வேதம் யாவையினுங் கருத்துப் பதி பசு பாசந் தெரித்தல்" என்றபடி இம் முப்பொருளைப் பற்றியே எல்லா நூல்களும் ஆராயும். சைவ சமய நெறியானது தன்னை முற்றும் பின்பற்றினபேர்க்கு இம் முப்பொருளின் உண்மை இயல்பை உள்ளவாறு புலப்படுத்தும். 'நிற்பனவும் சரிப்பனவும் சைவமேயாம்நிலையை' இனிதுணர்த்தும். சிவனைச் சிவனோடொன்றுபடுத்தி உலப்பிலா ஆநந்தத் தழுத்தும். இந்நெறியை'நன்னெறி' யென்றும் 'சன்மார்க்கம்'

என்றும் 'அருணெறி' யென்றும் ஆன்றோர் கூறுவர். இப் பெரு நெறி தன்பால் வந்து கலக்கும் பல்வேறு கிளைநெறிகளை யுடையது. இக் கிளைநெறிகளில் நடப்போரும் முடிவில் தன்னையே வந்தடைவர். இக் கிளைநெறிகளே ஏனைச் சமயங்கள். எனவே, இச் சைவசமயமானது 'எல்லாச் சமயமுமா யல்லவாகி யாது சமயமும் வணங்கு மியல்பதாகி' யுள்ளது. 'இயல்பென்றுந் திரியாம'லுள்ளது. 'வாதமும் சமயபேதமுங் கடந்த மனோலய'த்தில் வாய்க்கும் மௌனத்தை முடியாகவும், அகச்சைவ முதலாகவுள்ள அளவில் சமயங்களைத் தன்னங்கங்களாகவுங் கொண்டு ராஜாங்கத்தில் அமர்ந்திருப்பது. இம் மதிப்புரை நம்முடையதன்று; தன்னிற் றன்னையறிந்து தலைப்பட்ட தாயுமானருடையதாகும். யாவர்க்கும் அருளைக் காட்டத் தக்கநெறி இதுவன்றி வேறில்லையென்று அச் சுவானுபூதிச் செல்வர் மேலுங் கட்டுரைக்கின்றார்.*

பரந்தவித் தன்மைக் கேற்றவாறே இச்சமய ஆசாரியர் தொகையு மமைந்துள்ளது: சுமார்த்தம், வைணவம், மாத்துவம், புத்தம், மகம்மதியம், கிறித்துவம் முதலிய மதங்களில் மத குரு ஒவ்வொருவரேயா யிருப்பவும், சைவத்திற் காசாரியர் நால்வரா யுள்ளார். ஏன்? சமயங்க ளொவ்வொன்றும் தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்னும் நான்கு பாகுபாடுகளில் யாதானு மொன்றி லொடுங்கும். வைதிக சைவமோ நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காணத் தன்னுளகப் படுத்து நிற்கும் பெற்றியது. ஆதலின் இதற்கு நான்காசாரிய ரமைந்தது சாலப் பொருந்த முடைத்தே. சிவஞானிகளாகிய

---

*அந்தோவீ ததிசய மிச்சமயம் போலின்
றறிஞரெல்லா நடுவறிய வணிமாவாதி
வந்தாடித் திரிபவர்க்கும் பேசாமோனம்
வைத்திருந்த மாதவர்க்கு மற்று மற்று
யிந்த்ராதி போகநலம் பெற்றபேர்க்கு
மிதுவன்றித் தாயகம் வேறில்லை யில்லை
சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத்
தக்கநெறி யிந்நெறியே தான்சன் மார்க்கம்.

இந்நால்வரும் உலகுய்தற் பொருட்டு முறையே ஒவ்வொரு மார்க்கத்தை ஆசரித்துக் காட்டியருளினர்.

இத் திருவருட் செல்வர்கள் விளக்கியருளிய சைவ நல்வழி, தன் பொதுத் தன்மையில், இன்ன காலத்திற்குரிய தென்ருவது இன்ன நாட்டிற்குரிய தென்ருவது இன்ன மொழிக்குரிய தென்ருவது வரையறுக்க வொண்ணுதது. பொது வகையில் எந்நாட்டிற்கு மிறைமை பூணு மிச்சமயம் சிறப்பு வகையில் நந்நாட்டில் விளங்குவ தொன்ரும். இத் தென்னுட்டிலும் இஃது 'சாதிகுலம் பிறப்பென்னுந் தடுமாற்ற'த்தைத் தவிர்க்க வல்லது. "எந்நிலையில் நின்ருலும் எவ்வேடம் கொண்டாலும், மன்னிய சீர்ச் சங்கரன் ருள்மறவாமை பொருள்" என்று மக்கட்குணர்த்த வல்லது. திருநீறு, கண்டிகை, திருவைந்தெழுத்து என்னு மரிய சாதனங்களை இந்நாட்டிற் கருளியது. இயற்கையுண்மைவிளக்கம் பொருந்தியது. அறிவனுபவங்கட் கொத்தது. மக்கள் தம் அன்ருட வாழ்க்கையில் அனுட்டித்தற் கேற்றது. அன்பைத் தன்னுயிராக வுடையது. அறிவைப் பாசஞானம், பசு ஞானம், பதிஞானமெனப் பாகுபடுத்திப் பதிஞானமே மெய்யறிவென் றுணர்த்தி அதை நாமடைதற் குதவிசெய்வது. தன்வழிச் சென்று பேறுபெற்ற பெரியார் சரிதங்களிற் பலவற்றையும் அவ ரருள் மொழிகளையும் ஆண்டவன் அவர் பொருட்டுச் செய்த அருள் விளையாட்டுக்களையும் எடுத்துரைக்கும் பல நன்னூல் களைத் தமிழிலும் ஆரியத்திலும் படைத்து விளங்குவது. பொருள் செறிந்த குறிகளையும் அடையாளங்களையும் கோவில்களையும் குறைவறப் படைத்தது. இந்தியாவிற் பல்லாயிர ஆண்டுகளாய் நின்று நிலவி வருவது. *இன்னோன்ன அளப்பருஞ் சிறப்பு வாய்ந்தது இச்சமயம் என்று கண்டன்ருே, "சைவமாஞ் சம யஞ் சாரும் ஊழ்பெறல் அரிது" என்று அருணந்திசிவம் அருளிச் செய்தது?

---

* ஆரிய மக்கள் இந்தியாவிற்குவரு முன்னரும், இராமாயண பாரத காலங்களிலும் சிவவழிபாடே இந்நாட்டின் சிறந்த வழிபாடா யிருந்ததென் றறிஞர் தெரிவிக்கின்றனர். இந்துக்களனைவரு மிக

ஆனல், அந்தோ! சைவ சமயத்திற் பிறக்கும் நல்லூழ் படைத்தோரிற்பலர் இந்நாளில் தஞ் சமய இயல்பை யுணராதும் உணர முயலாதும் வீணே கெடுகின்றனர். இவருட் சிலர் நாத்திகம் பேசி நாத்தழும் பேறுகின்றனர். பலர் பேச்சில் நாத்திகரல்லராயினும், ஒழுக்கத்தில் நாத்திகரேயாய் நழுவுகின்றூர்கள். வேறு சிலர் சைவ மெய்ச்சமரசம் இன்னதென்றுணரமாட்டாது போலிச் சமரசம்பேசிப் பொழுதை யோட்டுகின்றனர்.

இவர்களால் விளையுங் கேடு பெரிதாதலால், இவர்கள் கோட்பாட்டைச் சிறிது ஆராய்தல் மிகையாகாது. எல்லாச் சமயங்களும் இறைவனை நோக்கிச் செல்லும்வழிகளேயென்று சைவம் ஒத்துக் கொள்ளுகின்றது. ஒவ்வொரு சமயத்திலும் உண்மைப் பகுதியுண்டென்று அதைத் தழுவிக் கொள்ளுகின்றது. மக்கள் பல்வேறு பக்குவ நிலையிலுள்ளாராதலின், அவ்வவர் தகுதிக் கேற்பப் பல்வேறு சமயங்களுந் தேவைதானென்றுங் கூறுகின்றது. இப்படி எல்லாச் சமயத்திலும் சைவம் ஊடுருவி நிற்கும் ஒற்றுமைச் சுவையைச் சமரச மென்பதொன்று. இதை விடுத்து, எல்லாச் சமயங்களும் சிறப்பிலும் பயனிலும் ஒரே அளவின என்று கொள்ளல் பிறிதொன்று. இங்ஙனங் கூறுவது, ஒரு பெருநெறிக்கும் அதைப் பல்வேறிடங்களில் வந்து கலக்கும் கிளை

---

வுயர்ந்தன வென்று தேர்ந்தெடுத்து யாத்திரை செய்யும் இரண்டு தலங்களும் (காசி, இராமேச்சுரம்) சிவ தலங்களாயிருத்தலை யுய்த்துணர்க. அன்றியும் கீழ்க் காட்டப்படுவன போன்ற கருத்துக்களைச் சரிதநூல் வல்லார் ஆதாரங்களோடு காட்டி நாட்டிவருவதையும் கவனிக்க.

" The worship of Siva comes down at least from neolithic times, i-e 20,000 years ago....................The spade is slowly bringing up evidence to prove that India had developed a great civilisation before Vedic culture began in the Indo-Gangetic valley. Traces of this ancient civilisation can be discovered only in the Tamil language and in Tamil institutions. Siva belongs to this earliest stratum of Indian culture. No satisfactory derivation of His name can be urnished by Sanskrit philosophy."--P. T. Srinivasa Aiyengar.

நெறிகட்குமுள்ள தொடர்பையும், அவயவிக்கும் அவயவங்கட்கு முள்ள சார்பையும், தசாங்கங்கட்கும் அவற்றைப் படைத்துள்ள அரசனுக்கு முள்ள சம்பந்தத்தையும் நறுமலருக்கும் அத னுறுப்புகட்குமுள்ள ஒற்றுமை நயத்தையும் உணராது பேசு வோர் கூற்றும். ஒரு பள்ளியில் வாசிப்போ ரெல்லாரும் மாண

---

இவ்வழிபாடு 20,000 ஆண்டுகட்கு முன்னமே புதுக்கற்காலம் என்று மேலை நாட்டாரால் கூறப்படுங் காலந் தொடங்கியே நிகழ்ந்து வருகின்றது. நிலத்தின் கீழுள்ளவற்றைத் தோண்டி யாராய்ச்சி செய்யச் செய்ய கங்காநதி தீரத்தில் வேதப்பயிற்சி உண்டாவதற்கு முன்னேயே இந்தியாவில் ஒருபெரிய நாகரிகம் இருந்ததென்று தெரிகிறது. இந்தப் பழமையான நாகரிகத்தின் கூறுபாடுகள் தமிழ்மொழியிலும் தமிழர் ஏற்பாடுகளிலுமே கண்டுபிடிக்கத் தக்கனவாயிருக்கின்றன. இத்தகைய மிக்க பழைய நாகரிகத்தின் அடிப்படைக்கண்ணே 'சிவ வழிபாடு' தொடங்கியதாகும். சிவம் என்னும் பெயர்க்கு தக்க சொன்மூலம் வட மொழித் தத்துவ சாத்திரத்துட் கிடையாது.

"In any case, Dravidian civilisation was predominant in India before the coming of the Aryans. Many of the Dravidian peoples now speak Aryan or other languages, not originally their own, but they still retain their own languages and their own characteristics and several customs in the South and in certain hilly tracts of Central India; and there can be no doubt that they have very greatly influenced Aryan civilisation and Aryan religion in the North"—Prof. Rapson's "Ancient India."

எவ்வாறாயினும் திராவிட நாகரிகம் ஆரியர் வருவதற்கு முன்னேயே இந்தியாவில் சிறப்புற்றோங்கி யிருந்தது. திராவிட மக்களுட் பல பிரி வினர் தங்களுடையதல்லாத ஆரிய முதலிய ஏனை மொழிகளை இப் போது பேசுகின்றார்கள். எனினும் தங்களுடைய சொந்த மொழி களையும் தங்கள் சிறப்பியல்களையும் சில வழக்கங்களையும் தென்னாட்டி னும் மத்திய இந்தியாவில் சில மலைப்பகுதிகளிலும் உள்ளவர்கள் இன் னும் விட்டுவிடாம லிருக்கின்றார்கள். இவைகள் வடக்கேயுள்ள ஆரிய நாகரிகத்தையும் ஆரிய மதத்தையும் பெரிதுங் கலந்து உருவாக்கி யிருக்கின்றன என்பதற்கு ஐயமில்லை.

வர்களே. ஒரு தாய் வயிற்றிற் பிறந்தா ரனைவரும் சோதரர் களே. ஆயினும் இவருள் அறிவனுபவ முதிர்ச்சியில் ஏற்றத் தாழ்வுண்டு. இவ்வேற்றுமை அரும்பு மலர் காய் கனிகளிடையே காணப்படுவது போன்றதொன்று. இதை நோக்காது யாவும் சமம் என்று பேசுதல் தவறே. இத்தவறை யுணராமையாற்றான் சைவரிற் சிலர் இன்று மாதேவனையும் நாளைக்கு மற்றைத் தேவ ரையும் வழிபடுகின்றார்கள். இவர்கள் சமரச நோக்கில் கறை மிடற்றண்ணலு மொன்றே, காடன் மாடனுமொன்றே. இவர் கள், தமக்கு ஒரு நோய்வரின் முருகனுக்குப் பிரார்த்தனை செய் வர். இன்னொன் றுறின் 'எடு கங்கணம் ஏழு மலையானுக்கு' என்பர். பிறிதொன்று தோன்றின் தம்மதங் கூறும் எல்லாச் சாமியும் விட்டு அல்லாச்சாமிக்குப் பாத்தியா பண்ணுவர். 'பட்சி தோஷம் தாங்கியது, பள்ளி வாசலுக்குப் போவோம்' என்று இவர் வீட்டுமாதர் தம் பச்சிளங் குழவிகளைத் தாங்கிக்கொண்டு மசூதிப்படியில் காத்திருப்பர். இது கோழைச் சமரசம்; கொள் ளுஞ் சமரசமன்று. அகந்தைக் கிழங்கை அகழ்ந் தெடுத் தெறிந்து ஆண்டவனுக்கு ஆன்மநிவேதனம் பண்ணலும், ஆடு கோழிகளை வதைத்து, அப்பனே! என் குறை நீக்குதிர் என்ன லும் ஒன்றுமாறில்லை, சமயாதீத ஞானங் கைகூடி நிட்டையி லொடுங்கும் வரையில் ஒவ்வொருவரும் தத்தமக் கேற்றதொரு சமயநெறியைப் பின்பற்றி யதன் வழியே செல்லுதல்வேண்டும். மூர்த்தி வழிபாடு வேண்டப்படும் வரையில் தன் சமயமே கூறும் பல மூர்த்திகளுள்ளும் யாதானு மொன்றையே பற்றிநிற்றல் வேண்டும். இன்றேல், சகளோபாசனைப் பயன்கிட்டாது. பிற மூர்த்தியின்பெயரு முருவமும் புலப்பட்ட விடத்தும், அவற் றைத் தான் வழிபடு மூர்த்திக்கு உரியனவாகவே கொண்டு வணங்குதல் முறைமை. சமயகுரவர் நால்வரும் அருணகிரிநாத ரும் மூர்த்திநிலை பேசுங்கால், தத்தமக்கு வெளிப்பட்டருளிய சிவமூர்த்தமெதுவோ, அதையே பெரிதும் போற்றிப் புகழ்ந் திருத்தல் கருதற்பாலது. இப்படி ஒருவன் தான் வழிபடு மூர்த் தியினிடத்து வைக்கும் பற்றுக்காரணமாகப் பிற மூர்த்திகளையும் அவரை வணங்குவோரையும் பகைத்தலும் வெறுத்தலும் தன்

பால் தோன்றாதபடி தனைக் காத்துக்கொள்ளவேண்டும் ; பொது வகையில் அவர்களிடத்தும் அன்பையே பெருக்கவேண்டும்.

தமக்கென வொன்றிலாராய்ச் சமய ஒழுக்க மாறுதல் செல்வோர் செயல் தவறுதல் போலவே, அவர்க் கெதிர்நிலையில் நின்று சில விரிவிலா அறிவினர்கள் வேறொரு சமயம் என்ற அளவில் சிறிவீழ்தலும் தவறுடைத்தாம். எங்கெங்கு அன்பும் அருளும் காணப்படுகின்றதோ, அங்கங் கெல்லாம் சைவமே யுளதென்று மதிக்க வேண்டும். * சமயப் பொறையைப் போதித்தருளிய சமயகுரவரே சமணபுத்தங்களைக் கண்டிக்கவில்லையோ என்னின் கூறுவாம் : அவர்கள் காலத்தில் அச்சமயிகள் தந்நிலையினின்றும்

---

* அப்பர்:—

(க) "விரிவிலா அறிவினர்கள் வேறொருசமயஞ்செய்தே
　　எரிவினாற் சொன்னாரேனும் எம்பிரார்க்கேற்றதாகும்"

(உ) " வாது செய்து மயங்கு மனத்தராய்
　　ஏது சொல்லுவீ ராகிலு மேழைகாள்
　　யாதோர் தேவரெனப் படுவார்க் கெலாம்
　　மாதேவன் னலால் தேவர்மற் றில்லையே"

(ங) ஆறொன் றியசமயங்களி னவ்வவர்க் கப்பொருள்கள்,
　　வேறொன் றிலாதன...இன்னம்பரான்ற னிணையடியே."

(ச)"ஆறு சமயத் தவரவரைத் தேற்றுந் தகையன
　　தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே யேற்றுந்தகையன
　　.........இன்னம்ப ரான்ற னிணையடியே"

சுந்தரர்:—

(ரு) "அறிவினன் மிக்க அறுவகைச் சமயத்து அவ்வவர்க்கே ஆருள்
　　புரிந்து"

(சு) "எத்தவத்தோர்க்கு மிலக்காய் நின்ற எம்பெருமான்"

(எ) "ஆட்பாலவர்க் கருளும் வண்ணமு மாதிமாண்பும்
　　கேட்பான்புகிலளவில்லை கிளக்கவேண்டா."　　(சம்பந்தர்)

'சலம்பூவோடுதூப மறந்தறியேன்' என்னும் அப்பர் தேவாரத் திருப்பாட்டின் உட்கருத்தும் உற்றுநோக்கற்பாலது.

பெரிதுந் திரிந்து அச் சமயக்கோட்பாடுகட்கு நேர்மாறுகத் தாமொழுகிக் கெட்டதோடு, பிறசமயிகளையும் அவர் நெறியில் நிற்கவொட்டாது கலைத்துக் கெடுத்தனர். அவரால் ஆத்திகசமயத்திற்குப் பெருங்கேடு விளைந்தது. அதனுல் அச்சமயங்களின் பரப்பை யடக்குதல் அவசியமென்று தோன்றியது. அப்போதும் இறைவன் திருவருட் சம்மதம் பெற்ற பின்னரே அப் புறச் சமயங்கள் அடக்கப்பட்டன என்பது அவ்வாசாரிய மூர்த்திகள் சரிதத்தா லறியக் கிடக்கின்றது.

போலிச்சமரசமும் பொருந்தாப்பற்றுசும்போல இன்னும் பல பிறழ்வுணர்ச்சிகளுஞ் சைவஜன சமூகத்திற் காணவுள்ளன. அவற்றுளொன்று தென்னுட்டில் வாழும் தமிழரில் ஒரு சாதியினர்மட்டுமே சைவரென்பது. இவ்வாறு பிறப்பாற் சைவம் பேசுவோர் தொகை இந்நாளில் அருகிவருகின்றது. இவர் கூற்றின் வலுவின்மையை விளக்கப் பேரியபுராண சரித்திரங்களே போதும். மற்றென்று புலாலுண்ணுமையை சைவமென்பது. அன்பின் வழித்தாய் அவ்வொழுக்க நிகழுமிடத்து அது சைவவொழுக்கமே என்று மிக மதிக்கப்படும். அன்பில்லாவிடத்து அது சைவமாய் விடாது. ஆகுமென்னின், ஆடு, மாடு, யானை, குதிரை முதலியவைகளும் பரம்பரைச் சைவர்களே யென்ன நேரிடும். தீக்கையும் கிரியையுமே சைவமென்று கூறவுங் கூடாது. சைவநெறியிற் செல்லுதற்கு உதவிசெய்யுஞ் சாதனங்களா யிவை அமைக்கப்பட்டன. அவ்வுதவியைச் செய்யுமளவுக்கேற்ப அவையும் இன்றியமையாதனவே. ஆனுல் அவை சாதனங்களேயன்றிச் சாத்தியங்களல்ல. பெரிய புராணத்து வரும் நாயன்மார்களில் எத்தனைபேர் சிவதீக்கை பெற்றதாகப் படிக்கின்றேம் என்று பார்த்தலும் நலமே. நம் நாட்டில் தொன்றுதொட்டுவரு மிச்சாதனங்களின் கருத்தை யுணர்ந்து, அவற்றைப் புறக்கணியாது இயன்ற அளவில் எற்றுக்கொள்ளுதல் கங்கடமை என்றுடம்படலாம். ஆனுல் அவற்றின் மதிப்பிற்கும் பயனுக்கும் ஓர் வரம்புண்டென்பதை மறக்க முடியாது. ஆண்டவனிடத்தும் ஆருயிரிடத்தும் அன்புகாட்டாத வன்னெஞ்சக் கள்வன், மனவலிய னெருவன், ஆசாரியாபிடேகம் பெற்றவனு

யிருப்பினும் சரியே, அநுட்டான விதிகளை வெகு அழகுபெறச் செய்பவனாயினுஞ் சரியே, சிவலிங்க பூசையை ஆகமவிதிப்படி செய்து காட்டுபவனாயினுஞ் சரியே, அவன் உண்மையிற் சைவனாகான். இத்தீக்கையும் கிரியையும் பூசையும் பொருந்தா திருப்பினும், பிறிதினைத் தன்னைப்போற் போற்று மியற்கையும் இறைவன் சேவடி மறவாச்சிந்தையும் படைத்துள வொருவன் உண்மைச் சைவனே யாவன். அகவொழுக்கமும் புறவொழுக்கமும் ஒத்தமைந்திருப்பின், அது பெரும் பேறேயாம்.

இவ்வாறு சைவசமயத்தினைக் குறித்துப் பல்வேறு திரிபுணர்ச்சிகள் இந்நாளிற் காணப்படுதலில் வியப்புமில்லை. ஏனெனில், சைவ சமூகமானது இப்போது 'ஆள்வாரிலி மாடாவேனோ!' என்றிரங்கவேண்டிய நிலையிலிருக்கின்றது ; மேய்ப்பாரில்லா ஆடுகள்போல் அலக்கணுறுகின்றது. இதனால் திருநீற்றினொளி விளக்கம் புறத்தும் அகத்தும் குன்றி வருகின்றது. பிறசமயக் கோட்பாடுகட்கும் தம் மதக்கோட்பாடுகட்கும் வேற்றுமை தெரிவிப்பா ரில்லாமையால் சைவசமயிகள் பிறசமயக் குருக்களைத் தங்கள் குருக்களாகக் கொண்டு அவர் சொல்வழி நடந்து வருகின்றனர். தஞ்சமய குருக்களை மேம்படுத்துகின்றிலர். பிறசமய நூல்களைப் பேணிக் கற்கின்றனர். தஞ்சமய நூல்களைக் கற்கின்றிலர். தந் தாய்மொழியாந் தமிழ்மொழியைத் தானும் போற்றுகின்றிலர். அவர் முகத்தில் இன்றைக்கு விபூதியும் நாளைக்கு நாமமும் அடுத்தநாள் சூனியமுங் காணலாம். நீர்க்குட்பாசிபோல் எங்கெறியினும்வேர்க்கொள்ளாது சைவசமூகம்தவிக்கு நிலையிலுள்ளது. இந்நிலையில் நல்லொழுக்க வேரை யறுத்து, ஆண்டவன் செய்யு நன்றியை மறந்து அகந்தை பேசி, நாம் பிரமமென்று எட்டிற்கண்டு இதயத்திற் காணாச் சாம்பிரமங் கூறும் சதுர வுரைகள் பலர்க்குச் சத்தியமாய்த் தோன்றுகின்றன. அந்தோ ! சாதன சதுட்டயங்கள் வாயினிலன்றி வாழ்க்கையில் வரப்பெறாப் போலிஞானிகள் கையில் தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களும் சிவோகம்பாவனை முதலிய சாதனைகளும் அகப்பட்டுக் கொண்டு திகைக்கின்றன. இவைகள் எச்சமயத்து எப்பொருளில் யாரால் யாருக் குணர்த்தப்பட்டன வென்றுணராதா

றெல்லாம் சொல்வோன், கேட்போன் தன்மை நோக்காது இவற்றை எங்கும் பேசித்திரிய இக்கால மிடந்தருவது வருந்தத் தக்கதே. "குருடுங் குருடுங் குருட்டாட்டமாடிக் குருடுங் குருடுங் குழிவீழ்ந்தவாறே" என்று திருமூலர் அருளிச்செய்திருப் பதை இவர்கள் செயல் நினைப்பூட்டுகின்றது.

இவ்வாறெல்லாம் சைவர் தஞ் சமயநெறியினின்றும் வில கினமையால் சைவ அமைப்புகளான கோயில்களும் மடங்களும் பல்வகைக் குறைவுகட் குறைவிடமாகி விட்டன. கூற்றுதைத் தான் திருக்கோயில்கள் பலவற்றில் ஆகமஞ் சாற்றிய பூசைகள் தப்பிப்போயின. பல இடங்களில் தருமகருத்தர்களும் குருக் கண்மாருங் கூடித் தம் மனம்போன போக்கில் நித்தியநைமித்திய முறைகளை மாற்றிவிடுகின்றனர். பாடல்பெற்ற பெரிய சிவத்தல மொன்றில் கோயிலதிகாரிகள் சந்திரசேகரரைப் பள்ளிகொள்ள வைத்து, ஓர் அம்மனைத் தலைமாட்டிலும் மற்ருேர் அம்மனைக் கால் மாட்டிலும் இருத்திப் பல்லக்கு உற்சவம் பண்ணி வருகிருர்கள். உமையம்மையை உறங்கும் அம்மை யாக்கவும் மயிலேறும் பெரு மானைப் பாம்பேறும் பெருமாள் (காளிங்க நர்த்தன கிருஷ்ணன்) ஆக்கவும் வல்ல அருச்சகர்களும் அதிகாரிகளும் இப்போது அநேகம் பேரிருக்கிருர்கள். இளமை தங்கிய விலைமாதொருத்தி உடுப்பன வுடுத்துப் புனைவன புனைந்து ஒரு பிரமோற்சவத்தில் சிவசந்நிதியில் நின்று நிலையாமைகூறி நந்தன்சரித்திரப் பிரசங்கஞ் செய்தனள்! இவைபோன்ற திருக்கோயிலிழிவுகள் எத்தனையோ வுள. இவற்றைத் துணிந்து கண்டிக்கும் ஆண்மை பலர்க் கிருப்ப தாகத் தெரியவில்லை. இவ் இழிநிலைசேர்வதில் கோயில்களோடு மடங்களும் போட்டிபோட்டு நிற்கின்றன. இவற்றின் நிலைமையை விரித்துரைக்க இடமில்லை. "செய்தக்க வல்ல செயக் கெடும் செய்தக்க, செய்யாமை யானுங் கெடும்" என்னும் பொய்யா மொழிக்கு இவை ஏற்ற எடுத்துக் காட்டுகளாய் விட்டன என்று குறித்தலே சாலும். இங்ஙனங் கோயிலும் மடமுஞ் சீர்கெட் டதுபோலவே சிவவேடமு மாசுண்டது. வேடநெறிநில்லார் வேடம் பூண்கின்றனர். ஞானச் சோம்பர்கட்குப் பதில் ஊனச் சோம்பர்கள் பல்கிவிட்டனர். பஞ்சத்தாண்டிகள், பரம்பரை

யாண்டிகள், உழைத்துண்ண மனமில்லார், ஊருடன் பகைத்தோர், வீட்டில் சண்டையிட்டோர், வெளித்திரியும் வேட்கையோர் முதலியபேரெல்லாம் அடியார் வேடந்தாங்கி யுழலுதலால், திருவேடங்கட்கே ஒரு வகையில் மதிப்புக் குன்றிவிட்டது.

சைவர்க்குச் சமய ஞானமும் சமய ஒழுக்கமும் சமய அமைப்புகளும் நிலைதிரிந்து போனமையால், அவர்கட்குள் ஒற்றுமை யுணர்ச்சியும் அன்பொழுக்கமும் பெருங்கொள்கையும் ஆற்றலும் குன்றிப்போயின. போகவே, சைவரிற்பலர் தாம் பழகு மதத்தினர் பழக்க வொழுக்கங்களைக் கைக்கொள்ளுகின்றனர். ஆங்கிலக் கல்வி கற்கும் சைவகுல மாணவ மாணுக்கியரிற் பெரும்பாலோர் நாத்திகராகவோ அல்லது கிறித்துவராகவோ மாறுகின்றனர். இவருள் வெளிப்படையாய்ப் புறமதம்போவோர் தொகை சிறிதாயிருப்பினும் தம் மதத்தில் வெறுப்பும் புறமதத்தில் விருப்புங் கொண்டுள்ளோர் தொகை நாளுக்குநாள் பெருகியே வருகின்றது.

இங்கு நந்தன் மரபினராம் நம் எளிய சகோதரரையும் நங்கணக்கிற் சேர்த்துப்பார்க்கவேண்டும். இவர்களெல்லோரும்—அல்லது பெரும்பான்மையோர்—தொன்றுதொட்டே திருநீறணியும் பேறுபெற்றவர்கள். தம் வாழ்க்கை நிலைமைக்கேற்பச் சிவனையுஞ் சத்தியையும் வழிபடுஞ் சிறு தெய்வங்களைச் கும்பிடுவார்கள். இவரையும் சைவசமயிகளின் தொகையிற் சேர்த்தெண்ணுதலே முறைமை. இவர்கள் சமய நிலைமை எவ்வாறுள்ளது? இதைக் கேட்குஞ் சைவரெங்குள்ளார்? இவ் எளிய சகோதரின் உழைப்பை மட்டும் உறிஞ்சக்கற்று, அவர் உயிர் நலத்துக் கொன்றுஞ் செய்யாது போன பாவமுதிர்ச்சியாலன்றோ இயற்கை வளஞ் செறிந்த இந்நாடு எழிலெல்லா மிழந்து 'அவலம், கவலை, கையாறு, அழுங்கல், தவலாவுள்ளம் தன்பாலுடைய' தாயிற்று. சைவரைப்போலன்றிக் கிறித்துவர்கள் இவ் எளியாரிடத்து அன்பும் அருளும் செய்கையிற் காட்டி வருகின்றார்கள். சைவ மதத்தலிருத்தலால் இம்மை மறுமை இரண்டுக்கும் வழியற்றுக் கிடக்கும் இவ் ஏழைகள் இம்மை நலமேனு மெய்துவான்

வேண்டிப் புறமதம் புகுந்து விடுகின்றனர். இப்படிச் சைவசம யத்தை விட்டுப்போகிறவர் தொகை இலக்கக் கணக்கிலுள்ளது. கிறித்துவ மதத்திற்கு ஆள் திரட்டி யனுப்புவதில் இத் தென்னடு தான் தலைமை பூண்டிருக்கிறது ! என்னே விந்தை ! நாயன்மார் களும், ஆழ்வார்களும், நீலகண்டர், சங்கரர், இராமானுஜர், மத்து வர் முதலிய பாடியகர்த்தர்களும் எங்கள் தென்னட்டிலன்றே தோன்றி விளங்கினர் என்று பெருமை பேசுவோர் இச்சிறு மையை யுணரின் வருந்தி வெட்கித் தலைகுனியா தென்செய்வர் ?

இதுவரையில் சைவசமயிகளது தற்காலநிலைமையை யொரு வாறு விளக்கினேம். இனிச் சைவமக்கள் செய்யக்கடவதென்ன வென்று பார்ப்போம். 'மண்டெரி—தான்வாய்மடுப்பினும் மாசு ணங் கண்டுயில்வ, பேரா பெருமூச் செறிந்து" என்றதற் கினி மேலு மிலக்கியமாயிருத்தல் தகுமோ ? தஞ்சமய வொழுக்கமும் அமைப்பும் தங்கள் முன்னர்ப் பொன்றிவரக்கண்டும், தஞ்சமயக் கடமைகளைச் செய்ய முற்படாது வறிதே தாணியி லிருத்தல் முறையோ? இது தருமந்தானே? அன்று, அன்று; தாமடைந்து விட்ட தாழ்மையை முற்றிலு முணராமையினலேயே சைவர்கள் இங்ஙனமிருந்து வந்துள்ளார்கள். ஆகவே தஞ்சமயப் பெருமை யையும் தங்கள் சிறுமையையும் செவ்விதினுணர்தலே அவர்கள் செய்யவேண்டிய முதற்கடமை. இவ்வுணர்ச்சி முறுகி எழவே, அவர்கள் தங்கள் சமயக் கடமைகளைச் செய்யத் தலைப்படுவரென் பது திண்ணம். இங்ஙனம் சில நல்லோர் இப்போது முற்போந்து முள்ளார்கள்.

சமய வுணர்ச்சி சிலர்மட்டும் விரும்பக்கூடிய அலங்காரப் பொருளன்று; மக்களை விலங்கினின்று பிரித்துத் தெய்வமாக்கு தற்கு இன்றியமையாது வேண்டப்படும் ஓர் சத்தியாம் அது. எக் காலத்தினும்பார்க்க இக்காலத்தில் இச்சத்தியி னுதவி பெரிதும் வேண்டி யிருக்கிறது. ஏனெனில், இந்நாளில் உலகஞ் செல்லும் போக்கு பேரச்சத்தையும் கவற்சியையும் தருமியல்பினது. சில் லாண்டுகட்கு முன்பு முடிவுற்ற ஐரோப்பியப் பெரும்போரோடு உலகிற் சமரந் தொலைந்து நிலைத்த சமாதான மேற்பட்டுவிடு

மென்று பலர் நம்பினர். இப்போது அவ்வெண்ணம் பகற்கன வாய் விட்டதென்று அறிவின்மிக்கார் பலர் கருதுகின்றார்கள். நொடிப் பொழுதில் நூறு, ஆயிரமாக மக்களை நூக்க வல்ல நச்சு மருந்துகளும் காற்றுக்களும் கருவிகளும் கண்டுபிடிக்கப் பட்டுள. இரண்டொரு நாடு நீங்கலாக மற்றெல்லா நாடுகளிலும், பல்வகைக் குழப்பங்கள் எற்பட்டுள்ளன. தேயங்களுக்குள் மனப்புழுக்கம், பகைமை, அழுக்காறு, அவா முதலிய தீமைகள் வளர்ந்து வருகின்றன. இப்பொல்லாங்குகள் மீண்டும் ஓர் போரை மூட்டிவிடுமாயின் மக்கட் கூட்டத்தில் ஓர் பெரும் பகுதி மடிந்து போவது திண்ணம். இப்பெருங் கேட்டைத் தவிர்க்கவல்லது சமய சக்தியொன்றே. சர்வ தேச சங்கங் கண்டு உலகிற் சமரை யொழித்துவிடப் பேராவல் கொண்ட பெரியாராம் ஆசிரியர் **வில்சனும்**, இராசதந்திர நிபுணராம் **லாயிட் ஜார்ஜும்** மற்றும் பல மதிவல்லாரும் இதே கருத்தை வெளியிட்டிருக்கிறார்கள்.

ஆகவே, ஒவ்வொரு சமயத்தாரும் தஞ் சமயமாகிய ஆற்றில் ஊற்றுக்குழி தோண்டி அன்பு நீரைப் பெருக்கி, அதனால் உலகில் வளர்ந்துவரும் ஆசுர குண நெருப்பை அவிக்கப் பெரு முயற்சி செய்யவேண்டும். இத்தொண்டு சைவர்க்கு முரியதே. இதைப் படிக்கு மொருவர், 'உரியதாகலாம்; ஆனால் மிகப் பழையதாகிய இச்சமயம் இவ்விருபதாம் நூற்றாண்டிற்குப் பயன்படுமோ? அன்றியும் பிறநாட்டுத் தீமைகளைப் போக்க ஒரு நாட்டின் மூலையிலுள்ள சைவர்க்கு ஆற்றலேது?' என்று ஐயுறுதல் கூடும். ஐயுற வேண்டா ஒன்றும். சைவசமயங் கூறுங் கடவுள் 'முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருள்;' 'பின்னைப் புதுமைக்கும் பேர்த்து மப்பெற்றியன்.' அதுபோன்றே அவன் வகுத்தருளிய சைவமும் முக்காலத்திலும் பயன்படும் மொய்ம்பு படைத்தது. இதைச் சிறிது புலப்படுத்தலாம். இந் நூற்றாண்டில் ஒரு சமயமானது மக்கள் வாழ்க்கையிற் கலந்து அதை எல்லாத் துறைகளிலும் பண்படுத்த வேண்டுமாயின், அது சில கொள்கைகளைப் பெரிதும் வற்புறுத்துவதாயிருக்க வேண்டும். அவை பின் வருமாறு:—(க) அன்பு வடிவாம் கடவுள் ஒருவரே யுண்டு; அவர் அதிபரிசுத்தர். (உ) அவரருளால் தோன்றிய ஆன்ம கோடிகள்

யாவரும் சகோதரர்கள். (ஙு) திருவருட் சம்மதத்தால் பிரபஞ்சம் ஒரு நியதிக்குட்பட்டே நடக்கின்றது. (ச) மக்கள் தனித்தும ஒன்று சேர்ந்தும் செய்யும் நன்மை தீமைகள் தத்தம் பயனைத் தந்தே தீரும். தீமையால் துன்பந் தேடிக்கொண்டது போலவே நன்மையால் இன்பந் தேடிக்கொள்ளலாம். (ரு) கடவுள் செய் நன்றியை மறவாது அவர்பால் அன்பு செலுத்தவேண்டும். (சு) இடவேற்றுமை, மொழிவேற்றுமை, நிறவேற்றுமை, சமயவேற்றுமை கருதாது மன்னுயிர்க்கு உற்றதுன்பந் துடைக்கவேண்டும்.

இவற்றைக் கூறும் சைவத் திருவாளர்கள் திருவாக்கிற் சில பின்வருமாறு:—* (க) "அன்பே சிவம்;" "இமையளவு முபகார மல்லால்வேறொன்றியக்கா நிர்க்குணக்கடலா யிருந்தவொன்றே" "நன்றுடையானை தீயதில்லானை"; "கோதிலா அமுதே! ஈறி லாக் குணப் பெருங் குன்றே!" (உ) "அம்மை யப்பரே யுலகுக்கு அம்மை யப்பர் என்றறிக"; "உரை சேரும் எண்பத்து நான்கு நூறுயிரமாம் யோனிபேதம், நிரைசேரப்படைத்தவற்றின் உயிர்க் குயிராய் அங்கங்கே நின்றான்" (ஙு) "தன்னருள் வெளிக்குளே யகிலாண்ட கோடியெல்லாந் தங்கும்படிக் கிச்சைவைத் துயிர்க் குயிராய்த் தழைத்தது," "ஆர்த்த பிறவித் துயர்கெட நாமார்த் தாடுந் தீர்த்தன் நற்றில்லைச் சிற்றம்பலத்தே தீயாடுங் கூத்தன் இவ்வானும் குவலயமும் எல்லோமும் காத்தும் படைத்தும் கரந் தும் விளையாடி" (ச) "என்னுலறியாப் பதந் தந்தாய் யானதறி யாதே கெட்டேன்." "தாமே தமக்குச் சுற்றமும் தாமே தமக்கு விதிவகையும்" (ரு) "வந்தித்து நின்னை மறவாக்கடனாகச் சிந்திக்க நின்னதருள் செய்யாய் பராபரமே"; "குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாநின் குரைகழற்கே கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே." (சு) "நான் பெற்ற வின்பம் பெறுக இவ்வைய கம்"; "எவ்வுயிரு நீங்காதுறையும் இறை சிவனென்று எவ்வுயிர்க் கும் அன்பாயிரு" "எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணியிரங்

---

* இவையனைத்தும் சைவத்திற்குப் புதியனவல்ல; நன்கு வற்புறுத் தப்பட்டுள்ள அடிப்படையான பழைய கோட்பாடுகளே. சைவ நூல் களிற் சிறிது பயிற்சியுடையாரும் இவற்றை யறிவர்.

கவுநின் தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே"—இவை போல்வன பலவுள.

இந்நாளிற் பெரிதும் வற்புறுத்தப் படுவது மன்னுயிர்க் கிதஞ் செய்தலொன்றே. இஃதில்வழிச் சைவமே யில்லை. ஆயின், பண்டைச் சைவப் பெரியார் சரிதங்களில் ஐக்கிய நாணய சங்கங் களும் தொழிலாளர் சங்கங்களும், இராப் பாடசாலைகளும், பகற் பாடசாலைகளும், புத்தகசாலைகளும், வாசக சாலைகளும், சீர்திருத் தச் சங்கங்களும், தருமவைத்தியசாலைகளும், வெள்ளக் கஷ்ட நிவாரண நிதிகளும் கஞ்சித்தொட்டிகளும் இவை போன்ற நவீன ஏற்பாடுகளும் குறிக்கப் பெறவில்லையே. அவர் மன்னுயிர்க்குத் தொண்டு செய்தாரென்று கொள்ளுதல் எப்படி என்று ஒரு கேள்வி பிறக்கலாம். அவர்கள் காலத்தில் இந்நாடு தற்காலத்தி லுள்ளதுபோலப் பிறநாடுகளோடு மிக நெருங்கிய தொடர்புடை யதா யிருந்ததில்லை. அவர்கள் காலத்தில் இந்நாட்டு மக்கள் உண்டிக்கும் உடைக்கும் திண்டாடினதில்லை. பஞ்சமும் பிணியும் பரவியிருந்ததில்லை. மக்கள்பால் "நோயின்று நோக்கு விளங்" கிற்று. கொள்வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங் குறை படாது" வாணிபம் நடந்தது. பெருமழை மழையின்மை முதலிய கேடுகள் மலிந்திருந்ததாகத் தெரியவில்லை. இங்ஙனம் இம்மை வாழ்க்கைக்கு வசதிகள் குறைவற விருந்தமையால் இவற்றைப் பற்றிக் கவலை கொள்ள அந்நாளில் காரணமில்லா திருந்தது. அம்மைக்குரிய சமயமும் நல்லொழுக்கமும் பெரியோராற் பாது காக்கப்படவேண்டி நின்றன. ஆகவே சமய விளக்கங் கெடாத படி அவ்வக்காலத்திற் செய்யவேண்டியிருந்த சமயத் தொண்டுக ளையே செய்தார்கள். இப்போது அம்மை வாழ்க்கைக் குரியனவும் இம்மை வாழ்க்கைக் குரியனவுமாகிய இரண்டுமே குன்றியுள்ளன. ஆகவே இரண்டு துறைகளிலும் தொண்டு செய்யவேண்டிய அவ சியந் தோன்றுகிறது. சைவசமயிக்கு இதில் முரண்பாடொன் றுந் தோன்ற ஞாயமில்லை. ஆகவே சைவ சமயம் இவ்விருபதாம் நூற்றாண்டிலும் பயன்தர வல்லதென்றே கொள்ளவேண்டும்.

இனிச் சைவம் பிறநாட்டுத் தீமைகளையுந் துடைக்கவல்ல தாமோ என்னும் வினாவிற்குச் சுருங்கிய விடை தருவாம்: இந்நாள்

வரையில் கடலும் மலையும் தேயங்களைத் தனித்தனியாய்ப் பிரித்து வைத்திருந்தன. இப்போதோ கடல் வழியாகவும் வான் வழியாகவும் போக்கு வரவு செய்தல் எளிதாய்விட்டது. ஒருவர் ஓரிடத்திற் பேசும் பேச்சைப் பல நூறு மைலுக் கப்புறமிருப் பாரும் இருந்த விடத்திருந்தே கேட்குமாறு செய்யுங் கருவிக ளேற்பட்டு விட்டன. கம்பியில்லாத் தந்திகளும் கணக்கிலாப் பத்திரிகைகளும் உலகின் கண்டங்களை அகண்ட நிலமாக்கி வரு கின்றன. இனிமேல் எந்த நாட்டாரும் பிறநாட்டார் தொடர் பின்றி யிருக்கமுடியாது. அவரவர் தத்தம் நாகரிகத்தில் கிடைத் துள்ள நல்லியல்புகளைப் பேணிப் பிறர்க்குத் தருதலும் பிறர் நாகரிகத்துக் காணும் நல்லியல்புகளை தாம் பெறுதலும் கடமை யாய் விட்டது. ஆகவே, சைவ நன் மக்களும் தஞ்சமயத்தின் சிறப்பியல்புகளிற் சாரமானவற்றை விடாது போற்றிப் பிறர்க்கு முணர்த்தலும் பிறர்பால் காணு நலங்களில் தம் முன்னேற்றத் திற்கு வேண்டுவனவற்றைத் தாம் கைக்கொள்ளலும் ஒழுங்கே யென்க. (தொடரும்)

---

## செல்வம்

'செல்வம்' (எனப்படுவது, 'பணம் பத்துவகை செய்யும், எனும் பழமொழிக்கேற்ப,) இவ்வுலகிலுள்ள வரையில் நமக்குப் பல நலங்களையும் கூட்டுவிப்பதாயினும், மறுமையில் நம்மைத் தொடர்ந்துவர வல்லதன்று; அறம் ஒன்றே மறுமையிற் பய னளிக்க வல்லது. ஆதலின், இருமையிலும், பெருமை விளைக்கும் அறமொன்றே, செல்வத்தாற் பெறத்தக்க பெரும்பேறு. இப் பெரும்பேற்றினை, இழந்து வாழ்வோர் நிலை பெரிதும் இரங்கற் பாலதேயாம். "ஓட்டோடு பற்றின்றி உலகைத்துறந்த செல்வ— **பட்டினத்தா**"ரும்.

"பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை பிறந்து மண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை இடைநடுவில்
குறிக்கும்இச் செல்வம் சிவன்தந்த தென்று கொடுக்கறியா
திறக்குங் குலாமருக் கென்சொல்லுகேன் கச்சி ஏகம்பனே."

என்று இக்கருமிகள்பால், கருணைமிகையால் இரங்குதல் காண்க.

# பதி பசு பாச விளக்கம்

(ஓர் கடிதம்)

[யாழ்ப்பாணம் திரு. க. சோமசுந்தரம்பிள்ளை]

(அசஎ-ம் பக்கத் தொடர்ச்சி)

### பசு மூவியல்பு

அந்தமன் னுயி ராணவம் ஆணவங் கன்மம்
முந்துமாணவங் கன்மமு மாயையு மென்றும்
பந்தவேறுபாட் டாலொரு முத்திறப் படுமால்
வந்தநாமமும் முத்திற மாகியே வழங்கும். (உஎ)

### விஞ்ஞானகலர்

வேறு

போற்றிடு சதாசிவர் புடையிற் சூழ்ந்தவர்
சாற்றிடு மேவல்செய் யெண்மர் தங்கிடு
மேற்றமார் மகேசனைச் சூழு மெண்மரு
மாற்றவிஞ் ஞானமார் கலர்க ளாவரே. (உஅ)

நோற்றிடு யோகினால் நுவல்சந் யாசத்தால்
ஏற்றிடு தீக்கையால் மாயை கன்மமும்
தோற்றிட வட்டுநற் சுத்த மாயையில்
ஏற்றிடு போகமுள் ளவரு மன்னரே. (உகூ)

### பிரளயாகலர்

மேவிய பிரளயா கலர் விளம்பிடி
லாவிக ளருள்சிவ வடிவ மானவர்
தாவிலாச் சதபதி னெட்டு ருத்திரர்
மூவரி லுயர்ந்தவ ராக முன்னுவர். (௩0)

### சகலர்

கண்ணனும் பிரமனுங் காயத் தாயிரங்
கண்ணனும் முதற்பல கடவுண் மக்களும்
எண்ணுறு சகலரென் றியம்பப் பட்டுளர்
நண்ணுறு பிறவிசேர் நாமு மன்னரே. (௩க)

மூவித மாயையின் முளைத்த முப்பது
மேவிய வாறென விளம்பு தத்துவம்
தாவிய யாக்கையை யெடுத்துத் தாரணி
ஒவிலாச் சுவர்க்கமுற் றுலைவ ரென்பரே. (௩௨)

நல்வினை தீவினை நயந்து செய்தவை
எல்லையி லனுபவ மெங்கு மீய்ந்திடச்
சொல்லிய நாலெழு வகையிற் ரோற்றமுற்
றல்லலை யடைந்தடைந் தலைவ ரென்பரே. (௩௩)

துய்யநல் வினையினுற் சுவர்க்க மேறியும்
வெய்யதீ வினையினல் நரக மேவியும்
பையவே கறங்கெனப் போய்ப் பயன்றுகர்ந்
தையகோ விவர்படு மவலமார் சொல்வார். (௩௪)

இங்ஙனம் பிறந்திறந் திளைக்கு நாளிலே
திங்களஞ் சடையனு ரருட்டிறத் தினுல்
பொங்கிய நல்வினைப் புணர்ப்பு வாய்த்திட
சங்கையில் விவேகமுந் தலைப்ப டும்மரோ. (௩௫)

வேறு

மங்குலின் மின்போல் நின்றுழி நில்லா மாய்கின்ற
இங்குள பொருள்கள் நிலையுள வல்லவென் றெண்ணி
மங்குத லில்லா நித்திய வஸ்துவெது வென்றே
சங்கையில் நெஞ்சி னுய்ந்திடு கின்ற தருணத்தில். (௩௬)

மண்ணினை யெல்லா வுணர்வையு மாய்த்து மயலீயும்
பெண்ணினை நில்லாப் பொன்னினை விட்டே பிரிவெய்தித்
தண்ணில வுடனே யரவமணிந்த தலைவன்றன்
புண்ணிய கமலச் சேவடிபுந்தி போமன்றே. (௩௭)

வேறு

நித்தியா நித்திய விவேகந் தோன்றிட
வத்துவை யறிதரு மறிவு வாய்க்கவே
புத்தியி லிருவினைப் போகமும் வெறும்
மித்தையென் றுணர்வுழி வினைக ளொக்குமே. (௩௮)

இருவினையொப்பு

இருவினை யொப்பினை யியம்பக் கேண்மதி
தருவினை யிரண்டினுஞ் சமத்துவம்வரு
மரியநல் லவசர மதுவென்பார் ; இனுந்
திரியவு மோதுவ ருவமை செப்பக்கேள். (ங௯)

பூவுலகத்தினிற் பொருந்து புண்ணிய
நாவலந் தீவினி லான்ம நாயக
னுமொரு பெயருள வண்ணல் ருேன்றியே
காமனை வென்றிடு கவின னுபினன். (௪0)

அன்னவ ளிளமைபோ யடுத்த வாலிபந்
துன்னறு மதிமுகத் துவரி னின்னிதழ்
அன்னமென் றிடுநடை யைய நுண்ணிடை
மின்னனை யார்நலம் விழைவ தாயினன். (௪க)

வேறு

தோடமைத்த கருங்குழலும் தண்ணென்ற
பிறைநுதலுஞ் சுடர்வேல் நோக்கும்
பீடமைபொற் றிருத்தோளும் பிரசவசனமும்
படைத்தபெண் ணணங்கை
நாடியவன் றன்குலத்து வதுவைசெய்து
மமையாது நவைசேர் நெஞ்சத்
தாடமைத் தோட்பாத்தை யவளொருத்தியை
யுஞ்சேர்ந்தின்ப மடைந்து வாழ்ந்தான். (௪௨)

சாற்றுகின்ற தருமவல்லி யெனுமனைவியிடத்தில் மூவைந்துநாளும்
எற்றமிகு மதர்மவல்லியெனுங் கணிகையிடத்து மூவைந்துநாளும்
போற்றுநலனுகர்ந்தவரைப் பிரியாதின்னுடலுயிர்போற் பொருந்திவாழ்ந்
மாற்றரியபெருங்காத லிருவரிடத்திலுஞ் சரியாய்வைத்துமாதோ. [தான்

ஆசைகொண் டிந்தவண்ண மான்மநா யகனுமண்ணல்
நேசவின் பங்களுண்டு நிலவுறுநாளி லோர்நாள்
மாசிலா வறநூல் சொல்சம் மடத்தினை வல்லே சார்ந்து
தேசிக னறநூல்கூறச் செவிமடுத் திருந்தா னன்றே. (௪௪)

இல்லற மல்லதில்லை யினியநல் லறமதென்றும்
கல்லறக் கற்பி னேங்கு கன்னியோ டினிதுவாழ்ந்து
புல்லிய கணிகைமாதர் பொலிபிற னில்நோக்காது
பல்விருந் ததிதியோம்பி யிருந்திடப் பயனுண்டென்றும். (சரு)

அறநெறி முறையிற் றன்முன் னங்கிசான் றாகவேட்ட
குறுநெறிக் கரியகூந்தற் கோமளக் கொடியையன்றி
பிறமனை விழியாற் பார்த்தல் பேசிட லுள்ளலெல்லாம்
மறநெறி யென்றே தொல்லை மறைநெறி கூறுமென்றும். (சசு)

மனதொன்று நினைக்கவாக்கு மற்றொன்றுகூறத் தங்கள்
தனமென்றும் விலைக்குவிற்றுத் தனமிகத் தேடுகின்ற
அனமொன்று நடையார்வஞ்ச வழலென்னு மனத்தார்தம்மைக்
கனவென்று மதினுநாட்டல் கடுநர கியுமென்றும். (சஎ)

கொண்டதன் னன்புமாது வீட்டினிற் குறுவிக்குந்தி
மண்டுபே ரழல்போல்நெஞ்சம் வாடின ளிருக்கமற்றைக்
கண்டென வினித்துப்பின்னர்க் கடுவினிற் கைக்கும்வேசை
யொண்டொடி மாரைச்சேர்வோ னுலகிலோர் பேதையென்றும்.

என்றின வாறுநல்லா சிரியனங் கெடுத்துரைக்கக்
குன்றன திரடோ ளான்ம நாயகக் குரிசில்கேளா
நன்றெந்த னியற்கையென்னு நகைசெய்து நகைமின்வென்ற
பொன்றங்கு மிடையைநீத்து மனைவியைப் புணர்ந்து வாழ்ந்தான்.

மாசுதீர் மதியம்போலும் வனப்புடை முகத்தாளோடு
நேசமாய் வாழுநாளில் நெருங்கிய தவத்தோர்வாழும்
ஆசிர மத்திலோர்நா ளான்மநா யகன்புகுந்து
பேசிடு ஞானநூலின் பெற்றிகேட் டிருந்தானன்றே. (நுய)

தந்தைதாய் தமர்பொன்மக்கள் தாரமென் றுரைக்குமெல்லாஞ்
சந்தையிற் கூட்டம்போலச் சடுதியில் வந்துபோகும்
அந்தகன் வந்தகாலை யார்துணை யிவர்கள்வாரார்
முந்திய துறவேயின்ப முத்தியை யுதவுமென்றும். (நுக)

அருந்தவர் ஞானமேன்மை யறையக்கேட் டான்மநாதன்
கருந்தடங் கண்ணிமேல்வை காதலுங் காதிவல்லே
திருந்திய துறவுபூண்டு திரிந்தன னிருவர்மேலும்
பொருந்திய விருப்பினோடு புலர்தலு மின்றிமாதோ (ருஉ)

பாவமா மதர்மவல்லி பகர்ந்திடு தர்மவல்லி
மேவுபுண் ணியமதாகும் விளம்பிய வான்மநாதன்
தாவிலா வுயிரேயாகு சமத்துவ மிருவர்மாட்டும்
பாவனை பனுவல்கூறு மிருவினை யொப்பாகும்மே (ருங)

இருவினை யொப்புவந்தே யெய்திட விதன்பின்னாக
மருவிடுஞ் செய்திதானே மலபரி பாகமாகும்
தருணமங் கதனிலெங்கோன் சத்திதான் வீழ்ச்சியெய்தும்
அருள்வடி வாகவீசன் வருகுவ னாசானாக. (ருச)

அன்னவ னோக்கால்வாக்கா லருள்பரி சத்தால்நெஞ்சி
லுன்னலா லுபதேசத்தா லூற்றதோர் பரிசுதன்னால்
மன்னிய மலங்கள்மூன்றும் மாய்த்தரு ளின்பவீட்டில்
துன்னிய வைப்பானப்பாற் றோன்றசு மிறப்பும்போமே. ()

பண்ணிசை பரிதிதன்முன் பான்மதி விளக்கு பன்னும்
கண்ணொளி போலவத்து விதக்கலப் படைந்து சிவன்
எண்ணிய பிறப்பிறப்போ டிருவினைப் போகம் மாய்ந்து
தண்ணிழற் கமலபாதந் தங்கிவீற் றிருப்பா னன்றே. (ருசு)

(தொடரும்)

---

# வண்ணாரப் பெரியாண்டி

[வேலூர், K. P. சந்தோஷம் B.A., L.T.]

(கக-ம் பக்கத் தொடர்ச்சி)

(இது வேடிக்கை யுரை என்பதை மறவற்க)

**வெள்ளை**

கல்விக் குறைவிடமாகிய செல்வி என்றும், நாவில் வாழும் பூவை என்றும், புலவரால் பெரிதும் போற்றப்படுங் கலைமகள்

தனக்கு மிகுதியுங் கடமைப்பட்டவளென்று வண்ணான் சொல்லு கிறான். "வெள்ளைக் கலையுடுத்தி—வெள்ளைப் பணிபூண்டு— வெள்ளைக் கமலத்தே வீற்றிருப்பள்." என்று அவளைப்பற்றி எழுதியிருப்பதை நோக்க வண்ணான் கூற்று வலியுறுகின்றது. தன்னுடைய சேலைகள் அடிக்கடி வெளுக்கப்பட்டுத் தூவெண் ணிறமா யிருக்கும்பொருட்டு இந்நாமகள் குளிர்ந்த நன்னீர் நிறைந்த தாமரைத் தடாகங்களில் வாழ்கின்றாளாம். இது உண் மையாயினும் பொய்யாயினும் வெள்ளைக்கு மதிப்புண்டென்பதை முதலிலறிந்து வெள்ளை யுடையின் சிறப்பை விளக்கியவள் கலை மகள் என்பதில் ஐயமில்லை. ஆதலின் வண்ணான் அவளைப் பெரி தும் நச்சுகின்றான். வாணி, சரச்சுவதி என்றவளைக் கூப்பிடு வதில் அவளுக்கு விருப்பமில்லையாம்; வெள்ளையம்மாள் என் றழைத்தால் அவள் மகிழ்வளாம். கல்வி ஒழுக்கங்களில் தாழ்ந் தவர்கள் வெள்ளையின் பெருமையையும் உயர்வையுமறிய வகை யிலாராய்ப் பளிச் என்று வீசும் பல்நிறங்க ளமைந்த துணிகளை வாங்கிக் கட்டிக்கொள்வார்கள். அதுவன்றி, தங்கள் துணிகளை வண்ணானுக்குப் போட்டால் அவன் அவைகளிலுள்ள நிறங்களைப் பொறாமையினால் போக்கிவிடுவான் என்று பத்திரமாய் அடுக்குப் பானைகளில் பொதிந்து வைப்பார்கள். அழுக்குநிறைந்த கயவர் கட்கு வெண்மைநிறத்தின் அருமை தெரிவதில்லை. அழுக்கை மறைப்பதற்கன்றோ வெவ்வேறான சாயங்களேறிய துணி வேண் டும்? நிலத்தில் விளையும் பருத்தியும் புழுவால் பிறக்கும் பட்டும் இயற்கையில் வெண்மையாயிருக்க அவைகளுக்குச் சாயமேற்றி அழகுசெய்யப் பார்ப்பது மல்லிகைக்கு நீலநிறத்தையும், முல்லைக் குச் செம்மை நிறத்தையுங் கொடுத்து அழகுசெய்ய முயல்வதை யொக்கும் என்று வண்ணான் திண்ணமாய் அறைகிறான். ஆயி னும் வண்ணானுக்கு நீலநிறத்தின்மேற் சிறிது பற்றுண்டு. தன் முன்னோனாகிய சூரியன் திகழ்வதற் கிடமாயமைந்த நீலமேகத்தை யவன் மறப்பதெங்ஙனம்? ஆதலின் சிலவேளைகளில் வெண் வஸ்திரத்திற்கு நீலத்தை ஏற்றி அவன் மகிழ்வதுமுண்டு. வெண் மையின் தன்மையை உண்மையா யறியாதவன் வண்ணானைத் தவிர வேறு யார்? இங்ஙனம் வெண்மையின் உண்மையை

அறிந்து கலைமகளை நெருங்கி நிற்கும் வண்ணான் கல்வியிற் சிறந்த வனாய் விளங்கவேண்டும். ஆனால் பெரும்பாலும் வண்ணாரில் கல்வி கேள்விகளில் தேறியவர்கள் காணப்படுவதில்லை. இதன் காரணமென்னவென்று அவர்களை வினவினால், "வைத்தியன் மகன் நோயாளி" என்று பதிலுரைக்கிறார்கள்.

ஒவ்வொரு இனத்திலும் வெண்மைநிறம் உடையது எதுவோ அது தலைமைபெற்று நிற்கும். யானைகளில் வெண் யானை (ஐராவதம்) உயர்ந்தது; அறுகம் புல்லில் வெள்ளறுகு சிறந்தது; எருக்கில் வெள்ளெருக்கு உயர்ந்தது. இதுபற்றியே தமிழ் மக்களில் வெள்ளாளர் மேலோரானார் என்று வண்ணான் சொல்வது எத்துணைப் பொருத்தமோ யாமறியோம். உலகி லுள்ள மக்களனைவரையும் நிறத்தைக்கொண்டு கரியர், கபிலர், வெள்ளையர் என்று முப்பெரும் பிரிவாய் வகுக்கலாம். இவர் களுள் வெள்ளையர் ஓங்கியதற்கும மற்றவர் ஒடுங்கியதற்குங் காரணமென்னை? இவ்வினாவிற்கு விடையுமளிக்க வேண்டுமோ? மேற்சொன்னவற்றால் ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்ப வற்றைவிட வெண்பா மேலானதென்பது பெறப்படும். (வெண் பாவை வண்ணாரப்பா என்று வண்ணார் சொல்லுகிறார்கள்) இதனாலேயே திருவள்ளுவருந் தமது அரிய நூலைப் பாதி வெண்பாவி லமைத்தார். அவர் கூறியதொன்று இங்கு கருதத் தக்கது.

"வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு" (புல்லறிவாண்மை)

இக்குறளில் வெண்மை என்பது புல்லறிவாண்மையைக் காட் டிற்று. இதுகாறுங் கண்டவற்றில் வெண்மை என்பது மேன்மை, உயர்வு, சிறப்பு என்ற பொருளில் வந்திருக்க, இக்குறளில் அது அறிவின்மையைக் குறிப்பது யாதுபற்றி என்று இடர்ப் படவேண்டியதில்லை. தாழ்ந்தவற்றிற்கும் உயர்ந்த பெயர் கொடுத் தழைப்பது கற்றோர் யாவருங் கைக்கொண்ட முறையே. (வைத் தியர்கள் இதைக் கைகண்டமுறை என்பார்கள்). கீழானவற்றை யும் பெரியோர் மேலான பெயரைக்கொண்டே வெளியிடுவர்.

சோறு குறைந்துபோனால், "சோறு மிஞ்சிற்று" என்று சொல்வதையொக்கப் புல்லறிவாண்மையை வெண்மை என்று சொன்னதே யொழிய வேறன்று. கருவாடு அல்லது காராடு என்னாது வெள்ளாடு என்பதிலும் பொருளுண்டு; அதை அறிந்தார்பாற் கேட்டுணர்க. "விலங்கனையர் வெள்ளறிவினர்" என்பதையும் மேற்சொன்னவற்றுடன் பொருத்திப் பொருள் கொள்க.

இனி, இன்னொரு வகை வெள்ளையுமுண்டு: வெள்ளை விடையேறி, வெண்ணீறணிந்து, வெள்ளிமலையில் வீற்றிருக்கும் விரிசடைக் கடவுளைப் பார்க்கச்சென்ற வெள்ளை யன்னவாகனனாகிய நான்முகனை விளித்து, பிரணவத்தின் பொருள் யாதென்று பச்சை வெளியில் பவளக்குன்றுபோல் விளங்கிய பன்னிரு கையன் கேட்க, பொருளறியாதுநின்ற மலரவன் கையொடு பட்ட கள்வன்போல் முகம் வெளுத்தான். இந்த நான்முகன் வெள்ளையளாகிய கலைமகள் கணவனுயினும் இப்படி வெளுத்தது இரங்கத் தக்கது. இவன் கரியமால் உந்திவந்தோன் என்பதைக் காட்ட எள்ளளவும் நிறமின்றித் தான் ஏறிய அன்னம் போலாயதை என்னவென்று சொல்வது? இம்மட்டோ? மற்றொரு முறை சிவனது திருமுடியைக் கண்டு வந்தேனென்று இந்தப் பிரமன் சொன்ன சொல் வெளுத்தது. இதனால் தாழம் பூவிற்குந் தாழ்ச்சி வந்தது. இக் காரணத்தால் பிரமனுக்குக் கோயிலில்லை என்று வழக்கிருக்க, அவன் வழிவந்தோர் என்று தங்களைச் சொல்லிக் கொள்வோர் கோவிலிற் புகுந்து குதிபோடுவது விந்தை.

(தொடரும்)

---

# பழங்கடனைத் தீர்க்கும் புதியவழி

## ஓர் கோமாளி கதை

[S. A. T.]

கன்னியரசியாகிய எலிசபெத் மகாராணியார் ஆங்கில நாட்டை யாண்டுவந்த காலத்தில் அவாது சபையில் பலவகைத் தான வித்வான்கள் நிரம்பி யிருப்பார்கள். அன்றியும் உற்சா

கத்தை யூட்டுதற்காக நகைச்சுவையை யுண்டாக்கவல்ல ஓர் கோமாளியும் அவருள் ஒருவனாக இருந்தான்.

இவ் விதூஷகன் பன்முறையும் அம்மையாரிடம் கடனாகப் பணம் வாங்கி யிருந்தான். அம்மையார் நெருக்கிய காலத்தில் சீக்கிரம் தீர்த்துவிடுகிறதாய் உறுதி கூறினன்.

ஓர் தினம் ராணியார் ஓர் பிரபுவைக் கண்டுகொண்டு இந்தக் கோமாளி வைகும் வீதி வழியாகத் திரும்பி வருவதை முன்னதாக அறிந்த ஹாசியக்காரன் ஓர் சூழ்ச்சியை நினைத்தான். தனது நண்பர்களிற் சிலரை வரவழைத்து அவர்களை நோக்கி 'இராணியார் இன்று நமது வாசல் வழியாகத் தமது மாளிகைக்குத் திரும்புவார்கள். அச்சமயம் என்னைச் சவப்பெட்டிக் குள்ளிட்டு நான் இறந்து போனதாகத் துக்கத்துடன் அழுகைக் குரலோடு வீட்டைவிட்டு வெளியே எடுத்துச் சென்மின்' என வற்புறுத்தி யிருந்தான். அவ்வண்ணமே அவனது சிநேகர் அவனை ராணியார் அவ்வீட்டை யடுக்கும்போழ்து சவப்பெட்டியில் வைத்து சோகத்துடன் வீட்டிற்கு வெளியே கொண்டு வரவே, மகாராணியார், 'இவ் வீடு நமது விதூஷகனது கிரகமன்றோ? இங்கே இறந்தவர் யார்' என வுசாவினபோழ்து சவப்பெட்டியைத் தாங்கிவந்த மனிதர் 'தங்கள் சபையிலிருந்த விதூஷகர் இறந்துவிட்டார். அவரை அடக்கஞ் செய்யக் கொண்டு போகா நின்றனம்! என்றனர். இதனை யம்மையார், செவியுறவே 'ஐயோ! இறந்தா போய்விட்டார்! இவர் நமக்குத் தீர்க்கவேண்டிய பெருங் கடனுளது. இனி யெங்ஙனம் தீரும்! மனதாரக் கடனை மன்னித்துவிட்டோம்; அவர் நற்கதி யடைக' வென ராணியார் மிகக் கருணையுடன் செப்பினர்.

பொய்ச்சாவு கொண்டிருந்த விதூஷகன் உடனே சவப்பெட்டியைத் திறந்துகொண்டு வெளியேறி வந்து அம்மையார் முன் தோன்றி 'பேராசிரியரே, பட்டகடனைத் தீர்க்க வழியறியாது அச்சத்துளாழ்ந்து மயங்கி இறந்துபோன நான் தாங்கள் கடனை மன்னித்த சப்தம் பிறத்தலுமே போன உயிரை மீளவும் பெற்றுத் தங்களைத் தரிசனஞ் செய்யும் பாக்கியத்தைப் பெற்றேன்.'' என மிக்க சாதுரியமாகவும் வினையமாகவும் செப்பினன்.

சொன்ன சொல்லை மாறக் கூடாமல் ராணியார் கடனை மன்னித்ததுமன்றி, அவனது சாதுரியத்தையும் மெச்சினர்.

இக் கதையில் வந்த சுவை நகைச்சுவையாம்.

---

## THE IDEAL OF A STUDENT'S LIFE
## மாணுக்கர்களுடைய வாழ்க்கையின் குறிக்கோள்.

[சிந்துபூந்துறை, மா. வே. நெல்லையப்ப பிள்ளை. B.A.]

குறியாகக் கொள்ளப்படுவது எதுவோ அது **குறிக்கோள்** ஆகும். குறிக்கோள் என்பது ஓர் உதாரணத்தினுல் நன்ருய் விளங்கும். சிறு பிள்ளைகள் கிராமங்களில் ஒரு சாண் நீளமுள்ள ஒரு சிறிய கல்லைப் பூமி மேலே நிறுத்தி வைத்து அது சாய்ந்து கீழே விழும்படி அதன்மேல் ஓர் பந்தைப் போட்டு விளையாடுகிறது உண்டு. பூமி மேலே நிற்கிற அந்தக் கல் கீழே சாய்ந்து விழவேண்டுமானுல் அதன் மேற்பாகத்தின் மத்தியில் உச்சிக்குக் கிட்ட யாராவது ஒரு பையன் பந்தை விசையுடன் பலமாய் எறிதல் வேண்டும். கல்லின் மேற்பாகத்தின் மத்தியில் உச்சிக்குக் கிட்ட பந்து விழவில்லையானுல் கல் கீழே சாய்ந்து விழாது. பந்து மெதுவாய் எறியப்பட்டாலும் அது சாய்ந்து விழாது. கல்லு கீழே சாய்ந்து விழும்படியாக அதன்மேல் பந்து எறியப்பட்ட இடம்தான் **குறி** என்று சொல்லப்படும். அந்தக் குறியை மனதில் வைத்துக்கொண்டுதான் விளையாடும் பிள்ளைகள் அதன் மேலே பந்தை எறிவார்கள்; அதுபோல உலகில் யாதாம் ஒரு வேலையைச் செய்கிறவர்கள் அந்தவேலையினுல் அடையப்போகும் பயனைத் தங்கள் மனதில் குறியாக வைத்துக்கொண்டு அதற்குத் தக்கபடி வேலை செய்வார்கள். அதுபோல நீங்களும் பள்ளிக்கூட வாழ்க்கையினுல் உண்டாகும் பயனை உங்கள் மனதில் குறியாக நினைந்துகொண்டு கல்வி கற்கவேண்டும்.

(2) நீங்கள் பள்ளிக்கூடப் படிப்பினுல் அடையும் பயன் யாது? நீங்கள் தகுந்த வயது அடைந்து உலக வாழ்க்கையில் செல்லும் பொழுது அந்த உலக வாழ்க்கையை நன்ருய் வாழச் செய்யும் திறமையை அடைதலே நீங்கள் பள்ளிக்கூட வாழ்க்கை

யின் குறிக்கோளாகக் கொள்ளல் வேண்டும். அப்படியானல் நீங்கள் பள்ளிக்கூட வாழ்க்கையில் செய்யும் செயல்களுக்கெல் லாம் இந்தக் குறிக்கோள் உங்கள் நினைப்பில் முன்னிற்றல்வேண் டும். எவ்வளவுக்கு எவ்வளவு நீங்கள் இந்தக் குறிக்கோளை நினைப்பில் வைத்துக்கொண்டு அதற்குத் தகுந்தபடி உங்கள் பள்ளிக்கூடத்தில் கல்வி கற்பீர்களோ அவ்வளவுக்கு அவ்வளவு உங்கள் கல்வி பயனுடையது ஆகும்.

(3) பள்ளிக்கூட வாழ்க்கையின் செயல்களை நான்கு பாகங் களாகப் பிரிக்கலாம். அவைகள் (1) உடற் பயிற்சி (2) மனப் பயிற்சி (3) ஒழுக்கப் பயிற்சி (4) சமயப் பயிற்சி ஆகும். இப்பாகங் கள் ஒவ்வொன்றிலும் நான் உங்களுக்கு நீங்கள் அறியவேண்டிய சில பொருள்கள் சொல்லுகிறேன்.

(4) **உடற் பயிற்சி:** நீங்கள் பின்னே வருகிற உலக வாழ்க்கை யில் உடல் நலத்துடன் வாழவேண்டுமானல் இளமையில் உடற் பயிற்சி இன்றியமையாதது. உடல் நலமடையவும் வளரவும் நீங்கள் ஓடி விளையாடுதல் பந்தடித்தல் முதலிய விளையாட்டுக்களை யும் உங்கள் பள்ளிக்கூடத்தில் அமைத்திருக்கிற பழக்கங்களையும் நாள்தோறும் ஒழுங்காகக் குறிப்பிட்ட நேரங்களில் செய்துவரல் வேண்டும். ஆனல் விளையாட்டு நேரங்கள்தவிர மற்றப் படிப்பு நேரங்களில் உங்களுக்கு விளையாட்டு நினைப்பு இருத்தல் கூடாது. படிப்பு நேரத்தில் படிப்பு நினைப்பும், விளையாட்டு நேரத்தில் விளை யாட்டு நினைப்புமே இருத்தல் வேண்டும். உடல் நலமே உலக வாழ்க்கையில் நீங்கள் அடையப்போகிற எல்லா நலங்களுக்கும் அடிப்படையா யிருப்பதனல் உடற் பயிற்சியை நீங்கள் சிறிதே னும் அசட்டைசெய்தல் கூடாது. உடலையும் சுத்தமாய் வைத் துக் கொள்ளல் வேண்டும்.

(5) **மனப் பயிற்சி:** மனப் பயிற்சியினலே உங்கள் அறிவு பெருகி வளரவேண்டும். அறிவு உடைமையே மக்களுக்கு அணி கலமாவது. அறிவினலேயே உங்கள் உலகவாழ்க்கை சிறப்பு அடைதல்வேண்டும். அறிவு இல்லாதவர் மிருகங்களுக்கு ஒப் பாவார். இந்த அறிவுப்பெருக்கத்துக்கு நீங்கள் உங்கள் நினைப்பில்

சில உண்மைகளை வைத்துக்கொண்டு நடக்கவேண்டும். நீங்கள் விளையாடினாலும் உங்கள் பாடங்களைப் படித்தாலும் உபாத்தியாயர் பாடஞ் சொல்வதைக் கேட்டாலும் வேறே எந்த வேலையைச் செய்தாலும் அந்த அந்த நேரத்தில் அந்த அந்த வேலையில் மாத்திரமே உங்கள் மனமுழுவதும் செல்லல் வேண்டும். இப்படியல்லாமல் உங்கள் மனம் பிற நினைப்புக்களில் செல்லுதல்கூடாது. எந்த வேலையும் செவ்வையாய்ச் செய்வதற்கு இதுவே நல்ல உபாயமாகும். இதற்கு மன ஒருமை (concentration of mind) என்று பேர். இந்த மன ஒருமையை நீங்கள் இளமையிலே பழகுவீர்களாகில் அஃது உங்களிடத்தில் நிலையான பழக்கமாக ஆகி உங்கள் உயர்தரக் கல்விக்கும் உலக வாழ்க்கையில் எந்த வேலையையும் திறமையுடன் செய்வதற்கும் மிக்க பயனை உடையதாகும்.

(6) நீங்கள் வெளியே நடந்துபோகும்பொழுது இயற்கை நிகழ்ச்சிகளை (happenings in nature) நன்றாய்க் கவனித்துப் பார்த்தல் வேண்டும். கோழி எப்படி இரை தேடி தன்னைச் சுற்றிவரும் குஞ்சுகளுக்குக் கொடுக்கிறது; காகம் எப்படி தான் இரை உண்ணப் போகும் பொழுது பிறகாகங்களையும் கூப்பிடுகிறது; நாய் எப்படித் தன்னை வளர்க்கிறவனிடத்தில் வாலை ஆட்டிக்கொண்டு தன்னுடைய மலர்ந்த முகத்தைக் காட்டுகிறது; இவைகள் போலுள்ள நிகழ்ச்சிகளை நீங்கள் கவனித்து உங்கள் மனதில் அவைகளைப்பற்றி நினைப்பீர்களானல் உங்கள் அறிவு பெருகி விரியும். நினைத்துப்பார்க்கும்பொழுது உங்களுக்கு ஏதாவது நன்றாய் விளங்காவிட்டால் உங்கள் உபாத்தியாயரிடத்திலாவது பெற்றோர்களிடத்திலாவது பிற மாணக்கர்களிடத்திலாவது கேட்டுத் தெரிந்துகொள்ளல்வேண்டும்.

(7) உங்கள் பள்ளிக்கூடப் பாடங்களை முறைப்படி படிப்பதனாலும் உங்கள் உபாத்தியாயர் பள்ளிக் கூடத்தில் சொல்லுகிறவைகளைக் கேட்பதனாலும் பிற மாணக்கர்களிடங் கேட்பதனாலும் அவர்களுக்குத் தெரியாதவைகளைச் சொல்லுவதனாலும் படித்த பாடங்களையும் கேட்ட பாடங்களையும் உங்கள் மனதில் சிந்திப்பதனாலும் உங்கள் அறிவு விரிவு அடையும்.

(8) பள்ளிக்கூடப் பாடங்கள் சம்பந்தமாக நீங்கள் ஒவ்வொரு நாளும் அடியிலே சொல்லிய நல்ல பழக்கத்தைக் கைக்கொண்டு நடத்தல் வேண்டும். ஒவ்வொரு நாளும் இரவில் முதலாவது அன்று பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர் சொல்லிக் கொடுத்த பாடங்களைப் படித்து அவைகளை மனதில் சிந்தித்தல் வேண்டும். அப்படிச் சிந்தித்துப் பார்த்ததில் ஏதாவது சந்தேகம் இருந்தால் அதனைப்பற்றி அடுத்த பள்ளிக்கூட நாளில் உபாத்தியாயரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளல் வேண்டும். இப்படி அன்று நடந்த பாடங்களைப் படித்த பின்பே மறுநாட் பள்ளிக்கூடப் பாடங்களைப் படிக்கத் துவக்கவேண்டும். நேரம் இரவில் போதாதிருந்தால் மறுநாள் அதிகாலை சுமார் 5-மணிக்கு எழுந்திருந்து படித்தல் வேண்டும். இனி நடக்கிற பாடங்களைப் படிக்கும் பொழுது உங்களால் உபாத்தியாயருடைய உதவியில்லாமல் எவ்வளவு தெரிந்துகொள்ளக் கூடுமோ அவ்வளவும் தெரிந்து கொள்ள முயலல் வேண்டும். அகராதியைத் தாராளமாய் உபயோகித்தல் வேண்டும். உபாத்தியாயர் பள்ளிக்கூடத்தில் சொல்லுவார்கள் என்று நினைத்துக்கொண்டு இருத்தல் கூடாது. இந்த முறையில் படித்தால் உபாத்தியாயர் பள்ளிக்கூடத்தில் வைத்துச் சொல்லிக்கொடுக்கிற பாடங்கள் நன்றாய் விளங்கும். வாரத்துக்கு ஒருதரம் பழைய பாடங்களைத் திரும்பப் படித்தல் வேண்டும். நாடோறும் பாடங்களைப் படிப்பதிலும் நித்திரைக்குப் போதலிலும் நித்திரையைவிட்டு எழுந்திருப்பதிலும் நேர ஒழுங்குப் (Punctuality) படி நீங்கள் நடத்தல் வேண்டும். இரவு ஒன்பது மணிக்கு நித்திரைக்குப் போய்க் காலை 4½ அல்லது 5-மணிக்கு நித்திரைவிட் டெழுந்திருத்தல் நலமாயிருக்கும். பரீக்ஷை நாள் என்று சில நாட்களில் அதிக நேரம் விழித்திருந்து படித்தல் கூடாது. நாள் தோறும் மேலே சொல்லிய முறைப்படி பாடங்கள் படித்துக் கொண்டு வந்தால் பரீக்ஷை நாள் வந்தாலும் அதிக நேரம் படிக்கவேண்டிய அவசியம் நேரிடாது.

(9) **ஒழுக்கப் பயிற்சி:** மேலே சொல்லிய மனப் பயிற்சியினால் உண்டாகும் அறிவின்பயன் ஒழுக்கம் ஆகும். ஒருவருக்கு அறிவு இருந்து ஒழுக்கம் இல்லையானால் அந்த அறிவினால் அவருக்கு

யாதொரு பயனும் உண்டாகாது. ஒருவர் கல்வி கற்றல் அவர் ஒழுக்கமுடையவரா யிருத்தற்காகத்தான். ஆகையால் உங்களுடைய உலக வாழ்க்கையில் இன்றியமையாத ஒழுக்கத்தை நீங்கள் உங்கள் இளமையிலேயே பள்ளிக்கூட வாழ்க்கையில் அமைத்துக் கொள்ளல் வேண்டும்.

(10) இந்த ஒழுக்கத்தை நீங்கள் அமைத்துக்கொள்ள நான் எனக்குத் தெரிந்த சில வழிகள் சொல்லுகிறேன். ஒழுக்கம் என்பது ஒரு நாளில், ஒரு வாரத்தில், ஒரு மாதத்தில் அல்லது ஒரு ஆண்டில் வேண்டும் என்று நினைத்த பொழுது உண்டுபண்ணி வைத்துக்கொள்கிற பொருள் அல்ல. இந்தப் பள்ளிக்கூடக் காலம் முடிவாகிறவரை நீங்கள் நாள்தோறும் முயன்று முயன்று வருந்தி அமைத்துக்கொள்கிற பொருளாகும். நீங்கள் ஒவ்வொரு நாளிலும் அப்படி அல்ல, ஒவ்வொரு நிமிஷத்திலும் உங்கள் மனதில் எண்ணுகிற எண்ணங்களும் இச்சைகளும் உங்கள் வாக்கினாற் சொல்லுகிற சொற்களும் உங்கள் உடலினாற் செய்கிற செயல்களும் அந்த ஒழுக்கம் என்கிற கட்டடத்தைக் கட்டுகிற சாமான்களா யிருக்கின்றன. ஒரு கட்டடத்தின் பலம் அதைக் கட்டுகிற சாமான்களைப் பொறுத்திருப்பதுபோல உங்கள் உலக வாழ்க்கைக்கு உதவும்படியான ஒழுக்கத்தின் தன்மையும் நீங்கள் பள்ளிக்கூட வாழ்க்கையில் உண்டுபண்ணுகிற எண்ணங்களையும், இச்சைகளையும், சொற்களையும், செய்கைகளையும் பொறுத்திருக்கின்றது. எவ்வளவுக்கு எவ்வளவு உங்கள் எண்ணங்கள் முதலியவை நல்லனவாக இருக்குமோ அவ்வளவுக்கு அவ்வளவு உங்கள் ஒழுக்கமும் நல்லனவாக அமையும். நீங்கள் இந்த இயல்பு முறையைக் கவனித்து உங்கள் சம்பந்தமாயும் பிறர் சம்பந்தமாயும் உங்கள் வீடுகளிலும் பள்ளிக்கூடத்திலும் நல்ல எண்ணங்களையே எண்ணல் வேண்டும்;: நல்ல இச்சைகளையே இச்சித்தல் வேண்டும்; கெட்ட எண்ணங்களும் கெட்ட இச்சைகளும் உங்கள் மனதில் வருமானால் அவைகளை அவைகளுக்கு எதிரிடையான நல்ல எண்ணங்களையும் நல்ல இச்சைகளையும் நினைத்து விலக்கல் வேண்டும். உங்கள் வீட்டிலுள்ள பெற்றோர் முதலியவர்களிடத்திலும், பள்ளிக்கூடத்திலுள்ள உபாத்தியாயர்கள் பிள்ளைகளிடத்

திலும் இனிய சொற்களையும் பயனுடைய சொற்களையும் சொல்லல் வேண்டும். கடுஞ் சொற்களைச் சொல்லக் கூடாது. அதே பிரகாரம் உங்களுக்கும் பிறருக்கும் நன்மைதரும் செய்கைகளையே செய்தல் வேண்டும். உங்கள் வீடுகளிலும் பள்ளிக்கூடத்திலும் வெளியிலும் சமயம் வந்த பொழுதெல்லாம் பரோபகாரச் செயல்களைச் செய்துவரல்வேண்டும். எந்த உயிருக்கும் அற்பமாயினும் கேடு நினைத்தல் கூடாது, செய்தல் கூடாது. நீங்கள் உங்கள் பெற்றோர்களுக்கும் உபாத்தியாயர்களுக்கும் அடங்கி அவர்கள் உங்களுக்கு நல்லன யாவை, தீயன யாவை என்று சொல்லுகிற சொற்களைக் கேட்டுநடத்தல் வேண்டும். நீங்கள் எப்பொழுதும் தீமையை விலக்கியும் நன்மையை நாடியும் பெரியோர்கள் சொற்களைக் கேட்டும் நல்வழியில் வருந்தி முயன்று நடந்து வருவீர்களானால் உங்கள் ஒழுக்கமும் நல்ல ஒழுக்கமாக அமையும் நீங்கள் உங்கள் உலக வாழ்க்கையில் அதிகப் பணமுடையவர்களா யிருக்கலாம்; கொஞ்சப் பணமுடையவர்களா யிருக்கலாம்; ஏழைகளா யிருக்கலாம்; பெரிய வேலையில் அமர்ந்திருக்கலாம்; சிறிய வேலையில் அமர்ந்திருக்கலாம்; எந்த நிலை உங்களுக்குக் கிடைத்தாலும் அந்த நிலையில் உங்கள் வாழ்க்கையைச் செவ்வையாய் நடத்த நல்லொழுக்கம் அவசியமாய் வேண்டியது. ஆகையால் நீங்கள் உங்கள் பள்ளிக்கூட வாழ்க்கையில் ஒழுக்கம் அமைத்தலையே **(building of character)** குறியாக வைத்து ஒழுகல் வேண்டும்.

(11) **சமயப் பயிற்சி:** சமயப் பயிற்சி சம்பந்தமாய் நீங்கள் சமய உண்மைகளை அறிந்து கொள்ள உங்களுக்கு இப்பொழுது தகுந்த வயது வரவில்லை. ஆயினும் சில உண்மைகள் பொதுவாய் உங்களுக்குத் தெரியவேண்டும். அவைகளைக் கீழே சொல்லுகிறேன்.

(12) எங்கும் நிறைந்திருப்பவராயும் எல்லாம் செய்ய வல்லவராயும் எல்லாம் அறியவராயும் உள்ள கடவுள் ஒருவர் இருக்கிறார். அவர் உலகிலுள்ள உயிர்களை யெல்லாம் தம்மிடத்தினின்றும் பிரிக்க முடியாத **அருள்** என்னும் சக்தியினால் காக்கின்றார். மக்களாகிய நாம் எல்லாம் அவர் அருளினுடைய உதவியின்றி ஒரு கணமும் இருக்க முடியாது. அவர் அருளை நினைந்துகொண்டே நாம் எல்லாக் காரியங்களையும் செய்தல் வேண்டும். பிள்ளைகளாகிய நீங்களும் உங்கள் பள்ளிக்கூட வாழ்க்கையில் படிக்கும் பாடங்கள், விளையாடும் விளையாட்டுக்கள், இன்னும் நீங்கள் செய்யும் வேறு செயல்கள் ஆகிய இவை எல்லாம் கடவுளினுடைய அருளை நினைந்துகொண்டே செய்தல வேண்டும். கடவுளினுடைய அருளை நினைந்துகொண்டு செய்கிறதானால் நீங்கள்செய்யும் எந்தச் செயலும் அவர் அருளுக்கு ஒத்து இணங்கியிருத்தல் வேண்டும்; எதிரிடையா யிருத்தல் கூடாது. கடவுளுடைய அருளுக்கு

ஒத்து இணங்கியுள்ள உங்கள் எண்ணங்கள், இச்சைகள், செயல்கள் ஆகிய இவைகள் எல்லாம் **அறம்** அல்லது **புண்ணியம்** என்று சொல்லப்படும்; அவர் அருளுக்கு எதிரிடையான உங்கள் எண்ணங்கள், இச்சைகள், செயல்கள் ஆகிய இவைகள் எல்லாம் **மறம்** அல்லது **பாவம்** என்று சொல்லப்படும். இதனால் மேலே சொன்ன நல்லொழுக்கம் உங்களுடைய வாழ்க்கையில் எவ்வளவு முக்கியமானது என்று அறியலாம். ஆகையால் நீங்கள் **"அறஞ்செய விரும்பு"** என்று **ஔவைப்பிராட்டியார்** சொல்லிய வண்ணம் எப்பொழுதும் கடவுளின் அருளினையே நினைந்து மறத்தை விலக்கி அறத்தையே செய்துவரல் வேண்டும். அப்படிச் செய்வீர்களானால் உங்களுக்குச் சகல நன்மைகளும் உண்டாகும். நான் இங்கே சமயப் பயிற்சியில் சிறிதே சொன்னேன். இன்னும் உங்கள் உபாத்தியாயர்கள் இது சம்பந்தமாய்ச் சொல்லும் உண்மைகளைக் கேட்டு அறிந்து கொண்டு நடக்கவேண்டும்.

(13) **முடிவுரை:** நீங்கள் இப்பொழுது கீழ்தரப்பள்ளிக்கூடத்தில் படிக்கிறீர்கள். இப்பொழுது நீங்கள் சிறு வயது உடைய வாலிபர்களா யிருக்கிறீர்கள். உங்கள் மனது இப்பொழுதுதான் பளிங்குபோல சுத்தமா யிருக்கின்றது. அழுக்குப்படியாத துணியில் நன்றாகச் சாயம் பிடிப்பதுபோல உங்கள் மனதில் எந்த நல்ல பழக்கங்களும் பதியும். இந்தப் பள்ளிக்கூடத்திலிருக்கும்பொழுது நீங்கள் பழகுகிற பழக்கங்கள்தான் உங்களுக்குப் பின் வாழ்க்கையில் உண்டாகும் மேலான அறிவுக்கும் திருந்திய ஒழுக்கத்திற்கும் அடிப்படையா யிருக்கும். இனி உயர்தரப் பள்ளிக்கூடங்களிலும் பின் வாழ்க்கையிலும் உண்டாகும் பழக்கங்கள் எல்லாம் மேற்படைகள் ஆகும். அடிப்படை நன்றாய்ப் போடா விட்டால் மேற்படை நிலையாய் நில்லாது. அடிப்படை நன்றாய்க் கட்டப்படாத கட்டடம் எப்படிப் பலக்குறைவாய் விடுமோ அதுபோல இந்தப் பள்ளிக்கூட வாழ்க்கையில் உங்களுடைய ஒழுக்கமும் அறிவும் செம்மையா யிருக்கமாட்டாது. ஆகையால் இந்த உண்மையைக் கவனித்து நீங்கள் வேறுவகைப் பயிற்சியின் தலைப்பிற் சொன்ன விஷயங்களை மனதில் வைத்துக்கொண்டு நடக்கவேண்டும் என்று நான் உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படிச் செய்வீர்களானால் உங்கள் பின் வாழ்க்கை நல்வாழ்க்கையாகும். நீங்கள் **இந்திய மாதாவுக்கு** அவள் மேலான நிலை அடையத் தொண்டு செய்யும் சிறப்புடைய மக்கள் ஆவீர்கள். நமது இந்திய **நாடு** பிற நாட்டார்களால் மதிக்கும்படியான சீர்மையும் சிறப்பும் அடையும்.

எல்லாம் வல்ல இறைவனுடைய அருளால் உங்களுக்குச் சகல நன்மைகளும் உண்டாவதாக.



சிதம்பரம் திருப்புலீச்சரர்

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது

| சிலம்பு ௪ | மெய்கண்டான் யாண்டு-எாஙு சித்திரைத்திங்கள் 1926௵ ஏப்ரல்௴—மே௴ | பரல் ௪ |
|---|---|---|

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## திருநீலகண்ட நாயனார்

தில்லைநகர் வேட்கோவர் தூர்த்தராகித் தீண்டிலெமைத்
திருநீல கண்ட மென்று
சொல்லுமனை யாடனையேயன்றி மற்றுந் துடியிடையா
ரிடையின்பந் துறந்து மூத்தங்
கெல்லையிலோ டிறைவைத்து மாற்றி நாங்க ளெடுத்திலமென்
றியம்புமென விழிந்து பொய்கை
மெல்லியலா ளுடன்மூழ்கி யிளமை யெய்தி
விளங்குபுலீச் சரத்தரனைமேவி னாரே.

சிதம்பரத்திலே குயவர் குலத்திலே தோன்றியருளிய நீல கண்டர் என்னுந் திருநாமமுடையவர் சிவனடியார்க்குத் திருவோடு கொடுத்தலே திருத்தொண்டாகச் செய்துகொண்டு தம்மனைவி யுடன் வாழ்கையில், ஒருநாள் பரத்தையரிடத்துச் சென்று வந் ததை அவர் மனைவியார் அறிந்து தம்மைத் தீண்டவந்த ஓர் நாளில் 'நீவிர் எம்மைத் தீண்டுவீராயின் திருநீலகண்டம்' என்று ஆணையிட்டார். நாயனர் அச்சமுற்றுத் தம் மனைவியையேயன்றி மற்றைப் பெண்களையும் மனத்தினுந் தீண்டேன் என்று உறுதி கொண்டுவாழ்ந்து மூப்படைய இதையறிந்த சிவபெருமான் சிவயோகி வடிவாய் ஓர் பாத்திரத்தைத் தாங்கித் திருநீலகண்ட ரிடம்வந்து 'இப்பாத்திரம் மிகவும் சிறப்புள்ளது, இதை நீர் வைத்திரும்' என்று கொடுத்துப்போய்ப் பின்னர் வந்து பாத்தி ரத்தைக் கேட்க, அது வைத்தவிடத்திற் காணமையால் வேறு பாத்திரந் தருகிறேமென்று வேண்ட, சிவயோகியார் கோபித் துக் 'காணமற்போனது உண்மையாயின் நீர் உமது மனைவியைக் கைப்பற்றி நீரிலே முழுகிச் சத்தியம் பண்ணித் தாரும்' என்ற னர். அவர் ஒரு மூங்கிற் றடியெடுத்து மனைவியும் தாமுமாக இரண்டு பக்கமும் பற்றி நீரில் முழுகப் போகையில் 'நீர் மனைவி கையைப் பற்றிமூழ்கும்' என்ன, நாயனர் பலருமறிய ஆதியில் நடந்தவை யெல்லாந் தெரியச்சொல்லித் தண்டத்தைப் பற்றிக் கொண்டே நீரில் மூழ்கி மூப்பு நீங்கி *இளமையோடு எழுந்து சின்னுள் வாழ்ந்திருந்து சிவபெருமான் அருளால் கைலாயத்தை யடைந்தனர்.

---

* இக் காரணத்தினல் இத் திருக்குளம் இளமையாக்கினர் குளம் எனப் பெயர்பெற்றது. இக்குளத்தின் புகைப் படத்தை நமது செல்வி யில் வெளியிடுமாறு வலிந்து உதவிபுரிந்த சிதம்பரம், போட்டோகிராபர், திருவாளர் C. A. நாகரத்தினம் அவர்கட்கு இக் கழகத்தார் நன்றி உரிமையாகின்றது.

# கண்ணகி கற்பு மாண்பு

[திருச்சி ந. மு. வேங்கடசாமி நாட்டார்]

(ருடு-ம் பக்கத் தொடர்ச்சி)

இனி, கண்ணகியின் கற்புமாட்சியைத் தெரிவிக்கும் பிறி தொரு சான்றுளது. தன் கணவனாகிய கோவலனைப் பிரிந்து தனித்துறையும் கண்ணகிநல்லாள் தீக்கனாக் கண்டு அதனைத் தன் றோழியாகிய தேவந்தி யென்னும் பார்ப்பனிக்கு அறிவிக்க, அவள் கண்ணகியை நோக்கி, "பொற்றொடீஇ, நீ கண்ட கனவு பற்றி வருந்த வேண்டா; நீ அவனால் வெறுக்கப்பட்டாயுமல்லை; நின் கணவன் காரணமாக ஒரு நோன்பு முற்பிறப்பிலே தப்பி னாய்; அதனால் வந்த தீங்கும் ஒழிவதாக; காவிரி கடலோடு கலக்கும் சங்கமுகத் தயலதாகிய நெய்தலங்கானலிடத்துச் சோமகுண்டம் சூரியகுண்டம் என இரண்டு தடாகங்கள் உள் ளன; அவற்றில் நீராடிக் காமவேள் கோட்டத்தைத் தொழு கின்ற மகளிர் வாழ்நாள் முழுதும் கணவருடன் பிரிப்பின்றி யிருந்து இன்புறுவர்; மறுமையிலும் போகபூமியிற் போய்ப் பிறந்து கணவருடன் பிரியாதிருந்து இன்பந்துய்ப்பர்; ஆதலின் நாமும் ஒரு நாள் சென்று நீராடக்கடவேம்" என்றாள். ஆனால் கண்ணகியோ "கற்புடை மகளிராய எமக்கு அஃது இயல்பன்று" என்று கூறிவிட்டனள். மகளிர் தம் கணவர்க்கு உறுதுணையா யிருந்து இல்வாழ்க்கை நடாத்துதற்கண் மேற்கொள்ளத்தக்க கடன்கள் பலவுளவேனும், கற்புடைமைக்குச் சிறப்பியல்பாவது அவர் தம் கணவரையன்றி வேறு தெய்வத்தை வணங்காதிருத் தலேயாம்: தெய்வப்புலமைத் திருவள்ளுவனாரும்,

> "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யு மழை."

என்று கூறியருளினர்.

> "இன்னிசை யெழிலியை யியம்பவு மியைவதோ
> கனைகதிர்க் கனலியைக் காமுற வியைவதோ
> வளிதருஞ் செல்வனை வாழ்த்தவு மியைவதோ"

எனப் பாலைக்கலியில் வருந்தொடர்களும் தெய்வந் தொழா மையை விளக்குவனவாகும். இவ்விலக்கணத்திற்கே ஓர் எடுத் துக் காட்டாகக் கண்ணகியின் வரலாறு அமைந்திருப்பது காணற்பாலது.

இனி, கோவலன் கண்ணகி எனும் இருவருடைய குண மேன்மையையும் ஒருங்கு தெரிவிக்கற்பாலதாகிய நிகழ்ச்சி யொன்றுளது. கோவலன், கண்ணகி, கவுந்தியடிகள் ஆகிய மூவ ரும் காவிரியின் தென்கரையை யடைந்து ஓர் பொழிலில் இருந்த பொழுது பரத்தை யொருத்தியும் தூர்த்தன் ஒருவனும் அவ் வழிவந்தவர் காமனையும் இரதியையும் போலும் இவர்களை யாரென்று கேட்டறிவோமெனச் சொல்லி, கவுந்தியடிகளைப் பார்த்து, 'மெலிந்த யாக்கையையும் நுண்ணிய தவத்தையும் உடையீர், நும்மோடு கூடி வழிவந்த இவர்கள் யாரோ' என வினவினர். அவ்விருவரும் இவ்விருவரையும் வினவுதல்கண்ட கவுந்தியடிகள் 'இவர்கள் என் மக்களாவார்; நீர் சொன்ன காம னும் தேவியு மல்லர்; மானிடயாக்கையர்; வழிவருதலால் மிக வும் வருந்தினர்; அவருழைச் செல்லாதே அகலப் போமின்' என்னலும், அத்தீயோர், அது கேட்டு நகைத்து, 'கற்றறிந்த வரே, ஒரு வயிற்றுட் பிறந்தோர் கொழுநனும் மனைவியுமாய்க் கூடிவாழுமாறு நீர் கற்ற நூல்களிற் சொல்லிக் கிடப்பது முண்டோ' என இகழ்ந்துரைத்தனர். இத் தீமொழியைக் கேட் டலும் கண்ணகியானவள் செவிகளைப் புதைத்துக்கொண்டு தன் காதலன் முன்பு நடுங்கி நின்றனள். கவுந்தியடிகளோ 'இவர் என் பூங்கோதைபோல்வாளை யிகழ்ந்தனர், இவ்விகழ்ச்சியால் துடக்கு முட்களையுடைய காட்டில் நுழைந்து திரியும் முது நரி யாகக் கடவர்' எனச் சாபமிடத், தவத்தின் விளைவாகிய அச் சாபமானது அக்கணத்திற்றானே அவரைச் சென்று பொருந் திற்று. கோவலனும் கண்ணகியும் நரியின் கூக்குரலைக் கேட்டனர்; அடிகள் மனத்தால் நினைத்து இட்ட சாபமாதலால் நிகழ்ந்ததை யறியார்களாகிய அவர்கள் அத் தீயோர் இகழ்ந்து கூறினமை யானும், இவரன்றிச் சபிக்க வுரியார் பிறரின்மையானும் உண் மையை அநுமித்துணர்ந்து, அவருற்ற துன்பத்திற்கு நடுங்கிச்

சென்று, 'நல்லொழுக்க நெறியினின்றும் நீங்கியோர் நீர்மையல்லாதவற்றைச் சொல்லினும், இஃது அவர் அறிவின்மையாற் சொல்லியதன்றோ வென உயர்ந்தோர் தமது அறிவால் உணர வேண்டும்' என உட்கொண்டு, கவுந்தியடிகளைப் பார்த்து, 'செய்தவத்தீர், உம்முடைய திருமுன் பிழைசெய்த இவர்க்கு இனிச் சாபநீங்கி உய்யுங்காலத்தை உறைத்தருளீர்' என வேண்டினர். அவரும் 'பன்னிரு திங்கள் இவர் இங்ஙனம் துன்பமுற்ற பின்னர் முன்னையுருவம் பெறுவாராக' எனச் சாபவிடை செய்தனர்.

இங்கே பரத்தையும் தூர்த்தனுங் கூறிய 'உடன் வயிற்றோர்கள் ஒருங்குடன் வாழ்க்கை கடவது முண்டோ' என்னும் வார்த்தை கண்ணகிக்கு அளவற்ற வருத்தத்தை விளைத்ததென்பது அவள் தன் செவிகளைப் பொத்திக்கொண்டு நடுங்கினமையால் அறியப்படும். அங்ஙனமாயினும் கண்ணகியாதல், கோவலனாதல் அவர்கள்மேற் செற்றங் கொண்டாரல்லர். கவுந்தியடிகள் சினந்து சாபமிட்டனர். சினமென்பது துறவறத்தினர்க்கே முற்றிலும் கடியப்பட்டது; இல்வாழ்வார்க்கு அங்ஙனமன்று. இங்கே கவுந்தியடிகளின் செயல் எத்தன்மையதென்னும் ஆராய்ச்சியின்று. இல்லறத்திற்குரியவராகிய கண்ணகியும் கோவலனும் நெறிகடந்தோர் கூறிய கொடுஞ் சொற்களையும் பொறுத்துக் கொண்டனர் ஆகலின்

"துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வாய்
இன்னாச்சொ னோற்கிற் பவர்"

என்னும் பொய்யாமொழியின்படி அவர்கள் துறவறத்தோரினும் தூய்மையுடையராவர் எனல் சாலும். இனி அவர் பொறுத்ததே யன்று; சாபத்தால் அன்னோர் நரியாயினமை உணர்ந்த மாத்திரத்தில் மிகவும் நடுங்கிவிட்டனர். 'பெறுதற்கரிய மக்கள் யாக்கையைப் பெற்ற விவர் ஒரு சிறு பிழையால் அந்தோ இவ்விழிபிறப் புற்றனரே' என அவர் திறத்து இரங்கினர். 'நெறியின் நீங்கியோர் நீரல கூறினும் அறியாமை யென்று அறியல்வேண்டும்' என அவர்கருதியது எவ்வளவு பெருந்தகைமையைக் காட்டுகிறது! இதனால்

"எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானும்
மாணுசெய் யாமை தலை" (இன்னா செய்யாமை-எ)

என்னுங் கொள்கையை அவர் உடையராதல் தெள்ளிது. எனினும் தவத்துறையினிற்கும் கவுந்தியடிகட்குத் தாம் அது கூறுதல் பொருந்தாமையின், தாம் மனத்தால் அங்ஙனம் சிந்தித்துக் கொண்டு, 'உய்திக்காலம் உரையிர்' என்பதனையே வாக்காற் கூறினரென்க. கணவற்கும் மனையாட்கும் நெஞ்சு ஒன்றாய தென்பதும் இதனாற் பெறப்பட்டது.

(தொடரும்)

---

# சாணக்கிய நீதி நூல்

[கா. சுப்பிரமணிய பிள்ளை M.A., M.L.,]

(ஈச-ம் பக்கத் தொடர்ச்சி)

சாணக்கியநூல் பதினைந்து காண்டங்களுடையதாகவும் ஒவ்வொன்றிலும் பல அதிகாரங்கள் அமையப்பெற்றதாயும் விளங்குகின்றது. ஒவ்வோரதிகாரத்திலுமுள்ளவற்றைத் தனித்தனி கூறின் விரியுமாதலின் நூலுளடங்கியபொருளைப் பொதுப்படத் தொகுத் தியம்புதலையே கருதுகின்றோம். சாங்கியம், யோகம், உலோகாயதம் என்னும் மூன்றின் கொள்கைகளைக் குறிப்பித்து மூன்றுவேதங்களையும் சிறப்பாக முதற்கண் எடுத்து ஓதுகின்றது. உழவு, பசுக்காவல், வணிகம் என்பவற்றைப்பற்றிய நூலினையும் அரசநீதிநூலினையும் தழுவிப்பேசுகின்றது. மூன்றுவேதத்தோடு அதர்வவேதத்தையும் இதிகாசவேதத்தையுஞ் சேர்த்து இவையாவும் வேதங்களெனப்படுகின்றன. பின்னர் அறங்களையும் எடுத்துக்கூறி நான்குவருணத்தாருடைய சிறப்புத்தொழில்களையும் விதந்தோதுகின்றது. வைசியர்க்குஞ் சூத்திரர்க்கும் உழவும், வணிகமும், பசுக்காவலும் பொதுவாகக் கூறப்பட்டன. கல்வியும், வேள்வியும், தானமும் வைசியர்க்குச் சிறப்பாகவும் இருபிறப்பாளர்க்கு ஊழியஞ்செய்தலும் கைத்

தொழில்வேலையும் அரண்மனைப்பாடகர்தொழிலும் சூத்திரர்க்குச் சிறப்பாகவும் சுட்டப்பட்டன. சாதிப்பிறழ்ச்சி ஏற்படக்கூடா தென்றும் ஆரியருடைய வழக்கங்களைப்பின்பற்றி அரசன் தன் கடமையைச் செய்யவேண்டுமென்றும் கூறப்பட்டது. உண்மை, சுத்தம், கொடுமையின்மை, பொறுமை, இரக்கம் இவை யாவர்க்கும் பொதுக்குணங்களாம். தண்டம் அதிகமாகவும் குறைவாகவு மில்லாமல் குற்றத்துக்குத் தக்கவாறு இருக்கவேண்டுமென்று விதிக்கப்பட்டது. இதிகாசமென்பது புராணம், சரித்திரம், கதைகள், தருமசாத்திரம், அர்த்தசாஸ்திரம் என்னும் இவைகட்குப் பொதுப்பெயராக வழங்குகின்றது. அரசன் கற்றவனாயிருத்தல் வேண்டுமென்றும் அறுபகை செற்றவனாயிருத்தல்வேண்டுமென் றுங் கூறப்பட்டது. மந்திரிகளும் குருக்களும் அரசனைத் தீயவழி யிற் செல்லவொட்டாமற்றடுத்தல்வேண்டும். மந்திரிகள் தக்க திறமையுடையவர்களாகவும் இரகசியத்தைப்பாதுகாக்கின்றவர்களாக வும் உலக அனுபவமுடையவர்களாகவும் பெரியகுடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவும்வேண்டும். அத்தகையராயிருத்தலோடு தீமையை விலக்கவல்ல அதர்வவேதக்கிரியைகள் அறிந்தவர்களாயிருத் தல்வேண்டும். மந்திரிகளை அரசன் பலவகையாகப் பரிசோதித் துத் தெரிந்தெடுக்கவேண்டும் அவர்கள் சமயம், பொருள், பெண்டிர், தற்பாதுகாப்பு இவற்றின்பொருட்டு அரசனுக்கு இடுக்கண் விளைக்கும் எண்ண மில்லாதவர்களா யிருக்கவேண்டும். ஒற்றர்கள் தாய் தகப்பனில்லாதவர்களினின்றுந் தெரிந்தெடுக்கப்பெற்றுச் சூழ்ச்சிக்குரிய பலவிதக் கலைகளையுங் கற்றவர்களாய் இருக்க வேண்டும். அவர்கள் சிடாாகவும், துறவியாகவும், இல்லறத்தனாகவும் வர்த்தகனாகவும், சாத்திரம்போதிப்பவனாகவும், தீக்கொழுத்தியாகவும், நஞ்சூட்டுபவனாகவும், பிச்சைக்காரப்பெண்பிள்ளைகளாகவும் வேடம்பூண்டு உண்மைதெரியும் ஆற்றலுடையவர்களாயிருத்தல் வேண்டும். ஒற்றர்வாயிலாக மந்திரிகளின்தன்மையையும், நகரவாசிகளின்தன்மையையும் நாட்டுக்குடிகளின் தன்மையையும் காவாகக் கலாம்விளைப்பவர்களின் சூழ்ச்சிகளையும் எதிரிநாடுகளில் தமக்கு ஒற்றுமையான கட்சிகளையும் பகைமையான கட்சிகளையும் அரசர் அறிந்துகொள்ளல்வேண்டும். எதிரிகளின் ஆட்களைத்

தன் பக்கம் திருப்பிக்கொள்ளும் உபாயங்களை அரசன் கைக்கொள்ளவேண்டும். அரசனது ஆலோசனைச்சங்கத்தில் நடப்பன யாவும் மிகவும் அந்தரங்கமாக இருத்தல்வேண்டும். ஆலோசனைச் சபை 12, 21 அங்கத்தினரை உடைத்தாயிருத்தல்வேண்டும். ஆலோசனைச் சபையாரிடத்தில் கவலைத்தாழ்வு, குடி, இணை விழைச்சி, தூக்கத்திற்பேசும் வழக்கம் முதலிய கெட்டபழக்கங்களிருந்தால் இரகசியங்கள் வெளிப்பட்டு விடுமாதலால் அப்பழக்கங்களில்லாதவர்களே ஆலோசனைக்குரியவராவர். இரகசியத்தை வெளியிடுபவர்களுக்குக் கடுந்தண்டம் விதிக்கவேண்டும். எல்லாருடைய கருத்துக்களையும் அரசன் உசாவி அறியுங்கால் தன் உள்ளக்கருத்தைப் பிறர் அறியாவண்ணம் அரசன் பாதுகாத்துக் கொள்ளல்வேண்டும்.

அரசனது தூதர்களும் எதிரிகளினுடைய வேலைக்காரர்களோடு நட்பாய்ப் பழகிக்கொள்ளுதல்வேண்டும். தமது அரசன் கருத்தைச் செவ்வையாகத் தெரிவிப்பவர்களாயும், பேசுவதில் மிகவும் திறமைவாய்ந்தவர்களாயும் தந்திரமுடையவர்களாயுமிருத்தல்வேண்டும். பலரும்பேசுவதைக்கேட்டு உண்மையுணரும் ஆற்றல் உடையவர்களாயிருத்தல்வேண்டும். அவர்கள் மிக வீரமுடையவர்களாய்த் தம் அரசன் பணித்தவற்றை எதிரியினிடம் அஞ்சாது உரைப்பவர்களாயிருத்தல்வேண்டும். துன்பம் வருங்கால் தப்பித்துக்கொள்ள வழிதெரிந்தவர்களா யிருத்தல்வேண்டும். தூதிலக்கணம் கூறியபின் இந்நூலானது அரச குமாரர்களை அரசன் நடத்துமுறைமையையும் எதிரிகளோடு சேரவொட்டாது பாதுகாக்குமுறைமையும், குற்றங்காணின் அவர்களைக் காவாகத் தண்டிக்குமுபாயமும் இயம்புகின்றது. ஒருவனும் அரசுசெய்யலாம். ஒரு கூட்டத்தாரும் அரசுசெய்யலாம் என்றும், குடியரசு நிலையுடைத்தென்றும் இந்நூல் மொழிதலால் ஆதியில் குடியரசுமிருந்ததென்பது தெரியவருகின்றது. ஒரே குமாரனுயிருந்தாலும் தீயவழியிற்செல்பவனுக்கு முடிசூட்டக்கூடாதென்பது இந்நூலாசிரியர் கருத்து. அரசனுக்கு நோய் காரணமாகவோ, வயது காரணமாகவோ மக்கட்பேறெய்துதல் இயலாதெனின் உறவினரையாவது நட்பினரையாவது தன் மனைவியோடுசேர்ந்து புதல்

வரைத் தோற்றுவிக்கும்படி ஏற்பாடு செய்யலாமென்று இந்நூல் கூறுகின்றது. அரசர்கள் நாடோறும் செய்யவேண்டிய கடமைகள் ஓரதிகாரத்துள் ஓதப்பட்டன. குடிகளுடைய நன்மையைத் தன்னுடையதாகவே கருதி அரசன் எப்போதும் முயற்சியுடையோனுயிருத்தல் வேண்டுமென்று முடிவாக விதிக்கப்பட்டது. அரசனுடைய அந்தப்புரம் அமைக்குமுறையும் அதில் நங்கையரைப் பாதுகாக்குமுறையும் விரிவாக இந்நூலினுட்காணலாம். தீயினலும், நச்சுப்பிராணிகளாலும் கெடுதிவராதபடி அந்தப்புரம் பாதுகாக்கப் படவேண்டுமென்று குறிக்கப்பட்டது. அரசன் நாடோறும் உண்டு உடுத்தி வாழ்கின்ற விதத்தினைக்கூறி இந்நூலின் முதற்பகுதி முற்றுப்பெறுகின்றது.

பின்னர் இரண்டாம் பகுதியுள் ஊர்களமைக்கும் முறையும் நிலங்களைக் குடிகட்குப் பகுத்துக்கொடுக்குமுறையும் கோட்டைகளமைக்குமுறையும் கோட்டைகளுக்குள் கட்டிடங்களமைக்குமுறையும் முதற்கண் ஓதப்பட்டன. நிலத்தைப் பகுத்துக் கொடுப்பதிற் பயிரிடுகிறவனுக்கே நிலம் ஆயுள்வரை கொடுக்கப் படவேண்டுமென்றும் பயிரிடாதவனிடமிருந்து நிலத்தை எடுத்துக்கொள்ளவேண்டுமென்றும் விதிக்கப்பட்டது. ஊர் நடுவில் அபராஜிதர், அப்ரதிகதர், ஜயந்தர், வைஜயந்தர், சிவனர், வைசிராவணர், அசுவினிதேவர் என்னுந்தெய்வங்கட்குக்கோயில்களும், ஸ்ரீமதுக்கிரகமும் (கட்கூடமும்) இருத்தல்வேண்டுமென்று விதிக்கப்பட்டது. இந்நீதிநூலார் முறைக்கும் சுக்கிரநீதியாசிரியர் சிவபிரான், திருமால், கணேசர், ஆதித்தர், அம்பிகை என்பார்க்குக் கோயில் அமைக்கவேண்டுமென்று விதித்தமுறைக்கும் வேறுபாடு காண்க. சாணக்கியர்காலத்தே சுக்கிரநீதியுட்போந்த கடவுள் வழிபாடு மகதநாட்டில் நிகழ்ந்திலதுபோலும். ஆயினும் சிவவழிபாடொன்று சொல்லப்படுகின்றது. சாணக்கியர்காலத்து வணங்கப்பட்ட பிறதெய்வங்கள் பிற்காலத்தில் வழிபாட்டை இழந்தனபோலும். இத்தெய்வங்களுள் விஷ்ணு, உமாதேவி, கணபதி, சுப்பிரமணியர் சூரியர் முதலியோர் கூறப்படாமை காண்க.

பின்னர் நீதிகாப்பாளர் கடமையும் வரி வசூலிக்குமுறையும் கணக்கர் கடமையும் அரசாங்க வேலைக்காரர்கள் வரித்தொகையில் அபகரிப்பதைக் கண்டுபிடிக்குமுறையும் அவர்கள் நடத்தையைப் பரிசோதிக்குமுறையும் அரசன் பிறரை நியாயம் விசாரித்தற் பொருட்டு அழைக்குமுறைகளும் இரத்தினங்களின் பரிசோதனையும் வெவ்வேறதிகாரங்களில் விதந்தோதப்பட்டன.

இரத்தினங்களுட் பல அவை கிடைக்கும் இடத்தின்பெயரையே தமக்குப் பெயராகவுடையன. தாமிரபர்ணியில்விளையும் ஒருவிதமணி 'தாமிரபருணிகா' எனப்பட்டது. பாண்டியநாட்டிலுள்ள மற்றொருமணி 'பாண்டிய கவாடம்' என்று பெயர்பெற்றிருக்கிறது. பலவகை முத்துக்களைப்பற்றிய விவரமும் இந்நூலுட் காணப்படுகின்றது. அக்காலத்தில் முத்துமாலைகளும் 1008 முதல் பத்துவரையுள்ள கோவைகளால் அமையப்பெற்றிருந்தனவெனத் தெரியவருகிறது. சுரங்கங்களை வேலைசெய்யுமுறைமையும் தங்கத்தைப் பரிசோதனைசெய்யும் வகையும்,அரசனது நாணயக்காரனது கடமையும் தனித்தனி விளக்கப்பட்டன. வணிக மேற்பார்ப்போர், ஆயுதசாலை அதிகாரிகள், நிறையளவைப் பரிசோதகர்முதலியோர்கடமைகளும் பலவகை அளவைகளினிலக்கணமும் சுங்க அதிகாரிகள் கடமைகளும் சுங்கம் விதிக்குமுறையும் நெய்தற்றொழில் அதிகாரிகள் கடமையும்,உழவினை மேற்பார்க்கும் முறைமையும் தெளிவாக ஓதப்பட்டன. கள்ளுக்கடைகளை மேற்பார்க்கும் அதிகாரிகளின்கடமையும் செவ்வையாகக்கூறப்பட்டுள்ளது, தக்கமனிதர் கடையிற் கள் வாங்கி வீட்டுக்குக்கொண்டுபோய்ச் சாப்பிடலாம். மற்றவர் கள்ளுக்கடைக்குள்ளேபோய் சாப்பிட வேண்டுமென்றும் இந்நூல் விதிக்கிறது. திராட்சைக்கள்ளே மது வெனப்படும். கசாப்புக்கடை மேற்பார்ப்பார் கடமை கூறுமிடத்து மற்ற உயிர்களைக்கொல்லாத மீன்களையும், பறவைகளையும், அத்தன்மையுள்ள மான் முதலிய விலங்குகளையும் கொன்றவனுக்கு அபராதம் விதிக்கவேண்டுமென்று மொழிந்தமை காண்க.

பாத்தையர்க்குத் தொழிற்றீர்வை விதிக்கப்பட்டுள்ளது. அரண்மனைக்குத் தக்க பாத்தையரை மிக்க பணங்கொடுத்து

நியமித்தல் கூறப்பட்டது. பரத்தையர்மக்கள் கூத்தும் இசையுங் கற்றற் பாலர்—இப்பகுதியுட் போந்த மற்றப் பொருள்கள் யாவையெனில் ஓடம், கப்பல் முதலியவற்றின் மேற்பார்வை பசுக் காவல், குதிரை, யானை, தேர், காலாள் என்னும் நால்வகைப் படைகளி னிலக்கணம் அவற்றின் மேற்பார்வை, படைத்தலைவர் கடமை, நாட்டில் வந்து போவார்க்கு அனுமதிச்சீட்டு கொடுத் தல், நகர்காவலர் கடமை முதலியவையாம்.

மூன்றாம் பகுதியுள் சட்ட சம்பந்தமான யாவும் கூறப்பட் டன. எண்வகை மணத்துள் இருதிறத்தார்க்கும் ஒத்திருந்தால் எவ்வகையும் ஆம் எனவும், முதல் நான்கு வகைக்குத் தவிர மற்றவைகட்கு இடை நடுவில் விலக்கு ஏற்படலாமென்றும் விதிக்கப்பட்டது.

குடும்பச்சொத்து இறங்குமுறை பல்வகைப் புதல்வர்களின் உரிமைகள், எல்லை வழக்குகள் நிலவழக்குகள் கட்டிடங்கள் கட்டு முறை, கட்டிட விற்பனைச்சட்டம், கடன்மீட்டல், அடைக்கலப் பொருளைப் பாதுகாக்குங் கடமை, ஒப்பந்த நிறைவேற்றாமைக் குத் தண்டம், சாக்ஷிகள் கடமை, அடிமைகள் வேலைக்காரர்கள் என்பார்க்குரிய சட்டம், வேலைக்காரர் பொதுமுயற்சி, வழிப்பறி பறித்தல், அவதூறு பேசுதல், மோதுதல், சூதுவிளையாடல் முத லியவற்றிற்குரிய தண்டம் ஆகிய இவை யாவும் இப்பகுதியுள் விளக்கப்பட்டன.

நான்காம் பகுதியுள் கைக்கோளன், வண்ணான், தோட்டி, இசையாளன்,வர்த்தகன் முதலியோர்களைப்பாதுகாத்தும் தீயோர் களைத் தண்டித்தும் குழப்பத்தை யடக்குமுறை முதற்கட் கூறப் பட்டது. தீ, நீர், தொற்றுநோய், பஞ்சம், எலி, பாம்பு முதலிய வற்றால் வரும் கேடுகளை நீக்கும் உபாயம் கூறுமிடத்து, முழுமதி நாளிலும் முளைமதிநாளிலும் எலிவணக்கம் விதிக்கப்பட்டது. இளைஞருள் குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கும் விதமும், எதிர் பாராத மரணத்திற் குட்பட்டாரைச் சோதிக்கு முறையும் உண்மை யறிவதற்காகக் குற்றவாளிகளைத் துன்புறுத்துதலும் அங்கக்குறைக்குப் பதிலாக அபராதம் விதித்தலும், பெண்

டிர்க்கு இடையூருன குற்றங்கட்குத் தண்டனையும், கொலைக் குற்றத்திற்குத் தண்டனை முறைகளும் கூறப்பட்டன.

ஒரு பெண்பிள்ளையை ஒருவனும் அவள் கருத்திற்கு மாருகப் புணர்தல்கூடாது. தெருண்டு மூன்ருண்டுவரை மணமாகாத பெண்ணை அவள் சாதியிலுள்ள ஒருவன் அவள் கருத்திற்கு இணங்கச் சேருதல் குற்றமாகாது. எழு தீட்டுக் கழிந்தபின் மணத்திற்கு ஒப்புக்கொண்டவளோடு சேருதல் குற்றமில்லை. பகை, காடு, வெள்ளம், ஆதாவின்மை முதலியவற்ருல் வரும் கேட்டினின்று ஒரு பெண்பிள்ளையை ஒருவன் காப்பாற்றினுல் அப்போது அவள் ஒப்புக்கொண்ட காலவெல்லைவரை அவளோடு சேர்ந்திருக்கலாம் என்னும் விதிகள் இப்பகுதியிற் காணப்படுகின்றன.

ஐந்தாம் பகுதியுள் அரண்மனை அதிகாரிகளைப் பரிசோதித்துத் தண்டித்தலும் அவர்களுக்குச் சம்பளம் விதிக்கு முறையும், அவர்களை மறைவாகத் தண்டிக்குமுறையும், நிதிச்சாலையை நிறைக்கு முறையும் கிளந்தமை காண்க.

ஆரும்பகுதியுள் தக்க அரசின் இலக்கணமும் சமாதானஞ் செய்யும் முறையும் கூறப்பட்டன.

எழாம் பகுதியுள் சமாதானம், சண்டை, நடுவுநிலை, போர்க்குச் செல்லல், உதவிபுரிதல், ஒருவகையாரோடு சமாதானமும், மற்ருெரு வகையாரோடு போரும் மேற்கொள்ளுதல் என்னும் அறுவகை உபாயங்களைப் பற்றியும் சேனைகளைச் செம்மையாக வைத்திருக்கு முறைகளைப்பற்றியும், தக்க நட்பினரைத் தேடிக்கொள்ளு முறையினையும், சண்டையில் முன்பின் படைகளை நடத்து முறைமையும், காலம், இடம், மாற்ருன்வலி என்பவற்றை அறிந்து அவற்றிற் கேற்றவாறு அரசன் காரியங்களை நடத்திக்கொள்ளு முறைமையும், வெற்றிபெற்ற அரசன் வென்ற நாட்டை நடத்தும் முறைமையும், துணைவலி தேடிக்கொள்ளு முறைமையும், சமாதானம் செய்தலும் அதனை 'மறுத்தலுமாகிய இரண்டையும் மேற்கொள்ளுங் காலமும் பிறவும் விளக்கப்பட்டன.

நட்பு, பொன், நிலம் என்னும் மூன்றைத் தேடுவதில் நிலத்தைத் தேடிக்கொள்ளுவதே சிறந்ததென்றும், அதன்வாயிலாகப் பிற இரண்டையும் தேடிக்கொள்ளலாமென்றும் இந்நீதிநூல் கூறுகிறது. திருவள்ளுவநாயனுர் நட்பினையே சிறப்பாகக்கூறியதனை இதனோடு ஒத்துப்பார்க்க.

> 'செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
> வினைக்கரிய யாவுள காப்பு' (நட்பு-க)

எட்டாம் பகுதியுள் அரசர்க்கும் குடிகளுக்கும் ஒழுக்கக் கேட்டினுலும் தீ, நீர், நோய், பஞ்சம் முதலியவைகளாலும் விளையும் தீமைகளைக்கூறி அவற்றை விலக்குமுறையும் காட்டப்பட்டது.இதனுள், தோற்ற அரசனைத் தக்கமுறையாக நடத்துமுறைமையும், ஊரார்க்கு வேண்டிய வசதிகளை ஒழுங்குபெற அமைக்கு முறைமையும் நன்கு இயம்பப்பட்டன. ஒருவனுக்குச் சொல்லினுற் கேடுசெய்தல் பெருந்தவருே, பண இழப்பு நேர்வித்தல் பெருங் கெடுதியோ என்று ஆராய்வான் எடுத்துக்கொண்டு கௌட்டில்லியர் பண இழப்பு நேர்வித்தல் பெருங்கெடுதி என்றுரைத்தனர். மற்றுே ராசிரியர் தீயசொல் இருதயம் வரை சென்று சினத்தையம், மனத்துன்பத்தையும் விளைப்பதால் அதுவே பணக்கேடு விளைப்பதிலும் கெடுதியானதென்முர். திருவள்ளுவநாயனுர் 'யாகாவாராயினும் நாகாக்க' 'ஆருது நாவினுற் சுட்ட வடு' என்றது காண்க. இப்பகுதி, சண்டையில் இடர்ப்பட்ட சேனையினை மீட்டு நலம்பெறுவிக்கும் விதத்தையும் நட்பினரால்வருங் கெடுதியை விலக்கும் முறையினையும் கூறுவதோடு முடிகின்றது.

ஒன்பதாம் பகுதி காலமும், இடமும் வலிநோக்கி உட்பகை,புறப்பகைகளை வெல்லும் சூழ்ச்சிகளைப்பற்றிக் கூறுகின்றது.

பத்தாம்பகுதி போரிற் படையை நடத்துதல், பாசறையமைத்தல், சண்டையிடுதல், பல்வகைப்படைகளின் கடமை, படைகளின் அணிவகுப்பு முறைமை முதலிய போர்த்தொழில்களனைத்தையும்பற்றி யோதுகின்றது.

(தொடரும்)

# *திருவாசகத்திலொரு வாசகம்

[கோயமுத்தூர், பண்டிதர் அ. கந்தசாமி பிள்ளை.]

உலகை உய்யக் கொண்டருள அவதரித்தருளிய நந்தம் மணிவாசகப் பெருந்தகையார், தாம் திருவாய் மலர்ந்தருளிய திருவாசகத்தில், தம்மையாளுடைய சிவபெருமான், தமக்கு அருளிய அருட்டிறங்கள் பலவற்றையும், பிறர்க்கு அருளிய அருட்டிறங்கள் பலவற்றையும் வியந்து பாராட்டிக் கூறுகின்றனர். அவற்றுள், இறைவன் தம் பொருட்டு அருளிய அருட்டிறங் கூறும் வாசகங்களுட் பல, தமது சரிதத்துக்கு அகச் சான்றுகளாகித், தம் சரிதம் கூறவந்த புராணங்களுக் கெல்லாம் மூலப்பொருள் (Materials) பயந்து நிலவுகின்றன. அவ்வாசகங் களிற் பல, அப்புராணங்களின் மூலமாகத் தாம் குறிக்கும் சரிதம் இன்னவென்று விளங்கி அனைவராலும் அறியப்பட்டு வருகின்றன.

இனி, இறைவன் பிறர்பொருட்டு அருளிய அருட்டிறங் கூறும் வாசகங்களுட் பல, தாம் குறிக்கும் சரிதம், இவ்விடத்து நிகழ்ந்தது ; இன்ன வரலாற்றினது என்று பொது வகையாலும் அறிய முடியாதவையாய் நிலவுகின்றன. அவை, எங்கோ ஓவ் வோரிடங்களில் நிகழ்ந்தனவும், இறைவனது அற்புதத் திருவிளை யாடல்களை விளக்குவனவுமாய் அவ்வப் பக்கத்துள்ள ஒரு சிலரால் மட்டும் அறியப்பட்டு வருகின்றன.

திருவாசக விரிவுரை மாசிகையாக வந்த காலத்து, கீர்த்தித் திருவகவலில் வரும்

தேவூர்த் தென்பாற் றிகழ்தரு தீவிற் கோவார் கோலங் கொண்ட கொள்கையும் (எக, எஉ) என்னும் வாசகத்துக்கு அறி ஞர் ஒருவர் எழுதியனுப்பிய குறிப்பு ஒன்று, இச்சரிதம் நிகழ்ந்த விடம் இது ; அது இன்ன வரலாற்றினது என்பதை விளக்கிற்று.

---

* சில வருடங்களின் முன், இப்பக்கத் துதித்தொழிந்த ஒரு சிறு பத்திரிகையின் வேறு தலைப்போடு வெளிவந்த இக்கட்டுரை சில திருத் தத்தோடு நம் செல்வியகத்தும் வெளியிடலாயிற்று.

இதுபோன்ற மற்ருெரு வாசகம் குறிக்கும் சரிதமொன்றும் சமீபகாலத்தில் விளங்கலாயிற்று. அது, அக் **கீர்த்தித் திருவகவலில்**, மொக்கணியருளிய முழுத்தழல்மேனி சொக்கதாகக் காட்டிய தொன்மையும் என்னும் (௩௩, ௩௪ ஆம்) அடிகளிற் குறித்த சரிதமாம்.

சமீப காலத்தில் வெளிவந்த **கோங்குமண்டல சதகம்**, அச்சாகா முன்னம் கதை விளங்காத பாடல்களில் ஒன்ருயிருந்தது,-

எத்துசிவ பத்தியாஞெரு செட்டிமுன் னீசுரனைத்
தோய்த்து முழுகித்தொழ வெழவாண்டொரு சூழ்ச்சிகற்றேன்
பூத்தவனக் குடக்கோட் டூரில் மொக்கணியைப் புதைக்க
வாய்த்த சிவலிங்கமானதுவுங் கொங்கு மண்டலமே.

என்னும் பாடல்,

இப்பாடலின் சரிதம், முதலில் விளங்காதிருந்து, பின், கொங்குமண்டலத்தின் ஒவ்வொரு நாட்டிற்கும் **தலையூர்க** ளிவையெனக் குறிக்கும் பாடலொன்றில் "......... குடக்கோட்டூர் குள்ளந்துறைப் பதியும்........ஆறை நாடே" என்று இருக்கக் கண்டு, அங்குச்சென்று விசாரித்ததில், விளங்கலாயிற்று. இம்முயற்சியின் பயனே இச் சதக வெளியீட்டாளருக்கு முழுதும் உதவுவதாயிற்று.

**குடக்கோட்டூர்**—இவ்வூர் **கோட்டூர்** என வழங்கும் பிறவூர்களின்றும் பிரித்தறியக் **குடக்** :கோட்டூர் என வழங்கியதாகும். **கீழ்க்கோட்டூர்** (மணியம்பலம்) என்னும் ஒரு தலம் **கருவூர்த்தேவர் திருவிசைப்பாப்** பெற்றிருப்பதும் ஈண்டு அறிதற்பாலது. கொங்கேழி லொன்ருகியதும், வன்றொண்டப் பெருந்தகையார் முதலைவாய் மதலையழைத்த சிவதலமுமாகிய **அவிநாசியம்** பதியினின்று வடக்கே போகும் பாதையில் ஐந்து கல் தூரம்சென்று, சேவூர் (சேயூர்) என்னும் ஊரையடைந்து, அங்கிருந்து கொடி வழியில் ஒரு மூன்று நாழிகை வழிசென்ருல், அங்கே அழிந்து கிடக்கும் சிவாலயமும் ஒரு நீரோடையும் உள்ள பள்ளமொன்று காணப்படும். இதனை யிங்குள்ளோர் **குடக்கோட்டூர்ப் பள்ளம்** என்

கின்றனர். இவ்விடமே கொங்குமண்டல சதகம் குறிக்கும் குடக் கோட்டூர் இருந்த இடமாம். இக்கோயிலே மோக்கணீசுவரசாமி கோயில் என்றும் அந்நீரோடையைத் தாழையூற்று என்றும் கூறுகின்றனர். இவ்வூரழிந்து சுற்றிலும் காடு மேடுமாகக் காணப் படுகிறது. கோயிலுள், சிவலிங்கமில்லாத வெறும் பீடமும், உடைந்துபோன விக்கிரகங்களும், ஒரு சிங்க விளக்கும்* காணப் படுகின்றன. விமானம் அழிந்தும், கர்ப்பக் கிருகமட்டும் அழி யாமலிருக்கிறது. மடைப்பள்ளி முதலியவை யெல்லாம் இடிந்து அழிந்து கிடக்கின்றன. சிலாசாசனம் இருப்பதாகக் கூறும் ஒரு பாறை மதிலின் வெளிப்புறத்தில் கள்ளியால் மூடப்பட் டிருக்கிறது. இவ் வாலயத்துக்குரிய உற்சவ விக்கிரகங்களிற் சில மேற்கூறிய சேவூரில் வாலீசுவா சுவாமி ஆலயத்துச் சேம மாக வைக்கப்பட் டிருக்கின்றன. இச் சேவூரார் சொல்வதி லிருந்து ஒரு இருநூறு வருடங்கட்கு முன்பே யிக் குடக்கோட் டூரும், இம் மொக்கணீசுவரமும் அழிந்து போயிருக்க வேண்டு மென ஊகிக்கப்படுகிறது.

**மோக்கணி**:—மொக்குதல்-குதட்டித் தின்னுதல்; "கொக்கு மொக்கிக் கக்கிவிக்கு மச்சோலைக் குறுங்குடியே" என்னும் ஒட்டக்கூத்தர் பாடலிலும் இப்பிரயோகம் காணலாம். குதிரை கள் தம்மிச்சையி லுண்ணும்படி கொள்நிரப்பி யணிந்து (கட்டி) விடுதல்பற்றி யிக்கொள்ளுப் பைகள் மொக்கணி என்னப்படும். இதனை மொக்கணி யென வழங்குகின்றன.

(தொடரும்)

---

* சிங்க விளக்கு-இது பாவை விளக்குப் போன்றது. நரசிங்க முனையர் கட்டிய ஆலயங்களிலெல்லாம் இச் சின்னங்கள் இருக்குமென் றும், நகரத்தாரால் புதுக்கப்படும் முன், கோடுமுடிச் சிவாலயத்து இச் சிங்க விளக்குகள் இருந்தனவென்று கூறுகின்றனர்.

# சைவ சமயத்தின் தற்கால நிலை

[எஸ். சச்சிதாநந்தம் பிள்ளை B. A., L. T.]

(கஉஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

பிறநாட்டு மூதறிஞர் நஞ்சமய உண்மைகளையறிந்து போற்று கிறார்களென்பதையும், இன்னுமறிய முயன்று வருகின்றார்கள் என்பதையும் நம்மவருணர்தல் வேண்டும். காலங்காட்டு மியல்பிற் கேற்பப் பரந்த நோக்கோடு நன்னெறி நின்றுழைத்த லொன்றே நமது கடமை. அவ்வுழைப்பின் பயனைக் குறித்தாராய்தல் நங் கடனன்று. * அது இறைவன் திருவுள்ளப்படி யமையும். "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்றன்றோ நம்மாசாரியர் அருளிச் செய்துள்ளார்.

---

* ஸ்ரீ ரவீந்திரநாத தாகோரைப் பத்திரிகைப் பிரதிநிதி யொருவர் பம்பாயிற் கண்டு, "கவீந்திரரே, தங்கள் விசுவ பாரதியின் மூலமாய் மேல்நாடுங் கீழ்நாடும் நட்புரிமைபூண்டு ஒற்றுமைப் பட்டுவிடுமோ? மக்களி யாவரும் சகோதரவாஞ்சை காட்டுவரா? முடியாக் காரியத்திற்கன்றோ முயற்சி செய்கின்றீர்கள்?" என்று கேட்டபோது, அப்புலவர்பெருமான் அளித்தவிடையின் ஓர் பகுதி கவனிக்கத் தகுந்தது.

"Does not the Gita warn us :—Action is thy care, and not the fruits thereof." It is the effort; that counts and not the result. The effort is the most valuable of all things. I do not know whether my efforts will have any effect, nor do I seek to know. I know it is the truth, and I know that Truth has to be asserted against all contradictions. Only actions are our duty, not the greed thereof."

இதன் மொழிபெயர்ப்பு: கருமத்தைச் செய்தல் மட்டும் உன் பொறுப்பு. கரும பலன்களைப் பற்றிய கவலை உனக்கு வேண்டாம் என்று கீதை நமக்கெச்சரிக்கவில்லையா? முயற்சி தான் எவற்றிலும் சிறந்தது. யான் செய்யு முயற்சிகள் ஏதாவது பயன் தருமோ அன்றோ யானறியேன்; அதையறிய நான் ஆசைப்படவுமில்லை. அது (விசுவபாரதி) உண்மையானதென் றறிவேன். எதிர்த்துவரும் பொய்ம்மைகளைக் கடிந்து மெய்ம்மையை நாட்ட வேண்டுமென்று மறிவேன். கருமஞ் செய்தல் நங்கடமை, அதன் பயனைக்கோரும் பேரவாவன்று.

இவ்வுயரிய நோக்கங் கொண்டு, போக்கு வரவு சாதனங்கள் குறைந்திருந்த 2000 ஆண்டுகட்குமுற்பட்ட காலத்தில் அசோக சக்கிரவர்த்தி தாம் கைக்கொண்ட புத்த மதத்தை கிரீஸ், ரோம், எகிப்து, ஆசியா மைனர், சீனு, ஜப்பான், பர்மா, இலங்கை முதலிய தூர தேசங்களிலும் பரப்பினர். கிறித்துவமும் மகம்மதியமும் தாம் தோன்றிய நாள்தொட்டு இன்றுவரை உலகெங்கு முலவிப் பரந்து வருகின்றன. இந்து சமூகமும் கிரகணம் பிடிக்கப்பட்ட சந்திரன் நிலையிலிருந்து வருகிறது. இதற்கும் கிரகணம் விடுபடவேண்டாமோ? இந்துக்கள்மட்டும் உலகத்தோடொட்ட வொழுகாவிடில், வெகு விரைவில் தஞ்சிறப்பியல்பை யிழந்து பிறமதத்தராய் மாறி மறைந்து போதல் திண்ணம். இவ்வுண்மையை நன்குணர்ந்த இந்துமதப் பெரியார் வடஇந்தியாவில் ஆரிய சமாஜம், இந்து மகா சபை முதலிய அமைப்புகளை யேற்படுத்திக்கொண்டு தம் சமயத்தைக் காக்க வழிதேடி வருகின்றனர். தென்னுட்டுச் சைவரும் தஞ்சிறப்பியல்பை இழந்துவிடாது இப்பெருந் தொண்டிற் கலந்து கொள்ளுதல் கடமையாம். "ஞாலநின்புக ழேமிக வேண்டுந் தென் ஆலவாயில் உறையும்எம் மாதியே" என்று சம்பந்தர் செய்தருளிய விண்ணப்பம் சைவர் ஒவ்வொருவரும் செய்யும் விண்ணப்பமாதல் வேண்டும்.

சைவரிற் கற்ருரும் மற்ருரும் ஆசை யறுக்கு மிவ்வாசையைக் கொள்ளுங்கால், சமயப் பிரசாரஞ் செய்யுங் கற்ருர் இக்காலத்திற் கவனிக்கவேண்டிய கருத்துக்கள் சிலவுள: (க) பூத பௌதிக அறிவு நாளுக்குநாள் வளர்ந்துவரு மிந்நாளில் சைவசமயத்தின் அடிப்படையான கொள்கைகட்கு மாறுபடாத புதிய உண்மைகளை அறிஞர் எடுத்துரைப்பின் அவற்றை எற்றுக் கொள்ள வேண்டும். (உ) முன்னேர் காலத்திற் கேற்றதும் இக்காலத்துக்குத் தீமை விளைப்பதுமான வழக்கவொழுக்கங்கள் நஞ்சமய முன்னேற்றத்திற்குத் தடையாய் நிற்பின் அவற்றை நழுவவிடச் சித்தமா யிருக்கவேண்டும். (௩) ஆனல் நம் பண்டை நடையுடை பாவனைகளில் நமது முன்னேற்றத்துக்கு உண்மையில் இடைஞ்சல் செய்யாத எதையும்

கைவிடலாகாது: (ச) சமய வளர்ச்சிக்குச் சாதகமான முறைகள் பிறமதங்களிற் காணப்படினும் அவற்றைப் பேணிக்கொள்ளல் வேண்டும். (ரு) சைவக் கொள்கைகளை இந்நாளில் எங்கும் பரப்பப் புகுவோர், கால இயல்பு கருதி சுருதி, உத்தி, அநுபவம் என்னும் பிரமாண முறைவைப்பை மாற்றி அனுபவம், உத்தி, சுருதி என்றமைத்துக் கொள்ளுதல் நலம். (சு) சமயாசாரியர் திருவாக்குக்களையும் அவர் வாழ்க்கையையும் **பெரிய புராணக்** கண்கொண்டு பன்முறை காணவேண்டும். காணில் இந்நூற்றுண்டில் சைவ சமூகம் நால்வரைப் பின்பற்றி நலமுறல் எப்படி என்று விளங்கும். பன்னிரு திருமுறைகளின் அடிப்படையான கொள்கைகளை மறைத்தோ மறுத்தோ செல்லும் எந்த நூலும் எந்த ஒழுக்கமும் தள்ளப்பட வேண்டும். (எ) சைவ சமயப் பாதுகாப்பு நலங்கருதி, அகச் சைவ வேற்றுமைகளை அதிகமாய்ப் பாராட்டிக் கொண்டிருத்தல் கூடாது. இருமொழியிலுமுள்ள வேத சிவாகமங்களைப் பிரமாண நூல்களாகவும், நால்வரைச் சமயாசாரியராகவும் கொண்டு சிவசின்னமணிந்து சிவமூர்த்த வழிபாடு செய்வோ ரனைவரையும் சிறப்பியல்புடைச் சைவரே யென்று உரிமை பாராட்டிப் போற்ற வேண்டும். இவைபோன்ற கோட்பாடுகள் அறிஞர்க் கின்னும் பல தோன்றலாம். இவற்றைக் கருத்துட்கொண்டு கற்றோர் சமயப் பிரசாரஞ் செய்துவரின் சைவர்க்குள் ஒற்றுமையுணர்ச்சி பெருகும்.

மேலே குறித்தவாறு இங்கும் எங்கும் சைவவாளொளி வீசும்படி செய்தற் பொருட்டுக் கையாளவேண்டிய முறைகள் பலப்பல. கால இயல்புணர்ந்த மதிவல்ல அன்பர் சிலர் அவற்றைப் பல இடங்களில் தெரிவித்து வருகிறார்கள். அவற்றில் சிறந்தன சிலவற்றை மட்டும் ஈண்டுக் குறித்தல் போதும். சைவசமய பரிபாலனத்துக் கென்றே அமைந்துள்ள சிவாலயங்களும் சைவ மடங்களும் தத்தம் நிலையில் திரியாது நின்று செய்வன செய்யுமாறு செம்மைப்படுத்தலே முதலிலெண்ணத்தக்க உபாயமாம். இவற்றைச் சமய பரிபாலனத்தின் பொருட்டுச் செவ்வனே பயன் படுத்திக் கொண்டால், கொன்

டுள்ள விழுமிய நோக்கு நிறைவேறுதற்கு வேண்டிய இடம் பொருள் ஏவல் முற்றும் எளிதிற் கிடைக்கும். இவற்றை அரசாங்கத்தார் தம் மேற்பார்வைக் குட்படுத்தக் கருதி இந்து அறநிலையப் பாதுகாப்பு மசோதாவை ஆட்சிகொண்டு வந்திருப்பது யாவருமறிந்ததே. அம்மசோதா நிறைவேறிய முறை சரியோ தப்போ என்று வாதிப்போர் வாதிக்க. அதன் பகுதிகளிற் சிலவற்றைத் திருத்திவிட்டாற் போதுமென்று சிலர் கருதுகின்றனர். இவை யெவ்வாறுயினும் இச் சட்டம் நிறைவேறியிருக்கின்றது. இதனல் இப்போதுள்ள தீமைகளை விலக்கிக் கொள்ளுவதும் நன்மைகளை வளர்த்துக் கொள்ளுவதும் இனிமேல் பெரும்பாலும் பொது ஜனங்களைப் பொறுத்து நிற்கும். ஒரு சமய அறநிலையச் சொத்துக்கள் அச்சமய நன்மைக்கே செலவாதல் நேர்மையாம். இவ் வுண்மையைச் சைவர்கள் இனியேனும் நன்குணர வேண்டும். சைவத்துக்கு அரண் செய்யும் பல செயல்கள் இதுவரை செய்யப் பெறுதுள்ளன. அவற்றிற் சில ஈண்டுக் குறிக்கப்படும்; சைவக் கோயில்கள் மடங்களின் சொத்துக்களில் மிகுதி காணப்படுமாயின், காலம் இடம் தகுதி யாராய்ந்து, பழுது பட்டிருக்கும் சிவாலயங்களையும் சைவ மடங்களையுஞ் சீர்படுத்திக் கொள்ளலாம். சிவாகம விதிப்படியே சிவாலயங்களில் பூசை நடை பெறுதற்குச் சிவாகம முணர்ந்த ஆதி சைவர் வேண்டுமாதலால், சிவாகம பாடசாலைகளை வைத்துச் சிவ வேதியர்களை யவற்றிற் பயிலுமாறு ஊக்கி, அப் பயிற்சியோடு பத்தியுமொழுக்கமு முடையாரை ஆலயங்களில் அருச்சகராக நியமிக்கலாம். தேவார திருவாசக முதலிய பன்னிரு திருமுறைகளாந் தமிழ்வேத ஆராய்ச்சி முறைப்பட நடக்குமாறு, தமிழ் வேத பாடசாலைகளை ஆங்காங்கமைக்கலாம். இவற்றில் நல்ல வாலிபர்கள் வந்து சேர்ந்து தமிழ் மறை பயின்று அவ்வொலியைத் தமிழ் நாடெங்கும் பரப்பும்படி செய்யலாம். இன்னும் கோயில்கள் மடங்களின் சார்பாகப் பொதுக் கல்விக் கேற்ற பள்ளிக்கூடங்களைத் தோற்றுவித்து, அவற்றில் தற்கால முறைக்கேற்ற கல்வியோடு, சைவ சமய ஞானத்தையும் தமிழ்ப் பற்றையும் இனிது வளர்க்கலாம். இவற்றில் புத்தகசாலைகளை

யமைத்துப் பொது ஜனங்கட்குச் சைவ நூல்கள் எளிதில் கைக்கு எட்டும்படி செய்யலாம். அறிவொழுக்கங்களிற் சிறந்த சைவ சமயிகளை ஆலயங்கள் மடங்களின் சார்பான சமயப் பிரசாரகர் களாக நியமித்து அவர்க்குப் போதிய ஊதியமும் சிறப்புந் தந்து, அவ்வம்மடங்களிலும் ஆலயங்களிலும் மட்டுமேயன்றி அடுத்துள்ள ஊர்களிலும் சமயப் பிரசாரம் நிகழ்த்தலாம். சமய உண்மைகளை விளக்குந் துண்டுப் பிரசுரங்களை உற்சவகாலங்க ளில் இலவசமாகப் பொது சனங்கட்குத் தரலாம். சைவ சபைகளை அவற்றின் தகுதிக்கேற்ப ஆதரிக்கலாம். சமய நூல் களை இக்காலத்தினர்க் கேற்ற வகையில் பதிப்பித்துக் குறைந்த விலைக்கு விற்கலாம். இவை போல்வன இன்னும் பல. இவை யெல்லாம் எவ்வளவு பெரும் பயனைத் தரத்தக்கனவென்று கருத வேண்டும்.

சைவ மக்கள் ஒருமனப்பட்டு இப்பெருஞ் சமயத்தொண்டு கள் இனி நிகழத்தான் வேண்டுமென்று உறுதிகொண்டு விடுவா ராயின், அவ்வெண்ணம் நிறைவேறத் தடையில்லை. கோயி லதிகாரியை வசப்படுத்துவதினும் மடாதிபதிகளை வழிக்குக் கொணர்தல் கடினமென்று சிலர் கருதக்கூடும். சில்லாண்டு களாகச் சில மடங்களிழைத்துவந்த கொடுவினையே இச்சட்டந் தோன்ற இடந்தந்து தம்மைக் குழைக்கின்றதென்று மடாதி பதிகள் இப்போது நன்குணர்ந்திருப்பர். இனியேனு மிவர்கள் தாமமர்ந்திருக்கும் புனிதத் தானங்கட்கும் அணிந்திருக்கும் திரு வேடத்திற்கும் இழுக்குத் தேடா வகையில் வாழ்ந்துபகரித் தற்கு இறைவன் துணைசெய்ய வேண்டும். முன்னுளிற்போல் இவர்கள் யோகியர் ஞானியர்களாய் விளங்கா விடினும் போகட் டும். "நல்லது செய்தல் ஆற்றீராயினும் அல்லது செய்தல் ஓம் புமின். அதுதான் எல்லாரு முவப்பதன்றியும் நல்லாற்றுப் படூஉ நெறியு மாறதுவே"* என்ற பொருண்மொழிக் காஞ்சியை உள் ளத்திற் பதித்து அதன் வழி நடந்தால் சாலும். திருமடத்தின் தூய்மையைக் குறைக்கும் குணந் தொழிலுடையா ரெவரும்

* க. புறநானூறு.

மடத்திலணுக வொட்டாதபடி தடுத்து, சமய பரிபாலனத்திற் கருத்தைச் செலுத்தி, தமக்குச் சரியெனத் தோன்றும் சமயத் தொண்டுகளைக் காலத்தின் தேவை யறிந்து தம்மாலியன்ற வரையிற் செய்து வருவாராயின் அவர்களைத் தெய்வ மெனச் சைவர் போற்றுவர். கோயில்கள் மடங்களின் இழிவு குறித்து அவற்றின் அதிகாரிகளை மட்டும் நிந்தித்தல் சரியன்று. அவை கள் நாளுக்கு நாள் கெட்டு வருவதைப் பல ஆண்டுகளாகக் கண்டிருந்தும் ஒருபெரு முயற்சியுஞ் செய்யாது வாளா கிடந்த சைவ சனங்களும் இவ்விழிவிற்குக் காரணர்களே யாவர். போனது போக இனியேனும் சைவமடங்களில் உண்மைத் துறவிகள் வாசமும், தமிழ்க்கல்வி சமயக்கல்வி வாசனையும், நிலை பெறுமாறு செய்தல் சைவப் பொது ஜனங்களின் கடமையுமாம். இச் சமயத்தின் அருணெறிக்கு முரணிய சாதிச் சழக்குகளைக் கால இயல்பிற் கேற்பக் குறைத்து மாய்த்து, வேட நெறி நிற்குந் தம்பிரான்கள், புலவர்கள், பிரசாரகர்கள் வாயிலாகச் சமயத்தொண்டு செய்ய சைவமடாதிபதிகள் இனி விரைந்து முன் வருவர் என்று எதிர்பார்க்கலாம்.

திருமட அதிபர்கள் இன்னே செய்யவேண்டிய பிறிதொரு பெருங்காரியமு முள்ளது. இவர்கள் இதுவரை ஒன்றுகூடித் தஞ்சமயப் பாதுகாப்பு குறித்துக் கலந்து ஆலோசித்ததாகக் கேட்டுமறியோம். இவர்களி லொருவரை யொருவர் சந்தித்தால் யார் யாரை எப்படி வணங்குவது என்பது போன்ற அற்ப ஐயங் கள் இவர்கட்குக் கடத்தற் கரிய தடைகளாய்க் காண்கின்றன. இவ் வாய்க்காலைத் தாண்டாத இவர்கள் பிறவிக்கடலைத் தாண் டுவதெப்படி? சமய பரிபாலனஞ் செய்வ தெப்படி? இவர்கள் போற்றும் சமய குரவரில் அப்பருஞ் சம்பந்தரும் திருப்பூந் துருத்தியில் சந்தித்தபோது எப்படி நடந்துகொண்டார்க ளென் பதை, சைவமடத் தலைவர்களும், நன்கறிவார்க ளன்றோ? "அடியார்க் கடியேனாவேனே" என்ற ஆசாரியர் திருவாக்கு இவர்கட்கும் பிரமாணந்தானே? "தொண்டரொடு கூட்டு கண்டாய்" என்ற திருவாசகம் இவர்கட்கு வெறுவாசக மல்லவே? ஆச்சிரமத்துக் கொவ்வாத லௌகிகங்களை அளவுக்கு மிஞ்சி

புகுத்திக்கொண்டு இடர்ப்படுதல் எவர்க்கும் நன்மை தராது. திருந்திய நாகரிகமும் உயரிய சமயப் பொறுப்பும் படைத்த இப்பெரிய தொண்டர்கள் தம்முள் அளவளாவி ஆண்டவனுக்கும் அவனுறையும் நடமாடக் கோயில்களுக்கும் நல்லூழியம் செய்யக் கூசுதல் தகாது. பிற சமயங்களில் சமயத் தலைவர் அடிக்கடி ஒன்றுகூடிச் சமய பரிபாலனஞ் செய்வதை இனியேனும் நந்தலைவர்கள் கவனித்து தம்முட் கூட்டங்கூடிச் சமய அரசாங்கத்தைச் செவ்வனே நடத்தும்படி பணிவுடன் வேண்டுகின்றோம். சைவ சமயிகள் முன்பிழைத்த தீவினை காரணமாக இனியு மிவ்வதிபதிகள் செய்வன தவிர்த்தும் தவிர்வன செய்தும் சமயத்துக்கு இடையூறு விளைப்பரேல், பொது ஜனங்கள் இவர்களை எளிதில் விடமாட்டார்கள்; இவர்கட்குச் சுகம் எய்தாது. கடவுளுக்கு அஞ்சாவிடினும் கால சக்கரத்துக்கேனு மஞ்சித் தஞ்சமயக் கடமைகளை இனிது நிறைவேற்றுவார்கள் என்று பலர் ஆவலோடு எதிர்பார்க்கின்றனர்.

இவ்வண்ணம் கோயில்களும் மடங்களும் தத்தமக்குரிய சமயக் கடமைகளைச் சரிவரச் செய்யும்படி பார்த்துக்கொள்ளுவதோடு சைவ நன்மக்கள் இவற்றிற்கு வெளியிலும் பலவகையிற் பாடுபட வேண்டும். கோயில்களும் மடங்களும் பொது ஜனங்கட்கு நல்லறிவுச் சுடர்கொளுவத் தவறிய காலத்து, திருவருட் சம்மதத்தால் ஆங்காங்கு பல சைவ சபைகள் தோன்றின. அவற்றைச் சைவர்கள் பெரிதும் ஆதரித்தல் வேண்டும். அவற்றின் அங்கத்தவர்கள் தஞ்சமயச் சிறப்பியல்புகளைப் புறக்கணியாது போற்றும்படிக்கும் கல்வியறி வொழுக்கங்களில் மேம்பாடடையும் படிக்கும் ஊக்கந்தருதல் வேண்டும். கோயில்களுடனும் மடங்களுடனும் சபைகளும் ஒத்துழைக்க வேண்டும். இதற்கும் முன்னரே சைவ சபைகளெல்லாம் ஒரு மகாசபையின் உறுப்புக்களா யமைந்து நிகழ்தல் வேண்டும். இதனவசியத்தை நன்குணர்ந்த பெரியார் சில வருடங்கட்கு முன்னர் 'சைவ சித்தாந்த மகா சமாஜம்' என்னும் ஒரு பேரவையை நிறுவினார்கள். அது ஒழுங்காய் நடைபெற்று வந்த காலத்து அது சமயத்திற்கொரு பெருந் துணையாயிருந்தது. பரந்த நோக்கும் சமயப்

பற்றும் தாழ்வெனும் தன்மையும் படைத்த சைவர் இப்போது அச்சமாஜத்தில் பலராக இல்லாமையால், அஃதொரு வாடிய கொடிபோல் ஒல்கியுலேகின்றது. இப்பேரவையை மீட்டும் உயிர்ப்பித்தல் வேண்டும்.* இவ் வெண்ணம் பலருள்ளத்தி லிருந்து வருகிறது. ஆயினும் உருப்பெற்றுத் தொழிற்பட வில்லை. உண்மைச் சைவர் பலர் பெருந்திரளாய்ச் சேர்ந்து, தாம் போற்றத் தகுந்த ஓர் பெரியாரைத் தலைவராகக்கொண்டு, அச் சமாஜத்தின் அங்கத்தவர்களாய்ச்சேர்ந்து, முன்னினுஞ் சிறந்த வகைகளில் சமயத்தொண்டு செய்யவேண்டும். சென்னை யிலும் அதற்கருகிலுமுள்ள சைவ சபைகளின் பிரதிநிதிகளைக் கொண்ட ஓர் மகாசபை சில மாதங்கட்கு முன்னேற்பட்டது. அச்சபை தன் கிளைச்சபைகளின் தனித்தன்மையைக் கெடுக்கா மலே அவற்றை ஓர் அமைப்புக் குட்படுத்தி அவை செய்யுஞ் சமயத்தொண்டைப் பண்படுத்தவும், சமயபரிபாலனப் பெருங் காரியங்களைச் செய்யவும் முயன்று வருகிறது. இதுபோன்ற பல சபைகள் தாலூக்காவுக் கொன்றும் ஜில்லாவுக் கொன்று மாகத்தோன்றி யாவும் ஒரு மஹா சமாஜத்தின் உறுப்புக் களாய்த் திகழ்தல் பெரிதும் விரும்பத்தக்கது.

சைவ சமயம் இன்ன தென்றுணராது வீணே புறமதம் புகு வதைத் தடுக்கவேண்டி, கோயில்கள் மடங்கள் சபைகளாகிய மூன்றும் ஒன்று சேர்ந்து சமய உண்மை விளக்கும் பிரசாரத்தை இடைவிடாதுசெய்து வரவேண்டும். துண்டுப் பிரசுரம், இன்னி சைக் கீதம், யந்திர விளக்குப் படம், சினிமா முதலிய சாதனங் களையும் கிறித்துவ சமயிகளைப்போல் பயன் படுத்திக்கொள்ள வேண்டும். தீண்டாமையை ஒழிப்பதற்குந் திறமையானவழி, சைவ ஒழுக்கத்தைப் பரப்புவதொன்றே. எளிய கீழ்வகுப்புச் சகோதரர்களின் ஒழுக்க நிலை உயர்ந்து விடுமாயின், அவர்கள் ஆலயப்பிரவேசம் நாளடைவில் எதிர்ப்பின்றி இயல்பாய் நிகழ்ந்து விடும். அந்நாள் வருங்காறும் அவர்கட்கெனத் தனி யாலயங்

---

* இம்முயற்சி சென்னையில் சென்ற டிசம்பர் மாதத்தில் செய்யப் பட்டது. குறித்த நன்மை யுண்டாகலாம் என்று தோன்றுகிறது.

களைச் சமைத்து, அவற்றில் புனிதமான வழிபாடு நடைபெற எற்பாடுகள் செய்யவேண்டும்.

இவ்வழிகளில் சைவ சமய உண்மைகளை நாடெங்கும் பரப்பி, அச்சமயத்தோர் புறமதம் போதற்கு எண்ணுவண்ணம் நன்மைசெய்வதோடு, சமய உண்மையறியாது புறம்புறந்திரிந்த சகோதரர்கள் மீண்டுஞ் சைவம் புக விரும்பினால் அவர்களை அன்போடு வரவேற்றுக் கொள்ளவேண்டும். இது புதிய ஒழுக்கமென்றுகூறி மறுத்தல் முறையன்று. எத்தனையோ பழைய வழக்க வொழுக்கங்கள் கழிந்துபோக வில்லையோ? புதிய வழக்கங்கள் புகுந்துவர வில்லையோ? அவசியமான ஒருவழக்கம் புதியதாயிருப்பினும் அதன் குணத்தையும் குற்றத்தையும் நாடி குணம் மிஞ்சியிருப்பின் அதைக் கைப்பற்றுதல் வேண்டும். சைவத்திலிருந்து புறமதம் புக்கோரை மீண்டும் அச்சமயத்திற் சேர்த்துக் கொள்ளல் அறவும் புதிய வழக்கமென்று சாதிக்கவு முடியாது. சமயகுரவர்கள் எண்ணிலாச் சமண புத்தர்களைச் சைவ சமயிகளாகத் திருப்பினரன்றோ? அவர்களிலொருவர்தாமே சைவம் விட்டுச் சமணம்புக்கு மீண்டும் சைவந்திரும்பி ஆசாரியருமானமை அனைவருமறிந்ததே. அங்ஙனம் அவர் சைவசமயப் பிரவேசஞ் செய்தபோது என்ன சடங்குகள் குண்டமண்டலங்கள் செய்யப்பட்டன என்பதையும் உற்று நோக்க வேண்டும். ஆடம்பரப் பிராயச்சித்தம் எதுவுஞ் செய்யப்படவில்லை. சிவபத்தியிற் சிறந்த திலகவதியார் "கையைக்குன்றுடையான் திருநீற்றை ஐந்தெழுத்தோதிக் கொடுத்தார்." அதையணிந்து கொண்டு தருமசேனர், திருவீரட்டானம் புக்கார்; அரனைப் பாடினர், திருநாவுக்கரசராய்த் திரும்பினர் திருநீற்றிலும் திருவைந்தெழுத்திலும் பெருமதிப்பு வைக்கும் எவர்க்கும் இவற்றிற்குமேல் ஒரு பிராயச்சித்தம் வேண்டுமென்று தோன்றாது. பலருமறிய ஒரு பிராயச்சித்தச் சடங்கு செய்தல் ஜன சமூக நன்மைக்கு வேண்டற்பாலதே என்று அறிஞர் கருதினால், திருநீறும் கண்டிகையும் திருவைந்தெழுத்தும் பொருந்தியதொரு சுருக்கமான கழுவாய்ச்சடங்கை மடாதிபதிகளும் மற்ற சைவப்பெரியாரும் தீர்மானிக்கு முறையில் கற்பித்துக் கொள்ளலாம். புறமதம்

புக்கவரைச் சைவஞ்சேர்த்தவர் சமயாசாரியர்; நாம் அது செய்தல் தகுதியோ? என்று சிலர் எண்ணலாம். சமய குரவர் நடந்து காட்டிய வழியில் நாமும் நடக்க நம்மா லியன்றவரை யிலும் முயலுவதுதான் முறைமை. அவர்கள் செய்தவற்றை நாம் செய்தல் கூடாதென்னில் அவர்கள் திருநீறுங் கண்டிகையும் திருவைந்தெழுத்தையுங் கைக்கொண்டமையால், நாமவற்றைக் கைக்கொள்ளல் கூடாதென்றுஞ் சொல்ல நேரிடும்.

தன் வயலில் ஒரு சாணளவு மண்ணைத் தன் அயலான் வெட்டி யெடுத்தால் அது பொறாது போராடி மண்டையுடைத்துக் கொள்ளு மொருவன் ஆன்மநேய உரிமைப்பாடுடைய தன் சமயசகோதரன் தன் சமய ஆராய்ச்சி செய்யாமற் புறமதம் போவதைக் கவலையின்றிப் பார்த்துக் கொண்டிருத்தல் முறையோ? * ஆண்மைகுன்றிய தற்கால இந்துக்கள் தவிர வேறெந்தச் சமயத்தவரும் இங்ஙனம் பொறுப்புணர்ச்சியற்றுக் கிடக்கக் காண்டல் அரிது, அரிது. அவருள்ளுஞ் சிலம் பேசுங்

---

* கி. பி. எ-வது நூற்றாண்டு வரையில் பிறமதத்தவரையும் பிற நாட்டவரையும் இந்துமதத்தில் எளிதில் சேர்த்து வந்ததாகச் சரிதவல்லார் தெரிவிக்கின்றனர். எகிப்து தேசத்திலிருந்து ௧0,000 மிலேச்சர்கள் இந்துக்களாக மாறிய செய்தி ஒரு புராணவாயிலாய் வெளியாகிறது. இராமப்பிரசாத் சந்திரர் என்னும் சிலா பரிசோதனை வல்லவர் எழுதிய Archaeology and Vaishnava Tradition (Archaeological Survey of India No. 5) என்னும் நூலில் தற்கால இந்துக்கள் உணரவேண்டிய உண்மைகள் பலவற்றை வெளியிட்டிருக்கிறார். அவற்றுட் சில ஈண்டுத்தருவாம் :—

கி. மு. உ-ம்நூற்றாண்டில் பல கிரேக்கர்களும் சித்தியர்களும் ஹன் ஜாதியாரும் இந்துக்களாக மாறினர். ஹெலியோ டோரஸ் என்னும் ஒரு கிரேக்கன் வைணவனாகமாறி ஒரு கருடத் தம்பம் நாட்டினான். அதிற் காணப்படும் கல்வெட்டின் மொழிபெயர்ப்பு ஆசிரியர் ராப்சன் எழுதிய Ancient India என்னும் நூலில் பின் வருமாறு மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

This Garuda column of Vasudeva, the God of Gods was erected by Heliodorus, a worshipper of Vishnu the son of

தமிழ்நாட்டுச் சைவர் சிறுமையே சிறுமை; இவர்களுக்கு நந்தி யெம்பெருமான் வேண்டிப்பெற்ற பதினாறு பேறுகளில் "மறை கணிந்தனை சைவநிந்தனை பொறு மனமும்," "நினைவில் வேறொரு கடவுளை வழிபடா நிலையும்", "தீமையாம் புறச்சமயங்க ளொழித்திடு திறனும்" என்பனவும், "ஞாலநின் புகழேமிக வேண்டுந்தென் னாலவாயி லுறையுமெம் மாதியே" என்னுஞ் சம்பந்தப் பெருமான் வேண்டுகோளும் பொருளில் கூற்றுக் களாய்த் தோன்றுகின்றன போலும். சைவத்தின் உண்மைச் சமரசத்தையும் பொறையையுங் கைவிடாது பிறமதத்தாரோடு அன்பு பூண்டொழுகுதலோடு, தஞ்சமயக் கொள்கைகளையும் அமைப்புகளையும் அழியாது பாதுகாத்தல் கடனென இவர்கள் உணர்ந்ததாகத் தெரியவில்லை. இவர்கள் கொண்டுள்ள சைவம் சவமாய்விட்டது. உயிர் இல்லாவிடில், கோவில்களும் மடங் களும் கெட்டொழியப் பார்த்து வந்திருப்பதோடு, இவர்கள் சமயகுரவர் திருவவதரித்த புனிதத் தானங்களையும் சந்தான குரவர்கள் சமாதி கூடிய தலங்களையும் கவனித்துப் போற்றாது விட்டிருப்பார்களா? ககூஉரு-ம் வருடத்தில் மட்டும் ஏஉசுகo-பேர் ஷேக்ஸ்பியர் என்னும் ஆங்கில நாடகக்கவி பிறந்த இடத் தைப் பார்ப்பதற்குச் சென்றனர். இம் மேல்நாட்டாரைப் பழிக்

---

Dion and an inhabitant of Taxila, who came as a Greek ambassador from the Great King Antialcidas to King Kaciputra Bhagabhadra the saviour, then reigning prosperously in the 14th year of his kingship."

இங்ஙனமே கண்டோபேனிஸ் என்னும் பிறனொருவன் தேவராத னென்னும் பேர்பூண்டு இந்துவான செய்தியும், மிஹிராகுலன் என்னும் பேர்போன ஒரு ஹன்ஜாதியான் சைவனான செய்தியும் கல்வெட்டுக் களால் புலனாகின்றன. சில மலைக்குகைகளில் அகப்பட்ட கல்வெட்டுக் களால் அக்கினிவர்மன், இந்திரதத்தன், விஷ்ணு தத்தன் என்னும் பேர்களோடு அந்நிய நாட்டார் பலர் இந்துமதம் புக்க செய்தி வெளியா கின்றது. மற்ற உதாரணங்களையும் இப்பழைய வழக்கம் நின்று போன தற்குக் காரணத்தையும் அறிய விரும்புவோர் இராமப்பிரசாத் சந்திரர் நூலைவாசிக்கக் கடவர்.

குங் கீழ் நாட்டார்களில் எத்தனைபேர் தங்கள் வள்ளுவர், சேக்கிழார், கம்பர், சிவஞான முனிவர் முதலிய கருவிலே திருவுடைய புலவர்க ளவதரித்த இடங்களைக் கண்ணெடுத்துப் பார்த்திருப்பார்கள்? பார்ப்பதற்கு ஞாபகக் குறிகள்தா முண்டோ? உண்டேல் அவை எங்கிலையி லுள்ளன? ஏன்? அழகிய திருச்சிற்றம்பல முடையார் திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் தந்திருக்கரத்தா லெழுதுதற்கு அமர்ந்தருளிய புண்ணிய இடத்தில் இப்போது சித்திரை மூலவேலியும் மேற்கூரை யில்லா ஆவுடையாருமே காணவிருப்பது இச்சைவர்கள் மனத்துக்குச் சம்மதமாய் விட்டதன்றோ? திருப்பணி வேலையைக் கோடிக் கணக்கான பொருளிட்டுச் செலவுசெய்து முடித்துவந்திருக்கும் நகரத்துச் சிவநேசச் செல்வர்களுக்கு இக்குறைகள் தெரிந்திருந்தும் நீங்காதுள்ளனவோ, அல்லது இவர்கள் மந்திரிகள் இவற்றைத் தெரிவிப்பதே இல்லையோ? அம்பலத்தானுக்கே வெளிச்சம்! இன்னும் இக்குறைகளை மீண்டும் மீண்டும் விவரிப்பதெற்றுக்கு? தற்காலச் சைவர் நிலையைக் கருதின் "புண்ணிலாம்பெரும் புழையிற் கனல் நுழைந்தாலென"த் துன்பம் பெருகுகின்றது. நிற்க—இனிமேலாவது சைவர் தந்நிலையை யுள்ளவாறுணர்ந்து தங்கடமைகளைச் செய்யவேண்டும். செய்யாதொழியின் திருவருட் கயலுமாய் மேன்மேலும் புன்மை எய்துதல் திண்ணம்.

இன்னுஞ் சிறிதுகாலம் வரையில் இந்துக்கள் தஞ்சமயப் பாதுகாப்புக்கான கடமைகளைச் செய்யா திருப்பரேயாயின் இவர்கள் கூட்டம் விரைவில் நலிவுற்று மாய்ந்துபோம். அரசாங்கத்தார் பத்து வருடங்கட் கொருமுறை யெடுக்கும் ஜனத்தொகைக் கணக்கைக் கவனிப்போர்க்கு இந்துக்களின் ஜனத்தொகை வளர்ச்சி குன்றி வருவது தெரியவரும். இதையெல்லா முணர்ந்த இந்துமதப் பெரியார்கள் வட இந்தியாவிலும் பம்பாய் மாகாணத்திலும் ஆரிய சமாஜம், சுத்தி இயக்கம் முதலிய அமைப்புகளின் மூலமாகப் புறமதம் போன இந்துக்களை மீட்டும் இம்மதம் சேர்த்துக்கொள்ளுதலில் தமக்குள்ள அக்கரையைச் செய்கையிற் புலப்படுத்தி வருகிறார்கள். மகம்மதியமும்

கிறித்துவமும் பிறமதத்தினரைத் தம்மதத்தில் எவ்வளவு தீவிர மாய்ச் சேர்த்து வருகின்றன என்பதை யாவரு மறிவர். ஆதலின் புறமதம் புக்க நம்மவரைச் சிவ தீக்கையால் புனிதப்படுத்தி மீண்டும் நஞ்சமயத்திற் சேர்த்துக் கொள்ளுவதில் யாதொரு இழுக்குமில்லை, பெரு நன்மையே விளையும் என்பதைச் சைவர் நன்குணரக்கடவர்.

இங்ஙனம் சைவத்திற்குத் திரும்பி வருவோரை எப்படி நடத்துவது என்று சிலருக்கு ஐயந்தோன்றலாம். சமய அறிஞர்கள் ஒன்றுகூடி அதைப்பற்றித் தீர்மானித்துக் கொள்ளல் எளிது. சைவம் நாடித்திரும்பி வரும் சகோதரர்கள் சிவாலயங்களிலும் சிவனடியார் கூட்டங்களிலும் தடையின்றிச் சென்று அன்பரொடுமருவிப் பயன்பெற நாமிடந்தருதல் அவசியம். அவர் திருந்திய ஆசார முடையாராக விருப்பின் அவரோடுண்ணலும் உறைதலும் செய்வது முறையேயாம். ஆனால் சைவத்திலேயே சீலத்தோடுள்ளார் விஷயத்திலும் சமயத்திற் கொவ்வாச் சாதிபேதம் பாராட்டி, திண்ணைச்சைவம், நடைவீட்டுச் சைவம், உள்வீட்டுச் சைவம் எனப் பலதிறப்பட்ட சோற்றுச் சைவ அநுட்டானங் கைக்கொள்ளுவோர்க்கு இது பிடிக்காது. அவர்களை உடனுண்ணச்செய்தல் வேண்டாம். மேற்சொன்ன ஆலயப் பிரவேசம் அடியார்கலப்பு என்னும் சமய உரிமைகளைத் தந்து, திரும்பி வந்த சோதரர்கள் வீட்டுச் சுபாசுப காரியங்களில், பிறசமயத்தாரோடு நம்மவர் கலந்து வாழுமளவிற்குக் குறையாது கலந்து, ஒற்றுமையும் அன்புங் காட்டிவரின் அது சாலும்.

இப்படிச் சைவ சமயிகளின் தொகையைக் குன்றவிடாது பாதுகாப்பதாயின் பெருந் தொண்டு செய்யவேண்டு மென்பது வெளிப்படை. நம் கிறித்துவ சோதரர்கள் தம்மதத்தை யாண்டும் பரப்பிவருதல் எவ்வலிமைபற்றி என்பதை நன்குணரவேண்டும். அரசாங்கத்தார் அம்மதத்தினரா யிருத்தலே காரணம் என்று சிலர் கருதுகின்றனர்கள். இஃதொன்றே போதிய காரணமாய் விடாது. சுவிசேஷத்தை உலகெங்கும் பரப்பும்படி இயேசு

கிறிஸ்துவானவர் கட்டளையிட் டிருக்கின்ருரென்று அவர்கள் நம்புவதொரு முக்கிய காரணம். ஆண்டவனிடத்தும் ஆருயிரிடத்தும் அன்பு செலுத்தலே முத்திக்கு வழியென்னும் சைவ சமய உண்மையினை இயேசுநாதரும் வற்புறுத்தி யிருக்கின்ருர். அவரைப் பின்பற்றும் சமயிகளிற் பலர் அதன்வழி நடக்க துணிந்துத் தமது உடலையும் பொருளையும் ஆவியையும் உலகிற் பல்வேறிடங்களில் தத்தஞ்செய்து தம் சமயத்தைப் பரப்பியிருக்கின்றனர். எண்ணில்லா மாக்களை மக்களாக்கி யிருக்கின்றனர். இகழ்ந்தொதுக்கப்பட்டாரை இயன்ற வரையில் அன்போடு ஆதரித்து வருகின்றனர். இந்த அன்பொழுக்கமே அம் மதவியாபகத்திற்கு அடிப்படையான காரணம். அதனேடு சாதி வேற்றுமை சடங்கு வேற்றுமைகளை அதிகமாகக் கருதாது தமது சமய வேலைகளை வெகு திறமையான கட்டுப்பாட்டுக் குட்படுத்திச் செய்துவருவது மற்ருென்று. அம்மதத்தினர் யாவரும் தத்தமக்கென ஓராலயங் குறிப்பிட்டுக்கொண்டு வாரத்திற் கொருமுறை ஆண் பெண் அடங்கலுமாய்த் தவருது சென்று, தஞ்சமய நூல்களை நன்கு கற்றுள்ள போதகர் வாயிலாய்ச் சமயபோதனை பெற்றுவருதல் எவ்வளவு சிறப்புடைய ஏற்பாடென்பதை நம்மவர் இன்னு முணரவில்லை. பாதிரிமார் சங்கங்கள் பலவா யிருப்பினும் அவை ஒவ்வொன்றுந் தத்தமக் கெனத் திடமான அமைப்புகளை வகுத்துக்கொண் டிருப்பதும், சமயாபி விருத்தி நாடிப் பெருங்காரியங்கள் செய்யவேண்டி அவை யாவும் ஒன்றுகூடித் தங்கள் முயற்சியின் பயனை அவ்வப்போது சோதித்து, வேண்டிய புதிய முறைகளைக் கையாளுவதும் அவர் வெற்றிக்குத் துணைக்காரணங்களாம்.

இந்நாளில் சைவர்கள் தஞ்சமயக் கடமைகளைச் செவ்வனே செய்ய விரும்புவாராயின், மேற்குறித்துப் போந்த உண்மைகளை உள்ளவா றுணர்ந்தொழுக வேண்டும். அதாவது அவர்க்கும் சமயவொளி பரவவேண்டும் என்னும் பேரவா எழுதல் வேண்டும். அன்பைப் பேச்சில்மட்டுமன்றிச் செய்கையிலுங் காட்டி வரவேண்டும். கிறித்துவ சோதரர் போன்று நாம் நாட்டிற்கும் காலத்திற்கும் ஏற்றவாறு கட்டுப்பாடாக ஒன்றுகூடி யுழைத்தல்

வேண்டும். "ஒன்றுபட்டா லுண்டுவாழ்வே,—நம்மில் ஒற்றுமை நீங்கில் அனைவர்க்குந்தாழ்வே" என்ற வாக்கு சமய ஊழியத் துறைக்கும் பொருந்துவ தொன்றெனப் புந்தியிற் கொள்ள வேண்டும். ஓரமைப்புக் குட்பட்டுச் சைவர் சமயப் பிரசாரஞ் செய்வதைப்பற்றி முன்னரே குறிப்பிட்டாயிற்று. முக்கியமாய்ச் சேரிகளில் சைவபோதனையை எற்ற பெற்றி செய்யும் பாட சாலைகள் விரைவில் எற்படவேண்டும். அங்குள்ள ஏழைகளின் வறுமையைப் போக்கி அவர்கள் நிலையை உயர்த்துதற்கான ஐக்கிய நாணய சங்க இயக்கம் மதுபான விலக்கு முதலிய நல்வி யக்கங்களிற் சைவர் மனமாரக் கலந்து கொண்டு அத்துறை களிற் செய்யும் ஊழியங்களைச் சிவத்தொண்டென மதித்து மன்னுயிர்க் கிதஞ்செய்தல் வேண்டும். மேல் வகுப்பினர்க்கும் ஒழுங்கான சமயபோதனை கிடைப்பதற் கேற்ற முறைகளைத் தேடவேண்டும்.

சைவ சமயம் அன்புச்சமய மென்பதை இவ்வாறெல்லாஞ் செய்கையிற் புலப்படுத்த விரும்புவோர் முதலில் தமிழ்நாட்டில் தொண்டு செய்யவேண்டும். பின்பு தெலுங்கு கன்னடம் மலையா ளம் துளுவம் என்னும் தமிழ்த் தொடர்புள்ள மொழி வழங்கும் பண்டைத் தமிழ்நாட்டுப் பகுதிகளில் வேலை செய்யவேண்டும். அதன் பின்னரேனும் வட இந்தியாவுக்கும் சைவ சித்தாந்த மாண்பையும் தமிழின் பெருமையையும் தெரிவித்தல் வேண்டும். அங்குள்ள காஸ்மீரம், நேபாளம், ராஜபுதனம் இவற்றில் தொன்று தொட்டே சைவ சமயம் நிலைபெற்று வந்துள்ளது. அங்கெல்லாஞ் சென்று சமய சகோதர உரிமை பாராட்டி அவர்களையும் நம ரெனப் பேணிக்கொள்ள வேண்டும். இமயமுங் குமரியும் இரு கடல் வரம்பும் எல்லையாக் கொண்ட இந்திய நாட்டின் முழுப் பரப்பும் நந்தாயின் திருமேனி என்னும் உணர்ச்சி இந்நாளில் வலுத்து வருகின்றது. அம் மேனியில் ஒருறுப்பிற்குறும் இன்ப துன்பங்கள் மற்றை யுறுப்புகட்கும் உரித்தாம். ஆகவே சிவா கம நெறி நிற்கும் நேபாள காஸ்மீரங்களோடு தமிழ்ச் சைவநாடு ஆன்ம நேய உரிமை பாராட்டுதல் அவசியம். இம்மட்டோ? வெளிநாடுகட்குச் சென்று குடியேறிய நம்மவர்களை மறந்து விட

லாகாது. பத்திரிகைகள் வாயிலாகவும் தலைவர்கள் போக்கு வரவாலும் சமய சம்பந்தத்தை நழுவ விடாது போற்றி வரவேண்டும். இறைவன் பிறப்பிறப்பறியாப் பெம்மான் என்னுஞ் சைவர் கோட்பாட்டைத் தன்னதாகவுங் கொண்டுள்ள இஸ்லாம் மார்க்கமான்து இந்துக்களுக்கு இவ் விஷயத்தில் ஒரு சிறந்த எடுத்துக்காட்டா யிருக்கின்றது. இஸ்லாம் மதத்தைத் தழுவினவர் எந்நாட்டி லிருப்பினும், எம்மொழி பேசினும், எந்நிறத்தவராயினும் எவ்வரசாங்கத்தின்கீழ் வாழினும் தாமெல்லாம் ஒரே கூட்டத்தவரென்னும் உரிமையைச் செய்கையிற் பாராட்டிக் காட்டுகின்றனர். வழிபாட்டு முறையிலும் அம் மதத்தவர் காட்டும் சகோதர சமத்துவம் பெரிதும் வியக்கத்தக்கது. தொழுகைக்கு வாருங்களென்னும் ஒலி மசூதியினின் றெழுந்தவுடன், அரசனும் ஆண்டியும், முதியனும் இளைஞனும், உயர்ந்தோனும் தாழ்ந்தோனும் ஒரு தடையுமின்றித் தொழுமிடஞ் சென்று ஒன்றா யுட்கார்ந்து வணங்கித் திரும்புகின்றனர். இந்நேர் நெறிக்குமுரணிய பல வேற்றுமைகளை இந்து ஆலயங்களிற் கற்பித்துக்கொண்டு ஆணவமலத்தை எருவிட்டு வளர்க்கும் நம்மனோர் செய்கை போற்றத் தக்கதாமோ? நிற்க.

இங்ஙனம் பரந்த நோக்கங் கொள்ளுதல் இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய தொரு நவீனக் கொள்கையென அறிஞர் கருதார். இது இந்நாளில் பொதுஜன வுணர்ச்சிக் கெட்டும் வகையில் முன்னுளினும் விடப் பெரிதும் வற்புறுத்தப்படுவது மெய்யாயினும், கோட்பாடு பழையதே. சைவர் போற்றுந் **திருத்தொண்டர் புராணத்தில்** அப்பாலு மடிச்சார்ந்தார் புராணம் என ஒரு புராண முண்டன்றோ? அதில் தெய்வப்புலமைச் **சேக்கிழார்** அருளிச்செய்துள்ள திருப்பாட்டைக் கருத்தூன்றிப் பார்ப்போர்க்கு இவ்வுண்மை விளங்கும்.

> "மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக்கப்பான்
> முதல்வனு ரடிச்சார்ந்த முறைமையோரும்
> நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற்கூறு
> நற்றொண்டர் காலத்து முன்னும்பின்னும்

பூவேய்ந்த நெடுஞ்சடைமே லடம்புதும்பை
புதியமதி நதியிதழி பொருந்தவைத்த
சேவேந்து வெல்கொடியா னடிச்சார்ந்தார்கள்
செப்பியவப் பாலுமடிச் சார்ந்தார்தாமே."

என்பது அத்திருப்பாட்டு. இங்ஙனம் தமிழ்நாட்டுக் கப்பாலும் அடிச்சார்வார் உளராதலின், அவருக்கு நந் தமிழ்வேதத் திருமுறைகளையும் தமிழிலுள்ள பிற அரிய நூல்களையும் குறித்தறிவித்தல் இன்றியமையாதது. அவ்வாறே அவர்களிட முளவாகக் கூறப்படும் சிவாகமங்களையும் ஏனைய நல்ல நூல்களையும் நாம் விரும்பிப் பெற்றுத் தமிழ்ப்படுத்திக் கொள்ளலும் இன்றியமையாதது. இக் கொள்ளல் கொடுத்தல்களை முதலில் தெலுங்கு கன்னட நாடுகளில் தொடங்கி வட இந்தியா வரையில் பிணித்துக்கொள்ளுவதோடு, உலகமெங்கும் பரவியிருக்கும் அரசாங்கமொழியாம் ஆங்கிலத்தில் சைவசமய நூல்களை வெளியிடுதலும் பெரிதும் வேண்டற்பாலது. பல மேனாட்டறிஞர்கட்குத் தமிழ்நாட்டுச் சைவசமய நூல்களி னியல்பே தெரியாதாகையால், அவர்களுக்கு வடமொழியிலும் ஆங்கிலத்திலும் எளிதிற் கிடைக்கும் சங்கர ராமாநுஜ மத்துவமத நூல்களையும் பிற வடநூல்களையும் படித்துவிட்டு இந்து மதம் என்பது இவற்றின் தொகுதியே யென மயங்கிவிட்டார்கள். இதனாலும் சைவசமயம் சில நன்மைகளை யிழந்திருக்க நேர்ந்தது. காலஞ்சென்ற திரு. J. M. நல்லசாமிப் பிள்ளையவர்கள் இவ்வுண்மைகளை நன்கோர்ந்து சித்தாந்த சாத்திரங்கள் பலவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்ததோடு 'சித்தாந்த தீபிகை' என்னுமோர் அரிய ஆங்கிலமாதச்சஞ்சிகையும் வெளியிட்டு வந்தார்கள். அதன் பயனாய்ச் சில மேனாட்டறிஞர்கள் சைவசமயக் கோட்பாடுகளை யுணர்ந்து அவற்றை வியந்து பாராட்டுவாராயினர். சைவத் தமிழ்நூல்களை ஆங்கிலத்தில் வெளியிடுதலால் மேல்நாடுகளில் மட்டுமன்று; இந்த நாட்டிலும் நன்மையுண்டாம்; இந்தியர்களிற் பலர் தந் தாய்மொழியினும் பார்க்க ஆங்கிலத்தில் மிக்க பயிற்சியுடையரா யிருக்கின்றனர். உயரிய நூல்கள் அம்மொழியிற் றான்கிடைக்கும் என்னும் எண்ணமுடையவர்போற் பலர் காண்கின்றனர். இன்னார்க்கெல்லாம்

சைவசமயத்தின் உண்மைகளைத் தெரிவித்தற்கு எற்ற கருவி ஆங்கில மொழிபெயர்ப்பேயாம்.

சைவசமயப் பாதுகாப்புக்குத் தற்காலத்தில் இன்றியமையாது வேண்டப்படும் பத்திரிகைகள் எத்தனை யுளவென்று கேட்டால் விடைதருதற்குச் சைவர் வெட்கப்பட வேண்டியவராவர். ஆங்கிலத்தில் வெளியாய்க்கொண்டிருந்த "தீபிகை", நெய்யுந் திரியுமின்றி முன்னமே பொன்றிப்போயிற்று. தமிழில் 'சைவம்' 'சித்தாந்தம்' என்னும் இரண்டு பத்திரிகைகள் தோன்றின. அவற்றுள் 'சித்தாந்தம்' முடிந்த முடிவைக் கண்டுவிட்டது. 'சைவம்' கொழுகொம்பில்லாக் கொடிபோல் வாடித் தவித்து வதங்கிப் போயிற்று. இவற்றின் பின்னர் "செந்தமிழ்ச்செல்வி" "குமரன்" என்னும் பத்திரிகைகள் தோன்றின. இவைகள் பாராட்டத்தக்க ஓரளவில் சைவத்தையும் தமிழையும் போற்றி வருகின்றன. "லோகோபகாரி" என்னும் வாரப்பத்திரிகையையும் இவற்றுடன் சேர்த்தெண்ணலாம். இவற்றிற்குப் போதுமான ஆதரவைத் தமிழ்ச் சைவமக்கள் இன்னுந் தரவில்லை. பத்திரிகைகள் வாயிலாய்ச் சமயம் பேணுதல் இக்காலத்திற்கு இன்றியமையாதது என்னும் உண்மையை இனியேனும் பொதுவாய் சைவ மக்கள் யாவரும்—சிறப்பாய் சைவ மடாதிபதிகளும் நன்ருய் உணர்ந்து தங்கடமையைச் செவ்வனே செய்தல் வேண்டும்.

சைவர்கள் சில தலைமுறைகளாகத் தங்கள் சமயக்கடமைகளைக் கால வியல்புணர்ந்து ஒழுங்காய்ச் செய்துவாராமையால் சைவர்க்கும் அவர் தாய்நாட்டிற்கும் நேர்ந்த தீங்குகள் போதுமானவை. அவர் முன்னோர் அவர்பா லொப்பித்த ஞானச் செல்வத்தைப் போற்றி வளர்க்காது அழிய விடுவரேயாயின்,அவர் பின்சந்ததியாருக்கு அவை எளிதிற் பயன்றா மாட்டாவாய்க் கெடும். இதனல் முன்னோர் தேடிய சொத்தை யழித்தாரென்னும் பழி பாவம் இத் தலைமுறையினரையுஞ் சூழும். பிறமதத்தினர் தம் மதக்கடமைகளைச் செய்யு மாண்பைக் கண்ணுறவேண்டும். தங்கடமைகளைச் செய்யாமையால் விளைந்த கேடுகளையும் காணவேண்டும். பல கிராமங்களில் சிவாலயங்கள் பாழடைந்

திருப்பதைப் பார்த்தல்வேண்டும். கிறித்துவமதம் போனவர் போக எஞ்சி நிற்கும் இந்துக்களில் சைவ மரபினரிற் சிலர் சில வாண்டுகளாகத் திருநீறிடுவதை மறந்து நாமம் போட்டுக் கொள்ளுவதையும் நாடி யுணரவேண்டும். சைவ மரபினர் வாழும் பல ஊர்களில் சிவநாமங் கேட்ட லரிதாய்விட்டது. கற்றாரும் மற்றாரும் நாத்திக வாழ்க்கை வாழ்ந்து வருகின்றனர். வாரத்திற் கொருமுறை பஜனை செய்யும் பழக்கமுடையோரும் அரிபஜனை செய்வது பெருவழக்கமாய்ச் சில ஜில்லாக்களில் பரவிவருகின்றது.

ஆத்திக சகோதர சமயமாகிய வைணவத்தின்மீது நமக்கு வெறுப்பும் பகைமையுஞ் சிறிதுமில்லை. சைவசமயத்திற் பிறந்தோர் அவர் சமயத்தை யாராய்ந்துபார்த்து அது தமக்குப் பிடிக்காதென்று கண்டால் அவர் வைணவத்துக்கு மட்டுமல்ல, வேறெம்மதத்துக்குச் செல்லினும் சம்மதமே என்றிருக்கலாம். அவர் நேர்மையைப் போற்றவும் போற்றலாம். ஆனல் தாம் பிறந்த சமய இயல்பையேனும் தாம் புகும் பிறசமயத்தின் இயல்பையேனும் சிறிதும் ஆராயாது வேறு சமயம் புகுதல் பெருந்தவறே. அத்தவறு நிகழாதிருக்கும்பொருட்டுச் சமயப் பிரசாரஞ் செய்தல் சைவர்கட்குத் தலைமையான கடமையென்பதை மீண்டும் வற்புறுத்துகின்றோம். கடமை யுணர்ச்சியாலுந்தப்பட்டு உழைக்க முன் வருவரேல், உழைக்கும் வழியும் துறையும் உழைப்புக்கு வேண்டிய இடம் பொருள் ஏவல்களும் எளிதில் ஏற்படும். சில வழிகள் முன்னமே குறிக்கப்பட்டன. இவைபோல்வன பலவுள. சைவர் இனி வித்தகம் பேசுதலிற் பயனில்லை. பணிசெய்ய வேண்டும்.

இனி, நாட்டுக்கோட்டை நகரத்தாருக்கு இதுபற்றி ஓர் தனி விண்ணப்பஞ்செய்து இந்தக் கட்டுரையை முடித்தல் தகுதியாம். இவர்கள் தொன்று தொட்டே சைவசமயப் பற்றில் தலைசிறந்து வருபவர்கள். இவர்க ளீட்டிய பொருளில் எத்தனையோ லக்ஷங்கள் சிவாலயத் திருப்பணிக்குப் பயன்பட்டிருக்கின்றன. இன்றும் இவர்கள் மேற்பார்வையிலுள்ள சிவால

யங்களின் சீரும் சிறப்பும் வியக்கத்தக்கவா யுள்ளன. ஈத்துவக்கும் இன்பம் அறிந்து இசைபட வாழும் இவர்கள் சைவப் புலவர் களை நன்காதரித்து வந்திருக்கிறார்கள். ஆனால் பிற ஜன சமூகங் கள் போலவே இவர்கள் சமூகமும் கால சக்கிரத்தில் அகப்பட்டு வருவதாகக் காண்கிறது, இது பொய்த் தோற்றமென் றேற்ப டின் மிகவும் நன்றே. எதற்கும் முன் எச்சரிக்கையாகச் சில உண்மைகளைத் தெரிவித்தல் கடன். சைவ சமயிகள் செய்ய வேண்டிய அறங்களைப் போது, சிறப்பு என இருவகையாய்ப் பிரிக்கலாம். இவற்றில் பொது அறங்களென்பவை, நல்லன செய்து அல்லன விலக்குமுகத்தால் சைவனுவான் எல்லாச் சமயிகட்கும் பயன்படும் வகையிற் செய்யுந் தருமங்களாம். சைவபோதனை செய்யாப் பாடசாலை வைத்தல் தரும வைத்திய சாலை ஏற்படுத்தல் சாலைகள் சத்திரங்கள் அமைத்தல் பசிபிணி மூப்புத் துன்ப முற்றோர்க்குதவல் முதலியனவெல்லாம், பொதுத் தருமங்களாகும். இவைகளைப் பிறசமயிகளுஞ் செய்தற் குரிய வர்களே. தத்தம் வசதிகட் கேற்பச் செய்தும் வருகின்றார்கள். இனிச் சைவர்க்குச் சிறப்பறங்களாவன சிவாலயம் சைவமடம் சைவ சபை இவற்றை என்றும் சீர்கெடாது பாதுகாத்தலும், சிவாகமபாடசாலை, ஆரியவேத பாடசாலை, தமிழ்வேத பாடசாலை, சைவசமய போதனை செய்யும் ஆங்கில பாடசாலை, தமிழ்ப்பாடசாலை என்னுமிவற்றை யமைத்து வளர்த்து வருதலும் சைவசமய வுண்மை யாண்டும் பரவுதற்பொருட்டுச் சைவ நூல்களைக் காலத் தின் தேவைக் கேற்பப் பலவகைகளில் வெளியிட்டு எவர்க்கு முத வுதலும், சமயப்பிரசாரகரை நியமித்து எங்கும் கட்டுப்பாடான முறையில் சமயபோதனை நிகழுமாறு செய்தலும், தமிழ்க்கல்வி சைவக்கல்வியிற் றேர்ந்த புலவரை மதித்துப் பேணலும் இவை போல்வன பிறவுமாம். இவற்றைப் பிற சமயிகள் தங்கடமைக ளாக இதுவரையில் மேற்கொண்டது மில்லை, இனி வருங்காலத்து மேற்கொள்ளப் போவது மில்லை. ஆகவே, இவற்றைச் சைவசமயி கள் செய்யாதொழிதல் பெருங்குற்றமாம். இவ்வுணர்ச்சி எங்கு நகரத்தா ரினத்தில் மங்கிவிடுமோ என்று சிற்சில சமயங்களில் அச்சமேற்படுகின்றது. சிறப்புத் தருமங்களாகிய சிவதருமங்களை

இக்காலத்துக்கு வேண்டாதெனவென்று நழுவவிட்டு, உலகர் போற்றிப் புகழும் வகையில் பொதுத் தருமங்களைமட்டுஞ் செய்யும்படி இக்காலத்தில் பலர் அவர்களைத் தூண்டுதல் இயல்பு. அவர்கள் தருமப்பணத்தில் ஒரு பகுதி பெரும்பயன் தாராவழியில் தொலைவது மெய்யே. பழுதுபடாக் கோயில்களை இடித்துக் கட்டுதலும், வாகனாதிகட்கு வெள்ளியும் தங்கமும் வேண்டாவளவு செலவழித்தலும் அளவுக்குமிஞ்சி உற்சவாடம்பரங்கள் பண்ணுதலும் வீண்செலவாகலாம். ஆனால் அதுபற்றியே சிவாலயத் திருப்பணிக்கும் திருவிழாக்கட்கும் செய்யும் செலவெல்லாம் பாழாகின்றதென்று கூறுதல் அடாது. சிவாகம விதிக்கு மீறாமலும் சிவபெருமா னிலக்கணத்துக்கு மாறாமலும் ஆலயத் திருப்பணிகளும் திருவிழாக்களும் எந்நாளும் நடைபெறவேவேண்டும். ஆனால் இங்ஙனம் செய்வது மக்களுக்குள் சைவசமய அறிவையும் சிவபெருமானிடத்து அன்பையும் பெருக்குதற்காக என்பதை மட்டும் மறக்கக்கூடாது. இந்நெறியிற் செய்யுஞ் செலவெல்லாம் பதிபுண்ணியந் தரும். இந் நோக்கமில்லாது வேறெந்நோக்கங் கொள்ளினும், கொள்ளாவிடினும், செய்யுந் தருமம் சைவர் சிறப்புத் தருமமாகாது. அன்றியும் சைவமுந் தமிழும் தமிழ்த்தாயின இரண்டு மூச்சுப்பைகள் போன்றுள்ளன. என்னவே தமிழ்மொழியோம்பலும் சைவர் சிறப்புக்கடனே யென்பது போதரும். இவற்றை யெல்லாம் சைவரன்றிப் பிறர் செய்ய முற்படக் கண்டிலோம். ஆதலால் பொது அறங்களைச் செய்து புகழ்பெறுவதை இரண்டாந் தானத்தில் இருத்தி, சைவச் சிறப்பறங்களைச் செய்யும் வகையிற் செய்து புகழும் சிவபுண்ணியமும் பெறுவதைத் தலைமைத் தானத்தில் வைத்தல் நகரத்தார் நன்மைக்கும் வேண்டியதொன்றாம்.

சிறப்பறங்களைப் போதிய அளவு செய்தாய்விட்டது, இனிப் பொதுத் தருமங்களைப் பேணினால் போதுமென்று எவருங் கருத இடமில்லை. பாடல்பெற்ற எத்தனையோ சிவாலயங்கள் இன்னும் மிகப்பழுதுபட்டுக் கிடக்கின்றன. பல சிவாலயங்களில் நித்திய பூசைக்கே நிபந்தமில்லை. சிவவேதியர் செம்மையுறற்கு வேண்டிய வசதிகளில்லை. தமிழ்வேத ஆராய்ச்சி செய்தார் சிலர் பலர்

இருப்பினும் அவ் வாராய்ச்சி இன்னும் நூல் வடிவமாக வெளிவரவில்லை. சைவர் பலர் வீட்டில் தேவார திருவாசகங் காணக் கிடையாது: சமய அமைப்புகளெல்லாம் நிலைதளர்ந்துள்ளன. அறியாமை மிகுந்துள்ளது. அறுபான்மும்மை நாயன்மார் திருவீதி வலம் வரின் அவர்களைப் பார்த்து "இவ்வறுபத்து மூன்று பிள்ளைகளைப் பார்வதி பெற்றெடுத்தாள். இன்னுமொரு பிள்ளைக்குத் தவங்கிடக்கிறாள்" என்று பலபேர் இன்றும் பேசுகின்றார்கள். "வள்ளிக்கும் தெய்வயானைக்குஞ் சக்களத்தி போராட்டம்" என்பது போன்ற சுவடிகள் வெளிக்கிளம்புகின்றன. சமயகுரவர் சந்தான குரவர் பெயரறியாத நீறுபூசிகள் இலக்கக் கணக்கிலுள்ளார்கள். தமிழ்ச் சைவ நாட்டின் கதியே யிப்படி யுள்ளது. இதன் நிலைமையைச் செம்மைப் படுத்துதற்கும், மேலே கூறியாங்கு இந்தியாவின் பிறபாகங்களிலும, உலகெங்கும், திருநீற்றொளி விளங்கக் காண்டற்கும் இன்னும் கோடிக்கணக்கான பொருளும் எண்ணிலா மெய்த்தொண்டர்களும் பல தலைமுறை யூழியமும் தேவையாயுள்ளனவன்றோ? தம் முன்னோர் சிறப்பியல்பைப் போற்றி இப்பெருந் திருத்தொண்டு செய்வதைத் தமது குறிக்கோளாக நகரத்துப் பிரபுக்கள் கைக்கொண்டால் சீரும் சிறப்பும் சிவபுண்ணியமும் வாராவோ? பொது அறமே போதுமென்று கருதத் தலைப்படுவார்களாயின், அவர்கள் தஞ் சிறப்பியல் பிழந்து பிற ஜனசமூகங்களோடு ஒரு சாதாரண சமூகமாகக் கணிக்கப்படுவர். அது அவர்க்குப் பெருநட்டமாம் என்பதைத் தனவைசிய அறிஞர்கள் உய்த்துணர்வார்கள் என்று நம்புகின்றோம். வெள்ளம் வருமுன் அணைபோடுதலே அறிவுடைமைக்கழகு. அவர்கள் சமூக மேம்பாட்டிற்குக் காரணம் அவர் தம் முன்னோர் ஈட்டி வைத்திருக்கும் சிவ புண்ணியமே யென்பதை மறத்தலாகாது.

சைவர்கள் தங்கள் சமயக்கடமைகளை நிறைவேற்றி யின்புற வேண்டுமாயின் அவருள் மகளிரா யுள்ளாரும் சைவப்பற்றும் சமயத் தொண்டில் பெருவிருப்பங் கொண்டவர்களாயிருத்தல் வேண்டும். இவர்கள் துணையில்லா விடத்துச் சைவ ஆடவர் செய்து முடிக்கக்கூடியது மிகச் சிறியதே யாகும். சத்தியின்

துணையின்றிச் சிவம் உபகரிக்குமா றில்லையன்றோ? ஆதலால் இவர்களுள் பலர் மங்கையர்க்கரசியாராய் மாண்புறல்வேண்டும். மங்கையர்க்கரசியார் தோன்றினால் சம்பந்தரும் குலச்சிறையாரும் தோன்றுதல் ஒருதலை. அதற்கேற்ற கல்வியையும் நாகரிகத்தையும் சைவசமூகம் தேடித்தரும் கடப்பாடுடையது.

இதுவரையில் எழுதியவாற்றால், சைவசமயம் சமயங்கட்கெல்லாந் தாயகமு நாயகமுமா மென்பதும், ஈடுமெடுப்புமற்ற சில சிறப்புக்களையுடைய தென்பதும், அச் சமயத்திற் பிறந்தார் சிலர் அதனுண்மையைப் பிறழ உணர்ந்தும் அடியோடுணராதும் பல தீங்குகட் காளாயினரென்பதும், அதனாற் சமய அமைப்புகளும் சைவ சமூகமும் சீர்கெட்டிருக்கிற தென்பதும், இவைகளைத் தமிழ் நாட்டில் முன்னர்த் திருத்தி யமைத்துக்கொண்டு, பின்னர் பிற இடங்களிலும் சைவ வாளொளி பரப்புதல் வேண்டு மென்பதும், அதற்கேற்ற சாதனங்க ளிவை யிவை யென்பதும், இச் சமயத் திருத்தொண்டில் நாட்டுக்கோட்டை நகரத்தார்க்குச் சிறப்புவகையிலுள்ள பொறுப்புக ளிவை யென்பதும், சமயம் தமிழ்மொழி, தாய்நாடு என்பதை இவற்றின் முன்னேற்றத்திற்குச் சைவ ஆடவர் சமய வழியில் தொண்டு செய்யும் போது சைவ மகளிரும் துணைநிற்றல் இன்றியமையாததா மென்பதும் பிறவும் எடுத்துரைக்கப் பட்டன. அறிஞர்கள் இவ்வுரைச் செய்யுளில் காணக்கூடிய சொற்குற்றம் பொருட் குற்றங்களைப் பொறுத்து எழுதின நோக்கம் நன்மையாயிருப்பதைமட்டும் நாடி ஆதரவோடாராய்ந்து, சமயத் தொண்டு சிறப்பாய் நடைபெறற்கான வழிகளைத் தாமுங் கண்டறிந்து பிறர்க்கு முணர்த்தி யுபகரிக்கத் திருவருள் துணைசெய்வதாக.

முற்றிற்று

# தேவார உரை

[செப்பறை ஸ்ரீமத் சிதம்பரசுவாமிகள்]

(ககஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

இனிக் காதணியிற் பின்னையதூஉம் அன்னதே போலும் என்னற்கு அஃது ஆண்டுத் தோன்றி விளங்காக்கால் அஃதணிந் தாரதுடற்கூறு பெரிது மழகுபடுமாறின்மையானும் ஏனைய தன்ன தன்மையானு மென்பது. இதனாற் பெறப்பட்ட பொருளாவது.

இறைவன், சத்தி சிவமென இவ்வாறு இருவேறு திறப்பட்டுத் தம்மு ளியைந்துநிற்கும் அவ்வியல்பில்வழி யுலகமெல்லாஞ் சடமொப்பச் செயலற் றொழியுமாகலான் அந்நிலை யிவ்வுலகிற்கு இன்றியமையாது ஒருதலையான் வேண்டப் பட்டுடைமையின் அதுபற்றி அதுவே பாசவீட்டிற் குரியதொரு விசேடநிலையாகலான் அச்சிறப்புப்பற்றி அப்பெற்றித்தாய அந்நிலை யிப்பெற்றித் தாதல் காட்டியருளுதற்பொருட்டு அதனை முதற்கண் எடுத்துக் கொண்டருளினாரெனக் கொள்க. இதனை யின்னும் ஈண்டுரைத்த வாறுபற்றி விரித்துரைத்துக் கொள்க. இன்னுமொரு வாற்றானு மஃதுரைக்குமாறு.

அணிகல மேனையவெல்லாந் தோட்டணியை அழகு செய்யு முகத்தால் தாமும் அழகு செய்வனவாம் ஆகலான் அவையெல்லாம் அத்தோட்டணியைப் பற்றியே, தத்தந் தன்மைக்குரியனவாம். அஃதொப்ப உயிரெல்லாம் இறைவனியக்கம்பற்றியே இயங்குதற் குரியனவன்றி அவை தத்தஞ் சுதந்தர வியக்கமுடையனவல்ல வாகலான் அவ்வியல்பு இவ்வியல்பிற் றென்பது உணர்த்தியருளுவார் அத்தோட்டினை முதற்கணெடுத்துக் கொண்டனரென்பது.

இஃதிம்முறையாதல் அத்தோட்டணியின்றி யேனை யணி அணியுங்கால் அவை தம்மை யணிந்தாரைப் பெரிது மழகு செய்யாமைபற்றியு மறிந்துகொள்க.

இதனுறைய பொருள் என்னையெனின் உயிர்ப் பொருள் உயிரில் பொருளெல்லாவற்றினும் இறைவன் கலந்து நிற்குமாறு

பற்றியே அவை தத்தம் இயல்பிற் குரியவாவனவாம் அம்முறை யேனை யணிகலங்கள் செய்யு மழகுக்கெல்லாந் தோடு இன்றியமை யாதாகலான் இம்முறைமைக்குரிய அத்தோட்டணியை முதற்க ணெடுத்துக் கொண்டருளுமாற்றான் அஃதுணர்த்தி யருளியவாறு மெனக் கொள்க.

இன்னும் இதனானே அத்துவித இயைபு இயைந்து கிடந்த வாறும் பிறவும் இவ்வாறே யோர்ந்துணர்ந்து கொள்க.

இனி அப்பரம்பொருள் இதுவென அளவைகளான் அறிய வாராமையின் அதுபற்றி அவனெனப் பெரும்பெயரா னேகிக் கிடந்ததனை அண்மைப் படுத்துவைத்து அவனியல் புரைக்கின்று ராகலின் அதனை யுத்தேசமுறைபற்றி யுணர்த்துவார் இவனென ஆசிரியர் எடுத்துக் கொண்டோதியருளினர். அது கேட்ட தாதையார் அவனைக் காணுதல் பெற்றிலராகலான் இலக்கிய வுணர்ச்சி யிலக்கண வுணர்ச்சியை யின்றியமையாமையின் அம் முறைபற்றி யுணர்த்துவான் புகுந்த ஆசிரியர் அங்கம்பற்றியே அங்கியுணர்த்துதல் முறையாகலானும் உணர்த்துமாறுவே றின்மையானும் "தோடுடைய செவியன்" என முதற்கண் அங்க மெடுத்துபதேசித்தருளினர்.

அற்றேல் இன்னோரன்ன அங்கம் நம்மனோர் அங்கம் போற லின் அதுபற்றி யவனும் நம்மனோரி னொருவனும்போலு மென் னுங் கடாவை யாசங்கித்துச் சொல்லொப்புமையான் அங்ஙன மாயினும் இது மருளங்கம் அஃதருளங்கம எனப் பொருளான் வேற்றுமை காண்க. அதுபற்றி யாம் அநீசரும் அவனீசனுமா மென்பது உணரப்படும். ஆயினும் அவனிறைமை யியல்பு, கன் கூட்டின் வைத்து விளக்குவார் விடையேறியென அதன் பின் வைத்து உபதேசித்தருளினர்.

இறைமை ஒருவர் ஒருவர்க்கு ஈயப் பெற்றுக்கோடல், உல கின்கட் கண்டாமன்றே அற்றேல் அவற்குளதாய அவ்விறைமை யும் அற்றாம்போலு மென்னுங்கடாவை யாசங்கித்து வேண்டிப் பெற்ற செயற்கையான்வரும் இறைமைக்கஃதொக்கும். இறைவ

னிறைமை யன்னதன்றி யியற்கையா னுளதொன்றென்பது உணரக்கிடக்கும், ஆயினும் வினைத் தேவர்மாட்டில்லாத வீட்டு நெறியைத் தலைக்கூடு மறிவு அவன்கண்ணன்றிப் பிறர்கண் ணன்மையின் அதுபற்றியும் அது தெற்றென அறியப்படுமென் பார் "தூவெண் மதிசூடி" யென அதன்பின் வைத்துபதேசித் தருளினர்.

அற்றேல் அஃதாக யாம் அனீசத்துவத்துக் கேதுவாய மலமறைப்புடையா மாகலின் அதனை அறிதலும் எய்தலு மில வாம். ஆகலின் அதனான் எமக்காம் பயன் என்னை யென்னுங் கடாவை யாசங்கித்து அவையுமுள. அதனைச் சாதிக்கு மாறு முள. ஆயினும் இளங்குழவிநோயைத் தாய் உண்டொழிக்கு மருந் தொப்ப நமது மலநோய் தீர்க்கு மருந்து "தம்மிடத்துக்கொண் டருளுமியல்பினன் என்பார் "பொடிபூசி" என மறித்தெடுத் துபதேசித் தருளினர்.

அற்றேல் அவனுபகாரம் அத்துணைய மாத்திரையே தாமோ? பிறவுமுளவோ ? இலவோ? உளவாயின் அவை என்னை யென் னுங் கடாவை யாசங்கித்து அவை பலவேறும். அவற்றுள் எஞ் ஞான்றும் எம்மின் வேறாகாது எமதகத்தினின்றுணர்த்தி யுப கரிக்கு மியல்புடையனென அம்முதலுபகார விசேடமுணர்த்து வார் "எனதுள்ளங் கவர்கள்வன்" என வைத்துபதேசித்தருளினர்.

அற்றேல் அவன் செய்யக் கடவன வேறில்லைப் போலும் யாமும் செய்யக்கிடப்பன வொன்றுமின்றும் போலுமென் னுங் கடாவை யாசங்கித்து இருவர்க்கு முளவாம் அவை சதா சிவத்துவத்தின் வைகும் இறைவன் யாம் இங்ஙனம் வைகின் எம்மை ஆண்டையுயிர்கள் வழிபட்டுய்தல் எலாதெனத் திருவுருக் கொண்டருளி அவை யெளிதின் வழிபட்டுய்தற்பொ ருட்டு இந்நிலவுலகின்கட்படும் பலவேறு திருத்தளியுள்ளுஞ் சிறந்த இத்திருத்தளியுள் எழுந்தருளி வைகுகின்றான். இங்ஙனம் இரங்கித் தாமே வந்தோரை நாமாய் வழிபட்டுய்ந்துகோடலே முறை, ஆகலான் அவனை வழிபடுமாற்றான் வழிபடுக. வழி

படாமை யொழிகவென்பார் "பிரமாபுர மேவிய பெம்மான்" என முடிவின்கண் வைத்து உபதேசித்தருளினர்.

இனி இதனுள் செவியனென அங்கமெடுத் தோதவே தச அங்கத்துள் இஃதொழித் தொழிந்த ஏனை அங்கமுங் கூறியவாரு யிற்று. அஃதாமாறு காட்டுதும், பெம்மான் என்பதனல் திருநாமமும், பிரமபுரம் என்பதனல் திருப்பதியும் திருநாடும், விடையேறி யென்பதனல் கொடியும் ஊர்தியும், பொடிபூசி யென்பதனல் முரசும் படையும், மதிசூடி யென்பதனல் மலேயும் ஆறும், தோட்டுச் செவியன் என்பதனல் தாரும் ஆகிய அங்கம் பத்தும் பெறப்பட்டன. படவே, ஆசிரியர் தம்மை ஆண்டு அடிமை கொண்ட முறையும் உரைத்தவாருயிற்று.

இனிச் செவியனென அங்காங்கி கூறவே அஃதெடுத்துக் கோடற்கு மூலமாய ஐந்தொழிற்குரிய வினைமுதல் அவனேயென் பதூஉம் பெறப்படும்.

'விடையேறி' யென்பதனல் தம்மியல்பு தாமே ஆய்ந்து எய்தியோர்க்கு அவ்வாறு அருளு மியல்பினனென்பதூஉம்

'மதிசூடி' யென்பதனல் அது பிறருணர்த்த வுணர்ந்து எய்தியோர்க்கு அங்ஙனம் அருளுமியல்பினனென்பதூஉம் போதரும்.

'பொடிபூசி' யென்பதனல் ஏகனென்னுஞ் சுருதியை வலியுறுத்தவாறு.

'எனதுள்ளங் கவர்கள்வன்' என்பதனல்சார்ந்தாரைத்தானுகச் செய்து பிறர்தங்கள்வினை தாங்கொடுக்குமாறுகொள்ளக் கிடந்தது.

ஆகவே, ஐந்தொழில் செய்யும் அம்முதல்வன் சிட்டபரிபாலனமுந் துட்டநிக்கிரகமுஞ் செய்யு முகத்தானும் அன்னபிறவாற்ருனுஞ் சிறு வாழ்வு பெறுமாறு செய்து அது வாயிலாகப் பெருவாழ்வு பெற்றுப் பிறவிப்பயன் முற்றுமாறு செய்தருளும் பெருங்கருணையுடையதொரு பெரும் பெயர்க் கடவுள் அவனே யென்பதூஉம தெளிவிக்கப்பட்டது.

இனி செவியன், விடையேறி, மதிசூடி யென்பவற்ருன் உருவத் திருமேனியும், பொடிபூசி, பிரமாபுர மேவிய என்பதனல்

அருவுருவத் திருமேனியும், என்னுள்ளங்கவர் கள்வன் என்பத னால் அருவத் திருமேனியும் கொள்ளப்படும். அற்றாகலினன்றே தமிழ் மகாபுராணமுடையார் 'அடையாளங்களுடன் சாற்றி யென்றெடுத் துபதேசித்தருளியதூஉ மென்பது. அடையாளம் என்பது இலக்கணம். ஈண்டோதப் பட்டன தடத்தவடிவங்களா மாகலின் அது முதல்வன் பொது இலக்கண மெனக் கொள்ளப் படும்.

அற்றேல் எமதாசிரியர் பொதுச் சிறப்பெனக் கிளந்தோதா மையான் அவர் தம் ஆசிரியர் இலக்கண மிரண்டு முரைத்தனர் என்றாற்படும் இழுக்கென்னை யெனின்? அற்றன்று எனைச் சிறப் பியல்பு வாக்குமனாதீத கோசரமாகலானும், மனத்தின் வழிவந்த வாக்கா னேதிக் காயத்துட்பட்ட திருவிரலாற் சுட்டப்பட்டு இறைவன் ஆண்டுத் தோன்றி நின்றானாகலானும், திருவிடைமேற் போந்தருளி பெரிய பிராட்டியாரோடு தம்மையு முணர்த்தித் திரு முலைப்பாலூட்டத் திருவாயுட் பெற்றுக் கோடலானும், பெருந் தோணி போய் மேவியாரைக் கண்ட கண்ணுடையாராய் அதன் வழிச்சென்ற கருத்தோடு ஆண்டுச் சேரலானும் அன்ன பிறவாற் றானு மென்பது.

அற்றேல் இறைவற்குரிய இலக்கண மிரண்டனுள் ஒன்றனை யெடுத்தோதி ஒன்றனை யோதா தொழிதல் குன்றக்கூறலாய் முடி யும் போலுமெனின், முடியாது. பொது இலக்கணம் இத்திருப்பா வொன்றினமையாது முன்னெழுந் திருப்பாக்கள்தோறும் மறித்து மறித்தெடுத் தோதுதலானும் அதுவும் அவற்றுட் பெறப்படுமாக லானும் அஃது அத்திருப்பாவொன்றினமையாமை எனைத் திருப்பா மூன்றனியல்பும் முன்னர்த் தனித்தனி வகுத்தோதுமாசிரியர் "செம்மைபெற வெடுத்த திருத்தோடுடைய செவியனெனு மெய்ம்மை மொழித் திருப்பதிகம் பிரமபுரம் மேவினார் தம்மை யடையாளங்களுடன் சாற்றி" என மேலெழுந் திருப்பா வேழினும் அஃதுளதாமாறு வைத்துரைத்தருளியவாற்றானறிக.

அற்றேல் அடையாளங்களெனப் பன்மை வாசகத்தானோது தலின் ஒன்றெனல் பொருந்தாதாம் பிறவெனின் பொதுச் சிறப்

பென்னும் இலக்கணங்களிரண்டன்கண்ணும் தனித்தனி அகப் பாகுபாடு பலவேறுண்மையின் பொருந்தாமை யாண்டையதென் றொழிக.

இனி அஃதிங்ஙன முரைக்குமுகத்தான் அதுவுமுரைத்தருளினாரெனக் கோடலுமொன்று அஃதாமாறு காட்டுதும் தோடுடைய செவியனென்பதனால் பேரருளுடைமையுந் தூய உடம்பினனாதலும், விடையேறி யென்பதனால் தன்வயமுடைமையும், மதிசூடி யென்பதனால் முற்றுணர்வுடைமையும், பொடிபூசி யென்பதனால் வரம்பிலின்பமுடைமையும், உள்ளங் கவர்கள்வனென்பதனால் இயல்பாகவே பாசங்களி னீங்குதலும், இயற்கையுணர்வினனாதலும், பிரமாபுர மேவிய பெம்மானென்பதனால் அளவிலாற்றலுடைமையும் பெறப்பட்டன. இவை சத்துச் சித்தாய இவனது சிறப்பியல்பாமாறு ஓர்ந்துணர்ந்து கொள்க. உள்ளுறைப் பொருணிலையென்னும் பெருநூலியல்பு மிதுபற்றி யுணரக் கிடந்தவாறறிக.

(தொடரும்)

---

# வண்ணாரப் பெரியாண்டி

[வேலூர் K. P. சந்தோஷம் B.A. L.T.]

(கஙகூ-ம் பக்கத் தொடர்ச்சி)

## வண்ணானுந் துறவிகளும்

முகம் வெளுப்பதும் சொல் வெளுப்பதும் வண்ணானுக்குரிய வெளுப்பல்ல. ஆக்கிப் படைப்பதில் காலத்தைக்கழிக்கும் பிரமனுக்குத் தாக்கி வெளுக்கும் உயர்தொழில் தெரியாதது வியப்பன்று. ஆதலின், இதைவிட்டுத் துறவிகளைப்பற்றி வண்ணான் நினைப்பதை நோக்குவோம். சீராய் வெளுக்கப்பட்ட ஆடை சென்றவிடமெல்லாஞ் சிறப்பைக் கொடுக்கும் ; செல்வத்தையும்

வெல்லும்; கல்வியையுங் கொல்லும்; கண்ணைப்பறிக்கும்; காதலைப் பெருக்கும். அகத்தினழகு முகத்தில் தெரியுமென்பது உண்மை யாயின், ஒழுக்கத்தின் உயர்வு உடையில் விளங்குமென்பதும் மெய்யாகும். ஆங்கிலநாடக ஆசிரியராகிய (செகப்பிரியர்) ஷேக்ஸ்பியர் "மனிதனின் தன்மை அவன் ஆடையில் வெளிப் படும்." (The apparel oft proclaims the man) என்றார். ஆகையால், ஆடையை மதியாது காட்டில் திரியுந் துறவிகளைப் பற்றி வண்ணானுக்கு நல்லெண்ணங் கிடையாது. இவர்களிற் சிலர் உத்தியோகஞ் செய்ய வகையிலராய் யோகஞ் செய்யத் தலைப்படுகின்றனர். சிரமத்திற்கஞ்சி ஆசிரமங்களில் அமர்கின் றனர்; சிற்றகத்தின் உளவறியாமல் சிரகத்தை நோக்குகின்ற னர்; மணமென்பதைவிட்டு அம்மணத்தைத் தழுவுகின்றனர். "போனகந்துறந்து கானகம் புகுந்து," அலையுமிவர்கள் வாழ்வில் விழவுமில்லை இழவுமில்லை. மலையேறிச் சடைவளர்த்துக் கழுத்தை நிமிர்த்துக் கண்ணைவிழித்துக் குகையிலிருந்துறங்கும் யோகியர் பிழைப்பும் ஒரு பிழைப்பா? தையல் வாடை தங்கள்மீது படக் கூடாதென்று தையலில்லாக் கோவணமொன்றை இவர்கள் கட் டிக் கொள்கின்றனர். இதுவே இவர்களுடைய உடை. இத் தகையரை வண்ணான் முற்றும் வெறுக்கிறான்.

> "தந்தைதாய் ஆதியா வந்த தன்குடும்ப
> பந்தபா ரத்தினைப் பேணித் தனது
> சொந்தமாம் இச்சைகள் துறந்து மற்றவர்க்கு
> எந்தநா ளுஞ்சுகம் இயைந்திடக் கடமையின்
> முந்துகின் றவரே முதல் தவமுனிவர்."

அழுக்கு மூட்டை சுமந்து முதுகு வளைந்த வண்ணான், குடும்ப மூட்டை தாங்கமுடியாமல் ஓடி ஒளிக்குந் துறவோரை எப்படி விரும்புவான்? வருந்திப் பசிதாகத்தா லிளைத்த உயிர்கட்கன்றோ பெருவெளியில் ஊறுகின்ற அமிர்தத்தை யூட்டி வண்ணாப் பெரியாண்டி உதவிபுரிவான்? இளகாது உருகாது குழையாது தாமே உலகின் நடுநாயக மென்றிருப்போரை வண்ணாப் பெரி யாண்டி தடியுந் தாம்புங் கொண்டு தப்புவான்.

## நெடுஞ் செவியன்

வெளுப்பவனுக்குப் பக்கத்துணையும் பெரியம்மைக்கு வாகனமும், எவருக்கும் எக்காலத்தும் தவருத வசைச் சொல்லு மாயிருப்பது கழுதை. இதை இழிவுடைய விலங்கென்று எள்ளு வாரை எண்ணி வண்ணான் சிரிக்கிருன். "யார் அறிவார் அதன் பெருமை?" என்று தனக்குள் சொல்லிக் கொள்ளுகிருன். மக்களுக்கு உழைத்து உதவிபுரியும் குதிரை, எருது, எருமை முதலியவற்றிற்குக் கொள், புல், புண்ணுக்கு, வைக்கோல், பருத் திக் கொட்டை, தவிடு இவற்றை விலைகொடுத்து வாங்கவேண் டும். மேற்குறித்த மிருகங்கள் தாங்கள் செய்யும் வேலைக்கேற்ற உணவைப் பெறுகின்றன. ஆனல், கழுதைக்காக வண்ணான் காசு கொடுத்துப் புல்லும் வைக்கோலும் வாங்கினதை எங்கேனுங் கண்டதுண்டா? யாராயினுங் கேட்டதுண்டா? இவ்வொரு சிறு குறிப்பிலேயே கழுதையின் மேன்மை தோன்றவில்லையா? அது குதிரையைப்போல் தான் படும் வருத்தத்திற்குப் பதிலாகத் தன் தலைவனிடமிருந்து ஒன்றையும் எதிர் பார்ப்பதில்லை. கைம் மாறு கருதாது செய்யும் ஊழியமே யாவற்றினுஞ் சிறந்த நன்மை யாகும் என்று நூல்களெல்லாம் பறையடிப்பதை யறிந்தவர் கழுதையைக் கனவிலும் இகழார். பிறர்க்குழைப்பதையே கட னுகக்கொண்ட இவ்விலங்கைப்பற்றித் தவருன கொள்கைகள் மக்களுக்குள் பெருகியிருப்பதை நினைந்து வருந்தவேண்டியதா யிருக்கிறது. ஆடு, மாடுகளுக்குத் தங்க இடம் வேண்டும்; அவை களை மேய்க்க ஆள் வேண்டும். குதிரையைக் கழுவித் தேய்த்துக் காப்பாற்றுவது அவசியம். அதனிடம் வேலை வாங்கவேண்டு மாயின் கடிவாளம் சேணம் இல்லாமல் முடியாது. எருதை குளிப் பாட்டவேண்டும்; அதற்கு மூக்கிலுந் தலையிலுங் கயிறுவேண் டும். கழுதைக்கு ஒன்றும் அவசியமில்லை. நீராடுதல் அதற்கு நரகவேதனை. கடிவாளத்தாலுங் கயிற்ருலும் அது கட்டப்படுவ தில்லை. மற்றப் பிராணிகளைப்போல் அது தன்சுவாதீனத்தை எளிதில் இழந்துவிட உடன்படாது. ஆனல் "அதன் காலில் தளை இடப்பட்டிருக்கிறதே; அதனுல் அது தன் சுவாதீனத்தை

இழந்து விடவில்லையா?" என்று கேட்கலாம். உண்மை, தன் முன் வண்ணான் வந்து முன்னங்காலில் தளை பூட்டும்போது, தன்னை அடிபணிந்து வேண்டிகொள்வதாகக் கழுதை நினைத்துக் கொள்ளுகிறது; அதனால் தான் காலில் தளை பூண்டு திரிய அது சம்மதிக்கிறது என்பதை மறக்கலாகாது.

கழுதை குப்பை குவிந்திருக்கு மிடத்தில் வலமிடமாய்ப் புரண்டெழுந்து நின்று உதறிக்கொண்டு குவலயத்தோர் உதவியைத் தேடாது, சிறு பிள்ளைகள் தனக்குச் செய்யுங் கொடுமையைப் பொருட்படுத்தாது, பிறவிலங்குகளும் மனிதரும் பயனற்றவை என்று தள்ளிவிட்ட வஸ்துக்களை ஆவலுடன் அருந்தி தன் னிஷ்டப்படி திரியும். நாற்புறமுஞ் சுவர்களும் மேலே கூரையுமுள்ள இடங்களை வெறுத்து இனிய காற்று நன்றாக வீசும் வெளிகளையே விரும்பி வாழுவது கழுதையின் இயற்கை. காற்றோட்டமில்லாத நெருக்கமான வீடுகளிலடைந்து கிடக்கும் மக்கட் கூட்டங்களைப் பார்த்துக் கழுதை பரிதாபப் படுகிறது. வேனிற்காலத்தில் நிலவு காயும் இரவுகளில் அது தன் காதுகளை நிமிர்த்தித் தலையைத் தூக்கி வாயை விரிவாய்ப் பிளந்து பெருங் கூச்சலிட்டுக் கூத்தாடும். யானை புலி முதலியவற்றின் குரலுங் கூட கழுதையின் சத்தத்துக்கு இணையாகா. காதல் நிறைந்து களிப்புப் பெருகும்போது அது தன் பின்னங்கால்களைச் செங்குத்தாய் உயரத்தூக்கிக் காற்றை உதைத்துத் தள்ளும். அப்பொழுது அதன் கண்களில் வீரம் பொங்குகின்றது யாராயினும் அவ்வேளையில் அதனருகிற் சென்றால், அது தன் கால்களால் அவர்களை முத்தஞ் செய்யமுயலும். அதன் இரைச்சலைக்கேட்டு எத்தனைபேர் உவப்படைகிறார்கள்! ஆயினும் அவர்களுங்கூட மற்ற வேளைகளில் அதைப்பற்றி இழிவாய்ப் பேசுகிறார்கள். கள்ள உள்ளமிருக்கக் கடந்த ஞானம் பேசுங் கயவரும் புத்தகஞ் சுமந்து பொய் பிதற்றித்திரியுங் கீழ்மக்களுங் கழுதையினும் எத்துணை இழிவானவர்கள்?

(தொடரும்)

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

**திங்கள் தோறும் வெளிவருவது**


| சிலம்பு ௪ | மெய்கண்டான் யாண்டு-௭௱௩ வைகாசித்திங்கள்<br>1926௵ மே௴—ஜூன்௴ | பரல் ௫ |
|---|---|---|


திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## திலகவதியார்

திருமுனைப்பாடிநாட்டிலே வேளாளர் குலத்திலே, குறுக்கையர் குடியிலே புகழனார் என்பவர் ஒருவ ரிருந்தார். அவர் மாதினியாரை மணம் புரிந்து அன்பும் அறனுமுடையராய் இல் வாழ்க்கை இனிது நடாத்தினர். அவருக்கு மாதினியாரின் மணி வயிற்றில் திலகவதியார் என்னும் திருமகளும் மருள் நீக்கியார் என்னும் திருமகனும் பிறந்தார்கள். திலகவதியார் இளமையிற் கலைபல பயின்று பன்னீராட்டைப் பிராயத்தளாயினர். மணப் பருவம் வந்தெய்தக் குலமும் குடிமையும் குன்றா இனமும் அர

னடி அன்பும் உடைய கலிப்பகையாருக்கு அவரை மணஞ்செய்யப் பெற்றோர் தீர்மானித்தனர். எண்ணிய மணம் முடிவுறு முன் தானைத்தலைவராகிய கலிப்பகையார் அரசன் ஆணை தாங்கி அமர்செல்ல நேர்ந்தது.

இஃதிவ்வாறாகப் புகழனார் நோயுற்றுப் பூதவுடம்பு நீத்துப் புகழுடம்பு பெற்றார். அவரது மனைவியாராம் மாதினியாரும் கொழுநன் இறந்ததும் சுற்றமும் மக்களும் முற்றத் துறந்து கற்பு நெறி வழுவாமற் கணவனாருடன் சென்றார். தந்தை தாய் தலைப் பிரிந்த மக்களிருவரும் ஆற்றற்கரிய அருந்துயருற்றுப் பின் சுற்றந் தேற்ற ஒருவாறு தேறியிருந்தார். இருக்கு நாளில் பின்னும் இடுக்கண் இடையறாது வந்தது. கலிப்பகையார் போரில் மடிந்து புகழ்பெற்றார். இதை அறிந்த திலகவதியார் தனக்கெனத் தந்தையால் தீர்மானிக்கப்பெற்ற தலைவன் இறந்தபின் உயிர் வாழாது இறக்க எண்ணினார். மருள் நீக்கியார் இவ்வெண்ணத்தை அறிந்து தமக்கையை அடைந்து புலம்பி வணங்கி, 'தந்தை தாய் நீத்த தமியனேன் நும்மால் உயிர் வாழ்கின்றேன். நீர் உயிர் துறப்பீராயின் நான் முதலில் நுமக்கு முன் இறப்பேன்' என்றார். இதைக்கேட்ட திலகவதியார் தம்பியார் மீது அன்பு காரணமாக உயிர் வாழ இசைந்தனர்.

திலகவதியாரும் மருணீக்கியாரும் நிலையாமை யுணர்ந்து தமது செல்வத்தால் அறங்கள் பல செய்தனர். மருணீக்கியார் சமண்சமயஞ் சேர்ந்து அச்சமயத்திற் றலைசிறந்து விளங்கினார். திலகவதியாரோ செந்நெறியாம் சிவநெறி நின்று, பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்பால் ஆரா அன்பினராய்த் திருவதிகை சென்று வீரட்டானேசுரருக்குத் திருத்தொண்டு புரிவாராயினர். அவர் நாடோறும் புலருமுன் னெழுந்து புனித நீராடி, திருநீறணிந்து சிவசின்னங்கள் தாங்கி, திருக்கோயில் சென்று திருவலகிட்டு, ஆவின் சாணத்தால் அழகுபெற மெழுகி, நந்தனவனஞ்சென்று நறுமலர் கொய்து மாலைகள் தொடுத்து மற்றும் பணிபல புரிந்து வந்தார். இவ்வாறு திருத்தொண்டு செவ்விதிற் புரியுந் திலகவதியார்க்கு மனக்கவலை ஒன்று மாறாதிருந்தது. அஃதென்னெனின் தனது

தம்பியார் பாசமயப்படு குழியில் வீழ்ந்து விட்டாரே, அவரை எவ் வாறு சைவநெறி சேர்ப்பது என்பதேயாம். மனக்கவலை மாற்றவல் லார் தனக்குவமையில்லாராகிய வீரட்டானேசுரரே என்று கருதி, அவரிடத்து நாடோறும் தனது குறையை முறையிட்டு வந்தார். அடியார் துயர் களையும் அண்ணலார் அம்மையார்க்குக் கனவிற் றோன்றி 'நினது தம்பியைச் சூலை நோயால் ஆட்கொள்வோம்' என்று அருளிச்செய்தார். அவ்வாறே மருணீக்கியாரும் துன்பம் மிகு சூலையுற்றுத் துயருழந்தார். அதனைத் தணிக்கும் வழி யறியா ராய்ச் சகிக்கலாற்றாது தமக்கைக்குத் தன் வருத்தத்தைத் தெரி விக்கப் பணியாளனை அனுப்பினார். பணியாளன் திருவதிகை சென்று திலகவதியாரிடம் அதனைத் தெரிவிக்க, அம்மையார் கண்ணுதலாரடியா ரல்லாரைக் காண்டற்கும் அஞ்சுவாராகலின் 'அங்கு வரேன்' என்று மொழிந்தார். இம்மொழியை அவன் மருணீக்கியாரிடத்திற் சென்று சொல்லவும் அவர் கேட்டு மனந் தளர்ந்து செய்வ தின்னதென் றறியாது சமண்சமய நீத்துத் தமக்கை தாளடையத் துணிந்தார். அவ்வாறே திலகவதியாரை அடைந்து வணங்கித் தனது சூலை நோயின் கொடுமையைச் சொல் லித் தனக்கு அதினின்று கரையேறு நெறியுரைத்தருள வேண் டும் என்று பணிந்தார். திலகவதியார் அந்நோயின் காரணமறிந் தாராகலின் அதைத் தணிக்கும் வழியும் அறிந்தார். அவர் தனது தம்பியாரை நோக்கி, 'பரசமயப் படுகுழியில் விழுந்ததினால் துய ருழந்தீர், பரமசிவனைப் பணிசெய்வீராயின் நோய்தீரும்' என் றருளினார். அப்பணியை ஏற்றுக்கொண்ட மருணீக்கியார்க்கு அம் மையார் சிவனருள் நினைந்து திருவைந்தெழுத் தோதித் திருநீறு கொடுத்து அவரைத் திருக்கோயிலுக்கு அழைத்துச்சென்றார்.

> "திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்பப்
> பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்தேற்றங்கு
> உருவார அணிந்து தமக்குற்றவிடத் துய்யுநெறி
> தருவாராய்த் தம்முன்பு வந்தார்பின் தாம்வந்தார்."

திருக்கோயில் சென்று வலம் வந்து வீரட்டானரை இறைஞ்சவும் தம்பிரான் திருவருள் கூடினதால் தமிழ்மாலை பாடலுற்றார் நமது

அப்பர். அவருக்குச் சூலை நோயுடன் பிறவி நோயுந்தொலைந் தது. திலகவதியார் திருத்தொண்டு புரிந்து சிலகாலந் தங்கிச் சிவனடி சேர்ந்தார்.

அம்மையாரது கற்பும், அவாவின்மையும், அன்பும், சிவபத் தியும், திருத்தொண்டின் திறமும் யாவராலும் போற்றத்தக்கன. அவருக்குத் தனது தம்பியாரை நன்னெறி சேர்க்க வேண்டு மென்ற ஒரே விருப்பந்தானிருந்தது. அவ்வாறே நாமும் நமது சுற்றத்தாரையும் நண்பரையும் நமது சைவ சமயத்தில் நிலை நிற் கச் செய்யவேண்டியதே நமது முதற் கடமை யாகக்கொள்ள வேண்டும். திலகவதியாராலே யன்றோ நமது அப்பர் சுவாமி கள் இருள் நீங்கி இன்பம் அடைந்தார்.

‘நல்ல திலகவதியார் மொழியை நம்பிவெந்நோய்
சொல்லரசர் தீர்ந்துய்ந்தார் சோமேசா-புல்லிய
நோய்நாடி நோய்முத லநாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.’

---

## கண்ணகி கற்பு மாண்பு

[பண்டிதர் ந. மு. வேங்கிடசாமிநாட்டார்]

(கஉ௯-ம் பக்கத் தொடர்ச்சி)

இதுகாறும் எடுத்துக்காட்டியவற்றிலிருந்து கண்ணகியின் கற்பு மேம்பாடும், பொறுமை முதலிய குணங்களும் இனிது விளங்காநிற்கும். இனி, கோவலன் கொலையுண்டபின் கண்ணகி பொறுக்க முடியாத துயாமுடையவளாகித் தெய்வமுற்றாள் போன்றுயினளாகலின் அப்பொழுதைய நிகழ்ச்சிகள் மக்கட்டன் மையில் வைத்து ஆராய்தற்குரியவல்ல; எனினும் அந்நிகழ்ச்சிகள் தாம் கண்ணகியை உலகத்தார் அறிந்து கொள்வதற்கும், வீரபத் தினி யென்றும் பத்தினிக்கடவுளென்றும் கொண்டாடுதற்கும் காரணமாயிருந்தன. அவற்றுள் அவட்குக் கணவன்பாலிருந்த அன்பின் மிகுதியையும், அரசன் முன்னரும் அஞ்சாது வழக்

குரைக்கும் அவளது வீரத்தையும் புலப்படுத்துவன சில காட்டு தும். கண்ணகியிருந்த ஆயர்சேரியில் பலவகையான உற்பாதங்க ளுண்டாக மாதரி முதலியோரால் உற்பாத சாந்தியாகத் திரு மாலைக் குறித்துக் குரவைக் கூத்து ஆடப்பட்டது. சிலம்புவிற்கச் சென்ற கோவலன் பொற்கொல்லன் சூழ்ச்சியால் வாளால் வெட் டுண்டிறந்தான். கோவலன் கொலையுண்ட செய்தியைக் கேள்வி யுற்ருளொருத்தி குரவையாடு மிடத்திற்கு வந்து நிகழ்ந்ததனை வாக்காற் சொல்லலாற்ருதவளாய் மெய்ப்பாட்டாற் புலப்படுத்தி நின்ருள். அப்பொழுது கண்ணகி,

> "நன்பகற் போதே நடுக்குநோய் கைம்மிகும்
> அன்பனைக் காணு தலறுமென் னெஞ்சன்றே
> அன்பனைக் காணுது அலறும்என் நெஞ்சாயின்
> மன்பதை சொன்ன தெவன்வாழி யோதோழீ"

என் றிவ்வாருகக் கூறிக் கலக்கமுற்று வினவலானுள். அப்பொ ழுது அவள் 'அரசனது அந்தப்புரத்திற் சிலம்பு திருடியவன் இவனேயாமென்று குரைகழல் மாக்கள் கொலை குறித்தனர்' என் ருள். என்னலும், கண்ணகி,

> "பொங்கி யெழுந்தாள் விழுந்தாள் பொழிகதிர்த்
> திங்கள் முகிலோடும் சேணிலங் கொண்டெனச்
> செங்கண் சிவப்ப அழுதாள்தன் கேள்வனை
> எங்கணு வென்னு இனைந்தேங்கி மாழ்குவாள்"

ஆகி, 'தம்மோடு இன்புற்ற தம் கணவர் எரியின் கண் மூழ்க அவரோடு அதனிடை மூழ்காது துன்பமுறுந் தன்மையவாகிய கைம்மை நோன்புகளை நோற்று இடர்ப்படும் உயவற் பெண்டி ரைப் போல அன்பனை யிழந்தேனுகிய யான் இருந்தழுவாள் ஒருத்தியோ' என் றிங்ஙனம் புலம்பினுள். இவையெல்லாம் கணவன்பால் அவட்கிருந்த அன்பு மிகுதியையும், கற்பின்றிறத் தையும் காட்டுவனவாம். அவள் அரசன் முன்சென்று வழக் குரைக்கும் பொழுது

"தேரா மன்னு செப்புவ துடையேன்"

என்றும்,

"நற்றிறம் படராக் கொற்கை வேந்தே"

என்றும் விளித்துத் தன் நாட்டு அரசனாகிய சோழனது நீதியைப் புலப்படுத்தித் தன் வரலாறு கூறிக் கோவலன் குற்றமுடையனல்லனென உறுதிப்படுத்தியதும்,

"பட்டாங் கியானுமோர் பத்தினியே யாமாகில்
ஒட்டேன்:அரசோ டொழிப்பேன் மதுரையும் என்
பட்டிமையுங் காண்குறுவாய்"

என வஞ்சினங் கூறி, மதுரைமாநகரை எரியூட்டியதும் அவளது அஞ்சாமையையும், மறக்கற்பின் பான்மையையும் புலப்படுத்துவன. செங்கதிர்ச் செல்வன் அவளது வினாவிற்கு அசரீரியாக உடன் விடை கூறியதும், அங்கியங்கடவுள் அந்தண வுருத்தாங்கி வந்து 'யார்யாரை யழிக்க வேண்டும்' என அவளது பணியைக் கேட்டு, அவள் பணித்தபடியே புரிந்ததும், மதுரைமா தெய்வம் வெளிப்பட்டு அவட்குப் பழம்பிறப்பின் வரலாறு கூறியதும் தெய்வங்களெல்லாம் கற்புடை மகளிரின் உரைவழி நிற்குமென்னும் உண்மையைப் புலப்படுத்துகின்றன. அவள் வெட்டுண்டு கிடந்த கோவலனைத் தழுவி உயிர்பெற் றெழச் செய்ததும், பின் பதினான்காம் நாளில் தெய்வ வடிவுடன் வந்த கோவலனோடு விமானமேறிச் சென்றதும், வெற்றிவேற் செழியன், கொங்கிளங்கோசர் முதலாயினோர் விழாச்செய்து வழிபட அவர்கள் நாட்டில் மழைவளம் பெருகச் செய்தருளியதும், இமயத்தினின்றும் கற்கொணர்ந்து தன்னைப்பிரதிட்டித்து வழிபட்ட சேரன் செங்குட்டுவனுக்குத் தெய்வவடிவத்தோடு வெளிப்பட்டுக் காட்சிதந்து வாழ்த்தியதும், ஆரிய மன்னரும் மாளவவேந்தரும் இலங்கையரசனாகிய கயவாகுவும் அப்பொழுது அங்கு வந்து 'இச் செங்குட்டுவனைப் போல எங்கள் நாட்டில் யாங்கள் புரியும் பூசையில் நீ எழுந்தருளி அருள் செய்ய வேண்டும்' என்று குறையிரப்ப அவ்வாறே வரமளித்ததும், தான் தேவந்திமேற் றோன்றி அங்கு

வந்த இளங்கோவடிகட்கு அவாது வரலாறு கூறி உவப்பித்ததும் அவள் வழிபடுவோர்க்கு வேண்டிய வரந்தரும் தெய்வமாயினமை யைத் தெரிவிப்பனவாம்.

இனி, கற்புடைமகட்குக் கணவனே தெய்வமாயினும் அவன் தொழுகுலமாகிய தெய்வமும் அவனின் வேறல்லளாகிய அவட்கும் தெய்வமா தலமையும். அவ்வாற்றால் அவளுக்கோர் சமயக்கோட்பாடு முண்டாம். கோவலனும் கண்ணகியும் புகாரி னின்று புறப்பட்டு வரும்பொழுது அசோகின்நிழலில் சாவகரால் இடப்பட்ட சிவாதலத்தைத் தொழுது வலங்கொண்டுவந்தன ரென்றும்,கவுந்தியடிகள் அவர்களை 'பெருமகன்றிருமொழி பிறழா நோன்பும் உடையீர்' எனக் கூறினரென்றும், ஓர் பொழிலில் தருமஞ்சாற்றும் சாரணர் தோன்ற, அவர்கள் 'பண்டைத்தொல் வினை பாறுக' என்று கவுந்தியடிகளோடு காலுற வீழ்ந்து வணங் கினரென்றும் இளங்கோவடிகள் கூறிச் செல்லுதலால் கண்ண கியின் சமயம் ஆருகதமென்பது அவர்கருத்தாதல் பெறப்படும். சேரன் செங்குட்டுவனோ சிவபெருமான் வரத்தாற் றோன்றியவ னென்றும், 'தெண்ணீர்க் கரந்த செஞ்சடைக் கடவுள் வண்ணச் சேவடி மணிமுடி' வைக்கும் சிவபத்தியுடையனென்றும் அடி களே கூறுகின்றார். அம்மன்னவன் கண்ணகிக்குக் கோயிலெ டுத்து வழிபட்டதும், அங்ஙனமே ஏனை மன்னரெல்லாம் வழிபட் டதும் நோக்குழி பத்தினிப் பெண்டிர் முதலாயினர் சாதி சமய வரையறை யின்றியே உலகினர் யாவரானும் போற்றற்குரிய ரென்னும் உண்மை வெளியாகின்றது.

> "கற்றவர்க்கு நலனிறைந்த கன்னியர்க்கும் வண்மைகை
> உற்றவர்க்கும் வீரரென் றுயர்ந்தவர்க்கும் வாழ்வுடைக்
> கொற்றவர்க்கு முண்மையான கோதில் ஞான சரிதராம்
> நற்றவர்க்கு மொன்றுசாதி நன்மை தீமை யில்லையால்"

என்னும் பாரதச்செய்யுள் இங்கே நினைக்கத் தக்கது. இனி, கவுந்தியடிகள் கண்ணகியை மாதரிபால் அடைக்கலமாக ஒப்பு விக்கும்பொழுது கூறிய கற்புடை மகளிரின் பெருமையை எடுத்துக் காட்டுவதுடன் இக் கட்டுரையை முடிப்பாம்.

"இன்றுணைமகளிர்க் கின்றியமையாக்
கற்புக் கடம்பூண்ட இத்தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்
வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது
நீணில வேந்தன் கொற்றஞ் சிதையாது
பத்தினிப் பெண்டி ரிருந்த நாடு."

---

# சாணக்கிய நீதி நூல்

[கா. சுப்பிரமணிய பிள்ளை, M.A., M.L.]

(கடுஎ-ம் பக்கத் தொடர்ச்சி)

பதினொன்றாவது பகுதி எதிரிநாட்டிலுள்ள தொழிலாளர் சங்கங்களைத் தக்க சூழ்ச்சிகளால் அரசன் தன்வயமாக்கு முறைமையும், மறைவாகச் செய்யுந் தண்டனை முறைமையும் பற்றிக் கூறுகின்றது.

பன்னிரண்டாம் பகுதி அரசன் தன்னினும் வலிய எதிரியைப் பலவகைச் சூழ்ச்சிகளால் வெல்லும் விதிகளை விதந்தோதிற்று. தூதுசெல்வோர் உபாயங்களும் இதனுள் விரித்துரைக்கப் பட்டன.

பதின்மூன்றாம் பகுதி கோட்டையை முற்றுகை செய்தலனைத்தையும் பற்றிக் கூறுகின்றது. வெற்றிகொண்ட நாட்டில் எதிரியால் அங்குள்ள குடிகட்கு நேர்ந்த குறைகளைத் தமது நற்செயல்களால் நீக்கி அவர்களைத் திருப்திசெய்து தம்வயமாக்கும் உபாயங்கள் கூறப்பட்டன. தீர்வையைக் குறைத்தலும் பரிசளித்தலுமாகிய சூழ்ச்சிகளை மேற்கோடலும் விதிக்கப்பட்டது.

பதினான்காம் பகுதியில் மருந்து, மந்திரம், தந்திரம் என்னும் இவைகளால் எதிரிகட்குக் கேடுவிளைக்குஞ் சூழ்ச்சிகளும், தனக்கும் தன் படைகட்கும் எதிரியால் விளைந்த கேட்டினை நீக்கும் உபாயங்களும் விவரமாக உரைக்கப்பட்டன.

பதினைந்தாம் பகுதி நூலிலக்கணத்தையும் அதனை அமைக்கும் உத்திகளையும் சுருக்கமாகவும் விளக்கமாகவும் இயம்புகின்றது. இந்நீதிநூல் 15-காண்டங்களையும் 150-அதிகாரங்களையும் 6000 -சுலோகங்களையும் உடையது.

இதுகாறுங் கூறியவாற்ருல் சாணக்கிய நீதிநூல் அரசர்க்கு வேண்டிய ஒவ்வொரு செய்தியின் விரிவனைத்தும் விவரமாக அரசர்கள் கைக்கொள்ளும் சூழ்ச்சி வடிவமாக ஓதிய நூலென்பது புலப்படும். ஆசிரியர் **திருவள்ளுவனர்** அரசர் செய்தற்குரிய ஒவ்வொரு செய்தியின் விவரங்களைப் பற்றிக் கூறுவதைத் தம்முடைய நோக்கமாக எடுத்துக் கொள்ளவில்லை. அரசர்க்கும், குடிகட்கும் இன்றியமையாத சில உயர்ந்த கொள்கைகளை இனிய நன்முறையில் உறுதியாக வற்புறுத்தும் நோக்கத்துடன், பாநயமிக்கமைந்ததாய்ச் சுருக்கமாயும் விளக்கமாயும் உள்ள **குறள் வெண்பாக்களினுலே** தமது அரியநூலை யாத்தனர். ஆதலால் திருவள்ளுவருடைய உயர்நோக்கும் நூற்போக்கும் சாணக்கியத்துட் காணப்படா. சாணக்கியத்துட் காணப்படும் பலவிதிகள் உயர்ந்த நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டில. அவை காலத்திற்கு ஏற்றவாறு மாறுதலடையுந் தன்மையன. திருவள்ளுவர் நூலுட்கூறிய உண்மைகள் உலகத்திலுள்ள அரசாங்கங்களனைத்திற்கும் பொதுவாய் எக்காலத்தும் யாவராலுங் கைக்கொள்ளப்படும் பான்மையன. திருக்குறட் பொருட்பாலுள், இறைமாட்சி, செங்கோன்மை, கொடுங்கோன்மை, வெருவந்த செய்யாமை, ஒற்ருடல் என்னும் இவைகள் அரசியலுள் அரசர்க்குச் சிறப்பானவை. அரசியலுட் போந்த ஏனை இருபது அதிகாரங்களும் யாவர்க்கும் பொதுவான கடமைகளைப் பற்றியே கூறுகின்றன. அறியவேண்டியவற்றை யறிதலும், பெரியாரைத் துணையாகக் கொள்ளுதலும், குற்றங்கடிந்து செய்வனவற்றைக் காலமும், இடமும், ஆற்றலும் நோக்கிச் செய்யுமிடத்து விடாமுயற்சியும் ஊக்கமும் உடையனு யிருத்தலும், சுற்றந் தழுவலும், இரக்கமுடைமையும் இவற்றுட் கூறப்பட்டன. அங்கவியலுள் அமைச்சு என்பதும், தூது என்பதும், மன்னரைச் சேர்ந்தொழுகல் என்பதும் அமைச்சர்க்குச் சிறப்பாகக் கருதப்படலாம். நாடு,

அரண், படைமாட்சி, படைச்செருக்கு, பகைமாட்சி, பகைத் திறந்தெரிதல், உட்பகை என்பவைகளே ஏனையங்கங்கட்குச் சிறப்பாக உரிய அதிகாரங்களாகும். அங்கவியலுட்போந்த பிற அதிகாரங்களும் ஒழிபியல் முழுவதும் யாவருங் கடைப்பிடித்தற் குரிய உண்மைகளையே கூறுகின்றது. திருக்குறட் பொருட்பால் எழுபது அதிகாரங்களுள் அரசாங்கத்துக்குரிய சிறப்பு அதிகாரங் களின் எண் 15, 16-க்கு மேற்படவில்லை. அவைகளும் அரசாங் கத்திற்குரிய பொது இலக்கணங்களையே விதந்தோதுவன. விதி களின் விவரங்களைப்பற்றி அவை யாதுங்கூறவில்லை. இதுகாறுங் கூறியவற்றைத் தெரிவோர் திருவள்ளுவநூலின் பொருட்பால், சாணக்கியநூலின் வழிவந்ததென்று எவ்வாறு கொள்ளுதல் கூடும்? இதனை யறிஞர் ஆய்ந்து உண்மை யுணர்வாராக.

---

## காமந்தகம்.

காமந்தக நீதி நூலென்பது சாணக்கிய நீதி நூலுள் 150 அதிகாரத்திற் கூறியதனை 36 அதிகாரத்தில் தொகுத்துக் கூறும் சுருக்க நூலாகும். பொறியடக்கம், கல்விப் பயிற்சி, வித்தை விளக்கம், வருணாச்சிரமம், தண்டத்தினன்மை, நெறி நிற்றல், அரசாங்கப்பகுதி ஏழினையும பூர்த்திசெய்தல், முதலாளி வேலையாட்கள் கடமைகள், குடிகட்கு நேருங் கேட்டை விலக் கல், அரசகுமாரரைப் பாதுகாத்தல், தற்பாதுகாப்பு, அரசர் சுற் றத்தாரையும் நட்பினரையும் நடத்தும் முறைமை, சுற்றத்தார் நடத்தை, துணைதேடும் முறைகள், பகைத்திறன், போர்த் தந்திரங்கள், ஆலோசனைமுறைகள், தூதர் சூழ்ச்சி, ஒற்றர் தன் மை, முயற்சியின் பெருமை, குடிகள் கடமை, குடிகள்பாலுள்ள குறைகள், எழுவகைத் தீப்பழக்கங்கள், போர்க்குத் தக்க காலம், பாசறையமைப்பு, முற்குறியறிதல், சாமதான பேத தண்டங்களி னியல்பு, படைத்திறனறிதல், படைத்தலைவர் கடமை, போரில் படைப் பாதுகாப்பு, அநியாயப்போர், நால்வகைச் சேனையி னியல்பு, படைக்குரிய இடம், படைக்குப் பரிசளிப்பு, அணி வகுப்பு, நியாயப் போர் என்னும் இவைகளே இந் நூலுட்போந்த

பொருள்களாகும். திருவள்ளுவ நூலுக்கும் இதற்கும் சில கருத்துக்கள் பொதுமையிற் காணப்படும். அரசர்க்குரிய அங்கங்கள் ஆறெனத் திருவள்ளுவர் வகுத்துக் காட்டியமுறை சாணக்கியத்துட் காணப்பட்டவாறே இந்நூலினுள்ளுங் காணப்படுகின்றது. ஆசிரியர் திருவள்ளுவனார் அரசர்க்கு வேண்டுவனவாகக் கூறிய கொடை, அழி, செங்கோல், குடியோம்பல் என்னும் நான்கினோடு தக்காரிணக்கத்தினையும் கூட்டி அவர் ஐந்தென்றார் காமந்தக நீதிநூலார். இங்ஙனம் ஒரு சிறிது கருத்தொருமை காணப்படுதல்பற்றி காமந்தகத்தின் வழி வந்ததென்று திருவள்ளுவ நூலைக் கூறுதல் பெரிதுந் தவறாகும். மேலே சாணக்கிய நூலும் திருவள்ளுவ நூலும் தம்முட் பெரிதும் வேற்றுமையுடையன வென்பதற்குக் கூறிய காரணங்கள் இதற்கும் ஒக்கும். ஆதலால் ஆசிரியர் திருவள்ளுவனாரது திருக்குறள்நூலின் பொருட்பாலிற்கு சாணக்கியம் காமந்தகம் முதலிய வட நூல்கள் முதனூலாகாமை தெளிக. முற்றிற்று.

---

# குறிப்புரை

[பறக்கை, ப. சிதம்பரதாணு பிள்ளை]

செல்வியின் ச-வது சிலம்பு ௩-வது பாலில் 'சாணக்கிய நீதி நூல்' என்ற தலையங்கமிட்டு திருவாளர், கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் M.A., M.L., வரைந்துள்ள விரிவுரையில் "சாணக்கிய நீதி நூலிற் குறித்துள்ள பழக்கங்களுட் சில பின்னுளில் இல்லாமற் போயின. அவைகளாவன :—

1. கணவனுக்கும் மனைவிக்குஞ் சண்டை வந்தக்கால் விலகிக் கோடல்.
2. பெண்கள் மறுமணம் புரிதல்.
3. பிராமணர் மேல் வருணங்களில் மணந்துகொண்ட பெண்ணோடு சூத்திரப் பெண்ணையும் மணத்தல்.
4. பிராமணர், கள்ளும் ஊனும் புசித்தல்.
5. அவர்கள் படைக்கலத் தொழிலைக் கைக்கொள்ளுதல் என்பனவாம்"

என எடுத்துக் காட்டியுளர். இவற்றில் க, உ, ரு, என்களில் குறிக்கும் பழக்கங்கள் இன்னும் மலையாள நாட்டில் வழங்கி வருகின்றன. ஆனால் இப்பழக்கங்கள் பெரும்பாலும் மலையாள நாட்டு சூத்திரர் (Nairs) என்ற வகுப்பினரிடையேயாகும்.

இதில் ஆதியிற் கூறியவை கணவனுக்கும் மனைவிக்கும் ஏதாவது காரணங் குறித்து விலகிக்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் இருவர் மனதிலும் பிறந்துவிட்டால் விலகி யிருந்துகொள்ள அவர்கள் சமுதாயச் சட்ட மிடங்கொடுக்கிறது.

இரண்டாவதாக கூறியவையும் கணவன், மனைவி, இவர்களில் ஒருவர் மரணத்தாலோ அல்லது வேறு காரணத்தாலோ ஒருவரை யொருவர் பிரிந்துகொள்ளும்படி நேர்ந்தால் ஒரு பெண்ணுக்கு இனியொரு புருஷனையும், புருஷனுக்கும் அவ்வாறு வேறு ஒரு ஸ்திரீயையும் மறுமணஞ் செய்துகொள்ள சட்டமிடங்கொடுக்கிறது.

மூன்றுவதாக கூறிய விஷயமும் பிராமணர்களில் பெரும்பாலரும் தம் மினத்தில் மணந்துகொண்ட பெண்ணிருக்கும் போது மலையாள நாட்டு சூத்திரப் பெண்களையும் மணந்துகொள்ளுவது சாதாரண வழக்கமாகவே யிருந்து வருகிறது. இவ்வாறு ஓர் பிராமணர் ஓர் சூத்திரப் பெண்ணை மணந்து கொள்ளுவதை சூத்திரர்கள் மதிப்பாகவும் கருதுகின்றனர். இங்ஙனம் செய்துகொள்ள சூத்திரர்களுக்குள்ள சமுதாயச் சட்டமு மிடங்கொடுக்கிறது. ஆயினும் இப்போது அங்ஙனம் மணந்துகொள்ளும் ஓர் பிராமணரது சொத்துக்கு சூத்திரப் பெண்ணில் தனக்குப் பிறக்கும் குழந்தைகளுக்கு உரிமையுண்டென்று சூத்திரர்களது சட்டம் வற்புறுத்துவதால் பிராமணர்கள் இவ் வழக்கத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக கைநழுவி வருகின்றனர். ச-ம், ரு-ம், எண்களிற் கூறும் விஷயங்கள் இப்போது ஒரு நாட்டிலும் ஒரு சமுதாயத்தாரிடத்தும் நடைபெறுவதாகத் தெரியவில்லை. யான் இங்ஙனம் ஓர் குறிப்புரை எழுதத் துணிந்தது திரு. பிள்ளையவர்கள் எழுதிவரும் விரிவுரைக்குச் சற்றேனும் உதவிபுரியுமென்ற நோக்கமே.

———

# மணமுறை

[க. க. முருகேச பிள்ளை]

மணம் என்பது எவர்க்கும் இன்றியமையாதது. அதுவே முத்திக்கும் வழி காட்டுவது. இது கருதியன்றே நந்தமிழக வறிஞர் இல்லறத்தை விதந்ததூஉம், அன்னார் இயற்றிய நூல் களுள் இன்பச் சுவையை மேம்படக் கூறியதூஉமென்க. இம் மணமோ ஒத்த காதலுடைய தலைவன் றலைவியரால் எய்தப்படுவது. ஒத்த அன்பில்லாவிடில் அம் மணத்தாலோர் (பிரயோசனமு) பயனுமில்லை யென்க. இது நோக்கியன்றே நங்கலைமூதாட்டியும் "காதலிருவர் கருத்தொருமித் தாதரவுபட்டதே யின்ப" மென் றோதியதூஉமென்க. தமிழ்நாட்டில் தலைவன் றலைவியர் தாமே தத்தம் மனதிற்கிசைந்த வொருவரைத் தேடிக் கூடுவது வழக்கமாயிருந்தது. இதனானன்றே தமிழ்நாடு கற்புக்கு நிலைக் கழமா யிருந்ததுமென்க. என்னை? காதன் மீக்கூர்ந்து ஒருவர் பால் அமைந்த மனம் மற்றையர்பால் செல்லாதாகலின். இனித் தாய் தந்தையர் பேசி மணமுடித்து வைப்பதுமுண்டு. இங்ஙன மாங்கால் மணமகன் மணமகள் ஆகுபவரின் பிரியத்திற்கு மாறா கச் செய்வதில்லை யென்க. விருப்ப மில்லாதோரை மணமுடிப் பதாலேயே (பெற்றார் சுற்றத்தாரின் ஆக்கினைக்கா) வியபிசாரம் நிகழ்வதூஉமாம். இதனால் இல்லறம் செவ்வனே நடைபெறாது நடைபெறாக்கால் துறவறமுமின்று. இல்லாக்கால் மோக்கமு மின்று. எனவே, தலைவன் றலைவியரின் பிரியமின்றி விவாகஞ் செய்வதால் பயன் யாதுமில்லை யென்க. இருவரும் விரும்பி இயற்றுவதாதலி னன்றே இதற்கு வேட்டல் எனப் பெயர் எய்தியதூஉமென்க. உண்மை யிப்படியிருக்க இக் கொள்கை யோடு ஒரு சிறிதுமொவ்வா ஆரியாது மணமுறைகளைத் தழுவு வது தமிழ் மக்களாகிய எம்மவர்க்கடாது. அன்னார் செய்யும் மணக்கிரியைகளும் எம்மவர்க்குரியவல்ல.

இனித் தற்காலம் ஆரியர் மயக்கிற்பட்டு எம்மவர் நிலை திறம்பியதை நினைக்குங்கால் எவர்க்கும் மனம் புண்படுமன்றே.

அந்தோ! கற்புக்குத் தலை சிறந்ததாகிய களவுப் புணர்ச்சியை யிழித்துக் கூறுவதை யென்னென்பேம். இதுவும் தமிழரின் தவக்குறைவே கொல்? இதுவே சிறந்ததென்பது தமிழூற்கட் கெல்லா மொத்த துணிபு. எம்மருந்தமிழ்ச் செல்வர்காள்! இது நுங்கட்குப் பிரியமில்லாவிடின்; தலைவன் தலைவியசாவோருடைய பிரியமாகுதல் கேட்கொணாதா? நுமது அருந்தவப் புதல்வர் களை மீளா நரகிற்கும் வசைக்கு மாளாக்காதீர். இது கிடக்க,

மண முடித்தற்காகிய வயதைச் சிறிதாராய்வாம். ஆரியப் பார்ப்பனர் பேதைப்பருவத்தே மணமுடிக்க வேண்டு மென் கின்றனர். இது முற்றுந் தவறு. என்னை? பேதைப் பருவத் தவள் தன் காதற்குரியார் யாரென்பதையும் பிறவற்றையு மறியா ளாகலின். இதனாலேயே தமிழகம் வாலிப விதவைகள் நிறையப் பெற்றிருக்கிறதூஉமாம்.

இனி, மேனாட்டார், உ௰, ௩௰ என உயர்த்துவாராயினர். இதுவும் பொருந்தாது. என்னை? ஒரு பொருளின் இச்சை வந் துழி யதையடக்க முடியாதன்றே. ஒருவா றடக்கினும் மனக் கிலேசத்தான் நோயுறுவதுமுண்டு. அன்றியும் பருவகாலத்தே செய்வதேயன்றி மற்றைக் காலத்துச் செய்யப்படாதாகலின். பருவந்தவறிச் செய்வதால் பயனின்று. பருவ மெப்படியறியலா மெனின், பெண்கள் பக்குவமெய்துங் (பூப்பு) காலமே அவர்க்குப் பருவமாம். ஆண்மக்கள் தலைவனையடையப் பக்குவப் படுதல் போல் பெண்களுந் தமக்குத் தலைவனை நாடவேண்டிய காலமே பூப்புக்கால மாதலின் அது பக்குவ மெனப் பெயர் பெற்றது.

ஆடவர்க்குக் காம இச்சை யுண்டாங்காலமே பருவ மென்க. அப்பருவங்க ளிவ்வயதிலே யெய்துமெனத் தமிழூற்களில் வெகு அழகாகப் பேசப்பட்டிருக்கின்றது. வருமாறு: பெண்கட்குப் பன்னிரண்டு வயதும் ஆண்கட்குப் பதினாறுமே. இங்ஙனமே அடியார்க்கு நல்லோருங் கூறினர். அதுவுமன்றி ஞானசம்பந்தப் பெருமான் மண முடித்த ஞான்றே முத்தியெய்தினர் எனவும் சுந்தரமூர்த்திகள் பதினெட்டு வயதிலெய்தின ரெனவுங் கூறுப.

ஞானசம்பந்தர் முத்தியடைந்தபோது அவர்க்கு வயது பதினாறு. சுந்தரர் பதினெட்டு வயதினுள் இருமண முடித்தனர். ஆகவே, அவர் முந்திய மணமுடிந்தபோழ்து பதினாறு வயதிருக்கும் போலும். ஆகவே மேற் சொல்லிய வயதுத்தொகை வழக்கிலும வந்திருப்பதறிக. நீர் கூறிய வயதெல்லை பிசகுபடக் காண்கின்றேமெனின். அறியாது கூறினீர். இது கமுகந்தோட்ட மென்றாற்போல மிகுதிபற்றிய வழக்கென வறிக.

இனி, "முப்பதா மாண்டளவில் மூன்*றற்று" என ஔவை கூறலானு மிது துணியப்படும். எங்ஙனமெனில் "மூன்று" என்பது காமம், வெகுளி, மயக்கம். (அறம், பொருள், இன்பமுமாம்) எனவே அவை மூன்றினுள்ளுங் கடக்கற் கரிதாய காம விச்சையைக் கடக்க நாம் மேற் கூறிய வயதில் மனத்தாலே சற்றுவது கடக்கலா மென்க. விரிவஞ்சி யித்துணை முடிக்கின்றாம். கால நேர்ந்துழி யின்னும் விளக்குவாம்.

---

# திருவாசகத்தில் ஒருவாசகம்.

[அ. கந்தசாமிப்பிள்ளை.]

(கஃ௯-ம் பக்கத் தொடர்ச்சி)

சரிதம்:—மைத்துனக் கேண்மையினராகிய செட்டிகள் இருவர் வடக்கேயிருந்து வியாபாரத்தின் பொருட்டுத் தெற்குநோக்கி வந்துகொண்டிருந்தனர். அவருள் ஒருவர் சிவபத்தியுடையவர். அவர்கள் இக்குடக்கோட்டுரை யடைந்ததும், மற்றையான் சிவபத்தியாரை நோக்கி இவ்விடம் நீர்வசதியுடையதாயிருக்கின்றமையால் இங்கே நாம் கொணர்ந்துள்ள ஆற்றுணவையுண்டு, இளைப்பாறிச் செல்வோம் என்றனன். சிவபத்தியார் இன்னுங் கொஞ்சதூரஞ் சென்றால் வாலி பூசித்துப் பேறெய்தியதாகிய வாலீசுவரம் (சேலூர்) இருக்கின்றது, உண்பதை அங்கே வைத்துக்கொள்வோம என்றனர். மற்றையான் ஏது, பசி மிகுகிறது;

---

* மூன்று ஆணவம், கன்மம், மாயையுமாம்.

அதுவரையும் பொறுக்கமுடியாது எனச், சிவபத்தியார், ஆயின் நீவிர் உண்டுவருக; நான் சிவதரிசனம் செய்தன்றி யுண்ணுவிரத முடைமையைப் பசியால் மறந்தீர்போலுமென்றனர்.

மற்றையான் ஒரு விளையாடலை யுட்கொண்டு, நான் முன் பொருகால் இவ்வழியே வந்தபொழுது, இங்கோர் மரத்தடியில் ஒரு சிவலிங்க மிருக்கக்கண்டேன். நீவிர் நீராடி நியமம்முடிக்க; நான் அச்சிவலிங்கப் பெருமானைக் காட்டுவேன் தரிசித்துப் பின் ஈண்டே உண்டிமுடித்து வழிக்கொள்வோம் என்றனன்.

அதை நிசமெனக்கொண்டு நீராடப் புக்கனர் சிவபத்தியார். அதற்குள் இவன் ஓர் மரத்தினடியில், மணலால் பீடமும், கோமுகியும் அமைத்து, தங்கள் குதிரைகளில் ஒன்றற்குக் கட்டி யிருந்த மொக்கணியை யவிழ்த்து, அதில்நிறைய மணல் நிரப்பித் திரட்டிப் பீடத்தில் புதைத்துப் பரிவட்டஞ் சாத்திப் பீடத்தை மறைத்து சிவலிங்கத்தின்மீதும் பத்திர புஷ்பங்களை நிரம்பத் தூவி வைத்து, திரும்பிச் சிவபத்தியாரை யடைந்து, அழைத்து வந்து, இதோ உங்கள் சிவன் எனக் காட்டினன்.

கண்டனர் சிவபத்தியார், அப்போது அவருக்கு விளைந்த வினைவை யாரறிவார் ?

அன்பெனுமாறு கரையது புரள, நன்புலனொன்றி நாதவென் றாற்றி, யுரைதடுமாறி யுரோமஞ் சிலிர்ப்பக், கரமலர் மொட்டித் திருதயம் மலரக், கண்களிகூற நுண்டுளி யரும்பப் பரவசமடைந் தனர்; வலம் வந்தனர்; பணிந்தெழுந்து குடந்தம்பட்டனர்; அக் காட்டுள் தமக்கு எளிவந்து வெளிவந்த அருமையைப் பாராட்டிப் பாராட்டி; யாடினர்; பாடினர்; பரவினர். தாம் கொணர்ந்த திர வியங்கொண்டு சிவபிரானைப் பூசித்தனர். பின் அகோரஞ் செபித்து குற்றங் குறைகளுக்கு மன்னிப்பு கேட்டுக்கொண்டு, சிவலிங்கப் பெருமானை யரிதிற் பிரிந்து, நீரோடையை யடைந்து உண்பான் புக்க அளவில். மற்றவன், நிற்க; உண்ணற்க; நீவிர் பூசித்தது போலிச் சிவலிங்கம்; விளையாட்டால் அங்ஙனஞ் செய் தேன்; மன்னித்திடுக என்றலும், அவரும் இரங்கி, அச்சிவலிங்

கத்தை யெய்தி, அசைத்துப் பார்க்கச் சிறிதும் அசையாது, அஃது உண்மைச் சிவலிங்கமாகவே காணப்பட்டது; காணப்படவே சிவபத்தியார் மெய்ம்மறந்து தம்பாகாரமாகி நின்றனர்; மற்றவன் மனமுட்கினன். எம்பெருமானது அருட்டிறம் அனைத்தும் யாரறி யவல்லவர்? சோழநாட்டிற் கன்றுப்பூரில் நடுதறி நாயகராய் வெளிப்பட்டாற்போலவே கொங்குநாட்டிலும் மொக்கணீசுவ ராய் வெளிப்பட்டனர் எம்மான்.

இதுபொழுது இவ்வூராரும் கூடினர். கடவுளுக்கு ஆலயம் வகுத்துப் பல்வகை யுபசாரங்களோடு நித்திய நைமித்தியங்கள் நடத்துதற்கு வேண்டும் நிபந்தனங்களும் *அமைத்தனர். சிவ பத்தியாரும் அத்திருப்பணியில் நின்று அங்கேயே வாழ்ந்திருந்த னர் என்பதாம்.

நந்தம் மணிவாசகப் பெருந்தகையார், பல தலங்களுக்குஞ் சென்று சிவதரிசனஞ் செய்து வருபவர், திருப்பராய்த்துறை, திருவீங்கோய்மலை முதலியவற்றை வணங்கி, அடுத்த கொங்கு நாடு புகுந்து, பல சிவ தலங்களையும் வணங்கிக்கொண்டு அவிநாசி யடைந்து அவிநாசியப்பரை வணங்கிக்கொண்டு, அதற்கடுத்த இம்மொக்கணீசுவரரையும் வணங்கிச் சென்றிருக்கவேண்டும்.

இதற்குச் சான்று, திருவாசகத்தில்,

"நரியைக் குதிரைப்பரியாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித்துப்
பெரியதென்னன் மதுரையெல்லாம் பிச்சதேற்றும் பெருந்துறையாய்
அரியபொருளே யவிநாசியப்பா பாண்டிவெள்ளமே
தெரியவரிய பரஞ்சோதி செய்வதொன்று மறியேனே"

என்னும் பாடலும், இங்கே மேற்கொண்ட "மொக்கணி... தொன்மையும்" என்னும் தொடருமாம்.

---

*இக்கோயிலுக்கு அணிமையில் உள்ள நிலங்கள், நட்டுவன் மானி யம், தேவடியாள் மானியம் என்று இன்றும் வழங்கிவருகின்றன,

இச்சரிதத்தை யுட்கொண்டதால் மேற்குறித்த திருவக வலின் ௩௩, ௩௪ ஆம் அடிகளுக்குப் பின்வருமாறு பொருள் கொள்ளல்வேண்டும்.

அது—

மொக்கணி — மொக்கணியின்கண், அருளிய — அருள்புரி யும் பொருட்டு; முழுத்தழல்மேனி—முழு நெருப்பை யொத்த திருவுருவமானது; சொக்கு அது ஆ—பேரழகையுடைய சிவ லிங்கமாக; காட்டிய—காட்டியருளிய; தொன்மையும்—பழமை யும்—என்பதாம்

அக்கினி வண்ணமாய தமது வடிவம், சிவலிங்கமாகி, மொக் கணியின் கண்ணே காட்டி யருளிய தொன்மையும் என்றபடி.

மொக்கணி—இப்பொருளில் வருதலை,

"கழுவிய பயறும் கொள்ளும் கடலையும் துவரையோடு
முழுவதுஞ் சிறக்கவிட்டே மோக்கணி முட்டக்கட்டி"

என்றும் (நரி குதிரையானது)

சொக்கு—பேரழகு என்னும் பொருளில் வருதலை,

"சிந்தை வாழ்ந்திறைஞ்சி யேத்திச் சிறந்த செய்தியாரும்போற்ற
அந்த நீடாலயத்துக் கணியுற வியைந்திருந்த
சுந்தர வடிவங்கண்டே சோக்கெனு நாமமிக்க
எந்தையே நினக்கல்லாதோர் தேவர்க்கு மியையாதென்றான்"

என்றும் (இந்திரன் பழிதீர்த்தது) திருவாலவாயுடையார் திரு விளையாடற்புராணம் கூறுவதால் அறியலாம்.

இத்தொடருக்கு இவ்வாறு பொருள் கொள்ளலே பொருத் தமாகத் தோற்றுகிறது. அன்றி,

'கடவுள் குதிரைச் சேவகனாக வந்தபொழுது தாம் ஏறி வந்த குதிரைக்கு மொக்கணி கட்டினார்; அதுகாலைத் தாம் கட

வுளாம் தன்மையைப் பாண்டியற்குக் காட்டினுர்'—என்று பொருள் கொள்ளின் அது பொருந்தாது.

இவ்வாறு அவர் சரிதம் கூறும் புராணம் 'ஒன்றிலும் கூறப்படாமையானும், குதிரைச் சாத்து வந்ததும், அவற்றின் இயல்புகளை யரசற் குணர்த்திக் கயிறுமாறிச் சென்றனர் என்பதேயன்றி, இதன் மத்தியில் குதிரைக்குக் கொள்ளுக் கட்டினரெனற்கோர் இயைபுமில்லையாகலானும் என்பது.

இனி—

திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தின் முகப்பில் (55 ஆம் பக்கம்) மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாத ஐயரவர்கள் காட்டியமேற்கோள்

மொக்கணியதனின் முழுத்தழன்மேனிற்
சொக்கதாகக் காட்டிய தொன்மையும்—என்று காணப்படுகிறது. இம்மேற்கோள் தவறிலது ஆயின்—நம்கொள்கையின்னும் வலியுறும்.

இக்கீர்த்தித்திருவகவலில் வந்துள்ள **முழுத்தழன்மேனி** என்னுந் தொடர் நந்தம் ஆளுடைய அரசுகளின் திருவிருத்தத்தில் அமைந்திருத்தலும் இங்கு அறிதற் பாலது.

அது,

**முழுத்தழன்மேனித்** தவளப்பொடியன் கனகக்குன்றத்
தெழிற்பெருஞ்சோதியை யெங்கள்பிரானை யிகழ்திர்கண்டீர்
தொழற்படுந்தேவர் தொழப்படுவானைத் தொழுதபின்னைத்
தொழப்படுந்தேவர் தம்மாற்றொழுவிக்குந்தன் தொண்டகையே.

என்பதாம்.

(தொடரும்)

# திருஞானசம்பந்தர்

[மா. வே. நெல்லையப்பபிள்ளை]

திருஞானசம்பந்தர் என்னும் சொற்றொடர் திரு ஞானம் சம்பந்தர் என்னும் மூன்று சொற்களாலாகியது. திரு என்பது செல்வம்; அருட்செல்வத்தையும், பொருட்செல்வத்தையுங் குறிக்கும் மங்கலச் சொல் அது. திருவென்ப கமலை செல்வம் சிறப்பொடு முப்பேர் செப்பும் என்பது சூடாமணி நிகண்டு. மங்கலம் தரும் பொருள்களுக்கு முன் திரு என்னும் சொல்லைவைத்துக் கூறுவது பண்டைத் தமிழர் வழக்கு. கோயிலைத் திருக்கோயில் என்றும், வெண்ணீற்றைத் திருவெண்ணீறு என்றும், இறைவன் அடியைத் திருவடி என்றும், துளசியைத் திருத்துளசி என்றும் கூறுவது பண்டைத் தமிழர் வழக்கு. மங்கல வேடம்பூண்டு தம்மைச் சார்ந்தவர்களுக்கு மங்கலத்தைச் செய்யும் அடியார்களினுடைய பெயர் மூன்னும் திரு என்னும் சொல் வழங்கப்படுகின்றது. இம் முறைபற்றி ஞானசம்பந்தர் என்னும் பெயர் முன்னும் திரு என்னும் மங்கலச்சொல் வைக்கப்பெற்றது.

ஞானம் என்பது அறிவு. அபரஞானம், பரஞானம் என ஞானம் இருவகைப்படும். அபரஞானம் என்பது ஆராய்ச்சியாலுண்டாகு மறிவு. இந்த ஆராய்ச்சி தருக்கநூலிற் சொல்லிய 'அளவைகள் வாயிலாகக் கேட்டல் சிந்தித்தல்களா லுண்டாவது. கற்றலும் கேட்டலிலடங்கும். கற்றல் கேட்டலுடையார் என்பது தேவாரம். வேதாகம முதலிய நூல்களைக்கற்று அவைகளின்கண் அடங்கியுள்ள உண்மைப் பொருள்களைத் தெரிந்தர்வாயிற் கேட்டு அப்படிக்கேட்ட பொருள்களை மனதிலே சிந்தித்து அறிதலே அபரஞானம். அஃது ஏகதேச அறிவு அல்லது சுட்டறிவு என்றும் கூறப்படும். அதனால் இறைவனுடைய தடத்த நிலையை அறியலாம்.

இனிப் பரஞானம் என்பது அநுபூதி அறிவு. அது நிஷ்காமியத் தவத்தின் பயனாகக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் நிட்டைகூடல் என்னும் நான்கு திறத்தானும் உணரப்படுவது.

மேலே கூறியவாறு சிந்தித்த பொருள்களை ஐயம் திரிபு அற இறைவன் அருளைத் துணையாகக்கொண்டு உணர்ந்து நிச்சய மாய்த் துணிதல் தெளிதலாகும். அப்படித் தெளிந்த பொருளு டன் பிரிப்பின்றி உறுதியாய் நிற்றல் நிட்டையாகும். இந்நிட்டை யில் மனம் ஆன்மாவுடன் ஒன்றிச் சேர்ந்திருத்தலுடன் ஆன்மா வும் இறைவனுடன் பிரிப்பின்றிச் சேர்ந்திருக்கும். இந்தப் பா ஞானம் பாசத்தினின்று நீங்கியதும் தற்போதத்தினின்றும் நீங்கி யதுமான உண்மை அறிவு. இந்த அறிவு ஆன்மா இறைவனுடைய அருளோடுகூடி அறியுமறிவு. இது சிவஞானம் எனவும், பதி ஞானம் எனவும், குருவடி ஞானம் எனவும், மெய்யுணர்வு எனவுங் கூறப்படும். இந்த அறிவினால் இறைவனுடைய சொரூபநிலையை அறியலாம். இந்த அறிவே முத்தியைப் பயப்பிக்கும் அறிவாகும். ஞானம் என்னும் சொல் இந்த அறிவையே குறிக்கின்றது.

> "சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
> பவமதனை யறமாற்றும் பாங்கினி லோங்கியஞானம்
> உவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானம்
> தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்."

என்னும் பெரியபுராணத் திருப்பாட்டில் திருஞானசம்பந்தர் உமாதேவியாரால் ஞானப்பால் கொடுக்கப்பெற்ற வளவில் மேலே சொல்லிய நான்கு ஞானத்தையும் ஒருங்கே அடைந்தாரென்று கூறப்பட்டிருக்கின்றது.

சம்பந்தம் என்பது தொடர்பு அல்லது பற்று. சம்பந் தர் என்பது சம்பந்தத்தை யுடையவர் அல்லது சம்பந்தத்தை அடைந்தார் எனப் பொருள்படும். சம்பந்தமானது இரண்டு பொருள்களுளவானால் உண்டாகும். இரண்டு பொருள்கள் ஒன் றையொன்று பற்றுதலினாலுண்டாகும் அத்துவிதக் கலப்பும் சம் பந்தமாகும். இங்கே சம்பந்தமுண்டானது இறைவனுக்கும் திரு ஞானசம்பந்தருக்கும். இவ்வாறு சம்பந்தமுண்டானது திருஞான சம்பந்தர் அடைந்த "உணர்வரிய மெய்ஞ்ஞானத்தால்" ஆகவே ஞானசம்பந்தர் என்பது மெய்ஞ்ஞானத்தினாலே (இறைவனிட த்து) சம்பந்தம் அடைந்தவர் எனப் பொருள்படும்.

திருஞானசம்பந்தர் சாமுசித்தர். அவருக்கு இவ்வுலக வாழ்வின் பயனுக யாதொரு அநுபவ உணர்வும் அடையவேண்டிய அவசியமில்லை. ஆகலின், திருத்தோணியப்பர் சிகரம் பார்த்து அம்மையே அப்பா என்றழுத அவர்முன் மூன்றுவது வயதிலே சிவபெருமான் உமாதேவியாரோடும் எழுந்தருளி உமாதேவியாரைக்கொண்டு ஞானப்பா லூண்பித்து அவரை ஆண்டருளினர். அவ்வாறு அவர்சிவபெருமானுல் ஆட்கொள்ளப்பெற்றதனுல் ஆளுடையபிள்ளையாராய் சிவஞான சம்பந்தமுடையவராயினர். இக்கருத்தைச் சேக்கிழார் சுவாமிகள் பெரியபுராணத்தில்

"யாவருக்குந் தந்தைதாயெனு மிவரிப்படி யளித்தார்
ஆதலினு லாளுடைய பிள்ளையாராயகில
தேவருக்கு முனிவருக்குந் தெரிவரிய பொருளாகுந்
தாவிறனிச் சிவஞான சம்பந்தராயினர்"

என்னும் பாட்டினுல் உரைத்தருளினர்.

திருஞானசம்பந்தர் இவ்வாறு சிவபெருமானுல் ஆட்கொள்ளப்பெற்று சிவஞானசம்பந்தத்தை அடைந்தது எதன் பொருட்டு? அவர் பிதாவாகிய சிவபாத இருதயர் அவரைப் பெறக் கருதியபடி சமணசமய இருளினின்று நீங்கி சைவசமய ஒளி அடைந்து உய்யும் பொருட்டாகும். அதுபற்றி அவர் சிவபெருமானுல் ஆட்கொள்ளப்பெற்ற நாள்முதல் அருட்சோதியில் கலக்கும்வரை சைவசமய ஒளிபரப்புந் திருத்தொண்டையே இடைவிடாது செய்துவந்தார். அவர் பாண்டிநாட்டிற்குச்சென்று சைவசமய ஒளி பரவுதற்குத் தடையாயிருந்த சமணசமய வலியை அழித்தார். அவர் பல சிவத்தலங்களுக்குஞ்சென்று அங்கங்கே திருமேனி கொண்டருளிய சிவபெருமான் ஆலயங்களிற்சென்று வணங்கி, தேவாரப்பதிகங்கள்பாடி அங்கே அருள் பெருகும்படி செய்தார். அப்படி அவர் ஆலயங்களில் அருள் பெருகும்படி செய்தது அங்கே அப்பொழுதுள்ள மக்களன்றிப் பின் பிறக்கும் மக்களும் சிவபெருமான் அருளினையடைந்து உய்யும்பொருட்டு. அவர் அருளிச்செய்த தமிழ்மறையாகிய தேவா

ரப்பதிகங்கள் இன்னும் ஆலயங்களினும் பிற இடங்களினும் ஓது வாமூர்த்திகளால் இசையுடன் பாடப்பெற்று அன்பர்கள் திரு வருளைப் பெறுவதற்குச் சாதனமாயுதவுகின்றன. இன்னும் அவர் தாமிருந்தகாலத்தில் உண்மைச் சிவனடியார்கூட்டம் நிலவும்படி செய்ததுமல்லாமல் பிற்காலத்தில் அவ்வடியார்கூட்டப்பரம்பரை நிலவும்படி செய்தார். இந்த அடியார் பரம்பரையானது இப் பொழுது சிலநூற்றுண்டுகளாகப் பல காரணங்களால் சிறந்து விளங்காமலிருக்கின்றது. அதனை விளங்கும்படி செய்வது இப் பொழுது சைவர்கள் செய்யவேண்டிய கடமையாகும்.

இத்தகைய திருத்தொண்டை திருஞானசம்பந்தர் செய்து வந்த நிலையில் சம்பந்தர் என்னும் சொல் சம்பந்தப்படுத்து கிறவர் அல்லது சம்பந்தத்தைச் செய்விக்கிறவர் என்று பொருள் படும். அதாவது தகுந்த பக்குவமுடைய அடியார்களுக்கு அவர் தாமடைந்துள்ள ஞானத்தை உபதேசித்து அவர்களுடைய வல் வினை நோய்தீர்த்து ஆட்கொண்டருளி அவர்களை சிவபெருமான் திருவடி நிழலடைந்து பேரின்ப வாழ்வுறும்படி செய்தார்.

“ஆளாகா ராளானாரை யடைந்துய்யார்” என்று திருநா வுக்கரசுசுவாமிகள் தாம் அருளிச்செய்த தேவாரத்தில் கூறியபடி சிவபெருமானால் ஆட்கொள்ளப்பெறாத அடியார்கள் ஆட்கொள் ளப்பெற்ற அடியாரை யடைந்து உய்வதே சைவநெறி முறை யாகும். இம்முறைப்படி திருஞானசம்பந்தர் சில அடியார்களை சிவபெருமான் திருவடிநிழல் அடையும் சம்பந்தம் செய்தருளி னார். அவர் தமது திருமணம் சேவிக்கவந்த எண்ணில்லாத அடி யார்களை சிவபெருமான் திருவடிநிழலிற் சம்பந்தப்படுத்தினார். இதனினும் மேம்பட்ட பேருபகாரத்தொண்டு எங்குமில்லை. ஆத லின் திருஞானசம்பந்தர் என்னும்பெயர் அவருக்கே கூறத்தகும் சிறப்புப்பெயராயினது.

இப்பொழுதும் அடியார்கள் அவருடைய திருப்பெயரை உண்மை அன்புடன் ஓதி அவரை வழிபடில் அவ்வழிபாடு அவர் களை சிவபெருமான் திருவடிநிழலிற் சம்பந்தம் செய்விக்கும்.

இத்தகைய பெருந்தொண்டு உலகு உய்யும்படிசெய்த திருஞானசம்பந்தருடைய குருபூசைநாளில் அன்பர்கள் எல்லாரும் இம்மாதத்தில் அவருடைய திருப்புராணம் வாசித்து அவரை உண்மை அன்புடன் வழிபடுவார்களாக .சிற்றறிவும் சிறுதொழிலுமுடைய நமக்குத் திருஞானசம்பந்தர் செய்ததுபோல பெருந்தொண்டுசெய்ய ஆற்றலில்லையாஞலும் நம்மாலியன்றவாறு சைவ சமயவிளக்கம் குறைந்ததாயுள்ள இக்காலத்தில் சைவசமயம் விளக்கமுறும்படியான தொண்டு திருவருளைத் துணைகொண்டு செய்வோமாக.

---

## சீவகசிந்தாமணி எனும் காப்பியம் பிறந்த வரலாறு

[S. A. திருமலைக்கொழுந்துப்பிள்ளை]

கடைச்சங்கம் மருவியகாலத்தில் அமணமுனிவருட் சிறந்தவரும், கல்வி கேள்விகளாற் பேரறிவுபடைத்தவருமான திருத்தக்கதேவரென்பவர் அப்போழ்திருந்த சங்கப்புலவர் குழாத்தை அடிக்கடி கிட்டி அன்னாரோடு அளவளாதலுண்டு.

ஓர்சமயம் சங்கப்புலவர் அவரைநோக்கி 'புலவசிகாமணி, நும்மனோருட் பலரும் அறத்தைக்கூறும் அநேக நூல்களைப் பிறப்பித்தாரேயன்றி காமச்சுவையும் மற்றை இரசங்களும் கலந்த காப்பிய மொன்றேனுஞ் செய்தாரல்லர். ஆகவே நும்மனோர்க்குக் காவியமியற்றும் திறன் இலதுபோலு' மென விசைத்தனர். இம்மாற்றத்தைச்செவிக்கொண்டதிருத்தக்கதேவர் அவர்களைநோக்கி 'அற்றன்று: காவிய மியற்றுவதிற் பிரியமின்மையே காரணமன்றி, திறனின்மை காரணமன்றும்' என்றனர். சங்கப்புலவர்கள் உடனேயவரைநோக்கி 'அங்ஙனமாயின், நவரசங்களும் ததும்பும் வண்ணம் ஓர் காவியத்தை யியற்றிக்காட்ட வல்லமையுளதேற் செய்து காட்டுதிர்' என வேண்டிக் கொண்டனர். தேவ ரதற்கியைந்து அவர்களை நோக்கி 'இற்றைக்கு எட்டாம்நாளிற் றங்களிடம் எண் விதச்சுவைகளும் நிறைந்த ஓர் காப்பியத்தைத் தாராநிற்பேன்' எனச் சூளுரைத்து அவர்களிடஞ் செலவுபெற்றுத் தமது ஆசிரி

யரைக் கிட்டிச் சிறிது கவலையோடு அவரிடமமர்ந்திருந்தனர். அவரது மனவாட்டத்தைக் குறிப்பாலுணர்ந்த ஆசிரியர் அவரை நோக்கிக் 'குழந்தாய், ஏனோ சிறிது மனத்தளர்ச்சி கொண்டுளாய்' என வுசாவினர். உடனே தேவர் தம்மாசிரியரை நோக்கி 'இன்று தமியேன் சங்கப்புலவரோடு அளவளா நிற்புழி அன்னோர் நம்மனோர்க்கு நவரசங்களும் மலிந்த காவியம் இயற்றுந் திறன் கிடையாதுபோலுமென ஆசங்கிப்ப, தமியேன் அன்னோரை நோக்கி காவியமியற்றுவதிற் பிரியமின்மையே யன்றி காவியமியற்றும் திறக்குறைவன்' றென்றேன். அவர்கள் என்னை நோக்கி 'அங்ஙனமாயின் சிருங்கார ரசமும் மற்றைய ரசங்களும் கலந்த சிறந்த காப்பியமொன்றை யியற்றிக் காட்டுதிர்' என வேண்டிக்கொண்டனர். 'நானும் அவர்கள் வேண்டுகோளிற்கியைந்து எட்டு நாட்களில் ஓர் காவியமியற்றிக் காட்டுவதாக உறுதி கூறிவந்தேன். ஆயினும் அடிகளது அனுமதியின்றி இங்ஙனம் தர்ம சங்கடத்திற் றலையிட்டுக்கொண்டதை நோக்கி அடியேனது மனம் சிறிது அலமராநின்ற' தென விசைத்தார். இதனைச் செவியுறவே ஆசிரியர் தேவரைநோக்கி 'மனத்தூய்மையிற் சிறந்த குழந்தாய், நீ நிதானியாது வாக்குக்கொடுத்துளாய், எத்தகையாலும் வாக்கைக் காப்பது கடனாதலின் நீ காவியமியற்றவே வேண்டும். காமச்சுவையையும் வெகுளிச்சுவையையும் விரிக்குங்கால் பாவனை காரணமாக மனம் மாசுறக் கூடுமேயென வச்சமுறுகின்றேன். சேற்றிற் பிள்ளைப்பூச்சியோடினும் மாசுறாததுபோல நீயும் மனத்தை மாசுறாமற் காப்பாற்றவும்கூடும்;ஆயினும் இக்காரியம் மிகக்கடி' தென விசையா நிற்புழி, அக்கணம் ஓர்நரி யோடா நிற்ப ஆசிரியர் தமது மாணவரை நோக்கி 'அன்ப, நரியைப்பற்றி ஓர் சிறு பிரபந்தம் பாடுபார்ப்போ' மென்றனர். உடனே அதற்கிசைந்து '**நரிவிருத்தம்**' எனும் நூலை நொடிப்பொழுதிற் பாடிக் காட்டினர். 'எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும், முத்தர் மனமிருக்கும் மோனத்தே' என்றபடி நரிவிருத்தத்தும் துறவின்பெருமை விளக்கியதை நோக்கி ஆசிரியர் பெரிதும் மனமுவந்து அவரை நோக்கி 'நீ இனிதாக காவியத்தையியற்றி சங்கப்புலவர்க்குக் காட்டுதி' யென வனுமதி தந்தார்.

புலவர் பெருமான் மிகவும் மனம்மகிழ்ந்து நவரசங்களும் ததும்பும் வண்ணம் புருஷ திலகனுகிய ஜீவகன் சரிதத்தைச் சில தினங்களுட் பாடிமுடித்துத் தாம் வாக்களித்தவண்ணம் எட்டாம்நாட் சங்கப்புலவரை யடைந்து தமது காவியத்தை யவர்கட்குக் காட்டினர். அதன்கண் வயது முதிர்ந்தவருக்கும் காமத்தை யெடுப்பவல்ல சிங்காரரசம் ததும்புவதைக்கண்ட புலவர்கள் தேவரை நோக்கி 'அற்புதத் துறவுவாய்ந்த பெரியோய், காமத்திற் சிறிதும் பற்றில்லாத தாம் இங்ஙனம் காமச்சுவை மலிந்த இக்காவியத்தை எங்ஙனம் இயற்றவல்லராயினீர்; காமத்துறையிற் பெரிதும் படிந்த காமுகரும் இத்தகையதான காவியத்தை யியற்ற முடியாதே' யென வாசங்கித்தனர்.

திருத்தக்கதேவர் அவர்களை நோக்கி 'முன்னம் தமியேன் காவிய மியற்றுதற்கண் பிரியமின்மையே அமணர்களால் காவிய மெழுதப்படாமைக்குக் காரணமேயன்றிப் பேதமைகாரணமன்று எனச் செப்பினேன். நீவிரோ அப்படியாயின் காமச்சுவை மலிந்தவோர் காவியத்தை முடித்துக் காட்டுதி' ரென வெனக்கு ஆணை தந்தீர். இப்போழ்து முடித்துவந்தேன். நீவிர் எனது துறவின்கண் ஐயமுறுகின்றீர். நிற்க. இக்கணமே ஓர் இருப்புக்குண்டை அங்கியில் வேகவைத்து அஃது வெண்டிங்கள்போற் பிரகாசிக்க என்னிடம் கொண்டுவரும்படி செய்தீர்' என வேண்டினர். இங்ஙனமே நெருப்பிற்காய்ந்த இருப்புக்குண்டு வரவே அதனைக் கையிற் ருங்கி அதனைக்கொண்டு தமது அங்கங்கள் ஒவ்வொன்றையும் தைவந்தார். துறவாகிய பெருந்தீயைக் கவசமாகக்கொண்ட அவர் மேனியை அனல்வீசும் இருப்புக்குண் டென்செயவல்லது! தேகம் ஓர் சிறிதும் நெருப்பாற் றகிக்கப்படாமையைக் கண்ட புலவர்கூட்டம் நடுநடுங்கிப் 'பெரியீர், போபாதத்தைக் கல்விச் செருக்கால் உம்பாலிழைத்தோம், பொறுத்தருள்க' வெனவேண்டிக்கொண்டனர். மகா துறவியாகிய திருத்தக்கதேவரோ அவர்களை மிகவினிதுநோக்கிப் 'புலவீர்காள், நீங்கள் எனக்குப் பெரிதும் நன்மையை விளைத்தவராவீரேயன்றித் தீமையிழைத்தவரா கீர், எங்ஙனமெனின் உம்மாலன்றோ அடியேனது துறவு உள்ளபடி வெளியாக்கப்பட்ட' தென வவரை வியக்கச்செய்தார்.

பின்னர் அவர்களிடஞ் செலவுபெற்று ஆசிரியரையடைந்து நடந்த அற்புதங்களை எடுத்துரைத்து அவரைப் பேரானந்தவாரியி லழுந்தச்செய்தார். சுபம். சுபம்.

---

# தம்பிரான் தோழர்

[இ.மு. சுப்பிரமணிய பிள்ளை]

(மூன்றாஞ் சிலம்பு உ௯அ-ம் பக்கத் தொடர்ச்சி)

அப்பெரியார் எம்பெருமானை நோக்கி "அத்தா, பல பொய்மைகளை உரைத்தேன். உம்மை நான் என்றும் மறவாமல் நினைக்கின்றேன். அடிகேள் உமக்கினி நான் அடிமை இல்லை எனலாமோ" என்று பலவாறு துதித்து நின்றார். அதுகேட்ட திருவெண்ணெய்நல்லூர் அருட்டுறைமேவிய நம்பனார் தமிழ்வல்ல தம் அடியவரை நோக்கி "இவ்வுலகத்திலே நம் புகழைப் பாடுக" என்று மிகுந்த அன்போடும் கட்டளையிட்டருளினர்.

புத்தூரிலே சடங்கவி மறையோர் திருமகளார் நம்பியாரூரரால் மணக்கப்பெறுமையால் மணமழிந்த அன்று தொட்டு தம்பிரான் தோழரையே இடைவிடாது வாழ்த்தி வழிபட்டிருந்தார். அதனால் கற்புக்கரசியாம் அவ்வம்மையாருக்கு முத்திப் பெரும்பேறு எளிதாயிற்று.

நம்பியாரூரர், திருவெண்ணெய்நல்லூர் அருட்டுறைமேவிய ஐயர், தம்மை யாட்கொண்டருளியபின் திருநாவலூருக்குப் போய்த் திருக்கோவில் சென்று தேவர் பிரானைப் பதிகம்பாடிப் பணிந்தார். பின் அங்கிருந்தும் பெண்ணையாற்றின் வடபாலுள்ள திருத்துறையூர் சென்றடைந்து "ஏழையேன் தவமூன வழியில் சென்று தீவினை பெருக்கிப் பிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து அழுந்தாமல் தடுத்தாண்ட பெருமானே! அடியேனுக்குத் தவநெறி தந்தருளவேண்டும்" என்று வேண்டிப் பதிகம் பாடி நின்றார். சிவபெருமானும் "அன்பனே நீ விரும்பியபடி உனக்குத் தவநெறி தந்தோம்" என்றருளினர். அதுகேட்ட நம்பியாரூரர் கீழ்வீழ்ந்தெழுந்து பலமலர்களால் பூசித்து அந்

கிருந்தும் புறப்பட்டு பலதலங்களையும் வணங்கிக்கொண்டு பொன்னம்பலவன் திருவருட் கூத்தைக் கண்ணாரக்கண்டு கைதொழுதேத்தப் பேரவாக்கொண்டு திருத்தில்லையை நோக்கி நடந்தார். வழியிலே பெண்ணையாற்றைக்கடந்து கரையேறி மாலை நேரத்தில் திருவதிகை அருகே வந்தார். அத்திருவதிகை, உலகமெல்லாம் உய்யும்படிக்குக் கற்றூணையே நற்றுணையாகக்கொண்டு கடலைக் கடந்து கரையேறிய திருநாவுக்கரசர் உழவாரப்படைகொண்டு பெருவிருப்போடும் கைத்தொண்டு செய்திருந்த பேரூராதலின் அதனை மிதித்தற்கஞ்சி அதனருகிலிருந்த சித்தவடமடத்தில் புகுந்தார். சோலைகள் சூழ்ந்த அத்திருமடத்திலே தம்மோடு வந்த அடியார்களெல்லாரும் துயில்கொள்ளத் தாமும் திருவதிகைப்பெருமானை வாழ்த்திக் கண்வளர்ந்தருளினர். அப்போது அதுகண்ட திருவதிகை வீரட்டானத்திறைவனர் ஓர் முதிய அந்தணராகித் தம்மை ஒருவரும் அறியாதபடி அப்பொழு மடத்தினுள்ளே புகுந்து நம்பியாரூரர் திருமுடிமேலே தம் அடியை வைத்துத் தூங்குகின்றவரைப்போலப் படுத்திருந்தார். அதனையுணர்ந்த நம்பியாரூரர் எழுந்து "ஐயரே உம்முடைய அடியை என்முடிமீதுவைத்தீரே" என்று வினவினர். அதுகேட்ட ஐயர் "அப்பா இவ்வாறு திசைதெரியாமல் என்காலை உன்தலைமேல் வைத்ததற்குக் காரணம் என் கிழப்பருவம்தான்" என்று அருளினர். பின் நம்பியாரூரர் "அப்படியா" என்றிசைந்து தம்முடைய தலையை வேறொருபுரத்தில் வைத்துத் தூங்கினர். அவ்விடத்தும் அவருடைய திருமுடிமேல் தம்முடைய காலை நீட்ட திருநாவலூரர் "இங்கே என்னை இப்படிப் பலகாலும் மிதித்த நீர் யாரையா ?" என்று வினவினர். உடனே எம்பெருமான் "அறிந்திலையோ" எனக்கூறி உருக்கரந்தார். அதுகண்ட தமிழ்நாதன் "அந்தோ அறிவில்லாமல் என்னகாரியஞ் செய்தேன்" என்று தெளிந்து

"தம்மானை யறியாத சாதியா ருளரே
சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்
கைம்மாவி னுரியானைக் கரிகாட்டி லாட
லுடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்

தெம்மான்ற னடிக்கொண்டென் முடிமேல்வைத் திடுமென்னு
  மாசையால் வாழ்கின்ற வறிவிலா நாயேன்
எம்மானை எறிகெடில வடவீ ரட்டானத்
  துறைவானை இறைபோதும் இகழ்வன் போலியானே''

என்று தொடங்கி, ''இராவணனுடைய பத்துத் தலைகளையும் கிழ முத்திய பெருமானை, எங்கள் எருதேறும் பெம்மானை, இசை ஞானி சிறுவன் நாவலூர்க்கோன் வன்தொண்டன் ஆரூரன் மதியாதுரைத்த அன்பனை, யாவர்க்கும் அறிவரிய அத்தனை, திரு வதிகைமாநகருள் வாழ்பவனை இறைபோதும் இகழ்வன்போலி யானே'' என்று தாம்செய்த குற்றத்தை நினைந்து நினைந்துருகி, எம்பெருமான் பெருங்கருணையை வியந்து திருப்பதிகம்பாடினார். பின், அத்திருவதிகைக்கு அருகிற்செல்லும் தென்திசைக் கங்கை என்னும் திருக்கெடில நதியில் நீராடி எம்பெருமான் கழல்பணி ந்து, அங்கிருந்தும் புறப்பட்டு அப்பேராற்றின் தென்கரைக்குப் போய் 'திருமாணிகுழி' என்ற ஊரை அடைந்தார். அப்பேரூர், போர்வலி மிகுந்த மாவலிபுரிந்த மங்கலவேள்வியில் வாமனனாய் மண்ணிரந்த செங்கணவன் வழிபட்டேத்தி உய்ந்தயிடம். அவ் விடத்திலே பரம்பொருளைப் பணிந்து அங்கிருந்தும் சென்று ''திருத்தினை'' நகரை அடைந்தார். அங்கு, சிவபெருமான் திரு முன்பெய்தி சிரசின்மேல் கரங்குவித் திறைஞ்சி ''மனனே! வேந்த ராய் உலகாண் டறம்பல புரிந்தோரும் தேய்ந்திறந்து ஒருபிடி சாம்பராதல் கண்டாய். பரிந்த சுற்றமும் வன்துணையும் பலருங் கண்டு அழுதெழ உயிர் உன் உடலைவிட்டுப் பிரிந்துபோம்; இது நிச்சயம். ஒன்றலா உயிர் வாழ்க்கையை நினைந்திட்டு உடல் தளர்ந்து அருமாநிதியம் தேடி என்றும் வாழலாம் எமக்கு எனப் பேசுமிதுவும் பொய்யெனவே நினை, உளமே. பிறப்பு இறப் பென்னும் பெருங்கட லிதனை நீந்தி உய்ந்திடவேண்டினால் சொல் வன்கேள்; நீ அஞ்சல் நெஞ்சமே! காலகாலனை, கடவுளை, கடற் சூர் தடிந்திட்ட சேந்தர்தாதையை விரும்பி செறிந்தி செம்பொன் மலர்த் திருத்தினை நகருள் சிவக்கொழுந்தினைச் சென்றடை மனனே'' என்று பிறவியைப் பழித்து நீங்கலாமென்று தம்மனத்

தினைத் தெருட்டி சிவபிரான் திருவடியிணைகள் வண்தமிழ் பாடி வணங்கினர். பின், அங்கிருந்தும் புறப்பட்டுத் திருத்தில்லை மருங் கணைந்தார்.

காண்பவர்க்கு வீடருளும் பெருமையுடையது அவ்வூர். அவ்வூருக்கு வெளியிலே உள்ள பூஞ்சோலைகளையும் பன்மலர்ப் புனித நந்தனவனங்களையும் பணிந்துசென்று நம்பியாரூரர் அகழி யை எதிரே கண்டுமகிழ்ந்து அவ்வூரின் வடதிசை வாயிலின்முன் சென்றனர். அங்கே அன்போடு தம்மை எதிர்கொண்ட அடியார் களோடும் கூடி அழகாக விளங்குகின்ற மாளிகைகள் ஓங்குந் திரு வீதியிலே புகுந்தார். பின்பு, அவர் திருக்கோவிலைச் சூழ்ந்துள்ள தெருவிலே நுழைந்து கோவிலின் வாயிலின்கீழ் வீழ்ந்து பணிந் தெழுந்து கோவிலுட்சென்று பேரம்பலத்தை வலங்கொண்டு இறைஞ்சிய பின்னர் திருவணுக்கன் திருவாயிலையடைந்து திருச் சிற்றம்பலக் கூத்தனை மனமாரக் கண்ணாரக்கண்டு திருக்களிற் றுப்படி மருங்குசென்று தாழ்ந்தெழுந்தார்.

பின்னர், எம்பெருமானுடைய தனிப்பெருங் கூத்தைக் காணக்காண வந்த பேரின்பவெள்ளத்துக் குளித்து மாறிலா மகிழ்ச்சி கொண்டவராய் "பிறைசூடும் பெம்மானே! உம்மு டைய திருநடனத்தைக் கும்பிடும்படிக் காண பெரும்பேறு பெற்று இம்மண்ணுலகத்தில் அடியேன் அடைந்த பிறவியே பிறவி; இதுவே எனக்கு மிக வாலிதாம், இன்பமுமாம்," என்று சொல்லி கைகளும் தலைமீதேறக் கண்ணிலானந்தவெள்ளம் மெய் யெலாம் சொரிய வேதநாயகரைப் பதிகம்பாடிப் பணிந்தார். அப் பொழுது பொன்னம்பலவர் அவரை நோக்கி, "நம்பால் திருவா ரூரில் வருக" என வானில் ஒலியாய்க்கூறி யருளலும் அடியவர் பெருமான் பணிந்து அவ்வொலிப் பொருளுணர்ந்து அம்பல வாணரை வலங்கொண்டு வணங்கி விடைகொண்டு வெளிப் போந்து அவ்வூரின் தென்திசை வாயிலைக்கடந்து விரைந்து போய்க் கொள்ளிமாடகிய பேராற்றையும் கடந்தார். அவ்வாறு விரைந்து செல்லுகின்ற நம்பியாரூரர் உலகமெல்லாம் உய்யும் படிக்காக எம்பெருமாட்டியால் ஞானப்பால் ஊட்டப்பெற்ற திரு

ஞானசம்பந்தப் பெருமான் பிறந்தருளும் பெரும்பேறு பெற்ற தாகிய சீர்காழியை அணுகினர். பிள்ளையார் திருவவதாரம் செய் தருளிய பெருமைபெற்ற இவ்வூரினுள் நான் மிதியேன் என்று சொல்லி அவ்வூரின் வெளியிலே வலமாகவந்தார். வலம்வரும் தம் அடியாரின் முன்னே எம்பெருமான் காட்சி கொடுத்தருளினர். அதுகண்ட வன்றொண்டர் மிகுந்த பேரன்போடும் கடவுளை வணங்கி நின்று "சாதலும் பிறத்தலும் தவிர்த்து எனையாண்டு எனக்குத் தன்னருள்தந்த என் தலைவனை, வேறொரு துணையும் காணாது, சுற்றிய சுற்றமும் துணையென்று கருதாது வருந்தலுற் றேன். மெய்த்துணையென்று கண்டு நான்தொழும் எய்ப்பினில் வைப்பை, திருத்தினை நகருறை சேந்தனப்பன் என்செய்வினை யறுத்திடும் செம்பொன்னை கடல்கொள மிதந்த கழுமலவள நக ரிலே கண்டுகொண்டேனே ஏழையேன் எம்பெருமானை விடாது பற்றினேன். அதனால் அவனை மறவா மனம்பெற்றேன். மற்றும் பிழைத்தொருகா லினிப்போய்ப் பிறவாமையாகிய பெருமையும் பெற்றேன்.யான்பெற்றதார் பெறுகிற்பார்? விதியாலேபலநாளும் பசுபதிவாழும் பதிவினவி மறவாமனத்தோடும் உனைக்காணமுயல் பவர் பின்சென்று முயல்வலையானை படுமென மொழிந்தவர் வழி முழுதெண்ணி என்னிடைப் பொருளை கயிலையினில் வீற்றிருந்த படி இக்கழுமலவள நகர்க்கண்டு கொண்டேனே; அவன் திருவடி யிணை யிரண்டும் அப்பெருமானை நினைந்திட்டு அழும் மலர்க்கண் ணிணையுடைய அடியவர்க்கே யல்லாமல் அறிவரிது" என்று பதி கம்பாடிப் பணிந்தார். சிவபெருமான் மறைந்தருள, நம்பியாரூரர் அங்கிருந்தும் 'திருக்கோலக்காவை' அடைந்தார்.

அங்கே கோவிலுட்சென்று சத்தபுரீசரையும் ஓசைகொடுத்த நாயகி அம்மையாரையும் வணங்கி, "எனக்கெளிவந்த பாவ நாசனை, நாட்டுத்தேவர்கள் நாடரும் பொருளை, ஆத்தமென் றென்னை ஆளுகந்தானை, குமரனைப்பயந்த மடமானை இடப்பாகம் வைத்தானை, அன்றுவந்து என்னை அகலிடத்தவர்முன் ஆளதாக வென்று ஆவணம்காட்டி நின்று வெண்ணெய் நல்லூர் மிசை ஒளித்த முத்தினை, நிரம்பு பல்கலையின் பொருளாலே போற்றித்

தன்கழல் தொழும் அந்தணாளனுயிரைப் போக்குவான் வந்த கூற்றைத் தீங்குசெய் குரைகழலானைக் கோலக்காவினில் கண்டு கொண்டேனே. அரக்கனாற்றலழித்து அவன் பாட்டுக்கு அன்றிரங்கிய வெற்றிப் பொருளானை, நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தனுக்கு உலகவர்முன் பொற்றாள மீந்து அவன் பாடலுக்கிரங்கும் தன்மையாளனை, குரக்கினம் குதிகொண்டு உகளும் வயல்சூழ் திருக்கோலக்காவினில் கண்டுகொண்டேனே" என்று பதிகம்பாடிப் புகழ்ந்து மகிழ்ந்தனர். பின்பு அங்கிருந்தும் புறப்பட்டுத் திருப்புன்கூர் சென்று இறைவனைத் தமிழ்மாலைபாடி வணங்கி, மற்றும் எம்பெருமான் மகிழ்ந்துறையும் பல இடங்களையும் வணங்கிக்கொண்டு, காவிரியாற்றை யடைந்து அதில் நீராடி, தம்பிரான் மயிலாடுதுறையிற் சென்று திருமாயூரநாதரைப் பணிந்து, பின் திரு அம்பர் மாகாளம் சென்று அங்கிருந்தும் திருப்புகலூரை யடைந்து தொழுது நம்பியாரூரர் திருவாரூர் சென்றணைந்தார்.

(தொடரும்)

---

# பிரதோஷவிதி

[தா. முத்துக்கருப்ப பிள்ளை]

நீராருஞ் சடைமௌலி நின்மலனார் தந்தருளும்
போரானை மாமுகத்துப் புண்ணியனா ரடிதொழுது
பேரா யிரமுடைய பிஞ்ஞகனார்க் கினிதான
சீராரும் பிரதோட விதிதெரியச் செப்புதுமே.

## பிரதோஷ வரலாறு

விஷ்ணு முதலிய தேவர்கள்கூடித் திருப்பாற்கடலிலே அமிருதங் கடைந்தபோது ஆலகால விஷந்தோன்றி அத்தேவர்களை வருத்தத் தொடருங்கால், அவர்கள் அஞ்சி ஓடித் திருக்கைலையிற் சென்று இடபதேவருடைய அண்டத்தில் ஒளித்துக்கொண்டு

சிவபெருமானைத் துதித்தனர். அப்பொழுது சிவபெருமான் தமது பிம்பவடிவமான சுந்தரரை அனுப்பி அவ்விஷத்தைக் கொண்டு வரச்செய்து அதனை ஏற்று உட்கொண்டு தேவர்களைக் காத்தருளினர். இவ்வாறு ஏகாதசியிலே சாயங்காலத்திலே அர்த்தமண்டல சமயத்திலே நிகழ்ந்தது. துவாதசியிலே அமிர்தந் தோன்றத் தேவர்கள் அதனையுண்டு திரயோதசி மாலைக்காலத்திலே சிவபெருமானைப் பூசித்து வணங்கினுர்கள். அப்பொழுது சிவபெருமான் இடபதேவருடைய இரண்டு கொம்பினடுவே நின்று நிர்த்தஞ் செய்தருளித் தேவர்கள் வேண்டும் வரங்கள் ஈந்தருளினர். இவ்வாறு நிகழ்ந்தது சனிவாரமாதலின் சனிப்பிரதோஷம் மிகச் சிறந்ததாயிற்று. அச்சுந்தரர் விஷத்தினது கொடுமையை அடக்கி அதனை நாவற்கனி அளவாக்கிக் கொண்டுவந்து கொடுத்தமையரல் அவர்க்கு ஆலகால சுந்தரரென்று பெயராயிற்று. பின்னர் அவரே அறுபத்துமூவருள் சுந்தரமூர்த்தி நாயனுராக அவதரித்தனர்.

சிவபெருமான் ஏகாதசியிலே விஷமுண்டு சற்றுமயங்கினர் போலிருக்க அதனைக்கண்ட தேவர்கள் சுவாமிக்கு யாது விளைந்தனவோவென் றஞ்சி நிராகாரமாயிருந்தனர். பின்னர் சிவபெருமான் தெளிவெய்தினர்போ லிருக்கக்கண்ட தேவர்கள் மகிழ்வெய்தி துவாதசியில் அமிர்தபானம் பண்ணினர். இதனுல் ஏகாதசியுந் துவாதசியும், சிவவிரத திதிகளாய் ஏகாதசியில் உபவாசமும் துவாதசியில் பாரணையும் ஏற்பட்டன. பின்னர் சிவபெருமான் விஷ்ணுவினது வேண்டுகோளுக்கிரங்கி அவ்விரண்டு திதிகளின் விரதத்தை அவர்க்களித்து விட்டனர். அதனுல் அவைகள் விஷ்ணுவினது விரத திதிகளாயின.

## பிரதோஷகால நிர்ணயம்

'பிரதோஷம்' என்னும் வடமொழி தென்மொழியில் 'பெரிய குற்றம்,' எனப் பொருள்படும். அது நாடோறும் சூரியாஸ்தமன முதல் நட்சத்திரங்கள் தோன்றுகிறவரையுமுள்ள மாலைக்காலமே தோஷம் (குற்றம்) எனப் பெயர்பெறும். அக்காலம், பகலுமின்றி இரவுமின்றி அவ்விரண்டு தன்மையுமுள்ளதாதலின் அதற்கு 'சந்தி' யென்றும், அது, இரவுக்கு முகமாயிருத்தலின் 'இராஜ

நீமுக' மென்றும், பகற்பொழுதை முடிவுபெறச் செய்தலின் 'அந்தி' என்றும்கூறுவர். இத்தகைய தோஷகாலத்திலே இரண்டு பக்கத்தும் திரயோதசி சேரில் பிரதோஷ (பெரிய குற்ற) காலமெனப்படும். அத்திரயோதசி இரண்டுதினம் தோஷகாலங்களில் முழுது மிருப்பினும், இல்லாதிருப்பினும், சரியிருப்பினும், ஏறிக் குறைந்திருப்பினும் பின்னாள் பிரதோஷம், பின்னாள் பிரதோஷ காலத்திலே திரயோதசி சிறிதுமின்றி, முன்னாள் தோஷகால முழுது மிருப்பினும் சிலபொழுதிருப்பினும் முன்னாட்பிரதோஷம். முன்னர்க் கூறியபடி திரயோதசி தோஷகாலத்தில் முன்னாள் துவாதசியுடனும் பின்னாள் சதுர்த்தசியுடனும் கூடியிருப்பின் துவாதசியோடுங்கூடிய திரயோதசியாகலின் அது பிரதோஷமாகா.

இரண்டுதினம் தோஷகாலங்களில் திரயோதசி யிருப்ப அது சுக்லபட்சமாயின் முன்னாளும் கிருஷ்ணபக்கமாயிற் பின்னாளும் பிரதோஷமென்று தருமசிந்து, நிர்ணயசிந்து முதலிய நூல்கள் கூறினும், அக்கூற்றுகள், சிவாகமநூற் கருத்திற்கு முழுதும் விரோதமாதலின் சிறிதும் பயன்படா.

இதற்குப் பிரமாணம்:—

### பிரமோத்தரகாண்டம். 6-வது அத்தியாயம்

"முந்தை நூன் முனியனளவை மொழிவலென் றுரைத்தான்
சிந்தைசெய்குதிர் பதிமூன்றும் பக்கமாந்தி வாவி
னந்தமாகிய மாலையே பிரதோட மாகு
மிந்துசேகரன் விரும்பிய காலமு மிஃதே"

என்றும்,

### மேற்காண்டம். 7-வது அத்தியாயம்

"திங்க டோறும் குறையாத திகழு மிரண்டு பக்கத்துக்
கங்குன் முகங்கள் பன்மூன்றாந் தினத்து வந்த காலமெலாம்
பொங்குந் தூய புனலாடி பகற்போ துண்டி பொருந்தாம
லங்கண் மாலைப் பொழுதுவர வலர் கம்பலத்தின் விதானித்தே"

என்றும்,

## பூர்வகாரணாகமம். 106-வது பிரதோஷ பூஜாவிதிப்படலம்

"பக்தாநாம் ரக்ஷணார்தாய க்ருதாந்தஸ்ய சநிக்ரஹம் ।
க்ருத: காலாந்தகே நாபிதத்காலே ரஜநீமுகம் ॥
அஸ்தமாநங் ஸமாரம்ய த்ரிபாதேந த்ரிநாடிகா ।
ப்ரதோஷ மிதிவிக்யாதம் தத்காலே சிவமர்ச்சயேத்"

என்றும்,

### விரிவகராதி

"இரவின் முதற்சாமம் பிரதோஷம்" என்றும்,

### பாரதம்—ஆதிபருவம். வேத்திரகீயச்சருக்கவசனம்

"சூரியன் மேற்றிசைக்கடலில் ஆழ்ந்தான், வேதியர்கள் மாலைப்பொழுதைக் கண்டவுடனே அதிவேகமாகச்சென்றார்கள்" என்றும் கூறுமாற்றானும் உணர்க.

ஆகமத்தினும் அகராதியினும் கூறுதொழிந்த திரயோதசியை வருவித்துக் கொள்க.

சற்றேறக்குறைய 24 - நாழிகைமுதல் அஸ்தமனம் வரையுள்ள சாயான்ன (சாயங்கால)த் திருதி மூன்றேமுக்கால் அல்லது இரண்டு நாழிகை சந்தியாகாலமென்றும், மாலைக்காலமென்றும், சிலர் கருதி முயன்று வருகின்றனர்; அது தவறு. முகூர்த்தபதவியில் 21 - மகாதோஷங்கள் இன்னின்னவையென்று விளக்கும். "உல்கோர்விசலநோபாரககுளிக" என்னுந் தொடக்கத்துச் சுலோகத்தில் "சாயாந்ந ஸந்தியாதயா" என்று சாயான்னமென்னும் சாயங்காலத்தையும் சந்தியாகாலத்தையும் வேறு பிரித்துக் கூறியும், சிவாலய தரிசனவிதியில் பிரதோஷவரலாறு கூறுமிடத்து "இது, சனிவாரத்திலே, திரயோதசி திதியிலே, சாயங்காலத்திலே, அர்த்தமண்டல சமயத்திலே நிகழ்ந்தது" என்று அர்த்தமண்டல சமயத்தை சாயங்காலத்துட்படுத்திக் கூறியுமிருப்பதுகொண்டு சூரியாஸ்தமனம் வரையுள்ள சாயங்காலத்திலே சந்தியாகாலமென்னு மாலைக்காலமில்லை என்பது பெறப்

பட்டன. அர்த்தமண்டல சமயமென்பது சூரியபிம்பத்தினது பாதி கடலில் மறைந்த சமயம்.

### திரயோதசி சதுர்த்தசிகளின் பெருமை
### சிவராத்திரி நிர்ணயம் என்னும் நூலில் புரோத்கீதாகமம்

"த்ரயோதசி சிவாமூர்த்தி சிவதேகம் சதுர்த்தசி ।
த்வயோஸ மாகமம்புண்யம் சிவயோகஸ்ஸ உச்சியதே ॥"

என்றும்,

### சுப்பிரபேதாகமம்

"களரீத்ரயோதசி ஜ்ஞேயாசிவோ ஜ்ஞேபா சதுர்த்தசி ।
தயோஸ்துஸங்க மேப்ராப்தே சிவராத்ரி வ்ரதஞ்சரேத் ॥"

### அஜிதாகமம்

"த்ரயோதசி சிவாமூர்த்தி சிவதேஹ சதுர்த்தசி ।
தஸ்மிந்நைவ விதாதஸ்யம் சிவயோ கெதிதம்விதுঃ ॥"

என்றும்,

### விஜயாகமம்

"த்ரயோதஸ்யாஞ் சதுர்த்தஸ்யா மிஸ்ரிதே சிவபூஜநம்"

என்றும்,

### சூக்ஷ்மாகமம்

"த்ரயோதச்யாது ஸம்மிச்ரா சிவபூஜா சதுர்த்தசி"

என்றும்,

### சுவாயம்புவ ஆகமம்

"த்ரயோதசி பகாகார லிங்காகார சதுர்த்தசி
த்யோர்யோ கேப்ரகர்த் தவ்யமுத்தமம் சிவபூஜநம்"

என்றும்,

### காலோத்தராகமம்

"த்ரயோதசி ஹ்யுமாரூப சிவரூபா சதுர்த்தசி ।
யஸ்மிந்திந த்வயோர்யோக ஸ்தத்ரசம் பும்பாபூஜயேத்"

என்றும்,

கூறுமாற்றால் பிரதோஷத்திற்கு சதுர்த்தசியோடுகூடிய திரயோ தசியும் சிவராத்திரிக்கு திரயோதசியோடு கூடிய சதுர்த்தசியுமே சிறப்புடைத்தாமெனப் பெற்றாம்.

காமிகாகமத்திலே "அகோராத்ரந் திரயோதச்யாம் ப்ரதோஷஞ் சோத்தமம்பவேத் । பாவித்யா மத்யமம்ஸ்யா ததமம் பூர்வ வித்தகம்" என்று சதுர்த்தசியோடு கூடிய திரயோதசியை மத்திமப் பிரதோஷமாகக் கூறிப் பின்னர் அவ்வாகமத்திலேயே மேலே ஆகமங்களிற் கூறியுள்ளபடி அவ்விரண்டு திதிகளும் முறையே சத்தி சிவசொரூபமென்றும் அவைகளில் ஒன்றற்கொன்று சம்பந்தம் வேண்டுமென்றுங் கூறியு மிருக்கிறதினாலே துவாதசியோடு கூடிய திரயோதசி அதமப்பிரதோஷமும், திரயோதசி மாத்திரமாயின் மத்திமப் பிரதோஷமும், சதுர்த்தசியோடுகூடிய திரயோதசி, உத்தமப்பிரதோஷமு மாமெனக் கொள்ளற்பாலதாகின்றன.

## பிரதோஷகாலப் பிரமாணம்

புருஷார்த்த சிந்தாமணியிலே பிரதோஷகால அளவு கூறுமிடத்து "அஸ்தமனத்திற்குப் பின் ஏழரைநாழிகை என்று ஏமாத்திரியிலும், அந்நூலிலேயே மாதவர் மூன்றுநாழிகை என்றும், விஷ்ணு தருமோத்தரத்தில் மூன்றேமுக்கால் நாழிகை என்றும், அமரத்தில் மூன்றேமுக்கால் நாழிகை என்றும், திதிதத்வ நூலில் இரண்டுநாழிகை என்றும் கூறியிருக்கிறதுபோலுங் கூறி மேற்கண்ட புருஷார்த்த சிந்தாமணி நூலாசிரியர் இரவுக்குமுன் மூன்றேமுக்கால் நாழிகை" என்றுங் கூறுகின்றனர்.

கடம்பவனபுராணத்தில் அஸ்தமனத்திற்குமுன்பின் மூன்றேமுக்கால் நாழிகை என்றும், சிவாலய தரிசனவிதியிலும், சைவ சமயவிளக்க வினாவிடையிலும், அஸ்தமனத்திற்குமுன் மூன்றேமுக்கால், பின் மூன்றேமுக்கால் நாழிகை என்றும் கூறுகின்றன. இக்கூற்றுகளனைத்தும் காலயுத்திவருஷம் பாற்குணசுத்த பஞ்சமியில் வெளிவந்த ஆரியதருமம், என்னும் பத்திரிகையில் 'சங்கராந்தி ஸ்நானம், என்ற தலைப்பின்கீழ் (வெங்கட்டராம சாஸ்திரிகள்) ஜோதிஷ சித்தாந்த நூற் பிரமாணங்கட்கு சிறிதும் பொரு

த்தமுஹூர்த சங்காரந்தி புண்ணியகாலப் பிரமாணங்களைப் பற்பல விதங்களாய்க் கூறியிருக்கின்றதை நிகர்க்கும். ஆதலின் நிநிதத்துவமென்ற நூலில் கூறியுள்ள இரண்டுநாழிகையே பிரதோஷ காலப் பிரமாணமென்பதில் சிறிதும் ஐயமில்லை. எங்ஙனமெனின், சூரிய பிம்பமுழுதும் கடலில் ஆழ்ந்த அவசரம் கோதூளிகாலம், இவற்றில், சௌளம், மௌஞ்சிபந்தனம், விவாகம் ஆகிய மூன்று சுபகன்மங்கள் தவிர ஏனைய சுபகன்மங்கள் செய்யலாகுமென்றும், பின்னர், நக்ஷத்திரங்கள் சிறிது தோற்றமுண்டான அவசரம் விஜயயோககாலம், அதில் எல்லாச் சுபகன்மங்களும் செய்யலாகுமென்றும் பொருள்தோன்ற,

> "செங்கதிர் மேற்பாற்சென்று செஞ்சுடர் விஜயம்வாரி
> தங்கிய வேலைதன்னைத் தக்ககோ தூளியென்பர்
> அங்கதிர் சௌளமுஞ்சி யருமண மன்றியாவு
> மங்கையே செய்யலாகு மென்றனர் மறைவல்லோரே"

என்றும்,

> "அந்திமாலைசென் றற்பம்விண்ணிலே
> சிந்துமீனினந் தெரியும்வேலைதான்
> முந்துகாரிய முழுதுநன்றதாம்
> விந்தைமேவுசீர் விஜயயோகமே"

என்றும்,

சரஜோதிமாலைச் செய்யுளிருத்தலின், இவ்விரண்டு சுபகாலங்கட்கிடையில் உள்ளது முற்கூறிய தோஷகாலம்; அது சற்றேறக்குறைய ஒரு முகூர்த்தகால அளவு இரண்டுநாழிகைக்கு அதிகமில்லாமையாலென்க.

## பிரதோஷகால சிவபூஜை அல்லது சிவதரிசனபலன்

பிரதோஷகாலத்திலே சிவபூஜையேனும் சிவதரிசனமேனும் விதிப்படிசெய்யின், கடன், வறுமை, பாவம், பசிநோய், வியாதி, அகாலமரணம், மரணவேதனை என்னும் இவைகளெல்லாம் அகலும். முக்தியுஞ் சித்திக்கும்.

இதற்குப் பிரமாணம்:—

கடம்பவனபுராணம்

"இரணநல் குரவிரும்ப வமிரும் பசியுரோக
மரணூறும் பயங்கிலேசங் கேதம் மவமிருத்து
மரணவேதனை யிவையெல்லாம் கற்றென வணங்கிப்
புரணநாதனைப் பிரதோடத் திற்போற் றிடத்தகுமால்"

பிரமாண நூற்களுள்ளே ஆகமங்களே விசேடப் பிரமாணம்

வடமொழி விவேக சிந்தாமணியின் கண்ணுள்ள வேதாந்த பரிச்சேதப் பொருளைக்கொண்ட தென்மொழி வேதாந்த சூளா மணியென்னும் நூலில் அளவைகூறுமிடத்து "கடமுதலா மவற் றினது காண்கைதானே" என்னுந் தொடக்கத்துச் செய்யுளில் "உடமையுணராத்தனுரையான தீதீராதி யுறுகனியாதிகளுண்மை ஞானமாகமமாம்" என்னும் கைவல்லிய நவநீதம் சந்தேகந்தெளி தற் படலத்தில் "ஆகமப்பிரமாணத்தாலறி" என்றும், சிவஞான சித்தியாரில் "அளவை காண்டல் கருதலுரை" "அநாதியே யமல னுயவறிவனூலாகமந்தான்" என்றும், கூறுமாற்றால் ஆகமம் பிர பல பிரமாணமெனவும், அமிருதநாதோபநிடதம் "ஆகமாஸ்யா விரோதேந ஊகநந்தாக உச்யதே" என்று கூறுமாற்றால் ஆக மங்கட்கு விரோதமில்லாத யுக்தியினால் தர்க்கிக்கவேண்டுமென வும், சிவபுராணம் அகத்திய சம்ஹிதையில் "ப்ரணவாத்யந் மஹா மந்த்ராத்ய காராத்யக்ஷராணிச । சிவஜ்ஞாநாநி திவ்யாநி காமிகா திநிபூசுர:॥ ஸ்ரீத்தாவ்ஸ்ய நாதஸ்ய ஸம்பவந்த் யூர்த்வவக்த்ரத:" என்று கூறுமாற்றால் பிரணவாதி மஹாமந்திரங்களும், அகாராதி அக்ஷரங்களும், சிவஞானமயமான காமிகாதி திவ்யாகமங்களும் சிவபெருமான் ஊர்த்துவமுகத்தினின்றுந் தோன்றினவெனவும் பெறப்பட்டமையால் சர்வோத் கிருஷ்டமான ஆகமங்களையும் அவற்றின் உபப்பிரமாணமான புராணங்களையுங்கொண்டே சைவ கன்மமாகிய பிரதோஷவிதியை நிர்ணயிக்கலாயிற்று. இன்னும் பிரமாணங்கள் பலவுள்ளன, விரிக்கிற்பெருகும். "இங்கே உரை" என்னும் சிவஞானசித்திச் செய்யுளிலுள்ள சொல்லுக்குப்பொ ருள்—ஆகமம்.

## ஓர் ஆசங்கை

சிவபெருமான், பிரம விஷ்ணுக்களினது கொர்வம் பங்கமாதற் பொருட்டு மாசிமாதத்திலே கிருஷ்ணபக்கத்துச் சதுர்த்தசியிலே அர்த்தராத்திரியிலே இலிங்கவடிவாய்த் தோன்றினர். ஆனதால் அது சிவராத்திரியாயிற்று என்றிருப்பதுபோலே, பிரதோஷமும் இன்னமாசத்து இன்னபக்கத்துத் திரயோதசி மாலைக்காலத்திலே ஆயினவென் றில்லாது போனதென்னை? சிவராத்திரி ஓர்காலத்தி லேற்பட்டதுபோல் பிரதோஷமும் ஓர்காலத்திற்றானே ஏற்பட்டி ருக்கவேண்டும்? அங்ஙனமாயின், அது, வருஷத்திற் கொருமுறை யன்றி மாதந்தோறும் இருமுறை வருவானேன்? மாதந்தோறும் மாதசிவராத்திரி வருகிறதுபோலே பிரதோஷமும் இருபக்கத் துத் திரயோதசியினும் வருகிறதெனின், அது,ஞாயம், சோதனை

திதிகுணம்-1, வாரகுணம்-8, யோககுணம்-32, கரணகுணம் 64, நட்சத்திரகுணம்-80, என வடமொழி தென்மொழி ஜோதிஷ நூல்கள்கூறும். இவ்வாறுள்ள அளவுகளை முன்னர்க்கூறிய நூல் களின் ஆசிரியர்கள் உணர்ந்திருப்பரோ? உணராதிருப்பரோ? உணர்ந்திருப்பாராயின் மிகவும் கடைப்பட்ட ஒரு குணமுள்ள திதி களில் பற்பல புண்ணியகன்மங்களையும், சுபகன்மங்களையும், இயற் றும்படி நூல்களெழுதிவிடுப்பரோ? உணராதிருப்பாராயின், நூல் களுக்கு ஆசிரியராவரோ? பிரதோஷ நிகழ்ந்த காலத்திருந்த அதிக குணமுள்ள யோகம், கரணம், நட்சத்திரம் ஆகியவைக ளைக்கூறாது வாரத்தைமட்டும் கூறியிருத்தலின் ஒருகுணமுள்ள திரயோதசி திதியைநீக்கி எண்குணமுள்ள சனிவாரந்தோறும் மாலைக்காலத்திலே பிரதோஷ மனுஷ்டித்தாலென்னை? இவைக ளின் உண்மையை உணர்ந்தார் உணர்த்தவேண்டுகிறேன்.

---

# பதி பசு பாச விளக்கம்

(ஓர் கடிதம்)

[யாழ்ப்பாணம் திரு. க. சோமசுந்தரம்பிள்ளை]

(கருரு-ம் பக்கத் தொடர்ச்சி)

## பாசவியல்பு

பாசமூவகைப் படுமெனப் பகருவர்பற்று
மாசதாகிய விருண்மலம் மாயையுந் தொழிலும்
ஆசில்நல்லுயிர்க் கிவையுமி தவிடுடன் முளைசத்
தேசலின்றியே செம்பினிற் களிம்பெனவிசையும். (ருஎ)

வந்தவாணவ மாமலம் வியாதியாம்வஸ்து
அந்தமின்றிய விருளது சொரூப மாயமையும்
புந்தி ஞானத்தை மறைத்தகங்காரத்தைப் புணர்க்கும்
இந்தவாணவ மெண்ணிலாச் சத்தியோடியங்கும். (ருஅ)

மன்னுகன்மமா மலமருந் தெனும்வஸ்து
துன்னுமற்றதன் சொரூபமே விடையமாம் சுபாவம்
பன்னுமாண வமலத்தினை யடக்குதல்; பனுவல்
சொன்னமாயையு மோரிரண்டாகியே துலங்கும். (ருகூ)

பரவுமோரிரு மாயையும் பாத்திர வஸ்து
விரவுதேகமாய் மேவுதல் சொரூபமாம் மேலும்
தருசுபாவமோ கன்மதாரகமதாய்ச் சாற்றும்
உரியசைவசித் தாந்தநூ லுரை களாமன்றே. (சூ0)

வேறு

இன்னமுந் திரோதை யென்னுமெழின்மல முண்டுசத்தி
யன்னது திரையாம்வஸ்து வணிபடாஞ் சொரூபமாகும்
மன்னிய சுபாவந்தானே வருபுறமறைப் பதாகும்
தின்னிடு போகம்மாறச் சிவசத்தியாகு மன்றே. (சூக)

வேறு

ஆணவமாம் பிணியடைந்து தெரியாதொன்று
மகமறைப்புண் டிருக்கின்றவான் மாவுக்கு
மாணலஞ்சேர் கன்மமெனு மருந்தையந்த
மாயையெனும் பாத்திரத்தில் மருவவைத்து
காணலுருவகை நிரோதத்தால்மூடிக்
கருணை மிகுவைத்தி யனுங் கடவுளீய
ஆணவநோய் நீங்கிடுமால் நீங்கப்பின்பே
யானந்த வமுதுண்ணுமான்மாவன்றே. (சுஉ)

வேறு

இரண்டுமாவினை யொத்திட மலபரிபாகந்
திரண்டுவந்திடச் சத்திநி பாதமுந்திகழ
அரண்டரு கழற்சேவடி யண்ணலா சானின்
வரந்தரும் பெருமருளினல் மாய்வன மலமே. (சுஙு)

அருவமாகிய மலங்களுக்கழிவில்லை யவனி
ஒருவர்க்குற்ற நோய்தீரினும் பிறர்க்கஃதுறுமால்
அரிய ஞானத்தால் முத்திசேருநர் தமையடையா
மருவி மற்றவர் தங்களைவைகலும் வருத்தும். (சுச)

இன்னும் பற்பல பதிபசுபா சத்தினியல்பு
அன்னவற்றையா மீண்டெழுதிடச் சிறிதடங்கா
பன்னுஞான நூல்வயின் வயின்டாமகைவல்ய
மன்னுஞான தேசிக னருளாற் பெறவாய்க்கும். (சுரு)

கன்னல்பிற் படவினித்திடுங் கவிபலகழறு
மென்ன தன்புறு சோதர விவ்வுலகத்தில்
துன்னுமின்ப மென்றுள்ளது சொல்லிடிற்றுக்க
மென்னுமொன்றலதில்லை நன்கிதனை நீயறிதி. (சுசு)

துக்கரூபமா முலகத்திற் சுகமென மருவு
மக்கணக் கொருசிறி துயர்மருந் தனுபான
மொக்குமாதலால் மாயையின் றோற்றமா யோங்கும்
இக்கடற்புவி யின்பமோ வில்லை மற்றில்லை (சுஎ)

வேறு

ஆன்மா வெப்பொழுது துக்க ரூபந்தன்னை
யறிந்திதனை யனுபவிக்க வாற்று தென்னும்
ஆன்மா வப்பொழுதானை யுன்னுமப் போ
வான துவே வாயிலா யடைந்துஞான
மான்மா வந்தடையவருள் செய்வனென்ப
வா தலா லான்மாவினடையுந் துக்கம்
ஆன்மாவை நன்னெறிக் கணுய்க்கமேவு
மருந்தாதென் றறிந்திடுவ ரறிவினோரே. (௬அ)

சித்தாந்த சமயத்திற் கூறுமிந்தத்
திறமெல்லா நன்கறிந்து செவ்வேநிற்கில்
கத்தாவந்தனுக் கிரகஞ்செய்வன் செய்தால்
காரிருளி னீங்கிடலாம் நீங்கிவிட்டால்
எத்தானு மடையவொணு ஞானவாரி
யிடையமுந்தி யென்றென்றும் பிரிவிலாது
முத்தாந்த முடிவடைந்து வாழலாகு
முதுமறையு மாகமு மொழிவதிதே. (௬௯)

செய்பவனுஞ் செய்பொருளுஞ் செய்விப்போனுஞ்
செய்ததனுக் கொருபொருளைத் தெரிந்தீவோனு
மையமிலாச் செயலதற்குச் சாட்சியாக
வருபவனுங் கடவுளென மனத்திலுன்னி
ஐய,ஒரு தீங்குறினும் நன்மைதான்வந்
தடைந்திடினு மவனருளே யவனையின்றி
வையமொரு சிறிதணுவு மசையமாட்டா
தென்றிருக்கச் சிவஞானம் வளரும்மாதோ. (௭0)

# வண்ணாரப் பெரியாண்டி

[க. ப. சந்தோஷம். B. A. L. T.,]

(கஅகூ-ம் பக்கத்தொடர்ச்சி)

"எண்ணாத எண்ணமெல்லாம் இங்குமங்கும் பிடித்திழுத்து
வண்ணானை வாழ்த்தியது போதும்—"

என்று செந்தமிழ்ச்செல்வி நேயர் பலர்கூவினுங் கூவலாம் என்ற அச்சத்தால் இரண்டொருவரை வினவியபோது, "யாமறிந்தவளவில் சிலர் இக்கட்டுரையை உவப்புடன் தொடர்வதால் நீருந் தொடரலாம்" என்றனர். அதனால் கடிதில் இவ்வுரையை முடித்துவிடவேண்டுமென் றெழுந்த துணிபைத் துணித்துத் துணி தூய்மை செய்வானைப்பற்றி இன்னுஞ் சில சொல்லப்புகுந்தேன். செல்வி நேயருட் பெரும்பான்மையோர் பாரமான பொருட்களில் கருத்தைச் செலுத்துகிறவர்களாதலால், இத்தகைய வெறுமொழிகளை இளைப்பாறும் வேளைகளில் அவர்கள் எளிதாய்ப் படித்து இன்புறலாம் என்ற எண்ணத்துடன் இவ்வுரையைத் தொடங்கினேன். ஒழிந்த நேரங்களில் நான் எழுதிவைத்த குறிப்புக்களிலிருந்து இவற்றைப்பெருக்கி எழுதிக்கொண்டு வருவதால் இவை ஒன்றோடொன்று ஏற்றபடி இணைக்கப்பட் டிருக்கவில்லை. இது நிற்க.

ஆட்டுக்காலைக் காட்டிக் காட்டுப்புலியை வீட்டிற்குள் இழுத்துப் பிடித்த மந்திரவாதி யொருவனிருக்கின்றான். இவன் பேர், ஊர் இல்லாத ஒருமலையாளி; மண்டை யோடு வைத்துக்கொண்டு மாயமயக்குகள் செய்பவன். இவனுடைய அரிய செய்கைகள் ஒன்றிரண்டைச் சொன்னால் இவனுடைய பெருமை வெளிப்படும். இவனுடைய பெயரைச் சொல்வதற்கும் பயமாயிருக்கிறது. இன்னதைச் செய்வான், இன்னதைச் செய்யமாட்டான் என்று அவனைப்பற்றிச் சொல்லமுடியாது. எதுவேண்டுமாயினுஞ் செய்வான்; எவரையும் வெல்வான்; ஒருவருக்கும் அஞ்சான். தன்னை எதிர்த்தவரை எல்லாம் வென்று இவன் உயர்வதைக்கண்ட சில பில்லி சூனியக்காரர் பொறாமையால் மனம் புழுங்கி ஒன்றாகச் சேர்ந்து என்னசெய்வதென்று சிந்திக்கலானார்

கள். ஊரில் அவனைப்பற்றிப் பேசினால் அஃது எப்படியும் வெளி யாகி விடுமென்று இவர்கள் ஒரு இருண்டகாட்டிற்குள் நுழைந்து சிலநாள் கூட்டங்கூடிப்பேசி ஒரு முடிவிற்கு வந்தார்கள். அந்த முடிபு என்னவென்றால்:—

"(1) ஊரில் பிச்சைக்காரனாக வந்த மலையாளி இப்பொழுது நம்மை மதிப்பதில்லை,

(2) தன்னுடைய வித்தையால் நம்மை ஏமாற்றி, நம்முடைய மனைவிகளைக் கெடுத்தான்;

(3) தன்னுடைய தொழிலின் உதவியால் நம்மை அடக்கி ஒடுக்கி மிரட்டி வெருட்டுகிறான்;

(4) இன்னுஞ் சிலநாளில் நம்முடைய குலத்தையே ஒழித்து விடுவான்போ லிருக்கிறது;

ஆகையால், நாம் ஒன்றுசேர்ந்து சூனியத்தால் இவனைக் கொன்றுவிடவேண்டும்" என்பதே. இந்தத் தீர்மானத்தின்படி இவர்கள் காட்டில் வட்டமாய் உட்கார்ந்து தூபதீப நைவேத்தியங்களுடன் மந்திர உச்சாடனம் இரவு பகலாய்ச் செய்யலானார்கள். நள்ளிரவென்றும் நடுப்பகலென்றும் பாராமல் இவர்கள் ஒரே மனதாய் இக்கொடுந்தொழிலில் இறங்கி யிருக்குஞ் செய்தி மலையாளிக்கு எங்ஙனமோ எட்டிவிட்டது. குதித்தெழுந்தான் மலையாளி; கூத்தாடினான் மலையாளி; பறந்தான் வனத்திற்குநேரே. அவர்களுடைய சூனியச் செய்கைகளை யெல்லாம் மிதித்துச் சிதைத்து, குலை நடுங்கிநின்ற அவர்களையெல்லாம் இவ்வலியவன் தனக்கடிமைக ளாக்கிக்கொண்டான். இத்தகைய சக்திவாய்ந்தவனைப் பற்றி எவருக்கும் அச்சமிருப்பது இயற்கைதானே. ஆட்டுக் காலைக்காட்டிப் புலியைப்பிடித்தான் என்று முன்சொன்னோம்; முயலைக்காட்டிப் பசுவைப் பிடிப்பதும் இவனுடைய தொழில். பசுக்களின்மேல் இவனுக்குச்சொல்லரிய ஆவலுண்டு. இவனிடம் நிரம்பிய அன்புபாராட்டிப் பழகிவந்த இளம்பசு ஒன் றிருந்தது. எந்தநேரமும் அஃது அவனைச் சுற்றிக்கொண்டே திரியும். அவனும் அதைத் தன்கண்ணின் கருவிழிபோல் காத்து மேய்த்து வந்தான். காமதேனுவென்று புராணங்களிற் கூறப்படும்

அரிய தன்மைவாய்ந்த பசுவும் அழகில் இதற்கு ஈடாகாது. இவ்வழகிய பசுவைப்பற்றிக் கேள்விப்பட்ட தென்னாட்டு மந்திரவாதியொருவன், விஸ்வாமித்திரன் காமதேனுவைக் கவரமுயன்றது போல், இதைப் பிடித்துக்கொண்டுபோக வகைதேடினான். எளிதாய் இக்காரியத்தை முடித்துவிடலாமென்று எண்ணிய இவன், மலையாளியின் உரத்தையறியாமல், தன் குறளிகளில் சிலவற்றையழைத்துப் பசுவைக் கொண்டுவரும்படி ஏவினான். குறளிகள் கொக்கரித்துக்கொண்டு நொடிப்பொழுதில் பசுவையணுகிவந்தன. ஆனால் மலையாளியின் மந்திர சக்தியினாலமைந்த காவலைக் கடந்து உள்ளே செல்லமுடியாமல் அவைகள் மோதிவிழுந்து மண்ணிற் புரண்டு, "பிழைத்தோம், பிழைத்தோம்" என்று தலைவிரிகோலமாய்த் தங்கள் தலைவனிடம் ஓடிவந்து, நடந்ததைச் சொல்லவும் நாவெழாமல் நின்றன. தனக்குநிகரெவருமில்லை எனத் தருக்கி, எவரும் நடுங்கத் தன் அதிகாரத்தைச் செலுத்திவந்த தலைவன், மலையாளிக்கு அஞ்சியோடித் தன்முன் விலவிலத்துநின்ற குறளிகளைப்பார்த்து "உளங்கலங்கி உடல்நடுங்கி நீங்கள் என்முன் நிற்பதைக்காண நாணமாயிருக்கிறது; சீ, இங்கே நில்லாமல் ஓடுங்கள்" என்று மீசைதுடிக்கக் கழறிச்சீறி எழுந்தான். இங்ஙனம் பொங்கி எழுந்தவன் கண்மூடி விழிப்பதற்குள் இளம்பசு மேய்ந்துகொண்டிருந்த விடத்தில் தோன்றினான். ஐயோ பாவம்! சொல்லாமல் வந்து எல்லாரையும் பிடிக்கும் பொல்லாத மகனைக் கண்டவுடன் அப்பசு அலறிப்பதைத்து ஓட்டமாயோடி மலையாளியின் பக்கத்தில் வந்துநின்றது. தன் அருமைப் பசுவிற்குத் தீங்கிழைத்தவன் யாரென்று அறிவதற்காகப் பேர், ஊர் இல்லாத மந்திரக்காரன் தன் செம்முகத்தை உயர்த்திப் புருவங்களைத் தூக்கி நோக்கினான். பெரிய தேகமுடைய கரியமகனொருவன் சிவந்த கண்களுடன், பல்லை நறநறவென்று கடித்துக்கொண்டு தன் பசுவைக் கவரவருவதைக்கண்டு மலையாளி புன்முறுவலுடன் எழுந்து நின்றான். வெகுளியால் மருண்டு அகந்தையால் தன்னை மறந்து சண்டமாருதம்போல் வந்தவன் ஒன்றையுங் கருதாமல் பசுவைப்பிடிக்க முன்னே சாடினான். அப்போது பசுவின் தலைவன் சிறிதும் மயக்கமின்றி, அமைதியாக நின்றவண்ணமே, தன்

காலைத்தூக்கி வந்தவனை எற்றினன். அந்த உதையின் விளைவை யாரால் எடுத்துரைக்கக்கூடும்? இவ்வாறு உதையுண்டவன், தன்னை ஒருவன் காலால் எற்றினன் என்பதையுமுணர்ந்துகொள் ளக்கூடாத நிலையில் கீழேவிழுந்து கிடந்தான். இதற்குப் பின் நடந்ததைச் சொல்லவேண்டியதில்லை. இவ்வரிய செய்திகளை நிக ழ்த்தியவன் யார் என்பதை நேயர்கள் நன்கறிவார்கள். ஆயினும் ஒன்றிரண்டை விளக்கி மேற்செல்லுதல் நன்று.

ஆட்டுக்கால்=ஆட்டுகின்ற கால்; உலகத்தை யாட்டுகின்ற கால்; குஞ்சிதபாதம். (அரிசி, உழுந்து முதலியவற்றை ஆட்டுங் கல்லை ஆட்டுக்கல் என்பதுபோல்)

புலி = அம்பலவாணனுடைய திருக்கூத்தைக் காணவந்த வியாக்கிரமபாதர்;

வியாக்கிரம்=புலி.

மலையாளி=கைலைமலையாளன்.

வனத்திற்செய்த சூனியம்=தாருகாவனத்து ரிஷிகள்செய்த மாரணயாகம்.

பசு=உயிர், ஆன்மா.

இளம்பசு=மார்க்கண்டர்.

முயலைக்காட்டிப் பசுவைப்பிடித்தல்=திருவடியைச்சுற்றி ஆன் மாக்களை அழைத்தல் (அடியில் முயல் இருப்பதை, "முயன்று என்னடி சேர்வீர்" என்ற குறிப்புடையதாகப் பொருட்படுத்தினு மிழுக்கில்லை)

இவ்வாறு சிவனைப்பற்றித் தலையைச்சுற்றி மூக்கைப் பிடித் ததுபோல் கூறினதெல்லாம் எதற்கெனின், சிவன்பேரில் வண்ணா னுக்குக் குறையுண்டென்பதைத் தெரிவித்தற்பொருட்டே. நகை செய்யக்கொடுத்தால் தட்டான் பொன்னைத் திருடிக்கொள்வா னென்று அஞ்சி பார்வதிகொழுநன் சர்ப்பத்தையணிந்து அர வாபரணனானன் என்றொருவர் அறைந்தார். வண்ணானுக்குத் துணியைப்போட்டால் அவன் அதைக்கல்லில் அறைந்து கந்தை யாக்கிவிடுவானென் றெண்ணியோ கரித் (யானை) தோலையும் புலித்தோலையுஞ் சிவன் உடுத்திக்கொண்டது. (தொடரும்)

## நோயற்ற வாழ்வு

மண்ணுலகிலுதித்த மாந்தர் இவ்வுலகில் இனிது வாழ்தற்கியன்ற சாதனங்கள் நோயற்ற தேகமும் குறைவற்ற செல்வமுமேயாம். இவ்விரண்டினுள்ளும் சிறந்தது யாதெனின் நோயற்ற வாழ்வேயாம். குறைவற்ற செல்வத்தைப் படைத்தும் தீராத குட்ட முதலிய வியாதிகளில் அழுந்துவதினும் நோயில்லா வாக்கையைக்கொண்டு தரித்திரத் துழல்தல் சாலவும் மேலதன்றோ?

வைத்தியத்திற் கைவந்த ஓர் இருடி தியானத்திலமர்ந்திருந்த போழ்து ஓர் பறவை கோருக் கோருக் கோருக் எனக் கத்திக் கொண்டிருப்பவே அவர் அதனது தொனியைக் கவனித்து 'இது நம்மை நோயற்றவன் யாவன் எனப் பரீக்ஷை செய்கின்றது போலும்' என வெண்ணி அதனை நோக்கி,

> புக்த்வாத் கதபதகாமி
> மிதபோஜி வாம சாயீச
> அபிஜித மூத்ர புரீஷ
> கோருக் கோருக் கோருக்

எனவோர் சுலோகமுகத்தால் விடையளித்தார்.

அதன் பொருள்: எவனொருவன் உண்டபின் நூறடி நடப்பவனும், அன்னத்தை மிதமாக அருந்துவோனும், இடதுபக்கம் சாய்ந்து படுப்பவனும், மலம் மூத்திரம் எனும் வாதைகளால் வெல்லப்படாதவனும் உறைவனோ அவனே நோயில்லான், அவனே நோயில்லான், அவனே நோயில்லான்.

கோருக்=எவன் நோயில்லான்? கோருக்=அவன் நோயில்லான்.

அன்றியும் கீழ்க்கண்டபாட்டின்படிநடப்பின்நோயெளிதில்வாரா து.

> திண்ணமல மிரண்டுந் தேகத் தடக்காது
> பெண்ணின் பாலொன்றைப் பெருக்காது—உண்ணுங்கால்
> நீர்கருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி யுண்பவர்தம்
> பேருரைக்கப் போமே பிணி.

மற்றும் திருவள்ளுவர் குறளிற் கூறிய வுறுதிகளையுங் கவனங் கொள்க.

பசித்த பின்பே யுணவருந்தற் பாலது. அன்றியும் ஆகாரம் சுவையாக விருக்கிறதென வெண்ணி வெறுப்பு வரும்வரை அயிலற்க. பசியொரு சிறிது எப்போழ்தும் வயிற்றிலிருப்பின் நோயணுகாது. மிதமிஞ்சி உணவ யின்று வயிற்றுத் தீயை அவிப்பதால் பல நோய்களும் தேகத்திலுதயமாகும். அன்றியும் காலையில் மலத்தைக் கசடறக் கழிக்கவேண்டியது.

அன்றியும் பித்தம்மிகாவண்ணம் சாந்திசெய்துகொண்டுவருக.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்
திங்கள் தோறும் வெளிவருவது

சிலம்பு ௪ | மெய்கண்டான் யாண்டு-௭௱௩ ஆனித்திங்கள் 1926௵ ஜூன்௴—ஜூலை௴ | பரல் ௬

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## திருவெண்ணெய் நல்லூர்
## 'திருவருட்டுறை' ஆலயம்

[தி. வடிவேலு முதலியார்]

பொருவரும் வழக்கால் வென்ற புண்ணிய முனிவ ரென்னை
யொருவரு மறியீ ராகிற் போதுமென் றுரைத்துச் சூழ்ந்த
பெருமறை யவர்க்கு ழாமு நம்பியும் பின்பு செல்லத்
திருவருட் டுறையே புக்கார் கண்டிலர் திகைத்து நின்றார்.

சேக்கிழார்.

திருநாவலூரிலே ஆதிசைவப் பிராமண குலத்திலே சடைய ஞர் இசைஞானியார் என்னும் இருமுது குரவருடைய புண்ணிய பலஞக அவதரித்தவர் ஸ்ரீ ஆலால சுந்தரப்பெருமாஞவர். இளமை அழகு மிகுதியும் வாய்க்கப்பெற்றிருந்தமையால் நரசிங்க முனை யர் என்னும் அந்நகர் அரசர் அவரை மிக்க அன்போடு வளர்த்து வந்தனர்.

பெற்ருேர்கள் சுந்தரருக்குப் புத்தூர் சடங்கவி சிவாச்சாரிய ரின் புத்திரியை மணம்பேசி, வதுவை செய்விக்க முகூர்த்த தின மும் குறிப்பிட்டனர். மங்கல வாத்தியங்கள் முழங்க திருமணம் நடைபெறுஞ் சமயத்தில், சிவபெருமான் வயோதிக பிராமண ராக வடிவங்கொண்டு அவண் எய்தி, இம்மணமகற்கும் எனக்கும் ஒரு வழக்குண்டு, என்றனர். அது யாது என அங்குள்ளார் வினவ, 'நாவலூரர் எனது அடிமை' என்றனர். அந்தணர்க்குள் அந்தணர் அடிமையாதல் எங்ஙனும் கேட்டறியோம் என்றலும் விருத்தர் முறியோலையைக் காட்டினர். நாவலூரர் அதனைப் பறித்துக் கிழித்தெறிய, அதுகண்டு வயோதிகர் கூ கூ வென்று முறையிட்டனர்.

அவரது நகரை வினவியறிந்த அங்குள்ளாரனைவரும் வெண் ணெய்நல்லூர்ச் சென்று, அவர் காட்டிய மூல வோலையைக் கண்டு பெரியோர் பக்கமே தீர்ப்பளித்த பின், 'தேவரீர் இருப் பது இந் நகராயின் தங்கள் வீடு எங்கே யுள்ளது? காண்பியும்' என்றுகேட்டனர். 'என்னை நீங்களொருவரும் அறியீராகில் வாரும் காண்பிக்கின்ருேம்' என்று அனைவரும் பின் தொடர்ந்துவாச் சென்று, திருவெண்ணெய் நல்லூரிலுள்ள 'திருவருட்டுறை' என் னும் சிவாலயத்திற்குள் சென்று மறைந்தனர்.

ஆலயத்திற்குட் சென்ற அந்தணரைக் காணுது திகைத்து நின்ற அனைவரும் கண்டு மகிழும் வண்ணம் சிவபெருமான் அம் பிகையோடு விடையின் மீது எழுந்தருளி ஆகாய வீதியில் காட்சி தந்தருளினர்.

திருவதிகை ஆலயத்திற்கு, 'குணதரவீச்சரம்' என்றும், திருப்பெண்ணுகடம் ஆலயத்திற்கு, 'திருத்தூங்கானை மாடம்,'

என்றும், திருவாரூர் ஆலயத்திற்கு 'வடதளி' என்றும் பெயர்கள், வழங்கி வருவன போன்று, ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அகில மாயையுள் அழுந்தாவண்ணம் தடுத்தாட்கொண்ட பெருங்கருணை வள்ளல் எழுந்தருளியிருக்கும் இடமாதலால் திருவெண்ணெய் நல்லூர் ஆலயத்திற்கு 'திருவருட்டுறை' எனப் பெயர் வழங்கி வருகிறது.

வடமேற்கு மூலையிலிருந்து பின்புறமாக எடுக்கப் பெற்ற புகைப்படத்தில் மண்டபத்தின் மீது தோன்றும் சிறு ஆலயம் சுந்தரமூர்த்தி சுவாமிகட்குக் காட்சியளித்தவரும், 'பித்தா' வென, தம்மீது பதிகம் பாடும்படி அடியெடுத்துக் கொடுத்தவரு மான சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் ஆலயமாகும்.

---

# திருநாவுக்கரசர்

[மா. வே. நெல்லையப்ப பிள்ளை]

திருநாவுக்கரசர் என்னும் சொற்றொடர் திரு நாவு அரசர் என்னும் மூன்று சொற்களாலாகியது. திரு என்னும் சொல் பொருட் செல்வத்தையும், அருட் செல்வத்தையும் குறிக்கும். பொருட்செல்வம் அருட்செல்வத்தை வளர்த்தற்குச் சாதனமா யுதவுகிறதனால் அதுவும் செல்வம் எனப்பட்டது. பொருட்செல் வம் உலக இன்பத்தை மக்களுக்கு உதவும்; அருட்செல்வம் பேரின்பத்தை உதவும்; இவ்வுலகில் அடையும் சிற்றின்பத்துக்குப் பொருட்செல்வம் எப்படி இன்றியமையாததோ அப்படியே பேரின்பவாழ்வு அடைதற்கு அருட்செல்வம் இன்றியமையாதது. ஆதலின் பொருட்செல்வமும் அருட்செல்வமும் மங்கலம் என்று கூறப்படும். அவற்றுள், அருட்செல்வம்தான் சிறப்புள்ள மங் கலமாகும். இந்தச் சிறப்புள்ள மங்கலம் தரும் பொருள்களுக்கு முன்னும் செயல்களுக்கு முன்னும் திரு என்னும்சொல்லை அடை மொழியாக வைத்துக் கூறுதல் பண்டைத் தமிழ்வழக்கு. இப்ப டிக் கூறுதல் உலகவழக்கிலும் செய்யுள் வழக்கிலும் நாம் காண

லாம். இவ்வழக்கை திருநீறு, திருவடி, திருக்கோயில், திருவேடம், திருமந்திரம், திருவலகிடல், திருநந்தனவனம், திருத்தொண்டு முதலிய சொற்களில் நாம் காணலாம். இவ்வழக்குப் பற்றி இறைவன் திருவருள்பெற்ற அடியார்களின் பெயரின் முன்னும் திரு என்னும் மங்கலச்சொல் வைக்கப்படுகின்றது. இந்தக் காரணத்தினுல் நாவுக்கரசர் பெயரும் திரு என்னும் மங்கல அடைமொழியைக் கொண்டது.

இனி நாவு என்பது நா. உகரம் சாரியை.

நா-என்னும் சொல் உகரச் சாரியை பெற்று நாவு என்று ஆயிற்று

நா என்பது நாக்கு. இங்கே அது ஆகுபெயராய் நாக்கிலிருந்து பிறக்கும் சொற்களைக் குறிக்கின்றது.

வாக்கு சொல் என்பன ஒருபொருட்சொற்கள். வாகீசர் என்ற வடமொழிச் சொற்றொடரில் நாவுக்குப் பதிலாக வாக்கு வந்திருப்பது காண்க.

இனி அரசர் என்பதில் 'அர்' விகுதி மரியாதைப் பன்மையாகும். திருநாவுக்கரசு என்று சொல்வதுமுண்டு.

அரசர் என்பது இறைவர் அல்லது தலைவர் என்று பொருள்படும். ஒரு நாட்டின்கண்ணுள்ள குடிகளுக்கு அவர்களை ஆளும் தலைமையுடையவன் அரசன் எனப்படுவான். ஓர் நாட்டு அரசன் தன் நாட்டிலுள்ள குடிகளை எல்லாம் நல்வழிப்படுத்தி எல்லா நலங்களையும் அடையும்படி செய்து உய்வித்தற் பொருட்டே அவர்களிடத்தில் தன்னுடைய ஆளும் ஆற்றலை (**Reigning power**) வழங்கல்வேண்டும். அவன் அவ்வாற்றலை தன் நன்மையின் பொருட்டு வழங்குதல் கூடாது. அதுபோலவே யாராயினும் ஒருவர் பிறரொருவரிடத்திலாவது பலரிடத்திலாவது, ஆளப்படுபவர்கள் நலத்தின்பொருட்டே ஆளுகைசெய்யலாம்; தன்னலத்தின்பொருட்டு ஆளுகைசெய்தல் நீதிமுறை யாகாது.

வடமொழிச் சொல்லாகிய ஈசன் என்கிற சொல் ஆளுகிறவன் என்று பொருள்படும். (ஈஷ - ஆள்) வாகீசர் என்னும் வட

மொழிச்சொல்லில் ஈசர் என்பது அரசர் என்பதற்குப் பதிலாக வந்ததுகாண்க.

கடவுள் உலகினை ஆளுகிறவன் ஆதலின் ஈசன் எனப்படுவான். கடவுள் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்கள் தன் பொருட்டன்றி உயிர்கள் நலம் அடையும்பொருட்டுச் செய்கின்றான். ஆதலின் எல்லாருங் காண தன் குடிகளை காத்தற்றொழில் செய்யும் அரசனும் தன்னுடைய ஆளுகையை அவ்வாறே குடிகளின் நலத்தின்பொருட்டே செய்தல் அரசியல் முறையாகும்.

இங்கே நாவுக்காசர் என்னும் சொற்றொடர், நாக்கினை அடக்கி வாக்கினை ஆளும் வன்மையுடையவர் என்று பொருள்படும். அதாவது அவருடைய நாவிலிருந்து பிறக்கும் வாக்குக்கள் அற்பமேனும் தற்போதத்தாலாவது உயிர்ச்சார்பு, பொருட்சார்புகள் பற்றியாவது உண்டாகாமல் சிவபெருமானுடைய அருள் வயப்பட்டு உண்டாகும் தன்மையுடையனவாகும். ஒருவர் தமது நாவினாற்சொல்லும் வாக்குகள் அற்பமேனும் தற்போதம் பற்றியாவது உயிர்ச்சார்பு, பொருட்சார்பு பற்றியாவது எழுமானால் அவர் வாக்குக்கு அரசராகார்.

திருநாவுக்கரசர் சிவபெருமானால் ஆட்கொள்ளப் பெற்றபின் அவருடைய வாக்குக்கள் எல்லாம் சிவபெருமானுடைய அருள் வழியிற் பிறத்தலையே இயல்பாக உடையன. அவைகள் அருள் வழியன்றி வேறுவழியிற் செல்லவேமாட்டா. இக்கருத்தை சேக்கிழார் சுவாமிகள், பெரியபுராணம் திருநாவுக்காசு சுவாமிகள் புராணம்,

"மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந் திருவடிவு மதுர வாக்கிற்
சேர்வாகுந் திருவாயிற் றீந்தமிழின் மாலைகளும் செம்பொற் றாளே
சார்வான திருமனமு முழவாரத் தனிபடையுந் தாமு மாகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து பணிந்தேத்திப் பரவிச் செய்வார்"

என்ற பாட்டிலும்,

"தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையு நைந்துருகிப்
பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொல்
மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே"

என்ற பாட்டிலும் வேறு சிலபாட்டுக்களிலுங் கூறி அருளினர்.

திருநாவுக்கரசர் தம்மைச் சமணர்கள் கொல்லவேண்டும் என்ற கருத்துடன் பொறுத்தற்கரிய கொடுந்துன்பங்கள் நான்கு முறை செய்தும் தாம் பதில்வார்த்தை யொன்றும் கூறாது நிறை குணத்தினின்றுங் கொஞ்சமாவது வழுவாமல் பொறையுடையரா யிருந்தது அவரது வாக்கு வன்மையைத் தெற்றென எவர்க்கும் புலப்படுத்தியது. இத்தகைய பொறையுடைமை வன்மையின்பாலது என்பது "வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை" என்னும் திருக்குறள் உரையினுற் காண்க.

"கமையினை யுடையராகிக் கழலடி பரவுவார்க்கு
உமையொரு பாகர்போலு மொற்றியூ ருடையகோவே"

என்று தாம் தேவாரத்திற் கூறியபடி அரும்பெரும் பொறை யுடையராய் சிவபெருமானுடைய திருவடிநிழலிற் பற்றியிருந்ததனலன்றே அக்கொடுந் துன்பங்களெல்லாம் அவரையொன்றுஞ் செய்தற்கு வலியற்றனவாயின.

திருநாவுக்கரசருடைய வாக்குவன்மை அவர் இடையறாது பாடிய் அருட்பாக்களினுலும் அப்பாக்களைப்பாடி அவர்செய்த பாம்புகடித்து இறந்தவனைப் பிழைக்கவைத்தல் முதலிய பல அற்புதங்களினுலும் துணியப்படும்.

"ஆட்பாலவர்க் கருளும் வண்ணமு மாதிமாண்பு
கேட்பான் புகிலளவி லைகிளக்க வேண்டா"

என்று திருஞானசம்பந்தர் கூறியபடி சிவபெருமான் திருஞானசம்பந்தரை ஞானப்பாலுண்பித்து அறக்கருணையினலே ஆண்டருளி திருநாவுக்கரசரை சூலைநோயை ஏவி வருத்தி மறக்கருணையினல் ஆண்டருளினர். இருபெரியார்களும் சிவபெருமானல் ஆண்

டருளப் பெற்றமையினல் "ஆளுடைய பிள்ளையார்" என்றும், "ஆளுடை அரசு" என்றும் சேக்கிழார் பெருமானுற் கூறப்பெறு வாராயினர். ஆயினும் சீகாழிப்பிள்ளையார் ஞானப்பாலுண்டு ஆளப் பெற்றமைக்கேற்ப திருஞான சம்பந்தர் என்றும், திருவதிகை வீரட்டானத்தொண்டர் சூலைநோயால் வருந்தி ஆளப்பெற்ற மைக்கு ஏற்ப திருநாவுக்கரசர் என்றும் அமைக்கப்படுவாராயினர். முன்னையர் ஞானப்பாலுண்டவுடனே "ஞானசம்பந்தர்" ஆயினுர். பின்னையர் சூலைநோய் தமமை வருத்தப்பெற்று அவ்வருத்தம் தாம்பாடிய தேவாரப்பதிகத்தினுல் நீங்கினவுடனே "நாவுக்கர சர்" ஆயினுர். முன்னவர் ஞானப்பாலுண்டவுடனே தமதுதந்தை யார் 'யார்பாலையுண்டா' யென்று ஒருமாரெடுத் தோச்சிக்கேட்க அந்த ஞானத்தைக் கேட்டற்குச் சாதனமாகிய திருச்செவியைத் தாம்பாடிய பாட்டின் முதலிற் சிறப்பித்துத் 'தோடுடைய செவி யன்' என்று பாடியருளினுர். பிள்ளையார் தாமடைந்த சூலைநோயின் வருத்தத்தினுலே அவ்வருத்தத்தைக் குறிப்பித்துக் "கூற்ருயின வாறு" என்று பாடியருளினுர்.

திருநாவுக்கரசர் "சம்பொற்ருளே சார்வான திருமனம்" (நாயகன் சேவடி தைவருஞ் சிந்தை) உடையவராதலினுல் அதன் வழி நாவினை ஆளும் வன்மையுடையராயினுர்; அவர் நாவினை ஆளும் வன்மையுடையராதலின் அதன்வழி காயச் செயலினை ஆளும் வன்மையுடையராயினுர். ஆதலின் அவர் ஆட்கொள்ளப் பெற்ற நாள்முதல் அவருடைய மனம், வாக்கு, காயம் மூன்றும் முறையே சிவபெருமான் திருவடிக்கே பதித்தநெஞ்சும் ஞானப் பாடற் றுடையருச் செவ்வாயும், 'உழவாரத்தின் படையருத் திருக்காமும்' உடையவைகளாய் சிவபெருமானது திருவருளி லேயே வயப்பட்டுநின்று மனத்தொண்டு, நாத்தொண்டு, காயத் தொண்டு ஆகிய மூன்று தொண்டுகளும் செய்துகொண்டே யிருந்தன.

சைவர்களாகிய நாம் நமது சைவசமய குரவருளொருவரா கிய திருநாவுக்கரசருடைய பெருமையை அறிந்து உணர்ந்து சைவசமய விளக்கங்குன்றிய இக்காலத்தில் சைவசமயம் விளக்க

முற்று உலகம் நலம்பெறுதற் பொருட்டு நம்மா லியன்றவரை பயன்குறியாது தொண்டுசெய்து வரல்வேண்டும். நமது மனம் நமக்கும் பிறர்க்கும் தீய எண்ணங்கள் நாடாது நல்ல எண்ணங் களையே நாடல்வேண்டும்; அடிக்கடி சிவபெருமான் திருவடியைத் தியானம்செய்தல் வேண்டும். நமது வாக்கு எதிர்மறை முறையில் (Negative aspect) பிறர் குற்றங்களைப் பேசாதும் பயனில்லாத சொற்களை யுரையாமலும் பிறர்மனம் வருந்தும்படியான மொழி களைக் கூறுமலும் இருத்தல்வேண்டும்; உடன்பாட்டு முறையில் (Positive aspect) பிறரிட மின்சொற்களைச் சொல்லியும் சிவ பெருமானது புகழையும் அவன் அடியார்களது பெருமையையும் படித்தும் பிறர்க்குச் சொல்லித் தெரிவித்தும் வருதல்வேண்டும். நமது காயம் எதிர்மறை முறையில் பிறர்க்கு யாதொரு தீங்கு செய்யாமலும் உடன்பாட்டு முறையில் இயலும் வரை அறவினை செய்தும் வருதல்வேண்டும். இத்தகைய சைவசீலத்தை நாம் அடைய எப்பொழுதும் வருந்தி முயன்று பயின்று பயின்று சிவ பெருமானுடைய திருவருளுக்கு ஆளாதல்வேண்டும். இப்பொழு துள்ளபடி ஆண்மக்கள் மாத்திரமல்லாமல் நமது பெண்மக்களும் சைவசீலத்தை அடைய முயன்றுவரல் வேண்டும்.

> "சைவ சமயத் தனிநாயக னந்தி
> யுய்ய வகுத்த குருநெறியொன் றுண்டு
> தெய்வச் சிவநெறிச் சன்மார்க்கஞ் சோர்ந்துய்ய
> வையத் துள்ளார்க்கு வகுத்துரைத் தானே"

என்று திருமந்திரத்திற் கூறியபடி சைவநெறியானது உலகத்துள் ளாருய்வதற்கு சிவபெருமானுல் வகுக்கப்பட்ட நெறியாதலின் சைவர்களெல்லாம் விழுமிய சைவசீலத்துக்கு எடுத்துக்காட்டாக உலகில் விளங்கல்வேண்டும். இவ்விதமான குறிக்கோளை மனதில் வைத்து சைவர்கள் ஒழுகுவார்களானுல் அவர்கள் "திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டினெறி" உலகில் விளக்கமுறும்படி செய் கிற பெருந்தகையாளர்கள் ஆவார்கள். அப்படி அவர்கள் ஒழு குவதற்கு சிவபிரான் அருள்புரிவாராக.

திருநாவுக்கரசர் திருவடி வாழ்க.

# பூ

பின் பனிக்காலம் நீங்க, இளவேனிற்காலம் வந்தது. முன்னே செய்த தீயவினையின் பயனாகக் கைப்பொருள் முழுவதையுந் தொலைத்து நல்குரவடைந்தவர், பின்பொருகால் நல்வினைப்பயன் கைகொடுத்துதவ, அப்பொருள் முழுவதையும் புதுவதாகப் பெற்றுச் சிறந்து பொலிவதுபோலப், பொழிலகத்துள்ள தருக்களெல்லாம் முன்னே இலைகளை முற்றுந் தொலைத்து, வெறுமை யடைந்து நின்றவை, பின்னர் செழுந்தளிரரும்பி மலர்ந்து பொலிந்தன.

தேமா மரங்கள் ஆயிரந் தீக்கடவுளர் ஒருங்குகூடித் தங்கள் நாவை நீட்டினாற்போலச் சிவந்த தளிர்களைக் கான்று, கடவுளர் முன்னே அந்தணரேந்திய அடுக்குச் சுடரின் கூட்டம்போல அழகு மலியப் பூத்தன. அசோகமரங்கள் ஒண்டொடிமார் மேனிபோலத் தண்டளிரீன்றன. வேம்புகள் ஞெண்டின் கண்போல அரும்பி விரிந்தன. இருப்பை மரங்கள் காடுறை தெய்வங்கள் ஊர்தற்கு அணிந்துவைத்த தேர்நிரைபோல இளமுறி பொதுளி, வால்வளைக் குலம்போல் மலர்ந்தன. பாதிரி மரங்கள் நீல வானிடை உடுத்திரளிலங்குவன போலப் பசுந்தழையிடையே வெண்மல ரீட்டங்காட்டின. கோங்கமரங்கள் உலக மன்னவன் முடிசூடுந் திருநாளிலே, அவனைப் புடைசூழ்ந்து சேவிக்கும் முடி மன்னர்போலப் பூத்தன. வெள்ளில் ஒள்ளிய குறுமுறி அரும்பி நகைத்தன. எங்கும் புதுமணங் கமழ்ந்தது. சந்தனப்பொதியிற் றமிழுடன் பிறந்த மந்த மாருதமும் வந்துவந்துலாவிற்று.

மாரனுக்கு மணிமுடிசூட்ட வந்ததுபோன்ற இவ்வசந்த காலத்திலே ஒருநாள், உலகமெல்லாந் தொழுகின்ற ஆயிரஞ் சுடர்க்கை அலரிவானவன் குணதிசைக் குன்றினுச்சியை யடைய எட்டிப் பார்க்கின்றான். பூம்பொழிலகத்தும், பொய்கையின் கண்ணும், பொன்விளை செறுவினும் பறவையினங்கள் துயிலுணர்ந் தொலியாநின்றன. தாமரை புரிநெகிழ்ந் தவிழக் குமுதம் வாய்

முடின. கடவுளர் கோட்டத்தும் காவலர் முன்றிலினும் வால் வெண்சங்கமும் காலைமுரசமும் கனைகுரலியம்பின.

அப்பொழுது திருந்திய அறிவுடை அருந்தமிழ்ப் புலவ னொருவன், "வண்டறைந்து தேனார்ந்து வரிக்குயில்க ளிசை பாடத் தண்டென்ற லிடைவிரவித் தனியவரை முனிவுசெய்யும்" ஓர் பொழிலகத்துப் புகுந்தான்.

புகுந்தவன், பசுமையுஞ் செழுமையும் புதுமையும் நிறைந் திருள்படப் பொதுளிய தண்ணடைகளையும் வானிடுவில்லின் தோற்றம்போலப் பன்னிறம் படைத்து மிளிரும் பல்வகை மலர் களையுங் கண்டான். அவற்றினின் றெழுந்தெங்கும் பாவிய நறு மணத்தை முகந்தான். அம்மலர்களினிடையே புகுந்து புகுந்து இனிய தேனையுந் தாதையுந் தேர்ந்துண்டு களிகொண்டு பாடு கின்ற வண்டினங்களின் இன்னிசையையும், தேமா மரங்களின் சினைகளிலிருந்து 'தங்கள் கூரிய அலகினால் இளந்தளிரைக் கோதிக்கொண்டு மாரனைக் கூவுவனபோலப் பாடுகின்ற பூங்குயில் களின் தீங்குரலையுங் கேட்டான். அறுகாற் குறும்பெறிந் தோட் டிக் கடிமலிந்த நறுவிரையொடு விரவி உலாவும் மலையச் சிறுகாற் செல்வன் இடையிடையே தீண்டி வருட மெய்ம்முழுதும் புளகங் கொண் டுற்றி னின்பத்தையு மடைந்தான். அவன் நாவிலே தேனூறித் தித்திக்க உள்ளமும் உடம்பும் பூரித்தன.

சுவையொளி யூறோசை நாற்றமென்னு மைம்பெரும் புலன் களும் ஓரிடத்தே உண்டுங் கண்டு முற்றுங்கேட்டு முயிர்த்துமறி யும் ஆராப் புதுவிருந்தை ஆரத்துய்ப்பிக்கும் இயற்கையின் பெரு நலத்தில் ஈடுபட்டுத் தன்வயமிழந்து தேறி, உள்ளங் குதுகுலிக் கப் பெரியதோ ரிறும்பூதெய்தி நின்றான்.

அவனுக்கு வழியியங்கிய வருத்தம் நீங்கியது. மனம் மகிழ்ச்சியடைந்தது. புதுப்பெலனும் புதுக்கிளர்ச்சியும் புத் துணர்வு முண்டாயின. அம்மம்ம ! இயற்கை நலனினாற்றல் இருந்தவாறென்னே !

தென்றலஞ் செல்வன் சென்று தாக்கச் சினைமென் கொம்ப ரசைதலினாலே செம்மற்பூவைச் சிதறித் தேன்பிலிற்றிப் பவள

வினர் நாப்பண் வெள்ளரும்பு நிரைத்துப் பொலிவுபெறநின்ற தோர் பூந்தரு, முகமலர்ந்து முறுவல் காட்டிப் பூவும் நீருமடி யுறையீய்ந்து வருக வருகவெனக் கைபினலழைக்கும் மெய்யன்பர் போல, அவனை வரவேற்று வழிபாடு புரியா நிற்ப, அவனதன் மென்னிழற் கீழ்ப் பொள்ளெனப் புகுந்தான்.

புகுந்து, ஆண்டுக்கிடந்த மாணிக்கப்பாறை மணித்தவிசின் மேல் இருந்து எல்லாம் வல்ல இறைவனின் அளப்பருமறிவை எண்ணி எண்ணி நெஞ்சம் நெக்குருகா நிற்பவன், இயற்கை மண மும் பேரழகுங் கட்டிளமையுந் தேன்மொழியும் பெற்றுப் பொலிவொடு நிற்கும் பருவம் மலர்ந்த அணங்கினைப்போல அம் மரத்தின் சினையில் அணிமையிற் பூத்த ஓர் நாண் மலரைக் கண் ணுற்றான். கண்ணுற்று அதனைக் கொய்யும் பொருட்டுத் தன் செங்கரத்தை நீட்டி யவன், தண்ணளி மிகுதலாற்போலும் மற் றதனைக் கொய்யாது கையை வாங்கிக்கொண்டு சிந்திப்பானாயி னான்.

"என்ன நறுவிரை! என்ன பேரெழில்! என்ன கட்டிளமை!" என்று எண்ணி எண்ணி விம்மிதமடைந்தவனாய் "நறுமணத்துக் கும் முருகு பெயர்; கட்டிளமைக்கும் முருகுபெயர்; பேரழகுக் கும் முருகுபெயர்; ஆகவே இயற்கையா னமைந்த தெய்வ மண முங், கட்புலன் கதுவாப் பேரழகும் மூவாவிளமையுமுடைமை யானன்றோ என்னையாண்ட பன்னிரு தடந்தோட் புண்ணிய முதல்வற்கும் முருகன் என்னுந் திருப்பெயர் வருவதாயிற்று" என்று சிந்தியா நிற்புழி, அத்திருமலரவனை வாய்விட்டுக் கூவி, "புலவ! நீ எண்ணியது ஒருவாறுக்கும் அது கேள்" என்று கூறுவான் றொடங்கியது.

" பொருணூல் வல்ல புலவ ! கேண்மதி
மாயிரு ஞாலத்து மன்னுயிர் விழையும்
பூவினிற் றோன்றிப் பொலிந்திடு நாற்றத்
தின்னியல் நாடி யிசைத்திடி னதுவே
மன்னுயிர்க் குயிராய் மலர்விழி மணியாய்த்
துன்னிய வொளியாய்த் துலங்கிய முருகன்

தன்னையொப் பாமெனச் சாற்றுவர் புலவர்
யாங்ஙன மோவெனி னுங்கது கூறுவல்

மணமே, இல்லது வாரா துள்ளது வருமெனச்
சொல்லிய மெய்ந்நூற் றுணிவினைக் காட்டி
வித்தினுட் கருவாய் மேவிய ஞான்றினும்
முளையா யிலையாய் கிளையா யரும்பி
மொட்டாய்க் கண்ணியாய் முளைத்திடு போழ்தினும்
காணு துள்ளே கரந்திருந் ததுவே
கதிரவ னொளிபட விரிதரு போழ்தில்
கதுமெனப் பூவினில் வெளியாய் வருமே.

முருகனும், உயிரினுட் கருவாய் புலனினில் முளைத்துக்
கல்வி கேள்வியி லரும்பிக் கண்ணியாய்ச்
சிந்தை யறிவினிற் றிகழுமொட் டாகி
வந்துழி யுள்ளே மறைந்திருந் தொருகால்
அருளெனும் ஞாயிற் றவிரொளி தீண்டக்
கதுமென வறிவினில் வெளியா குவனே

அதுவே, கூறுபன் மலரினும் வேறுவே றியல்புடன்
நண்ணும் மற்றவனு மெண்ணில்பல் கோடி
உயிரினிற் பலவாய் நிலவுவ னன்றே

அதுவே, விரிதரு மலரிடைப் பிரிவற நிற்கும்

அவனும், விரிதரு முயிரிடைப் பிரிவற நிற்பன்

அதுவே, பூவினின் வேறெனப் புகலவும் படுமே

அவனும், உயிரினின் வேறென வோதவும் படுவன்

அதுவே, பூவினி லருவாய்ப் பொருந்திடு மவனும்
உயிரினி னருவா யொன்றி நிற்பவனே
கட்புலன் கதுவாக காட்சித் தாயினும்
மாசறு முயிர்ப்பின் மருவுவ ததுவே
ஆசறு முணர்வி னறிபவ னவனே
உயிர்ப்பி னுட்கலந் துள்ளகங் குளிர
இன்பினை யீகுவ ததுவே யவனே
உணர்வி னுட்கலந் துயிரகங் குளிர
வழியாப் பேரின்ப பருளுவ னதனைப்

'பூவி னூற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை' யென்
ேறுதிய வருண்மொழி யுணர்ந்திடு மாதலின்
நற்கதி யுதவும் மெய்ப்பொருள் முருகனை
ஒக்குமா யினுமவன் றிப்பிய வடிவிற்
றெய்வத் திருமணச் சீரினுக் கதுதான்
மேருவு மணுவு மாமென விளம்ப "

அதனைக் கேட்ட கவிஞன் சிந்தனை மிக்குச் சிரித்துக்கொண் டிருப்புழி மீட்டுமந் நறும்பூ விளம்புவான் றொடங்கிற்று.

" கண்டினு மினிய வொண்டமிழ்க் கவிஞ!
வளைகட லுலகினின் விழுமிய தியாதெனின்
அழகென வறிந்தோ ரறைந்திசி னோரே
மலையினிற் கடலினில் வானினில் நெருப்பினில்
அலைமறித் தொழுகு மொலிகெழு நதியில்
விலைமதிப் பறியா மேதகு மணியில்
திருவளர் தாமரை வாவியி னுகுவளர்
செந்நெல் வயலிற் கன்னலிற் கமுகில்
பொன்னிய விளநீர் துன்னிய தென்னையில்
வன்னப் பாசடை மலிந்திடு கதலியில்
காவினிற் பூவினிற் கனியினிற் றளிரினில்
ஓவிய ரெழுது முருவினு வனத்தில்
மாடமா ளிகையிற் கூடகோ புரத்தில்
நீரினு நிலத்தினுஞ் சேருயிர்த் திறத்தில்
பறவையில் விலங்கில் நிறைமணப் பந்தரில்
ஆடையி லணியி லாணினிற் பெண்ணில்
கோயிலில் விழவிற் குலவுபல் பொருளின்
மன்னிவீற் றிருந்தே இன்னுயிர்க் குழுவைத்
தன்னிடத் தன்பு தழைக்கச் செய்வதும்
அன்பினு லவைதழைத் தன்பா விழுப்பதும்
ஐம்பொறி கட்கு மின்பினைத் தருவதும்
விஞ்சிய துயரை விலக்கி வைப்பதும்

அகத்தையும் முகத்தையும் மலர்த்தி யிதத்தினில்
வாழ்க்கையின் பயனை யீவதும் பார்க்கில்
அழகென யாவரு மறிந்த வாறே
மாயையிற் றோன்றிய வரம்பில்பல் பொருட்கண்
மேவிய வழகின் விலக்கரு மாற்றல்
ஒழியா விரும்பூ துதவுவ தாயின்
மாயை மூன்றுங் கடந்தவை வேலோன்
அருளினி லெடுக்கு மற்புத வடிவின்
யாண்டு நிறைந்த காண்டகு பேரெழில்
ஆற்றலை யுரைக்க மாற்றமொன் றுண்டோ
ஆயிரங் கோடி மன்மத ரழகொருங்கு
மேயின தெனினும் மெய்ப்பொருள் கொண்ட
மேதகு முருவிற் பாததா மரைக்கும்
போதா தென்றும் பொருவுயர் விறந்த
அண்ணலார் மேனி யடிமுதன் முடிவரை
நண்ணிய பேரெழி னலத்தினை நாடி
எண்ணிலாக் கால மெத்திற நோக்கினுங்
கண்ணினுற் கருத்தா லடங்கா தென்றும்
சீர்க்கும ரேசன் திருப்பெரு வடிவில்
ஏர்க்குறு மிளமையு மெழிலு மெல்லாம்
ஆர்க்குள வுலகி னற்புதத் தோடும்
பார்க்கினுந் தெவிட்டில பார்வை யென்றும்
எண்டரு விழிகள் யாக்கையிற் படைத்தோர்
கண்டிட வூழியும் கடக்கு மென்றும்
திருகிய வெகுளி தீர்த்தன செருந்தொழில்
அருகிய புளக மானது விழிநீர்
பெருகிய தன்பு பிறந்தமை தெனன்பும்
உருகிய துலைமெழு காக வென்றும்
வெல்வது கருதி வெஞ்சமர் புக்க
தொல்வலிச் சூரன் சொல்லியமு தானெனின்
அன்ப ராயினே ரவ்வெழில் கண்டுழி
என்படு வாரென வியம்புத லரிதே, அதனால்

மன்னிய விருண்மல மயக்கினிற் றிளைக்கும்
இன்னுயிர் யாவையுந் தன்னிடத் தென்றும்
நீங்காப் பேரன் போங்கிடச் செய்வதும்
அன்புமுன் னீடா யாங்கவை தம்மைத்
தன்பா விழுத்துச் சார்ந்திடு பிறவித்
துன்பினை வேரொடுந் துடைப்பது மைம்பெரும்
பொறியும் புலனும் புந்தியும் மயக்க
வறிவுங் காணு வருட்பே ரின்ப
வேலையுட் டிளைக்க விடுவதும் மூல
முதற்பொருள் கொள்ளும் மருட்பெரு வடிவின்
எழிற்பொலி வென்பதை மயக்கற வுணர்ந்தே
வளமலி யழகெனும் பொருடரு கின்ற
முருகெனு நாமம் முதல்வனுக் கிட்டனர்
சிவநெறிச் செழுந்தமிழ்ச் சீரி யோரென. ”

அதுகேட்ட நற்றமிழ் நாவலோன் நெஞ்சுருக, நீர்மல்க, அஞ்சலி கூப்பி யமைந்து நிற்புழி மீட்டும் அப்பொலம்பூ விளம்புதன்மேயது.

"மூத்தமிழ் வல்ல வித்தக, கேட்டி
விரிகட லுலகிற் பொருணிலை யாவும்
காலையி னொன்றாய்க் கடும்பக லொன்றாய்
மாலையி னொன்றாய் மாய்வது காண்டவின்
நீர்மேற் குமிழியி னின்றுழி நில்லா
தழிதன் மாலைய திளமையென் றுணருதி
யாங்ஙன மோவெனி னுங்கது கூறுவல்
கண்ணினைக் கவருங் காம ரிளந்தளிர்
வண்ண நாடொறும் மாறிவே றாகிப்
பச்சிலை மாறிப் பழுப்பாய்ச் சருகாய்
மண்மிசை யுதிர்ந்து மடிதலுங்காண்மே, அதா அன்று
வாயிதழ் விரித்து வண்டு தேனுணக்
காலையின் மலர்ந்த கடிகமழ் பொலம்பூ
மாலையின் வாடி மடிதலுங் காண்டும், அதா அன்று
நீல மேனி நெடுமால் போலக்

கோலங் காட்டிக் குளிர்ந்திடு மிளம்புல்
சாரம் வற்றித் தரைமிசைச் சாய்ந்து
வைக்கோ லாகி மடிதலுங் காண்டும், அதாஅன்று
பொன்னிற மேனியும் புதுமதி முகமும்
வன்னத் தாமரை மாமலர் வாயும்
தேனும் பாலும் யாழுங் குழலு
மான வின்சுவை மழலையஞ் சொல்லும்
காந்தளங் கையும் மாந்தளிர்ப் பாதமும்
பொருந்திய குழவி திரிந்துவெவ் வேறாய்
பாலனுங் குமரனுந் தருண னு மாகிக்
குயிலெனுங் குஞ்சி கொக்கென மாற
முத்தன வெண்ணகை வித்தென வுதிர
அரவுரி போலத் திரையுடல் பாவத்
தட்டுற வாய்மொழி முட்டினி னிமிர்ந்து
கிழவனாய்க் கழிதலு முலகிய னிலையே, அதனாற்
கனவும் மின்னுங் கானலும் பொய்யு
மெனவே கழியு மிளமை யாயினும்
கால வெல்லையைக் கடந்து நின்ற
மூலப் பொருளில் முளைத்திடு மிளமை
என்று மழியா வியல்பினை யுடைத்தே
இளமையி னிளமை யெய்துவ ததுவே, அதுதான்
ஆதியும் நடுவு மந்தமு மென்ன
வோதிய மூன்று மொழிந்துநின் றதுவே
அப்பெரும் பொருளி னமைந்திடு மிளமையின்
கோடியிற் கோடி கூற்றிலொ ரணுவே
இப்புவிப் பொருளி னியைந்துள தறிகுதி
இப்புவிப் பொருளி னியைந்துநின் றொழியா
மெய்ப்பொருண் மேன்மை விளக்குதல் கண்டே
என்றும் மூவா விளமையை யுணர்த்தும்
முருகென வோது மொருதிரு நாமம்
பச்சை மாமயிற் பரமனுக் கிட்டன
ரிச்சையி னிருந்தமி ழியலுணர்ந் தோரெனக்" கூற

அதனைச் செவி மடுத்த தண்டமிழ்ப் புலவனிஃதற்புத மற்புதமெனத் தலையசைத் தக நெகிழ முகமலர்ந் திருந்தானாக முருகனை யுணரும் மெய்யடியார் கண்களினின்றும் இன்பத்துளி விழுவதுபோல வந்நாண்மலரினின்றும் ஓர் செந்நிறத்தேன்றுளி வீழ்ந்தது.

அதுகண்ட பாவலன் சுட்டு விரலை மூக்கிலே சேர்த்து எருத்தத்தை யோர்பாற் கோட்டிக் கண்ணிமையாது சிறிதுபோழ்து சிந்தித்துப் பின் கூறுவான்.

தேனே! தேனே! மானவேன் முருகன்
தன்னையொப் பானெனச் சாற்றுவல் கேண்மதி
தூயமா மலரிடைத் தோன்றுவை நீயே
மேயநல் லுயிரினில் விளங்குவ னவனே
இனிப்பினை யுடையை நீயே யவனும்
தனிப்பெரு மினிப்பினைத் தானுடை யவனே
உண்டவர்க் கின்ப முதவுவை நீயே
உணர்ந்தவர்க் கின்ப முதவுவ னவனே
உறுபிணி நீக்குவை நீயே யவனே
பிறவி யென்னும் பெரும்பிணி தன்னை
வேரொடும் வீட்டுவ னவனே யாதலின்
அரும்பெறற் றேனெனப் பெரும்பொருள் பயக்கும்
முருகென ஓது மொருதிரு நாமம்
பொருந்துவ தறிந்து புகன்றார்
அருந்தமிழ் வல்ல வறிவுடை யோர்

என, அதுகேட்ட நறுமலர் "நன்று நன்று" என்று தலையசைத்து நறுமணமும், பேரெழிலும், கட்டிளமையும், கழிபேரினிப்பும் ஆகிய இவையெல்லாம் குன்றெறி நெடுவேற் குமர நாயகனி லொன்றிய கடவுட்டன்மையை யுரைக்கின்ற காணென, அஃதெங்ஙனமோ வென வொண்டமிழ்க் கிழவன் வினவ மற்றது கூறும்.

பூமண வுவமையிற் பொருந்திய வருவமும்
உடலுயிர் போல வொன்றாய் நிற்றலும்

விழியொளி போல வேறாய் நிற்றலும்
உயிரறி வொளியென வுடனாய் நிற்றலும்
உணர்ச்சியிற் படுதலும் ஓதிய விளமையில்
மூலமு நடுவு முடிவு மின்றிக்
காலங் கடந்து நிற்குங் காட்சியும்
அழகினி லன்புண் டாக்கலு மாக்கி
வளமுறு முயிரை வசித்துக் கோடலும்
இளமையு மழகு மியைந்த வாற்றால்
அருளுரு வெய்தலு மருவுரு வுடைமையும்
தேனினி லறிவிற் றிகழ்ந்து நின்றே
இனிப்பின் புதவி மலப்பிணி யறுத்தலும்
ஆகிய கடவுட் டன்மை யனைத்தும்
பெறப்பட நின்ற குறிப்பினை யுணர்ந்தே
தேனே யழகே யிளமை நாற்றம்
ஆறு வினிமையென் றரும்பொருள் பயக்கும்
முருகென வோது மொருதிருப் பெயரை
இறைவனுக் கிட்டன ரென்ப
துறைமலி செழுந்தமி ழுணர்ந்தது யவர்.

என, அதுகேட்ட செந்தமிழ்ச் செல்வன், "அறிந்தேன் அறிந்தேன். கந்தபுராணத்திலே கச்சியப்ப சிவாசாரியார், சரவணப் பூந்தடத்தில் அறுமுகப்பெருமா னருட்டிருமேனி கொண்டெழுந்தமை கூறுமிடத்து,

'அருவமு முருவுமாகி யனாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்றசோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்களாறுங் கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே
யொருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலகமுய்ய'

எனக் கூறிய திருப்பாட்டின பொருள் அறிந்தேன் அறிந்தேன்" என்று இருகையும் உயர்த்திச் சிரசிலே குவித்து அத்தெய்வத் திருமலருக்கு மெய்வணக்கஞ் செய்து தன்னில்லம் நோக்கினன்.

---

# தம்பிரான்றோழர்

[இ. மு. சுப்பிரமணிய பிள்ளை]

அப்பொழுது வன்மீகநாதர் அவ்வூராருக்கு "நாம் அழைக்க நம்மிடத்தில் மிகுந்த பேரன்போடும் நம்பியாரூரன் வாரா நின்றான், அவனை நீவிர் மகிழ்ந்து எதிர் கொள்வீர்" என்றருள் செய்தார். அதுகேட்ட அவ்வூராரும் "எம்பிரான் திருவருள் இதுவானல், அவ்வாறே செய்வோம்" என்று யாவரும் கூடி எதிர் கொண்டழைக்க முன் வந்தனர். அவ்வூரெங்கணும் மாளிகைகளிலும், மண்டபங்களிலும் பெருங்கொடிகள் நாட்டப்பட்டன. நெடுந்தோரணங்கள் கட்டப்பட்டன கமுகாலும் கதலியாலும் பந்தல்கள் அணிசெயப் பெற்றன. உயர் வாயில்தோறும் மணி விளக்குகள் ஏற்றப்பெற்றன. தெருக்களிலெல்லாம்பூமாலைகளால் குளிர்ந்த பந்தல்கள் போடப்பட்டன. புழுதியடங்கும்படி குளிர்ந்த நீர் தெளிக்கப்பட்டது. அப்போது அத்திருவாரூர் பொன் நகரோ வெனப் பொலி வெய்தியது, இவ்வாறு அணிபெறச் செய்து, அவ்வூரார் அவ்வூருக்கு வெளியே வந்து பல்லிய முழங்க நம்பியாரூரரே எதிர்கொண்டு நின்றனர். வன்மீகநாதர்மேற் பதிந்த பேரன்போடும் வன்றொண்டர் வந்தெதிர்ந்தார். அவரைக் கண்டவுடனே, அவ்வூரவர் படிமிசை முடிபட அவரடி பணிந்தனர். அவரை நோக்கி நம்பியாரூரர், அஞ்சலி கூப்பிவந்து, சிந்தை களிப்புற வீதியூடு செல்வார், அத்திருத் தொண்டர் தம்மை நோக்கி, "வானவர் தானவர்க் கெல்லாம் அரையன், அல்லல் பெரிதும் அறுப்பான். புற்றெடுத்திட்டிடங் கொண்ட பொருளான். பண்டு அங்கு இலங்கையர் கோனைப் பருவரைக் கீழடர்த்திட்ட அண்டன் இருப்பதும் ஆரூர், அவர் எம்மையும் ஆள்வரோ? கேளீர்! செல்வம் பெரிதும் உகப்பன். அலந்தார்கள் ஒருத்தருக்கும் உதவியே னல்லேன். உற்றவருக்கும் துணையல்லேன். கல்லில் வலிய மனத்தேன். ஆசை பல அறுக்கில்லேன். ஆரையும் இகழ்ந்துரை செய்வேன் நமர் பிறர் என்பதறியேன். நான் கண்டதே கண்டு வாழ்வேன். குமானும்

திருமாலும், பிரமனும், ஏனைத் தேவருங்கூடி வணங்கும் எந்தை யிருப்பதும் ஆரூர், அவர் எம்மையும் ஆள்வரோ? கேளீர்!" என்று சிந்தை செய்து வினவிச் சந்த இசைப்பதிகங்கள் பாடித் தம் பெருமான் பூங்கோயிலின் திருவாயிலைச் சார்ந்தார். சார்ந்தவர் வானுற ஓங்கிய வாயிலை ஐந்துறுப்பும் மண்ணுற வணங்கி உட்புகுந்து, தேவாசிரிய மண்டபத்தைத் தொழுது, உடலையும் உயிரையும் உருக்கும் பேரன்பால், செங்கையை உச்சியிற்குவித்து, மூலட்டானத்தைச் சூழ்ந்திருக்கும் திருமாளிகை வாயிலினுட் புகுந்து, பங்கயத்தாள் பணிந்தேத்த அவனுக்கு அருள் புரிந்த அண்ணலை மண்மிசை வீழ்ந்திறைஞ்சி, உடம்பாற் பெறுதற்குரிய நன்மையை முழுதும் பெற்றார். பெற்றவர் வண் தமிழ் மாலைபாடி நின்றார். அப்போது புற்றிடங்கொள் மன்னவனாருளாலே, விண்ணிலோர் வாக்கு "உனக்கு நம்மைத் தோழமையாகத் தந்தனம் நாம் முன்பு தடுத்தாட் கொண்டபோது, நீ கொண்ட மணக்கோலம் என்றும் புனைந்து நின் வேட்கைதீர மண்மேல் விளையாடுவாயாக," என்று ஆரூரர் கேட்க எழுந்தது. அதுகேட்ட வன்றொண்டர், "ஏழையேனை ஆட்கொள்ள வந்த மறையவனே! ஆரூரமர்ந்த அருமணியே! மங்கை பங்கா! நாயினேனையும் ஓர் பொருளாகக் கொண்டது நின் பெருங்கருணை யன்றே" என்று பல முறை பணிந்து, மனமகிழ்ந்து சென்று, வீதிவிடங்கப் பெருமான் முன்பு தொழுது துதித்துப் பெருவாழ் வடைந்து, திருமாளிகையை வலம்செய்து வெளிப்போந்தார். அன்று முதல் அடியார்களெல்லாரும் அவரைத் 'தம்பிரான் றோழர்' என்றார். தம்பிரான் றோழரும் அணிபல புனைந்து, சாந்தம் பூசி, பனிமலர் மாலையணிந்து, திருமணக் கோலத்தோடும் சீரிய தவவேந்தரேபோல எம்பெருமானைப் பாடி மகிழ்ந்திருந்தார். இதற்கு முன், திருக்கயிலையிலே எம்பிராட்டிக்குச் சேடிமாருள் ஒருத்தியாகிய கமலினியார், அவ்வூரில் உருத்திர கணிகைமாராம் பதியிலார் குலத்தில் தோன்றி, பரவையார் என்னும் பெயரோடும் வளர்வாராயினர். அவ்வம்மையார் பேரழகுடையார். சிவபெருமான் திருவடிக்கே பேரன்புடையார். நாடோறும் தம்பெருமான் கோவில் சென்று வழிபடுவதே ஒழுக்காறுக் கொண்டவர். சேடிமார் பலர் தம்மைச்

சூழ, ஒரு நாள் அவர் பூங்கோவிலமர்ந்தார்தம் புனைகழல் வணங்கப் போதும் போதில், தம்பிரான் றோழனரும் தலைவரைத் தொழுது செல்வார். அவ்வம்மையாரைக் கண்டார். கண்டவர் "ஈது பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ! அற்புதமோ சிவனருளோ" என்றதிசயித்து நின்றார். அவ்வாறு, தம் முன் பரிசனங்கள் சூழநின்ற ஆளுடை நம்பியை, அண்டர்பிரான் திருவருளால் அயலறியார் மனம் விரும்ப, பண்டைவிதி கடைகூட்டப் பரவையாரும் கண்டார். உடனே, அவ்வம்மையார் நம்பியாரூரரிடம் பேரன்புடையராய் "இவர் என்மனம் திரித்தார். எம்பெருமானுடைய மெய்யருள் பெற்றுடையவரோ" என நினைந்து சற்று நின்று, பின் சிவபெருமான் திருவருளால், அவர் திருவடி தொழும் அன்பே கைக்கொண்டு பொற்கோவில் போய்ப் புகுந்தார். அது கண்ட வன்றொண்டர், "இப்பெண் யார்? என வினவ, முன்னின்றார், "அவர் பரவையார்" என்று அவ்வம்மையாரைப் பற்றிய விவரங்களை யெல்லாம் இனி தெடுத்துரைத்தார். அது கேட்ட தம்பிரான்றோழர் அவ்வம்மையாரை மணக்கவேண்டுமென்ற பேரவாவேடும், 'என் எண்ணத்தை முட்டின்றி முடித்துத் தரும்படி வேண்டுதற்கு எனையாட் கொண்டருளியவர்பால் நண்ணுவேன், 'என உண்மகிழ்ந்து தேவர் பிரான்கோவில் புகுந்தார்.

அப்போது பரவையார், தம்பிரான் கழல் பணிந்து தம் வீடு நோக்கிப் புறப்பட்டார். ஆரூரர், தலைவனார்முன் தம் குறை முடிப்பான் வேண்டி நின்றார். பின் அவர்தாம் மணக்கவிரும்பிய பரவையாரைத் தேடி ஆயிரங் கால்களாலாகிய தேவாசிரியமண்டபத்தை யடைந்தார். அப்போது ஞாயிறு மேல்கடல் புகுந்தனனாக மாலைப்போது வந்திறுத்தது.

பின், இருளும் சூழ்ந்தது. சிறிது போதானபின், வெண்ணிலவும் உதித்தது. சுந்தரனார் தம்மையாட்கொண்ட ஐயர்தம் திருவருளை நினைந்திருந்தார்.

பரவையாரும் "ஆரூரமர்ந்த பெம்மானே! அடியேன் அயராமே நம்பியாரூரரைக் கணவராகத் தந்தருளும்" என வேண்டியிருந்தார். இவ்வாறு தம் திருவருள் விரும்பிப்பணிந்திருக்கும் வன்

ரிருவரையும், பரவையாரையும் படிமேல் வர, முன்பு ஆணை தந்தருளிய தழல்நிறக் கடவுள் அவ்வூர் அடியவர் யாவருக்கும் "நீர் இவர் மன்றலைச் செய்யும்" என்றாணை தந்தார். தந்தவர் புகழ்மன்னும் நாவலர்கோன் மனமகிழ "உனக்குப் பரவையைத் தந்தோம்; இவ்விவரமனைத்தும் நம் அடியார் அறியும் படியே உரை செய்தனம்" என்றுரைத்து, பரவையாருக்கும் "ஆரூரன் பால் மணம் அண்ணிது" எனப் புகன்றருளினர்.

பொழுது புலர்ந்தது; கதிரவன் எழுந்தான். அப்போது அடியார் பலரும் கூடி, வேண்டுவோர் வேண்டுவதே ஈந்தருளும் அருட்கடலாகிய புற்றிடங் கொண்டார் பேரருளைத் தொழுது, திருநாவலர் கோனும், பரவையம்மையாரும் மனமகிழ முறைப் படி வதுவை நிகழச் செய்தார். தம்பிரான்றோழர் தம்மையாளு டைய பிரான் தளிரடியே சிந்தித்துத் திருப்பதிகம் பல பாடிப் பரவையார் இல்லத்தே இனிது வாழ்ந்திருந்தார்.

ஒரு நாள், தம்பிரான்றோழர், தம்மைப் பலபட அழகுறச் செய்து கொண்டு தம்பெருமானைத் தொழுவதற்காகப் பூங்கோ விலை நோக்கிப் புறப்பட்டுத் தெருவிலே வந்தார். பலர் அவரு டைய பெருமைகளைப் பலவாறு புகழ்ந்து சூழ்ந்து வந்தனர். பல வரிசைகளோடும் அவர் கோவிலில் நுழைந்தார். அக்கோவிலி லிருந்த தேவாசிரிய மண்டபத்திலே, அடியார் அளவிலார் கூடி யிருக்கக்கண்டு அவரைத் தொழுது, அவர்களோடு சேராமல் ஒருவாறு ஒதுங்கிச் சென்றார். அத்தேவாசிரிய மண்டபத்திலே கூடியிருந்த அடியாருள் ஒருவர் விறன்மிண்ட நாயனர். இவர் மலைநாட்டைச் சேர்ந்த செங்குன்றூர் என்னும் பதியிலே, வேளாண் குலத்திலே பிறந்து சிவனார் திருவடிக்கே அன்புபூண்டு விளங்கிவரும் நாளையிலே பதிகள் தோறும் சென்று பரமர்தாளை வழிபடுகிறதற்காக எழுந்த பேரன்புடன் மலைநாடு கடந்து சோழ வளநாடு புகுந்தார். பல பதிகளும் சென்று பணிந்து வரும் அப் பெரியார், திருவாரூரை யடைந்து, தம் பெருமான் கழல் போற் றித் தேவாசிரிய மண்டபத்தில் இருந்தனர். அவர் அடியார்களைச் சிவனெனவே வழிபடும் பேரன்புடையாராதலால், நம் வன்றொண்

டர் அடியார்களை வணங்காது சென்றமையைக்கண்டு, "சிவனார் அடியார் திருக்கூட்டம் பேணு தேகும் நம்பியாரூரன், அவ்வடியார்களுக்குப் புறகு அவனை வலிய ஆட்கொண்ட பூணாரவம் புனைந்தார்க்கும் புறகு" என்றுரைத்தார். அப்பெரியார் சொற் கேட்டுத் தம்பிரான்றோழர், தாம் செய்த தவறு கருதி உளம் நொந்து, பின் "இவர்க்கு யான் அடியேனாகப் பண்ணும் நாள் எந் நாள்" என் றுபரமர் தாள் பரவிக்கூப்பிய கையினராய் உட் சென்றார். அப்பொழுது சிவபெருமான் அவருக்குக் காட்சி கொடுத்தருளினார். நம்பியாரூரர் பெருமான் திருவடிகளைப் பல வாறு புகழ்ந்து நின்றார். அதுகண்டு கறைமிடற்றண்ணல், தம் அன்பர் வேண்டுகைக் கிரங்கி, அவரை நோக்கி, "எம்மடியார் பெருமையில் தம்மைத் தாமே ஒப்பார். எம்மைப் பேணலால், எம்திருவருள் பெற்றார் அவர்கள் அன்பினால் இன்பம் ஆர்வார், அவர்களை நீ அடைவாயாக" என்றருளிச் செய்தார். அப்போது நம்பியாரூரர், "நான் இன்று நன்னெறி யடைந்தேன்" என்று பணிந்தார். சிவபெருமானார் "நீ அவர்களைப் பணிந்து குற்ற மில்லாத வாய்மையாலே சொன்மாலை பாடு" என் றாணை தந்தார். தம்மையாளுடைய நாதன் இவ்வாறு அருளிச்செயய் சுந்தரனார் அவரை நோக்கி, "எம் பெருமானே, அடியார்க ளுடைய பெருமையை இன்னவாறு, இன்ன பண்பு, என்று அறிந்து எவ்வாறு போற்றுகேன் ? யானோ சிறியேன். ஆத லின், பாமாலை பாடும் பரிசு எனக்கு அருள் செய்யும்" என்று வேண்டினார். அதுகேட்ட பெருமான், உலகெல்லாம் அல்லல் தீர்ந்து உய்யும்படிக்காகத் தமது திருவாக்கால் "தில்லை வாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்று அடி எடுத் துத் தந்தருளி மறைந்தார். உடனே, நாவலர் பெருமான் அடிய வர்பாற் சார்வதற்கு நினைந்து புறப்பட்டுத் திருக்கூட்டத்தைத் தூரத்தே பலமுறை அன்பால் பணிந்தெழுந்து, அருகே சென்று நின்று, அழியா வீரத்தையுடைய அவ்வடியார்க ளெல்லார்க்கும் தனித்தனி வேறு அடியேன் என்று, அன்போடு திருத்தொண் டத் தொகைப் பதிகத்தைப் பாடிப் பணிந்து, அடியார்களெல் லாரும் பேருவகையெய்த அத் திருக்கூட்டத்தின் நடுவணைந்

தார். அது கண்ட விறன்மிண்ட நாயனர், "இவ்வன்றொண்டரு டைய மனம் அடியாரிடத்திலே பதிந்திருக்கின்றது" என்றரு ளிச் செய்து மிக மகிழ்ந்தார்.

இவ்வாறு, திருத்தொண்டத் தொகை அருளிச் செய்து, நம்பியாரூரர் அத்திருவாரூரில் எழுந்தருளியிருந்தார். அவ்வூர்க் கருகே குண்டையூர் என்பது ஒரு சிற்றூர். அதில் ஒரு கிழவ ரிருந்தார். அக்குண்டையூர்க் கிழவர், தாளாண்மை, உழவு தொழி லால் வளரும் வளத்தில் தலை சிறந்த வேளாளர். அப்பெரியார் நம் தம்பிரான் தோழரிடத்துப் பேரன்பு பூண்டு, ஒவ்வொரு நாளும் அவர் தாளை வணங்கி ஒழுகுவாரானர். அவர் செந்நெல் லும், செழும்பருப்பும், இனிய காய் கறிகளும் நம் வன்றொண்ட ருக்கு அமுதாகும்படி, நாடோறும் வழுவாமல், பன்னெடுநாள் பரவையார் மாளிகைக்கு அனுப்பி வந்தார். ஓர் கால் வானம் வழங் காமையால், மாநிலத்து வளம் சுருங்கிற்று. அதனல் ஓர் நாள் நெல் அனுப்ப இயலாது, அக்கிழவர் மனம் மயங்கி வருந்தினர். அவர்தாம் உண்ணாதிப் பெருந்துயரெய்தித் "தம்பிரான் றோழர் எழுந்தருளி யிருக்கும் திருவாரூர் மாளிகைக்கு இன்று நெல் அனுப்பக் குறையாகின்றது" என நினைந்து அன்றிரவு துயில் கொண்டார். அப்போது அடியார்க் கெளியராகிய சிவபெருமான் அவர் முன் தோன்றியருளி, "நம் ஆரூரனுக்கு அனுப்புவதற்காக உன்னிடம் நெல்லைத் தந்தோம்" என்று கூறி மறைந்து நிதிக் கோமானை ஏவ, அவ்வூர் முழுதும் நெல்மலை போலக் குவிந்து விளங்கியது. அன்றிரவு புலரும்போது, நம்கிழவனர், துயிலுணர்ந் தெழுந்து, நெல்மலை கண்டதிசயித்துத் தம் பெருமானையும், அவர் தம் தோழரையும் தொழுது நின்றார். பின், "இந்நெல் மலை யை யாவரால் எடுக்கலாகும்? ஆகலின், இச்செயலை நாவலூர் மன்னனர்க்குச் சொல்லயான் போவேன்" என்று நடந்தார். இச் செய்தியைச் சிவபெருமான் நம்பியாரூரர்க்குச் சொல்லி அவரை எதிர் கொள்ள ஏவினர். அதனல் நாவலூரார் எதிர் சென்றார். தம் எதிரேவரும் தொண்டனரைக் கண்டு, குண்டையூர்க்கிழவர், அவர் திருவடி தொழுது வீழ்ந்தெழுந்து நின்று, "அடியேன பண்டெலாம் செய்த பணி இன்று முட்டத் தம் பெருமானர்

நெல் மலை யளித்தார். அது மனிதரால் எடுக்கும் தன்மைய தன்று. அப்பெருமானுர் இந்நெல் மலை தந்ததின் நோக்கம், இப் பணியை யான் இனிச் செய்யாது தடுத்தற்குப் போலும்" என மொழிந்தார். அதுகேட்ட நம்பியாரூரர், "உமக்கு எம்பெரு மானே நெல்லளித்தார்" என்று இன்சொற் கூறித் தாமும் குண் டையூருக்கு வந்து சேர்ந்தார். அங்கே குவிந்து கிடந்த நென் மலையை நம்பியாரூரர் கண்டு மிகவும் அதிசயித்து, "இம் மலையை நம்பரவை இல்லத்துக்கு எடுத்துப்போக இது தந்தவரே ஆளும் தரிலன்றி, நம்மால் ஒண்ணுது" என்று துணிந்து, அவ்வூருக்கரு கிலிருந்த திருக்கோளிலி என்ற ஊரை அடைந்து, கோவிலுக்குப் போய்,

'நீள நினைந்தடியேன் உமை நித்தலும் கைதொழுவேன்
வாளன கண்மடவாள் அவள் வாடி வருந்தாமே
கோளிலி எம்பெருமான் குண்டையூர்ச் சிலநெல்லுப் பெற்றேன்
ஆளிலை யெம்பெருமான் அவை அட்டித்தரப் பணியே'

எம்பெருமானே உம்முடைய உடலில் பாதியை உமையம் மாளுக்குத் தந்தீர். உம்முடைய சடையிலே கங்கைத்தாயை வைத்திருக்கின்றீர். ஆகையினுலே, நீரும் பெண்களுடைய வருத் தத்தை அறிவீரல்லவா? பரவை பசிவருத்தத்தால் வாடுகின்றுள். அதனை நீரும் அறிதிரன்றே. ஆதலின் இரக்கமதாய் அடியே னுக்கு அவை இட்டுத்தரப் பணியே" என்று பேரன்போடும் பணிந்துபாடினுர். அப்பொழுது "இன்றிரவில் பரவை மனையளவே யன்றித் திருவாரூர்நிறைய நெல்லை நம் பூதங்கள் குவிப்பன" என விண்ணில் ஓர் ஒலி தோன்றிற்று. அதுகேட்ட நம்பியாரூரர் தரையின்மிசை விழுந்தெழுந்து திருவருளைப்போற்றிப் பிற பதிக ளையுந் தொழுதுபோய்த் திருவாரூரடைந்தார். அங்கே பூங்கோவி லிலே புகுந்து ,தம்மைத் தடுத்தாண்ட பெருமானைப் பணிந்து, வெளிவந்து, பரவையார் வாழும் சிறந்த மாளிகைக்குச் சென்றுர். நிகழ்ந்த செய்திகளைப் பரவையார் மனமகிழும்படி கூறி, அவர் இனிதிருப்ப, அற்றைநாள் இரவில், சிவ பெருமான் ஏவலினுலே பலபூதங்கள் எழுந்து, குண்டையூரிலிருந்த நென் மலையைக்

கொண்டுவந்து, பரவையார் மாளிகையை நிறைவித்ததோடு, திரு வாரூர் அடங்கலும் நென்மலையாக்கிக் கண்டவர்கள் எல்லோரும் அற்புதமெய்தும் காட்சி பெற அமைத்தன. அதிகாலையில் திருவா ரூர் வாழ்வார் யாவரும், அதுகண்டு அதிசயித்து, "இந் நென்மலை இவ்வுலகு வாழவரும் நம்பி, பரவையார்க்குக் கொடுத்தது போலும்" என்று பேசினர். வெளியேறிச் சென்றார் பலர் போவ தற்குரிய வழிகளெல்லாம் தடைப்பட்டிருப்பதைக் கண்டு, மீண் டும் தம் வீடு புகுந்து, "இத்தனை நெல்லையும் நம்பரவையார் எங்கே குவித்து வைப்பாரோ" என்பார். புகழ்மிக்க பரவை யாரோ, வன்றொண்டர் தமக்களித்த நெற்கண்டு, மகிழ்சிறந்து, "இவ்வூரார் யாவரும், தம் தம் எல்லைக்குட்படும் நெற் குன்றெல் லாம் வாரி வாரித் தம் தம் மாளிகையிற் பெய்து கொள்க" என முரசறை வித்தார். அம் முரசொலி கேட்டாரனைவரும் அவ் வாறே தம்வீட்டு முன்னிருந்த நெல்லையெல்லாம் வாரி வீட்டி னுட் சேர்த்தனர். அதுகண்ட பரவையார், மிகமகிழ்ந்து வன் றொண்டரது திருவடி பணிந்தார். நம்பியாரூரும் நாடோறும் புற்றிடங்கொண்ட புராதனரைப் பணிந்திருந்தார். அக்காலத்து ஓர் நாள் திருநாட்டியத்தான் குடியில் வாழ்ந்திருந்த பெரியாரா கிய கோட்புலிநாயனார், திருவாரூருக்கு வந்து, தம்பிரான் றோழ ரைப் பணிந்து, அவரைத் தம் ஊருக்கு எழுந்தருளும்படி வணங்கி நின்றார். வன்றொண்டர் அதற்கு இசைந்தருளினார். சேனாபதியாம் கோட்புலியார், மிகமகிழ்ந்து வணங்கித்தம் ஊரை அடைந்தார். திருநாவலூரர் பூங்கோயில் புக்கு பெருமான் கழல் வணங்கித் திருவாரூரை விட்டுப் புறப்பட்டு, வழியில் பல பதி களைப் பணிந்துகொண்டு, திருநாட்டியத்தான் குடியை யடைந் தார். அதனை யறிந்த கோட்புலியார் தம் ஊரைப் பலபட அழகு பெறச் செய்து, எதிர்கொண்டு வந்து, நாவலர்கோன் தாள் வணங்கி, அழைத்துக் கொண்டு தம்முடைய சிறந்த மாளிகை யிற் புகுந்தார். அங்கே தம்பிரான் தோழரை மணிகள் பதித்த பொற்றவிசில் எழுந்தருளச் செய்து, அடிமலர் விளக்கிப் பன் மலர் தூவிப் பணிந்தார். (தொடரும்)

---

# படிப்பு

[பு. க. முத்துசாமி பிள்ளை]

இப்பொருளைப்பற்றி யார் யார் எத்தனை முறை கூறினாலும் அவையெல்லாம் கொள்ளற்பாலனவே யன்றித் தள்ளற்பாலன வல்ல. ஆங்கிலேயர் தம் மக்களுக்கு எளிதிற் கற்றுக் கொடுக்கப் புதிது புதிதான வழிகள் பல கண்டுபிடித் திருக்கின்றனர். நம் தமிழ் மக்களுக்கும் அவ்வாறே எளிதிற் கற்றுக் கொடுக்கும் முறை பலவற்றைக் கைக்கொண்டாலன்றி, வீண் வருத்தமும் காலப்போக்கும் நம்மினின்றும் நீங்கமாட்டா. தமிழ் வளர்ச்சியையும் தனித்தமிழ் பேசுதலையும் மிகவிரும்பும் இந்நாளில் அதற்குத் தக்கபடி நம் பள்ளிக்கூடங்களில் இளைஞர்களுக்குக் கற்றுக் கொடுக்கத் தனித்தமிழ் மொழியிலெழுதப்பட்ட உரை நடை நூல்கள் பலவேண்டும். அவை தனித்தமிழாயிருக்க வேண்டியது மட்டுமன்றி வழக்காற்றில் பயின்று வருஞ்சொற்களாயும் எளிதில் இளைஞர் அறிந்துகொள்ளக் கூடியதாயும் இருத்தல் இன்றியமையாதது. கதை வழியாகப் பல பாடங்களைக் கற்பிக்கலாம். ஒழுக்கம், சமயம், நீதி முதலியவற்றைத் தமிழ்ப் பழங்கதைகள் வழியாய் இளைஞர்கட்கு அறிவுறுத்தின் அவர்கள் எளிதாகத் திருந்துவரென்பது தேற்றம்.

இவை யெல்லாவற்றிற்கும் மேலாகப் படிப்பிக்கும் ஆசிரியர் பொறுமை அமைதி முதலிய குணங்களான் நிறைந்து மிளிர்பவராயிருத்தல் வேண்டும். எந்தக்காலத்திலும் எக்காரணம் பற்றியும் கடுமொழி கூறாதவராயிருத்தல் வேண்டும். சுருங்கக்கூறின் கடுமொழி யென்பதையே அவர் அறியாதவராயிருத்தல் நலம். இப்போது இளைஞர்களாயிருப்பவர்களே இனிவரும் உலகினராயிருக்க வேண்டுமாதலால் அவர்களை நல்நிலைக்குக் கொண்டுவரக் கூடியவர்கள் பேராற்றலும் பெருந்தகைமையும் வாய்ந்தவர்களாயிருத்தல் வேண்டும். அத்தகையோர் ஆசிரியர்களா யில்லாதவரையில் உலகின் முன்னேற்றம் சிறிது சிறிதாய் ஊர்ந்து செல்லுமே யன்றி எண்ணிய எண்ணியாங் கெய்துந் திண்மையை விரைந்து பெற இயலாது.

நம் தமிழ்மக்கள் பழையகாலத்தில் இளைஞர்களைப் பயிற்று விக்கு முறையில் மிகத் தேர்ச்சிபெற்று விளங்கினார்கள் என்று பண்டைத் தமிழ்நூல்களால் அறிகின்றோம். அவர்கள் வழித் தோன்றல்களாகிய நாம் மற்றை எல்லாரினும் எல்லாவழிகளிலும் பின்னணியில் நிற்பது நம் அறுவுடைமையைக் காட்டுகிறதா ? அன்றி அஃதின்மையைக் காட்டுகிறதா? அறியேம்.

அக்காலத்தே ஆசிரியரோடு உடனுறைதல் (அதாவது குரு குலவாசம்) என்னும் ஓர் அருமையான வழக்கம் மிகச் செவ்வை யாய்க் கையாளப்பட்டு வந்தது. அவரது அரியகுணங்களெல்லாம் இளைஞரிடத்தில் பஞ்சில் தீப்பற்றுமாறு போன்று எளிதில் பற் றிக் கொண்டன. இக்காலத்தே அத்தகைய வழக்கம் அல்லாமை தமிழ் மக்கட்குப் பெருங்குறை. எங்கெங்கோ சிற்சில இடங்க ளில் மாணவர்விடுதி (Boarding) அமைந்திருந்தாலும் அவைக ளெல்லாம் உணவளிப்பதும் அதற்குரிய பணத்தை வாங்குதலும் மட்டும் செய்கின்றனவே யன்றி அதற்குமேல் பிள்ளைகளின் நலம் தீங்கைப்பார்த்து ஆவன செய்யும் வலியில்லாதனவா யிருக்கின் றன. உண்டிவிடுதி வைத்தலோடு பிள்ளைகள் நலத்தை எப் பொழுதும் பார்த்துப் பேணிவரும் ஆசிரியர் ஒருவர் உட னுறைந்து வழிகாட்டவும் வேண்டும். இவ்வாறு செய்வதிலும் ஒன்றிரண்டு இன்னல் இருப்பதாக எடுத்து மொழியலாம். அவை ஆசிரியர் தீயகுணங்கள் நிறைந்தவராய் இருந்தால் அவரது குணங் கள் அவர் மாணுக்கனுக்கும் பரவி அவன் வாழ்நாளைக் கெடுத்து விடுதல் ஒன்று. தீய ஒன்றைப் பின்பற்றிய அவனை அதனினின் றும் பிரித்து நல்வழிக்குக் கொண்டு வருதலில் உண்டாம் அல் லல் மற்றொன்று.

ஆனால் ஆசிரியனைத் தேர்ந்து கொள்ளுங்காலத்தே நுணுகி ஆராய்ந்து கொண்டால் பின்னர் அல்லல் இல்லை. எல்லாக் குணங் களும் ஒருங்கமையப் பெற்றவர் கிடைத்தல் அரிதே என ஒரு வினாவுண்டாகலாம். "குணநாடிக் குற்றமும்நாடி யவற்றுள் மிகை நாடி மிக்க கொளல்." எனப் பெரியார் அருளியாங்குக் குணம் மிக்குள்ளவரையே நாம் ஆசிரியராகத் தெரிந்தெடுத்தல் வேண் டும்.

அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட ஆசிரியர்கள் உடனுறை யும் விடுதிகள் ஒவ்வொரு கலாசாலையிலும் அமைத்தலும் அமைக்க முயலுதலும் நம் தமிழ் மக்கள் படிப்பு முன்னேற்றத்திற்கு ஒரு சிறந்த வழியாகும். எப்பொழுதும் படிப்பையே படித்துக் கொடுக்கவேண்டுமென்பது விரும்பப்படுவதில்லை. படிப்பை மாண வர்கள் மனங் கொள்ளுமாறு அவர்கட்கு வருத்தமில்லாத வழி யில் சிறிது பொழுதாவது வகை அறிந்து ஊட்டினால் அதுவே பெரும்பயனைக் கொடுக்கும். ஆசிரியர்களோடு மாணவர்கள் எப் பொழுதும் உடனுறைதலால் அவர்களின் பழக்கவழக்கங்கள், உயரிய எண்ணங்கள், விரிந்த நோக்கங்கள் முதலிய எல்லாம் மாணவர்களின் மனத்தில் நன்கு பதிந்து வருங்காலத்திற்கு அவர் களை எல்லாவழிகளிலும் திறமை வாய்ந்தவர்களாக்கும் என்பது ஒருதலை.

அவ்வாறு உடனுறைந்து நல்வழி காட்டும் ஆசிரியர்கள் பல் கிப் பெருகினாலொழிய படிப்பு நல்நிலைக்கு வாராது. இதனை ஒவ் வொரு தமிழ்மக்களும் மனத்துட் கொண்டு அங்கங்கே மாணவர் விடுதி யமைத்தும் எல்லா நற்குணங்களும் ஒருங்கமையப் பெற்ற ஆசிரியர் ஒருவர் உடனுறைந்து வழிகாட்ட வேண்டுவனவற்றை விரைந்து செய்தும் நலன் எய்துமாறு விரும்புகின்றேம்.

---

## *தமிழ் ஓங்காரம்

[சென்னை - சோம சுந்தர நாயக்கர்]

இராமதாசர் என்பவர் "பிரணவத்தையும் யானையின்றலை யையும் ஒத்திட்டுப் பார்க்கும்படி எந்தச் சுருதி கூறுகின்றதோ அறியேம்" என்று ஏழைக்குடியை வினவினர். அவையிரண்டு மொத்திருப்பதாகச் சைவர்கூறியதை நமது தாசர் வீண்பரிகாசஞ்

---

* சுக்லாம்ப்ரதர சுலோகவிசாரத்தினின்றும் எடுக்கப்பட்டது.

[சுவடி 1-க்கு விலை அணா-8.]

செய்தாரேயன்றி யொத்திருக்க வில்லையென்று மறுத்தாரில்லை. நியாயங்காட்டி மறுத்திலரேனும் பிரமாணங் கேட்டாராகையா லதனையும் எமது நியாயத்தையுமீண்டு வரைவாம்.

"பூமாது தனைப்புணர்ந்த புயல்வண்ணப்
பெருமானும் புலவர் போற்று
நாமாது தனைப்புணர்ந்த நான்முகனும்
போர்மாது நயக்குமெண் டோட்
கோமானுந் தானேயென் றுணர்த்துதற்கே
பிரணவகுஞ் சரமாய்த் தோன்றி
மாமாவின் முகத்தானை யுயிர்த்தானை
நினைந்திறைஞ்சி வழுத்துவாமே"

என்பது பிரமாணம். இதில் பிரணவகுஞ்சரம் என்றது என்னை? பிரணவாகாரமாய்த் தோன்றுங் குஞ்சரவடிவம் என்பதே யன்றோ பிரணவஸ்வரூபம் ஓங்காரமென்பது. இது கணபதிவடிவம். ஓங் காரத்தில் அகார உகார மகாரங்க ளந்தர்க்கதம். இவை பிரமனாதி மூவர்வடிவம். அகர உகர மகரங்கள் ஓங்காரத்தி னுறுப்புக்களா யிடுதல்போல அவற்றை யுறைவிடமாகக்கொண்ட மூவரும் கண பதியினுறுப்புக்களாம். இதனையே (மும்மூர்த்திகளுந்) "தானே யென்றுணர்த்துதற்கு" என்று மேல் வாக்கியத்திற் கூறியதுணர்க. இன்னும் பிரணவம் விநாயகஸ்வரூபம் என்பதற்குப் பிள்ளையார் சுழியே சாட்சியாம். பிள்ளையார்சுழி என்பது உலகிலொவ்வொரு வரும் ஒரு விஷய மெழுதத் தொடங்கும்போது தலைப்பில் எழு தும் (உ) இந்த அடையாளமாம். இதனை "ப்ரதமம் பிந்துஸம் யுக் தம்-த்விதீயம் தண்ட முச்யதே" என்று துணிந்தனர் மேலோர். முதல் பிந்து வென்பது (0) என்னும் வட்டவடிவு. இரண்டாவது தண்டமென்பது (—) என்னுங் கோடுருவமாம். இவற்றுள், முன் னையது பிந்துவும், பின்னையது நாதமுமாம். இரண்டுஞ் சேர்ந்ததே பிள்ளையார் சுழியாம். பிரணவமானது அகார உகார மகார பிந்து நாதவடிவமென்பது கணபத்யுபநிஷத்தால் முதலிலே தானே காட்டினும். இப்படி யெல்லாப்படியாலு முணர்ந் தனுபவிக்கத் தக்க பிரணவகுஞ்சர ஸ்வரூபனிடம் நமது தாசருக்குண்டான

விபரீதம் ஜந்மாந்தர பாபபலமென்னுது வேறு யாதென்பேம்! பிரணவம் ஐந்துறுப்புடையது. பிள்ளையார் சுழி இரண்டுறுப்பினைக் கொண்டு சங்கிரகமாகச் சூசித்து நிற்கின்றது.

இதனை பின்னுங் கொஞ்சம் கூறுகின்றேம். கணபதிக்கு அநேக அவசரங்களுண்டு. அவற்றுள், சிவனாது அநாதி சித்தமான பிரணவ குஞ்சர கோலமொன்று, சிவனாது கண்டத்தில் கணபதி யுதித்ததொன்று. சிந்தாமணி விநாயகர் வக்ரதுண்ட விநாயகர்-கஜாநந விநாயகர்-கணபதி விநாயகர்-மகோற்கட விநாயகர் முதலிய திவ்ய நாமங்களா லாவிர்ப்பவித்துத் திருவிளையாடல் புரிந்தகோலங்கள் பல. இவற்றுள், கணபதி விநாயகர் சரிதம் வருமாறு.—சிவபெருமான் உமாதேவியாரோடு கைலாசத்தி லுள்ள உத்யான வனத்தில் வேடிக்கையா யோர்போ துலாவி வந்தனர். அப்போதங்குள்ள சித்ரமண்டபமெய்தி அதிலெழுதி யிருக்கும் சப்தகோடி மஹாமந்திரங்களையும், அத்தனைக்கும் ஆதியும் ஆதாரமுமாகிய பிரணவதாரக மந்திரத்தையும் பார்க்கையில், பிரணவாகாரமாகிய ஓங்காரவடிவத்தினுள் அதன்பொருளாகிய சிவசத்திக ளிருவரும் யானைவடிவங்களா யொன்றுகூடி யிருத்தலாகிய காட்சியுருவ மமைக்கப்பட்டிருந்தது.

இதனையே சேக்கிழார் பெருமான் "பொருப்பரையன் மடப்பிடியி னுடன்புணருஞ் சிவக்களிற்றை" என்று கூறியுலகை யுய்வித்தனர். இவ்வதிசயத்தைக் கண்ணுற்ற அம்மை சுவாமியைப் பார்த்து 'இஃது என்னை' யென்று வினவினர். சுவாமி அம்மையை நோக்கிப் 'பெண்ணே! நீ அந்தப் பெண்யானையைப்பார்' என்று கட்டளையிட்டுத் தான் ஆண்யானையைப் பார்த்தனர். உடனே அவ்விரண்டு யானைகளும் புணர்ந்த கோலமாகச் சகளீகரித்தன. அவற்றினிடையில் வாரணமுகத் தண்ணல் வந்துதித்தனர். பிரணவ மந்திரஸ்வரூபி தானென்பது வெளிப்படையாகத் தோன்றவேயன்றே பிரணவாகாரமாகிய முகத்தையுடைய யானையாக எம்பிரான் சக்தியோடு சகளீகரித்து யானைமுகப்பிள்ளையாரைத் தந்தருளினர். இதனுல், வாரணமுகத் தண்ணலாது அருட்கோலம் சிவனாது (வெளிப்படையான) பிரணவஸ்வரூப

மென்பது இனிது சாதிக்கப்பட்டது. மந்திர ராஜமாகிய பிரண வக்காட்சி வடிவினராய்க் கணநாதர் விளங்குஞ் சத்தியத்தைப் போதிக்கவே "ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி" என்று வேதம் இரட்டித் துக் கூறியது. பிரஸந்நவதனமென்பதும் இந்தப்பொருளிலேயே பரிவலா நமெய்தியதுணர்க. பிரஸந்நவதனமே பிரணவரூப மென் பதும் ஆண்டறியக் கிடத்தலொன்று. இவ்வுண்மைகளெல்லா முள்ளடங்கி விளங்குமாறு ஓங்காரத்தையும், கஜாநநத்தையுமொத் துப் பார்க்கும்படி ஏழைக்குடியாரெழுதியதை நமது தாசாறிந் துய்தற்கு அவரது பாவம் வழி விடாமையால் வீண்வாதங் கூறி விழலாராயினரென்க. நிற்க.

இந்தத் தாசருக்குத் துணைபோன "புதுவை விகடன்" என் பவ ரொருவரு மிவ்விஷயத்திற் சிறிது கையைக் காட்டினராகை யால் அதனையும் ஈண்டு விசாரித்து ஒழிப்பாம்.

இவர் "பிரணவரூபம் என்பது பிரணவப்பொருளாக விருப்ப வர் என்பதா? அல்லது பிரணவம் போலும் உருவினையுடையவ ரென்பதா?" என வாசங்கித்து, "பிரணவம் என்பது ஜீவபரமாத் மாக்களின் உள்ளபடியே விளக்கும் மந்திரமாகக் கொள்ளப்ப டாது. ஒருவித ரேகையாகவன்றோ கொள்ளப்படவேண்டும்? இவர் காட்டிய மேற்படி எழுத்துப்போல ஆனைத்தலையிருக்கின் றதே. அது போலவன்றோ பிள்ளையார் தலையுமிருக்கிறதாக வழங் கப்படுகின்றது. ஆதலால் பிரணவரூபி யென்பது மிருகஜாதியி லொன்றாகிய யானைமுகமே யென்பது ஸ்வாஸமாகின்றது. இவர் சொல்லியபடி ஈறுகெட்ட பிரணவம் யானைமுகம் போலுமேயொ ழிய முழுப்பிரணவம் அங்ஙனமாகாதன்றோ?" என்று மிகுதிப் பிரசங்கத்தி லிறங்கி யுள்ளம் வெதும்பினர். அன்றியும், இந்து மதத்தை யநுசரிக்கிறவர்கள் பலதேசங்களில் பல பாஷை பேசி வருகிறார்கள். திராவிடம் யாவருக்கும் பொதுவாகுமா? அது தேவபாஷையா? தேவபாஷை எழுதப்பட்டுள்ள எழுத்துக்குத் தேவநாகரி யென்று பெயர் வழங்கி வருகிறதே. இப்போது வாதமெல்லாம் தமிழ் (ஓ) என்பது பிரணவமென்று சாதிப்பதே யன்றோ? அங்ஙனமாயின், தெலுங்கு (ஓ) எழுத்துப் பிரணவப்

பிள்ளையார் யாவர்? கன்னட (ஒ) எழுத்துப் பிரணவப் பிள்ளையார் யாவர்? மலையாள (ஒ) எழுத்துப் பிரணவப்பிள்ளையார் யாவர்? என்று விகடம்பேசித் தனது விகடப் பெயரைக் காத்துக்கொண்டார்.

இவரது தெளிவின்மையை ஈண்டுச் சிறிது வெளிப்படுத்துவாம். இவர் முதல் "பிரணவரூபம் என்பது பிரணவப்பொருளாகவிருப்பவர் என்பதா" என்று கடாயினரன்றோ? இப்படியுமொருவர் கொள்கையிருக்குமா? ரூபம் பொருளாவதும், பொருள் ரூபமாவதும் யாங்ஙனம்? இவரது விபரீதத்தை யேழைக்குடியார் மேலேற்றி வினவியது சர்வாஸங்கதமாம். இனி யிவர் "பிரணவரூபம் என்பது பிரணவம் போலும் உருவினையுடையவர் என்பதா?" என்று இரண்டாவது கேள்வி கேட்டாரன்றோ? இந்தக் கேள்வியும் நிஷ்பலமானதாம். வெள்ளையாய் விளங்குவதை யாசங்கித்தது அகந்தையின் பயனேயாம். அன்றியும், இவரெடுத்துக் கொண்ட இரண்டு பக்ஷங்களி லொன்று எதிரிமதமா யிருப்பதொழிய இரண்டு மிருக்கமாட்டா. ஏனோ இந்த விகடரிரண்டையு மெதிரி மதமாகக்கொண்டு வினவினர்? இவரது கல்வியின் குறைவே இவரை வீண்கேள்விகளினுழைந்து மானங்கெடச் செய்ததென்க. இவர் கல்வியறி வில்லாதவ ரென்பதை யின்னுந் தெரிவிப்பாம். "பிரணவம் என்பது சிவபரமாத்மாக்களின் உள்ளபடியே விளக்கும் மந்திரமாகக்கொள்ளப்படாது. ஒருவித ரேகையாகவன்றோ கொள்ளப்படவேண்டும்?" என்று இவர் கடாயினரன்றோ? இதில் சிவபரமாத்மாக்களை விளக்கும் மந்திரம் என்று கூறுவது தெளிவாம். இவர் "சிவபரமாத்மாக்களின் உள்ளபடியே விளக்கும் மந்திரம்" என்றது குழப்பமாம். அன்றியும், "பிரணவம் மந்திரமாகக்கொள்ளப்படாது" என்று இவரெழுதியது பிரணவ நிந்தையாம். இவர் மதம்போலச் சொல்லவேண்டுமாயின், பிரணவரேகை மந்திரமாகக் கொள்ளப்படாது என்று எழுதி விளக்கவேண்டும். இவ்வாறு விளக்கவறியாத புதுவைப்பண்டிதர் ஏழைக்குடியாரைப் படிப்பில்லாதவரென்று பரிகசித்தது தன் குற்றங் காணாத சண்டனே டினப்பட்டதனாலென்க. ஏழைக்குடிக்கு ஸம்ஸ்க்ருதம் தெரியாது என்றதே யொழியத் தமிழ்தெரியாது என்று

யாம் சொல்லவில்லையே யெனின், ஸம்ஸ்க்ருத வித்வானுக வெளிப் பட்ட இவர் ஸம்ஸ்க்ருத இலக்கணப்பிழைகளை யெடுத்துக்காட் டுவதொழிந்து, "வியங்கோள் வினைமுற்று - வினையாலணையும் பெயர்-ஆறும் வேற்றுமைப்பன்மைப்பொருள்-பண்புப்பொருள்" என்று தமிழிலக்கண வார்த்தைகளை வரிசையாகக் கோத்து தமிழிலக்கணத்திலும் தான் புலி என்று காட்டிக்கொண்டவா றென்னை? சமயவாதத்திலிறங்கிய இவர் எதிரியைக் கல்வியில்லா தவரென்று தூஷித்தது தமக்குத் தோல்வித்தான மென்றறிந் திலர்போலும். யாமிப்போது இவரது கல்வியின் குறைவை யெடுத் துக்காட்டியதோ வெனின், இவர் சொன்னதன்மேற் சொன்ன தேயன்றி யாமே முந்திய தின்ரும். இதனை யிவ்வளவினிறுத்தி இவரது வ்னையாபாசங்களையுஞ் சிறிது விளக்குவாம்.

இவர் "பிரணவம் மந்திரமாகக் கொள்ளப்படாது" என்றூர். கொள்ளப்படமாட்டாது என்று எழுதுவது மரபாம். அல்லது பிரணவம் மந்திரமாகாது என்று கூறுவது ஒழுங்காம். கொள்ளப் படாது என்று கூறுவதாயின், பிரணவத்தை என்று விரித்தல்மர பாம். நமதன்பர் கைச்சரக்கைச் சோதிக்கச் சோதிக்க யோக் யதை குறைவுறுகின்றது. இனிப் பிரணவத்தை மந்திர ராஜம் என்று உபநிஷத்துகள் கோஷிக்கின்றன. இதற்கு விரோதமாக அது மந்திரமாகாது என்றிவர் தூற்றியது விநாயகரிடம் வைத்த துவேஷத்தின் பயனேயாம். இவரது கருத்து ஓம் என்னும் ஒலியே பிரணவமென்பதாம். ரேகை பலபாஷைகளில் பலவித மாய் விளங்கலால் அது முக்யமாகாது என்பதாம். ரேகை அமுக்யமாயின் ஸ்ரீசக்ரம் சிவிக்குமாறு யாங்ஙனம்? எழுத்துக் களைக் கோணங்களி லடைத்து யந்திரப்பிரதிஷ்டை செய்வதற்கு யாதுகதி? ஸ்ரீபஞ்சாக்ஷர அஷ்டாக்ஷரங்களைத் தாம்பிரத் தகடு களிலெழுதிப் பெரியோர் பூசித்துச் சித்திகளெய்தி இன்புறுவது என்னை? வேதவரம்பினின்ற சமயிகள் பலபாஷையினரா யிருப்பி னும் தத்தம் பாஷைகளிற் போந்த (ஓ) என்பதை மந்திரமாகக் கொள்ளாமல் தமிழ் (ஓ) வையே மந்திரமாகக்கொண்டு வந்திப்ப ரென்க. மேடம் பிளவாட்ஸ்கி முதலிய அன்னிய நாட்டு வைதி கச் சிமாட்டிகளுமன்றே தமது இங்கிலீஷ் புத்தகங்களில் தமிழ்

ஓம் அடையாளமிட்டுப் பிரணவத்தை வந்தித்து வாழ்கின்றனர்? இவ்வுண்மையுணராத நமது விகடர் தமிழ்ப் பிரணவத்தை அது விநாயகரது முகம்போலிருப்பது நோக்கி மிருகஜாதியிலொன்று போலு மென்று இழிவுரைத்தனர்.

இவரது நாராயணர் பன்றி-சிங்கம்-குதிரை முதலிய முகங்களைத் தாங்கியிருப்பது நோக்கிப் பரதத்வப்பொருள் மிருக ஜாதியேபோலும் என்று இவரையிடிப்பார்க்கு இவர் யாதுவிடை கூறுவர்? இவரிம்மட்டி லமையாமல் யானை முகத்தைப் பிரணவமாகக் கொண்டால், அஃது ஈறுகெட்ட பிரணவமாகுமே யொழிய முழுப் பிரணவமாகாதென்று தருக்கினர். இவ ரீறுகெட்ட தென் யானைமுகத்தில் மகாரம் கூடியிருக்கவில்லை யென்பதேயாம். இவர் காட்டானையை யுற்றுநோக்கி யாசங்கித்தார்போலும். முத்தர்வாழும் வீட்டானையினிடத்தில் முழுப்பிரணவ வுருவங் கண்டிலமென்று வெதும்பார் மேலோரென்க. அதவா காட்டானையினிட மிவர் விரும்பினும், அதன் தும்பிக்கையைச் சிறிது மடக்கி மடித்து விளையாடின், அப்போது அதனிடத்தில் மகாம் வெளிப்படாமற் போகாதென்க. (ஓம்) என்னுமிந்த அடையாளம் தும்பிக்கையை மடித்து விளையாடும் யானையினிடம் காணலாமென்றறிக. இனி யீறுகெட்ட பிரணவரூபமாகவே யானைமுகம் விளங்கட்டும் அதனாலும் எமது பட்சம் கெடுமாறில்லை யறிக. எங்ஙனமெனின், வைகுண்டபதியினது அடையாளங்கள் இராம கிருஷ்ணாதிகளிடங் காணாமையால், இவர்களை அரை விஷ்ணு-கால்விஷ்ணு வென்று இவர் கழித்திடின், யானைமுகம் முழுப்பிரணவமாகாதென்று இவர் பேசிய கொடுமைக்குக் கௌரவமுண்டாகலாமென்க. நிற்க.

இவர் இந்துமதஸ்தர் பலபாஷைகளை யுடையவரென்றார். இந்து மதமெனவொரு மதமுண்டோ? சைவ ஸ்மார்த்த வைஷ்ணவ மாத்வர்களையெல்லா மொன்று சேர்த்து இந்துக்களென்று அழைக்கிறார். இவ்வாறு கிறிஸ்தவர்கள் வழங்குவார்கள். எந்தப் பூர்வ வைதிக நூல்களிலும் இந்தப் பிரயோகங்கிடையாது. வைதிகநூல்களிற் பழகாத சாமானியர்களது வழக்கேபற்றி வாய் மலர்ந்தார் போலும் நம் விகடர்!

இவரது வன்கண்மை மிகப்பெரிது. இல்லையாயின், "திராவிடம் யாவருக்கும் பொதுவாகுமா?" என்று பேசி மகிழார். திராவிட ஓங்காரத்தையே யாவருங் கையாண்டு வருவதை இவருணர்ந்திலர். இனியாவது விசாரித்து நாணி நான்று கொள்ளட்டும். நிற்க. இவர் "திராவிடம் தேவபாஷையா" என்று ஒரு பெரிய கேள்வி கேட்டுவிட்டார். தேவபாஷைக்குக் கொம்புமுளைத்திருக்கிறதோ ? தேவபாஷையென்றால் இவரது கருத்து யாது ? தேவர்கள் பேசும் பாஷையென்பது போலும். இருந்தாலுமிருக்கட்டும். தமிழ் ஆரிஷமென்னுஞ் சிறப்புப் பெற்றிருக்கின்றது. ஆரிஷமென்றால் இருடிபாஷை யென்பதாம். அகஸ்தியரிஷி செய்த பாஷையென்று சிலர் சொல்லுகின்றனர். அகஸ்திய முனிவருக்குச் சிவபெருமா னுபதேசித்தருளியதை அம்முனிவேந்தர் பின்னருலகில் விர்த்திசெய்தாரென் றறியக்கடவர். இப்படிப் போலவே கீர்வாணத்தைப் பாணினி முனிவருக் குபதேசித்தருளினர் சிவபெருமான். பின்ன ரம்முனிவரதனை யுலகில் விர்த்திசெய்தனர். இதனால், இரண்டு பாஷைகளும் சமநிலையினவென்பது அறிஞர் துணிபாம். ஆயினும், ஈண்டுப் பிரஸ்தாபித்த முனிவரிருவருள், அகஸ்தியபகவான் மிகச்சிரேஷ்டராகையால் அவருடைய சம்பந்தத்தைப் பெற்று ஆரிஷம் என்னும் பிரசித்தியடைந்த தமிழினும் தேவபாஷை அவ்வளவு சிறப்புடைத்தன்றாம். தேவர்கள் கீர்வாணமே பேசுகிறார்களென்பதற்குத்தான் யாதுபிரமாணம்? அப்படியில்லையாயின், அதற்குத் தேவபாஷையென்று பெயர் வழங்குவது யாதுபற்றி?தேவர்கள் இருடியரது சாபவலிக்குட்பட்டு அடங்கினவர்களாகையால் ஆரிஷமாகிய தமிழுக்குத் தேவபாஷையாகிய கீர்வாணம் அடங்கியதென்றே யறியக்கடவர். இந்திரனுக்கு அகஸ்தியர் சாபமிட்டதும், விஷ்ணுவுக்குப் பிருகு சாபமிட்டதும் புராணங்களிற் பிரசித்தியாகையால், இதனை யுய்த்துணர்ந்தார் தேவபாஷையைக் கொண்டாடி மகிழாரென்க.

இனியாம் தமிழைக் கைலாச பாஷையென்று துதித்து வாழ்வாம். ஸ்ரீகைலாசத்தில் ஆதியுலா, பொன்வண்ணத்தந்தாதி, நொடித்தான்மலைத் திருப்பதிக முதலியன பிரகாசப்படுத்தப்பட்டன. ஸ்ரீ சிவபெருமான் பாணபத்திரருக்கும், தருமிக்கும், பெற்றான்

சாம்பானுக்கும் தமிழ்ப் பாடல்களெழுதிக் கொடுத்தருளினர். சமயாசாரியர் நால்வர்கள், காரைக்காலம்மையார் முதலினோர், காரிமாறனாதியோர் தமிழ்ப்பாடல்களையே பாடித் தெய்வத்தை யுவப்பித்தனர். முதற் சங்கம் - இடைச்சங்கம் - கடைச்சங்கங்களைத் தாபித்துச் சிவபெருமானும், விஷ்ணு முதலினோரும், முனிவர்களும், மற்றவர்களும் தமிழையே வளர்த்து வந்தார்கள். ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ள நாற்பத்தொன்பது எழுத்துக்களும் நக்கீராதி வித்வான்களாகப் பிறந்து தமிழைக் கற்றுப் பெருமை யடைந்தன. இவற்றை யுணர்ந்திடாது நமது விகடர் தமிழ் தேவபாஷை யல்லாமையால் குடிமுழுகிப்போய் விட்டதாகத் துடித்தது அவருக்கே துன்பமாய் முடிந்ததறிக.

> "தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
> யுண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
> கண்டதும் மறைக் கதவினை யடைத்ததுங் கன்னித்
> தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்"

என்பதனையு மறிந்து அடங்கி நமதன்ப ரின்புறக்கடவர். நிற்க.

இவர் "தேவபாஷை யெழுதப்பட்டுள்ள எழுத்துத் தேவநாகரி என்று பெயர் வழங்கி வருகிறதே" என்று மனப்பால் குடித்து யாழ்கினானன்றோ? இதுவும் அசங்கதமாம். தேவநாகரி எழுத்தை யாவருண்டாக்கினவர்? தேவபாஷைக்கென்றே யொருவித எழுத்துத் தேவநாகரிப் பெயரா லுண்டாயிருக்கும்போது. அத்தேவநாகரியிலேயே தேவபாஷையை யாவருங் கற்று வெளிவராமல் தெலுங்கு-கன்னடம் -மலையாளம்-கிரந்த முதலிய பலபல தேச வெழுத்துக்களிலெல்லாமெழுதி அப்பியசித்துவருவது என்னை? இவற்றோடொன்று யொதுங்குந் தேவநாகரியை அளவுக்கதிகமாக விகடர் கூறியது விவேகிகளுக்கு வெகு துச்சமாம். சங்கரன் என்னுமொரு வேதியர் விர்த்தி செய்த மதம் சங்கரமதம் அல்லது சங்கராசாரியர் மதம் என்று பிரசித்தி யடைந்திருப்பது போலத் தேவன் என்னும் ஒருபண்டித ருண்டுபண்ணிய வெழுத்துத் தேவநாகரி யென்று பிரசித்தியடைந்த தெனவறிக. சங்கா

மதம் சிவனுருடைய மதமாகாதது போலத் தேவநாகரி தேவர்க ளுடைய நாகரியாகமாட்டாதென்பது சித்தமென்றுணர்க. இந் தத் தேவநாகரி மஹாராட்டிரவெழுத்தின் திரிவாம். கீர்வாண பாஷைக்கு எழுத்துக்கிடையவே கிடையாது. அந்தப்பாஷையி லுள்ள வேதத்துக்கு எழுதாக்கிளவி யென்று பிரசித்த நாமமுண் டா யிருத்தல் யாவருமறிவார்கள். மேற்கூறிய வெழுத்துக்களில் கிரந்தவெழுத்தென்பது தமிழின்றிரிவாம். இந்தக்கிரந்த எழுத்து முழுதும் ஏறக்குறையத் தமிழ் எழுத்துப்போலவே யிருக் கும். இந்த எழுத்திலுள்ள (ஓ)வும், தமிழெழுத்திலுள்ள (ஓ)வும் ஒன்றேயாம். இதனல் (ஓ) என்பது தமிழெழுத்தென்றே தீர் மான மாயிற்று. தமிழ் கீர்வாணம் நீங்கலாக மற்றப் பாஷைகள் அவ்விரண்டு பாஷைகளிலிருந்து பிறந்தனவே யாகையால் அந்தப் பாஷைகளும், அவற்றிற்போந்த (ஓ) வெழுத்துக்களும் அநாதி சித்தமாயினவல்ல. இங்ஙனமாகவும், இடையே தோன்றிய பிரா கிருத பாஷாந்தர்க்கமான பலஜாதி (ஓ) எழுத்துக்களைச் சுட்டித் தெலுங்கு (ஓ) எழுத்துப் பிரணவப் பிள்ளையார் யாவர்? மலையாள (ஓ) எழுத்துப் பிள்ளையார் யாவர்? என்பனவாதி விகடவினுக்களை யெழுப்பிய இவரது அகந்தை விலாசத்துக்கு ஊரிலுள்ள நாகதா ரிப்புதர்களை யெல்லாம் யாம் இனமாக விடுத்தாமென்க.

ஈண்டு யாம் முக்யமாக வெடுத்துக்கொண்ட பாஷைகளிரண் டில் தமிழுக்கு மாத்திரமே வரிவடிவும் ஒலிவடிவு மொப்பியிருக்கி ன்றனர் பெரியோர். கீர்வாணத்துக்கு ஒலிவடிவு மாத்திரமேயன்றி வரிவடிவு கிடையாது. அநாதி வரிவடிவோடு கூடிய பாஷை தமி ழொன்றே யாகையால், அதிற்றானே ஓங்காரமாகிய வரிவடிவுநிலை பேருயினதுணர்க. இதனல், ஓங்காரவாச்யரென்று ஸ்ரீவிநாயகக் கடவுளைத் துதிப்பது தமிழாதரவுபற்றியேயென்று நமதன்பரறிந் துய்திபெறக்கடவர். இத்தமிழ்ப்பாஷையி லிருந்தே கீர்வாணம் பிறந்ததாம். எங்ஙனமெனின், தமிழுக்குச் சிறப்பெழுத்து, எ-ஒ ழ-ற-ன என வைந்தாம். இச்சிறப்பெழுத்து ஐந்தனுள், எ-என் பது அகர இகரங்கள் சேர்ந்துண்டானதும், ஒ-என்பது அகர உகரங்கள் சேர்ந்துண்டானதுமாம். எ-ஒ-என்னுந் தமிழெழுத்துக் களுக்கு ஆதாரமாகிய எழுத்துக்களுந் தமிழேயாகத் தட்டில்லை

யாகையால், அகர-இகர-உகரங்களையும் யாம் தமிழென்றே துணிந் தாம். குறில்கள் தமிழானபோது இவற்றினது நெடில்களுந் தமிழென்பதி லாசங்கையுண்டோ? இவ்வாறு விசாரித்துணர் வார்க்கு அ-ஆ-இ-ஈ-உ-ஊ-எ-ஏ-ஐ-ஒ-ஓ-ஔ-என்னும் எழுத்துக் கள்யாவுமே தமிழ் என்பது இனிது விளங்காமற்போகாது. இவற் றுள், ஐ-ஔ என்பவைகளைச் சந்தியக்ஷரமென்பர் வடநூலார். அ - இ சேர்ந்து ஐயும், அ-உ- சேர்ந்து ஔவுமானதாக அன் னோர் கூறுவர். இவற்றால், எமது தமிழுக்கே பிராசுரிய மோங்கி யவாறு தெளிக.

கீர்வாணபாஷையில் ஒகாரமில்லையாயினும் ஓகாரமிருப்பது திண்ணமாகையால், ஓகாரம் தமிழாதலிழுக்குமெனின், யாமிப் போது பேசியது வரிவடிவைப்பற்றியேயன்றி ஒலிவடிவைப்பற்றி யன்று. தமிழ் (ஓ)வையே கீர்வாண (ஓ) வாக்கிக்கொண்டதன்றி வேறில்லை. இதனால், தமிழ் ஓ வே பிரணவமென்றது ஸ்திரமா யிற்று. இனிக்கீர்வாண ஓவினது ஒலிவடிவுந் தமிழிலிருந்தே பிறந் தமையை நிரூபித்திடுவாம். கீர்வாணத்தில் ஓ எழுத்து இருந்தா லும் அதுகுறில் ஒ வினது விகாரமாகுமன்றித் தானே முளைத்த தனிமுதலாகாது. அகரம் ஆகாரமாயினதுபோல ஒகாரம் ஓகார மாயினது சத்தியம். அகரமின்றி ஆகாரமில்லை. ஒகரமின்றி ஓகார மில்லை. ஒகரம் கீர்வாணத்திலில்லை கீர்வாணத்திலில்லாத ஒகரத் தினீட்சி (ஓ) கீர்வாணமாவதெப்படி? தமிழ் ஒகரமே ஓகாரமாயின மையால், ஓங்காரம் தமிழென்றவெமது சித்தாந்தம் நிலைபெறுயின துணர்க. இன்னுமிதனை வற்புறுத்துவாம். பிரணவமானது அகார உகார மகாரங்களாலாகியது என்பதை மறுப்பாரில்லை. அகார உகாரங்கள்சேர்ந்தால் ஓ-என்பதேயன்றி ஓ-என்று ஒலிக்காது. மேலே ஓ என்னுமெழுத்தின்பிறப்பையாம் தெரிவித்தபடியே இந் தப்பிரணவமும் வெளிப்படுத்தியவாறுணர்க. அ-உ-ம் என்பவற்று லாகியது பிரணவமென்னுமல் ஓ என்னுந் தனிமுதலாகத் தானே யுள்ளது என்று சுருதிபோதிக்குமானால் யாம் தமிழைக்குறுக்கே கொண்டுவந்து போட்டு நமது விகடரை நெஞ்சுலாச்செய்ய ஆவ சியகமிராது. இப்படியெல்லாம் வருமென்று அறிந்தால் வீணே கரிபூசிக்கொள்ள விதியாவென்று ஒதுங்கியிருப்பர். இனியேனும்

எமது கரிமுகத்தண்ணலை வந்தித்துத் தனது அபராதங்கள் க்ஷமிக்கப்பெற்று உய்யும்வழி தேடுவாராக. விரிக்கிற் பெருகும். நிற்க

இவர் பிரணவத்தினது ஒலிவடிவேயன்றி வரிவடிவு அமுக்ய மென்பது போதா அஃது ஒரு ரேகையென்று சாமானியமாய்க் கழித்தாரன்றோ? இவருக்கது தமிழாயிருந்தபடியால் சாமானிய மாயினதேயன்றி இவர் மெச்சிய நாகரத்திலிருந்தால் அப்போது தெய்வமாய்த் திரும்புமென்க. இல்லையாயின், "திராவிடம் தேவ பாஷையா?" என்று இவர் கடாவியதன் பொருளென்னை? யாம் விளக்கியவாய்மையால் தமிழ் பரமசிவபாஷையாய் முடிந்தமை யாலும், எல்லாப்பாஷையினரும் வந்திக்கும் ஓங்காரத்தைத் தன தங்கமாகப் பெற்றமையாலும் அதிற்போந்த பிரணவரூபம் நமது விகடதாசர் தூஷிக்குந் துர்ப்பலஸ்திதியை யடைந்ததின்றென வறிக. பிரணவத்துக்கு வரிவடிவு அல்லது ரூபமில்லையானால் அதனைப் பிரதிஷ்டித்து அர்ச்சனையாதிகளால் ஸாதுக்களாராதித் தல் கூடாது. பிரணவம் ஓங்காரமஹேசுவர க்ஷேத்திரத்தில் சிவா ராதனை புரிந்ததாகப் புராணங்கள் கூறியதும் பொய்யாம். இவரது தெய்வமாகிய விஷ்ணுவைத் திருக்கோயில்களிற் பிரதிஷ்டித்துப் பூசிக்கும் அன்பர்கள் அங்கேகாணும் சுவாமியுருவை இது ஒரு கல்லென்று சாமானியமாய்க் கருதுவார்களோ? சுவாமியென் னுஞ் சொல்லே முக்யம், இந்தக்கல்லுருவம் அமுக்யம் என்னும் போதத்தை இனியிவரிடங் கற்று உலகம் கடைத்தேற வேண்டி யதுதான். இன்னும் வைகுண்டபதியாகிய விஷ்ணுவினது திருவு ருவத்தையு மிவர் திலதர்ப்பணம் பண்ணவேண்டியதே. வைஷ் ணவ சித்தாந்தத்தில் நாராயணருக்கு ரூபமேமுக்யம். அந்த ரூபம் நாராயணரது சைதன்யத்துக்கு வேறுனது. இதனுல் நாராய ணராகாத கரியதிருமேனியை இவர்கட்டி யழுவதிலொரு பயனு மின்ரும். இவரதுபோதத்தைத் தழுவி யாமிவ்வாறு கூறுவமொ ழிய எமது சிவமதம் அப்படியன்ரும். இவைகளை யோசிக்கின், நமது விகடதாசர் பிரணவத்தினுருவை ஸாமானியரேகை யென் ெறுதுக்கிப் பரிபவமெய்தார். எமது தமிழுருவாகிய பிரணவா திக்ய மின்னுமிவருணரவேண்டின், திருக்கோயில்களில், சுவாமி

யெழுந்தருளும் பிரணவ பீடத்தைப் பார்ப்பாராக. பிரணவபீட மென்பது பிரபையோடு கூடிய ஆசனமாம். பிரபைக்குள்ளாக வன்றோ சுவாமி யெழுந்தருளியிருப்பார்? இந்தப்பிரபையைத் திருவாசியென்று கூறுவர் தெரிந்தோர். இது தமிழா வேறா? இவர் யோசிக்கட்டும். இவ்வாறு பிரணவத்தை விசாரிக்கும் சாதுக்கள் நமது ஏழைக்குடியார் கஜாநநமூர்த்தியைப் பிரணவப் பொருளென்று வந்தித்த சத்தியத்தைச் சிரவணகித்துச் சிந்தை மகிழ்ந் தின்புறுவரென்க. விரிக்கிற் பெருகும்.

---

# பிரேம தாமர்

[மயிலை சீனி. கோவிந்தராசனார்]

"அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்;
மறத்திற்கும் அஃதே துணை." திருக்குறள்.

தியோசனன் ஒரு கொடுங்கோல் மன்னன். அவன், பிரேம னுக்கு (ஏதோ ஒரு சிறு குற்றத்திற்கு)ப் பிராண தண்டனை விதித்தான். பிரேமனும் உயிர்விடத் துணிந்தான். ஆயினும், தண்டனையை ஏற்பதற்கு முன்னே தன் குடும்பத்தில் குறையாக் கிடக்கும் காரியங்களைத் திருத்துவதற்கும் தன் மனைவி மக்களைக் கண்டு மனம் தேற்றுவதற்கும் தன் ஊருக்குப் போய்வர உத்த ரவு தரும்படி தியோசனனை வேண்டிக்கொண்டான். அதற்கு அக்கொடியவன், "உனக்குப் பதிலாகச் சிறையில் இருக்கவும், குறித்த நாளில் நீ திரும்பி வாராவிட்டால் உன் தண்டனையைப் பொறுக்கவும் உடம்பட்டு யாராவது முன் வருவாரானால், உன்னை விடத் தடையில்லை" என்றான். பிரேமன், தனக்காகத் தலைகொடுப் போர் இல்லை யென்றும், தன் கருத்து நிறைவேறாதென்றும் எண்ணி ஏங்கியிருந்தான்.

தாமன் என்பவன் பிரேமனுக்கு உற்ற நண்பன். இவன், பிரேமனுடைய ஏக்கத்தை அறிந்து, தியோசனனிடம் போய்த்

தன்னைச் சிறையில் வைத்துப் பிரேமனை விடும்படி கேட்டுக் கொண்டான். அரசனும் அப்படியே செய்தான்.

பிரேமன், தான் திரும்பி வருவதாகச் சொன்ன நாளில் வர இல்லை. பின்னும், சில நாள் சென்றது. பிரேமன் திரும்பவே இல்லை. அவன் தண்டனையைப் பெறக் குறித்த நாளும் வந்தது. அன்றும், அவன் வர இல்லை.

பிரேமன் திரும்பி வாராததைத் தியோசனன் கேட்டறிந்த போது, தாமன், தன் நண்பனை நம்பி மோசம் போனதைப்பற்றி விசனப் படுவான் என்று எண்ணினன். தண்டனைக்குக் குறித்த காலம் கிட்டியபோது, அரசன், தாமனைக் காணச் சிறைச்சாலைக்குப் போயினன். அங்கே, அரசனைக் கண்டதும் தாமன் தலை இறைஞ்சிப் பணிந்து, "மன்னவரே! முன்னே என்னைக் கொலைக்களத்திற்குக் கொண்டுபோய் விடுங்கள். இந்த மூன்று நாளாக ஒரேமுகமாகப் புயல்காற்று மாருமல் அடிக்கின்றபடியால் பிரேமன் திரும்பிவாத் தடைப்பட்டான். இன்று காலை முதல் காற்று மாறி வீசுகின்றது. அதனுல், ஒருவேளை வந்தாலும வந்துவிடுவான். அவன் வருவதற்குள் என் உயிரை வாங்கிவிடுங்கள்!" என்ருன். அதைக் கேட்ட அரசன் நகைத்து, "தாமா! உன்னைப்போல ஒரு மூடனும் உண்டா? நேசனென்று நம்பி மோசம் போனுய். பிரேமன் சத்தியனு? உன்னை வஞ்சனையாக இத்தண்டனைக்கு உட்படுத்தி விட்டு, அவன் தப்பித்துக்கொண்டு ஓடிவிட்டான், பார். அவன் இப்படிப்பட்டவன் என்று இப்பொழுதாவது தெரிந்ததா? அவனுக்காக நீ வீணுக உயிர் இழக்கப் போகின்ருய்! பாவம்!" என்ருன். தாமன் அரசனைச் சினந்து பார்த்து, "பிரேமனைப் பொய்யன் என்று பேசாதீர். அவன் என் பிராண சிநேகிதன். அவனை நாவு கோணுதவன் என்று நான் நன்ருய் அறிவேன். யாரும், அவனைப் பழித்துப்பேச நான் கேளேன்—அவன் வருவதற்கு முன்னே எனக்கே அவன் தண்டனையைச் செலுத்துங்கள். அவன் உலகத்திலே உயிரோடு பிழைத்திருந்தால் பலருக்கும் பயன்படுவான். என்னைப் பார்க்கினும் அவன் எவ்வளவோ உபகாரி; உபயோகமுடைய அவன் உலகத்தில் வாழட்டும். என்னைச்

சீக்கிரம் கொலைக்களம் அழைத்துப் போங்கள்" என்று கேட்டுக் கொண்டான்.

தாமன் பேசியது தியோசனனுக்குப் புதுமையாயிருந்தது. அவன் மனத்திடத்தை முழுதும்அறியவேண்டி அவனைக்கொலைக் களத்திற்குக் கொண்டு போம்படி அரசன் கட்டளையிட்டான்.

கொலை செய்யும் இடத்தைச் சேர்ந்தபோதும், தாமதமின் றித் தன்னைக் கொல்லும்படி தாமன் வேண்டினான். அவனை, அரசன் அனுமதிப்படி, சேவகர் தூக்குமரத்தருகே நிறுத்தினர்.

அத்தருணத்திலே காற்றினும் கடிய வேகத்தோடு குதிரை மேல் ஒருவன் "பொறுங்கள், பொறுங்கள்" என்று கூவிக் கொண்டு அவ்விடம் நோக்கி ஓடிவந்தான்.

தியோ :—(குதிரைமேல் வந்தவனை நோக்கி)

"என்னே அதிசயம்! என்னே அதிசயம்!
என்னே என்கண் முன்னே காண்பது?
ஆமாம். பிரேமனே அதோவரு கின்றவன்!
நாமோ இப்படி நடக்குமென் றெண்ணிலேம்!
தன்னுயிர் கொடுத்துத் தன்னுடை நண்பன்
இன்னுயிர் மீட்க இவன்வரு கின்றான்!"

பிரே :—(குதிரைமேலிருந்து கீழே குதித்து, அரசனை வணங்கி)

"ஆமாம். பிரேமனே! யானே! மன்னவ!
விண்ணவர் தமக்கு விதிப்படி கடமைகள்
புண்ணியச் செயல்கள் புரிவது வேண்டியும்
குறையாக் கிடந்த குடும்ப காரியங்கள்
முறைபடச் செய்து முடிப்பது வேண்டியும்
என்னரு மக்களுக் கிதம்பல சொல்லி
அமைதியும் திருத்தியும் அடைந்துமுன் நெஞ்சம்
நோவது தீர்ந்து சாவது வேண்டியும்
சிறையிடம் விட்டுச் சென்றேன் அன்றி, ஓர்
மறைபடு எண்ணம் மனத்தில் இல்லேன்!
ஆகையின் வந்தேன்."

தியோ :—(கடு முகத்தோடு) "ஆயினும் நீஏன்
திரும்புதல் வேண்டும்? தினையள வேனும்
மரணம் என்பதில் மனப்பயம் இல்லையோ?
காலனைத் தன்னிரு கையால் அழைப்பது
சாலவும் புத்தி சரியிலாப் பித்தன்
குணமே! வேறென்?"

பிரே :—(தன் மார்பிலே கைவைத்து) "குற்றம் செய்திலேன்
தலையை இழக்கத் தகுதியும் இல்லேன்.
ஆயினும் தண்டனை அடையவே வந்தேன்.
என்னே! அந்தோ! என் பொருட்டாக
என்னரு நண்பன் தன்னுயிர் விடுவதோ?
நட்பும் மதிப்பும் நன்றே! நன்றே!!"

தியோ :—"உன்னைப் பார்க்கிலும் உயர்ந்தோனாக
அன்னவன் இடத்தில் அன்பும் ஆகுமோ?"

பிரே :—"அப்படி அன்றே. அவனையும் என்போல்
எப்படி யானும் யான்மதிக் கின்றேன்.
யானே கொலையை ஏற்றிடல் ஆகும்!
அவனோ எனக்கா அழிதல் ஆகாது.
என்னுயிர் பிரிக்க மன்ன! நீர் விதிக்கத்
தாமனும் அவ்விதி தாங்குதல் தகுமோ?
என்னை விடுக்கவும் தன்னைக் கொடுக்கவும்
தகுமோ? நீதியோ? தருமமோ? முறையோ?
பிரேமன் தண்டனை பிரேமனே பெறட்டும்!"

தியோ :—(நிமிர்ந்து நோக்கி)
"நினக்கே யாயினும் நின்னது நண்பன்
தனக்கே யாயினும் தலையை இழப்பது
நீதியன் றெனநீ நினைக்கின் றாயோ?"

பிரே :—(அஞ்சாமல்) "ஆமாம்! அது மெய். அறியேம் குற்றம்.
கடுகள வாயினும் கறுப்பே இல்லேம்
யாங்கள் இருவரில் யாவரே யாயினும்
தாங்கல் இத்தண்டம் தகவோ? தகவோ?"

தியோ :—(கோபத்தோடு) "தகவிலதாக! தயை என் நினக்கே?
நின்னை நிறுத்தி நினக்குப் பதிலாய்
அன்னவன் உயிரை அழிப்பதும் நீதி
அல்லஎன் றேன்நீ அறைகின் றனையோ?"

பிரே :—(படபடத்து) "என்னுயிர் ஆக, அவனுயிர் ஆக
சின்னப் படுதல் சிறிதும் ஆகா து.
சரியள வாகிய சரியலா நீதி.
பின்னும் ஒன் று பேசுவன் கேளீர்—
மன்னரே! கொடுங்கோல் மறவரே! எனக்கு நீர்
இட்ட சட்டத்தை எளியனு கிய என்
இட்டன் தாமன் ஏற்கவும் விட்டே
பிரேமன், சீச்சி! பிழைத்திட நினைந்தால்
பிரேமன் பிழையில் பெரியவன் அல்லனோ?"

தியோ :—"அதுவே யாயின் அபரா தத்தினைப்
பெறுவ தாகப் பேசிய இந்நாள்
நின்னுயிர் கொடுத்து நேயன் தாமனின்
மன்னுயிர் காத்திட மதிப்ப தாகிய
அவ்வொரு நாட்டம் அகத்துட் கொண்டோ
இவ்விதம் பின்னையும் இவ்விடம் திரும்பினை?"

பிரே :—"ஆமாம். எண்ணம் அதுவே! வேறிலை.
கோமான்! நின்போல் கொடுங்கோல் மன்னர்
இரக்கம் இல்லாமல் எளியவர் தம்மனம்
கலக்கமும் துயரமும் கவலையும் மேற்படச்
சுமத்தும் கடுந்தொழில் சுமக்க வேண்டியும்
சேமம் விட்டுநான் சென் று வரும்படி
தாமன் காட்டிய தயாவுளம் தன்னல்
தனக்குத் தானே தந்துகொண் டதோர்
கனத்த அபாயம் களைய வேண்டியும்
ஏகினன் இங்கே! என்கடன் இதுவே!"

தியோ :—(தாமனை நோக்கி) "என்னே! தாம! இதுநீ கேளாய்.
பின்னும் திரும்பிப் பிரேமன் வரானேல்
மன்னவன் என்னை மற்றவன் பொருட்டு
இன்னுயிர் வாங்குவன் என்றொரு அச்சம்
உண்மை யாக உனக்கிருந் தில்லையோ?"

(தொடரும்)

---

# வண்ணாரப் பெரியாண்டி

[க. ப. சந்தோஷம். B A.,L.T.,]

(உகூக-ம் பக்கத்தொடர்ச்சி)

கரித்தோலையும் புலித்தோலையும் உடுத்திக்கொண்டது பற்றி முக்கணன் மீது வண்ணானுக்குக் குறையுண்டென்று முன் கண்டோம் என்றாலும், சிவன்பேரில் அவனுக்குப் பற்றுண்டு. உடலிற்பாதி உமையவளுக்களித்த சிவனது செயலை நினைக்க வண்ணானுக்கு அடக்கொணா வியப்பும் நயப்பும் உண்டாகின்றன. மகளிருடைய உரிமையை நிலைநாட்ட இதை விட்டுப் பிற சான்று தேடவேண்டுவதில்லை. தன்னைப்போலவே தன் மனைவிக்கும் உரிமையும் உயர்வும் உண்டென்பதை வண்ணான் மிகத்தெளிவாகத் தன் வாழ்க்கையில் விளக்குகின்றான். எங்ஙனெனின், சற்றேனும் வஞ்சகமின்றி அவன்தன் வேலையிற் பாதியைத் தன்மனைவிக்களித்து இன்ப நுகர்கின்றான். காதல் மனைவியைக் கைவிட்டுக் கானும் மலையுங்கடந்து பொருள்தேடிச் செல்லும் வழக்கம் வண்ணார் போற்றுவதன்று.

ரு. முடன்றக்கான் முகம்போல வொண்கதிர் தெறுதலிற்
சிறருங் கணிச்சியோன் சினவலி னவ்வெயி
லேறு பெற்றுதிர் வனபோல் வரை பிளந்தியங்குந
ராறு கெட விலங்கிய வழலவி ராரிடை

மறப்பருங் காதலிவளீண் டொழிய
விறப்பத் துணிந்தனிர் கேண்மின் மற்றைஇய;
கக. தொலைவாகி யிரந்தோர்க் கொன்றீயாமை யிழிவென
மலையிறந்து செயல்சூழ்ந்த பொருள் பொருளாகுமோ
நிலை இய கற்பினு ணீநீப்பின் வாழாதாண்
முலையாகம் பிரியாமை பொருளாயி னல்லதை;
(பாலைக்கலி 5 : 11.)

என்றதுபோல் உழைப்பிலும், ஒய்விலும், பெருமையிலும், வறுமையிலும், வீட்டிலுங் காட்டிலும் இருவரும் ஒருவருக்கொருவர் ஆதாவாயிருந்து பொருளீட்டுவதையே வண்ணர் பெருநெறியாகப் பிடித்தொழுகுகின்றனர். இல்லாளுங் கணவனும் ஒருவருக் கொருவர் இணையாயிருப்பதில் இவர்களுக்கு இணையே கிடையாது. அவர்களுக்குள் ஏதாவது சிறு வேற்றுமை ஏற்பட்டுச் சொற்கள் பெருகிக் கைகலக்க நேரிடுமாயின், கொண்டையைப் பிடிக்கும் வண்ணனுக்குத் தான் தாழ்ந்தவளல்லள் என்பதை வெளிப்படுத்தும் வண்ணம், வண்ணாத்தி குடுமியை எட்டிப்பிடிப்பதுண்டு. நமது நாட்டின் முன்னேற்றத்தைக் கருதிப் பெண்களின் நிலைமையை உயர்த்த முயல்கின்றவர்கள் இதை மறக்கலாகாது. மகளிரின் நிலைமை உயரவேண்டுமாயின் கல்வி இன்றியமையாததென்று பலர் சொல்லக் கேட்டிருக்கின்றோம். கல்வி இல்லாமலே வண்ணாரப் பெண்கள் உயர்ந்திருப்பது நமக்கு வியப்பைத் தருகின்றது. பிறர் அறியாத ஆழ்ந்த இயற்கையறிவு வண்ணருக்கு இருக்கிறதுபோலும். ஒரூரில் பாரதக் கதையை நெடுநாள் ஆவலுடன் கேட்டுவந்த வண்ணனொருவன் தன் மனைவியுடன் இரவில் பேருவகை பொங்கப் பேசிக்கொண்டிருக்கையில் பொதுவர் (இடையர்) மகளிர் பல்லாயிரத்தவருடன் கலந்து களித்திருந்த கண்ணனைப்போல் அமைப்பு தனக்கு வாய்க்கவில்லையே என்று இரங்கிக் கூறினன் என்றும், இதைக் கேட்ட வண்ணாத்தி ஐவருக்கு வாழ்க்கைப்பட்டுப் பெருநலம் பெற்றிருந்த பாஞ்சாலியைப்போல் தானிருக்கவில்லையே என்று ஏக்கமடைந்ததாகவும் ஒரு கதை சொல்லுவார்கள். இதுவும் பெண்கள் உரிமையைக் காட்டும்- ஆனல் வண்ணருக்குள்ளும்

பெண்கள் உரிமை எப்பொழுதும் பெரிதாகப் பாராட்டப்பட்டு வந்ததாகத் தெரியவில்லை. இதைப் பற்றிச் சிறுது விரித்துக் கூறவேண்டுமாதலால் அடுத்த முறை வரை பொறுத்தல் நன்று.

(தொடரும்)

---

## மதிப்புரை

அகநானூறு

எட்டுத்தொகையுள் ஒன்றான அகநானூறு இற்றைக்கு ஓரைந்தாண்டு முன்னர் மயிலாப்பூர் வே. இராஜகோபாலையங்காரவர்களால் வெளியிடப்பட்ட தென்பது கற்றாரனைவராலும் நன்கறிந்த தொன்றே. அப்போது அப்பதிப்புக் கடவுள் வாழ்த்துக்கும் முதற்றெண்ணூறு பாட்டிற்குமுள்ள பழைய உரையோடும் பழைய பாயிரத்தோடும், பாடினோர் வரலாறு பாடப்பட்டோர் வரலாறு முதலியன சேர்க்கப்பெற்றும் வெளியிடப்பெற்றது.

அதன் கண் உரையில்லாத இறுதி 310-பாடல்களுக்குக் கற்றார் சிலரேயன்றி மற்றார் பொருள் காணமாட்டாமையால் அப்பதிப்புத் தமிழ் மக்கட்குப் பெரும் பயன் தாராதாயிற்று.

இப்போது நம் ஐயங்காரவர்கள் அந்நூலின் இரண்டாம் பதிப்பினை மேற்கொண்டு பழைய உரையில்லாத பாடல்களுக்கு உரை யொன்று எழுதி வந்து, முதற்பகுதியாகக் களிற்றியானை நிரையினை வெளியிட்டுள்ளார்கள். இப்பதிப்பில் இவர்கள் உரையில் பதவுரை, அந்வயம், விசேடவுரை, குறிப்பிற் பொருள் செய்குநவான மன், மற்று, ஓ, ஏ என்ற இடைச்சொற்கட்கு உரிய பொருள் இலக்கண அமைதி முதலியன காணப்படுவதனோடு, உள்ளுறை இறைச்சிப் பொருள்கள் பல பல பாடல்களிற் கண்டு களிக்கின்றோம்.

இப்பெருநூற்கு இத்தகைய விளக்கமான உரை ஒன்று பெரிதும் விரும்பற்பாலது. ஐயங்காரவர்கள் முயற்சியை நாம் பெரிதும் பாராட்டுகிறோம். இப்பகுதியின் விலை ரூபா-4.

இரண்டாம் பகுதியான மணிமிடை பவளமும் விரிவான உரையுடன் அச்சாகி முடியுந் தருணத்திலிருக்கின்றது கேட்டு மகிழ்கின்றோம். அதன் விலையும் ரூபா-4 தான்

வேண்டுவோர் எமக்காவது உரையாசிரியருக்காவது எழுதிப்பெறலாகும்.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது

சிலம்பு ச } மெய்கண்டான் யாண்டு-எாஅ ஆடித்திங்கள் 1926ஆ ஜூலை மீ—ஆகஸ்டு மீ { பரல் எ

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## இறையனாரகப் பொருள்

[கா. சுப்பிரமணியப் பிள்ளை M. A., M. L.]

(மூன்றும் சிலம்பு ௩௭௫-ம் பக்கத் தொடர்ச்சி)

### பாங்கற் கூட்டம்

பாங்கற் கூட்டமென்பது தலைவன் இயற்கைப் புணர்ச்சியைத் தனது பாங்கனுக்குத் தெரிவிக்க அவன் அதன் நயத்தைத் தானே உணர்ந்து இருவரது கூட்டத்திற்கும் இணக்கமாய் நிற்றலேயாம். தலைவன் பாங்கனைக் கண்டு கலப்பதே பாங்கற்கூட்டமெனப் படும். தலைவன் பாங்கனைத் தலைப்படாது இயற்

கைப் புணர்ச்சி நடந்த இடத்தைத் தானே அடைதலும் உண்டு. அஃது இடந்தலைப்பாடு எனப்படும். தலைவனுக்கு மிக்க இணக்க மான பாங்கன் அமையாத விடத்து பாங்கற் கூட்டம் நிகழ்வ தற்கு ஏது வில்லை. தலைவியின் தோழியைச் சார்ந்து குறையி ரந்து தலைவியை யடைதல் தோழியிற் கூட்ட மெனப்படும். களவி யலுள் பாங்கனும் தோழியும் வாயிலாக மாட்டார்கள். பாங்கன் தலைவன் தலைவிகளது நட்பினை அறிந்திணங்குவதே யன்றிக் கூட் டத்திற்கு இடையூறுகிய ஊடலை நீக்குவதில்லை. அவ்வாறே தோழியும் கூட்டத்திற்குத் துணையாவதன்றிப் பொறுமை நீக் கப் பயன் படுவதில்லை. இருவரது கூட்டுறவையும் பாங்கன் அறி தல் களவொழுக்கத்திற்குப் பின் வரைவுகடாதல் முதலியவற்றிற் குப் பயன்படுதற் பொருட்டு வேண்டப்படும். அவ்வாறே தலை வியின் பெற்றோர் முதலியோர்க்கு அறத்தொடு நிற்பதற்கும் களவொழுக்கத்திற்குத் துணைபுரிவதற்கும் பாங்கி இருவரது கூட் டுறவையும் தெரியவேண்டியது இன்றியமையாததே. உலகவழக் கத்துள் தலைவன் தலைவியாது கூட்டத்திற்குப் பாங்கன் பாங்கிகள் வாயிலாதல் கூடும். அது சிறப்பாக எடுத்துக் கொள்ளப்பட்ட களவொழுக்கத்திற்கு இழிவு தருவதாதலின் கூட்டக் கூடல் களவிற்கு இல்லையென்று நூலாசிரியர் நான்காஞ் சூத்திரத்துள் விதந்தோதினர். பாங்கற் கூட்டமென்பது பலதுறைப் படுத்து விரிவாகத் திருச்சிற்றம்பலக் கோவையாருட் கூறப்பட்டன. இறை யனாரகப் பொருளுள் அதன் விரிவு கூறப்படவில்லை. அந்நூலின் உரையுள் பாங்கன் வினுதல் உற்றதுரைத்தல், கழறியுரைத்தல், கழற் றெதிர் மறுத்தல், கவன்றுரைத்தல், இயலிடங்கேட்டல், இயலிடங் கூறல், வற்புறுத்தல், குறிவழிக்காண்டல், தலைவனை வியத்தல், மொழிபெற வருந்தல், நாணிக்கண் புதைத்தல், இன்றி யமையாமை கூறல் என்னும் துறைகட்கே செய்யுள் எடுத்துக் காட்டப்பட்டன. திருவள்ளுவர் திருக்குறளுள் தலைமகளது இயல்புரைத்தலும் புணர்ச்சி மகிழ்தலும் தலைவியின் வியப்புமே பாங்கற் கூட்டத்தின் பகுதிகளாகக் கூறப்பட்டன. திருச்சிற்றம் பலக் கோவையாருள் பாங்கனை நினைதல், வலியழிவுரைத்தல், விதியொடு வெறுத்தல், பாங்கன் நொந்துரைத்தல், குறிவழிச்

சேரல், கண்டமை கூறல், செவ்வி செப்பல், அவ்விடத்து ஏகல், மின்னிடை மெலிதல், பொழில் கண்டு மகிழ்தல், உயிர் என வியத்தல், தளர்வகன்றுரைத்தல், கண்புதைக்க வருந்தல், நாண் விட வருந்தல், மருங்கணைதல், ஆயத்துய்த்தல், நின்று வருந்தல் என்னும் துறைகள் மிகுதியாக வகுக்கப்பட்டுள்ளன.

தஞ்சைவாணன் கோவையுள் பாங்கனை நினைதல் என்பதற்குப் பதிலாகப் பாங்கனைச் சார்தல் என்னுந் துறை அமைக்கப் பட்டுள்ளது. பாங்கன் நொந்துரைத்தல் என்பது இருபகுதியாகக் கூறப்பட்டது. அவையாவன : பாங்கன் தன் மனத்தழுங்கல், தலைவனோடு அழுங்கல் என்பன. வற்புறுத்தல் என்னும் துறை இறைவனைத் தேற்றல் என்று பேரிடப் பட்டிருக்கிறது. தலைவனை வியத்தல் என்பதற்கு முன் இகழ்ந்ததற்கிரங்கல் என்னும் துறை அமைக்கப் பெற்றது. தலைவியை வியத்தல் என்னும் துறை இறைவியைக் காண்டல் என்பதற்கு வேறாக அமைக்கப் பெற்றது. கண்டமை கூறல், செவ்வி செப்பல் என்னும் இரண்டினையும் தலைவி நிலை கூறல் என்னும் துறையுள் தொகுக்கப்பட்டது. உயிரென வியத்தல் என்பதற்குப் பதிலாகக் கலவியின் மகிழ்தல் என்பது அமைக்கப்பட்டது. மொழிபெற வருந்தல் முதலியன தஞ்சைவாணன் கோவையில் பாங்கற்கூட்டத்துள் கூறப்படவில்லை. 'பாங்கியொடு வருகெனப் பகருதல்' என்னும் துறை இக்கோவையுள் மாத்திரம் புதிதாகக் காணப்படுகின்றது. ஆயத் துய்த்தல் என்பது பாங்கிற் கூட்டல் என்னும் பெயர் பெற்றது.

'பாங்கனை நினைதல்' என்னும் துறை களவியலுரையுட் கூறப் படவில்லை. பாங்கனல் பாவையை யடையலா மென்ற கருத்துப் பற்றித் திருக்கோவையாருள் அது கூறப்பட்டது. அது வரைவிற்குச் சிறக்குமே யன்றிக் களவொழுக்கத்திற்குச் சிறக்காது. பாங்கன் வினுதல் கூறுமிடத்துத் தலைவனது திருவொளி மயங்கியதைக் குறித்து வினு எழுந்ததாகக் கூறப்பட்டது. திருக்கோவையாருட் 'பாங்கன் வினுதல்' என்னும் துறையின் கீழ்ச் சங்கத் தமிழ் ஆராய்ச்சியினுலும் ஏழிசை ஆராய்ச்சியினுலும் தலைவனுக்

குத் தோள் மெலிவு எய்தியது போலும் என்னும் கருத்துடைய பாட்டு எழுந்தது.

சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்ப லத்துமென் சிந்தையுள்ளு
முறைவா னுயர்மதிற் கூடலி னய்ந்தவொண் டீந்தமிழின்
றுறைவாய் நுழைந்தனை யோவன்றி யேழிசைச் சூழல்புக்கோ
விறைவா தடவரைத் தோட்கென் கொலாம்புகுந் தெய்தியதே.

இது மிகவும் நயமிக்கது.

தஞ்சைவாணன் கோவையுள் ஒளி குறைந்ததும் தோளும் உள்ளமும் வாடியதும் சுட்டியது காண்க. இதனுள் குறைந்த ஒளிக்கு சூர் என்னும் தெய்வப் பெண் தீண்டின உடலொளியை உவமித்தார்.

"சிலம்புறை சூர்வந்து தீண்டினபோ லொளிதேம்பி யிவ்வா
றுலம்புனை தோளுநின் னுள்ளமும் வாடியுருகி நின்று"

என்றது காண்க. இதனுள் இறையனாரகப் பொருட் கருத்தும் திருக்கோவையார்க் கருத்தும் ஒன்று சேர்க்கப்பட்டன.

(தொடரும்)

---

## நூல்

[M. S. பூர்ணலிங்கம்பிள்ளை, B.A.; L.T.]

மனிதனுக்கு அறிவு இருவகைத்தாம். இயற்கையறிவு பிறப்பிலமைந்தது. அது தந்தை, தாயர், மூதாதையர் அறிவாம். செயற்கை யறிவு நூலறிவு, பலருடன் பழகுவதனலுண்டாகுமறிவு நூலறிவு. பிறருடைய இயற்கை யறிவுஞ் செயற்கை யறிவுங் கலந்து தெளிந்து வரையப்பட்ட தொன்றைப் படிப்பதனல் வருமறிவு. நூலில் நாற்பயனும், எழுவகைமதமும், பத்துக் குற்றங்கள் நீங்கிய பத்து அழகும், முப்பத்திரண்டு யுத்தியும் பொருந்தி யிருப்பதைக் காணலாம். அது முதனூல் வழிநூல் புடை நூலென மூன்று வகைப்படும். நாற்பயனவன: அறம், பொருள், இன்பம், வீடு. எழு மதம் அல்லது மனத்தின் கொள்

கை யாவன : உடன்படல், மறுத்தல், களைதல், நிறுத்தல், துணி தல், குற்றமே காட்டல், தம்மதங்கொளளல். குற்றங்கள் பத்தா வன : குன்றக்கூறல், மிகைபடக்கூறல், கூறியது கூறல், மாறு கொளக் கூறல், வழுவுச்சொல் புணர்த்தல், பொருள்மயங்கவைத் தல், பொருளின் சொற்களை வெற்றெனத் தொடுத்தல், எடுத் ததை விடுத்து வேறொன்றை விரித்தல், சொல்லும் பொரு ளும் போகப் போகத் தேய்ந்து முடிதல், பயனில் சொல் லல். பத்து அழகு ஆவன : சுருங்கச் சொல்லல், விளங்கவைத் தல், இன்பந்தருதல், நல்லசொல் வழங்கல், ஓசையுடைமை, ஆழ முடைமை. முறையில் வைத்தல், உலகமலையாமை, விழுமியது பயத்தல், தக்க மேற்கோள் காட்டல். யுத்தி முப்பத்திரண்டா வன : எடுத்தாளப்போவதிதுவெனல், இயல்களை முறைப்படி வைத்தல், தொகைப்படுத்திக் கூறல், பிரித்துக் காட்டல், முடித் துக் காட்டல், முடிவிடங்கூறல், ஆசிரியவசனங் காட்டல், பிறர் கோட்பாடு கூறல், சொற்பொருள் விரித்தல், தொடர்ச்சொற் புணர்த்தல், இரட்டுறமொழிதல், ஏதுவின் முடித்தல், ஒப்பின் முடித்தல், மாட்டெறிந்தொழுகல், இறந்தது விலக்கல், எதிரது போற்றல், முன்மொழிந்து கோடல், பின்னது நிறுத்தல், விகற் பத்தின் முடித்தல், முடிந்தது முடித்தல், உரைத்து மென்றல், உரைத்தாமென்றல், ஒருதலை துணிதல், எடுத்துக் காட்டல், எடுத்தமொழியினெய்த வைத்தல், இன்னதல்ல திதுவென மொழிதல், எஞ்சிய சொல்லி னெய்தக் கூறல், பிறநூன்முடிபிற் குடன்படல், தன்குறிவழக்க மிகவெடுத்துரைத்தல், சொன்முடி வில் பொருள் முடித்தல், இனம் இனமில்லாதது இவற்றைக் கூட்டி முடித்தல், உய்த்துணர்வைப்பு. இவையன்றி செய்யுள் வழக்கும், உலகவழக்கும் முரண்படாதவாறு பொருந்தவமைத் துக் காட்டுவதே நூலெனப்படும். நூலின் போக்கு பலவகைத் தாம். ஆறு இடையறுமல் ஒருமுகமாக ஓடுவது ஆற்றொழுக் கெனப்படும். முன்னும் பின்னும் கவனித்துப்போதல் அரிமா அல்லது சிங்கநோக்கு எனப்படும். இவைவிட்டுக் குதிக்கின்ற தவளை போன்று தொகுத்துக் கூறுமல் விடுத்து விடுத்துப் பொருளைக்கூறல் தவளைப்பாய்ச்சல் எனப்படும். பருந்து உயர்ந்த

நிலையினின்று இரையை நோக்கித் தலை குப்புற வீழ்தலை யொத்துக் கொண்ட பொருளைப் படிப்படியாக வெளியிடாமல் திடீரென்று கூறுதல் பருந்தின் வீழ்ச்சி எனப்படும். இத்தகைய இலக்கணம் அமைந்து ஆக்குவோர் புலவரெனப்படுவர், அமைக்கப் பட்டதை முற்று முணர்ந்தோர் புலமை வாய்ந்தோரெனப் படுவர். நூலரென்பது இருவரையுங் குறிக்கும் பொதுச் சொல்லாம்.

"நூலெனப் படுவது நுவலுங் காலை
முதலும் முடிவும் மாறுகோ ளின்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
உண்ணின் றகன்ற உரையொடு பொருந்தி
நுண்ணிதின் விளக்கல் அதுஅதன் பண்பே."

இயற்கை யறிவும் நூலறிவுஞ் சேருமாயின் அவற்றிற்கு மேலான தொன்று மில்லை. இரண்டும் அமைச்சருக்கு வேண்டுவன.

"மதிநுட்பம் நூலோ டுடையார்க்கு அதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை."

கவிவாணரும் புலமை வாய்ந்தவருமாகிய நூலோர் ஒருவரினு மொருவர் சிறந்து விளங்குவாராயின் அது விரும்பத் தக்கது. வேலைப்பிடித் தெறிய வல்லானொருவன் யான் இன்னணம் வெற்றி பெறுவேனென்பானாயின் அவன் தன்மை விரும்பப் படும். அதி நுட்பமானவனே தூதுவனாகத் தெரிந்தெடுக்கப் படுவான். அவனே வெற்றிவழியை நாடுவான்.

"நூலாருள் நூல் வல்லனாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப் பான் பண்பு."

நூல் பலவற்றைக் கற்றவன் அவைக்களம் புக அஞ்சுவானாயின் அவன் கல்வி பயன் பெறாது. எங்ஙனமெனில், கோழைகள் தம் கையில் வாளை ஏந்துவதாற் பயனில்லை யன்றோ? எதிர்பாராதது நேரிடுமாயின் மனவுறுதி யில்லாத பேடிகள் வாளைக் கை நழுவ விடுவார்கள். அன்றேல் அதனைப் பகைவன் கையில் கொடுத்துத் தன்னுயிரையு மிழப்பானன்றோ?

"வாளொடு என் ? வன் கண்ணர் அல்லார்க்கு
நூலொடு என் ? நுண் அவை அஞ்சுபவர்க்கு"

"பகையகத் துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து
அஞ்சும் அவன் கற்ற நூல்"

தூதுவரன்றி ஒற்றரும் உரைசான்று நீதி நூலும் மன்னருக்குக் கண்களாம். எத்தொழிற்கும் நூலறிவு வேண்டும். அரசனுக்கு அரண் முறை நூல் அகத்தியம். மருத்துவருக்கு மருத்துவ நூலறிவு தீராதது. காவலன் காவானெனின் "அறுதொழிலோர் நூல் மறப்பர்." நூற் பயிற்சி செய்வார்க்கு அமைதி இன்றியமையாதது. அமைதி அரசனால் விளையும். அரணின்றி அரசனுமிலன்.

"உயர்வு அகலம் திண்மை அருமை இந்நான்கின்
அமைவு அரண் என்றுரைக்கும் நூல்."

"மிகினும் குறையினும் நோய் செய்யும் நூலோர்
வளி முதலா எண்ணிய மூன்று"

உடற் செம்மை நாடுவோருக்கு ஏற்பதை உண்க, பசித்துண்க, அளவறிந்துண்க, எனப் பலர் கூறுதலைப் பலமுறை கேட்டுளோம். வைத்தியரோ உடலிலுள்ள வளி, தீ, நீர் இவற்றிற்கு வாதம், பித்தம், சிலேட்டுமம் என்ற ஒலி நிறைந்த சொற்களை யடுக்கி இவற்றி லேதேனும் அதிகப்படினும் இருக்க வேண்டிய அளவிற்குக் குறைபடினும் நோயுண்டாகு மென்பர்.

அந்தத்தை அணவுவோராகிய முனிவர்களும், அழகிய குளிர்ந்த தன்மைபடைத்த அறிவர்களும் ஞான நூல்கள் பயிலுவர். அன்னார்க்கும் புரவலன் துணை தேவை என்னு மிடத்தில்

"அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்"

என்றுளார் நாயனார்.

நல்லவர்களுடைய சேர்க்கை நாளுந் தலைப்படும். எதுபோ லெனில் ஒன்றை மாறி மாறிப் படிக்கும்போது புது நயங்கள் வெளிப்படும்.

"நவில் தொறும் நூல்நயம் போலும் பயில் தொறும்
பண்புடை யாளர் தொடர்பு"

ஒருவர் தம் விருப்பத்தைப் பிறரறியாமல் உய்ப்பராயின் பகைவர் எண்ணம் பயன் படாது என்ற குறளில் நூல் என்ற சொல் எண்ணம் என்ற பொருளில் வந்துளது.

"காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல்"

வரையப்பட்ட நூலன்றி பருத்திநூல், பட்டுநூ லென்ற இயற்கைப் பொருள் தரும் நூலு முள. அதனையும் நாயனர் கூறியுளார்.

"மணியில் திகழ்தரும் நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வதொன் றுண்டு"

கோக்கப்பட்ட பல மணிகளுக்கிடையே நூல் தோன்று வது போல பெண்ணின் அணியினின்று அறியக் கூடிய குறிப்பு ஒன்றுளது.

---

# தாய்

[M. S. பூர்ணலிங்கம்பிள்ளை, B.A., L.T.]

நாகரிகம், ஏற்படு முன் ஆடவரும் பெண்டிரும் காதல் கொண்டு கட்டுப்பாடின்றித் திரிந்திருப்பரென்று மக்கள் வரலா றுரைப்பவர் கூறுவர். ஒருவனுக்குப் பல மடந்தையரும், ஒரு காரிகைக்குப் பல காதலரும் இருந்து வாழ்ந்தனர் என்பதும் வெளிப்படை. ஏனைய நாடுகளில் ஆண் தலைமை நிகழ்ந்து வரு வதும் திருவாங்கூரில் பெண் தலைமை பெற்று வாழ்வதும் எவரும் அறிந்தனவேயாம். தாயகம், தாயாதிபாக மென்ற சொற்றொட ரால் தாயின் தலைமை விளங்கும். தகப்பனின்னுனென்று பிள்ளை

அறிவது தாயின் மொழியாலன்றோ ? ஒருமாது ஒரு காதலனின்றிப் பலரைக் காதலித்த நாளில் பிறக்கும் பிள்ளைக்குத் தகப்பன் இவனென்று தாயன்றி வேறெவருஞ் சொல்ல இயலாது. ஒரு நாயகனையுடைய மாதாசியும் தானீன்ற பிள்ளைக்குத் தகப்பனைக் காட்டி அறிவுறுத்தலைக் காண்கின்றோம். 'அப்பா', 'அய்யா' என்று கூறுமாறு சிசுவிற்குக் காட்டி மொழிவது அம்மையே. கருக்கொண்ட நாள் முதல் பிள்ளைப்பேறு வரை பத்துத் திங்களிலும் பல்வகைத் துன்பமுற்று, வயிறு வாய்த்து, ஓங்காரமெய்தி, உடல் மெலிந்து, உண்ணக்கிடக்க வருத்த முற்றுப் பிரசவவேதனைப் படும்போது பிரசவமாய், தன் வயிற்றினின்று வெளிவந்த பிள்ளையைபனென்ற போது கரையிலாவின்ப முறுவது தாயே ஆவள். பிறந்த பின்னரும் தாயே பிள்ளைக்கு அமுதமளித்துச் சீராட்டிப் பாராட்டுகின்றாள். 'தாய் மனம் பித்து' என்பது முதுமொழி. தாய் மனங்கரைதல் போன்று எவர் மனம் கரையும்? "பொல்லாத சேயெனில் தாய் தள்ளல் நீதமோ? புகலிடம் பிறிதுமுண்டோ?" என்றனர் தாயுமானாரும். 'கற்று', 'கன்றுடைய ஆ' என்ற தொடர் பரிவினை விளக்க உவமமாக வருவதை நூல்களிற்காணலாம். 'கற்றுதரல் போல', அதாவது கன்றுடைய பசுவானது பால் சுரந்து தருதல் போல என்பதாம். 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்', என்பதில் அன்னையே முதற்றெய்வம், பிதா அன்னையறிவித்த தெய்வமாகும். இருமுது குரவரும் தெய்வமாக வணங்கத் தக்கவர். 'தந்தை தாய்ப்பேண்' என்ற முதுமொழியில் தாய் பின் வைக்கப்படுவதற்கு நியாயந்தோன்றும். தனக்கு மூத்தவனைத் தாலிகட்டும் வழக்கம் இந் நாட்டிலில்லை. தகப்பன் தாய்க்கு மூத்தவனே. பேணுகின்ற முறையில் மூத்தவனாகிய தகப்பன் தலைப்படுகின்றான், இளைஞளாகிய தாய் பின்வருகின்றாள். கல்வி பயிற்றுவிக்கு முறைமை தகப்பனுக்கும் உடலைப் பேணு முறைமை தாய்க்கும் ஏற்பட்டுள. "தந்தை சொன்மிக்க மந்திரமில்லை", "தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை" என்பனவற்றால் இவ்வுண்மை விளங்கும்.

ஒருவன் சிறுதுயரம் எய்திய பொழுது 'அப்பா' என்றும், பெருந்துயரெய்திய பொழுது 'அம்மா' வென்றும், உடல் வருத்த

மும் மனவருத்தமும் ஆற்றுளுத வமயத்தில் 'அப்பா, அம்மா' வென்றும், மாறியும் அலறுதல் நாடொறுங் காண்கின்றோம். எம்பெருமானைத் தகப்பனென்று கொள்ளுதல் இயல்பு. தாயின் கடமையையுஞ் சேர்த்துச் செய்யும் அப்பனை அம்மையப்பன், தாயப்பனென்பர். திருசிரத்தின்மேற் பள்ளிதொண்டத னிமித்தம் திருச்சிராப் பள்ளி என்ற பெயர் பெற்றுத் திகழும் தளியின் கண்ணுள்ள ஈசனைப் பாடிய மருள்நீக்கியார்,

"தாயுமாய் எனக்கே தலை கண்ணுமாய்ப்
பேயனேனையும் ஆண்ட பெருந்தகை"

என்று வழுத்தியுள்ளார். இதுகாறுங் கூறியவற்றால் தாயின் அருமை பெருமை விளக்கப்பெற்றது.

ஒரு தாய்க்குப் பிறந்த பிள்ளைகளில் குணவேறுபாடுகள் காணப்படும். தாய் பிள்ளைகளிடத்தில் விழைவது நல்லொழுக்கமே யாம்.

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோனெனக் கேட்ட தாய்"

மகன் களியாட்டயருங் குடிகேடனயின் பிள்ளையைத் தாயும் வெறுப்பாள்.

"ஈன்றாள் முகத்தேயும் இன்னாதல் என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி"

ஒழுக்கம் விழுப்பந்தரலால் சான்றோர் பழிக்கும் வினையை மக்கள் செய்யாதிருக்கக் கடவர். தாய் பசித்திருத்தலைக் கண்டு பரிவுறாத மகனுமுளனோ?

"ஈன்றாள் பசிகாண்பா னாயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை"

அறிவும், மாண்பும், பண்பும் அமைந்த மகனைத் தாய் அருமையாக நடத்துவாள்; கல்லாத மூடன் தலைப்பிள்ளையாயினும் அவனை உலகம் போற்றாது.

"பிறப்போரன்ன உடன் வயிற்றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயு மனந்திரியும்"

ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னாது, அவருள்
அறிவுடை யோன்ஆறு அரசும் செல்லும்"

தாயைப் போல மகள், என்பது பழமொழி, மகளையடித்து வளர், மகளைப் போற்றி வளர், என்பது மற்றொரு முதுமொழியாம். பெண் மக்கள் பேரில் தாயாருக்குக் கண்ணுங் கருத்தும் யாண்டுமுள. கடுங் குற்றஞ் செய்யினும் தாய் மகளைப் பழிகூறுள். ஊரார் அலர் தூற்றுவரேல் தாம் அதனை மறைக்க முயலுவளே யன்றி அதற்கு ஒப்பமிடாள். அதனைக்கேட்ட அளவிலே கடுஞ்சொல்லே அவள் வாயினின்று புறப்படும். கடுங்கோபம் கட்பொறி காட்டும் காம நோய் கொண்ட மகள் தன் அன்னை கூறிய கடுஞ்சொல்லை உவமித்துக் கூறு மிடத்து,

"ஊரவர் கௌவை எருவாக அன்னை சொல்
நீராக நீளும் இந்நோய்"

என்றனள். காமநோயாகிய பயிருக்கு ஊரிலுள்ள பெண்களுடைய பழிச்சொல் எரு, உரம், போலவும் தாயின் சொல் தண்ணீராகவும் இருத்தலால் காமப்பிணியால் உண்டாய அலர் வளருகின்றது. இவ்வாறு வளர்வதால் மணஞ்செய்தலே கடமையாகின்றது. அதனைக் காலந் தாழ்க்காது முடித்தல் தகைமை என்பது விளங்கும்.

சங்க நூல்களில் நற்றாய், செவிலித்தாய் என இருவகைத் தாயர் காணப்படும். பெற்ற தாய் நற்றாய், வளர்த்த தாய் செவிலித்தாய். களவு, கற்பு நிகழ்ச்சிகளில் இருதாயருஞ் செய்யுங் கடப்பாடுகளுள், நற்செவிலித்தாயாகிய தோழி கூற்று நிகழும் இடம் பலவும் தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியலில் "நாற்றமுந் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்" என்ற தலைப்புள்ள 32-ம் சூத்திரத்தில் தொகுத்துக் கூறியிருப்பதைக் காண்க.

தாயார் ஐவகைய ரென்பர் பெரியர். ஐவரும் முலைத்தாய், ஊட்டுந்தாய், கைத்தாய், பாராட்டுந்தாய், செவிலித்தாய் ஆகிய இவரேயாம். வேறுவகையிலும் ஐந்தாயர் கூறுவதுண்டு, அன்னை தன்னையீன்றாள், தன் தேவியை ஈன்றாள், அண்ணன் தேவி, குருவின் தேவி, அரசன் தேவி எனப்படுவர்.

"மக்களில்
ஒண்மையவாய்ச் சான்ற பொருளில்லை;
ஈன்றாளோடு என்னகடவுளும் இல்"

"என்செயினும்
தாயிற் சிறந்த தமர் இல்லை"

"தாய் முலையின்
பால் நோக்கி வாழும் குழவிகள்"

"குழவி பிணியின்றி வாழ்தல் இனிதே.
குழவி தளர் நடைகாண்டல் இனிதே."

"எஞ்சா விழுச்சீர் இருமுது மக்களைக்
கண்டெழுதல் காலை இனிது"

---

## *சிவபிரான் கருணையுஞ் சீவர்கள் கடமையும்

[ஸ்ரீ மு. கதிரேசச் செட்டியார் அவர்கள்]

அறிவிற்சிறந்து விளங்கு மாட்சிமிக்க அக்கிராசனாதிபதியவர்களே!
இவ்வவைக்கண் விளங்கும் அன்புமிக்க ஆன்றோர்களே!

பெரியோர்களாகிய நுங்கள் அன்புரிமைசான்ற ஆணையைக் கடக்க அஞ்சி யொல்லும் வகையான் மேற்கொள்ள விரும்பியும், திருவருட்டுணை கொண்டும் இப்பொழுது செயக்கடவதாகிய என் கடமையை நிறைவேற்றத் துணிகின்றேன்.

---

*(இது, பூவாளூர்ச் சைவசித்தாந்த சங்கத்தின் ௫-வது ஆண்டு நிறைவு விழாவில் வாசிக்கப் பெற்றது.)

யான் மேற்கொண்ட "சிவபிரான் கருணையுஞ் சீவர்கள் கடமையும்" என்னும் இவ்விஷயத்தை விரித்துக் கூறற்கு இடந்தருந் தேவாரத் திருப்பாசுரம் வருமாறு:—

நன்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
றென்கடம்பைத் திருக்கரக் கோயிலான்
றன்கடன்னடி யேனையுந் தாங்குதல்
என்கடன்பணி செய்து கிடப்பதே.

இப்பாசுரத்தின் அருளொளியும் பொருளுமே இவ்விஷயத்தை விளக்கற் குதவியாயின வென்பதை யிறுதியிற் கூறப்படுந்தொகை யுரைக்கண் முடித்துக் காட்டுவேன்.

மறையாகமங்களானும், அவற்றின் முடிவு நூல்களானும் பொதுவாகவுஞ் சிறப்பாகவும் விளக்கப்பட்ட பதிப்பொருள் சிவபிரானே யென்பது அந்நூல்களைச் செவ்விதினாராயு நுண்ணறிஞர்க்கெல்லாம் ஒத்ததொன்றாம். இப்பதிப்பொருளைக் கடவுண் முதலிய பொதுப்பெயர்களான் வேதநெறியொழுகும் எல்லாச் சமயத்தார்களும், சிவன் முதலிய சிறப்புப்பெயர்களாற் சமயாதீதமாகிய சைவ நெறி நிற்போருங் கூறுப. கடவுள் என்னும் சொற்குப் பொருள் கடந்தவரென்பதாம். எவற்றைக் கடந்தவரெனின், சுட்டியறியப்படுங் காரியரூபப் பிரபஞ்சத்தையும், அதனாற் றத்துவ தாத்துவிகங்களையும் கடந்தவரென்க. இப்பொருள் ஏனைய தேவர்களுக்கு உண்மையிற் பொருந்தாதென்பது, அன்னார் சிவாகமங்களுட் கூறப்படு முப்பத்தாறு தத்துவங்களுக்குட்பட்டவர்களாதலானும், பேராற்றலுடைய சிவபிரா னியக்கத்தான் ஒவ்வோரதிகாரங்களைப் பற்றி நிற்பவராகலானுமாம். மற்றைச் சமய நூல்கள் போலாது சைவசமயத்திற் குறைவின்றிக் கூறப்படுந் தத்துவங்கள் முப்பத்தாறும். அவற்றைக் கடந்து நிற்பவர் பரம்பொருளாகிய சிவபிரான் ஒருவரே யாவர். இம்முப்பத்தாறு தத்துவங்களு முப்பகுதியினவாம். அவற்றுள், தொடக்கப் பகுதியாகிய ஆன்மதத்துவ விரியுள் ஒவ்வொன்றே ஏனைய சமயக் கடவுளர்களின் நிலயமாகும். ஆதலிற் கடவுண் முதலிய சொற்களும் உண்மையிற் சிவபிரானையும் உபசாரத்தான் மற்றைத்

தேவர்களையுங் கூறுவனவாம். இங்ஙனமே வடமொழிக்கட் கூறப்படும் பிரமசப்த முதலியவை உண்மையிற் சிவபிரானையும் உபசாரத்தாற் பிறதேவர்களையுங் குறிப்பிடும் பொருளுடைய வென்பது, சுவேதா சுவதாம், கேநம் முதலிய உபநிடதங்களா னும், அவற்றை விரித்து விளக்கிய வாயுசங்கிதை முதலிய புரா ணங்களானும் நன்குணரலாம். இன்னும் இவ்விஷயமாக வேதாக மாந்தங்களை நிலைகண்டுணர்ந்த நீலகண்டவாசிரியர், அரதத்தா சாரியர், அப்பயதீக்ஷிதர் முதலிய சைவப்பெரியோர்கள் சிறிதும் ஐயமின்றி ஆராய்ந்துரைத்தருளிய அரிய வடநூல்களானுந் தெளியலாம். பிரபஞ்ச நிகழ்ச்சியினிமித்தம் ஒவ்வொரு தேவர் களையும் அதிட்டித்து நின்று சிவபிரான் ஒருவரே சிருட்டியாதி யருட்டொழில்களைப் புரிவர். அதனாலன்றே,

> "शिवोमहेश्वरश्चैवरुद्रोविष्णुः पितामहः ।
> संसारवैद्यस्सर्वज्ञः परमात्मेतिमुख्यतः ।
> नामाष्टकमिदंनित्यंशिवस्यप्रतिपादकम् ॥"

என்று வாயுசங்கிதை கூறியாங்கு தொழிலதிகார நிலையராகிய முக் கிய தேவர்களின் பெயர்களெல்லாஞ் சிவபிரானுக்குப் பொருந் தின. சிவனென்னும் வாசகமோ "சிவனெனு நாமந்தனக்கே யுடைய செம்மேனி யெம்மான்" என்னுந் தமிழ் வேதத்தான் ஏனையோர்க்குச் செல்லாதென்பது போதரும். இதனாற் சிவ பிரானுக்குள்ள முழுமுதன்மை வேறு தேவர்களுக்கின்றென்பது முணர்க. இங்ஙனமின்றி நித்தியமங்களார்த்த வாசகமாகிய இச் சிவசப்தத்தை பிறசமயத்தார் தஞ்சமய தெய்வங்களுக்குக் கூறிக் கொள்ளின், அஃது அந்வர்த்த நாமமாகப் பொருந்தாதென்ப துண்மை யெனினும், நம் சிவபிரான் மாட்டு அமைந்துகிடக்கும் உயர் நலங்களே அன்னாரை யவ்வாறு கூறச்செய்தன வென்றும், அதனாற் சைவ மக்களாகிய நம்மனோர்க்குப் பெருமையே யென் றும் நினைந்து மகிழ்வேமாக. இத்துணையும் ஒருவாறு சுருக்கி யுரைத்த சிவபரத்துவ விஷயம் தனியான ஓரிய உபந்யாசமாக விளக்கவேண்டியதொன்றாகலின், இதனை நிறுத்தி மேல் இப்பெரு மான் கருணைத் திறத்தைச் சிறிது கூறுவேன்.

## (க) கருணையினிலக்கணம்

கருணை, தயை, இரக்கம், அருள் என்பன ஒரு பொருட் சொற்கள். இது:—பரமபதியாகிய சிவபிரானுக்குரிய குணங்கள் எட்டனுள் முக்கியமான தொன்றாகும். இதுவே, அப்பெருமானிடத்து அலுப்த சக்தி, அல்லது பேரருளுடைமை யென்று சொல்லப்படும். இக்கருணைக் குணத்தின் இலக்கணமாவது, ஒருவர் தமக்குரியாரை நோக்கி இவர் எமது தந்தையார்; இவர் எமது தாயார்; இவர்கள் எம்உடன்பிறப்பாளர்; இவர்கள் எம்உறவினர்; இவள் எமது மனைக்கிழத்தி; இவர்கள் எம்புதல்வர்கள் என்றின்னோரன்ன தொடர்பு பற்றி மேற்கொள்ளும் அன்புபோலாது எல்லாவுயிர்கண் மாட்டும் இயல்பாக நிகழ்கின்ற அருளேயாகும். இவ்வுயர்குணம் நம்மனோர்க்கு ஒருசிறிது வாய்க்குமாயின், அது தொடர்பு பற்றி யெழும் அன்பின் முதிர்ச்சியா லுண்டாயதென் றறிதல்வேண்டும். இது கருதியே "அருளென்னுமன்பீன்குழவி" யென்றார் திருவள்ளுவ தேவரும். இவ்விடத்துத் திருத்தொண்டர் புராணத் திருப்பாட்டினியைபு ஒன்றனைப் புலப்படுத்தி மகிழாமலிருக்கக் கூடவில்லை யாதலின், அதனையுஞ் சிறிது காட்டுதலவசியமாகின்றது. திருஞானசம்பந்த சுவாமிகளும், திருநாவுக்கரசு சுவாமிகளும் சீகாழியில் திருத்தோணியப்பரையும், அம்மையாரையுந் தரிசிப்பான் செல்லுங்கால் அவ்விருவர்களும் ஒருங்கு கூடிச் செல்லுந் திப்பிய காட்சியை நூலாசிரியராகிய சேக்கிழார் சுவாமிகள், தம்மனத்தின்கண், தியானமுகமாக எழுதிப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தின்புற்று, அம்மகிழ்ச்சி யின்பங்களை நம்மனோருஞ் சிறிது பெற்றுய்யுமாறு, தாந்துய்க்கும் இன்பம் பொங்கி வெளிப்படுதல்போல ஓரருமைப் பாசுரத்தை யருளியிருக்கின்றார்கள். அப்பாசுரத்தின் கருத்து, அந்நாயன்மார்க ளிருவர்களது ஒன்றுபட்ட தோற்றத்துக்கு ஒப்புக் கூறுவதேயாகும்.

அது வருமாறு:—

"அருட்பெருகு தனிக்கடலு முலகுக் கெல்லா மன்புநெறி கடலுமா மெனவு மோங்கும், பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற புண்ணியக்கண் ணிரண்டெனவும் புவன முய்ய, இருட்கடுவுண் டவரருளு முலகமெல்லா மீன்றாடன் திருவருளு

மெனவுங் கூடித், தெருட்கலைஞா னக்கன்று மாசுஞ் சென்று
செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தா ரன்றே" என்பதே.

இதன்கட் கூறப்பட்ட வுவமைகளையன்றி வேறு எத்துணை நீண்டுநினைப்பினும் "உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங்காலை" யென்னும் உவம விலக்கணத்துக்கு மாறுபாடின்றி யீண்டுக்கூறத்தக்கது யாதுளது? என்னே இவ்வுவமைகளின் அருமைநயங்கள்! இங்ஙனங் கூறுதலன்றே ஆன்ற அருட்கவிகளினியற்கை. இப்பாசுரத்தினரும் பொருள்களை முற்றக்கூறினீண்டு விரியுமாதலின், இயைபுடைய முதலடியின் பொருளைமாத்திரஞ் சுருக்கிக் கூறுவேன். இதனிறுதி படியில் "தெருட்கலை ஞானக்கன்று மாசும்" என்று கூறுவதால் நிரனிரையாகப் பொருள்கொள்ளுதல் வேண்டும். அங்ஙனங்கொள்ளுங்கால் அருட்பெருகு தனிக்கடல் திருஞானசம்பந்த சுவாமிகளும், அன்புசெறிகடல் திருநாவுக்கரசு சுவாமிகளுமாவார். இவ்விருவரிடத்தும் அருள் அன்பு என்னும் இருகுணங்களுமுளவெனினும் அவற்றுலாம் பயனை நோக்கி விசேடமாக ஆராயுங்கால் அப்பர் சுவாமிகள், சிவபிரானும், சிவனடியார்களுமே தமக்குரியவர்களாகக்கொண்டு அன்பு செய்தமையானும், தாதமார்க்கத்தில் வெளிப்பட நின்று ஒழுகியமையானும், அம்மார்க்க ஒழுக்கத்துக்குத் தலைவன் ஒருவனை மேற்கொண்டு அன்பு செய்தலே முக்கியமாதலானும், அவர்களிடத்துள்ள அருட்குணத்தினும் அன்பே யார்வக்கும் வெளிப்படக் காணப்படலான், அவர்களை யன்புக்கடலென்றும், திருஞான சம்பந்த சுவாமிகளிடத்து இவ் அன்புளதெனினும் அவர்கள் சற்புத்திரமார்க்கத்தில் வெளிப்பட ஒழுகியமையானும், இறைவன் குணம் அருளேயாதலானும், சுவாமிகளிடத்து எல்லாவுயிர்கண் மேலும் இயல்பாக எழுங்கருணையே மேலிட்டிருந்தமையானும், திருப்பெருமண நல்லூரில், தந் திருமணக் கோலத்தைத் தரிசிக்க வந்திருந்த பக்குவாபக்குவர்களாகிய வெல்லோர்க்கும் அக்கணத்திலேயே ஸம்ஸ்கார பூர்வகமாகக் கொள்ளைகொள்ள வீடுதவிக் கூற்றைப்பிடர்பிடித்துத் தள்ளித்தம் அருட்குணப்பயனைக் காட்டியமையானும் அவர்களையருட்கடலென்றுந் திருவாய் மலர்ந்தருளினர் ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகள். (தொடரும்)

# தம்பிரான்றோழர்

[இ. மு. சுப்பிரமணிய பிள்ளை]

(௨௬௬-ம் பக்கத் தொடர்ச்சி)

பின், அச்சேனுபதியார் தம்மனையில் அவருக்கு இன்னமு தளித்து இறைஞ்சி, தாம் அருமையாகப் பெற்றெடுத்த பெண் மணிகளாகிய சிங்கடியாரையும், வனப்பகையாரையும் கொணர்ந்து பணிவித்து, "அடியேன் பெற்ற இம்மக்களை அடிமையாகக் கொண்டருள் செய்யவேண்டும்" என வேண்டிக்கொண்டார். அது கேட்ட நம்பியாரூரர், "இப் பெண்மணிகள் எனக்குச் சிறந்த மக்கள்" என்று அவர்களைத் தமது மக்களாக ஏற்றுக் கொண்டார். அவர் அக் குழந்தைகளைத் தம் மடிமீ திருத்தி, உச்சி மோந்து, அவர்களுக்கு விருப்பமான பொருள்களையும் கொடுத்தருளி கோவிலுக்குச் சென்றார். செல்லும்போது தூரத்தே தோன்றிய கோபுரத்தை வணங்கி, உச்சிமேற் குவித்த கரத்தோடும் கோவிலினுள்ளே புகுந்து பணிந்து, "பூண்நாணுவ தோரரவங் கண்டஞ்சேன்; புறங்காட் டாடல்கண் டிகழேன்; காணீராகிலும் காண்பன். உம்மடி பாடுத லொழியேன். அஞ் சாதே யுமக்காட்செய வல்லேன்; மணியே, மாணிக்க வண்ணா! நான் உமையல்லா லொருவரை நச்சேன். உம்மைக் கருதாதார் தம்மைக் கருதேன்; ஓட்டாகிலும் ஒட்டுவன்; உம்மைப் பாடி யும், நாடியும் அறிய நட்டேனாதலால், நான் மறக்கில்லேன். உமக்கடியேன் ஆட்பட்டது நைவானன்று; கலியேன் மானுட வாழ்க்கை ஒன்றாகக் கருதிடில் கண்கணீர் பில்கும். தொண்ட ரடித் தொழுவார் தொழக்கண்டு என் வினைபோகத் தொழு தேன். நாட்டியத்தான்குடிநம்பி,

"கூடாயன்னரைக் கூட்டத்து வென்ற கொடிறன்
கோட்புலி சென்னி
நாடார் தொல்புகழ் நாட்டியத் தான்குடி
நம்பியை நாளும் மறவாச்

சேடார் பூங்குழற் சிங்கடியப்பன் திருவா
ரூரனுரைத்த
பாடலாகிலும் பாடுமின் தொண்டீர்! பாட
நும்பாவம் பற்றறுமே"

என்று பதிகம் பாடிப் பணிந்தார். இவ்வாறு திருக்கடைக் காப்பிலே கோட்புலி நாயனுரைச் சிறப்பித்ததோடு, சிங்கடியாரைப் பிறப்பித்தெடுத்த தந்தையாகத் தம்மை நினைந்த பெற்றியினல், சிங்கடியப்பனென்று தம்மை வைத்தருளினர்.

பின், அங்கிருந்தும் புறப்பட்டுத் திருவலி வலத்தை யடைந்து, கோவிலினுட் சென்று, "பல்லடியார் பணிக்குப் பரிவானை, பாடியாடும் பத்தருக் கன்புடையானை, நல்லடியார் மனத்து எய்ப்பினில் வைப்பை, நானுறு குறையறிந்தருள் புரிவானை, நல்லிசை ஞான சம்பந்தரும் நாவினுக்கரசரும் பாடிய நற்றமிழ் மாலை சொல்லியவே சொல்லி ஏத்துகலை யுகப்பானை, எவ்வெவர், தேவர், இருடிகள், மன்னவர் எண்ணிறந்தார்கள் எங்கும் நின்றேத்த, அவ்வவர் வேண்டியதே அருள் செய்து அடைந்தவர்க்கே இடமாகி நின்றானை வலிவலம் தனில் வந்து கண்டேனே. எம்பெருமான் அருளாய் என்ற பின்னை என் ஆவி வவ்வி மனங்கலந்தானை, சான்று காட்டுவதற் கரியவன், தன்னிலா மனத்தார்க் கெளியவன் றன்னை வலிவலம் தன்னில் வந்து கண்டேனே" என்று பதிகம் பாடிப் பணிந்து, அங்கிருந்தும் புறப்பட்டுத் திருவாரூர் சென்று பூங்கோவில் பணிந்திருந்தார். அங்கிருந்துகொண்டு அவ்வூருக் கருகேயுள்ள பல கோவில்களுக்கும் போய் வணங்கி மீண்டு இன்பமுற்றிருந்தார்.

அப்பொழுது பங்குனி உத்திரத் திருநாள் வந்தது. அத் திருவிழாவிற்கு வருபவர்க்கெல்லாம் வேண்டுவன கொடுத்து இன்பூட்டுவது பாவையாரியல்பு. அதனல், அக் கொடைக்கு வேண்டும் பொன் கொண்டுவருவதற்காக நினைந்து, நம்பியாரூரர் திருப்புகலூரை யடைந்தார். அங்கே கோவிலினுட் சென்று பெருமான் அடி போற்றிப் பதிகம் பாடித் தமக்குப் பொன் தா

வேண்டி நின்றார். சிறிது பொழுது கும்பிட்டு நின்று, ஒன்றும் பெறாது புறம் போந்து, அயல் மடத்திற்குப் போகாமல் கோவில் முன்றிலின் ஓர் புடை அன்பருடனிருந்தார். அப்பொழுது கடவுளருளால், அவருக்குத் துயில்வந் தெய்தியது. அதனால் தம்பிரான் றோழர், கோவிற் றிருப்பணிக் காக்குவித்திருந்த பல சுடுமட்பலகை கொணர்வித்து, உயரம் பண்ணி, அதன்மேல் வெண்பட்டு விரித்துப் பள்ளி மேவினார். சுற்று மிருந்த தொண்டர்களும் துயின்றனர். அவ்வளவில், நம்பியாரூரர் விழித்தெழுந்து பார்க்க, தமது தலையணையாய செங்கற்கள் செம்பொற் கல்லாயின கண்டார். கண்டவர், அளவிலடங்காப் பேரன்பு கொண்டு, தலைமேல் கரங்குவித்து வணங்கி, ஒப்பிலா இன்பத்தை இம்மையிலேயே தந்தருள்பவராகிய பெருமானை நோக்கி,

> "தம்மையே புகழ்ந்திச்சை பேசினும்
> சார்விலும் தொண்டர் தருகிலாப்
> பொய்ம்மை யாளரைப் பாடாதேஎந்தை
> புகலூர் பாடுமின் புலவீர்காள்
> இம்மையேதரும் சோறுங் கூறையும்
> ஏத்தலாம் இடர் கெடலுமாம்
> அம்மையே சிவலோக மாள்வதற்
> கியாதும் ஐயுற வில்லையே.

வலிமையில்லாதவனை வீமனென்றும், விசயனென்றும், கொடுக்கிலாதானை பாரி என்றும், நரைத்து உடல் தளர்ந்து நடுங்கி நிற்கும் கிழவனை மலைபோலப் பருத்த தோளுடையவ னென்றும், மிகக் கொடிய பாவியைச் சாது என்றும், இழிகுலத்தவனை உயர் குலத்தவனென்றும், கற்றிலாதானைக் கற்று நல்லனென்றும், எள் விழுந்திடம் பார்க்குமாகிலும், ஈக்கும் ஈகிலனாகிலும் அவனை எங்கள் வள்ளலே என்றும் புகழ்ந்தாலும் கொடுப்பாரில்லை. புலவீர்காள்! எந்தை புகலூர் பாடுமின். நீவிர் நெஞ்சில் நோயறுத்து உஞ்சு போவதற் கியாதும் ஐயுறவில்லையே! நாவலூரான், வனப்பகையப்பன், சடையன்றன் சிறுவன், வன்றொண்டன், ஊரன் பாடிய பாடல் பத்திவை வல்லவர் ஆரவனாடி சென்று சேர்வ

தற்கியாதும் ஐயுறவில்லையே" என்று பாடிப் பணிந்து, விடை பெற்று வெளிவந்து, அங்கே தாம் பெற்ற நிதிக்குவை முழுதும் உடன் கொண்டு, புறப்பட்டுத் திருப்பனை யூரை யடைந்தார். அங்கே எம் பெருமானார் அவருக்குத் தமது திருக்கூத்துக் காட்சி தந்தருளினர். அதுகண்ட நம்பியாரூரர் பேரன்போடும் விழுந்து பணிந்து, "ஒரு காதினில் தோடும், மற்றொரு காதினில் குழையும் தூங்க, தொண்டர்கள் துள்ளிப்பாட நின்று ஆடுமாறு வல்லாரவரே அழகியரே, காவிரிபுடைசூழ் சோணாட்டவர், தாம் பரவிய பாவுரி புலவர் பயிலும் திருப்பனையூரில், தோளும் ஆகமும் தோன்ற நட்டமிட்டாடுவார் அடித்தொண்டர் தங்களை ஆளுமாறு வல்லாரவரே அழகியரே; தோள் இருபது தாள் நெறிதர அரக்கனை யடர்த்தார் நாவலூரன், வனப்பகைய வளப்பன், வன்றொண்டன் செஞ்சொற் கேட்டுகப்பார், அரங்கிலாட வல்லாரவரே அழகியரே" என்று பாமாலை பாடி வணங்கி அருள் பெற்றார். பின், அவ்வூராரனைவரும் வணங்கி வழியனுப்பப் புறப்பட்டுத் திருவாரூரை யடைந்து, அளவில்லாத செம்பொன்னைப் பரவையார் மாளிகைக் கனுப்பி விட்டு, தாம் பூங்கோவிலமர்ந்த பிரான் பொன்னடி போற்றி மாளிகையை யடைந்தார். அது கண்டு பரவையார் மனமகிழ்ந்தார். நம்பியாரூரரும் அவ்வூருக் கருகிலுள்ள பல பதிகளையும் வணங்கி யிருந்தார். அக்காலத்து அவர் ஓர் நாள் திரு நன்னிலம் என்ற ஊரையடைந்து, கோவிலினுள்ளே சென்று, வலம் வந்து பணிந்து, "நலங்கிளர் நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே! பல் பிணக்காட ரங்கா ஆடிய மாநடத்தான், கொடுங்காட்டிலே கடுங்கேழலின் பின்கானவனுயமர் செய்து அருச்சுனனுக்கு அருள் செய்தபிரான், நரபதி செம்பியாகோன்றிகழ் கோச் செங்கணான் செய கோவில் நாடிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவன், அவனைச் சிங்கி தந்தை, திருவாரூரன் பாடிய பத்தும் புகுவார் பரலோகத்துள்ளே" என்று பாடல் பாடிப் புகழ்ந்தார். பின் அங்கிருந்து திருவீழிமிழலை நோக்கிப் புறப்பட்டார். அவ்வூரார் அவருக்கு நடைப்பந்தலிட்டு, எதிர் கொண்டு வந்து அழைத்துப் போயினர். ஆரூரர் அவ்வூரிற் புகுந்து, எம் பெருமான் திருமுன் பெய்தி,

"எம்பெருமானே! தந்தை தாளற எறிந்த தண்டிக்கும், கண்ணி டந்த கண்ணப்பனுக்கும் ஏற்றம் நல்கினீர்; பணிந்த பார்த்தனுக் கும், பகிரதனுக்கும், பல பத்தர் சித்தர்க்கும் பண்டருள் நல் கினீர்; திருமிழலையிலிருந்து நீர், தமிழோடு இசை கேட்கு மிச் சையாய், அப்பருக்கும் சம்பந்தருக்கும் நித்தம் காசு நல்கினீர்; செழுமாடத் திருமிழலை மேவிய நீர், பலி ஏற்றகென் என்று விண்ணப்பம் செய்யும் அடியவருக்கு மெய்ப்பொருளாய அடங் கல் வீழி கொண்டிருந்தீர், அடியேனுக்கும் அருளுதிரே" என்று போற்றி, அங்கே சில நாள் தங்கி யிருந்தார். பின் திருவாஞ்சி யத்தை யடைந்து, "திருவனர் பணிந்தேத்தும் திகழ்திரு வாஞ்சி யத் துறையும் நம் அடிகள் அடியாரை ஊழ்வினை வந்து நலிய வொட்டாரே; பார்த்தனர் திரள் தோள்மேல் பகழிகள் பாய்ச்சி திருந்து, மாடங்கள் நீடும் திகழ் திருவாஞ்சித் துறையும் மருந்த னர் அறை கழல் நமக்குச் சரணே; அக்கழல் நினைப்பவர் வினை நலிவிலயா; திருவாஞ்சியத்துள் மங்கை பங்கனை யல்லலால் யாம் இறை யெனக் கருதுதலிலமே" என்று புகழ்மாலை பாடி அங்கே தங்கியிருந்து பின், அரிசிலாற்றங் கரையிலுள்ள புத்தூரை நோக்கிப் புறப்பட்டார்.

போகிற வழியில், திருநறையூரிலிருக்கும் திருச்சித்தீச்சரம் என்ற கோவிலையடைந்து, நீரும் மலரும் நிலவும் சடையான்! மறங்கொள் அரக்கன் வரைதேள் வரையால், இறக் கொள் விரற் கோன் பேணுமுனிவன் பெரு வேள்வி யெல்லாம் மாணுமை செய்தான் மருவும் இடமாம் நெறியில்வழுவா நியமத்தவர்கள் செறியும் நறையூர்ச் சித்தீச் சரமே என்று போற்றிப் புகழ்ந்து தொண்டர் பலர் எதிர் கொண்டழைக்க அரிசிலாற்றங் கரையி லிருக்கும் திருப்பத்தூரை யடைந்தார். அங்கே தம் பெருமான் திருமுன் பெய்தி நின்று, "அருமலரோன் சிரமொன் றறுத்தீர். திருமகள் மணாளனாகிய நெடுமால் பல நாள் சிறப்பாகிய பூசனை செய்பொழுதில், ஆயிரத்திலொருமலர் குறைந்ததாக அக்குறைவு நிறைவாக ஓர் கண் மலர் சூட்டலுமே, மனமிரங்கி மகிழ்ந்து, பெருவிறலாழி விரும்பியளித்தார். திருப்புத்தூர்ப் புனிதனிரே!

உமக்காரெதிர்? எம்பெருமான்! மால், பிரமன் மற்றும், வானவர், தானவர், மாமுனிவர் பலரும் உம்மை வணங்கித் தொழுகின்றனர். நீர் தலையிற் பலிகொண்டா லென்னே? உலகங்களெல்லா முடையீர் உரையீர், அகத்தடிமை செய்யும் அந்தணனர் புகழ்த்துணையார், அரிசிற் புகல் கொண்டு வந்து ஆட்டுகின்றார், மிகத்தளர் வெய்தி ஓர் நாள் குடத்தை நும்முடிமேல் விழுத்திட்டு நடுங்குதலும், அவர்க்குப் பஞ்சம் நீங்கு மட்டும் நித்தலும் ஓர் காசு அவர் கை புகச் செய்துகந்தீர். கடிக்கு மரவால், மலையால், அமார் கடலைக்கடைய எழும் காளகூடம், உலகங்களை ஒடிக்குமென் றதனை உமக்கே அமுதாக உண்டீர், உமிழீர். இடிக்கும் மழைவீழ்த்து இழுத்திட்டு, அருவி இருபாலும் ஓடி யிரைக்கும் திரைக்கையடிக்கும் புனல் சேரரிசில், தென்கரை அழகார் திருப்புத்தூர் அழகனீரே'' என்று பதிகம் பாடித்தொழுது, அங்கே வாழ்ந்து கொண்டிருந்தார். சிலநாட் சென்றபின், அங்கிருந்து புறப்பட்டுப் பதிகள் பலவும் பணிந்து போந்து திருவாவடு துறையையடைந்தார். அங்கே உளங்கொண்டுருகு மன்பினுடன் வலங் கொண்டு, கோவிலினுள்ளே புகுந்திறைஞ்சி, "ஆவடுதுறை ஆதியெம்மானே! மார்க்கண்டனர் உம்முடைய அடியடைய அவர் உயிர் நிறுத்தக் காலனைக் காலாற் கடந்த காரணங் கண்டு, அடியேன் இறைவன் எம்பெருமான் என்று எப்போதும் எத்தி எத்தி நின்று, அஞ்சலி செய்து, உன் சேவடிக்கு அன்போடும் அடைந்தேன். தெருண்ட வாயிடை நூல் கொண்டு சிலந்தி சித்திரப் பந்தர் சிக்கன வியற்ற அது தன்னைச் சோழனாக்கினாய். திகழும் மாலவன் ஆயிரமலரால் எத்துவான் ஓர் மலர் குறையப் புகழினால் அவன் கண்ணிடந்திடலும் புரிந்து சக்கரங் கொடுத்தாய், வீரத்தால் ஒரு வேடுவனாகி விசையனுக்கு வான்படை கொடுத்தாய். முப்புர மெரிய உன்னை முன்னிய அம் மூவர்க்கும் பொன்னுலகாளப் புகழினால் அருளீந்தனை இவை கண்டடியேன் அகமும் வல்வினைக் கஞ்சி, வந்தனை யடைந்தேன்'' என வளவன் செங்கணான், பிறப்பைச் சிறப்பித்துத் தமிழ்ச் சொன்மாலை சாத்தினார். அங்கே சில நாள் வைகி வணங்கி, அருள் பெற்றுக் காவிரியாற்றின் தென்கரைமேல் திகழும் பதிகள் பலவும் பணிந்து,

முனைப்பாடித் தலைவர் திருவிடை மருதூரை யடைந்தார். அவ்வூரில் கோவிலடைந்து, மருதிடை யமர்ந்த பெருமான் திரு முன் நின்று, "இம்மானுட வாழ்க்கை புன்னுனைப் பனி வெங் கதிர் கண்டாற்போலும். இது நிலை பெற்ற பொருளில்லை. முன் னமே உன் சேவடி சேரா மூர்க்கனாகிக் கழிந்தனகாலம் உன்னரு ளைச் சிந்தித்தே மனம் வைக்கமு மாட்டேன். இரப்பார்கட்குச் சிறி ஒன்றும் ஈயேன். கடியவாயின கொடுமைகள் செய்தேன். குற்றம், செற்றம், வேட்கை இவை முதலாக விடுக்ககிற்றிலேன். வேண்டில் ஐம்புலன் என் வசமல்ல நமன்றமர் நரகத்திடலஞ்சி இடுக்கணுற்றனன் காவிரித் தென்கரை தன்மேல் இடை மரு துறை யெந்தை பிரானே! நீ எனக்கு உய்வகை யருளாய்" என மதுரச் சொன்மலர்கள் பன்னிப் புனைந்து, பணிந்தேத்திப் பாவிப் போந்து, தொண்டருடன் அந்நற்பதியிலிருந்து அகன்று திரு நாகேச்சரத்தை யடைந்தார். அக்கோவிலை வலங்கொண்டு முதல்வர் திருத்தாள் தொழுது, "செருநதி செம்பொன் மலரும் திருநாகேச்சரத்தானே! நீர் விட முண்டுகந்தீர். அருந்தவமா முனிவர்க்கு அருளாகி ஓர் ஆலதன் கீழிருந்து அறமே உரைத்தீர். பாலனதாருயிர்மேல் பரியாது பகைத் தெழுந்த காலனை விடு வித்தீர். இவை என்னை கொல்லோ?" என்று பதிகம் பாடினார். பின் அங்கிருந்து புறப்பட்டுச் சிவபுரத்தை யடைந்து வணங்கி, மனமுருகி வழியிலுள்ள பல பதிகளையும் பணிந்து கொண்டு திருக்கயிலை நல்லூரை யடைந்தார்.

(தொடரும்)

---

## குறிப்பு

4-வது சிலம்பு 3-வது பரலில் வெளிவந்த பூ என்னும் கட்டுரை யாழ்ப்பாணம் நவாலி திரு. க. சோமசுந்தரம் பிள்ளையவர்கள் எழு தியது.

# சுந்தரர்

[சிந்துபூந்துறை மா. வே. நெல்லையப்ப பிள்ளை]

முன் செந்தமிழ்ச் செல்வியில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் என்னும் பெயர்கள் மாத்திரையானே விளங்கும் கருத்துக்களை எழுதினது போல "சுந்தரர்" என்னும் பெயர் மாத்திரையானே குறிக்கப்படும் கருத்துக்களைக் கூறுதல் இக்கட்டுரையின் நோக்கமாம்.

சுந்தரர் என்கிற பெயர் அவர் கைலாய மலையில் சிவபெருமானுடைய அணுக்கத் தொண்டராயிருந்த பொழுது வழங்கப்பட்டு வந்தபெயர். அவர் அப்பொழுது ஆலகால சுந்தரர் என்றும் ஆல சுந்தரர் என்றும் அழைக்கப்பட்டனர். தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தபோது உண்டான நஞ்சை அவர் தாங்கிச் சென்று சிவபெருமானிடத்துக் கொடுத்தமையால் ஆல சுந்தரர், ஆலகால சுந்தரர் என்னும் பெயர்கள் அவருக்கு உண்டாயின என்று பெரியோர் கூறுவர். அவர் சிவபெருமானது ஆணையால் திருநாவலூரில் அவதரித்த பொழுது அவருக்கு நம்பியாரூரர் என்னும் நாமம் அவருடைய தாய் தந்தையர் சாத்தினார்கள். அவர் சிவபெருமானால் திருவெண்ணெய் நல்லூரில் வலிய ஆட்கொள்ளப் பெற்றபொழுது "வன்றொண்டன்" என்னும் காரணப் பெயர் அவராற் கொடுக்கும் பாக்கியம் பெற்றார். திருவாரூரில் புற்றிடங்கொண்ட பெருமானை அவர் வணங்கின பொழுது "தம்பிரான் தோழர்" என்னும் திருநாமம் அவராற் கொடுக்கப் பெறும் பாக்கியம் பெற்றார். 'ஆளுடைய பிள்ளையார்' என்று திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளும் 'ஆண்ட அரசு' என்று திருநாவுக்கரசு சுவாமிகளும் அழைக்கப் பெற்றமைபோல அவர் 'ஆளுடைய நம்பி' என்று அழைக்கப் பெற்றார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாம் பாடிய தேவாரப் பதிகங்களின் இறுதிப் பாட்டுகளில் சிவகடியப்பன், வனப்பகையப்பன், நாவலர்கோன், நாவலாரூரன், நாவலூரான், நாவலவூரன், நம்பி

ரூரன், ஊரன், புகழூரன், தொண்டனூரன், அடித் தொண்டன், சடையன் சிறுவன், சடையன் காதலன், சிறுவன், நம்பி முதலிய நாமங்களாற் றம்மைக் குறித்தருளினர். சுந்தரர் என்னும் பெயரை அவர் எந்தப் பதிகத்திலும் வைக்கவில்லை. சேக்கிழார் பெருமானும் பெரிய புராணத்தில் திருநாவுக்கரசு நாயனர் புராணம் கக-வது பாட்டில் மாத்திரம் அவரை "ஆலால சுந்தரர்" என்று குறித்திருக்கிறர். பிற இடங்களில் சேக்கிழார் பெருமான் அவரை நாவலர் பெருமான், நாவலூராளி, நம்பியாரூரன், வன்றொண்டன், நாவலூர் மன்னன், பரவையார்தனித் துணைவன், நம்பி, திருத்தொண்டன் முதலிய நாமங்களாற் குறிக்கின்றுரே யன்றி சுந்தரர் என்னும் நாமத்தாற் குறித்ததாகக் காணவில்லை. திருத்தொண்டர் திருவந்தாதி பாடிய நம்பியாண்டார் நம்பியும் தாம் அவர் பேரிற் பாடிய பதினொரு பாட்டுக்களிலொரு பாட்டிலாவது அவரைச் சுந்தரர் என்னும் பெயராற் குறிக்கவில்லை. ஆயினும் அவருக்குச் சுந்தரமூர்த்தி நாயனர் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அல்லது சுந்தரர் என்னும் பெயரே தொண்டர்களால் சமய குரவர்கள் நால்வரிலொருவர் பெயராக வழங்கப் பட்டு வருகின்றன.

இனி "சுந்தரர்" என்னும் பெயரின் பொருளைக் கருதுவாம். சுந்தரம் என்னும் வடமொழி அழகு என்று பொருள்படும். சுந்தரர் என்பது அழகையுடையவர் அல்லது அழகர் ஆகும். சுந்தரமூர்த்தி என்பது அழகான உருவமுடையவர் என்று பொருள் படும். எங்கே இறைவன் அருள் விளங்குமோ அங்கே அழகு காணப்படும். திருஞானசம்பந்த சுவாமிகள் முதலிய மூவரும் தாம் பாடிய தேவாரப்பதிகங்களில் இயற்கை அழகைப் பற்றி வர்ணித்துப் பாடியது இக்கருத்துப்பற்றியே. கண்கவர் வடிவ வனப்பு மாத்திரமல்லாமல் ஏனைய புலன்களைக் கவரும் அழகின் பாற்படும். உருவத்தின் மாத்திர மன்றி அருவத்திலும் சூக்குமமான அழகு உண்டு. கண்களைக் கவரும் அழகான மலர் என்று நாம் சொல்வது போல உள்ளத்தைக் கவரும் அழகான எண்ணம் அழகான நெஞ்சம் என்று நாம் சொல்கிறோம். "அத்தனை நினைந்த நெஞ்ச மழகிதா நினைந்தவாறே" என்று திரு

நாவுக்கரசர் கூறியது காண்க. கிரேக்கர்கள் (Greeks) கடவுளின் அருட்டன்மையை இயற்கை அழகில் வைத்துக் காண்பதில் மிக்க தேர்ச்சி அடைந்திருந்தார்கள். அதனால் அவர்கள் சித்திரப் படம் எழுதுதலிலும் சிற்பவேலையிலும் மிக்க வல்லவரா யிருந்தார்கள். தமிழர்களும் நுண்கலைகளில் மிக்க வல்லவரா யிருந்தார்கள் என்பது பழைய கோயில்களிற் காணப்படும் சிற்பவேலைத் திறனும் பண்டைத் தமிழ்ப் புலவர் செய்யுள்களிற் காணப்படும் இயற்கை வருணனைத் திறனும் தேவாரப் பதிகங்கள் பண்ணுடன் பாடப்படும் இசைத்திறனும் நன்கு புலப்படுத்தும். தேவாரங்களிற் பல இடங்களில் சிவபெருமான், 'அழகன்' என்று துதிக்கப் பட்டிருக்கிறார். அவற்றிற் சில வருமாறு:—

குழவித் திங்கள் குளிர்சடை மருவவைத்த அழகன்
(நினைந்த திருநேரிசை)

அழகியரே ஆமாத்தூ ரையனாரே (திருத்தாண்டகம்)

அழகு அமர் வெண்ணி அம்மான்றன்னை.
(திருஞானசம்பந்தர் திருவெண்ணிப்பதிகம்)

அழகார் வுனக்காளா யினியல்லே னெனலாமே.
(சுந்தரர் திருவெண்ணெய்நல்லூர்ப் பதிகம்)

ஆகையால் சுந்தரர் என்பது ஊனக் கண்களாற் பார்ப்பவர்களுடைய கண்களைக் கவரும் திருமேனி அழகையும் சிவபெருமானுடைய திருவருள் விளக்கம் பெற்றதனால் ஞானக்கண்ணாற் பார்க்கக்கூடிய அழகையும் உடையவர் என்று பொருள்படும். இது தான் பொருள் என்பது சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்திற் பாடிய

"கண்கொள்ளாக் கவின்பொழிந்த திருமேனி கதிர்விரிப்ப
விண்கொள்ளாப் பேரொளி யானெதிர் நோக்கும்"
(தடுத்தாட்கொண்ட புராணம். கசஙு-வது பாட்டு)

என்ற செய்யுளால் விளங்கும். முன்னையது சுந்தரருடைய திருமேனி அழகு; பின்னையது அவருடைய அருளொளி அழகு.

முன்னையது சிறிய இன்பங்கொடுக்கும்; பின்னையது பெரிய இன்பம் கொடுக்கும். "அகத்திற் கண்கொண்டு காண்பதே யானந்தம்" என்ருர் திருமூலர்.

இத்தகைய அருள் விளக்க ஒளிபெற்ற சுந்தரர் பரவையார் சங்கிலியார் ஆகிய இவர்கள்பால் நேயம் வைத்தது எப்படிஎனின் அஃது அவருக்குப் பிராரத்துவம் காரணமாக அவ்விருவர்களுடன் கூடி வாழவே சிவபெருமான் ஆணையால் அவர் உலகில் அவதரித்தவர். பிராரத்துவங் காரணமாக வந்த செயலை விலக்கவல்லாரொருவருமில்லை. பிராரத்துவ காரணமாக அவர் எய்திய சிற்றின்பம் சிவபெருமானுக்கு ஆட்பட்ட அடிமைத் திறத்தை அற்பமேனும் பாதிக்கவில்லை என்பது அவர் சிவபெருமான் திருவருளே துணையாகக்கொண்டு அத்திருவருள் கூட்ட பரவையார், சங்கிலியார் இருவர்களையும் விதிப்படி மணம் புரிந்து அவர்களுடன் கூடி வாழ்ந்ததும் வேறு பெண்கள் மீது அவர் அணுவளவுங் காதல் கொள்ளா திருந்தமையும் புலப்படுத்தும். கோட்புலி நாயனர் சுந்தரமூர்த்தி நாயனரைத் தொழுது தமது பெண்மக்களாகிய சிங்கடியார் வனப்பகையார் என்னும் இருவர்களையும் அடிமைகளாகக் கொள்ளவேண்டுமென்று வணங்கினபொழுது சுந்தரமூர்த்தி நாயனர் "இவர்கள் எனக்குத் தூயமக்கள்" என்று சொல்லி அவர்களைத் தமது தொடையில் வைத்து உச்சி மோந்தருளினர். அவர்களை தாம் பிதாவாகக் கொண்ட பெற்றியை அவர் தாம் பாடிய திருப்பதிகங்களில் சிங்கடியப்பன், வனப்பகையப்பன் என்று கூறியருளினர். அவர் "பரமரைப் பண்டு தாம் பிரிந்தெய்துஞ் சேய நன்னெறி குறுகிட" திருவஞ்சைக்களம் அடைந்தபொழுது "பாசமடுத்த வாழ்க்கையை அறுத்திட வேண்டுமென்று" அன்பினிற் பாட சிவபெருமான் ஆணையின்படி அவரை வெள்ளானையிலேற்றிக் கைலைக்குக் கூட்டிக் கொண்டுவர தேவர்கள் அங்கே வந்தார்கள். அப்பொழுது அவர் பரவையார், சங்கிலியார் ஆகிய இருவர்களைப் பற்றி அற்பமேனும் மனதில் எண்ணவில்லை.

சுந்தரமூர்த்திநாயனர் "காணுங்கரணங்களெல்லாம் பேரின்பமெனப் பேணும்" யோகியார் (ஞானயோகம்) ஆவர்.

"பெற்றசிற் றின்பமே பேரின்ப மாமங்கே
முற்ற வரும்பரி சுந்தீபற
முளையாது மாயையென் றுந்தீபற"

என்று திருவுந்தியாரினும்,

"உடம்புடைய யோகிகடா முற்றசிற் றின்பம்
அடங்கத்தம் பேரின்பத் தாக்கிற்—றொடங்கி
முளைப்பதுமொன் றில்லை முடிவதுமொன் றில்லை
இளைப்பதுமொன் றில்லை யிவர்"

என்று திருக்களிற்றுப்படியாரினும்

"யோகமும் போகமும் யோகியர்க் காகுமால்
யோகஞ் சிவரூப முற்றிடு முள்ளத்தோர்
போகம் புருடார்த்த சித்திய
தாகு மிரண்டு மழியாத யோகிக்கே"

என்று திருமந்திரத்திலும்

நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்ணமர மாச் செலுத்தும் பாகரினு—மெண்ணி
யரனடி யோர்பவ ரைம்புலனிற் சென்றும்
அவர்திற நீங்கா ரதற்கு.

என்று சிவஞானபோதத்திலும் கூறியபடி, நம்போலியர்க் கிருப்பதுபோன்று யோகிக்கு சிற்றின்பமென பேரின்பமென இன்பம் இருவகையா யிருப்பதில்லை. அவர்கள் எக்காரணங்களால் இன்பம் அனுபவிப்பினும் அது பேரின்பமேயாகும். அவர்கள் இறைவன் திருவருளா னல்லதொன்றையுங் காணாதவர்களாய் அவ்வருளின் வழியே நின்று எப்பொருளையுங் காண்பவர்களாதலின் தங்கள் வினையின் சூட்சியால் ஐம்புலன்களின்வழி இன்பம் அனுபவித்தாலும் அவ்வின்பத்தையும் பேரின்ப வகையாகக் கொள்வாரன்றி ஐம்புலன்களாற் றொடக்குண்டு நிற்பாரல்லர். ஆகையால் சுந்தரமூர்த்திசுவாமிகள் தம் வினைவயத்தால் பரவையார், சங்கிலியார் என்னும் இரண்டு பெண்களையு மணந்து அவர்களுடன் உலகில் கூடி வாழினும் அஃது அவர் அடைந்திருந்த இறைவன் திருவருள்

விளக்கநிறைவை அற்பமுங் குன்றும்படி செய்யவல்ல தாகாது. இக்கருத்தை சேக்கிழார் பெருமானும் பெரியபுராணத்தில்,

"தென்னாவ லூர்மன்னன் தேவர்பிரான் திருவருளான்
மின்னாருங் கொடிமருங்குற் பரவையெனு மெல்லியறன்
பொன்னாரு முலையோங்கற் புணர்குவடே சார்வாகப்
பன்னாளும் பயில்யோகம் பரம்பரையின் விரும்பினார்.

என்றும்,

தன்னையா ளுடையபிரான் சரணார விந்தமலர்
சென்னியிலுஞ் சிந்தையிலு மலர்வித்துத் திருப்பதிகம்
பன்னுதமிழ்த் தொடைமாலை பலசாத்திப் பரவையெனும்
மின்னாளுடையா ளுடன்கூடி விளையாடிச் செல்கின்றார்"

என்றும் கூறியருளினார்.

சைவர்கள் எல்லாரும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய தெய்வச் சரிதையை ஓதி உணர்ந்து அவரைத் தங்கள் உலக வாழ்க்கைக்கு எடுத்துக் காட்டாகக் கொண்டு இயன்றவாறு ஒழுகல் வேண்டும். அவர் இல்வாழ்க்கையிலிருந்து கொண்டே அருளொளி தம்மிடம் விளங்கவும் உலகில் விளங்கவும் ஒழுகினது போல அவர்களும் இயன்றவாறு ஒழுகல் வேண்டும். அவர்கள் தங்கள் இல்வாழ்க்கையை நெறிப்பட ஒழுகி பேரின்ப நிலைக்கு வேண்டப்படும் குணங்களெல்லாம் தங்களிடம் உண்டாகி விருத்தியடையும்படி செய்துவரல் வேண்டும்; சிற்றின்பங்களையும் பொருளையும் பெரிதாக மதித்து அவைகளில் அதிகமான பற்றுவைத்து சுழன்று உழலாமலிருத்தல் வேண்டும். அவர்கள் தங்கள் எண்ணங்கள் இச்சைகள் செய்கைகள் எல்லாம் அறிவுடையாருடைய உள்ளம் கவரும் அழகையுடையதா யிருக்கும்படி ஒழுகல் வேண்டும். இப்படி சைவர்கள் உலக வாழ்வில் ஒழுகுவதே சுந்தர மூர்த்தி சுவாமிகளுக்கு அவர்கள் செய்யும் உண்மைவழிபாடாகும். இவ்வுண்மை வழிபாடு செய்ய சிவபெருமான் அவர்களுக்கு அருள் புரிவாராக.

சுந்தரமூர்த்திசுவாமிகள் திருவடிகளே சரணம்.

# அறம்

[சந்திரசேகரப்பாவலர்]

இவ்வுலகத்தே உயிர்கள் அடைதற்கரியதாய் விண்ணவரும் நண்ணுதற்கெண்ணும் பிறப்பு மனிதப் பிறப்பே. அது பெற்றும் கூன் குருடு செவிடு நீங்கிப் பிறத்தலரிது; அவ்வாறு நீங்கிப் பிறப்பினும் நல்லாசானை யடுத்து உற்றுழி யுதவி வழிபாடு செய்து கற்று நிற்றல் மிகவரிது.

இறைவன் திருவாய் மலர்ந்தருளிய நல்லற நூல்களிற் கூறியபடி மனத்துக்கண் மாசில்லாமல் பொறாமை, அவா, வெகுளி, கடுஞ்சொல்லாகிய இந் நான்கினையுங் கடிந்து வாழ்நாள் வழியடைக்குங் கல்லும் மெய்யின்பந் தருவதும் சிறப்புஞ் செல்வமும் பயப்பதுமாகிய அறத்தினை, இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையாவாகையால நாடோறுஞ் செய்யவேண்டும். அற்றது பெரியோரால் வரையறுக்கப்பட்ட ஒழுக்கமே. அஃது இல்லறம் துறவறமென இரண்டு.

இல்லறமென்பது நற்குண நிறைந்த கற்புடைய மனைவியோடு அன்பும் அருளும் கொண்டு விருந்தினரையும் அருந்தவரையும் இனிய சொல்லோடு எற்று மகிழ்வித்து எல்லோரும் தன்னைப் புகழும் படிக்காகப் பிறர்மனை விரும்பாது நல்லபிள்ளை பெற நோற்றிருக்கும் தன்மையது.

இல்வாழ்வான் முன் கூறியபடி இல்லற நடாத்துவதோடு இன்னும் பல அரிய குணங்களையும் கொண்டிருக்க வேண்டும். தனக்குப் பிறர் செய்த கொலையொத்த தீமையையும் பொறுத்துப் பொன்றுந் துணையும் புகழ்படைத்து அவர் செய்த தினைத்துணை நன்றியையும் பனைத்துணையாகக் கருதி எழுமையும் மறவாது மனத்தைத் தீநெறிக்கட் செல்லாது அடக்கி உலகத்தோடொட்ட ஒழுகுதல் வேண்டும். பிறர் பொருளை வெஃகாது பிறருக்குப் பகுத்துண்டு புறஞ்சொற்கடிந்து தீமை செய்ய அஞ்சியவனாய் நன்மையையே நாடவேண்டும். இவ்வாறு இல்லறம் புரிதலின் நல்லறம் பிறிதொன்றின்று. அவ்வில்வாழ்வோனே வீடு கருதி முயல்வாருளெல்லாந்தலை.

இனி, துறவறம் என்பது, கல்வி கேள்விகளில் முதிர்ந்து இல்லந்துறந்து நிலையாமையுணர்ந்து பொருளும் இன்பமும் நீக்கி அருளுடன் உடற்பிணியாவும் பொறுக்கும் மனவாற்றலோடு தேவரும் வியக்கும் பேரொழுக்கமும், வாய்மையும், தவமும், தூய்மையுங்கொண்டு புல்புழு முதலிய துயருறினும்பரிந்தோம்பி வெயிலென்றும் மழையென்றும் பாராது பல இடங்களிலும் அலைந்து ஊனுணவொழித்து சருகுண்டு கானீர் குடித்து இவ்வாறு ஒழுகும் தன்மையது. இவ்வாறு துறவறத்துப் பிறனாற்பழிக்கப் படாது வாழ்பவனும் இல்வாழ்வானைப் போலவே வீடுகருதி முயல் வாருளெல்லாந் தலைவைத் தெண்ணப்படும்.

இல்லறந்துறவற மிரண்டும் வீடு தருவனவே. திருநீலகண்டர், இயற்பகையார், இளையான் குடிமாற நாயனார், அமர்நீதி நாயனார், அப்பூதியடிகள் முதலிய சிவனடியார் இல்லறத்திருந்தும் திருநாவுக்கரசு நாயனார் மெய்கண்ட தேவ நாயனார் மாபாடியம் சிவஞான முனிவர் முதலிய திருத்தொண்டர் துறவறத்திருந்தும் வீடடைந்தவர்கள்.

முன்னோர் முன் கூறியபடி அறமியற்றியதால் மட்டும் வீடு மற்றும் பெற்றனரா? இல்லை, இல்லை, அத்துடன் இறைவனடிக் கன்பு செய்தமையாலேயேயாம். மேற்கூறியபடி இல்லறத்தே னும் துறவறத்தேனும் நின்று முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப்பழம் பொருளாகிய சிவபெருமானை மனத்தால் நினைந்து வாக்காற்றுதித்துக் கைகளாற் பல மலர்களைக்கொண் டர்ச்சித்து வழிபட்டு வாழும் செயலாகிய அறமுடையனேல் இறைவனும் அருளும், இதனாலே அரனடிக்கன்பு செய்கையே மாண்பற மெனப்படும் சகலாகம பண்டிதராகிய அருணந்தி சிவாசாரியரும்,

"காண்பவன் சிவனே யானு லவனடிக் கன்பு செய்கை
மாண்பற மான்றன்பாத மறந்துசெய் யறங்க ளெல்லாம்
வீண்செய லிறைவன் சொன்ன விதியறம் விரும்பொன்றில்லான்
பூண்ட னன்வேண்டல் செய்யும் பூசனை புரிந்து கொள்ளே."

எனத் திருவாய்மலர்ந்தருளி யிருக்கிறார். மேலும் உலகினர் பாவ மெனக் கருதும் தீச்செயல்களும் அரனடிக் கன்பு காரணமாகச் செய்யின் அறமேயாம். நாரினிற் பாலராகிய தண்டீசநாயனார் சிவ

பூசைக்கு இடையூறுசெய்த தந்தையார் காலைத் தண்டத்தாற் றடிந்த செய்கை அதிமேன்மையான புண்ணியமாகச் சிவபிரானாற் கொண்டாடப்பட்டு அவருக்கு அடியாரியாருமடைய வொண்ணாத பெரும்பதவியை யீந்தது. அரனடி மறந்துசெய்யும் புண்ணியமும் பாவமேயாகும். பிரமன் மகனாகிய தக்கன் இறைவனடி மறந்துசெய்த வேள்வியும் இறைவனாற் பெரும்பாவமாக இகழப்பட்டு அவனுக்குப் பெருங்கேடு தந்தது.

மேலும் இந்திரன் முதலிய விண்ணவர் பதங்களியாவும் அழியும் தன்மையன. இந்திரன் பலகால் சூரபதுமன் முதலிய வசுரரால் தன் பதமிழந்து தவித்தனன். ஒரு காலத்து பொன்னாடு பானுகோபனால் சாம்பராக்கப்பட்டது. இந்திரன் மகனாகிய சயந்தன் பானுகோபனால் சிறையிடப்பட்டான். ஆகையால் இறைவனருளும் வீட்டின்பமே என்று மழியாச்செல்வமாம். கல்வியிற் பெரியாராகிய கச்சியப்ப சிவாசாரியரும்,

"காடுபோந்தன னிந்திரன் பொன்னகர் கரிந்து
பாடுசேர்ந்தது சயந்தனுஞ் சிறையிடப்பட்டன
ணுடல்விண் பதச்செய்கை யீதெம்பிரா னல்கும்
வீடதேயலாற் றுன்பறும் ஆக்கம் வேறுண்டோ"

என்றார் கந்தபுராணம் அமரர் சிறைபுகு படலத்து.

இதுகாறு மெழுதியவற்றால், பெறற் கரிதாகிய மனிதப் பிறவி பெற்றார், இன்பங்கருதிக் கடைப்பிடித்தொழுக வேண்டியது இல்லறந் துறவறமென்ற விரண்டி ளொன்றென்பதூஉம், மெய்யின்பம் பயப்பன இந்திரன் பரமன் முதலிய வானவர் பதங்களல்லவென்பதூஉம், அழியா இன்பந்தருவது சிவபிரானருளும் வீடொன்றே யென்பதூஉம், அவ் வீடு தருவது அரனடிக்கன்பு செயலாகிய மாண்பற மொன்றே யென்பதூஉம், உள்ளங்கை நெல்லிக்கனியேபோ லறியலாம். ஆகையால் நமனுடை முறை நாளாவதிது வென வறியாத நாம் நாளை நாளையென்னாது நல்லொழுக்க முடையவராய் இன்னே இறைவனடிக் கன்பொடு பூசனை யாற்றித் திருவருளா லென்றுங் குன்றா வின்பம் பெறுவோமாக.

## பால யகுருதுதர ரோக அபியுக்த சிகித்சை

## A rational treatment of the Infantile cirrhosis of the Liver

# குழந்தை பால்மாந்தக் கட்டி

[ஸ்ரீகாழி. ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்கள் எழுதியது]

பால யகுருதுதரம், யகுருத்தாலீ என்று சாஸ்திரங்களிற் சொல்லப்படும் வியாதியைக் கல்மாந்தம், மாந்தக்கட்டி, கல்லீரல் பெருக்கம், பால் மாந்தக் கட்டி என்று ஜனங்கள் கூறுவார்கள். குழந்தைகளுக்கு இவ்வியாதியா லுண்டாகும் ஈரற் பெருக்கத் திற்கும், விஷம ஜ்வரத்தாலும் காள ஜ்வாத்தாலும் பெற்றோர்களு டைய மதுபானப் பழக்கத்தாலும் கர்ப்பத்தில் மேக ஊறலாலும் கொறுக்கைப் புண் முதலியவற்றாலும் உண்டாகும் ஈரற் பெருக் கத்திற்கும் பேத முண்டு. யகுருதுதரம் வேறு, பிளீகோதரம் வேறு. யகுருதுதாத்தில் ஈரல் (Liver) பெருத்திருக்கும். பிளீ கோதரத்தில் சுவரொட்டி (Spleen) பெருத்திருக்கும். குழந்தை களுக்குக் காணும் பால் மாந்தக்கட்டியில் ஈரல் முதலில் பெருக்க ஆரம்பித்துச் சிலகாலத்திற்குப் பிறகு சுருங்கிப் போய் அடிவயிற் றில் வீக்கங்காணும். ஆங்கில வைத்தியர், இந்நோயை Infantile cirrhosis of Liver என்பர். Cirrhosis என்னும் பதம் மஞ்சள் நிறம் என்று அருத்தப்படும் கிரேக்க பதத்திலிருந்து வந்தது.

இந்த ரோகத்தின் நிதானம் பூர்வரூபம் ரூபம் உபசயம் ஸம்ப்ராப்தி யாகிய பஞ்ச லக்ஷணங்களையும், இதற்குச் சிகித்சை யும் விவரிப்பதற்கு முன் சீரண உறுப்புக்களின் விவரத்தையும் தொழிலையும் அவற்றைப் பேணும் முறையையும் தாய்மார் சிறி தளவு அறிந்திருத்தல் வேண்டும். எலும்பு முதலிய சரீரக் கூறு களுக்கும் (தாதுக்கள்) உண்ணும் உணவுகளுக்கும் பதார்த்தம் அளவில் மிகுந்த வேற்றுமை உண்டு. உணவு, சரீரக் கூறு ஆவ தற்கு முன் பல மாறுதல் அடையவேண்டும். அம்மாறுதலில் முதல் வேறுபாடு சீரண உறுப்புக்கள் வாய், பல், உமிழ் நீர்க் கோளம் (Salivary glands), மிடறு, இரைக்குழல், இரைப்பை,

குடல்கள், ரசாயன் (Lacteal), ரசதாரை (Thoracic Duct,) ஈரல் (Liver], கணையம் (Pancreas) என்பன. இவற்றுள் ஈரல் உடலின் வலதுபக்க விலாவிற்குள் வலது சுவாசப் பையின் கீழ் உள்ள கரிய சிவப்பான ஒருறுப்பு. பித்தநீர் இதிற் பிறக்கும். இதன் கீழ்ப் பித்துப்பை இருக்கும். பித்தநீர் மஞ்சள் நிறமும் கசப்புச் சுவையும் உள்ளது. சரீரம சுகமாயிருக்கும் நிலைமையில் பித்தம் இரைப்பைக்குட் செல்லாமல் துணைக்குக்கியிற் செல்லும்.

ஆகாரம் பற்களாலும் உமிழ் நீராலும் முதல் மாறுதல் அடையும். இரண்டாம் மாறுதல் பாசக நீராலும் (gastric juice) இரைப்பையாலும் அன்னப் பாகாதல். (chyme) மூன்றும் மாறுதல் துணைக்குக்கியில் அன்ன ரசமாதல். (chyle) நான்காம் மாறுதல் ரசாயனி ரசதாரை ரக்தாசயம் (Heart) சுவாசப்பை (Lungs) இவற்றால் இரத்த மாதல். ஐந்தாம் மாறுதல் மலம் பிரிந்து கழிதல். இம்மாறுதல்களில் இங்குத் தாய்மார்கள் கவனிக்கவேண்டியது அன்னப்பாகு துணைக்குக்கிக்குட் சென்று பித்த நீரோடும் கணைய நீரோடும் (Pancreatic juice) கலந்து அன்ன ரசமாகவும் மலமாகவும் மாறும் மாறுதலையே. இந் நிலைமையில் தொழிற்படும் முக்கிய உறுப்பு கல்லீரல் என்பது மேலே குறித்தோம். ஆதலின் குழந்தையின் ஈரல் விவரமும் தொழிலும் அதனைப் பேணும் முறையும் பெற்றோர் அறிந்திராத நிலைமையில் குழந்தையைப் பாதுகாத்தல் இயலாது.

குழந்தையின் சரீரசுகமும் சீரணிசக்தியும் ஒழுங்காக நடக்கும்படி தாய்மார் அதற்கு ஊட்டவேண்டிய ஆகாரத்தின் அளவையும் காலத்தையும் அதன் வன்மையையும், ஊட்டவேண்டிய விதத்தையும், ஊட்டுங்கால் உடம்பு இருக்கவேண்டிய நிலையையும் கவனித்தல் ஆவசியகம். சிசுவின் வயது தொழில் பழக்கம் சரீரநிலை குளிர்ச்சி சூடு சுகம் நோய் இவற்றிற்கேற்ப, ஆகாரத்தின் அளவு பேதப்படும். குழந்தையைப் போஷிக்கத்தக்க அளவே ஏற்ற அளவு. அதன் சரீரக்கூறு வளர்ந்து சுகத்தோடு இருக்கத் தக்க போசனப் பிரமாணத்தை நிதானித்து அறிந்து கொள்ளல் வேண்டும். சரீரத்திலுள்ள உறுப்புக்கள் அனைத்தும்

தங்கள் கழிவின் குறைவை நிரப்பும்படியும் தாதுக்கள் வளரும் படியும் ஆகாரம் அவசியமானது. குழந்தையின் தேகக் கழிவின் குறைவை நிரப்புவதற்கு அதன் தேகத்தில் இயல்பாக உண்டாகும் வேட்கை தான் பசி. அந்தப் பசிக்குத்தக்க அளவிலே ஏற்ற காலத்திலே குறைவை நிரப்புவதற்குப் போதுமான உணவைத் தாய்மார் ஊட்டி வளர்த்தல் வேண்டும். பிரமாணத்துக்குமேல் நிரம்ப ஊட்டுவதாலும், குறையை நிரப்புவதற்கு ஏலாத அளவு ஊட்டுவதாலும், சுகவீனம் உண்டாகும். சரீர அனல் எப்பொழுதும் ஒருபடித்தா யிருப்பதற்கு, சீரண உறுப்புக்களின் நிலைமைக்கும் காலத்திற்கும் தேக சுபாவத்திற்கும், வயதுக்கும் தக்கபடி, தேகத்தில் விளையும் நய நஷ்டங்களுக்குப் பொருந்துமாறு உணவு அருந்துதல் வேண்டும். குழந்தைகளின் ஈரலும் இரைப்பையும் மிகவும் நொய்மையானவை. அவ்வுறுப்புக்கள் தங்கள் வலிமைக்கு மேற்பட்டுத் தொழில் செய்யும்படியான ஆகாரத்தை ஊட்டுதலால் சுகவீனம் உண்டாகும். இவற்றைத் தாய்மார் கருதாது இருப்பதே குழந்தைகளின் சுகவீனத்திற்கு முக்கிய ஆஸ்பதம் ஆகும்.

## ரோக விநிச்சயம்

நமது பிரதேசங்களில் இன்ன ஜாதியார்க்கு, இன்ன சமயத்தாருக்கு, இன்ன ஆகாரம் உட்கொள்வார்க்கு, இன்ன இடத்து, இன்ன பெற்றோர்கள் பெற்ற சிசுக்களுக்குத் தான் மாந்தக்கட்டி உண்டாகின்றது என்ற நியமம் இல்லை. இவ்வியாதி ஆண்குழந்தைக்குத் தான் அல்லது பெண் குழந்தைக்குத்தான் உண்டாகும் என்ற நியதியும் இல்லை. ஆயினும் ஆறு மாசத்திற்கு மேற்பட்டு இருபத்தேழு மாசத்திற்கு உட்பட்டுள்ள பாலர்களுக்கே இப்பிணி பெரும்பாலும் உண்டாகிறது என்பதைக் கண்கூடாகக் காண்கிறோம். இப்பிணி மூன்று மாதகால அளவு முதல் பதினெட்டு மாதகால அளவு வரை நீடித்து இருக்கும். இப்பிராய அளவுக்கு முற்பட்ட இளங் குழந்தைகளுக்குப் பூவுதய காலத்திலேயே பித்தப்பையும் பித்துக்குழாயும் அடைபட்டு மாந்தக் கட்டி போன்ற ஓர் நோய் உண்டாகும். இப்பிராய அளவுக்குப்

பிற்பட்ட குழந்தைகளுக்கு விஷ அணுவிலிருந்து உண்டாகும் இரத்த சம்பந்தமான சீர்கேட்டால் பால் மாந்தம் போன்ற மற்றோர் நோய் உண்டாகும். குழந்தைகள் உண்ணும் போசனத்தில் சீவாதார வஸ்துக்கள் இன்மையால் கட்டி போன்ற பிறிதோர் நோய் உண்டாகும். சிசுவின் வயிற்றுக்கும் குடலுக்கும் ஒவ்வாத ஆகாரத்தால் அல்லது பிற காரணத்தால் அல்லது ஜீர்ணக் குறைவால் விஷவஸ்துக்கள் இரத்தத்தோடு கலந்து கல்லீரல் வழியே புகுந்து செல்லும்போது அக்கல்லீரலில் கட்டிபோன்ற வேறோர் நோய் உண்டாகும். இந் நான்கு நோய்களின் வேறுகிய யகுருதுதர ரோகமே இங்கு நாம் எடுத்துக் கொண்டது.

இந்தப் பால்மாந்தக் கட்டி ரோகத்தின் ஹேது முதலியவற்றை நிதானிப்போம். உணவுப் பொருட்களுட் சிலவற்றைக் குழவிகளுக்குக் கொடுத்த மாத்திரம், அப்பொருட்கள் சீரணிக்கின்ற காலத்தில் இளைய நொய்ய ஈரலுக்கு வேலை கொடுக்கின்றன. அப்பொருள்கள் ஜீர்ணித்து இரத்தத்திற் சேருங்காலத்தில் அவ்வீரலில் அதிக இரக்தம் சேருகின்றது. அவ்வாறு இரக்தஞ் சேருகின்ற காலத்தில் அவ் விரத்தத்தில் கலந்துள்ள பொருள்களைத் தனித்தனி ஈரல் பிரித்துப் பலவகை மாற்றங்கள் அடைதற்குப் பிற வுறுப்புக்கு அனுப்புகின்றது. சிற்சில பொருள்கள் ஈரலுக்கு மட்டுக்கு மிஞ்சின வேலையைக் கொடுக்கின்றன. இதனால் ஈரலில் சில சீர்கேடு உண்டாவது சகஜமே. அளவுக்கு மிஞ்சிய ஆகாரமும், தேகத்திற்கு ஒவ்வாத ஆகாரமும், நேரம் அல்லாத நேரத்தில் கொடுக்கும் ஆகாரமும் இவ்வகுப்பிற் சேர்ந்தவை. அளவுக்கு மிஞ்சிய ஆகாரம் ஈரலுக்கு அளவுக்கு மிஞ்சிய வேலையைக் கொடுத்து ஈரலைப் பெருக்கச் செய்து கெடுக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

சிசுவின் தேக நிலைக்குத் தக்க ஆகாரம் சுகசரீரியாய் இருக்கும் மாதாவின் முலைப்பாலே. 'பீரம் பேணி பாரந் தாங்கும்' என்பது **கொன்றைவேந்தன்**. மாதாவின் சுகவீனத்தாற் கெட்ட பாலோ அல்லது தாய்ப்பால் தவிர மற்றை உணவோ ஈரலுக்கு மட்டுக்கு மிஞ்சிய வேலையைக் கொடுத்து ஈரலைப் பெருக்கச்

செய்து கெடுக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? தாய்ப் பாலுக்குள்ள அமிர்தத் தன்மை பசுவின் பாலுக்கேனும் மாப் பண்டங்களுக் கேனும் மதுரவஸ்துக்களுக்கேனும் உண்டாமோ? அரிசிக் கஞ்சியையாவது யவக் கஞ்சியையாவது பசுப்பாலையா வது மா முதலியவை கலந்த திரட்டுப் பாலையாவது சவ்வரிசிக் கஞ்சியையாவது தாய்ப்பால் அன்றிக் கொடுத்தால், அவை இயற்கைக்கு மாறுன ஆகாரங்கள் ஆவனவே யன்றி இயற்கைக் குப் பொருத்தமான ஆகாரங்கள் ஆகுமோ? தாய்ப்பால் இல் லாதபோது மற்றைப் பால்களோடு சர்க்கரை கலந்து ஆவ தென்ன? கெட்டுப்போன புட்டிப்பால் முட்டுக்கு ஆகுமோ? மாதம் ஏறஏறச் சிசுவின்குடல் வலுக்க வலுக்க ஈரல் உரக்க உரக் கத் தாய்ப் பாலோடு எளிதில் செமிக்கத்தக்க உணவுப் பொருள் களை நமது முன்னோர் சேர்த்து வந்தார்கள் என்பதைக் காதாலா வது கேட்டு அவ்வண்ணமே இக்காலத்துச் சிசுக்களையும் வளர்க்க வேண்டாவோ? பல் முளையாத குழந்தைகளையும் முளைத்த குழந்தைகளையும் ஒரு வயதுக் குட்பட்ட குழந்தைகளையும் மேற் பட்ட குழந்தைகளையும் எந்தெந்த நோய்களில் எந்தஎந்த ஆகா ரங்களால் நமது அன்னைமார் பரிபாலித்து வந்தார்கள் என் பதைக் கேட்டறிந்து, அவ்வாறே நாமும் நமது குழந்தைகளைப் போற்றிவரக் கடமைப் பட்டிருக்கின்றோம் அல்லவா?

அகால போஜனமும் அமித ஆகாரமும் அசௌக்கியத்திற் குத் தாய், காலபோஜனமும் மிதமான தக்க ஆகாரமும் சௌக்கி யத்திற்குத் தாய். திடகாத்திரமுள்ள தாயின் முலைப்பாலே குழந் தை வாய் வைத்து உறிஞ்சிக் குடிக்கையில் அமிர்தம் ஆகின்றது. தாய்ப்பால் கெடுதல் அடைந்து இருந்தால், அஃது எதனுல் என்று முன்னர் கண்டறிந்து அதனைச் சௌக்கியப் படுத்தல் வேண்டும். இளங் குழந்தைகளையுடைய தாய்மார்கள் தங்கள் தேக சௌக்கியத்தையும் போஜனுதிகளையும், தேக உழைப்பை யும் கிரமப்படுத்தி, பள்ளியறையையும் சுத்தமாக வைத்துக் கொள்ளல் வேண்டும். புருஷ சம்சர்க்கம் இந்நிலைமையில் தங்கள் தேகத்தையும் கருப்பாசயத்தையும் பலவீனப் படுத்துவதன்றி, முலைப்பாலின் திரவரூபத்தை மாற்றி உச்சியிடித்துப் பாலைத்

திரித்து விடுமாதலால், அச்சம்சர்க்கத்தை மிதமாகக் கோடல் வேண்டும். பல் முளைத்த பின்னர்க் குழந்தையின் தேக நிலைக் கேற்ற இதர ஆகாரங்களைக் கொடுத்து வரலாம். குழந்தையின் ஈரலைச் சுலபமாகக் கெடுக்கக் கூடியவைகளில் பசுவின் பாலும், மாவேனும் எருமைப்பாலேனும் கலந்த பசுவின் பாலும், கொதிக் கக்காய்ச்சின பசுவின் பாலும் ஆகும். இவற்றை உட்கொண்ட மழவிளங்குழ்வியின் நொய்ய ஈரல் அதிகவேலை செய்து பார்த் துப்பருத்துக் கடைசியில் சிறுத்துப்போகிறது.

ஈரல் பருத்த பின்னரே இவ்வியாதி உண்டாகி விட்டது என்று துணிகின்றார்களே யொழிய, பெற்றோர் அதற்கு முன் னமே தெரிந்து கொள்வது இல்லை. குழந்தைக்கு இருமல் உண் டாயினும், கொடுக்கும் ஆகாரம் அதற்கு ஒத்துக்கொள்ளாவிடி னும், வாந்தி செய்யினும், வயிறு உப்பியிருப்பினும், வயிற்றுப் போக்கும் மலபந்தமும் மாறி மாறி வரினும், சில நாள் மிகுந்த பசி யுள்ளது போல் காட்டிப் பிறகு சில நாள் பசிமந்தம ஏற்படினும், தூக்கம் சரியானபடி இல்லாவிடினும், முகக்குறி மாறி வெளுத் துக் காட்டினும், தேகம் கத கத என்று இருப்பினும், மூத்தி ரம் குறைந்து செந்நிறமாயிடினும், இவையனைத்தும் மாந்தக்கட் டிக்கு முன்னறிகுறிகள் என்று நிச்சயமாய் எண்ணல் வேண்டும். இதற்கு மேல் மலபந்தம் அதிகப்படும். பேதிக்குக் கொடுத்தால் தான் மலம் பிரியும், மலத்தின் நிறம் மண்போன்று இருக்கும், பலநிறம் காட்டும். அதற்கு மேல் என்ன? ஈரல் சிறிது சிறிதாகப் பருத்து முடிவில் பெருத்துப் போகும். நீர் சிவந்து குறைந்த அளவில் இறங்கும். முகம் தேகம் கால் வெளுத்துச் சக்திபற் றுப் போகும். பழுவெலுப்பை எண்ணிக் கணக்கிடலாம். நாளம் (veins) புடைத்துத் தோன்றும். இவ்வாறு ஆனபின்னர்த்தான் ஈரல் சுருங்கும். ஈரலில் வலியுண்டாகும் காய்ச்சல் ஒரே நிதானத் தில் இருக்கும். மஞ்சட்காமாலை காணும், தேகம் முழுவதும் நிறம்மாறி நமைச்சல் உண்டாகி, மூத்திரம் மலம் மஞ்சள் நிற மாகி, பிறகு மலம் சளித்துப்போகும், அதன் பிறகு ஜலம் வயிற் றில் இருப்பதாகத் தோன்றும் இதற்கு மேல் இருமல் கபஜ்வரம் கண்டு முடிவைத் தரும்.

## ஸிகிச்ஸா க்ரமம். A. தடுக்கும் உபாயம்

இந்த ரோகத்தை வரவொட்டாமற் றடுப்பதே நலம். தாய் தன் ஆகாரத்தையுந் தேகசுகத்தையும் செம்மைப் படுத்தித் தன் பாலைச் சுகமாக வைத்துக்கொண்டு அப் பாலாலேயே தன் இளங் குழந்தையை உண்ணச்செய்து போஷித்து வருதல்வேண்டும். ஓராண்டின்பின் குழந்தை வளரவளர அதன் தேகநிலைக் கேற்ற உணவுகளை முன்கூறியவாறு கொடுத்து ரக்ஷித்துவரல் வேண்டும். ஈரலுக்குத் தடைசெய்யக்கூடிய எப்பொருளையும் எம் முகாந்தரத்துங் கொடுக்கலாகாது. காற்று வெளிச்சம் அப்பியாசம் ஆகாரம் பானம் ஆடை சிதோஷ்ணம் படுக்கை நித்திரை ஸ்நானம் இவற்றால் குறைவுண்டாகாதபடி குழந்தையைப் பராமரித்தல் வேண்டும். பால்புகட்டி வளர்க்க நேரிடினும், செவிலித்தாயைக் கொண்டும் போஷிக்க வேண்டினும், குழந்தையின் சுகம் கெடாதபடி எச்சரிக்கையா யிருக்கவேண்டும். ஸ்தன்ய பானம் செய்விக்கும் சுத்த நிலைகளைச் சாவதானமாகப் பேணல் வேண்டும். தாய்ப்பால் கிடைக்காத காலத்தில் பசுப்பாலையே னும், ஆட்டுப்பாலையேனும், கழுதைப்பாலையேனும், தாய்ப்பாலுக்கு ஒப்பமாற்றி உண்பிக்கவேண்டும். பசுப்பாலுக்கும் தாய்ப்பாலுக்கும் அதிக பேதமிருப்பதால், பசுவின்பாலைத் தாய்ப்பால் அளவுகுணம் உள்ளதாகச் செய்தற்குக் குழந்தையின் வயதளவிற்கேற்ப, பசுப்பாலோடு கிரீம், லாக்டோஸ், சுண்ணும்புஜலம், சுத்தஜலம் இவற்றைக் கலந்து, அந்தக் கலவையில் ஒரு அவுன் ஸுக்கு ஒருகிரேன் சோடியம் சிட்ரேட்டைச்(Sodium citrate) சேர்த்துக் கொடுக்கலாம். திருஷ்டாந்தமாக மூன்றுமாதக் குழந்தைக்கு இரண்டரை அவுன்ஸு தனிப் பசும்பாலோடு இரண்டரை அவுன்சு கிரீமும், ஒரு அவுன்சு லாச்டோசும், ஒரு அவுன்சு சுண்ணும்பு ஜலமும், பதினூறு அவுன்சு சுத்த ஜலமும், ஒரு கிரேன் சோடியம் சிட்ரேட்டும் கலந்து கொடுக்கலாம். வயது ஏற ஏறப் பாலை அதிகமாக்கிக்கொண்டு அந்த அளவில் மற்றையவற்றைக் குறைத்துக் கொள்ளலாம்.

நமது நாட்டுப் பழக்கப்படி பசுவின்பால் முதலியவற்றைச் சுத்தஞ்செய்து கொடுக்கும் முறைகள்.

## பசுவின்பால் முதலியவை குழந்தைக்குக் குணந்தருதல்

துத்தியின் பூநொச்சி தும்பை துளசிமலர்
சுத்தி பசும்பாற்குச் சொல்.

தைவேளை பூச்சேரத் தாய்ப்பா லனைத்தாகும்
மெய்வேளை யான்பால் விரும்பு.

கொதிநீரு முப்புங் கொழுத்தபசுப் பாலை
யதிபக்கு வந்தானுக் கும்.

சத்துமாத் தெண்ணீர் சமன்கலந்த வாவின்பால்
மெத்த சுகந்தருமே மேல்.

அத்திக்காய்ச் சாற்றோடே யாவின்பால் சேர்ந்தக்கால்
அற்றைமலச் சிக்க வறும்.

நெல்லி யிலைச்சாற்றி னேர்ந்தவாட் டுப்பாலாற்
புல்லியகா மாலையது போம்.

கத்தபத்தின் பாலிற் கலந்த வதிமதுரம்
மெத்த கனலகற்று மே.

* அதிமதுரஞ் சங்கம்வே ரானசம் பீரம்
மதிபசுப்பால் காமாலை மாற்று.

வெந்ததோ ரோமம் வெறுவியவே லப்பசும்பால்
சந்தோடந் தானே தரும்.

பிட்டவித்த கர்ப்பூர வல்லி பிழிச்சாறு
தட்டிவிடும் மாந்தந் தனை.

(தொடரும்)

---

* இதன் தெளிமோர் (whey) எளிதிற் சீரணிக்கக் கூடியது.

# பிரேமதாமர்

[மயிலை சீனி கோவிந்தராசனுர்]

(உஅ௬-ம் பக்கத் தொடர்ச்சி)

தாம :—(மறுத்து) "இல்லை. இல்லை. எப்படி யேனும்
சொல்லிய நாளில் செல்லுவன் பிரேமன்;
உயிரைப் போற்றல் உயர்வென் றெண்ணுன்.
உயிரினும் நாவையே உயர்வாப் போற்றுவன்;
என்றே என்மனம் நன்றே அறியும்!
(பிரேமனைப் பார்த்து)

"சுற்றமும் இவனுடைச் சூழ்ந்த நண்பரும்
பற்றிவன் இவ்விடம் மறுபடி வாராமல்
திடமுடன் தடுக்கத் திருவருள் புரியாக்
கடவுளுக் கினிஎன் கைகூப் புவனே?
நல்லோன் பிரேமன் நல்லுயிர் வாழின்
எல்லோர் தமக்கும் எத்துணை பயனும்!
அன்னவன் பொருட்டால் என்னுயிர் அளித்து
நன்மன நிறைவும் நான்பெற் றமைவேன்!"

தியோ :—(முகம் சுளித்து) "ஓகோ! என்னே! உன்வாழ் வுனக்கு
நோவோ? வெறுப்போ? நுவலாய் எமக்கே."

தாம் :—(கோபத்தோடு)
"வெறுப்பே! வெறுப்பே! மறுப்பேன் அல்லேன்.
பொறுத்தல் ஆகாக் கொடுமை பழகிய
கறுத்தகல் நெஞ்சக் காவலன் காணினும்
அங்கவன் கையில் வெங்கோல் உணரினும்
வாழ்க்கையில் வெறுப்பு வாரா தொழியுமோ ?"

தியோ :—(தலையை அசைத்து) "நன்றே! நன்றே! நாளை முதலா
என்றும் காணுய் அவனை! இன்றே
உன்னுயிர் வாங்க உத்தர வளித்தேன்!"

பிரே :—(அரசன் முன்வந்து நின்று கும்பிட்டு)
மன்னரே! அவனை மன்னியும்! மன்னியும்!
தன்னுடை நண்பன் தலையை இழந்து
சாவது கருதி நோவது பெருகி
இரக்கம் எழுந்துபின் இப்படி யொழிந்தான்.
மறக்க வேண்டும், மன்னரே! அவன் பிழை!
பிரேமனும் எனக்கே பிராண தண்டனை
விதித்தீர். கொல்வீர். வேறேன் எண்ணம்?
அவ்விதி எற்கவும் அன்பனை மீட்கவும்
இவ்விடம் வந்தேன்! 'இல்லை' யென்னாமல் என்
முடிவு காலத்தில் முழுமனத் தோடுநீர்
ஈதொரு வரமெனக் கீந்திடல் வேண்டும்!"

தியோ :—(கோப நகை நகைத்து)
"ஆகா! ஈவேன்! அரசன் ஆற்றலை
இழித்துக் கூறி எள்ளிய உங்களை
அழிக்கும் சாவினை அலட்சியம் செய்யும்
அஞ்சா நெஞ்சம் அமைந்த உங்களை
பொறுப்பேன்! விடுப்பேன்! பொறுப்பேன் நன்றாய்!"

தாம :—(அஞ்சாமல்)
"நல்லன பொறுத்தல் நாணமே உமக்கு?.
உம்மன மகிழ்ச்சி ஒன்றின் பொருட்டே
இம்மெனத் தனதுயிர் இழக்கத் துணிந்து
திரும்பியும் வந்த தீரச் செயலால்
பிரேமனே வாழ்வைப் பெருமை படுத்தினன்.
உமது தயாவுக் குரியனும் ஆயினன்.
யானோ என்னில் என்னரும் துணைவனைக்
காப்பது கருதிக் கடியோய்! உமக்கே
மீளாச் சினத்தையும் மூட்டி மேன்மேல்
வலியறும் ஆணையாம் வலையினும் பட்டேன்!
என்னிடம் பெற்றதை எற்று நும்மனம்
ஓகை பெறுக, என் உயிரே கொள்க.

பிரே :—(மறுத்து) "கொள்ளீர் மன்னரே! கொள்க என்னுயிர்
　　பிரேமனே நுமக்குப் பிழையினைச் செய்தேன்.
　　இவ்வொரு உண்மை செவ்வையாய் நினைவீர்.
　　தகுதிஅன்றுநீர் தாமனே—"

தியோ.—(மூக்கின்மேல் விரலை வைத்து) "அந்தோ!
　　இங்கே காண்பதும் என்னே கேட்பதும்!
　　எங்கே உள்ளேன்? எங்கே உளேன் யான்?
　　எத்தனை துக்கம் எனக்கே! ஓகோ!
　　எத்தனை பெருமை இவர்போல் இருப்பது.

(தொடரும்).

---

# சிவபெருமானும் செந்தமிழும்

[ஜீ. சதாசிவம் பிள்ளை]

ஊரும் பேரும் உருவுமில் லாதவன்
ஊரும் பேரு முருவமுந் தாங்கி
ஆதி சைவ அந்தண விருத்தனாய்
நாவலூ ராளியின் நறுமணம் தடுக்க
ஆவண வெழுத்தும் அந்தணர் முன்னர்ப்
பேசிய பேச்சும் பெருந்தமிழ்ப் பாஷையே
பித்த னென்றே பீடுறப் பாடென
அத்தன்மெய் யுருவுட னறைந்ததும் தமிழே
சித்த வடமெனும் திருமடா லயத்தில்
வீரட் டானொரு விருத்தவே தியனாய்
மலர்ப்பதஞ் சூட்டி மலர்ந்ததும் தமிழே
அம்பலத் தாடு மண்ணலெம் பெருமான்
ஆரூர் வாவென் றழைத்ததும் தமிழே
சுந்தரா நினது தோழன்யா மென்று
வன்மீக நாதர் மலர்ந்ததும் தமிழே
பரவையார் விவாகப் பண்பும் பின்னர்த்
தூது நடந்துபோய்ச் சொற்றதும் தமிழே
திருமுது குன்றம் செல்வழி எதெனக்
கூடலை யாற்றூர் கொணர்வழி கூறி

மறையவர் கோலம் மறைத்ததும் தமிழே
திருக்குருகாவூ செல்லும் வழியில்
பிராமண வடிவம் பீடுறத் தாங்கி
நீரும் சோறும் நிழலு மமைத்துப்
பசிதணி வித்த பாஷையும் தமிழே
திருக்கச் சூரிலே திருவமு தருத்த
ஐய ருருவொடு மந்தணரி லந்தொறும்
ஓட்டில்யா சித்தங் குரைத்ததும் தமிழே
சங்கிலி யார்பாற் றழைத்ததும் தமிழே
ஐயா றுடைய வடிகளோ வென்னக்
கன்றொன் றழைக்கக் கதறிய பசுப்போல்
ஓல மென்றிவ் வுலகெலாங் கேட்ப
உரைத்த மொழியு மொண்டமிழ் மொழியே
தில்லையில் வாழ்ந்த திருநீல கண்டர்
ஓட்டினை ஒளித்தங் குரைத்ததும் தமிழே
இயற்பகை மனையி லிசைத்ததும் தமிழே
அமர்நீதி பாலங் கறைந்ததும் தமிழே
மாறன் விருந்து வார்த்தையும் தமிழே

(தொடரும்)

---

# வண்ணாரப் பெரியாண்டி

[க. ப. சந்தோஷம் B. A., L. T.,]

(௨௬௬-ம் பக்கத் தொடர்ச்சி)

பெண்களின் உரிமை வண்ணாருக்குள்ளும் எப்போதும் எல்லோராலும் பெரிதாகப் பாராட்டப்பட்டு வந்ததாகத் தெரியவில்லை என்று முன் பகர்ந்தோம். இதற்குச் சான்று இராமாயணத்திலுளது. யாதுபற்றியோ இல்லத்தை விட்டு வெளியே சென்று இராத்தங்கி வந்த தன் மனைவியை ஏற்றுக்கொள்ள மாட்டேனென்று விளம்பிய வண்ணானொருவனை யங்குக் காண்கின்றோம். விரிவிலா அறிவுடைய இச்சிறு மகன், இலங்கையில் இராவணன்பாற் சிறை யிருந்து மீண்டு வந்த சானகியைத் தன்

னோடு சேர்த்துக்கொண்ட இராமனைப்போல் தான் ஆண்மை யற்றவனல்லன் என்று சினந்து கூறலானான். தன் மனைவியின்மீது இவன் ஐயங்கொண்டதைப் பற்றி இங்கு விரித்துப்பேச வேண்டியதில்லை. ஆனால் சீதையின்மேல் இவன் பழி சுமத்தியதை எளிதில் விடுக்கலாகாது. கணவனுடைய காவலின்றி ஒரு பெண் தனியே இருந்து தன் கற்பைப் பேணிக்கொள்ள முடியாதென்பது இவனுடைய கொள்கை என்று தெரிகிறது. ஆனால் கணவனை விட்டுப் பிரியாது, அவன் பார்வையை விட்டகலாது, கூண்டிலடைப்பட்ட குருவியைப் போலிருக்கும் ஒருத்தி கற்புடையவ ளாகி விடுவாளோ? இராமயண வண்ணானாகிய இவன் பெண்களைச் சற்றேனும் மதித்தானில்லை; கீழ்மகனாகிய இவன் வண்ணானாய்ப் பிறந்தது பெரிதும் வருந்தத்தக்கது. இவனுடைய சிறுமொழியைச் செவியுற்று உளங்கலங்கி சானகியை இராமன் காட்டிற்கனுப்பியது முறையாகுமோ என்ற கேள்வி அறிஞர் கருதுதற்குரியது. நிற்க.

வண்ணாரனைவரும் ஒன்றாய்ச் சேர்ந்து, மேற்கண்ட இராமாயண வண்ணான் தங்கள் ஒழுக்கத்திற்கு மாறுபட்டு நடந்த கயவனென்றும், அவனைத் தங்கள் இனத்தைச் சேர்ந்தவனாக நினைக்கக்கூடாதென்றும் கூக்குரலிடுகின்றனர். அவர்கள் கூறுவதென்னவெனின்; "அழுக்கெடுத்துப் பிழைப்பதெங்கள் தொழில்; நீரும், நெருப்பும் உவர் மண்ணுங் கொண்டு கறைகளைப் போக்கி இழுக்கு வழுக்கற்ற நற்றொழிலைச் செய்து வருகின்றோம். பிறர்க்குப் பெரிதும் பயன்படுமொரு வேலையைக் காலை மாலை செய்து வயிறு வளர்க்கின்ற எங்களைக் குறுகிய அறிவுடையோர் இகழ்ந்தாலும் குற்றமறக் கற்ற பெரியோர் எங்களை நன்கு மதித்து அன்போடு நடத்தி வருகின்றனர். அவர்கட்கு நாங்கள் மிகுதியும் நன்றிபாராட்டுகின்றோம். அழுக்கு நீக்கி வெள்ளை செய்வதற்கு மாறாக நாங்கள் வெள்ளையை எடுத்து அழுக்குச் செய்வோமாயின் எல்லோருஞ் சேர்ந்து எங்களைப் புளியம் வளார் கொண்டு புடைக்க முன் வருவார்களென்பதில் ஐயமேயில்லை. இதுசரியே. வெள்ளையை எடுத்து அழுக்குச் செய்தல் எங்கள் மரபிற்கு முரண்பட்ட புன் செயலாகும். இராமாயண வண்ணான் எங்கள் தொழி

வின் உள்ளுறை பொருளையறியாத கசடன். காசுக்குதவாத இந்தப் பையல் மாசுமறுவற்ற ஒழுக்கமுடைய சீதையின்பேரிற் குற்றங் கூறியதால் வெள்ளையைக் கறைப்படுத்திய பழிக்காளானுன். இதனுல் எங்கள் குலத்திற்குக் கேடும், பெயருக்கு இழிவும் நேர்ந்தன. இவனை எங்களில் ஒருவனுக எண்ணுவது தவறு'' என்பதே. இங்ஙனம் வண்ணார் சொல்வது ஒவ்வாதென்று எவர் விலக்கக்கூடும் ? இதுவரையில் நாம் வண்ணாருக்குக் கூறிய உயர்வெல்லாம் மிகையாகாதென்பது மேற்சொன்னவற்றுல் வெளியாகின்றதல்லவா ?

ஆனுல், இராமாயண வண்ணான் மாண்டொழிந்து போனுலும், அவனுடைய வழியில் தோன்றிய பல்லாயிரம்பேர் இப்போது நானிலத்திருக்கின்றனர். இவர்கள் மற்ற வண்ணார்களுக்கஞ்சித் தங்கள் பழைய தொழிலைவிட்டு வேறு துறைகளிற் புகுந்து, சீர் கெட்ட தங்கள் முன்னேனுடைய வேலையைப் பெரும்பாலும் மறைவாகவும், வேளாவேளைகளில் வெளியாகவும் செய்து வருகிருர்கள். இவர்களிருக்கும் வரையில் வையகம் நன்னிலையடைய வழியில்லை.

ஒரு நாளிரவு பெரிய புகை வண்டிச்சாலையொன்றில், சிற்றுண்டி விற்குமிடத்தில், பிரயாணச் சீட்டுச் சோதகர்களிருவர் பேசிக்கொண்டிருந்தனர். இவர்களிலொருவன் புதிதாய் வேலையிலமர்ந்தவன் போலும், ஏனெனில், அவன் மற்றவனை விளித்து, "இன்று நான் பலவகையில் முயன்று பார்த்தும் ஐந்து அணுவிற்குமேல் அகப்படவில்லை இந்த நாட்டுப்புறத்து ஜனங்களை எவ்வளவுதான் பயமுறுத்தினுலும் அரையணு, ஒரு அணுவிற்கு மேல் அவர்கள் அவிழ்த்துக்கொடுப்பதில்லை'' என்றுன். இதைக் கேட்ட அவனது நண்பன், "கைக்கூலி வாங்கப் பயப்பட்டால் ஒன்றும் நடவாது. கைக்கூலி வாங்காதவன் எவனிருக்கிருன் இந்த உலகத்தில்? ஆயிரத்தொகையாய் சம்பாதிக்கிறவன் நூற்றுக் கணக்காய் இலஞ்சம் பெற்றுக்கொள்ளுகிருன்; நூற்றுக் கணக்காய் சம்பளம் பெறுகிறவன் பத்து, இருபது இலஞ்சம் வாங்குகிருன்; இருபது, முப்பது சமபாதிக்கிற நாம் எட்டணு, பத்தணு வாங்கவேண்டியதுதானே. இதில் தவறென்ன விருக்கி

றது?'' என்று உறுதியாய் மொழிய, மற்றவன் இவனை மிகவும் வியந்து, ''நீ சொல்வது உண்மை. எல்லாரும் இலஞ்சம் வாங்கு கிறவர்கள் தான் என்பதை நான் மறந்து விட்டேன்; நாம் ஏன் பயப்படவேண்டும்?'' என்று தன்னைத்தானே தேற்றிக் கொண் டான். தன் மனைவி வெளியே சென்று வந்ததால் அவள் நெறி தவறி யிருக்கக் கூடுமென்பதைக் கொண்டு சீதையைக் கற்பழிந் தவளாக எண்ணிய இராமாயண வண்ணானைப்போல் மேற் குறித்த இருவரும் மக்களனைவருங் கைக்கூலி வாங்குகிறவர்களே என்று தீர்த்து விட்டார்கள். இங்ஙனமே, உலகில் உண்மை சொல்லுகிறவர்களில்லை, கற்புடைய மங்கையரில்லை, நியாயத் தைச் செய்கிறவர்களில்லை என்று பிதற்றித்திரியும் மக்கள் எண் ணிறந்தவர்க ளிருக்கின்றனர். இவர்களெல்லாம் இராமாயண வண்ணானைச் சேர்ந்தவர்கள் தான். இப்படிப் பேசுகின்றவர்கள் தங்கள் சொற்களின் உண்மைப் பொருளை யறியாதவர்களென்றே சொல்லவேண்டும். பள்ளிக்கூட இறுதி வகுப்பு (School - final class) ஒன்றிற்குப் பாடஞ் சொல்லிக்கொண்டிருந்த ஆசிரியர், மாணவர்களைப் பார்த்து, ''நீங்கள் உங்கள் கல்வியை முடித்துக் கொண்டு உலகிற் சென்று அலுவல் பார்க்கும்போது உண் மையைப் பேசி நியாயத்தைச் செய்யவேண்டும்'' என்றார். அப் போது வகுப்பிலிருந்த மற்ற மாணவரைக் காட்டிலும் நெட்டை யனா யிருந்த ஒருவன் எழுந்து, ''ஐயா, இந்தக் காலத்தில் நியா யத்தைச் செய்கிறவர்கள் யாரிருக்கிறார்கள்?'' என்று கேட் டான். இதற்கு மறுமொழியாக ஆசிரியர், '' நீ எழுந்து இரண்டு மணி நேரம் நின்றுகொண்டிரு'' என்றார்.

''நான் ஒன்றையுஞ் செய்யவில்லையே, ஐயா, என்னை இரண்டு மணிநேரம்நின்று கொண்டிருக்கும்படி கட்டளைகொடுக்கலாமா?''

''நீ ஒன்றையுஞ் செய்ய வில்லை, உண்மைதான். அதனா லென்ன ? இரண்டு மணி நேரம் நிற்பதால் நீ இறந்துவிட மாட் டாய். நில்''

''ஐயா, இது நியாயமா ?''

''உன்னுடைய மொழிப்படி உலகத்தில் நியாயஞ் செய்கிற வர்கள் ஒருவருமில்லை. அப்படியிருக்க நீ என்னிடம் வந்து நான்

நியாயஞ் செய்யவில்லை என்று முறையிடுவது விந்தையாயிருக்கிறது. உலகத்தில் நியாயமே கிடையாது என்கிறவன், தனக்கு மற்றொருவர் நியாயஞ் செய்யவில்லை என்று கூற இட முண்டோ'' என்று ஆசிரியர் சொல்லி அந்தப் பிள்ளையாண்டானுக்கு அறிவூட்டினர். (தொடரும்)

---

## தென்னிந்திய தமிழ்ச்சங்கம் திருநெல்வேலி

### தனித் தமிழ்த்தேர்வுகள்

திருநெல்வேலி நகரில் 1924 ஜூனில் நிறுவப்பெற்றுள்ள தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தார், நாளது 1926 ஜூன்மீ 28உ முதல் ஜூலை மாதம் 5உ வரை நடத்திய தனித்தமிழ்த் தேர்வுகளில், முதலாவதாகிய 'தமிழ்த் தேர்வு'க்கு விண்ணப்பித்துக் கொண்டவர் பன்னிருவர். தேர்வுக்கு வந்தெழுதியவர் அறுவர். தேர்ச்சியுற்றவர் இருவர். இரண்டாவதாகிய 'இளந்தமிழ்ப் புலவர்' தேர்வுக்கு விண்ணப்பித்தவர் ஒருவர். இவர் தேர்வுக்கு வந்தெழுத வில்லை. மூன்றாவதாகிய 'தமிழ்ப் புலவர்' சிறப்புப்பட்டத் தேர்வுகளில், தமிழ்ப்புலவர் காப்பியத்துக்கு விண்ணப்பித்தவர் இருவர். இவரில் எழுதினவர் ஒருவர், தேர்ச்சியுற வில்லை. தமிழ்ப்புலவர் சங்க நூலுக்கு விண்ணப்பித்தவர் ஒருவர். இவர் எழுதித் தேர்ச்சியுற்றுள்ளார். தமிழ்ப் புலவர் இலக்கணத்துக்கு விண்ணப்பித்தவர் ஒருவர். எழுதினர், தேறவில்லை. இத்தேர்வுகட்கு இந்தியாவிலும் இலங்கை முதலிய வெளியிடங்களிலும் பயின்றுவரும் மாணவர்கள் பலருளர். முதல் முதலாக நடைபெற்ற இந்த ஆண்டில் வந்தெழுதக் கூடாமற் போயினும், மேல் வரும் யாண்டில் நூற்றுக்கணக்கான மாணவர் வந்தெழுதித் தேர்ந்து பெருமையும் புலமையும் எய்துவார்களென்று நம்பப்படுகிறது.

### தேர்ச்சிக் குறிப்பு

#### தமிழ்ப் புலவர்

பதிவெண் (சங்க நூல்) 3-வது வகுப்பு

15—ஞா. தேவநேசப்பாவாணன்,
தமிழாசிரியர், கிறித்தவகலா சாலை, சென்னை.

#### தமிழ்த் தேர்வு

3-வது வகுப்பு

2.—ஆ. ஜெபரத்னம், குறும்பலாப் பேரி
பாவூர்ச்சத்திரம், திருநெல்வேலி.

5.—யோ. தங்கசாமி பாண்டியன்,
குறும்பலாப்பேரி, பாவூர்ச்சத்திரம், திருநெல்வேலி.

பு. சி. புன்னைவனநாதன், அமைச்சர்.



திருவெண்ணெய்நல்லூர் சிவபிரான் கோயில்.

ஓம்
திருச்சிற்றம்பலம்


# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது

| சிலம்பு ச | மெய்கண்டான் யாண்டு-எாஅ ஆவணித்திங்கள் 1926ஆ ஆகஸ்டுமீ—செப்டம்பர்மீ | பரல் அ |
|---|---|---|


திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே

திருச்சிற்றம்பலம்

---

## கருவூர்த்தேவர்


[கோயம்புத்தூர் C. K. சுப்பிரமணிய முதலியார், பி. ஏ.,]


சைவத் தெய்வத் திருமுறை பன்னிரண்டனுள் ஒன்பதாவதாக வைத்தெண்ணப்படுவது "திருவிசைப்பா" என்னும் திருப்பாடற்றொகுதியாம். இத் தொகுதியினுள் 29 திருப்பதிகங்களும் அவற்றிலே 301 திருப்பாசுரங்களும் உள்ளன. இவற்றை அருளிச் செய்த பெரியோர் திருமாளிகைத் தேவர் முதல் சேதிராயர் ஈறாக ஒன்பதின்மராவர். இந்நாயன்மார்களின் வரலாறுகள் இங்குமங்குஞ் சிற்சில துண்டுச் செய்திகளாகக் கேட்கப்பெறு

வன வன்றிச் சரித உருவமாக யாண்டும் போற்றி வைக்கப் பெருமை சைவமும் தமிழும் செய்த தவக் குறையே யாகும். சைவத் திருமுறைகள் பன்னிரண்டன் ஆசிரியர்களாம் பெருமக் கள் இருபத்தெழுவராவர். இவர்களில் முதல் ஏழு திருமுறை அருளிய ஆசாரிய மூர்த்திகளாகிய ஆளுடைய பிள்ளையார், வாகீ சத் திருவடிகள், தம்பிரான்றோழர் என்ற மூவர் முதலிகளையும், பத்தாவது திருமுறைக்காராகிய திருமூல நாயனாரையும், பதி ஞேராம் திருமுறை அருளிய பெரியார்களிலே, காரைக்கா லம்மையார், சேரமான் பெருமாணாயனார், ஐயடிகள் காட வர்கோன், நக்கீரர், கபிலர், பரணர் ஆகிய பெருமக்களையும் பற்றி தெய்வச் சேக்கிழார் திருவாக்காகிய அருட்டிருமுறை பொறித்து வைத்திருக்கின்றது. பதினோராம் திருமுறைப் பிரபந் தங்கள் அருளிய பெரியோர்களிலே பெரிய புராணத்துப் பேசப் படாத பட்டினத்தடிகள், சேந்தனார் நம்பியாண்டார் நம்பிகள் வரலாறுகளைக் குறித்து, தனித்தனிப் புராணங்களும் சரிதங்க ளும் உள்ளன. பன்னிரண்டாம் திருமுறை யருளிய சேக்கிழார் பெருந்தகைக்கோ சந்தானசாரிய மூர்த்திகளிலே ஒருவரும் தில்லைவாழ் அந்தணர்களில் ஒருவரும் ஆகிய உமாபதி சிவாசாரி யர் புராணம் செய்தருளி யிருக்கின்றார்கள். எனவே தெய்வச் சைவத் திருமுறை யாசிரியர்களுள்ளே ஒன்பதாம் திருமுறை அருளியவர்கள் வரலாறுகள்தான் புராணவுருவமாகவோ அன்றி வேறுவகை முழுச்சரித உருவமாகவோ உலவக் காணாமை சைவ வுலகம் மிக வருந்தத் தக்கதொன்றாம.

திருவிசைப்பா என வழங்கும் ஒன்பதாவது திருமுறையிலே உள்ள 29 திருப்பதிகங்களிலே 10 திருப்பதிகங்கள் கருவூர்த் தேவர் அருளியவையாகும். எனவே ஏனைய 19 திருப்பதிகங் கள்தான் ஏனை எட்டுப் பெருமக்களும் அருளியவையாம். இவ் வாறு திருவிசைப்பாத் திருமுறையிலே பெரும்பான்மை அரு ளிய தேவரைப்பற்றி நாம் விசாரிக்குமளவில் அவர் சரிதப்பகுதி யாக ஏறக்குறைய ஒன்றுமே கிடைக்கின்றதில்லை. இவர் பெய ராலேயே கருவூர் என்ற தலத்திற்கும் இவருக்கும் சம்பந்த மிருக்கவேண்டுமென்று நிச்சயமாய்த் தெரிகிறது. அந்த ஊரின்

பெயராலேயே இவர் விளக்கம் பெற்றிருத்தலும் திருவிசைப்பா வின் ஏனைய ஆசிரியர்கள்போ லல்லாது இவரது இயற்பெயர்தா னும் தெரியமுடியாமலிருப்பதும் கவனிக்கற் பாலதாம். கருவூர் என்பது கொங்குநாட்டுப்பாடல்பெற்ற ஏழு திருத்தலங்களில் ஒன் றாகும். இக்காலத்தும் அத்தலத்தின் திருவானிலை என்னும் திருக் கோயிலுள் வெளிப்பிரகாரத்திலே தென்மேற்குத் திக்கிலே ஒரு சிறு ஆலயம் "கருவூரார் சந்நிதி" என்று பிரசித்தமாக விளங் குவது காணலாம். கருவூரார் இத்தலத்தேதான் சமாதிபெற்று இறைவனுடன் இரண்டறக் கலந்ததாக அத்தலபுராணம் விரித் துக் கூறுகிறது. இவர் சரிதமானது வேறெங்கும் விரிவாகக் காணப்படாமையாலே அத்தல புராணத்துக் கூறப்பட்ட அள விலே சிறிது விவரமாக இதன்கீழ் எடுத்து எழுதப்பெறுகிறது.

"கருவூர்த்தேவரானவர் கருவூரிலே மறையவர் குலத்திலே பிறந்தவர். இவர் உலகாயுத முதலிய பல சமயங்களையும் நன் காராய்ந் துணர்ந்து சைவசமயமே சற்சமயமென்று தேறி அதன் வழியே ஒழுகுவாராயினர். வேதம் ஆகமம் என்னும் முதனூல் வல்லோராய் வைதிக சைவந் தழைத் தோங்கத் திருவிசைப்பா பாடியருளினர். இவர் சிவயோகங் கைவந்த சித்தராகையால் எச் சமயங்களிற் சென்றாலும் எத்தொழில் புரிந்தாலும் மாதவஞ்செய் தாலும் மாதர்பா லிருந்தாலும், தாமரையிலையி னீர்போல் பற்றற் றிருப்பர். இவர் திறத்தை யுணராத புன்மதியினராகிய பிராமணர் சிலர் கூடி இவர் மதுவூனருந்தும் வாமமார்க்கத்தவ ரென்று இகழ்ந்தார்கள். அவர்களைத் தெருட்ட நினைந்து அவர்கள் காண அகாலத்திலே மழை பெய்யச் செய்தும், நதிபெருகி வரப்பண் ணியும், சிவபெருமானது திருக்கோயிற் றிருக்கதவந் தாள்திறக் கச் செய்தும், பூதங்கள் குடை பிடித்துவரக் கற்பித்தும், இவ் வாறு பல அற்புதங்கள் செய்தனர். மலைகளிலும் வனங்களிலுஞ் சஞ்சரித்தனர்.

பற்பல நாட்டகத்தும் சென்று சிவதரிசனம் செய்யக்கருதி, கொங்குநாடு (ஏனைய தலங்கள்), குடநாடு, கன்னடம், துளுவம், மத்திய முதலிய தேயங்களிலும், அவற்றை யடுத்த (இடைப் பட்ட) வனமுதலியவைகளிலும், சென்று காசி, காஞ்சி, காளத்தி,

அருணை முதலிய பல தலங்களையும் தரிசித்துப் பாண்டி நாட்டை யடைந்து மதுரை முதலிய தலங்களை வணங்கித் தாமிர வர்ணி நதிதீரத்திலே குருகூர் என்னும் வைணவ ஆலயத்தை யடைந்தார். அவர் அடையுமுன்னரே திருமாலானவர் அடியார் கனவிற்றோன்றிக் கருவூர்ச் சிவயோகியார் இங்கு வருகின்றார், அவர்க் கெதிர்சென்றுபசரியுங்கள் என்றருளப் பாகவதர்கள் பரி வாரங்களோடு எதிர் சென்று வணங்கி ஆசிர்வதிக்கப்பெற்றார் கள். அங்கு நின்றுந் திருச்செந்தூரை வணங்கிக் கன்னியா குமரியை யடைந்து குமரிதீர்த்தமாடிச் சுசீந்திரத்தைப் போற் றித் திருநெல்வேலியை யடைந்தார். நெல்லையப்பரை அன்போ டழைக்க அவர் அன்பர் பெருமையை உலகிற் கறிவுறுத்துமாறு திருவுளங்கொண்டு வாரமற் றாழ்த்தார். ஈசனிங்கில்லாமையால் நல்லோர் குறைந்து நகரம் எருக்கெழக் கடவதென்று யோகியார் சபித்தனர். சிவபெருமான் அடியவர்களைக் கருவூர்த் தேவரிடத் துத் திரண்டுவரும்படி ஆஞ்ஞாபித்துத் தாம் அவருக்கெதிர் தோன்றி அநுக்கிரகித்தருளினர். கருவூர்த்தேவர் ஆனந்தக் கடலில் மூழ்கினவராய்த் திருவிசைப்பா பாடித் துதிசெய்தார். அப்போது சிவனடியார்களும் வந்து வணங்கி அவர் முன்னிட்ட சாபம் நீக்கி யருளப்பெற்றார்கள். அதன் மேற்கே ஒரு குரோச தூரத்தில் ஒரு சிவலிங்கத்தைக் கண்டு யோகியார் தழுவ அவ்விலிங்கம் குழைந்தது. அங்கு நின்றும் திருப்புடை மருதூரை அடைந்து சிவபெருமானை யழைத்தபொழுது கன் றின் குரல் கேட்ட பசுவைப்போல் ஓல ஓல என்று அருளி எதிர் வந்து காட்சி கொடுத்தருளினர். அங்கு திருவிசைப்பாப்பாடிப் பணிந்தார். அங்கு நின்றுங் கசேந்திரமோட்சம் என்னும் விஷ் ணுவாலயத்தை யடைந்து, அப்பால் முன்றீசரை வணங்கி அழைத்தார். அவர் எதிர் தோன்றி வேண்டுவதென்னையென, மதுவேண்டுமென்ன, அவர் காளியை நோக்கிக் கருவூர்த் தேவ ருக்கு மதுக்கொணர்ந்து தரும்படி பணித்தருள, காளி மதுவைக் கொணர்ந்தாள். இதனை யுணர்ந்த காளிகோட்ட வாசிகளாகிய கருமயோகிகள் கருவூர்த்தேவரை யடுத்து வணங்கத் தேவர் அவர்களை நோக்கி மீன் கொணரும்படி கூறினர். அவர்கள்

போய்த் தேடியும் அகப்படாமல் கருவூர்த்தேவர்பால் விண்ணப்பஞ் செய்ய, அங்கேயிருந்த ஒரு வன்னிமரத்தை நோக்கி மீன் வருஷம் வருஷிக்கும்படி கட்டளையிட அவ்வாறே வருஷித்தது. கருவூர்த்தேவர் கருமயோகிகளை நோக்கி நீங்கள் இவ்வாறு செய்யலாற்ருது மயங்கி மதுபானுதிகள் செய்துழலுவதென்னை என்று அறிவுறுத்த, அவர்கள் முத்திநெறி யடையும்படி அனுக்கிரகிக்கவேண்டுமென்று வேண்ட அவர்களைப் பொதியமலைக்கு வரும்படி உத்தரவிட்டனர். அதன்பின் அருகிலுள்ள ஒருவிஷ்ணுவாலயத்தையடைந்து அவரை விளித்தும் அவர் வாராமையால் அவருக்குப் பூஜையற்றுப்போக வெனச் சபித்தார். அங்ஙனமே யாயது. பின்னர்த் திருக்குற்றாலம் சென்று திருவிசைப்பா பாடியருளிப் பொதியமலையையடைந்து அகத்தியனாரைத் தரிசித்து அங்கொருசார் எழுந்தருளியிருந்தார்.

அப்பொழுது தஞ்சையிலே சோழராசன் தன்னாற் சமைக்கப்பட்ட ஒரு பெரிய ஆலயத்திலே சிவப்பிரதிட்டை செய்யப் பலவாறு முயன்றும் மருந்திளகிப் பந்தனமாகாது வருந்தினன். கருவூர்த்தேவர் வந்தாலல்லது காரியம் சித்தியாகாதென்று ஆகாசவாக்குப் புறப்பட்டது. அங்கிருந்த பெரியோர்களுள் "வேறொருவர் காணுமலுலகத் துலாவலாம்" என்றபடி உருவமறைத்தெழுந்தருளிய போகநாதரானவர் கருவூர்த்தேவருக்குக் காக்கையின் காலிற்கட்டி ஓலைவிடுத்துக் கருவூர்த்தேவரை வரவழைத்தார். கருவூர்த்தேவர் அங்குவந்திருந்த போகநாதர் முதலியோர் அனுமதிகொண்டு ஆலயத்தினுள்ளே பிரவேசித்துச் சிவலிங்கப்பெருமானை ஆவுடையாருடன் சேர்த்துச் செவ்வனே நிறுத்தித் தமது திருவாய்த் தம்பலத்தை யுமிழ்ந்து பந்தனம் செய்தருளினர். அப்பந்தனம் பசும்பொன்னுருக்கி யமைத்ததுபோலிருத்தலை நோக்கி யாவரும் வியந்தார்கள். தேவர்கள் பூமாரி பொழிந்தனர்.

அவ்விடம் விட்டுத் திருவானைக்காவை வணங்கித் திருவரங்கத்திற்கு வந்தார். அவர் எழிலைக் கண்டு மயங்கிய ஒரு பொதுமாது அவரிடத்து உள்ளன்புடையாளாய் அவரிடத்துச் சென்று

விண்ணப்பித்துக்கொள்ள அவரும் அவள் மனையிற்சென்று அவளது போகத்தை நுகராதுநுகர்ந் திரண்டுநாள் தங்கியிருந்தபின் திருக்கோயிலுக்குட்சென்று திருவரங்கேசரை யழைத்துக் கேட்டபடி அவர் மார்பகத்தணிந்திருந்த விலையேறப்பெற்ற மாணிக்க மாலையை அவர் தரப்பெற்று அதனை அப்பொது மகளுக் கீந்து "பெண்ணே! நீ என்று நினைப்பினும் நாம் வருவோம்" என்று சொல்லி நீங்கித் திருப்பாய்த்துறை முதலிய இடைப்பட்ட தலங்களைத் தரிசித்துக்கொண்டு கருவூரையடைந்து இனிது வீற்றிருந்தார். மறுநாள் திருவரங்கேசனிடம் மாணிக்கமாலை காணாது மயங்கிய பாகவதர்கள் பொதுமகளைக் கண்டு விசாரிக்க அவள் யோகியார் தந்தார் எனவும் அவர் இன்றும் வருவார் எனவும் கூறினள். அன்றிரவு அவள் நினைக்க யோகியாரும் வந்தனர். அவரைக் காவலாளர் பிடித்துக் கோவில்கூட்டத்தார்முன் கொண்டுவந்து கேட்க அரங்கேசனே தனக்கு மாலை தந்தனன் என்று கூறினர். அவர்கள் நகைத்து இஃது உண்மையாயின் அரங்கேசனை அவையின்முன்னர் அழைத்துச் சொல்லுவித்தல் வேண்டுமென்னக் கருவூர்த் தேவர் திருவரங்கப் பெருமானை அவ்வாறு செய்யும்படி வேண்ட அவ்வாறே அவர் ஆகாயத்திலே தோன்றி யாவருங் கேட்ப இவ்விரத்தின மாலையைக் கருவூர்த்தேவருக்கு நாமே கொடுத்தோம் என்று சொல்லி மறைந்தார். பாகவதர்கள் பயந்து கருவூர்த் தேவரை வணங்கித் தாங்கள் அறியாது செய்த அபராதத்தை மன்னிக்குமாறு வேண்டினர்கள். யோகியாரும் அவ்வாறே அனுக்கிரகித்து கருவூரையடைந்து வசித்திருந்தார்.

ஒருநாள் இரவிலே கருவூர்த் தேவரது குலத்தினராகிய பிராமணர்கள் சிலர் கூடி அரசனிடம் சென்று "கருவூர்த்தேவர் மரபுக்கடாத மதுவூனருந்தி வாமபூசை செய்கின்றார். அதனை நோக்கி அவரைக் கண்டித்தல் வேண்டும்" என்று கூற அரசன் ஒருவாறு இசைந்து கருவூர்த்தேவரது ஆச்சிரமத்தை யடைந்தான். அவருத்தரவுப்படி அவர் மாணாக்கர் அவரிருக்கையின் ஒவ்வோர் பாகத்தையுங் காட்டக் கண்டான். அங்கு வேதாகம முணர்ந்த தபோநிதிகளும், அவர்கள் பூண்பனவும், பூசையாகமுதலிய வைதிக சற்காரியங்கள்செய்தற்கான உபகாரணங்களும் மலிந்

திருத்தலைக் கண்டான். அரசன் பயந்து கருவூர்த்தேவர் பாதங் களிலே வீழ்ந்து வணங்கித் தான் செய்த பிழையைப் பொறுக்க வேண்டுமென்று மன்றாடினான். கருவூர்த்தேவர் அரசனைநோக்கி இப்பொழுது இவ்விடத்திலுள்ள பிராமணர்கள் இருக்கையைப் பரிசோதித்து வாவென்று பணித்தருள அங்ஙனமே சென்று பார்க்கும்பொழுது அங்கு மதுக்குடங்களும், புலால்களும் நிறைந் திருத்தல் கண்டு அவர்களை முனிந்து நகரத்தை விடுத்து வேட ரோடு காட்டகத் துழலும்படி துறத்தினான். இதனை உணர்ந்த கருவூர்த் தேவர் அரசனை நோக்கி அவர்களை நீத்தல் கூடாது. அரசன் யாவரையும் பொதுவாகப் புரத்தல் வேண்டுமென்று சொல்லியனுப்பினர். அரசனுற் கடியப்பட்ட பிராமணர்கள் திர ண்டு ஆம்பிர நதிக்கரையை யடைந்து கருவூர்த்தேவருக்கு இடர் செய்யக் கருதிக் காத்திருந்தார்கள். கருவூர்த்தேவர் ஆம் பிரநதிக்குச்சென்றும் அவர்களிடத்து அகப்படாமல் திருவா நிலைக்கோயிலை யடைந்தார். அவர்களும் பின்தொடர்ந்து ஆல யத்தை யடைந்தார்கள். கருவூர்த்தேவர் கதியடையவேண்டிய காலம் சமீபித்தபடியால் அவர் பசுபதீச்சுரரைத் தழுவிக்கொள்ள அவரைச் சிவபெருமான் தம்முள்ளே இரண்டறக்கலந்து கொண் டருளினர்.

"கங்கைபுனை வார்கோயிற் கலந்தகரு வூர்த்தேவர்
பொங்கருள்கூர் சிவயோகம் புரிந்ததுமுற் றியதேயோ
விங்கவரன் போதவமோ வாதரமோ யாதுகொல்லோ
தங்கைகொடு திருவுருவைத் தழுவினர் சரணடைந்தார்"

அப்பொழுது தேவதுந்துபி யார்த்தன. தேவர்கள் பூமழை சொரிந்தார்கள். பிராமணர்கள் அவரது மெய்யன்பையும் சிவ பெருமானது திருவருளையுங் கண்டு பயந்து தங்கள் பிழைக்காகப் பரிதபித்தார்கள். அப்பொழுது ஆகாயவாணி அவர்கள் தப் பிதங்கள் மன்னிக்கப்பட்டன என்று விளம்பிற்று. அன்பர்கள் அதிசயித்துக் கொண்டாடினார்கள்.

இச்சரித்திரம் சற்றேறக்குறைய நாற்பது வருடங்களின் முன்னரே அச்சியற்றி வெளியிடப்பெற்ற கருவூர்த் தலபுராணத்

திலே அதனைத் திருத்தி யச்சிட்டவரும் கோயமுத்தூர் வித்து வானும், எனது பிதாவுமாகிய கந்தசாமி முதலியாரவர்கள் அப் புராணத்திலே இறுதிச் சருக்கமாகிய கருவூர்த்தேவர் கதிபெறு சருக்கத்தைச் சுருக்கி வசன உருவமாக எழுதி அதனிறுதியிற் சேர்த்து வெளியிட்டனர். அதனை இங்கே ஏறக்குறைய முழுமை யும் தந்துரைக்கப்பட்டது.

இனி இக்கதைக் குறுப்பிலே கருவூர்த்தேவர் கொங்கு நாட் டிலே உள்ள திருக்கருவூரிலே அவதரித்து அவ்விடத்தே பன்னாள் வதிந்து அத்தலத்தே முத்தியடைந்தனர் என்றும், அவர் அந்த ணர் என்றும், வேதநூலிலும் மற்றும்பல கலைகளிலும் வல்லவ ராய் விளங்கினர் என்றும், கற்பஞ்சாதித்த பெரிய சிவசித்தராய்ப் பற்பல காரணங்கள் உலகிலே விளங்க வீற்றிருந்தார் என்றும், இவர் ஆரணமும், அருந்தமிழும் வல்லராய் விளங்கினும் உலகம் இவரைப் பித்தராகவே மதித்தனர் என்றும், கையில் ஓடேந்திப் பிச்சையேற்றுண்டு திரியும் துறவி வாழ்க்கை வாழ்ந்தனர் என் றும், உலகிலே இருந்தும் அதனைத்துறந்து உலகிறந்த நிலையிலே நின்றனர் என்றும்,உலகபோகங்களை நுகராது நுகர்ந்த சிவயோகி யாயினர் என்றும், சிவபெருமான்மீது அதிமதுரமான திருவிசைப் பாப் பலவற்றை உலகமுய்ய அருளிச் செய்தனர் என்றும், பல தலங்களிலும் சென்று பெருமானை வணங்கித் திருவிசைப்பா அருளினர் என்றும் இன்னோன்ன பிறவும் உண்மைச் சரிதக் குறிப்புகள் நமக்குக் கிடைக்கின்றன. இக்கதையிலே உலக வருக்கு அறிவுறுத்தும் பொருட்டு கருவூர்த்தேவர் அகாலத் திலே மழை வரும்படி செய்தல், நதி பெருகிவரப் பண்ணுதல், சிவபெருமான் திருக்கோயிற் கதவந் திறப்பித்தல், பூதங்கள் குடைபிடித்துவரக் கற்பித்தல் ஆதிய அற்புதங்கள் செய்து காட் டினதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. காளியை மதுக்கொணா ஏவினர் எனவும், வன்னிமரத்தை மீன்மழை பெய்யச் சொன்னர் எனவும், இக்கதையிலே கேட்கிறோம். திருவரங்கநாதர் கழுத்தி லிருந்த மாணிக்கமாலையை அவர் தரும்படி பணித்து அதனைப் பொதுமகளுக்குக் கொடுத்தனர் எனவும், அவ்வாறு தமக்கு அரங்கேசர் கொடுத்தமையைச் சபையிலே அவர் வந்து சொல்லு

மாறு பணித்தார் எனவும், அவர் பணித்த வழியே அரங்கேசனும் செய்தனன் எனவும் அறிகிறோம். இன்னும் இவ்வாறு பலவும் கேட்கின்றோம். இவற்றின் உண்மையைப்பற்றி ஒரு சிறிது ஆராய்வோம்.

பஞ்சபூதங்களின் நிகழ்ச்சியே மழை, வெள்ளம், இடி முதலியனவாம். இப் பஞ்சபூதங்களும் நமது சிவப்பெருங் கணங்களிலே உள்ள அளவற்ற குறட் பூதங்களிலே ஒரு சிறு பூதத்தின் ஏவல் வழியும் நிற்கக் கட்டுப்பட்டன. இஃது ஒன்றோ இச்சிறு பூதங்கள் பெருந்தேவர் நிலைகளையும் நாட்ட வல்லனவாம்.

"நீடு தேவர் நிலைகளும் வேண்டிடின்
நாடு மைம்பெரும் பூதமு நாட்டுவ
கோடி கோடி குறட்சிறு பூதங்கள்
பாடி யாடும் பரப்பது பாங்கெலாம்"

என்பது பெரியபுராணம். எனவே இச்சிறு பூதங்களுக்கு மேலாய்க் கணநாதர்களாய் விளங்கும் அடியவர்களின் வலிமையைப்பற்றி நாம் என்ன சொல்லவல்லேம். மழை பெய்வித்தலும், விண்ணவரை ஏவல் கொள்ளுதலும் இன்னோரன்னவும் அவர்களுக்கு அரிய காரியமாகுமா ?

பாட்டளி துதைந்துவளர் கற்பக நன்னீழலைப்
　　பாரினிடை வரவழைப்பீர் !
பத்மநிதி சங்கநிதி யிருபா ரிசத்தினும்
　　பணிசெயுந் தொழிலாளர்போற்
கேட்டது கொடுத்துவர நிற்கவைப்பீர் ! பிச்சை
　　கேட்டுப் பிழைப்போரையும்
கிரீடபதி யாக்குவீர் ! கற்பாந்த வெள்ளமொரு
　　கேணியிடை குறுகவைப்பீர் !
ஓட்டினை எடுத்து ஆயிரத்தெட்டு மாற்றாக
　　வொளிவிடும் பொன்னாக்குவீர் !
உரகனு மிளைப்பாற யோகதண் டத்திலே
　　உலகுசுமையாக அருளால்

மீட்டிடவும் வல்லநீர் என்மனக் கல்லையனன்
மெழுகாக்கி வைத்தலரிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே.

என்று தாயுமான சுவாமிகள் சித்தமூர்த்திகளின் வல்லமையைப் பற்றித் தமது அருமைத் திருப்பாடலிலே சித்தர் கணம் என்ற பகுதியிலே மிக உருசியாக விவரித்திருக்கின்றமை இங்கே நாம் ஞாபகப்படுத்திக் கொள்வோமானல் கருவூர்த்தேவர் சரிதத்திலே நாம் கண்டபடி அவர் நிகழ்த்திய அற்புதச் செயல்களின் உண்மை நமக்கு இலகுவிலே புலப்பட்டு நிற்கும். தஞ்சை மன்னன் செய்வித்த சிவப்பிரதிட்டையிலே மருந்திளகி இறைவன் நேர்நில்லாமையும், கருவூர்த்தேவர் வந்தபின் நேர் நின்றமையும் ஒரு பெரிய அரிய செயலேயாம். அடியவர் வழியே ஆண்டானும் நிற்பன். அவர்கள் செய்த செய்தபடியே விளையாடி அவர் மட்டிலே அடங்கி நிற்பன். "பத்திவலையிற் படுவோ"ஞதலின் அவன் அவ்வண்ணம் நிற்பது அவன் இயல்பாம். "ஆருத காதலின் மிக்கு அடியார் செய்த, அனுசாரம் பொறுத்தருளி யவர்மேல் என்றும் சீருதபெருமான்" எமது சிவபெருமானுவர். திருப்பனந்தாளிலே அரசனுடைய சேனையும் யானையும் கயிறு பூட்டி. இழுத்தும் நேர் நில்லாத இறைவன் குங்குலியக்கலய நாயனர் அக்கயிற்றினைத் தாமும் தமது கழுத்திற்பூட்டி இழுக்க ஒருப்பட்டபோதே நேர் நின்ருர் என்ற சரிதம் இங்கே நாம் குறிக்கற்பாலது. திருக்கண்ணப்ப நாயனரின் திருவாயிலிட்ட ஊனனது தேவர்க்குத் திரு அமுதமாயிற்றென்ருல் தேனும், பாலும் கன்னலுமாய்த் தித்திக்கத் திருவிசைப்பாப் பாடும் கருவூர்த்தேவர் திருவாய்த் தம்பலமானது அவரை ஆவுடையாருடன் பொருந்தி நேரே நிற்கச் செய்யும் மருந்தாதலும் அதிசயமாமோ ? அவரது திருவாக்கானது "ஆலையம்பாகின் அனைய சொற்கருவூர் அமுதுறழ் தீந்தமிழ்மாலை" யாதலின் அதில் ஈடுபட்ட இறைவன் எதைத்தான் செய்யமாட்டான் ? உண்மை நாயன்மார்களாகிய நமது சைவ சமய பரமாசாரியர்களின் திருவாக்குகளுக்காக இறைவன் செய்தருளிய காரியங்கள் இத்தன்

மையன என்று நமக்குப் பெரியபுராணம் சான்று பகர்கின்ற தன்றோ ?

காளி மதுக் கொணர்ந்து கருவூர்த்தேவருக்குக் கொடுத்த னள் என்று இச்சரிதத்திலே கண்டோம். முன்றிசர் ஆணையின் படி அவள் கொண்டுவந்தனளாம். அதுவேயன்றி தேவர் ஆணை யிட்டார் எனினும அவள் கொண்டுவருவாள் என்பதே நியமம். என்? தேவாதி தேவனாகிய பரமேசுவரனோடு கலந்து சிவயோகம் புரியும் பெரியோர்கள் அவன் இயல்பையே யுடையார்கள் என் றும், அவன் செய்வனவற்றை இவர்களுமம செய்ய வல்லவர்கள் என்றும், மேலே கண்டோமாகலின் இவைகள் எல்லாம் சிறு தெய்வங்கள். பரமேசுவரனுடைய அடியார்களாகிய எந்தம் பெருமக்கள் முன்னே இவை ஒரு பொருட்டல்ல.

"சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோமல்லோம்" என்பது நமது வாகீசப் பெருந்தகையாரின் திருவாக்கன்றோ ? கந்தபுரா ணத்திலே சூரபன்மன் மகனாகிய அக்கினிமுகாசூரனுக்கும் வீர வாகுதேவருக்கும் போர் நடந்தபோது அக்கினிமுகன் "சிறு காலைப் பழிபட்டிடும் வெளியாட்டினைப் பயின்றே பலியூட்டி, வழிப்பட்ட தன்னகர்க் காளியை மனத்தின் மிசை நினைத்தான்" அவ்வாறே அவள் அவனுக்காக வீரவாகுதேவருடன் போர் புரிந்து வெல்லுமாறு கருதிப் பயங்கரமாக தனது கோலத்தோடு சிங்கவாகனத்தேறி வந்து தேவருடன் கொடும்போர் செய்யத் தொடங்கினாள். தனது நான்கு கோரமாகிய முகங்களுடன் எட் டுக் கைகளிலேயும் சூலம் முதலிய வலிய படைகளை ஏந்திக் கொண்டு தேவருடைய தேரில் குதித்து அவரை வாள்கொண்டு வெட்டவந்தாள். வீரவாகுதேவர்

"தாக்கணங் காமிவள் தன்ன தாவியை
நீக்குதல் செய்வது நீர்மைத் தன்றுஎனாத்
தூக்கினன் அவள்வலி தொலைக்க உன்னுவான்"

"இடித்தென உரப்பினன் எண்கை தன்னையும்
நடித்தன னுமென ஒருகையா லுறப்
பிடித்தனன்: மற்றொரு பெருங்கையால் உரத்து
அடித்தனன்: காளிவீழ்ந் தவச மாயினாள்".

"கரங்கொடு சேவகன் கல்லென் றெற்றலும்
உரங்கிழி வுற்றனள்: உமிழ்ந்த சோரிநீர்
தரங்கம தெறிகட றன்னைப் போன்றுலாய்
இரங்கியது: அவள்துயர் யாவர் கூறுவார்"

"அந்த மிலறுமுகத் தமல னேவலால்
வந்தவ னொடுபொரின் வாகை எய்துமோ
புந்தியி லாதிவட் புக்கனன் னெனுச்
சிந்தைசெய் தெழுந்தனள் வன்மை தீர்ந்துளாள்"

"கன்றிய கற்புடைக் கனலி மாமுகன்
இன்றெனை யருச்சனை யியற்றி யேத்தியே
யொன்றல உயிர்ப்பலி உதவி வேண்டினாள்:
நன்றிய தயர்த்திலன் நானிங் கெய்தினேன்."

"உன்னுடை வன்மையு முனது வீரமும்
இன்னமு முணர்ந்திலன் செருவின் முந்துளிஇ
நின்னுட னிகலி யிங்கிலைமை யாயினன்
இன்னினி யேகுவ னிருந்த தொல்லிடை"

என்று இச்சரிதை அக்கினிமுகாசுரன் வதைப்படலத்திலே விவரிக்கப்பட்டிருக்கின்றது. (தொடரும்)

---

# மாணிக்கவாசகர்

[மா. வே. நெல்லையப்பபிள்ளை, பி.ஏ.,]

'மாணிக்கவாசகர்' என்னும் பெயராலே பெறப்படும் பொருள்களை இயன்றவாறு விளக்கி யெழுதுதலே கருத்தாகக் கொண்டு இக்கட்டுரை எழுத நான் முயல்கின்றேன்.

மாணிக்க வாசகர் என்னும் தொடர்மொழி மாணிக்கம், வாசகர் என்னும் இரண்டு மொழிகளாலாகியது. மாணிக்கம் என்னும் நிலைமொழி வாசகர் என்னும் வருமொழி யோடும் புணருங்கால் "மவ் வீறொற் றொழிந்துயிரீ றொப்பவும்" என்னும் நன்னூற் சூத்திர விதிப்படி மகரவொற்றுக் கெட்டு மாணிக்க வாசகர் என்று

யிற்று. அஃது உவமைத்தொகை நிலைத்தொடர் மொழி; மாணிக்கம் போலும் வாசகர் என்று விரியும். இங்கே மாணிக்கத்துக்கும் வாசகத்துக்கும் உவமை கூறப்பட்டது. இது நலனை நிலைக்களனாகக் கொண்ட பயன் உவமையாகும்.

மாணிக்கமானது சிறிய அளவில் பெரு விலையுள்ள அரிய ஒன்பது மணிகளில் ஒன்று ஆகிய உலகப்பொருள். அது கண்டார் கண்களைக் கவரும் உரு வனப்பினை யுடையது. இந்த உரு வனப்பும் அதற்கு அதன் அகத்தேயுள்ள ஒளியினால் உடையது. அது குற்றங்க ணீங்கினதாயிருந்தால் தன்னைத் தரிப்பவர்களுக்கு அரசு செல்வம் கீர்த்தி முதலிய நற்பயன்களைக் கொடுக்கும்.

(திருவிளையாடற்புரா. மாணிக்கம்விற்றபடலம். ௪௨-வது பாட்டு)

வாசகம் என்னும் சொல் வட மொழிச்சொல் (**वाचक**) அது வச் (**वच्**) என்னும் தாதுவினின்று பிறந்த சொல். (**वच्**= பேசுதல் அல்லது சொல்லல்) ஆகவே வாசகம் என்பது சொல் என்று பொருள்படும். சொல்லானது ஒருவருக்கு கருவியாய் நின்று, தன்னையும் இருதிணை ஐம்பாற் பொருளையும் உணர்த்துவது. இங்கே வாசகம் என்பது அதனாலாகிய செய்யுளுக்கும் அதனாலாகிய் செய்யுள் நூலுக்கும் ஆகு பெயராய் ஆதலால் காரண ஆகுபெயர் ஆகிறது. அதனை இருமடி ஆகுபெயர் என்றும் சொல்வதுண்டு. ஆகவே வாசகம் என்பது திருவாசகம் என்னும் நூலைக் குறிக்கின்றது. வாசகர் என்பது திருவாசகத்தைச் சொன்னவர் என்று பொருள்படும்.

மாணிக்க வாசகர் என்பது மாணிக்கம் போலும் வாசகங்கள் அடங்கிய திருவாசகம் என்னும் நூலைச் சொன்னவர் ஆகும். மாணிக்கத்தில் தூல ஒளியும் திருவாசகத்தில் அருள் ஒளியும் ஒப்புமைப் பொருள்கள். இப்பெயர் திருவாதவூரடிகளுக்கு இறைவனாற் கொடுக்கப் பெற்ற பெயர் என்பதும் அதற்குக் காரணமும்,

"பழுதிலாதசொன் மணியினைப் பத்திசெய் தன்பு
முழுதுமாகிய வடத்தினுன் முறைதொடுத் தலங்கல்
அழுதுசாத்து மெய்யன்பருக் ககமகிழ்ந் தையர்
வழுவிலாத பேர்மாணிக்க வாசக னென்றார்."

என்னும் திருவிளையாடற் புராணம் வாதவூரடிகளுக் குபதேசித்த படலம் 50 வது பாட்டினால் விளங்கும்.

யாதொரு குற்றமுமில்லாத மாணிக்கங்களால் முறையாகக் கோக்கபட்ட ஒரு மாணிக்கவடம் திகழ்வதுபோல் விளங்கும் யாதொரு குற்றமுமில்லாத சொற்களாலாகிய செய்யுட்களாற் றெருக்கப்பட்ட திருவாசக நூல் என்னும் சொல் மாலையை மாணிக்கவாசக சுவாமிகள் கரவிலாத பேரன்புடன் ஆனந்தக் கண்ணீர் சொரிந்து இறைவனுடைய திருவடிகளிற் சாத்தி யருளினர்.

இன்னும் காண்பார் கண்களைக் கவரும் மாணிக்க வடம் போல திருவாசக நூலும் ஓதுவார் கேட்பார்களுடைய உள்ளத்தை உருக்கிக் குழையச் செய்யும். மாணிக்க வடம் தன்னகத்தேயுள்ள ஒளியினால் பக்கத்திலுள்ள புற இருளை ஒட்டுவதுபோல திருவாசக நூல் தன்னை உண்மை அன்புடன் ஓதுபவர்களிடத்திலும் கேட்போர்களிடத்திலும் தன்னகத்தேயுள்ள திருவருள் ஒளியைப் பரப்பி அவர்களுடைய உள்ளொளியைப் பெருக்கி அவர்களிடத்துள்ள அக இருளை ஒட்டும். குற்றமற்ற மாணிக்கங்களாலாகிய ஓர் மாணிக்க வடமானது தன்னைத் தரிப்பவர்களுக்கு செல்வம் கீர்த்தி முதலிய இம்மைப் பேறுகளை உதவியின்பந் தருவதுபோல திருவாசக நூல் தன்னை தினந்தோறும் பூசித்துப் பாராயணம் செய்து தன்னிடத்தில் அடங்கியுள்ள உண்மைப் பொருள்களைச் சிந்தனைசெய்து வருபவர்களுக்கு உவப்பிலா வீட்டின்பம் உதவும்.

திருவாசக நூலுக்கு மாணிக்கவடம் ஒரு புடை உவமையே யாகும். ஏனெனில் அதற்கு முற்றுவமையாகச் சொல்ல உலகிற் காணப்படும் பொருள்கள் ஒன்றுமில்லை. உலக அநுபவ முடையவர்களுக்கு உலக அநுபவத்திலுள்ள உயர்ந்த பொருளைத்தான் உவமையாகச் சொல்ல முடியும். உலகில் சிறிய பருமனில் பெரிய விலை யுள்ளதும் அதிக ஒளியுள்ளதுமாகிய பொருள் ஆதலின் அது சிறிய அளவில் உயிர்களுக்கு உயர்ந்த உறுதிப் பொருள் பயக்க வல்ல அரும்பெரு முண்மைகளைக் கூறும் திருவாசக நூலுக்கு

ஒருபுடை யுவமையாகக் கூறப்பட்டது. மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத்தில்,

கூடலிலங்கு **குருமணி** போற்றி என்றும்,
ஆடகச்சீர் **மணிக்குன்றே** என்றும்,
சுடர் **மாமணியே** என்றும்,
ஈசனே **மாசிலாமணியே** என்றும்,
வைப்பு மாடென்றும் **மாணிக்கத்தோளி** என்றும்,

திருக்கோவையாரில்,

தில்லைச் சிற்றம்பலத்து **மாணிக்கக் கூத்தன்** என்றும்,

சிவ பெருமானைக் கூறி யிருத்தல் காண்க.

திருமாணிகுழி ஆலயத்தில் திருமேனி கொண்டருளி யிருக்கின்ற சிவபெருமானது திருநாமம் மாணிக்க மேனி யீசுவரர் என்றும், தேவியார் திருநாமம் மாணிக்க வல்லியம்மை என்றும், திருமருகல் ஆலயத்திலும் திருவாழ்கொளிபுத்தூர் ஆலயத்திலும் திருமேனி கொண்டருளும் சிவ பெருமானது திருநாமம் **மாணிக்க வண்ணர்** என்றும், கூறப்படுதலும் காண்க.

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து, மறைமொழி காட்டிவிடும் என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் கூறியபடி மாணிக்கவாசகசுவாமிகளுடைய பெருமை அவர் அருளிச்செய்த திருவாசகநூலால் விளங்கும். இந்நூலில் பதி பசு பாச இணக்கணங்கள், ஆண்டான அடிமைத் தொடர்பு, அத்துவித இலக்கணம், சிவானந்த அநுபவம், முத்திநிலை முதலிய சைவ சித்தாந்த உண்மைகள் கூறப்பட்டிருக்கின்றன. வேதாகமங்களிலும் சிவஞானபோதம் முதலிய சைவ சித்தாந்த நூல்களிலும் வகுத்துக் கூறப்பட்ட அரிய உண்மைகளை மாணிக்கவாசகசுவாமிகள் தமது அநுபவத்திற் கண்டவாறு சிவபெருமான்மேல் பாக்களாய்ப் பாடித் தோத்திரம் செய்கிறார். இப்படி அவர் பாடிய திருவாசகப் பாக்கள் தாம் திருப்பெருந்துறையில் மானிடவடிவில் குருமூர்த்தியாயெழுந்தருளிய சிவபெருமானால் ஆட்கொள்ளப் பெற்றபின் பாடிய பாக்கள்; அவைகளை அவர் தற்போத முற்றிலும் நீங்கி சிவபோதமடைந்த நிலையில் பாடி யருளினர். ஆதலின்

அவைகளெல்லாம் சிவபெருமான் திருவருளை விளக்குகின்ற அருட்பாக்களே. அவைகள் சிவபெருமானது திருவாக்காலே சொல்லப்பட்டவைகளாகவே எண்ணத்தக்கன. மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகநூலைப் பாடி முடித்தபின் சிவபெருமானே ஒரு மானிடவடிவில் அவரிடம் வந்து அவர் சொல்ல தாம் தமது அருமைக் கரத்தினால் எழுதி "அழகிய சிற்றம்பலமுடையார்" என்று கைசாத்துச் செய்துவிட்டு மறைந்தருளுவாரானால் அதன் பெருமை ஆணவமலத்தில் அழுந்தியுழலும் நம்மனோரால‌றிந்து பேசுந்தாமுடையதோ ? ஆயினும் சைவர்கள் திருவாசகப்பாக் களில் இயன்றவாறு சில பாக்களை நாடோறும் நியமத்துடன் ஓதிவருவாரானால் அந்நூலின் பெருமை அவரவர் பக்குவத்துக்குத் தக்க அளவு அவர்கள் உள்ளத்தில் உணரும்படி இனிது விளங் கும். அவர்கள் கொலை, பொய், களவு, கள், காமம் முதலிய தீவினை களை யொழித்து நல்லறவினைகள் செய்தலிலே நாட்டமுடைய சிந்தையுள்ளவர்களா யிருத்தல்வேண்டும். இவ்வித மனப்பான் மையை யுடையவர்களாய் அவர்கள் தினந்தோறும் காலை நீரில் முழுகி அநுட்டான முடித்துக்கொண்டு திருவாசகநூலை ஒரு பீடத்தின்மேல் வைத்து பத்திர புட்பங்களால் அருச்சனைசெய்து வணங்கி ஓதிவரல்வேண்டும் இப்படி இடைவிடாது அவர்கள் செய்துவந்தால் அவர்களிடத்துள்ள பாவச் செயல்கள் சிறிது சிறிதாக அவர்களை விட்டு அகன்று அவர்கள் மனம் தூய்மை அடையும். மனம் தூயராயவழி அவர்களுக்கு இறைவன் அரு ளுண்டாய் ஞானம் உதிக்கும்; அதனாலே அவர்கள் தாங்கள் விரும்பிய எல்லா நன்மைகளையும் அடைவார்கள். இந்த அநுபவ உண்மையை சிறிய அளவில் ஒன்று இரண்டு ஆண்டுகளில் யாரும் கைகண்டபலனாகக் காணலாம். இழிந்த குலத்தில் பிறந்தவர்க ளாயினும் அவர்கள் மேலேசொன்ன குற்றங்களினின்றும் நீங்கி சைவ தீக்கைபெற்று திருவாசக நூலை மேலேகண்ட முறைப்படி ஓதி உய்தி அடையலாம். ஆணவமலத்தின் கொடுமையினின்று சிறிது சிறிதாக நீங்கி, நீங்கின அளவில் சிவபெருமான் திரு அரு ளைப் பெறுவதற்கு இந்த முறை ஒரு எளிதான முறையாகும். அனைவர்க்கும் திருவருள் விளக்கம் உண்டாகுக.

## சிவபிரான் கருணையுஞ் சீவர்கள் கடமையும்

[ஸ்ரீ. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள்]

(௩௱௪௰-ம் பக்கத் தொடர்ச்சி)

ஈண்டு இன்புறத்தக்கதோ ரியைபென்னையெனின்; அன்பினா லருளுண்டாவது பற்றி அன்பு அப்பனும், அருள் பிள்ளையுமாகும். அம்முறையே அன்புக் கடலாகிய நாவரையரை அப்பரெனவும், அருட்கடலாகிய சம்பந்தரைப் பிள்ளையாரெனவும் பெரியார் பாராட்டி வழங்குதலேயாம். அந்நாயன்மார்பாற் கருணையின்மைக்குச் சரிதங் காட்டிப் பேசுவாருஞ் சிலருளராலோவெனின்; அன்னர் கூற்று சிவபிரான் கருணையைப் பாகுபாடு செய்து கூறுங்காற் சொல்லப்படுஞ் சங்கோத்தரங்களாற் சிறிதும் பொருந்தாமை யுணரலாம். இவ்வளவிற் கருணையின் இலக்கணம் ஒருவாறு சுருக்கிக் கூறப்பட்டது.

### (உ) சிவபிரானே கருணையைமுழுதும் ஆளுதற்குரியர்

இனி, இக்கருணையை முற்றும் ஆளுதற்குரியர் சிவபிரான் ஒருவரே யாவரென்பதைப்பற்றிக் கூறுவேன். "அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம், புல்லார் புரளவிடல்" என்னுந் திருக்குறளால், அருள் உயர்ந்தோர் தம்மிற் றாழ்ந்தோரிடத்தும், அன்பு தாழ்ந்தோர் தம்மின் உயர்ந்தோரிடத்தும் செய்யுங் குணங்களாமென்பது வெளியாம். இச்சிறப்பிலக்கணப்படி எல்லாவுலகத்து முள்ள எல்லாவுயிர்களிடத்தும் ஒருங்கே கருணைசெய்தல் எல்லாம்வல்ல சிவபிரான் ஒருவர்க்கே கூடுமன்றிப் பிற தேவர்களுக்கின்றாம். வேறு தேவர்களு மக்களுட் சிறந்தார் சிலரும் இவ்வருட் குணத்தையுடையராய்க் காட்டிய சரிதங்களுமுளவேயெனின்; அம்மக்கடேவர்கள் யாவருக்கும், ஒவ்வோரமயங்களிற் றம்மிற்றாழ்ந்தாரிடத்துக் கருணை நிகழுமாயினும், தமக்கெல்லா முயர்ந்தாராகிய சிவபிரான் ஒருவரிருத்தலான், அவரிடத்து அன்பேயன்றி அருள் செய்தற் கியைபின்மையானும், சிவபிரான் எவரானும் விலக்குதற் கொண்ணாத பாற்கடற்கண் எழுந்த விடத்தைப் பானஞ் செய்து யாவர்க்கும் தாந் தலைவரென்பதை

யும், யாவரிடத்துங் கருணை செய்யத் தக்கவரென்பதையுங் காட்டினமையானும் கருணையின் முழுவிலக்கணமும் ஏனையோரிடத்தன்றிச் சிவபிரான் பக்கலிருப்பதை யுணரலாம்.

"இவ்வருட்குணத்தின் பகுதியாகிய கண்ணோட்டத்தைப் பற்றியெழுந்த "பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க, நாகரிகம் வேண்டுபவர்" என்னுந் திருக்குறளிலும் சிவபிரான் விடமுண்ட சரிதங் குறிப்பிடத்தக்கதொன்றும். சிபி, ததீசி முதலியோர் சரிதக் குறிப்புக்களைச் சில குறள்களிற் கண்டு உரைக்கட் காட்டிய ஆசிரியர் பரிமேலழகர் இதனையு மீண்டுக் காட்டியிருப்பின் மிக நன்றாகும். இறைவனுக்கு எல்லாஞ்செய்யும் ஆற்றல் இயற்கையென் றொழிந்தார் போலும். சிவபிரான் றலைமையும், அவர் கருணைத் திறமும் ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள், தாம் அநுபவித்துத் திருவாய் மலர்ந்தருளிய திருவாக்குக்களிற் பரக்கக் காணலாம். "தன்மை பிறரா லறியாத தலைவா" என்பது தலைமை பற்றியதாகும். தலைவர்களை யுலகத்தலைவரெனவுங் கடவுட்டலைவரெனவும் இருவகையாகக் கொள்ளலாம். இவ்விருவர்களுக்குமுள்ள பேதத்தை நம் சுவாமிகள் யாவரும் வியந்தின் புறுமாறு மிக அழகுபெறக் கூறியிருக்கின்றார்கள். எங்ஙனமெனின், உலகத் தலைவர்களாகிய அரசர் முதலியோரை யுலகத்துள்ள மற்றையோரெல்லாம் நன்கு தெரிவர்; அத்தலைவர்களின் குணஞ் செயல்களையும் வரையறுத் துணர்வர். அத்தலைவர்கள், பிறரெல்லாரையும் அறியார்; அன்னார் குணஞ்செயல்களையு நன்கு தெரியார். கடவுட்டலைவராகிய சிவபிரானோவெனின்; பிறரெல்லாரையும் அன்னார் குணஞ் செயல்களையும் "அவனன்றி யோரணுவு மசையா" தென்றபடி யுயிர்க்குயிராய் நின்று நன்குணர்வர். பிறர்க்கு அப்பெருமான் பெற்றியுணர வரிதாகும். இப்பொருணலங்களையே நமது சுவாமிகள், மேற்காட்டியபடியும், "பெற்றிபிறர்க்கரிய பெம்மான்" எனவும் அருளிச்செய்வாராயினர். "குறைவிலாநிறைவே" யென்பது, அப்பெருமான் கருணையைப்பற்றியதாகும். சிவபிரான் தங்கருணையைப் பிறரெத்துணை யள்ளிக் கொண்டாலுங் குறைவின்றி நிரம்பியிருப்ப ரென்பதாம். இவ்விரு விஷயத்தையும் "தெள்ளிப் பிறராற் றெரிவரியான் றன்கருணை, யள்ளக்குறையா

வரன்'' என்பதனுனும் நன்குணரலாம். இதனுல், தங்கருணை யைக் கொள்ளாவிட்டாற் குறைவரேயன்றிக் கொள்ளக்குறையா ரென்பதும் வெளியாதல் உய்த்துணர்க. எவ்வுயிர்க்கும் இரங்கி, அவற்றிற்கு வரும் இடையூற்றையொழித்து இன்பளித்தல் சிவபி ரான் ஒருவர்க்கே கூடுமென்பதும், மற்றையோர்க் கியன்றவரை கருணைசெய்தலே கூடுமென்பதும் ஆன்ருேர் துணிபாகும். இது கருதியே அருளைப்பற்றித் திருமூல தேவர் கூறுமிடத்து

“ஆருயிர் யாதொன் றிடருறு மாங்கதற்
கோருயிர் போல வுருகி யுயக்கொள்ள
நேரி னதுமுடி யாதெனி னெஞ்சகத்
தீர முடைமை யருளி னியல்பே''

என்று மற்றையோர்க் கியன்றவாறு “முடியாதெனி னீரமுடை மையருளினியல்பே'' எனக் கட்டளையிட் டருளினர்.

சிவபெருமானுக்கு முடியாத தொன்றின்மையின், அவரே கருணையை முழுவிலக்கணத்துடன் ஆளுந் தகுதியின ரென்பது வெள்ளிடைமலையென வுணரத் தக்கதொன்ரும். இன்னும் இவ் வுண்மையை “शिवोदाता” என்னு மந்திரமும் வலியுறுத்தும். சகல தேவர் மக்கண் முதலிய யார்க்கும் எவற்றுக்கும் ஈயுந் தாதா சிவ பிரானே யாவரென்பது, எஜுர் வேதத்துள்ள சமகமந்திரங்கள், திருமால் பிரமன் முதலிய தேவர்களை அன்னத்தோடு சேர்த்து ஈயப்படும் பொருளாகக் கூறினமையாலும், சிவபிரானை யங்ஙனம் கூருமையாலு நன்குணரலாம். யாவருந் தம்பா லிரக்கத் தாம்வேண்டியார் வேண்டியாங்கீயும் பெருங் கொடையாளியாத வின், இப்பெருமானே, கருணையென்னும் உயர்குணத்தின் முழுப்பாகத்தையும் உடையாரென்பது தேற்றமாம்.

### (௫) சிவபெருமான் கருணையின் சிறப்பு

இனி, நம் பெருமானுக்குரிய எண்வகைக் குணங்களுட் கரு ணையும் ஒன்றெனினும், இக்குணமே, நாமெல்லாம் வழிபட்டுய் தற்குரிய திருமேனியை இறைவன் கோடற்குரியதாக விருத்த லின் மிகச் சிறந்ததாகும். சிவபிரான் உண்மைச் சொரூப விலக்க-

ணம் "செறிசிவ மிரண்டு மின்றிச் சித்தொடு சத்தாய் நிற்கும்" என்றபடி. சச்சிதாநந்தப் பிழம்பேயாகும். இந்நிலை மலபத்தர்களாகிய ஆன்மாக்க ளுணர வரியதாகலின், அவ்வான்மாக்களின் பொருட்டு இறைவன் அருவம், உருவம், அருவுருவம் என்னு மூவகைத் திருமேனியுமுடையவராய் வெளிப்பட்டருளுவர், இதுவே தடத்த நிலையெனப் படும். இத் திருமேனிகள் கருணையாற் கொண்டனவேயாம். இவ்விருவகை நிலையும் இறைவனுக்குரிய வென்பதையும், கருணையே வடிவ மென்பதையும், "கற்பனை கடந்த சோதி கருணையே வடிவமாகி" யெனவும், "செப்பிய மூன்றுநந்தங், கருமேனி கழிக்கவந்த கருணையின் வடிவு தானே" எனவும் போந்த திருவாக்குக்களா னறிக. ஈண்டு இக் கருணையே தமது வாமபாகம் பிரியாதுடனுறைந்து விளங்கும் உமாதேவியாகிய சிவசக்தியாகும். இஃது "அருளது சக்தி யாகு மான்றனக்கு" என்பதனுனறிக. தமக்கமைந்த எண்வகைக்குணங்களுள், இவ்வருட் குணமே நம்பிரானுக்குரிய பராசக்தியாக வமையுமாயின், இதன் மாட்சியை எவ்வாறு பேசுவேன்! நம் பெருமானது இப்பேரருள் வெளிக்கண்ணே, எல்லா அண்டங்களும், அவற்றினுட் பொருள்களுந்தோன்றி நிலைபெறுவனவாம். இவ்வருள் வெளிக்கண் எல்லாவுயிரும் நிலைபெற்றிருந்தும் "வெள்ளத்துணுவற்றி யாங்குன் னருள்பெற்றுத் துன்பத்தின்றும் விள்ளக்கில் லேனை" என்ற திருவாக்கின்படி நாம் நம் வினைப்பகுதியான் அக்கருணையினுற் பெறவேண்டிய பயனைப் பெறுது மாழ்குகின்றோம். இக்குற்ற நம்மதேயன்றி யக்கருணாநிதியின் பாலதன்று. தாழ்ந்தநிலம் மேட்டுநிலமென்னும் வேறுபாடு கருதாது மேகம் நிரந்தரமாகப் பெய்தும், அந்நீரை மேட்டு நிலமேற்காது ஒதுக்கத் தாழ்வுநிலம் ஏற்குமாபோல, சிவபிரான் பருகற்கினிய பரங்கருணைத் தடங்கடலாக விருந்தும், நந் தீயவினையாகிய வணை குறுக்கிட்டுக் கிடத்தலான், அக்கருணைப் பிரவாகம் நம்பாற் செல்லாது உண்மை யன்பர் கூட்டமாகிய நற்றடத்திற் சென்று நிறைகின்றது. சிவபிரான் ஆன்மாக்களுய்தற் பொருட்டுத் தங்கருணை யமுதத்தை மிகவலிந்து எத்துணையோ உபாயங்களாலும், ஊட்டுகின்றுர். இவ்வுண்மையை சுவாநுபூதியா லுணர்ந்த பேரன்பாள

ராகிய ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் கட்டளையிட்டருளிய பின் வரும் திருவாசகத் திருப்பாசுரத்தானு முணரலாம்.

அதுவருமாறு:—

"வழங்குகின் றாய்க்குன் னருளா ரமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின் றேன்விக்கி னேன்வினை யேனென் விதியின்மையாற்
றழங்கருந் தேனன்ன தண்ணீர் பருகத்தந் துய்யக்கொள்ளா
யழுங்குகின் றேனுடை யாயடி யேனுன் னடைக்கலமே"

என்பதே, இதன் அருமைப் பொருளையுஞ் சிறிதுகூறி மேற்சொல் வேன். வழங்குகின்றாய்க்கு ஜன்புழி, குவ்வுருபு பொருட்டுப் பொருளதாம். "என்னையாண்டாய்க்கு" என்று பிறாண்டுஞ் சுவாமிகள் இதனை வெளிப்படக் கூறுவர், ஆகவே, வழங்குகின்ற நின் பொருட்டு நின் அருளாகிய வாரமுதத்தை வாரிக்கொண்டு விழுங்குகின்றேன் என்பதே யத்தொடரின் பொருளாம். ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகள் தம்மைச் சிவபிரான் மிக வலிந்து அடிமை கொண்டாரென்பதை "கல்லைமென் கனியாக்கும் விச்சை கொண் டென்னை நின்கழற் கன்பனாக்கினை" யெனவும், "ஈர்த்தென்னை யாட்கொண்ட வெந்தை பெருமானே" யெனவும், 'கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை, வெள்ளத்தழுத்தி வினைகடிந்த வேதியனை" யெனவும், "இனையனுனென் றுன்னை யறிவித்தென்னை யாட்கொண் டெம்பிரா னுனைக்கு" எனவும் போந்த திருவாக் குக்களா னுணர்க. அவ்வாறு அடிமைகொண்டு தங்கருணை யமு தத்தை யெவ்வா றூட்டினுரெனின்; ஒன்றுமறியாக் குழவிப்பரு வத்து மகவைத் தாய் அச்சமுறுத்தி யுணவூட்டுமா போலும், கல் லூரிக்கட்சென்று கல்வியின் மாட்சியுணராது கற்றற்கு மலைவுறும் சிறாரை யாசிரியன் அடித்துத் துன்புறுத்திக் கல்வியைப் புகட் டுமா போலும் ஊட்டினுரென்க.

இவ்வுண்மையையே நம் சுவாமிகள் "அடித்தடித்து வக்கார முன்றீற்றிய வற்புதமறியேனே" என்று திருவாய் மலர்ந்தருளி னார்கள். ஆதலின், "சர்க்கரை வழங்குதல்" என்பது போலச் சிறிதும் வருந்துதலின்றி மகிழ்ச்சி மிக்கு இடையீடின்றிப் பெய் தல் கருதிக், கொடுத்தல் தருதல் முதலிய சொற்களை விடுத்து

வழங்குதற் சொல்லாற்றெடுத்து, அவ்வாறு கருணையமுதத்தைப் பெய்து உண்ணுக உண்ணுகவென்று அடித்தடித்து வற்புறுத்து கின்ற நின்பொருட்டு அஞ்சியென்பார் வழங்குகின்றாய்க்கு என வும், தன்னையுண்டாரைச் சிற்றின்புறுத்துந் தேவாமுதம்போலாது சிவபிரானருளமுதம் பேரின்புறுத்த வல்லதாகலின் உன்னரு ளாரமுதத்தையெனவும், இயற்கையாக வுண்டலின்றித் துன்பு றுத்து நின்பொருட்டுமிக விரைந்துண்ணுகின்றேனென்பார் வாரிக் கோண்டு விழுங்குகின்றே னெனவும், அங்ஙனம் விரைந்து விழுங் குதலான் "விக்கினேனெனவும், வேண்டாத வுணவை யுண்டற் குத் தொடங்கு முன்னர்க் கண்டவளவிலேயே விக்கலுண்டாமாக லின், முறையே நிகழ்காலமு மிறந்தகாலமுந் தோன்ற விழுங்கு கின்றேன் விக்கினேனெனவும் அவ்வாறு விக்குதற்குக் காரண நீ யல்லை; வினைவயப்பட்டுழலும் எனது விதியேயென்பார் வினையே னேன் விதியின்மையால் எனவும், யான் வேண்டாதிருப்பவும், என் னைத் துன்புறுத்தி யூட்டினையாதலின், அதனாலுண்டான விக்கலை யொழித்தற்குத் தண்ணீர் தந்து பிழைப்பித்தல் வேண்டுமென் பார் "தண்ணீர் பருகத் தந்துய்யக் கோள்ளாயெனவும், அவ்வமு தம் நின்னருளமுத மாதலின், அதனை யுண்ணுதற்குரிய அதிகார சிவத்தும் வேண்டுமென்பார் தண்ணீய நீர்மை—சிவத்துவம் என் னும் பொருள் பொதுளத் தண்ணீரெனவும் அத்தண்ணீரும் அவ் வமுதம்போல் விக்கன் முதலிய சலனங்களைத் தருதலின்றி யெற் குகந்த இனிமைச் சுவையுடனிருத்தல் வேண்டுமென்பார். "தழங் கருந் தேனன்ன தண்ணீரெனவும், அது பெருமையின் மிக வருந்துகின்றே னென்பார் அழுங்குகின்றேனெனவும், சிவபிரான் சேதனப்பொருள்க ளெல்லாம் தமக்கு அடிமையாகத் தாம் ஆண் டான் எனவும், அசேதனப் பொருள்களெல்லாம் உடைமை யாகத் தாம் உடையானெனவுங் கூறப்படுவாராதலின், இந்நான்கு சொற்களைக் கொண்டு விளக்குதற்குரிய விஷயம் முன்னிலை தன் மையாகிய இருசொற்களினமைய உடையா யடியே னெனவும், யான் சேதனுபிருந்துஞ் சிறிதும் அன்பிலனாதலின், என்னையாளு தல் பற்றி வரும ஆண்டானென்பதினும், அசேதனப் பொருள் களைப்பற்றிய உடையானென்பது நினக்குப் பெருமையாதலின்

அதனையேவிளிப்பலென்பார் உடையாயெனவும், ஆண்டானென்ப துண்மையெனினும் என்னை நோக்கி யவ்வாறு கூறற்கு நாண முடையேனாதலின் அப்பொருள் பிறாறிய வென்னையே கூறிக் கொள்வலென்பார் அடியேனெனவும் நின்றனக் குரிமையுடைய பொருளினும், அடைக்கலப்பொருளைக் காத்தல் நின் பெருந்தன் மைக்கு இயன்றதென்பார் உன்னடைக்கலமே யெனவுந் திரு வாய் மலர்ந்தருளினர் சுவாமிகள். நண்பர்களே! இவ்வரிய நுண் பொருளை நினையுங்காற் றிருவாசக மாட்சி சிந்தித்தற்கெவ்வாறு ஒல்லும்? இவ்வருமை நூலுக்கு உரை வரைவேனென்று முற்பட் டார் சிலர் இதன் நுண்பொருணலங்களைப் பிறாறியக் கூடாவாறு செய்தமை பெரிதும் வருந்தத் தக்கதே. இன்னும் நம் இறை வன் அன்பர்களை யாட்கொள்ள மேற்கொண்ட செயல்களெண் ணத் தொலையா. அவர் தம் அன்பர்களுக்கு எவ்வளவு எளிய நிலையிலுள்ளாரென்பது அச் செயல்களா னறியலாம். நம் மணி வாசகர் பொருட்டு மண் சுமந்தார். "மண்முதற் சிவமீறாகிய முப் பத்தாறு தத்துவங்களையுங் கடந்தவன் என்று என்னைக் கூறுவார்; யானோ என் உண்மையன்பர் பொருட்டுக் கீழ்க்கண்ட பிருதிவி தத்துவத்தை அம்முப்பத்தாறினுமேல் நிற்கும் என்சிரமேலேற்றுங் கடப்பாடுடையேன்" என்று அவர் தாம் அடியார்க் கெளியராம நிலைமையை நன்கு புலப்படுத்தினர் போலும், என்னே அவர் பெருங்கருணை மாட்சி! நினையுங்காலுள்ள முருகுகின்றதே!

## (ச) அக்கருணையின் வகை

இனி, அப்பெருமான் கருணைத் திறம் இருவகைப்படும். அவை அறக்கருணை மறக்கருணை யென்பனவாம். ஒரு தந்தைக் குரிய இருவர் மக்களுள், ஒருவன், "தந்தைசொன்மிக்க மந்திர மில்லை' என்றபடி செவ்விய நன்னெறிக்கண் ஒழுகுகின்றான். அவற்குத் தந்தை வேண்டுவன தந்து இன்புறுத்துகின்றார். மற் றொருவன் தந்தையுரை கடந்து தீயநெறிகட் செல்லுங்கா லவ னைத் தந்தையடித்துத் துன்புறுத்தி நன்னெறிக்கட் செலுத்து கின்றான். இவ்விருவர் மக்களிடத்துச் செய்யுமிவ் விருசெயலும் அன்புபற்றியனவேயாகும். இங்ஙனமே நம் பரமபதியின் செய

லுமாம். தம்மிடத்து அன்புபூண்டு ஒழுகும் அடியார்களை யவர் உவப்பன செய்து இன்புறுத்துவர். அன்பின்றி யிருப்போரை யொறுத்து நன்னெறிக்கட் செல்லுமாறு அருள் பாலிப்பார்.

இவ்விரு செயற்கும் அவ்வான்மாக்களிடத்துத் தாம் வைத்த கருணையே காரணமாகும். இவற்றுள் முன்னையது அறக்கருணை யெனவும், பின்னையது மறக்கருணை யெனவுங் கூறப்படும். நம் சமயநூல்களையும் உலகியலையும் அறியார்சிலர் "யாவர்க்கும் ஒப்ப விருத்தலன்றே கடவுளியல், அவ்வாறின்றிச் சிலர்க்கு இதஞ்செய் தலும், சிலர்க்கு அகிதஞ் செய்தலும் என்னை ?" யென்பர். இவ் வுலக பரிபாலனஞ் செய்யும் அரசியலை நோக்கினும் இவ்வுண்மை மிக வெளிதி லறியத்தக்கதொன்றும். இது கருதியே திருவள்ளுவ தேவரும்,

"அறத்திற்கே யன்புசேர் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை"

என்று கூறினர். இத் திருக்குறளுக்கு மறத்தை நீக்குதற் கும் என்று ஆசிரியர் பரிமேழலகர் உரைகூறினர். இதனினுஞ் செவ்வையாக அறத்தைச் செய்தற்கு அன்பு துணையாதல் போல வனை மறத்தைச் செய்தற்கும் அன்பு துணையாம் என்றுகொண்டு இவ்விரண்டனுட் பின்னதை யன்பு பற்றிய மறமெனக் கோடல் சிறப்புடைத் தென்பதுணர்க. இங்ஙனமே நாயன்மார்கள் செயலு மாம். நம் வைதிக சைவசமய நெறியை யழிப்ப முற்பட்ட சம ணர்கள் பாண்டியவரசனுல் ஒறுக்கப்பட்டுக் கழுவேறுங்கால், அதனை விலக்காமையால் திருஞானசம்பந்த சுவாமிகள் கருணை யிலரென்பர் ஒரு சிலர், அன்னர், ஒருகுடி நலம்பெற ஒருகுடியை யும், ஒரு தேய நலம்பெற ஓரூரையுங் கெடுத்துக் காத்தலறமா மென்று அறநூல் கூறுதலையு முணர்ந்திலர்; "பொறையெனப் படுவதாடவர் தமக்குப்பூணெனப் புகலினும் பொருந்தார், முறை யற்ப் புரிந்தாலக் கணத் தவர்த முடித்தலை துணிப்பதே முழுப் பூண்" என்னு நீதியையு முணர்ந்திலர். இன்னும் பல பிரபல நியாயங்களுள வெனினும், அவை யீண்டு வேண்டற் பாலன வல்லவாதலின் விரித்திலன். ஆகவே, சிவபிரான் செயல்கள்

"எக்கிரமத்தினாலு மிறைசெயலருளே யென்றும்" என்றாங்குக் கருணை காரணமாக வுள்ளனவேயாம். (தொடரும்)

---

# *காக்கையின் சிறந்த குணங்கள்

[மயிலை. சீனி. கோவிந்தராசனார்]

உலகத்திலே காணப்படுகின்ற உயிருடையனவும் உயிரில்லனவுமாகிய பொருள்களிலே ஒன்றாவது முற்றும் நல்ல குணத்தையே உடையதும் அன்று; அல்லது, கெட்ட குணத்தையே உடையதும் அன்று. ஒவ்வொன்றும் இரண்டு குணத்தையும் விரவியே வாய்ந்துள்ளது. ஆனால், சில நல்ல குணத்தில் மிகுந்தும், சில கெட்டகுணத்தில் மிகுந்தும், சில இரு குணத்திலும் ஒத்தும் இருக்கின்றன. காக்கையினிடத்தே கெட்ட குணங்களே மிகுதியாகக் குவிந்து கிடக்கின்றபடியால், அதை நாம் சிறிதும் இரக்கமின்றி வெறுக்கின்றோம். அதன் கன்னங்கரிய அழகு நம் கண்ணைக் கவர இல்லை. அதன் அஞ்சாத நெஞ்சம் நமக்கு வஞ்சம் ஊட்டுகின்றது. அதன் காவென்ற கரைவும் நம் காதிற்கு வெடிப்பே தருகின்றது. அதன் பொல்லாத உணவும் செயலுங் கண்டு நாமெல்லோரும் அதை அருவருத்து அடித்தகற்றுகின்றோம். ஆயின், அது நற்குணம் ஒன்றும் இல்லாத வெறும் பறவையோ? அல்ல, அதன் நற்குணங்கள் பலவற்றுள்ளும் ஐந்து குணங்கள் மிகவும் அருமையானவையென நமது ஆன்றோர்களும் எடுத்துப் பாராட்டி யிருக்கின்றார்கள். அக்குணங்கள் இவை:

"காலையெழு தன்மற்றோர் காணாமே யின்புறுதல்
மாலை குளித்து மனைக்கேகல்—சாலவே
உற்றாரோ டுண்ண லுயிரோம்ப லிவ்வைந்தும்
கற்றாயே காக்காய் கனிந்து" —ஒரு பழம்பாடல்.

'காக்கையே! நீ விடியற் பொழுதிலே விழித்தெழுகின்றாய். யாவர் கண்ணிற்கும் தோன்றாமலே இன்பம் உண்ணுகின்றாய். மாலை

---

*இது 'கலாசிந்தாமணி' யினின்றும் எடுக்கப் பெற்றது.

நேரத்தே குளித்தபின்னே சேக்கை அடைகின்றாய். உறவினரை உடன் கூட்டியே உண்ணுகின்றாய். உன் உயிருக்கு ஊறுவாராத படி காத்து வாழ்கின்றாய். உனக்கு எத்தனையோ தீக்குணங்கள் இருந்தும், அவற்றினிடையே இந்த ஐந்து நற்குணங்களையும் அகம் விரும்பிக் கற்றுக் கொண்டாயே! இஃது எனக்கு வியப்பைத் தருகின்றது!" என்பது இதன்பொருள்.

நம்முன்னோர் தம்முடைய அநுபவத்திற்கு வந்தனவாகிய அரிய அறங்களையும், உயர்ந்த உண்மைகளையும், கைகண்ட குணங்களையும் சிறுச்சிறிய தொடர்மொழியாகவும், குறட்பா வாகவும், வெண்பாவாகவும், அப்பொழு தப்பொழுதே அழிந்துபோகாத படி அமைத்து வைத்து வந்தார்கள். இவ்வழக்கம் நம் நாட்டிலே மட்டும் அன்று; அறிவுவளர்ச்சியும் நாகரீக முதிர்ச்சியும் மிக்குள்ள எல்லா நாட்டிலும் உண்டு. இவ்வாறு அறிஞர்களால் அமைத்து வைத்த கருந்தனமே 'முதுமொழி' எனப்படும். இதோ மேலே காட்டிய வெண்பாவும், நம் நாட்டிலே கோடானு கோடியாக எழுதிக் கிடக்கின்ற முதுமொழிகளிலே ஒன்றுதான்!

இவ்வகைப்பாக்கள், ஒருமுறை கேட்டோர்க்கும் உள்ளத்திலே ஊன்றிப் பதியும்படி எளியமொழிகளாலே இன்னோசையும் புதை பொருளும் பொருந்த யாக்கப்பெற்றன. மேலும், இவை சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தல், நவின்றோர்க்கினிமை முதலிய நாலாறு வனப்பும் நிரம்பப்பெற்றன.

இதுநிற்க, காக்கைக்கு ஐந்து குணங்களே அரியன என்பதை நமது மாணிக்கவாசகப் பெருமானும், தாம் திருவாய் மலர்ந்தருளிய 'திருக்கோவையா'ரிலே, "மாக்குணங்கள் ஐஞ்சாற் பொலியும் நலசேட்டைக் குலக்கொடியே!' (செய். 235) என்னும் அடியினாலே பணித்தருளினார். இக் 'கோவையா' ருக்கு நல்லுரை கண்ட பாராசிரியர் பணிந்தெழுபுலமைப் பேராசிரியர் என்பார், "குணங்கள் ஐந்தாவன: மறைந்த புணர்ச்சித் தாதலும், கலங்காமையும், பொழுது இறவாது இடம் புகுதலும், நெடுகக் காண்டலும், மடியின்மையும்" என விரித்தோதினார்.

இங்கே, எமக்கு ஒரு பணி உண்டு. அது யாதென்றால், வெண்பா ஆசிரியர் உரைத்த குணங்களோ, அல்லது பேராசிரியர் விரித்த குணங்களோ, காக்கைக்கு உண்மையாகச் சிறந்த குணங்கள் என ஆராய்ச்சி செய்வதே. மறைந்த புணர்ச்சியும் மாலையில் மனையில்சேரலுமாகிய இரண்டு குணத்தையும் இரண்டு ஆசிரியரும் எடுத்துரைக்கின்றார்கள். ஆனால், வெண்பா ஆசிரியர் காட்டிப்போந்த 'காலை எழுதல், உற்றாரோடு உண்ணல், உயிர் ஓம்பல்' என்னும் மூன்று குணங்களும் உள்ள இடத்தே, 'கலங்காமை, நெடுகக்காண்டல், மடியின்மை' என்னும் மூன்று குணங்களையும் பேராசிரியர் பெய்துரைக்கின்றார். காக்கையினிடத்திலோ, இந்த இருவர் கூறிய எட்டுக்குணங்களும் இயைந்துள்ளன. இனி, நாம் காலை எழுதல் முதலிய குணங்களோ, கலங்காமை முதலிய குணங்களோ குணங்களுள்ளே சிறந்தன என்பதைச் சிறிது ஆராய்வோமாக.

காலை எழுதல் முதலிய மூன்றும், சிறுமகாரும் காக்கையினிடத்தே கண்டுவைத்திருக்கும் சாதாரண குணங்கள். அன்றியும் கல்வி கேள்வி அறிவுகள் இல்லாத சாமானிய மக்களுள்ளேயும் பலர் விடியுமுன்னே விழித் தெழுகின்றார்கள்; தம் உற்றாரை உடன் கூட்டிக்கொண்டே உண்ணுகின்றார்கள்; தம் உயிர் நலிவு நணுகாதபடி நடந்து கொள்கின்றார்கள். இக்குணங்கள் அவர்களுக்குப் பல நாளைய பழக்க வழக்கத்தினாலே படிந்திருக்கின்றன. இவை சிறிய குணங்களாமென்று தாமே கண்டறிந்தாவது பிறர் வாயிற்கேட்டறிந்தாவது இவற்றைத் தமக்கு ஆக்கம் தரும் ஒழுக்கமெனத் தெளிந்தபின் கைக்கொண்டவரில்லை.

மற்றைக் கலங்காமை முதலிய மூன்றும் சற்றே ஊன்றி நோக்குவார்க்கேயன்றி ஏனையோர்க்கு எளிதாகப் புலப்படாத குணங்கள். அன்றியும், கல்வி கேள்வி அறிவுகளிலே கடைபோகிய சிலர்மட்டுமே, தமக்குத் துன்பம் வந்த விடத்தும் அதை இன்பமாகக் கருதி மனங்கலங்காமல் வாழ்கின்றார்கள்; தாம் எடுத்துக்கொண்ட காரியம் எவ்வளவு சிறியதேயாயினும், அதைச் செய்யுமுன்னே செவ்வையாக ஆராய்ந்து துணிகின்றார்கள்; அவரே, சோம்பி யிருத்தல் தேம்பித் திரிவதற்குக் காரணமா

மென்று அக்குணம் தம்மிடத்தே சேரவொட்டாமல் செய்து கொள்கின்றார்கள். இக்குணங்களை அவர், தம் அறிவினாலே அளந்தறிந்தாவது, அறநூல்களிலே கற்றறிந்தாவது. ஆன்றோர் வாயில் கேட்டறிந்தாவது உறுதியுடையனவென்று உணர்ந்து, தமக்கு இன்றியமையாத நல்லொழுக்கங்களாகக் கடைப்பிடித்து நடக்கின்றார்கள்.

இனி, 'காலை எழுதல், உற்றாரோடு உண்ணல், உயிர் ஓம்பல்' எனும் இவை, கல்வி ஒழுக்கமில்லாத மன்பதையிலே பலரிடத்தும் காணப்படுகின்றபடியால், பொது வகையான நற்குணங்களாம். மற்று, 'கலங்காமை, நெடுகக்காண்டல், மடியின்மை' எனும் இவை ஒழுக்க முதிர்ந்த உயர்ந்தோருள்ளேயும் சிலரிடத்தே மட்டும் காணப்படுகின்றபடியால், சிறப்பு வகையான நற்குணங்களாம். ஆகவே, காலை எழுதல் முதலிய குணங்களைக் காட்டினும், கலங்காமை முதலிய குணங்கள் சால உயர்ந்தன என்பது விளங்கிற்று. விளங்கவே, கலங்காமை, நெடுகக்காண்டல், மடியின்மை, மறைந்தபுணர்ச்சி, பொழுது இறவாது இடம் புகுதல் என்னும் ஐந்தும் காக்கையின் சிறந்த குணங்களாம் என்பது உள்ளங்கை நெல்லிக் கனிபோலத் தெள்ளத் தெளிவாயிற்று.

இதுவரையும் சொல்லிப்போந்தவற்றால், காக்கையைப் பலரும் வெறுப்பதற்குக் காரணம் அதன் கொடுங்குணங்களே எனவும்; ஆயினும் அது நற்குணமே இல்லாத வெறும்பறவை அல்ல எனவும்; அதன் நற்குணங்களில், ஐந்து மிகவும் அரியன என்று ஆன்றோரும் பாராட்டி யிருக்கின்றார்கள் எனவும்; அவ் ஐந்தும் காலை எழுதல் முதலியன என்பர் சிலர், கலங்காமை முதலியன என்பர் மற்றுஞ் சிலர் எனவும் ; இவற்றுள், கலங்காமை முதலிய ஐந்து குணங்களும், விழுமியோரிடத்தே மட்டும் ஒழுக்கங்களாகக் காணப்படலால், காக்கைக்கு உண்மையிற் சிறந்த குணங்களாம் எனவும் ஆராய்ச்சி செய்து அறிந்ததாம் என்க.

"சேணோக்க வல்லாய் சிறிதும் மடியில்லாய்
மாணோக்கி யின்பம் மறைந்துறுவாய்—கோணோக்கிப்
போதிறவா தில்லம் புகுவாய் மனங்கலங்காய்
கூடியவே காக்காய் குணம்.

## சாந்திரமான அகர்க்கணம் பிழைபடுகின்றது

[இராமீச்சுரம் தா. முத்துக்கருப்ப பிள்ளை, சோதிடர்.]

ஜோதி சித்தாந்த சங்கிரகம் மத்தியாதி காரத்தில் அகர்க்கணம் வருமாறு: "கலியப்தத்தை 12-ஆல் பெருக்கி சைத்திர;முதல் சென்ற மாதத்தைக் கூட்டினுல் சௌரமாதம், இதை இரண்டிடத்தில் வைத்து, ஒன்றை மகாயுக அதிமாதத்தாற் பெருக்கி மகாயுக சௌரமாதத்தால் வகுத்து வந்த பலம் அதிகமாதம். இதை மற்ருென்றில் சேர்த்து வைத்தால் சுத்தமாதம் அல்லது சாந்திரமாதசமஷ்டி; இதை 30-ஆற் பெருக்கி சுக்கிலப் பிரதமை முதல் சென்ற திதிவரை கூட்டினுல் சாந்திர திதி; இதை இரண்டிடத்தில் வைத்து ஒன்றை மகாயுகக்ஷய திதியாற் பெருக்கி மகாயுக சாந்திர தினத்தால் வகுத்து வருபலம் க்ஷய திதி; இதை மற்ருென்றில் களைந்து நின்ற சேடம் சுத்த தினசமூகமே சௌரசாவன அகர்கணம்; இதை 7-ல் கழிக்க சுக்கிரவாராதி வாரம் வரும். ஒரொருசமயம் ஒருதினம் கூட்டியாவது குறைத்தாவது வாரத்தைச் சரிப்படுத்திக் கொள்ளும்படி நேரிடும்" என்று கூறப்படுகின்றது. இவ்வாறுள்ள அகர்க்கணம் சூரிய சித்தாந்தத்தை ஒட்டியதாயு மிருக்கிறது. அகர்க்கணம் - சுத்ததினம்.

ஜோதி சித்தாந்த சங்கிரகப்படி ஒருவருடப் பிரமாணம்-365-15-௩௧-31-24-இது, தினமுதல் விதத்பரை இறுதியாயிருக்கும். இவற்றை, கலியுகத்திற் சென்ற வருடத்தாற் பெருக்கி தினம். நாடி., விநாடி, தத்பரை வரையும் எறிட்டு, அதிலே, அச்சித்தாந்தப்படியுள்ள துவாபரயுக சேஷத்தைக் கழித்துவிடில் சௌரசாவன அகர்கணம் வரும். இங்ஙனமாயவழி நிரம்ப ஒழுங்காயும் அதிசுலபமாயும், எப்போதும் சரியாயு மிருக்கும்.

சாந்திரமானிகள் மேற்காட்டிய வழியை உணர்ந்தோ உணராதோவிடுத்து, மானுபிமானத்தால் சாந்திரமானத்தில் அதிகமாசமென்றும், சுத்தமாச மென்றும், சாந்திர திதியென்றும், க்ஷய திதி யென்றும், மிகவருந்தி வருந்தி வருவித்துக்கொண்டு செய்யுங் கிரியைகள் உலர்ந்த ஆடைச்சுமையை நனைத்துச் சுமக்கின்றதை நிகர்க்கும். அவ்வாறேனும் அகர்க்கணம் எப்போதும் சரிவருகிற

தாயுமில்லை. சௌரமானத்தால் அகர்க்கணம் செய்தற்கு சாந்திர மானம் வேண்டுவதில்லை. சௌரமானத்தைத் தழுவிச் சாந்திரமானத்தாற் செய்யும் அகர்க்கணம் இறுதியில் சௌரதினமே யாகின்றனவன்றிச் சாந்திர தினமானதில்லை. எல்லாக் கணிதங்களும் சௌரதினத்திலிருந்து நடைபெறுகின்றதுபோல் சாந்திரதினத்திலிருந்து நடைபெறவில்லை. உதய முதல், மறு உதயம் வரை-60-நாழிகை ஒரு சௌரசாவன தினம். இது, எப்போதும் ஒரே அளவிலுள்ளது. ஒரு திதி ஆரம்ப முதல் முடிவு வரையுள்ள நாழிகைகள் ஒரு சாந்திரதினம்;இஃது எப்போதும் பற்பல அளவுகளுள்ளது. எப்போதும் ஒரே நிலைமையிலுள்ள பொருட்கு எப்போதும் பற்பல நிலைமையிலுள்ள பொருள் உயர்வும் ஒப்பும் மாகர்வாறுபோல் சூரிய (சௌர) மானத்துக்குச் சாந்திர (சாந்திர) மானம் உயர்வும் ஒப்புமாகாவென்பது திண்ணம்.

சந்திரனுக்குக் கலை கூடுகிறதும் குறைகிறதும் சிருங்கோன்னதமும் உதயாஸ்தமனங்களும் சூரியனாலே யுண்டாகின்றன. செவ்வாய் முதலேந்து கிரகங்களுக்குப் ஸ்புடக்கிரியைகள், வக்கிரம், நிவர்த்தி, உதயம், அஸ்தமனம், கெதி பேதங்கள் ஆகிய இவைகள் சூரியனாலே யுண்டாகின்றன. சூரிய புஜாபலம் சாம் இவைகளால் சந்திரன் முதலிய கிரகங்களின் மத்தியம் சுத்தமாகிறது. அயனங்கள் 2, விஷுக்கள் 2, ஷடசீதிகள் 4, விஷ்ணுபதிகள் 4, ஆகிய புண்ணிய காலங்களும், வசந்த முதலிய இருதுக்கள் 6, கார்கூதிர் முதலிய காலங்கள் 6, பூர்வான்னாதி காலங்கள் 5, உதயம் மத்தியான்னம்-அஸ்தமனமாகிய சந்திகள் 3. ஆகியவைகள் சூரியனாலேயே யுண்டாகின்றன. பிராணன் 6-ஒரு விநாடி, 60-விநாடி ஒரு நாழிகை; 60-நாழிகை ஒரு சாவன சௌரதினம்; இப்படியான தினம்-360-மகா திசை வருடம் ஒன்று; இவ்வருடம் 100–மனிதர்களின் ஆயுட்காலம்.

சூரியன் இவ்வண்ட நடுவிலும் கோட்களுக்கு நடுவிலும் இருக்கிறதினாலே அச்சூரியனுக்கு ஞாயிறு, பகல், பகலோன், செங்கதிரோன், அண்டயோனி முதலிய பெயர்களுண்மையா

யின. கோட்களில் தலைமைத் தன்மையுள்ளது பற்றி அச்சூரிய னைக் கோளரசென்றும், அவ்வாரத்தை ஆதிவார மென்றுங் கூறு தற்காயின.

சங்குகளில் இடம்புரி ஆயிரத்தினடுவில் ஒருவலம் புரியும், வலம்புரி ஆயிரத்தினடுவில் ஒரு சலஞ்சலமும், சலஞ்சலம் ஆயி ரத்தினடுவில் ஒரு பாஞ்ச சன்னியமு மிருப்பதில் நடுவிலுள்ளவை யும் அவற்றுள் ஒன்றற்கொன்றும் முறையே உயர்ந்தன.

ஓர் தேவாலயத்திலே பல பிராகாரங்களும், அவைகளினடு வில் கெர்ப்பக்கிரகமும், அதனடுவில் தெய்வ விம்பமு மிருப்பதில் எல்லாவற்றுள்ளும் நடுவிலுள்ள தெய்வ விம்பமே உயர்ந்தது.

மேற்கூறியுள்ள திருஷ்டாந்தங்களைப்போல், பூமத்தியத் துள்ள இலங்கை,யவகோடி,சித்தபுரி,உரோக மென்னும் நான்கு தேசங்களுக்கு நேர் மேலாக,ஆகாயத்திலே இராசிச் சக்கரமார்க் கத்திலே சஞ்சரிக்கிற சந்திரன் முதலிய கோட்களுக்கு நடு விலே, இவ் வண்டத்திலுள்ள உலகங்கட் கெல்லாம் ஒளி செய்து கொண்டு அசைவற்றிருப்பது சூரியன்; இச் சூரியனுக்கு உயர் வும் ஒப்பும் பிறிதோர் கிரக மின்மையால் சூரிய (சௌர) மான மே எல்லாமானங்களுள்ளும் சிறந்ததும், மிகு வலியுள்ளதும், மாறாத் தன்மையதுமாகவின் பரமேசுவர வாக்கியமான ஆகமங்கள் “ஸர்வேஷாம் ஸௌரமாநமப்ரசஸ்தம்” “ஸௌரமாநே நகர்த் தவ்வியம், ஸர்வ கர்ம சுபாவகம்” என்பது முதலிய வாக்கியங்க ளால் புகழ்ந்தோதுகின்றன.

சூரியன் சலனமில்லா திருப்ப அதற்கு மான மென்பது எங் ஙன முண்டா மென்னின்; சலனமற்றிருக்குஞ் சூரியனை இப்பூமி முதலிய கோளங்களெல்லாம் தம்மிற்றாமே யுருண்டு கொண்டு சுற்றுகிறதினாலே, அவ்வக்கோள வாசிகளுக்கு அச்சூரியனும் சுற்றுகிறதுபோற் காணப்படும். அங்ஙனங் காணப்படுகிறதானது ஒவ்வோர் கோளங்களின் கெதி விரைவின்படியே காணப்படும்; இங்ஙனமான காட்சியினாலே பூமி முதலிய கோளங்கள் அசை வற்றிருக்கிறது போலும், சூரியன் அவ்வக்கோளங்களைச் சுற்று கிறது போலும் அவ்வக்கோள வாசிகளுக்குப் புலப்படும். இத

ஞலே, ஜோதி சித்தாந்த நூல்கள் "சூரிய கெதி" என்று கூறு கின்றன; கூறவே சூரிய (சௌர) மானமு முண்டெனப் பெறப் பட்டதென்க.

இதற்கோர் திருஷ்டாந்தமுங் கூறுதும்:—வெப்பக் கிரணத் தால் கடனீரை வாங்கியும் மேக கிரணத்தால் அதனைத் தாங்கியும் பனிக்கிரணத்தால் மழையாக்கிப் பெய்வித்து முள்ள செயல்கள் சூரிய கிரணங்களாலாவது போல், கோளங்களின் ஸ்திதி கெதி முதலிய செயல்களும் அசைவற்றிருக்கும் சூரியனாலே யாகலின் சௌரமான மென்பது இழுக்காகா.

ஆரியபட்டீயம், பரகிதம் என்னும் சித்தாந்த நூல்களில் சூரி யனுக்கு மகா யுக பகணம். 4320000-க்குள்ள சௌரசாவன தினம் 1577917500 ஐ பூ-தினம் என்று கூறியிருக்கிறதினாலே சௌர சாவன பூ என்னும் மூன்று விதமான தினமும் ஒரே அள வுள்ள தினமாகின்றன. சாந்திரதினம், சாந்தி மாதம், சாந்திரவரு டமாகிய இவைகளின் பிரமாணங்கள் எப்போதும் வரையறை யின்றி யிருக்கும்.

சாந்திர தினமான திதிகளுக்குக் குணமில்லா திருத்தல் கண்டு "திதிகுண மொன்று" என்றும் "1-2-3-" முதலிய எண் ணுப் பெயரானும் தென் மொழிச் சோதிட நூல்கள் கூறுகின்றன; இதுபோலவே "திதியேக குணம்" என்றும் "பிர தமம், த்விதீயம், திருதீயம்" முதலிய எண்ணுப் பெயரானும் வடமொழிச் சோதிட நூல்களுங் கூறுகின்றன. இப்பிரமாணங் களால், திதிகளுக்கு ஒரே குணமன்றிப் பலகுணங்களில்லை யென் பது உறுதியாயிருப்ப "திதிகளுக்கு ஒருகுண மென்பது முகூர்த் தங்கட்கு மட்டுமேயன்றி விரதாதிகளுக் கன்றென்றும், விரத முதலியவைகளில் திதிகளுக்குப் பல்லாயிரக் குணங்களுள்ளது போலும்" சாந்திரமானிகள் கூறுகின்றனர். இங்ஙனங் கூறுதற் குப் பிரமாண மொன்றுங் காட்டவில்லை, அங்ஙனம் பிரமாணமும் இதுகாறும் ஏற்பட்டிருக்கிறதாகவுங் காண்கிலேம். இனி, எந் நூலிலேனும் நுழைத்துக் காட்டுவாராயின், அக்காட்டுகள் ஞாயம், சோதனை, பொருத்தங்கட்கு முரண்படா திருப்பின்

ஏற்கக்கூடும். அங்ஙனங் காட்டுகிறதற்கும் இயலாது. திதிக்கு யாதொரு குணமு மின்மை யென்பதனாலன்றோ உபசாரமாக ஒரு குண முண்மைபோல் பண்டை நூலாசிரியர்கள் கூறியிருக்கின்றார்கள். திதிக்குப் பல குணங்களிருப்பின் அக்குணங்களிலொன்று திதியின் பெயராயிருக்கும்; அங்ஙனமின்றி எண்ணுப் பெயர் மாத்திரமா யிருத்தலின், ஒரு சௌரதினம் தென்மொழியில் 'திகதி' தேதி, என்றிருப்பது போல் ஒரு சாந்திரதினமும் வடமொழியில் 'திதி' ஆயின 'திகதி;யும் 'தேதி'யும் மலைவை ஒக்கும். 'திதி' மசகத்தை யொக்கும்.

இதுகாறுங் கூறிய ஞாயங்களால், சாந்திரமானம் துர்ப்பெலமும், நிலையின்மையும், சுதந்தர மின்மையுமாயிருத்தலின், அவற்றை யொழித்து, சௌரமானத்திலே சுபகன்மம் புண்ணிய கன்மங்களை இனியேனும் நந்தமிழ் மக்கள் செய்துவரும் பொருட்டு வேண்டுகிறேன். சௌரமானிகளாகிய தமிழர்கட்கு நட்சத்திரமே முக்கியம்; சாந்திரமானிகளாகிய பிராமணர்கட்கு திதியே முக்கியம். இனி விரிக்கின் மிகவும் விரியுமென் றஞ்சி நிறுத்துகின்றேன்.

---

## சாம வேதத்தைச்சார்ந்த வஜ்ரசூசிகோபநிஷத்து

### [விருதை சிவஞானயோகிகள்]

### வயிர ஊசியருகணி

ஓம் அறியாமை யொழிக்கும் படையும்
அறிவிலர்க் கிகழ்வும் அறிவுக் கண்ணுடை
யவர்கட் கணியு மாகிய வயிர
ஊசிப் பனுவல் உரைக்கா நின்றனன்.

ரு வன்பிராமணன் சத்திரியன் வைசியன்
சூத்திர னென்றினம் நான்கா மவற்றுட்
பார்ப்பான் முதல்வ னென்று வேத
உரையொத்து மிருதிகளு முரைக்கின்றன
அதிலெஃ தந்தணன் உயிரா? உடலா?

---

பனுவல் :—உபநிடதம்.

க௰ குலமா ? அறிவா ? வினையா ? அறத்தனு ?
என்ற வினுக்க ளுளவா கின்றன.

உயிர் : ஜீவன்

அவற்றுண் முதலாவ தாமுயிர் பார்ப்பான்
எனிலற் றன்று சென்றதும் வருவதும்
ஆம்பல வுடலில் உயிரொரு வடிவா
கரு யிருத்தலி னஃதொன் ருயினு மதற்கு
வினையாற் பலவுடல் வினைதனி னெல்லா
உடலினு முயிரொரு படித்தா யிருத்தலின்
அன்றுயிர் பார்ப்பா னங்ஙன மாகில்.

உடல் : தேகம்

உடல்பார்ப் பானெனி லதுவு மன்று
உ௰ புலையன் முதற்பார்ப் பான்வரை யுள்ள
மக்கட் கைம்பூத வடிவா முடலம்
ஒருவடி வாதலிற் றிரைசாவ றம்மறம்
முன்னைய வொத்துக் காணப் படலின்
பார்ப்பான் வெண்ணிறம் வேந்தன் செந்நிறம்
உரு வணிகன் பொன்னிறம் வினைஞன் கருநிறம்.
என்று நிலைத்த ஏற்பா டின்மையின்
தந்தை முதலியர் உடலைச் சுடலால்
சேய்முன் னவர்க்குப் பெருங்கொலை முதலிய
மறமுண் டாத லின்மையி னுடலம்
௩௰ அன்று பிராமணன் அங்ஙன மாகில்.

குலம் : சாதி

குலம்பி ராமண னெனிலற் றன்று
வேறுகு லங்களிற் பலர்பிறந் துண்மையின்

---

வேந்தன் :—க்ஷத்திரியன்.

சாதி

கபில ரகவல்.

“ பிரமற்குக் - கூத்தி வயிற்றிற் பிறந்த வசிட்டரும்
வசிட்டர்க்குச் - சண்டாளி வயிற்றிற் பிறந்த சத்தியரும்

அங்ஙனம் பலபெரு முனிவ ருளரால்
கலைக்கோட் டுமுனி கலைமா னின்றும்
௩௫ கௌசிகன் தருப்பைப் புல்லி னின்றும்
சாம்பு கன்நரி தன்னி னின்றும்
புகழ்வான் மீகன் புற்றி னின்றும்
வியாதன் செம்படத் தியின்பா னின்றும்
கௌதமன் முயலின் முதுகி னின்றும்
௪௰ வசிட்ட னூர்வசி வயிற்றி னின்றும்
அகத்தியன் கலைய மதனி னின்றும்
பிறந்தன ரென்று பேசப் படலின்
அவர்கட் குக்குலத் தானே யன்றியும்
முற்கா லத்தறி வுணர்த்திய முனிவர்.
௪௫ பலருள ராதலிற் பிராமணன் குலமல

---

சத்தியர்க்குப்-புலைச்சிதோள் சேர்ந்து பிறந்த பராசரரும்
பராசரருக்கு-மீன்வாணிச்சி வயிற்றிற் பிறந்த வியாசரும்
(ஆகிய விந்நால்வரும்)
வேதங்க ளோதி மேன்மைப் பட்டு
மாதவ ராகி வயங்கின ரன்றோ?"

உரைச்சூத்திரம். நாயின் வயிற்றில் பிறந்த சௌனகரும்
கழுதையின் பால்வரு காற்கே யனும்
யானையின் வயிற்றிற் பிறந்த மதங்கரும்
மண்டவ லையில்வரு மாண்டேகியாரும்
வண்ணாத்தி வயற்றில் வந்த நாரதரும்
சூத குலத்திற் றோன்றிய சூதரும்
வரைவின் மகள்மகன் வண்ஜா பாலரும்
ஓதியந் தணருள் ளுயர்ந்தவ ரானார்.

## வேதரிஷிகள்.

சத்திரியரிஷி, மந்தாத்ரி, ஷிவி, வசுமனுன், பிரதர்த்தனன், விசுவாமித்திரன், மதுசந்தனன், ரிஷபன், ரேணு, அம்பரிஷன், பரதன், மேதாநிதி, நாபகன், இரகுகணன், வக்ஷப்பிரியன், புரூரவன், வேனன், சுதாசன், கிருதசமதன், தேவாபி, சந்தரனு முதலியர்.

தாசரிஷி:—கவஷ்ஜலுடன் முதலியர்.

## அறிவு : ஞானம்

௪௬ அங்ஙனமே லறிவு பார்ப்பா னென்னில்
அன்று சத்திரி யன்முன் னவரும்
மெய்ப்பொருள் காணும் மெய்யுணர் வினராய்ப்
பலருண் மையினல அறிவு பிராமணன்.

## வினை : கருமம்.

௫௰ அங்ஙன மேல்வினை பார்ப்பா னெனிலல
எல்லா வுயிர்க்கும் தூய்வினை பொதிவினை
வரும்வினை யென்பன ஒப்பக் காண்டலின்
மாக்கள் வினையால் தூண்டப் பெற்றுச்
செயல்புரி கின்றன ரதனல் வினையும்
௫௫ அன்று பிராமணன் அங்ஙன மாகில்.

---

சங்கரசாதிரிஷி:—கக்ஷீவது முதலியர்.

பெண்பால்ரிஷி:—சசி, சிரத்தை, கோரவி, வாக்கு, லோபாமுத்திரை முதலியர்.

ஜாபாலர்:—சூத்திரர், உபநிடதங்களுக்கு கருத்தாவாயினர் இவர் வேதமியற்றிய அறிஞர்.

## ஞானம்.

தரும வியாதனென்ற வேடன் கௌசிகனென்ற பிராமணனுக்கு ஞானேபதேசஞ் செய்தனன்.

விதுரன் சூத்திரன், ஞானி, பலர்க்கு அறமுணர்த்தினன்.

ஜனகர் அரசர், பலருக்கு ஞான முணர்த்தினர்.

இங்ஙனம் கீழ்க் குலத்தாரில் ஞானிகள் அளவிலர். பலகீழ்க் குலங்களிற் பிறந்த நாயன் மார்களும் ஆழ்வார்களும் மெய்யன்போடு கூடிய ஞானத்தால் எல்லா உயர் வருணத்தாராலும் கோவிலில் வைத்து வணங்கப் படுகின்றனர். அதனல் ஞானம் பிராமணனன்று.

## கருமம்.

கரும மென்பதற்கு ஸ்மார்த்தம் சிரௌதம் (வைதிகம்) என்று பொருள் கொள்ளில் துவிஜர் மூவர்க்கும் அவை யுள.

வேதம்:—(நிஷாதஸ்பதிம் யாஜயேத்)

அறத்தான் : தருமவான்

௫௬ அறத்தான் பார்ப்பா னெனிலற் றன்று
வேந்தன் முதலியர் பொன்னளிப்ப வாய்ப்
பலருண் மையினல வறத்தினன் பார்ப்பான்.

பிராமணன் : அந்தணன்

அங்ஙன மாகில் அந்தணன் யாவன்
௬௰ இரண்டாவ திலது குலமும் பண்பும்
செயலு மில்ல தாறலை[1] யாறியல்[2]
முதலிய குற்ற முற்று மற்ற
துண்மை யறிவின்ப வடிவ மாயது[3]
தனக்கு வேறுபா டில்ல[4] தெல்லா
௬௫ ஊழி[5] கட்கு நிலைக்கள மாய

---

"வேடனையும் தபதியையும் (சிற்பனையும்) வேட்பிப்பாயாக" என்ற சுருதி பலத்தால் அவரும் வேள்விசெய்யத் தக்கவராவர். வேள்வி செய்பவர் அதற்கு அங்கமான பிற கருமங்களும், வேதமோதலும் செய்யத் தக்கவராவர். ஆகவே எல்லா வருணத்தாரும் வேள்வி முதலிய கருமம் செய்பவராதலால் கருமம் பிராமணனன்று.

துவினை - பிராரப்த கருமம்
பொதிவினை - சஞ்சித கருமம்
வரும்வினை - ஆகாமிய கருமம்.

தருமவான்

அக்குரூரன் (யாதவகுலத்தன்) கண்ணன், சிசுபாலன், அரிச்சந்திரன், ஜானசுருதி முதலிய பல வள்ளல்கள் பிற குலத்திலிருந்தனர்; ஆதலால் தருமவான் பிராமணனன்று.

1 ஆறலை: சடூர்மி, உண்ணல், குடித்தல், மகிழ்தல், வருந்தல், மூப்புச் சா விவையாறலை யென்ப.

2 ஆறியல்: சட்பாவம், கருவுறல், பிறத்தல், வளர்தல், விளைதல், தேய்தல், இறத்தல், ஆமிவையா றியல்.

3 உண்மை யறிவின்ப வடிவம்: சத்திய ஞானாநந்த சொரூபம்.

4 தனக்கு வேறுபாடிலது: சுயம் நிர்விகல்பம்.

5 ஊழி: கல்பம்.

தெல்லா வுயிர்க்கு முள்ளிறை யாய[6]
துள்ளும் புறம்பும் விண்போற் பரந்த
திடையி லின்ப வியற்கை யுடைய
தளக்கப் படாதது[7] துய்த்தலொன்று னே
௭௰ அறியத் தக்கது கண்கூ டாக
விளங்கத் தக்க தாகிய வாவியைக்[8]
கையுழி நெல்லிக் கனிபோ னேரிற்
காண்ட லுற்று வினைமுற் றியவன்
காமம் விருப்ப முன்னைய குற்றம்
௭௫ ஒழிந்தவ னடக்க முன்னைய வுடையன்[9]
பொறுமை வேட்கை யாசை மயக்கம்
முதலிய வகன்றோன் பெருமை செருக்கு
முன்னைய பற்று முழுவறி யுடையன்
ஆயுள னெவனவன் இங்ஙனஞ் சொலப்படும்
௮௰ இயல்புடை யவனே பிராமண னென்று
வேதம் மிருதி விரும்பும் புராணங்
களிதி காசங் களின்கருத் தாமால்
பிறிதோர் வகையிற் பிராமணத் தன்மை
கிடைக்கவே மாட்டாது, தன்னை, யுண்மை

---

6 உள்ளிறை: அந்தர்யாமி (௩௫).

7 அளக்கப்படாதது: அப்பிரமேயம்.

3 ஆவி: ஆன்மா.

9 அடக்க முன்னைய வுடையன்: சமாதி சம்பன்னன்.

## இக்கருமத்தை—திருமந்திரம்

*நூலுஞ் சிகையும் நுவலிற் பிரமமோ*
*நூலது கார்ப்பாச நுண்சிகை கேசமாம்*
*நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்*
*நூலுடை யந்தணர் காண நுவலிலே.*
*சத்திய மின்றித் தனிஞானந் தானின்றி*
*ஒத்த விடயம் விட்டோரு முணர்வின்றிப்*
*பத்தியு மின்றிப் பரனுண்மை யின்றியூண்*
*பித்தேரு மூடர் பிராமணர் தாமன்றே,*

அறு யறிவின்ப மாமிரண் டாவ தற்ற
　　பிரம மாக நினைப்பா னாக
　　தன்னை யுண்மை யறிவின்ப மான
　　பெரிய தாக நினைப்பா னாக
　　வெண்ப துப நிடதம் மே.

---

# சிவபெருமானும் செந்தமிழும்

[ஜி. சதாசிவம்பிள்ளை]

(௩௩௨-ம் மக்கத் தொடர்ச்சி)

கண்ணிடந் தப்பிய திண்ண னாரை
நில்லுகண் ணப்ப நில்லுகண் ணப்பஎன்
னன்புடைத் தோன்றல் நில்லுகண் ணப்பஎன்
றடுக்குத் தொடராய் யழைத்ததும் தமிழே
தூசினை யொலிக்கும் நேசர்பாற் சென்று
ஆடை யருளியங் கறைந்ததும் தமிழே
தாதைதா ளெறிந்த சண்டே சுரர்க்குத்
தாதைநா மென்று சாற்றலுந் தமிழே
திருப்பைஞ் ஞீலியிற் செல்லும் வழியிற்
காவும் குளனும் கடிதி னமைத்தே
ஆற்றுணா வருத்தி யப்ப மூர்த்தியின்
இளைப்பை யகற்றியங் கிசைத்ததும் தமிழே
வடகயி லாய மாட்சியைக் காண

---

பெரு நெறியான் பிரணவ மோர்ந்து
குரு நெறியா லுரைகூடி னல்வேதத்
திரு நெறியான திருகை யிருத்திச்
சொரூபம தானோர் துகளில் பார்ப்பாரே.

என்று உணர்த்துகின்றது.

"அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்"　　—திருக்குறள்

என்று விளக்கியது.

வழிநடை கொண்ட வாக்கின் செல்வர்
உடல்குறைந் தாலு முளங்குறை யாமல்
முந்துறுங் காலை முனிவர்போற் றோன்றி
இன்னும்பா மாலை ஏற்கவே யுன்னி
ஐயா றதனி லத்தகைக் கோலங்
காட்டுவோ மென்ற கருணையுந் தமிழே
அம்மையு மத்தனு மல்லா வொருவன்
புனிதவதி யெனும் புண்ணிய வதியை
அம்மே வாவென் றழைத்ததும் தமிழே
திருச்செங் காட்டிற் றிருவடி தோய்வுற
வைரவக் கோலம் வளம்பெறக் கொண்டே
பிள்ளைக் கறியுணும் பேச்செலாந் தமிழே
திருவெண் காடர் செய்தவப் பேறாய்
மருத வாணர் மகவென வளர்ந்தே
பதினா றாண்டு பயின்றதும் தமிழே
தாயுந் தந்தையுந் தனயரு மாகிய
மூவரும் மதுரையில் முறைபுரி நாளில்
வழங்கிய மொழியெலாம் வண்டமிழ் மொழியே
தென்னன் குமரன் திருமுடி தனக்கு
நன்மணி வணிகனாய் நவின்றதும் தமிழே
எல்லாம் வல்ல சித்தராய் மதுரையில்
வல்லமை காட்டி மலர்ந்ததும் தமிழே
ஆசான் மனைமே லாசையோ னங்கம்
வீசி யெறிந்த மேன்மையுந் தமிழே
மீனவன் முன்பு மெய்க்காட் டிட்டே
யூனமில் பரியிவர்ந் துரைத்ததும் தமிழே
மைவிழி யாராம் வணிகப் பெண்கள்பாற்
கைவளை விற்றுக் கரைந்ததும் தமிழே
மதுரையின் வடக்கு வாயிலாற் சோழனைக்
கதிபெறக் காட்டிய கருணையுந் தமிழே
தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்தே
யுண்ணீ ரருத்தியங் குரைத்ததும் தமிழே

பொன்னனை யாள்தம் புகழ்மனை புகுந்தே
தன்னிகர் வாதஞ் சமைத்ததும் தமிழே
மாம னாகவே வழக்குரை யாடித்
தேமெனப் பேசிச் செயித்ததும் தமிழே
விறகு சுமந்து விற்றதும் தமிழே
பாணர் தனக்கும் பகர்தரு மிக்கும்
திருவாய் மலரச் செழித்ததும் தமிழே
மண்ணைச் சுமந்து மாற னடித்த
புண்ணைச் சுமந்து புகன்றதும் தமிழே
ஐயா றதனிற் சைவனா யெழுந்தே
வழக்குரை யாடி மலர்ந்ததும் தமிழே
இன்னுமெம் பெருமா னிவ்வுல கத்தினில்
ஆற்றிய ஆட லனைத்தையும் ஓரின்
செந்தமிழ்ப் பெருமை செப்பவும் போமோ
இவ்வா றுய தெய்வநன் மொழியைச்
சின்னாட் பல்பிணிச் சிற்றறி வுடையரிற்
கலியெனக் கூறுங் காலக் கொடுமையால்
கற்கவுங் கேட்கவுங் கருதா தந்தோ
சோறது கொண்டு பீற லடைக்கும்
இம்மைச் சுகமே மெய்ம்மைச் சுகமென
வேற்றுப் பாஷையை விரும்பிக் கற்றே
அந்நிய நாட்டி லவதரித் தவர்போல்
இன்றுதான் கப்பலில் இறங்கினாற் போலப்
பேசவும் எழுதவும் பிரசங்கம் புரியவும்
பழக்க மிலையெனப் பெருமிதம் பகர்வர்
அறம்பொரு ளின்பம் வீட்டையும் நூற்பெருக்கம்
வடமொழி தென்மொழி வாய்ந்துள போல
எப்பா ஷையிலும் இலையென எண்ணார்

இதனால்

தெய்வத் தியானமே சிந்தையில் வையார்
தான தருமந் தவஞ்செய முயலார்
தீர்த்தயாத் திரைக்குச் செல்லவுந் துணியார்

கோயிலில் நுழைந்து கும்பிட நாணுவர்
நாத்திகம் பேசி நாத்தழும் பேறுவர்
சந்தியா வந்தனந் தான்செய மறந்தார்
அந்நிய மதத்தி லநேகரை விட்டனர்
லலாட சூன்யராய் நாடெலாந் திரிவர்
ஒருமயிர் நீப்பி னுயிர்விடுங் கவரிமான்
அனைய மரபி லவதரித் திட்டவர்
குஞ்சி யழகெனக் கூறு வண்ணம்
முண்டித மெனச்சொல மொய்ம்மயிர் நீக்குவர்
சான்றோர் வகுத்த சாதியா சாரம்
வேண்டுவ திலையென விதண்டைகள் பேசுவர்
பலமதத் தினரொடும் பகருண வுண்பார்
விதவா விவாகம் விதியென விளம்புவர்
ஊக்கமது கைவிடே லெனும நீதிக்
கூக்கந் தருமது வாவென வருந்துவர்
இன்னுமிங் கேயா மியம்புதற் கரிய
அநாசார மெல்லாம் ஆஸ்தியாப் பெற்றனர்
தாயை மறந்தவர் தானுறுங் கேடெலாம்
இவர்களு மடைவரென் றியம்பவும் வேண்டுமோ
ஆதலா லினிமே லாகிலுந் தமிழாம்
பெற்ற தாயைப் பேணுவோ ராகி
உய்யுமின் உய்யுமின் உய்யுமின் னீரே.

---

# வண்ணாரப் பெரியாண்டி

[க. ப. சந்தோஷம். B. A., L. T.,]

(௩௩௬-ம் பக்கத் தொடர்ச்சி)

நல்லதைக்கண்டு மனம் பொறுதவர்களாய் அதைக் கெடுக்க வகை தேடித்திரியும் மாந்தரும், பிறர் புகழைக் கேட்டு உளம் புழுங்கி இழிசொற்கூறுங் கடையோரும், ஒருவனுக்குத் துன்பம் நேர்ந்துழி உவகைகொண்டு பல பிதற்றுங் கயவரும், பிழை காண்பதையே தொழிலாகக் கொண்டு திரியும் குறளிகளும்,

'கரும்பிருக்க இரும்பு கடிப்பரோ டொப்பர்'. கண்ணுக்கினிய நல்லாடை யிருக்கக் கந்தைத்துணியை விழைபவருமுளர்; அவர்கள் செய்கை, "கனியிருக்கக் காய்கவர்ந்தற்று."

ஒருவன் பிறரைப்பற்றி யொரு தீர்மானஞ் செய்யுங்கால் தனது உளப் போக்கைவெளியிடுகிறான். இயற்கையாய் உண்மை பேசு மொருவன் மற்றவர் பேசுவதும் உண்மையென்றுதான் நினைப்பான்; பொய் சொல்லுமொருவன் எவர் சொல்லுவதையும் நம்பான். ஆதலின், உலகில் நன்மைசெய்பவர் ஒருவருமில்லை என்று சொல்லுகிறவன், தனக்கு நல்லெண்ணமும் நற்செய்கையுமில்லை என்பதை வெளியாக்குகிறான். இத்தகைய ஒரு ஆன்மாவின் உளக்கிடக்கையைப் பின் வருமாறு மனோன்மணிய ஆசிரியர் தீட்டுகின்றார்:—

"தருமம் தானம் என்று உலகறியுங்
கருமம் அனைத்துஞ் செய்பவன் கருத்தைக்
காணில் நாணமாம் அவரவர் தமக்கா
எண்ணிய எண்ணம் எய்துவான் பலவும்
பண்ணுவர் புண்ணியம் போல எல்லாம்
தந்நயங் கருதி யன்றித் தமைப்போல்
பின்னொரு வனையெண்ணிப் பேணுவர் உளரோ ?
புண்ணியஞ் சீவகா ருண்ணியம் எனப்பல
பிதற்றுதல் முற்றும் பித்தே."

(முதல் அங்கம் 5-ம் களம் 85-92)

அழுக்கு நிறைந்த உளத்தையுடைய இவர்களை நல்வழிக்குக் கொணரும்பொருட்டு நூல்பல வெழுதிய பெரியோரெல்லாம் ஒருவகையில் வண்ணார்களே யாவர். மக்கள் நெஞ்சில் எழுகின்ற குற்றங்களைக் களைந்து தூய்மை செய்வது நூலோருடைய நோக்கமாதலின் அவர்களை வண்ணார் என்றுசொல்லத் தடையாதுளது ? இதைக் கருத்திற்கொண்டு திருவள்ளுவரும் வண்ணார் இனத்தைச் சேர்ந்தவர் என்று முன் விளம்பினோம்.

உடலை உடைமூடும்; உயிரை உடல்மூடும். உடையின் வெண்மையால் பொதுவாக உடலின் மாசின்மை காட்டப்படும்;

உடலின் அழுக்கின்மையால் உயிரின் தூய்மை பெரும்பான்மை துணியப்படும். இவற்றிற்குள்ள தொடர்பு இவ்வாறிருப்பதால் உடை வெளுக்கு மொருவனுக்கும் உயிர்வெளுக்கு மொருவனுக்கும் ஒப்புமை ஏற்படுகிறது. இதுபற்றியே 'வண்ணாப் பெரியாண்டி' என்று இவ்வுரைக்குத் தலைப்பிடப்பட்டது. அழுக்கேறிய துணிகளைத் தூக்கிக் கொண்டுபோய் ஆவியில் புழுங்க வைத்தும் உவர் மண்ணில் ஊறவைத்தும் வண்ணான் வருந்தி யுழைக்கும்போது, அத்துணிகள், "நாங்கள் செய்த தீங்கு யாது? எங்களை ஏன் வாட்டுகின்றாய்?" என்று கேட்டால், அறிவிலிகளே சும்மா விருங்கள். அழுக்குள்ள நீங்கள் அறிவுடைய மக்கள் உடம்பில் சேரவேண்டுமாயின், என்னுடைய செய்கைக்கு நீங்கள் உடன்படவேண்டும். உங்கள் பொருட்டும் இதை நான் செய்யவேண்டிய திருக்கிறது. அமர்ந்திருங்கள்" என்றல்லவோ பதிலுரைப்பான். "படமுடியா தினித்துயரம் பட்டதெல்லாம்போதும்" என்று புடவைகள் முறையிடும்போது, "பொறுங்கள், பொறுங்கள், கல்லிலறைந்து பிசைந்து பிழிந்து காற்றி லுலர வைக்கவேண்டும்" என்றல்லவோ வண்ணான் சொல்லுவான். மக்களுடம்பிற் சேரும் பேறு கிடைப்பதற்காக ஆடைகள் இவ்வாறு வண்ணானல் மிகுதியும் அடியும் படுகின்றன. இறைவனோடு சேரும் பேறு எய்துதற்காக உயிரும் உதையும் மிதியும் உண்ணவேண்டியதாகிறது. கறைப்பட்ட உயிர் தன்னோடு சேர்வதற்காகாது; என்ன செய்வான் வண்ணாப் பெரியாண்டி? உயிர்களின் நிலைமையைக் கண்டிரங்கி, ஆவியில் புழுங்க வைத்தும் வெயிலிற் காயவைத்தும் அவற்றைத் தூய்மைசெய்து தன்பாற் சேர்க்க முயல்கின்றான். அவைகள் பிழைப்பதற்காக அவைகளைத் தப்புகிறான். ஏழை யுயிர்கள் இதையறியாது ஏங்கிப் புலம்புகின்றன.

முற்றும்

# குழந்தைகள் பால்மாந்தக் கட்டி

[P. A. முத்துத்தாண்டவராய பிள்ளை]

(௩உஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

தாய்ப்பால் முதலியவற்றில் இருக்கும் ஜலாம்சம் முதலியவற்றைக் காட்டும் அட்டவணை

| In 100 parts. 100-ல் | Water ஜலம் | Proteids உணவுப் பொருள் | Fat நெய்ப் பொருள் | Lactose மாப்பண்டம் சர்க்கரை | Salts உப்பு |
|---|---|---|---|---|---|
| *Human milk தாய்ப்பால் | 88·90 | 3·42 | 3·33 | 4·55 | 0·21 |
| Ass's கழுதைப்பால் | 89·01 | 3·57 | 1·85 | 4·50 | 0·55 |
| Cow's ,, பசுப்பால் | 87·5 | 4·21 | 3·82 | 3·67 | 0·71 |
| Goats' ,, ஆட்டுப்பால் | 86·85 | 3·70 | 4·34 | 3·78 | 0·65 |
| Buffalo's ,, எருமைப்பால் | 84·10 | 4·00 | 7·10 | 4·00 | 0·80 |

Components of Human Milk, சிற்சில சமயங்களில் சிற்சில தாய்ப்பாலிலுள்ள ஜலாம்சம் முதலியவற்றைக் காட்டும் அட்டவணை.

| | | | |
|---|---|---|---|
| Water=ஜலம் | 87.24 | to | 90.58 |
| Carbohydrates=மா. சர்க்கரை | 3.15 | to | 6.09 |
| Fat=நெய்ப் பொருள் | 2.67 | to | 4.03 |
| Proteid matters (curd)=உணவு | 2.91 | to | 3.92 |
| Salt=உப்பு | 0.14 | to | 0.28 |

நெய் வஸ்து எருமைப் பாலில் அதிகமாய் இருப்பதால் அதைக் கையாடாது விடுதலே மேலாம். மாதுளம் பழம்போன்ற பழங்களின் சாற்றைப் பிழிந்து ஜலம் சேர்த்து எப்போதேனும் கொடுக்கலாம். குழந்தை பிறந்தது முதல் ஒருவயது ஆகிறவரை

யிலும் அதற்கு மேலும் ஆகாரம் ஊட்டவேண்டிய காலத்தையும் அளவையும் திட்டப்படி அறிந்து அதன்படி நடந்து வரல் வேண்டும்.

தாய்ப்பால் அருந்த வேண்டிய காலம்:—

| | பகல் 7A.M. to 9 P.M. | | இரவு 9 P.M. 7A.M. | தினம் ஒன்றுக்கு |
|---|---|---|---|---|
| முதல்நாள் | 6 | 4-மணிக்கொருதரம் | 1 | 4 |
| இரண்டாம் நாள் | 4 | ,, | 1 | 6 |
| மூன்றும் நாள் முதல் ௴ முடிய | 2 | ,, | 2 | 10 |
| 3-ம் ௴ முடிய | $2\frac{1}{4}$ | ,, | 1 | 8 |
| 5-ம் ௴ முடிய | 3 | ,, | 1 | 7 |
| 12-ம் ௴ முடிய | 3 | ,, | 0 | 6 |

மூன்று மாதக் குழந்தைக்கு ஒரு வேளைக்குக் கொடுக்க வேண்டிய அளவு ஆறு முதல் எட்டு தேக்கரண்டி. ஆறுமாதக் குழந்தைக்கு பத்து முதல் பன்னிரண்டு தேக்கரண்டி. இவ்வாறே பொருந்தியபடி நிதானித்து அளவு அறிந்து அருத்துக.

### குழந்தைகளுக்கு அருத்தவேண்டிய கால அளவு

| முதல் வாரம் | இரண் டாம் வார ம் முதல் | இரண் டாம் மா தம் | மூன்றும் நான்காம் மாதம் | ஐந்தாம் மாதம் | ஆறுமுதல் ஒன்பது மாதம் | பத்தாம் மாதம் |
|---|---|---|---|---|---|---|
| | | | காலை நேரம் | | | |
| 2 | 2-30 | 2-30 | | | | |
| 6 | 6 | 6-30 | 6-30 | 7- 0 | 7- 0 | 7- 0 |
| 8 | 8 | 8-30 | 9- 0 | 9-30 | 10- 0 | 10- 0 |
| 10 | 10 | 10-30 | 1-30 | 12- 0 | | |
| 12 | 12 | | | | | |
| | | | பிற்பகல் | | | |
| 2 | 2 | 12-30 | 2- 0 | 2-30 | 1- 0 | 1- 0 |
| 4 | 4 | 2-30 | 4-30 | 5- 0 | 4- 0 | 4- 0 |
| 6 | 6 | 4-30 | 7- 0 | 7-30 | 10- 0 | 7-30 |
| 8 | 8-30 | | 9-30 | 10- 0 | | |
| 10 | 10 | | 11- 0 | | | |

## B. மருந்துமுறை

### 1. ஆங்கில வைத்தியம்

தற்காலம் பெரும்பாலும் நகரங்களில் வசிக்கும் கனவான்கள் ஆங்கில வைத்திய முறையைக் கையாண்டு வருவதாலும்; அம்முறை சுலபமாகக் கிடைப்பதாலும், முதலில் அவர்களுக்கேற்ற பரிகாரங்களைக் கூறுவோம். மலச்சிக்கலை நிவர்த்திசெய்ய ரூபார்ப், காஸ்காராஸக்கரசா, ஹைட்ராஜ்கம்கிரிடா, கலோமல் மருந்துகளைக் கொடுக்க, குடல்விஷமிக்காமலும், காமாலைவராமலும் பார்த்துக்கொள்க. சோடியம் பாஸ்பேட், சோடியம் சல்பேட் முதலிய சலைன் பேதி மருந்தும், ஹன்யாடி ஜானுஸ் மிரைல் வாட்டரில் கால் அவுன்சும், கால்ஸ்பார்ட் உப்பில் 15-தானியமணியளவும் கொடுக்க. 15-துளி விளக்கெண்ணெய் அல்லது கிளிசெரெயின் ஆசனவாயிற் பீச்சலாம். ஈரல் கெட்டுப்போகாமலும், கெட்ட ஈரலைப் புதுப்பிக்கவும், காஸ்மேக் என்ற மருந்தை 5-முதல் 10-சொட்டுவரை வயதுக்கேற்றபடி கொடுக்க. மெமோராண்டி காஸாம்ஸியா என்னும் இலையின் சாறு 60-சொட்டுவரை கொடுக்க. காமாலை கண்டால் பித்தநீரை விருத்திசெய்யக்கூடிய பேதி மருந்துகளையும், சுரத்தோடு மஞ்சள் காமாலை கண்டால் உப்புபேதிமருந்துகளையும் கொடுத்து, ஆவிப்புகை பிடித்துவரல்வேண்டும். இம்மருந்துகள் ஆங்கிலவைத்தியர்களிடம் கிடைக்கும். அவர்கள் சொல்லும் யோசனையைக் கேட்டு இந்த மருந்துகளை அவர்கள் பார்வையில் உபயோகித்துவர நோய் தீர்ந்து இளங்குழந்தை சுகம் அடையும்.

### 2. சித்தௌஷத வைத்தியம்

இனி, இந்நாட்டிற் பூர்வந்தொட்டு வழங்கிவரும் ஆயுர்வேதாதி சித்தௌஷத முறைகளின்படி சில சிகித்ஸா விதிகளைக் கூறுவோம். ஆயுர் வேத முறைக்கும் யூநாநி முறைக்கும் அதிக வித்தியாசம் இல்லை. சித்தர் முறையில் தாய்ப்பால் மட்டும் அருந்தி வளரும் குழந்தைகளுக்குச் செய்யும் ஸிகித்சை பெரும்பாலும் தாய்களுக்கேயாகும். தாய்ப்பாலுடன் வேறு ஆகாரங்களும் உட்கொண்டுவரும் குழந்தைகளுக்குச் சிகித்ஸை இருவர்

களுக்குமே செய்யப்படும். நெடுங்காலமாக ஆயுர்வேத யூநாநி தமிழ் முறைகள் ஒன்றோடொன்று கலந்துபோயின. இக்காலத்தில் ஆங்கில முறையும் அவ்வாறே கலந்து வருகின்றது. 'குண மது கைவிடேல்' என்னும் ஆத்திசூடி வசனம்போல் எந்தமுறை குணமாகத் தோன்றுகிறதோ அந்த முறையைக் கையாடி நோய்க்கிடங்கொடாமல் இருத்தல் வேண்டும். யகுருதுதா ரோகம் ஆங்கிலகுணபாடத்தில் (Nosology) ஸ்தான ரோகங்களில் பக்குவாசய வியாதிகளுள் யகுருத் ஸ்தானத்திலுண்டாகும். ஈரற்பெருக்கமும் அதன்பின் நேரும் ஈரற் சிறுத்தலுமெனப்படும். குணவாகடத்தில் இந்நோயானது அநாகத ஸ்தானத்தில் ஜீர்ணாசயங்களில் ஒன்றாகிய கல்லீரலில் உண்டாகும் வியாதியெனக் கண்டிருக்கிறது. உட்கொள்ளும் ஆகாரத்தைப் பக்குவப் படுத்திப் போஷண சோஷணமாக்குவதற்கேற்ற பித்தநீரைக் கல்லீரலில் உண்டாக்கி, உணவுப் பொருளில் உள்ள விஷத்தன்மை முதலியவற்றைக் கழித்து, தேக அனலைப் பாதுகாத்தற்கு வேண்டிய சர்க்கரையை உற்பத்திசெய்து, இரத்தத்திலிருந்து சிறு நீரைப் பிரித்து வருவதனோடு கருப்பைக்குள் இருக்கும் பிண்டத்தையும், பிறந்தபின் வளரும் இளஞ்சிசுவையும் பராமரிக்கும் தன்மையில் அவற்றின் இரத்தத்தில் செவ்வணுக்களை (Red Corpuscles) விருத்தி செய்யும் (Physiology) பித்தவாத சிலேத்துமங்கள் என்ற திரி நாடிக்குள் (The creative, preservative, and destructive principles of Dhatris) அநாகத ஸ்தானமானது பித்தத்திற்கு ஸ்வக்ஷேத்திரமா யிருப்பதால், அதனோடு வாத சிலேத்துமங்கள் சமநிலையாக (Equilibriun) இருக்குமளவும் யகுருதுவானது தன் தொழிலைத் திருந்தச் செய்துவரும்.

(தொடரும்)

---

## மதிப்புரை

### திருவருட்பயன், கோடிக்கவி

இவை பேட்டை திருவாளர் ஆ. ஈசுரமூர்த்தியா பிள்ளையவர்கள் எழுதிய பதவுரை, கருத்துரைகளுடன் கூடியன. சிறிது தமிழ் கற்றாரையும் தெளிவுபடுத்த வல்லன. (எம்மிடம் கிடைக்கப்பெறும்).

விலை அணா 8.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்
திங்கள் தோறும் வெளிவருவது

சிலம்பு ௪ } மெய்கண்டான் யாண்டு-௭௱௩ புரட்டாசித்திங்கள் 1926ஹு செப்டம்பர்மூ—அக்டோபர்மூ { பரல் ௩

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## இல்லற இயல்பு

[திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், எம். ஏ., எம். எல்.]

எல்லாவுயிர்களும் இன்ப வாழ்க்கையையே விரும்புகின்றன. இவ்வுலக வாழ்க்கையிலே மனிதர் பெறக்கூடிய உயர்ந்த இன்பம் இல்லறத்தின்கண் அமைவதினுலே, ஔவையார் "இல்லறம் அல்லது நல்லறம் அன்று" என்று மொழிந்தார். உயர்ந்த இன்பம் கணவனும் மனைவியும் ஒத்து வாழுதலால் ஏற்படும். ஒத்த வாழ்க்கைக்குக் காரணம் ஒத்த அன்பே. அன்பென்

பதைத் திருவள்ளுவர், இல்லறத்திற்கு உயிராகக் கருதி அதற் குரிய சீலங்களுள் அன்புடைமையைத் தலைமையாக வைத்தமை கவனிக்கத்தக்கது. 'அன்பின் வழியது உயிர்நிலை', என்றதும் அக்கருத்தை விளக்கும்.

அன்பே, இல்லறம் நடத்தும் இருவரும் உயரிய வாழ்க்கை நலம் துய்ப்பதற்கும், பிறர் யாவர்க்கும் நன்மை செய்வதற்கும், அடிப்படையாக வேண்டப்படும்.

> " காதல் மனையாளும் காதலனும் மாறின்றித்
> தீதிலொரு கருமஞ் செய்கவே "

என்றார் சிவப்பிரகாச சுவாமிகள். தலைவன், தலைவியாகிய இரு வரும் நற்குண நற்செய்கைகளையுடையவரானால், அவர்கட்குள்ள அன்பு எக்காலத்தும் நிலைபெறும்.

மனையாளுடைய சிறந்த மனப்பான்மையே வீட்டுக்கு மங் கலமென்று சொல்லப்படும். ''மங்கலமென்ப மனைமாட்சி' யென் றதுங் காண்க. இல்லறம் செவ்வையாக நடைபெறுவதற்குக் காத லியே முக்கிய காரணமாதலால், இல்லாள், மனையாள், மனைவி யென்ற பெயர்கள் அவளுக்கே அமைந்துள்ளன. நாட்டினை அர சன் ஆளுவதுபோல, வீட்டினை ஆளுகிறவள் பெண்மணியே. வாழ்க்கைக்கு வேண்டிய பொருளினைத் தேடுதல் ஆடவனது கடமையெனினும், அப்பொருளைக்கொண்டு எல்லாவித நலன்களை யும், அறங்களையும் இயற்றுவது மனைவியின் கடமையே. அவளே நாயகனுக்கு அன்னைபோல அறுசுவை உண்டி அளிப்பவள்; அடி யாள் போலப் பணிவிடை செய்பவள்;

> " கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
> ஒண்டொடி கண்ணே யுள "

என்றபடி ஐம்புலனுக்கும் சிறந்த நலன் கொடுப்பவள்; அருட் பாடல்களை இன்னிசையொடு பாடுதலாற் கடவுட்பத்தியை விளைப் பவள் ; கணவன் நோயுற்றகாலத்தே தனது மெய்வருத்தம் பாராது, உணவு, துயில் முதலியவற்றை ஒழித்து இராப்பகலாக

அவனது உடம்பைப் பாதுகாப்பவள்; செருக்கினால் அவன் தவறு செய்தாலும் தனது தகுதியால் அதனைப் பொறுத்து அவனை வெல்பவள்; 'தற்கொண்டான் வளத்தக்காள்' என்றபடி, கணவனது வரவுக்குக் குறைவாகச் செலவுசெய்து மிச்சம் வைப்பவள்; தக்க மந்திரிபோல் இடர்நீக்கும் தந்திரம் உரைப்பவள்; கணவனது குற்றத்தை மறைத்துக் குணத்தைப் பாராட்டுபவள்; தனது சீர்மையால் அவனது ஆண்மையைப் போற்றுபவள்; வாழ்விலும், தாழ்விலும் கண்ணகிபோலக் கணவனுடன் சென்று, உற்றுழி யுதவி அவனது நற்றிறம் விளக்குபவள்; செம்மையாகத் தன்னைக் காத்துத் தனது கற்பினால் நினைத்தது கைகூடச்செய்வாள்.

கற்புடை நங்கையர் நினைத்தது, கைகூடு மென்பதைத் தெய்வப்புலமைத் திருவள்ளுவர் 'பெய்யெனப் பெய்யுமழை' என்று குறிப்பித்தார். புனிதவதி என்னும் காரைக்காலம்மையார், தனது கணவன் கொடுத்த இரண்டு மாம்பழங்களில் ஒன்றினை கணவனுக்கு முன் விருந்தினராய் அருந்திய அடியவர்க்குப் படைத்த பின்னர், மற்றொன்றினைக் கணவன் இலையில் இட்டனர். இட்ட கனியின் சுவைமிகுதி கண்டு அடியவர் புசித்தது அறியாது மற்றொரு கனியையுங் கேட்கவே, புனிதவதியார், சிவபெருமான் திருவடிகளைத் தன் உள்ளத்திற்கொண்டு, இன்னும் ஒருகனி வேண்டுமென்று நினைத்ததும், அவள் கையிற் சுவை முதிர்ந்த கனி யொன்று வந்து தங்கியது. அதனைக் கணவனுக்கு இட, அது முந்திய கனியினும் மிக அதிகமான சுவையுடையதாகக் கண்டு 'இதனை எங்கே பெற்றாய்' என்று புனிதவதியாரை வினவினான். அவள் தனக்குத் திருவருளால் அது கிடைத்ததென்று கூற நாணி;சிறிது காலந்தாழ்த்து உண்மை சொல்வதே தன் கடன் என்று எண்ணி நடந்ததை மொழிந்தாள். கணவன் அதைக் கேட்டு மிக்க வியப்படைந்து, அங்ஙனமாயின் இன்னுமொரு கனி வருவித்துக் கொடுக்கவேண்டு மென்றனன். மனைவியாரும் சிறிது அகன்று போய்த் தன்சொல் பொய்யாகாத வண்ணம், மற்றொரு கனி தரும்படி கடவுளை வேண்ட, அவ்வாறே மீண்டும் ஒரு மாங்கனி அவள் கையில் வந்தடைந்தது. அதனைக் கணவன் கண்டு அதிசயித்து அவளைத் தெய்வமாகப் பாராட்டி

னன். இக்கதையினுல் கற்புடைமங்கையின் நிறைமொழி நன்கு விளங்கும்.

இனி, குழலினும், யாழினும் இனிய மழலைச்சொல்லையுடைய நன்மக்களை வருந்திப்பெற்றுப் பாலூட்டித் தாலாட்டிப் பண்பும் பயனும் பெறுவிப்பவள் மனைவி தானே. குழந்தைகளுக்குத் தாயிற் சிறந்த கோயிலுமில்லையன்ருே ? தம்மக்கள் சான்ருே ரெனக் கேட்டபோது அவர்களை ஈன்ற பொழுதினும் அதிகமான மகிழ்ச்சியடையும் தாயின் பெரு நன்றிக்குக் கைம்மாறும் உண்டோ? 'அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்' என்ற விடத்து அன்னையையன்ருே ஔவையார் முதற்கண் எடுத்துரைத்தார். குழந்தைகட்குத் தந்தையைக்காட்டுவது தாயன்ருே? 'தாயுடன் சென்றுபின் தாதையைக்கூடி' என்றதுங் காண்க. கடவுளையும் பெரியோர்கள் தாயாகக் கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. தாயுமானவர் என்பது அவர் திருப்பெயர்களுள் ஒன்றல்லவா?. அப்பர்சுவாமிகள் "ஈன்ருளுமா யெனக்கெந்தையுமாய்" என்றும், மாணிக்கவாசக சுவாமிகள் 'மூவேழு உலகுக்குந்தாயே' என்றும் 'அன்னையெனக் கருளியவா ரார் பெறுவார்' என்றுந் திருவாய் மலர்ந் தருளியதுங் காண்க. நாட்டின் நலம் விரும்புபவர் நாட்டினைத் தாயென வழங்குதல் வெளிப்படை. வந்தே மாதரம் என்பதற்குத் தாயை வணங்குகிறேனென்பது தானே பொருள்?

நாயகனுக்கும் குழந்தைகளுக்கும் பெண்டிர் செய்யும் நன்மைகள் ஒருபுறமிருப்ப, அவர்கள் உற்ருருக்கும் மற்ருருக்கும் பேருபகாரம் செய்தற்குரியரென்பதுங் கவனிக்கத்தக்கது. கணவனுக்குத் துணைநின்று வயது சென்ற மாமன் மாமிகளுக்குப் பணிவிடை செய்தலும், அவர்கட்கு நல்லுணவளித்தலும், ஏனை உறவினரை வரவேற்று உபசரித்தலும் மனைவியின் கடமைகளே. மனைவி முகஞ்சுழித்தால் சுற்றத்தாரோடு அளவளாவுதல் கணவனுக்கு எவ்வாறு இயலும்? வறியவர்களாயும், தக்கவர்களாயும், பசித்து வரும் விருந்தினர்களுக்கு வேண்டியன கொடுத்தலும், அன்னமிடுதலும் மனைவியின் துணையின்றி எவ்வாறு முடியும்? "இருந்தோம்பி யில்வாழ்வதெல்லாம், விருந்தோம்பி வேளாண்மை

செய்தற் பொருட்டு'', என்றமையால், விருந்து ஓம்புதல் இல் வாழ்வாரின் முக்கிய கடமையென்பது தெளிவு. ஆதரவில்லாமல் புதிதாக வந்தவர்கள் சிறப்பாக விருந்தினரென்று அழைக்கப்படு வார்கள். முன் அறிமுகமானவர்கள் ஆதரவு கருதி ஒருக்கால் வந்தால், அவரும் விருந்தினராவர். இவ்விருவகையாரையும் இன் சொற்கூறி, உணவளித்து உபசரித்தல் ஒரு பெரிய தருமமாகும். கூனர், குருடர், முடவர், வேலைசெய்ய இயலாதவர் முதலிய வறியவர்களுக்கு வேண்டுவன கொடுத்தலே ஈகையென்னும் அற மாகும். ஈகையினுலே புகழும், புண்ணியமும் உண்டாகும். ''ஈதல், இசைபடவாழ்தல் இதுவல்லது, ஊதியமில்லை உயிர்க்கு'' என்ற மையால் இல்வாழ்வோர் ஈகையாளராய் இருத்தற்பாலர். பொருள் தேடியவன் அதனை ஊனமின்றி வைப்பது எப்படி யென்றால், வறியவர்களது பசியைத் தீர்ப்பதினுலேயேதான்.

> ''அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
> பெற்றான் பொருள் வைப்புழி''

என்றதுங் காண்க. பசி தீர்த்தலாகிய செய்கை இல்லாளால் நிகழவேண்டியதன்றோ? பசிப்பிணி எல்லா வுயிர்க்கும் உண்டு. ஐயமெடுத்துக் கற்கும் மாணவரும் துறவிகளும் இல்வாழ் வாரது வண்மையையே எதிர்பார்த்திருப்பார்கள். ஓதுவார்க்கு உண்டி அளித்தல், முப்பத்திரண்டு அறங்களுள் ஒன்றாகக் கூறப்பட்டது. முப்பத்திரண்டு அறங்களும் வறியவருள் யார் யார்க்கு எது எது வேண்டுமோ அவ்வப்பொருளைக் கொடுப் பதினுள் அடங்கும். உமையம்மையார், ஒருகாலத்தில் காஞ்சிமா நகரத்திலே இவ்வறங்களனைத்தும் இயற்றியதாகப் புராணங் கூறுகின்றது. 'கச்சி அறம் வளர்த்தமாதர்' என்றனர் உமாபதி சிவாசாரியர். வள்ளன்மையிற் சிறந்த வேளாளரைப்பற்றிக் கூறுமிடத்து திருஞான சம்பந்தப் பெருமான் 'இன்மையாற் சென்று இறந்தார்க்கு இல்லை யென்னாது ஈந்து உவக்குந் தன்மையாம்' என்று வியந்து உரைத்தது காண்க. இல்வாழ் வார் இன்சொல்லை விளைநிலமாகவும், ஈதலை வித்தாகவுங் கொண்டு கடுஞ்சொற்களாகிய களைகளைக் களைந்து வாய்மையாகிய உரத்

தைப்பெய்து, அன்பாகிய நீரைப் பாய்ச்சி, அறமாகிய கதிரை உண்டாகும்படி முயற்சிசெய்ய வேண்டுமென்று நீதிநூல் கூறுகின்றது.

உதவி பெறுகின்றவர்களுடைய தகுதிக்குத் தக்கபடி உதவி செய்பவர்களுக்குப் பெரும்பயன் விளையும். சிவஞானிகளாகிய துறவிகளுக்கு உணவளிப்பதால் உளதாம் புண்ணியத்திற்கு அளவில்லை.

எக்குலத்தாராயினும் கடவுளிடத்தில் அன்பு செலுத்துபவரே வழிபாட்டிற்கு உரியவராவர். "புலையரேயெனினும் ஈசன் பொலன்கழலடியிற் புந்திநிலையரேல், அவர்க்குப் பூசை நிகழ்த்துதல் நெறியே என்றும், தலைவரே யெனினும் ஈசன் தாமரைத் தாளில் நேசம், இலரெனின் இயற்றும் பூசைப்பலன் தருவாரே யாரே" என்பது சிவதருமோத்திரம். சிவனடியார்க்கு அன்னமளிப்பதை மிகவுஞ் சிறப்பாகப் பெரியோர்கள் கூறியிருக்கின்றார்கள். அடியவர் பூசை இயற்றுங்கால், காதலனும், காதலியும் ஒத்த மனத்தினரா யிருத்தல் வேண்டும். நற்செயல்கள் எவற்றினும் ஒருவர் கூறுவதை மற்றொருவர் தழுவி நடத்தல் வேண்டும். இருவரும் ஒருமைப்பட்டுச் சிவதருமங்கள் செய்தமைக்குச் சிறந்த உதாரணங்கள் பேரியபுராணத்திலே காணப்படும். அப்பூதி அடிகளென்னும் நாயனர் திருநாவுக்கரசர்க்கு மகேசுரபூசை செய்யக் கருதியகாலை, தமது புதல்வன் பாம்பின் வாய்ப்பட்டு உயிர்விட நேர்ந்ததும் அதனைச் சற்றுங் கவனியாது நாவுக்கரசரை அமுது செய்விப்பதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்தார். அப்போது அவரது மனைவியாரும் தமது கணவரின் குறிப்பின் வழியேநின்று மனக்கலக்கங் காட்டாது தொண்டர்க்கு மகேசுரபூசை செய்யத் துணைநின்று முயன்றது மிகவும் போற்றத்தக்கது. கணவர் குறிப்பறிந்து அவர் இல்லாதபொழுது வந்த அடியவர் பலர்க்கும் ஆசிரியர் சிவஞான சுவாமிகளது அன்னையாராகிய மயிலம்மையார் இன்னமுதூட்டிய அருஞ்செயல் மிகவும் பாராட்டத்தக்கது. அதனை வியந்து ஸ்ரீமத் சுவாமிகள் தமது ஐந்தாம் வயதிற் செப்பிய வெண்பா மிகவும் வனப்பு வாய்ந்தது.

"அருந்ததி யென்னம்மை யடியவர் கட்கென்றுந்
திருந்த வமுதளிக்குஞ் செல்வி—பொருந்தவே
ஆனந்தக் கூத்தரகமகிழத் தொண்டு செயு
மானந்த வாத மயில்"

பொருட்குறைவு ஏற்பட்ட காலத்தும் அடியார்க்கு அமு தூட்டுவதிலே கணவனுக்குச் சிறிதும் பின் வாங்காமல் மேம் பட்டவள் இளையான்குடிமாற நாயனார் மனைவி. இளையான்குடிமாற நாயனார் மிக்க செல்வராயிருந்து மிக்க வறுமையுற்றார். வளஞ் சுருங்கினும் மனஞ்சுருங்காத அந்நாயனாரும் அவரது மனைவியும் பகல் முழுவதும் உணவின்றி இரவிற் கதவடைத்த பின்னர் ஓர் அடியவர் விருந்தாக வந்தனர். அவர் மழையில் நனைந்து மிக்க பசியோடு வந்தமையால், அவரது திருமேனி மேலுள்ள ஈரத் தைத் துடைத்து அவருக்கு உணவளிப்பது எவ்விதமென்று நாய னார் தன் மனைவியாரோடு ஆலோசித்தனர். மனைவியார் பகலிலே விதைத்த செந்நெல், வயலிற் பெய்த மழைநீரில் மிதக்கும்; அதனை வாரிக்கொண்டுவந்தால் அமுதாக்கலாமென்றனர். உடனே கணவர் நள்ளிருளிலே வயலுக்குச்சென்று அவற்றை வாரிக் கொண்டு வந்தனர். அடுப்பு மூட்டுவதற்கு விறகில்லாமையால் இறப்பில் ஒருபகுதியை அறுத்து அடுப்பிலே மாட்டி முளைவித் தினை வறுத்து அரிசியாக்கி, கறிக்காகக் கணவர் குழிகளிலுள்ள குறும் பயிர்களைத் தடவிப் பிடுங்கிக் கொண்டுவந்து கொடுக்க இல் லக் கிழத்தியார் தமது திறமையினால் வெவ்வேறு கறியமுதாக்கி அடியவரை அமுது செய்தருளவென்றார். அடியவராய் வந்த கடவுள், அருட்பெருஞ்சோதியாய் அவருக்குத்தோன்றிக் குபே னும் அவர்கள் சொல்வழி நிற்கத்தக்க உயர்ந்த செல்வத்தையும் நிறைந்த இன்பத்தையும் நல்கியருளினர். விருந்தோம்புதலில் இந்நாயனாரும், அவர் மனைவியாரும் உலகத்தில் அழியாத புகழை நாட்டினர். "இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென் இல்லவள் மாணாக்கடை" என்னும் திருக்குறளின் பொருளை உல கத்திற்குத் தமது வாழ்க்கையால் விளக்கினவர் இந்நாயனாரது மனைவியாராவர்.

இல்லறம் நடாத்துவோர் இனிது வாழ்தற்குக் குடும்பத்தார் பலரும் ஒற்றுமையாக இருக்கவேண்டும். கணவனுடைய தாய் தந்தையர் தங்கள் மருமகளைத் தங்கள் குழந்தைகளைப்போல் அன்போடு நடத்தவேண்டும். கணவனும் மனைவியும் அவர்களைப் பேணுவதில் ஒத்த கருத்துடையவர்களா யிருத்தல் வேண்டும். அணி, ஆடை முதலியன கணவனது செல்வநிலைக்கு ஏற்றவாறு அமைதற் குரியனவாதலால் அவற்றின் பொருட்டுக் கணவனை மனைவி வருத்தலாகாது. "போதுமென்ற மனமே பொன் செய்யு மருந்து." கணவனும் தனது அளவிற்கேற்ப மனைவியை ஆடை நகை முதலியவைகளால் மகிழ்விக்கவேண்டும். இருவரும் ஒருவருக்கொருவர் ஆதரவாயிருத்தல்வேண்டும். ஒருவர் மற்றொருவர் குறைகளை அயலார்க்கு வெளிப்படுத்தலாகாது. வீட்டு வேலைகளை மனைவி செவ்வையாக நடத்தவேண்டும். அவள் வேலைபார்க்க இயலாத காலத்துக் கணவன் அவளை வருத்தலாகாது. இவையும், பிற விதிகளும் இல்லமாகிய அரசாங்கம் சிர்பெற நடத்தற்குரிய சட்டங்களாகும். சிவபெருமான் சத்தியும் சிவமுமாக வீற்றிருத்தல் உலகத்திலுள்ள எல்லா வுயிர்களும் ஆணும் பெண்ணுமாய்க் கலந்து இன்புறுதற் பொருட்டேயாம்.

> "சத்தியுஞ் சிவமுமாய தன்மையிவ் வுலகமெல்லாம்
> ஒத்தொவ்வா வாணும்பெண்ணு முணர்குண குணியுமாகி
> வைத்தனன் அவளால்வந்த வாக்கம்இவ் வாழ்க்கையெல்லாம்.'

என்றது சிவஞான சித்தியார். திருநாவுக்கரசு நாயனாருக்குத் திருவையாற்றில் அவ்வாறு திருக் கயிலையில் வீற்றிருப்பதாகத் தமது திருக்கோலங் காட்டியருளினர்.

> "வெள்ளிவெற்பின்மேன் மரகதக்கொடியுடன் விளங்குந்
> தெள்ளு பேரொளிப் பவளவெற்பென இடப்பாகங்
> கொள்ளுமாமலை யாளுடன்கூட வீற்றிருந்த
> வள்ளலாரைமுன் கண்டனர் வாக்கின் மன்னவனார்."
>
> —பெரியபுராணம்.

அறுபத்து மூன்று நாயன்மாருள், மனைவியோடு வாழ்ந்தோர்க்குக் கடவுள் மங்கைபங்கனாகத் தோன்றியருள் புரிந்தனர்.

எல்லா ஆலயங்களிலும் வெளியே எழுந்தருளும் மூர்த்தம் உமா மகேசுவர மூர்த்தமேயாம். "போகம் ஈன்ற புண்ணியன்" என்றதும் இக்கருத்துப் பற்றியே. பொன்னு மெய்ப்பொருளுந் தருவானும் போகமுந் திருவும் புணர்ப்பானுமாகிய ஆதிபகவனது திருவருளால் இல்வாழ்க்கை உலகின்கண் இனிது நடப்பதாக.

"மண்ணினல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணினல்ல கதிக்கி யாதுமோர் குறைவிலைக்
கண்ணி லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே."

---

# நாகர்

[திரு. M. S. பூரணலிங்கம்பிள்ளை யவர்கள், B.A., L.T.]

இந்தியாவில் நாகர் ஒரு வகையார், இவ் வகுப்பார் வட கீழ்ப்பாகங்களில் வதிந்திருந்தனரென்ப. நடு மாகாணத்தில் நாகப்பூரும் ,தஞ்சைத் துறைமுகமாகிய நாகபட்டினமும் நாகரின் ஞாபகத்தை மூட்டுகின்றன. யாழ்ப்பாண மென்ற இலங்கைப் பகுதி நாக தீவகமா யிருந்த தென்று அறியக் கிடக்கின்றது. இலங்கையின் மேற்றிசையில் நாகர் கோயிலுளது. இலங்கைக் கெதிரான திருவிதாங்கோட்டின் கீழ் கரையிலும் நாகர் கோயிலெனும் பட்டணமுளது. நாகரிகம் (நாகர் + இகம்) நாகருலகம். உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே யாதலின் நாகருலகின் ஒழுக்கம் நாகரிகமாயிற்று. கண்ணோட்டம் அகநாகரிகமாம். நாகரி எழுத்துக்கள் நாகருடைய எழுத்துக்கள் போலும். அக நாகரிகமும் புறநாகரிகமு மிக்கார் நாளடைவில் நாளடைவில் அவற்றை யிழந்து தாழ்தலு முலக வியற்கை. அவ்வாறு தாழ்ந்த நிலைமையில் நாகர் அநாகரிகராக மதிக்கப் பெறுகின்றனர். நாகப் பெண்மணிகள் அழகு அமைப்பு ஆற்றல் மிகுந்தவர்கள். அர்ச்சுனன் பகிரதி யாற்றில் நீராட வந்த பொழுது உலூபி யென்ற மங்கையைக் கண்டு களித்து மணந்தன னென்றும் அவ்விருவரு

டைய கான்முளை அராவா னென்றும் பாரதங் கூறுகின்றது. அர்ச்சுனன் தீர்த்த யாத்திரைச் சருக்கத்தில்,

“ஆடம் பரமன் வேடகற்றித் தொழுதகு தொல்
வேடம் பெறு மறையோருடன் விசையன் புரவிசயன்
சூடந்தரு பாகீரதி தோய் காலை யிலவனை
சேடன்றல மடவார் புனலயர் வானெதிர் சென்றுர்.

ஓடுங்கயல் விழியாரினு லூபிப் பெயரவளோ
டாடும்புன லிடைநின்ற னநுராக * மிகுந்தே
காடும்பில வழியேயவன் பின்சென்று நலத்தா
னீடுங்கொடி மனமெய்தினன் முகில்போலு நிறத்தான்.

இம்மென்றளி முரல்பாய வின்பத்தை வளர்த்தும்
பொம்மென்பரி புரநாண்மலர் பொற்சென்னியில் வைத்துஞ்
செம்மென்கனி யிதழாளொடு சின்னுணல முற்று
னம்மென்கொடி யனையாளு மராவானை யளித்தாள்.

நாகாதிபன் மகண்மைந்த னலங்கண்டு மகிழ்ந்து
நாகாதிபன் மகன்மீளவு நதியின்வழி வந்து
நாகாதிபன் வண்சாரலி னன்னீர்கள் படிந்து
நாகாதிபன் விடுமும்மத நாறுந்திசை புக்கான்”

இச் செய்யுட்களில் மற்றென்று விளங்குகின்றது. நாகர்கள் நிலைமை யிழந்து பிலம் புகுந்து நாக பாதாள பூமியி லுறைந்தன ரென்பது அதுவாம். நாகர் கடல் கடந்து நாகதீபமடைந்தனர். நாகதீபமே மணிபல்லவ மென்றெண்ண இடமுளது. கீழக்கரை யில் காவிரி சங்கமமாகு மிடமிருந்து தெற்கே நாகதீவகம் அல்லது மணி பல்லவத்திற்கு முப்பது யோசனை அல்லது எறத்தாழ நூற் றிருபது மைல் தூரமுள தென்பர். இத் தீவகத்தில் மணிமேகலை தங்கினளென்றும் புத்த பீடிகையைக் கண்டு வந்தித்தனளென் றும் அதன் மூலமாக தன் முற் பிறப்பு நிகழ்ச்சியை யறிந்தன

---

* ஆசை.

ளென்றும் சீத்தலைச் சாத்தனாராக்கிய மணிமேகலை யென்னுங் காவியத்தா லறிகின்றோம்.

"கீழ்நில மருங்கி னாகநா டாளு
இருவர் மன்னவ ரொருவழித் தோன்றி
யெமதீ தென்றே யெடுக்க லாற்றார்
தம்பெரும் பற்று நீங்கலு நீங்கார்
செங்கண் சிவந்து நெஞ்சுபுகை யுயிர்த்துத்
தம்பெருஞ் சேனையோடு வெஞ்சினம் புரிநா
ளிருஞ் செரு வொழிமி னெமதீதன்றே
பெருந்தவ முனிவ னிருந்தற முரைக்கும்"

நாக அரசர்களாகிய மகோதரனும் குலோதரனும் மணிபீடிகை தத்தமக்குரிய தென்று போர்புரிய வருவதைப் பார்த்த புத்தர் செருவை யொழிக்குமாறு பணித்து மணிபீடிகையைத் தமக்காசனமாகப் பெற்றன ரென்பது துலங்குகின்றது.

நாகர் தீவகமாகிய மணிப்பல்லவத்திடை

"திரை தவள் பறவையும் விரிசிறைப் பறவையு
மெழுந்துவீழ் சில்லையு மொடுங்குசிறை முழுவலு
மன்னச் சேவல ரசனாகப்
பன்னிறப் புள்ளினம் பரந்தொருங் கீண்டிப்
பாசற்றை மன்னர் பாடி போல
வீசுநீர்ப் பரப்பி னெதிரெதி ரிருக்குந்
துறையுந் துறைசூள் நெடுமணற் குன்றமும்"

"வெண்மணற் குன்றமும் விரிபூஞ் சோலையுந்
தண்புனற் பொய்கையும்"

உள. நாக நாடு அழியுமென்று மாதவன் மணிமேகலைக்குக் கூறினன். "சம்புத்தீவில் இற்றைக்கு எழாவது நாளில் பூகம்பமுண்டாகும், உண்டானபொழுது இந்நகரும் (காவிரிப்பூம்பட்டினம், புகார்) நாக நாட்டில் நானூறு யோசனைப் பரப்பும் பாதலத்தில் வீழ்ந்து கெட்டொழியும்."

"தீங்கனி நாவ லோங்கு மித்தீவிடை
யின்றேழ் நாளி லிருநில மாக்க
ணின்று நடுக் கெய்த நீணில வேந்தே,
பூமி நடுங்குறூஉம் போழ்தத் திந்நகர்
நாக நன்னாட்டு நானூறி யோசனை
வியன் பாதலத்து வீழ்ந்து கேடெய்தும்"

அவ்வாறு அழிவதற்குக் காரணமென்னை? நாக நாட்டரசனாகிய வளைவணனுக்கும் அவன் மனைவியாகிய வாசமயிலைக்கும் தோன்றிய பீலிவளை யென்னு மங்கை காவிரிப்பூம் பட்டினத்துள்ள கழிக்கானற் சோலையை யடைந்து சோழ மன்னனாகிய நெடுமுடிக்கிள்ளியொடு ஒரு மாதமிருந்து கருவுற்றுப்பின் தன்னூரை யடைந்து குழந்தையை யீன்றாள். அக் குழந்தையை அத் தீவகத்திற் றங்கின கம்பளச் செட்டியினிடங் கொடுத்து அரசனிடமீயுமாறு பீலிவளை வேண்ட அவன் அப் பிள்ளையைப் பெற்று பெரு மகிழ்ச்சி யடைந்து கப்பலேறிச் செல்லுகையில் அஃது உடைந்து போயிற்று, குழந்தையும் நீர் வயப்பட்டது. இம்மாற்றத்தினை யறிந்த அரசன் மனம் பொறாமல் செயலற்றுக் கடற்கரை யடைந்து மகனைத் தேடிக்கொண்டு அலைந்தமையால் நகரம் இந்திரனுக்கு விழாச் செய்தலை விட்டொழிந்தது. ஒழியவே அதனைப் பொறாக்காமல் மணிமேகலா தெய்வம் 'இந்நகரைக் கடல் கொள்ளுக' என்று சபித்ததும் உடனே கடல் நகரை மூடியது.

"நாகநாடு நடுக்கின் றாள்பவன்
வாகைவேலோன் வளைவணன் றேவி
வாசமயிலை வயிற்றுட் டோன்றிய
பீலிவளை யென்போள் பிறந்த வந்நா
ளிரவி குலத்தொருவ னிணைமுலை தோயக்
கருவொடு வருமெனக் கணியெடுத் துரைத்தன
னங்கப் புதல்வன் வரூஉ மல்லது
பூங்கொடி வாராள் புலம்ப விதுகே
டீவகச் சாந்தி செய்யா நாளுன்
காவன் மாநகர் கடல்வயி றுபுகூஉம்"

"நாக நாடாள் வோன்றன் மகள்
பீலிவளை யென்பாள் பெண்டிரின் மிக்கோள்
பனிப் பகைவானவன் * வழியிற் றோன்றிய
புனிற்றிளங் குழவியொடு பூங்கொடி பொருந்தியித்
தீவகம் வலஞ்செய்து தேவர் கோளிட்ட
மாபெரும் பீடிகை வலங்கொண் டேத்துழிக்
கம்பளச் செட்டிக் கலம்வந் திறுப்ப
வங்கவன் பாற்சென் றவன்றிற மறிந்து
கோற்றவன் மகனிவன், கோள்கெனக், கொடுத்தலும்
பெற்ற வுவகையான் பெருமகிழ் வெய்திப்
பழுதில் காட்சிப் பைந்தொடி புதல்வனைத்
தொழுதனன் வாங்கித் துறைபிறக் கொழியக்
கலங்கொண்டு பெயர்ந்த வன்றே காரிரு
ளிலங்கு நீரடைகரை யக்கலங் கெட்டது
கெடுகல மாக்கள் புதல்வனைக் கெடுத்தது
வடிவேற் கிள்ளி மன்னனுக் குரைப்ப
மன்னவன் மகனுக் குற்றது பொறாஅ
னன்மணி யிழந்த நாகம் போன்று
கானலுங் கடலுங் கரையுந் தேர்வுழி
வானவன் விழாக் கோண்மா நகரொழிந்தது"

"வென்வேற் கிள்ளிக்கு நாக நாடாள்வோன்
றன்மகள்பீலி வளைதான் பயந்த
புனிற்றிளங் குழவியைத் தீவகம் பொருந்தித்
தனிக்கலக் கம்பளச் செட்டிகைத் தரலும்
வணங்கிக் கொண்டவன் வங்க† மேற்றிக்
கொணர்ந்திடு மன்னுட் கூரிரு யாமத்
தடைகரைக் கணித்தா வம்பி கெடுதலு
மரக்கலங் கெடுத்தோன் மைந்தனைக் காணு
தரசற் குணர்த்தலு மவனயர் வுற்று
விரைவனன் றேடி விழாக்கோண் மறப்பத்

* சூரியன் † கப்பல்.

தன்விழாத் தவிர்தலின் வானவர் தலைவன்
எவ்வமுற் றுன்றன தெவ்வந் தீரென."

நாகரென்பார் நாக இலச்சினையை (பாம்பின் அடையாளத்தை) யுடைமையின் இப் பெயர் பெற்றனரென்ப.

பாம்பு அடையாளத்தைத் தீட்டிய கல்வீற்கும் நாகரெனப் படும். இன்றும் நாகரடித்து நம் பெண்டிர் நல்குதலையும் நாகரை அரசு வேம்படிகளில் வைத்து வணங்குதலையுங் காணலாம். நாக ரிகமுற்று நாடாண்ட நாகரை மலைவாழ் நக்கரென்று கூறுவது மன்றி மக்களுள் தின்னும் புலையரிற் புலையர் போன்று மதித் தலையுங் காவியங்களிற் பார்க்கலாம்.

"நக்க சாரணர் நாகர் வாழ் மலைப்
பக்கஞ் சார்ந்தவர்"

"நக்க சாரணர் நயமிலர் தோன்றி
ஊனுடை யிவ்வுடம் புணவேன் றெழுப்பலு
மற்றவர் பாடை மயக்கறு மரபிற்
கற்றனன்" (சாதுவன்)

நாகர்களுடைய குருமகனிருக்கையை வரையுமிடத்து

"கள்ளடு குழிசியுங் கழிமுடை நாற்றமும்
வெள்ளென் புணங்கலும் விரவிய விருக்கையி
லெண்கு (கரடி) தன்பிண * வோடிருந்தது போலப்
பெண்டுடனிருந்த பெற்றி நோக்கிப்
பாடையிற் பிணித்தவன் பான்மையனாகிக்
கோடுயர் மாநிழற் குளிர்ந்த வன்பின
னீங்குவந்த காரண மென்"

இவ்வாறுகூறி வினவிச் சாதுவனுக்கு,

'வெங்களு†மூனும் வேண்டுவ கொடும்'

---

* பெண் கரடி. † கள்ளும்.

என்று மனைவிக்குக் கட்டளையிட அவன் வேண்டேனென்று சினந்து விடுத்தனன்.

“மயக்குங் கள்ளு மன்னுயிர் கோறலுங்
நாககுருமகன், கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்”

“கள்ளு மூனுங் கைவிடி னிவ்வுடம்
புள்ளுறை வாழுயி ரோம்ப லாற்றேன்”

என்று மறுமொழி பகர்ந்தனனென்பர். இவ்வாறு நாகரிக முற்ற வருடைய குருவின் வாழ்க்கையை நகைபடக் கூறினது யாது பற்றியோ? படிப்பவர்களே, உண்மையை ஆய்ந்துணர்வார்களாக.

---

# பெரியபுராணமாலை

[திரு. சந்திரசேகரப்பாவலர் அவர்கள்]

## பிள்ளையார் காப்பு

பெரிய புராணமெனப் பேரோங்கு தொண்டர்
அரிய புராணத்தை அன்பால்—உரியதோர்
மாலையதாய்ப் பாடி மருணீக்கக் குஞ்சரத்தின்
காலைக் கருதினேன் காப்பு.

---

திருத்தொண்டர் தங்கள் தெய்வப் புராணத்தைத்
திருத்தமுடன் மாலையதாய்த் திகழ்ந்திடநான் பாடுதற்குப்
பெரிய புராணத்தைப் பேணியே பாடுதற்கு
அரிய அருளோடு ஆற்றலுநீ தந்திடுவாய்
௫ தொந்திக் கணபதியே தோன்றியெனைக் காத்தருள்வாய்
வந்தித்து நானும் வணங்கினேன் சீரடியே.

## சிவபெருமான்துதி

எந்தை பெருமானே யாவருக்கு முன்னவனே
கொந்தார் குழலாள் கோமதியாள் நற்கணவா
சிவனே சிவனேயெனச் சிந்தித்துத் தாள்பணிந்தேன்.

## முருகன்துதி

௰ சிவனார் திருமகனே சிற்பரனே வேலவனே
அருள உனதடியே அன்புடனே சூடினனே
மருளெனைவிட் டோடிடவே மாண்புடனே தோன்றிடுவாய்
அறுபத்து மூவர் அருமைப் புராணஞ்சொல
அறுமுகவன் வள்ளி ஆளனே காப்பாமே.

## புராண வரலாறு

௧௫ அநாதி மலமுத்த நித்திய அருளுருவாய்
எல்லா உலகமும் எவ்வுயிருந் தானபடைத்துக்
காத்தழித்துக் கருணையினால் மறைத்தருளுங் கண்ணுதலான்
பெருங்கருணை பொழிகின்ற பேரழகுத் திருமுகமும்
சந்திரனும் சூரியனும் சங்கரிக்கும் அக்கினியும்
௨௰ ஆனதிருக் கண்களும் ஆகாய கங்கையையும்
பிறையையும் கொன்றையையும் பேணியணி சடாமுடியும்
தோடொருபால் குண்டலமும் தோன்றுதிருக் காதுகளும்
கடலி லிருந்தெழுந்த காளமணி கண்டமதும்
மான்மழுக்க ளோடபய வரதமணி நாற்கரமும்
௨௫ திருநீறு சண்ணித்த செம்பவள மேனியதும்
ஆறுகோடி நுங்கியபேர் நூறுகோடி பிரமாக்கள்
நாரணர்க ளெலும்புதலை நன்மாலைத் திருமார்பும்
வேங்கைத்தோ லுடையுடுத்து விளங்குந் திருவரையும்
இன்பமுத்தி யிணையடியும் உடையவருள் மேனியனாய்
௩௰ மணிகளினா லேவிளங்கும் வெள்ளிமுடி மாகயிலை
மலைதனிலே கோவிலிலே மாண்பொடுபார் வதியம்மை
உலகமெலாம் ஈன்றருளும் உற்றதா யாரவளும்
இடப்பாக மேவ இருந்தருள்வன் எழில்விளங்கும்
சூரியரைப் போலவுள சோதிச்சிம்மா சனத்தினிலே.

(தொடரும்)

# நட்பு

[திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளையவர்கள்]

நம்மைப்போல் மனமொத்த நண்பரைத் தேடி யடைதல் மிகவும் அரிதாம். அவ்விதம் நாடியடைந்தால் திரிபின்றி நிற்ற லும் அரியதேயாம். ஆகையால் இந் நட்பைப்போலச் செய்து கோடற்கரிய பொருள் இவ்வுலகில் யாவையுள ? அவ்விதம் செய் தற்கரிய நட்பைச் செய்துகொண்டோமாயின் நமது பகைஞர் தமக்கு விரோதமாக நம் நட்பினுல் யாது விளையுமோ என்றஞ்சி நமக்கு விரோதமாக யாதொரு வினையுந் தொடங்கார். ஆகை யால் இந் நட்பைப்போல் பகைஞர் செய்யும் வினையைத் தடுத்து அவ் வினையால் விளையும் தீமைகளினின்றும் நம்மைக் காப்பாற் றும் காவலாவன வேறு யாவையுள ?

நட்பு இயற்கை செயற்கையென இருவகைத்து. நாம் நமது உறவினரிடத்து அவர்கட்கும் நமக்குமுள்ள இரத்தக் கலப்பின் பயனுகக் கொள்ளும் அன்பே இயற்கை நட்பாம். நாம் ஒருவ னுக்கு ஒரு உதவிசெய்தோமாயின் அதை நினைத்து அவன் நமக்கு அன்புடன் பிரதி யுதவி செய்யவும், நாமும் அதை நினைத்து அவன்மீது அன்பு கொள்ளவும், இப்படியாக செயற் கையினுல் தம்மை யறியாது ஒருவர்மீ தொருவர் கொள்ளும் அன்பே செயற்கை நட்பாம்.

ஈண்டு நாம் முதற்கண் சொல்லப் புகுந்த செயற்கை நட்பு, அறிவுடையார் நட்பு பேதையார் நட்பென இருவகைத்து. அறி வுடையார் தம்முட்கொள்ளும் நட்பு வளர்பிறை நாளுக்குநாள் வளர்ந்து கொண்டு போவதையொத்து நாளுக்குநாள் வளரும். மற்றைப் பேதையார் கொள்ளும் நட்போ நிறைந்த மதி பின் குறையுந் தன்மைபோல் மதியில்லாமையால் நாடோறும் குறை யும் தன்மை யுடைத்து. இவ்விதம் அறிவுடையா ரிருவர் செய்யும் நட்பு முன் சுருங்கிப் பின் பெருகற்கும், பேதையார் இருவர் செய்யும் நட்பு முன்பெருகிப் பின் சுருங்கற்கும் காரணம் தம்முள்

முன் அறியாமையும் பின் அறிதலுமாம். இதனையே நாலடி யாரிலும்,

> "கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மை யெஞ்ஞான்றுங்
> குருத்திற் கரும்பு தின்றற்றே—குருத்திற்
> கெதிர்செலத் தின்றன்ன தகைத்தரோ என்று
> மதுரமி லாளர் தொடர்பு"

என்றார்.

ஒருவன் தேவாரம், திருவாசகம் முதலிய அரிய நூல்களைக் கற்குந் தோறும் அதன்கண் மறைந்துறையும் இனிய பொருள் களை நுகர்ந்து மகிழ்வதை யொத்து நற்குணமுடைய மக்கள் தம்முட் செய்த நட்புப் பயிலுந்தோறும் இன்பத்தை நுகர்ந்து மகிழ்கின்றனர்.

ஒருவனோ டொருவன் நட்பாதற்கு ஒரு நாட்டினாதலும் பலகாற் கண்டு சொல்லாடி மருவுதலுமாகிய காரணங்கள் வேண் டும். கேட்டினைத்தரும் தீநெறிகளில் நம் நண்பன் செல்வா னாயின் அவனுக்கு நல்லறிவு புகட்டி அவனை நற்செயல்களைப் புரியுமாறு தூண்டி அவனை உயர்ந்த நிலைக்குத் தூக்குவதே நட் பாம். பழவினைப் பயனால் கடவு ளாணைப்படி பெரும் துன்பங் களை - தன் நண்பனுக்கே அவைகள் வந்திருப்பினும் அவைகளை - விலக்கமுடியா தாகையால் அவனுடன் சேர்ந்து அனுபவித்து அவனை 'நண்பா! இறைவ னாணைப்படி வந்தவற்றை அனுபவிப் பதைவிட்டு வருந்துவதிற் பயனில்லை' என்று இனியமொழி கூறித் தேற்றுவதும் அந் நட்பேயாம்.

> "முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
> தகநக நட்பதே நட்பு"

என்றார் திருவள்ளுவரும்.

அறிஞர் கழகத்திலே நின்று பெருஞ் சொன்மழை பெய் யும் ஒருவனுக்கு அவ னுடை நெகிழ்ந்து விட்டதென்றால் திடீ ரென அற்றங் காத்தற்காலை கையானது சென்று எவ்வாறு உதவுமோ அவ்வாறே நமது நண்பனுக்கு ஓர் துன்பம் நேர்ந்

துழி தினையளவும் தாமதியாதபடி உடனே சென்று நாம் உதவ வேண்டும். அவ்வித முதவாவிடில் அநேககோடி பாவங்கள் நம்மை வந்தடையும். இதனை நாலடியும்

"முட்டுற்ற போழ்தின் முடுகியென் னுருயிரை
நட்டா னொருவன்கை நீட்டேனேன்—நட்டான்
கடிமனை கட்டழித்தான் செல்வுழிச் செல்க
நெடுமொழி வைய நக"

என்றது.

மறுமை இம்மைகட்கு உறுதி பயக்கக்கூடிய அறம் பொருள்களிற் றளர்ந்துழி எவ்வாற்றானும் அத்தளர்ச்சியை நீக்கிப் பின்னவ ரவ்விதம் தன் நாற்றளர்ச்சி நீங்கிய நேயனுடன் திரிபின்றி எஞ்ஞான்றும் இயலு மெல்லையிற்றான் நட்புத் தன் அரசிருக்கையை வைத்துள்ளது.

"ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்"

என்றார் வள்ளுவரும்.

ஒருவன் குணத்தினை யூகித்துணர்ந்தபின் அவன் குடிப் பிறப்பை யுசாவி யறிந்து அவன் குற்றத்தினையும் அவனோடு பழகுஞ் சுற்றத்தவரையும் கவனித்துப் பின்னாற் றகுந்தவனிடம் சேர்ந்து பழகுதலே நட்பின் முதற்படியாம். உயர்ந்த குடியிற் பிறந்த ஒருவன் தன்னையறியாதே தவறியக்கால், அங்ஙனம் தான் தவறித் தீவழிப்பட்டதற்காக வுலகத்தவர் ஏசுவரோவென வெண்ணுவானாயின் அவ்வுத்தமர் திலகனுக்குக் கோடிப் பொன் குவித்துக் கொடுத்தாவது அவன் நட்பையடையல் வேண்டும்.

"இப்பிறப் பெண்ணி லிடைதிரியா ரென்பதோர்
நற்புடைக் கொண்டமை யல்லது—பொற்கேழ்
புனலொழுகப் புள்ளிரியும் பூங்குன்ற நாட
மனமறியப் பட்டதொன் றன்று"

என்றார் நாலடியாரும்.

உலக வழக்கத்திற்கு மாறுபட்ட செயல்களை நீத்து உலக விரோதமான செயல்களைப் புரியப் புகுந்தால் நமக்கு உளம் நோகும் வகை கடுஞ்சொற்கள் புகன்று அவற்றைச் செய்வதி னின்று விலக்கியும் அதனையும் மீறிச் செய்யப் புகுந்தக்கால் பின்னும் நெருங்கி, விடாது கடுஞ்சொற்க ளாடி எவ்விதத்திலும் அவைகளைச் செய்யவிடாது நம்மைத் தடுத்தும் நாம் நற்செயல் களை உலக வழக்கப்படி செய்யாதிருந்தால் அவற்றைச் செய்யும் படி நம்மை வற்புறுத்தியும் இவ்விதமான அரிய செயல்களைப் புரியும் வல்லவர்களை ஆராய்ந்து நட்புக்கொள்ள வேண்டியது. நாம் நமக்கு ஊக்கம் குன்றச்செய்யும் செயலைப் புரியாது எவ் வாறு விட்டு விடுகிறோமோ அவ்வாறே நமக்குத் துன்பம் வந் துழிக் கைவிடும் கயவரின் நட்பைவிட் டொழிக்கவேண்டும். இத் தகையர் நட்பை அறியாது கொண்டோமாயின் அவர்கள் எதை விரும்பினும் அதைக் கொடுத்துவிட்டேனும் அன்னவர் நட்பை நீக்கவேண்டும்.

நெடுநாட் பழகி இருவர் மனமும் ஒத்து நடக்கும் தன் மையே நட்பாம். நட்டார் தமக்குள் உரிமையாற் புரிவனதாம் நட்பிற் கவயவமாம். தனக்கு விருப்பமில்லாத செய்கை யொன்றை நட்டார் தமக்குள்ள உரிமையாற் செய்தனரெனின் அதனைத் தாமே செய்ததாகக் கருதி உடம்படாராயின் அவ்விரு வர் அதுவரை கொண்டிருந்த நட்பெல்லாம் விழலுக் கிறைத்த நீரேயாம். நாம் வெறுக்கக்கூடிய செயலை நம் நேயன் செய்தா னுயின் அதை அவனது அறியாமை என்றுவது அல்லது அவ னுக்குள்ள உரிமையைக் கொண்டு நன்மையைக் கருதியே செய்தானென்றுவது கொள்ளவேண்டுமே ஒழிய அன்பின்மை யால் விளைந்தது என்று கொள்ளக்கூடாது.

> "நல்லா ரெனத்தான் நனிவிரும்பிக் கொண்டாரை
> யல்லா ரெனுமடக்கிக் கொளல் வேண்டும்
> நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு
> புல்லிதழ் பூவிற்கு முண்டு"

எனவும்,

"இறப்பவே தீய செயினும் தந்நட்டார்
பொறுத்தல் தகுவ தொன்றன்றோ—நிறக்கோங்
குருவ வண்டார்க்கு முயர்வரை நாட
வொருவர் பொறையிருவர் நட்பு"

என்றும் கூறிய நாலடிச் செய்யுட்கள் இங்கு நோக்கத் தக்கன.

நட்டார் தமக்கு அழிவு வந்தவற்றைச் செய்தாராயினும் அவர் மாட் டன்பொழியார் நட்பு வாம்பிகவாது அதன்கண்ணே நிறகுமாம். இவ்விதம் அறக்கொடிய செயலியற்றியும் அவன் மாட் டன்பொழியாத நண்பனே, இவனுடன் பழகினுல் நம் குற் றத்தைப் பொறுத்து நம்மையும் தன்னைப்போல் நல்ல வழிக்குக் கொண்டுவா வல்லவ னிவனேயென்று உலகத்துள்ளோர் அன் புட னணுகி நேசிப்பர். இத்தன்மையோனை அவன் பகைவர் களும் கூட விரும்பியடைந்து பகைமை கடிந்து நட்பினராவர்.

"இன்னு செயினும் விடற்பால ரல்லாரைப்
பொன்னுகப் போற்றிக் கொளல்வேண்டும்—பொன்னேடு
நல்லிற் சிதைத்ததீ நாடோறு நாடித்தம்
இல்லத்தி லாக்குத லால்"

எனவும்,

"இன்னு செயினும் விடுதற் கரியாரைத்
துன்னுத் துறைத்தல் தகுவதோ—துன்னருஞ்சீர்
விண்ணகத்து நீள்வரை வெற்ப களைபவோ
கண்குத்திற் றென்றுதங் கை"

எனவும்,

"குற்றமு மேனைக் குணமு மொருவனை
நட்டபின் நாடித் திரிவேனேல்—நட்டான்
மறைகாவா விட்டவன் செல்வுழிச் செல்க
அறைகடல் வைய நக"

எனவும் கூறியுள்ள நாலடி நானூற்றுச் செய்யுட்கள் ஈண்டு நோக்கத்தக்கன.

நட்பின் தன்மையினை யோராது அதனுல் வரும் பயனை யோரும், கருவியாளர்கள், பொருளை விரும்பிக் கொடுத்துச் சேர வருமவரை நாடாது அன்றியும் பொருளையே நாடும் பொதுமகளிரையும் பொருள் பறிகொடுப்பவரை அத்துணைத் துன்பங்களடையினும் ஓராது தாம் இலகுவாய்ப் பொருள்பறிக்க உதவியான அன்பர்கள் சோர்வையே கருதும் கள்வரையும் ஒப்பார்கள். மேலும் இத்தகையோர் உலகத்தவரால் வெறுக்கப்படுபவர்களாவர். அவர்கள் நட்பினுல் ஒருபயனுமின்று. அவர்களது நட்பை இழத்தலாலும் நன்மையே யன்றிக் கேடுமின்றும்.

நாம் நல்ல போர்ப்பயிற்சி செய்யாத குதிரை அமர் வாராத முன்னரெல்லாம் நம்மைத் தாங்கினதுபோல விருந்து போர்வந்துழிக் களத்திடை வீழ்த்துவிட்டு வெறிகொண்டோடும் தன்மையை யுடையதுபோல துன்பம் நேராக்கால் முகநட்டு நின்று பின் துன்பம் வந்தவிடத்து விட்டுவிட்டு ஓடும் புல்லியனும் உளன். இத்தகைய கீழ்மகனது கேண்மை ஒருவனுக்கு உண்டாதலினும் இல்லையாதலே மிகவும் மேன்மையை யுடைத்து.

> "சீரியார் கேண்மை சிறந்த சிறப்பிற்றாய்
> மாரிபோன் மாண்ட பயத்ததா—மாரி
> வறந்தக்காற் போலுமே வாலருவி நாட
> சிறந்தக்காற் சீரிலார் கேண்மை"

என்றார் நாலடியாரும்.

அறிவில்லாத புல்லியருடன் நட்புச்செய்வதைக் காட்டிலும் அறிவுடையாருடன் கொள்ளும் பகைமை பத்துக்கோடி மடங்கு நன்மையைப் பயப்பதாம். தாம் இதற்காகத்தான் நட்கின்றோமென்று அறியாத புல்லறிவாளர் தம்முள் உறையும் பிறர் நகைக்கக்கூடிய தன்மைகளை வெளியிட்டு நகைத்து விளையாடித் தம் பகைவர்க்கும் தங்களது அறியாமையை விளக்கி அதன் பயனாக எண்ணிறந்த தீமைகளை உண்டாக்குவார்கள். ஆனுல் அறிவாளர்களோ தம் பகைஞர் தவறிடினும் அத்தவறு அவரது அறியாமையினுலேயே விளைந்ததென்று கருதிப் பதிலாக யாதொரு கெடுதி

யும் விளைக்காது அன்னூர் நாணும்படி அவர்கட்கு நன்மையே புரிவர்.

தந்நயம் கருதும் தடியர்களின் நேயம் கூடவே கூடாது. தாங்கள் நடக்கும் நடைக்குத் தகுந்தவாறு மனக்கண் நல்லெண் ணம் கொள்ளாத வஞ்சகரோடு நட்டோமாயின் எப்பொழுதும் நம் நனவிலும் கனவிலும் தீமைகளே விளைவன.

> "எனைத்துங் குறுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
> மன்றிற் பழிப்பார் நட்பு"

என்றூர் தெய்வப் புலவரும்.

இழிந்த குணமுடைய பெண்டிர் தங் கணவரைக் காட்டி லும் அழகுள்ள புருடரைக் கண்டவிடத்து அவர்கள் மனம் வேறுபட்டுவிடும் போல, தமக் குற்றூர்போற் றூன்றி யுறுதா ராகும் வஞ்சகர்கள் கேண்மை மாறுபட்டு விடும். இனிமையான பாலால் வளரினும் எட்டி கசப்பையே தருவதுபோல் பகைமைக் குணமுடைய ஒருவன் மிகவும் நல்ல நீதிநூற்களைக் கற்றூனுயினும் அவனது பகைமைக் குணத்தினின்றும் நீங்கான். நாம் யாருக் காவது இவ்வுலகில் அஞ்சவேண்டுவது உண்மையாயின் அது கண்டபோது முகத்தால் இனியவாகச் சிரித்து மனத்தால் எப் பொழுதும் இன்னூராகும் வஞ்சகரையேயாம். நல்லபாம்பு பட மெடுத்தாடினுல் நம் வெளிப்பார்வைக்கு மிகவும் அழகாகவே இருந்தபோதிலும் உள்ளே கேட்டிற்குக் காரணமாகிய கொடிய நஞ்சையே கொண்டுளதன்றூே? அப்பாம்பின் அழகிய தோற் றத்தையும் இனிய ஆட்டத்தையும்கண்ட நஞ்சுடைமை யறியாத வொருவன் அதனிடத்து நஞ்சிருப்பதையறிய எவ்வாறு முடியும்? அதுபோல் இனிமையாக நகைத்து உள்ளே கெட்ட எண்ணங் கொண்டவரை அவர்களது நடையுடை பாவனைகளால் கெட்ட வர்களென்றறிய முடியாது, அவரின் கெட்ட குணத்தை முன் னூற்றூனே யறியாத ஒருவனுக்கு பாம்பு இனிய தோற்றமு முடைத் தெனினும் நமக்குக் கெடுதியையே விளைக்கும்போல் இவர்கள் இனிய சொல்லினரேனும் கெடுதியையே பயப்பர்.

வில்லை வில்லி வளைக்குந்தோறும் எதற்காவது தீங்கை நாடு கிருள்போல நம்மிடம் எப்பொழுது எப்பொழுது நம் பகைஞர் பணிவுடையோராய்க் காட்டுகின்றார்களோ அப்போ தப்போ தெல்லாம் நமக்கு ஏதோ தீங்கையே நாடியுளர் என்பதை யறிந்து அதற்குத் தக்காங்கு நடந்து கொள்ளவேண்டியது நமது கடமை. குறிப்புணருந்தன்மை கைவந்துள்ளார் இதை யெல்லாம் நன்குணர்ந்துகொள்வார். பகைவர் தம்மையணுகி வணங்கினராயின் வணங்கிய கையினிடத்திலே தமக்குமாறான ஈட்டியை வைத்துள்ளார் என்பதை அவர்களே யறிவர். பகைவர் பாசாங்கினால் கண்ணினின்றும் ஊற்றெடுக்கும் நீரிலும் அப்பகை யீட்டி மறைந் துறைவதையும் அத்தகைய சால்புடைய பெரியோரே திண்ணமாக அறிந்துகொள்வர்.

எவன் நம்மைக்கண்டு கேட்டு நாம் சொன்னவற்றை நன்கு மனக்கண்வாங்கி மகிழ்கின்றானோ அவன் நம்முடைய பொருளாக என்றைக்குமாகின்றான். நாம் தேடாதபடியே நண்பர் அமைகின்றனர். பழைய தொந்தத்தாலும் ஒருவருக்கொருவருள்ள தெய்விகமான ஒற்றுமையாலும் கடவுளினருளால் நட்பு நிகழ்கின்றது. தன்னை அவனாகவும் அவனைத் தானாகவும் காண்பதே நட்பின் முதிர்ந்த நிலை. இந்த நிலையில் ஒருவருக்கொருவர் கொண்டுள்ள வேறான குணங்களும், வயதும், இனமும், மற்றுண்டான செயல்களும் ஒன்றுக்கொன்று அழிவடைகின்றன. இவ்விதம் நிகழும் கேண்மை பிரியுமா? இதைச் சொல்ல நம்மால் இயலாது. அதற்காக அவ்விதம் நட்டார் அஞ்சவுமஞ்சார். ஏனெனில் அக்கேண்மையோ கலப்பற்றது.

"பாலோ டளாயநீர் பாலாகு மல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்றாதாம்—தேரின்
சிறியார் சிறுமையும் தோன்றாதா நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து"

என்றார் நாலடியாரும்.

பாலை உலையிலிட்டு நாம் காய்ச்சப் புகுந்தக்கால் தன்னொடிரண்டறக் கலந்துள்ள நீர் ஆவியாகச் சென்றவுடனே தன்

நண்பனது பிரிவை யாற்றாது பாலும் பொங்கிக் கீழே வடிய ஆரம்பிக்கின்றது. பின்னர் அக்குறிப்பறிந்து நாம் சிறிது நீரை அப்பொங்கும் பாலிற் கலந்தவுடன் அப்பால் தன் முன் நிலையை யடைகின்றது. இதையொத்ததே சிரியார் கேண்மையும். நட்பினால் நன்மையாம். தீமை சாம். ஆகையால் நாம் நல்ல குணமுடைய பெருமைசால் மனத்தினனை நம் நண்பனாய்த் தேர்ந்தெடுத்து வாழ இறைவ னருள்வானாக.

(தொடரும்.)

---

## சிவபிரான் கருணையும், சீவர்கள் கடமையும்

திரு. மு. கதிரேசச் செட்டியார் அவர்கள்]

(கூசுக-ம் பக்கத் தொடர்ச்சி)

### (ரு) அக்கருணையா லான்மாவெய்தும் பயன்

இனி, அப்பெருமான் கருணையானுண்டாம் பயனைச் சிறிது கூறுவல். ஆன்மாக்களனாதி கேவலத்தி லாணவமலத்தாற் பிணிப்புண்டு இருட்டறையிற் கிடக்கின்ற கண்ணிலாக் குழவிபோல நினைவு செயலற்றுக் கிடக்குங்கால் விவிதசக்திகளையுடைய அவ்வாணவமலத்தைக் கழுவுதற் பொருட்டுக் கன்மமல மாயாமலங்களை யவ்வவற்றிற் கேற்பப் பயனுறச்செய்து, சிறிது அறிவெழக் கண்டு, படைத்தன் முதலிய ஐந்தொழில்களையும் புரிந்து, இறுதியிற் றந்திருவடி யின்பத்தை யீதற்குக் காரணம், தம் அளவிலாப் பெருங் கருணையேயாகும். இவ்வுண்மையை,

> "அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட்
> டருளி லழிந்திளைப் பாறி மறைந்திட்
> டருளான வானந்தத் தாரமு தூட்டி
> யருளாலென் னந்தி யகம்புகுந் தானே"

என்னுந் திருமந்திரமும் வலியுறுத்துவதாம். இனி அப்பெருமானைக் காண்டற்கும் அவர் கருணையே கண்ணுதல் வேண்டும்

கேனுப நிடதத்தில் "இந்திரன் இயக்க வடிவத்துடன் வந்த பரம் பொருளாகிய சிவபிரானை ஆங்குத் தோன்றிய உமாதேவியாராகிய அருட்சக்தி காட்டலாற் றெளிந்தான்" என்று கேட்கப்படுதலா னும், "மெய்யருளாந் தாயுடன்சென்று பின்ருதைையைக் கூடி" யென்று பட்டினத்தடிகள் அருளினமையானும், "அவனரு ளாலே யவன்றாள் வணங்கி" எனவும், "அவனருளே கண்ணுகக் காணினல்லான்" எனவும் போந்த திருவாக்குக்களானும் இவ் வுண்மை நன்குபுலனும். "ஆங்கவனருளாற் பத்தி நன்குண்டாம்" என்றபடி இறைவனை யடைதற்கு மிக முக்கியமான பத்தியும் அவனருள்வழி யுண்டாமெனின்; வேறிதன் பயனை யெவ்வா றுரைப்பேன்! அப்பெருமான் பரங்கருணையின் பயனுக முடிவில் நாம் பெறத் தக்கபொருள் அப்பெருமானேயாகும். இதனினுஞ் சிறந்த பயன் யாதுளது? சிவநேசர்களே! இவ்வுலகத்தும் அவ் வுலகத்தும் விரைவிற் ருேன்றி யழிதன்மாலையவாகிய சிற்றின் பந்தரும் பொருள்களைப் போலாது நித்தியானந்த வுருவமாகிய அவ்விறைவனையே தரு மாட்சி மிக்க அக்கருணையைப் பெறுதற் குரிய செயலையன்றி வேறு யாம் செயக்கிடப்பது யாதுளது? ஸ்ரீ மணிவாசகனாரும் "தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன் னைச் சங்கரா யார்கொலோ சதுரர், அந்தமொன் றில்லா வானந் தம் பெற்றேன் யாதுநீ பெற்றதொன் றென்பால்" என்று இப் பேரானந்தப் பெருஞ்செல்வப் பேறு அவர் கருணையினுற்பெற்ற தம் அனுபவவுண்மையை நம்மனேரும் உய்ய வெளிப்படுத்தி யரு ளினார்கள். இத்திருவாக்கில் ஒரு பண்ட மாற்றுச் செய்தியை நாம் அறிகின்றோம். அஃதாவது: எல்லாவறிவும் எல்லாவாற்ற லும் நிறைந்த மலரகிதராகிய சிவபிரான் தம்மைக் கொடுத்துச் சிற்றறிவுஞ் சிறுதொழிலுமுடைய சீவனை யதற்குமாற்ருகக் கொள்கின்றாரென்பதே. அப்பெருமானைப் பெற்றமையாற் சீவன் எய்திய பயன் அளப்பிலாவானந்தம். இச்சீவனுல் அவ்விறைவன் பெற்றது யாதுமின்று. என்னே யவர் கருணைத்திறம்! மனத்தா னினைத்தற்கும் வாயாற்பேசற்கும் அளவுபடுவ தின்றாகலின், இம்மட்டிற் சிவபிரான் கருணையென்னும் பகுதியை நிறுத்தி மேற் சீவர்களின் கடமையைப்பற்றிச் சிறிது கூறுவேன்.

## (சு) சீவர்களின்றன்மை

ஆன்மா எப்பொருளைச் சார்ந்ததோ அப்பொருளின் வண்ணமாந் தன்மையுடையதென்பது வேதாகம சித்தாந்தம். வெளி, இருளோடு கூடுங்காலிருளாகவும், ஒளியோடு கூடுங்கால் ஒளியாகவும் ஆதல் போலவும், ஒருபளிங்கு, செந்நிறத்தைச் சார்ந்துழிச் செம்மையாகவும், கருநிறத்தைச் சார்ந்துழிக் கருமையாகவுந் தோன்றுதல் போலவும், ஆன்மா, மலவிருளிற் கலந்துழி அதன்மயமாகவும், சிவவிளக்கத்திற் பொருந்துழிச் சிவமயமாகவும் விளங்கும். அவ்வப்பொருளைச் சாருங்காற் பிரிப்பின்றி யத்துவிதமாகவே சம்பந்த முற்றுக் கலந்திருக்கும். மலத்தோடு சம்பந்தமுற்றுழி யங்நிலையும் அத்துவித நிலையாமோவெனின், அதுவும், ஒன்றென்றுவது வேறென்றுவது கூறப்படாமையின் அத்துவிதமேயாம். இதனை "ஆணவத்தோ டத்துவிதமானபடி மெய்ஞ்ஞானத், தாணுவினோடத் துவிதஞ்சாருநா ளெந்நாளோ" என்னுந் தாயுமானுர் திருவாக்கும் வலியுறுத்தும். ஆகவே தனக்கென வொரு சுதந்தரமுமின்றிச் சார்ச்சிப் பொருள்களின் றன்மையே தன்றன்மையாகக் கோடல் ஆன்மாவினிலக்கணங்களுண் முக்கியமான தொன்றும். இன்னும் இச்சீவன் சகசமலமாகிய ஆணவத்தாற் பிணிப்புண்டு அதனீக்கத்தின் பொருட்டு இறைவனுற் றரப்பட்ட மாயா மலகன்மமலங்களின் காரியங்களாகிய தனுகரண புவன போகங்களைப் பெற்று மாறி மாறிப் பிறக்குமியல்புடையதாம். மனம் புத்தி யகங்காரஞ் சித்தமென்னும் அந்தக் கரணங்களாகிய கருவிகளாற் பொறிகளின் வாயிலாகப் புலன்களை நுகர்ந்து அதனுன் மீண்டு மீண்டும் வந்தேறுகின்ற கன்மங்களை யுடைத்தாம். இன்பந் தருவனவற்றில் விருப்பும், துன்பந்தருவனவற்றில் வெறுப்புமுடையதாகும். இன்னும் இவ்வான்மாவினிலக்கணம், வகைவிரிகளாற் பல திறப்படும். அவை விரிந்த சைவநூல்களிற் காண்க.

## (எ) கடமையின் றன்மை

இனி, கடமையாவது இன்னதெனச் சிறிது கூறுவேன். இவ்வுலகத்து அறிவுள்ள ஒவ்வொருவரும், நாம் செய்யவேண்டிய

வை யிவை யிவையென நான்முகமாகவும், பெரியார் முகமாகவு முணர்ந்து பிரதி பிரயோசனத்தைப் பற்றிச் சிந்தியாமன் மேற் கொள்ளுங் காரியங்களுள் இன்றியமையாது செய்யத் தக்கவை யெவையோ அவை கடமை யெனப்படும். நன்மாணுக்கனொரு வன் ஆசிரியனொறுத்தல் கருதி வெறுப்புறாது அவனுணை வழி நின்று கற்றுவருதலும் இக்கடமையேயாகும். போர்வீரனொரு வன் போர் முனையிற் சென்றவுடன் தனக்கு வரும் வெற்றி கருதி முற்படலும், தோல்வி கருதிப் பிற்படலுஞ் செய்யாது நிலை நின்று பொருதலும் அவன் கடமையாகும். அற நூல்களில் நித்திய கருமாநுட்டானங்களைப்பற்றிக் கூறி, அவற்றைச் செய்த லால் வரும் பயனையும் விரித்துப் பின், இப்பயன்களை யாராய்ந் தறிந்தே செய்தல் வேண்டுமென்று எவரும் கருதல் கூடாதென வும், பிரதிதினமுஞ் செய்யவேண்டிய கன்மங்களைப் பயன் விசாரி யாதே செய்து தீரவேண்டுமெனவும், அங்ஙனஞ் செய்தல் ஒவ் வொருவனுக்குங் கடமையாமெனவுங் கூறுதலு மீண்டுக் கருதற் பாலது. அறிவுவலி படைத்தார் பயனை விசாரித்தல் மிக நன்றே. அஃதியலாதாயின், விசாரித்தறியும்வரை கன்மங்களைச் செய்யா தொழிதல் தவறென்பதே யீண்டு துணியற் பாலது. பயன், விசாரித்தலின்றிச் செய்யினும் செய்தாரைச் சார்த லொருதலை. வரையாது கொடுக்கும் வள்ளன்மையுடையோர், இவற்கு இன் னது செய்தல் வேண்டும், இதற்கின்னது செய்தல் வேண்டும் என்னும் நியதியின்றி நேர்ந்த நேர்ந்தபடி கொடுத்தற்குக் கார ணம் அவருள்ளத்திற் பதிந்து கிடக்குங் கொடைக் கடமையே யாகும். இது நோக்கியே, அவர் கொடைமடம் பட்டோ ரென்று கூறப்படுவர். முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வை யும் வேண்டாதனவாகவும், அப்பொருள்களி னியற்கைத் தளர் நிலையைக்கண்டவுடன் மனநெகிழ்ந்து இரக்கமுற்று அவற்றிற்குப் பேரிடையூறு வந்ததாகக் கருதிப் பாரி முதலியோர் இயை பில்லாத் தேரும் போர்வையு மீந்தனரே. இவ்வீகை பயன் குறித்ததாமா? அவர் தமக்கு இயற்கையி னமைந்து கிடக்குந் தண்ணளியோடு கூடிய கொடைக் கடமையேயன்றி வேறென் சொல்வது? முல்லைக்கொடி, படர்கொம்பின்றித் தளருமேல், தன்

ஏவலாளரைக் கொண்டு தக்கதொரு கொழுகொம்பை நிறுத்தல் கூடாதா? அக்கொழு கொம்பினும் இத்தேரினு லக்கொடிக்குக் கிடைத்த விசேட நலம் யாதுளது? அங்ஙனமாகவும் தேரை யீந்ததற்குக் காரணம், பாரிவள்ளல் தேரேறி வருங்காற் கொடியின் றளர்நிலையைக் கண்டதும் தனது இயற்கைத் தண்ணளியால் இன்னது செயற்பாலதென் றுணரும் அத்துணையுந் தாழ்க்க மனமின்றி அக்கணமே தேரை நிறுவினர் என்றதே. இதனுனன்றே, "கொடுக்கிலாதானைப் பாரியே யென்று கூறினுங் கொடுப்பாரிலை" என்று நம் சுந்தரமூர்த்திசுவாமிகள் அவ்வள்ளலின் கொடைத் திறத்தைப் பாராட்டி யருளினர்கள். நம் மக்க ளொவ்வொருவரும் தந்தேயம், மொழி, சமய முதலியவற்றை யியன்றவரை பேண முற்படலும் தத்தங் கடமையாகும். இக்கடமை யுலகியற்கடமை, சமயக்கடமை யென இருவகைப்படும். அவற்று ளீண்டுக் கூறப்பட்டன சில வுலகியற் கடமைகளாம். இன்னும் இது சம்பந்தமாகக் கூறப்புகின் மிக விரியுமாதலின், எடுத்துக் கொண்ட விடயத்திற் கியையுமாறு நம் சமயக் கடவுளாகிய சிவபிரான்மாட்டு நாம் செய்யவேண்டியவைகளை யீங்குக் கூறுவேன்.

### (அ) சிவபிரானிடத்துச் செய்யவேண்டிய கடமைகள்

சைவர்களாகிய நாமெல்லாம் நம் சமயக் கடவுளாகிய சிவபிரானை யுண்மையன்போடு வழிபடுதல்வேண்டும். அங்ஙனம் வழிபடுங்கா லிதர தெய்வங்களைப் பழித்தல் கூடாது. நந் தெய்வத்தையே போற்றுவேமாக. ஆயின் ஒரு சாரார். எல்லாத் தெய்வங்களும் ஒன்றேயாதலின், அத்தெய்வங்க ளெல்லாவற்றையும் சமமாகக் கருதி யன்பு செய்தல் வேண்டுமென்பார். அன்னார் கூற்று மரபு பிழைபட்ட தொன்றுதலின், பொருந்தாமை காட்டுதும், ஒவ்வொரு சமயத்தாருந் தத்தஞ் சமயக் கடவுளைச் சிறப்பு வகையானும் பிற சமயக் கடவுளைப் பொது வகையானும் அன்பு செய்யலாமன்றிச் சம நிலையாக் கோடல் பக்தியின் இலக்கணமன்றும். தெய்வங்களெல்லாம் உண்மை நிலையில் முடிவில் ஒன்றேயெனினும் அவ்வுண்மை தத்துவஞானிகளுக்கன்றி மற்

றையோர்க் குணர்வரிதாம். சாமாங்யர்கள் அந்நிலையைப் பற்றிப் பேசல் பேச்சளவேயன்றி யனுபவ வளவிற் கோடலரிது. எவ் விஷயமும் அனுபவத்தினன்றிப் பேச்சளவினெழிதல் பயனின் ரும். இன்ன இன்ன வொழுக்கங்கள் உத்தமமென்று பேசி விட்டு அவற்றைக் கடைப் பிடிக்காவிடின், அப்பேச்சாற் பய னென்னை? "சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாம், சொல் லிய வண்ணஞ் செயல்" என்பதும் ஈண்டுக் கருதற்பாலது. சிறப் பன்பென்பது ஓரிடத் தன்றிப் பலவிடத்துஞ் சேறலாகாது. பல்விடத்துஞ் சேறல் சாமானிய பக்தியேயாகும். ஒரு பெண் மகள் தன்னைக் கைப்பிடித்த காதலனிடத்துச் செய்யும் அன்புக் கும் தன் சோதரர் சுற்றத்தாரிடத்துச் செய்யும் அன்புக்கும் பேதமுண்டன்றே? முன்னையது விசேட வன்பும் பின்னையது சாமானிய அன்புமாம். விசேட வன்பை வேறோரிடத்துச் செய் யின், வியபிசரித்தற் குற்றம் வருதலோடு விசேட விலக்கணமும் பிழைபடும். சாமானிய அன்பை யுரிய சோதர ரிடத்துப்போன் மற்றையோரிடத்துச் செய்யலாம். அதனல் வருங்குற்றம் யாது மின்ரும். அவ்வாறே நமது சமயக் கடவுளிடத்துச் செய்யும் பக்தி விசேஷமும், ஏனைத் தேவர்களிடத்துச் செய்யும் பக்தி சாமானியமுமாம். ஆனல் அப்பெண்மகள் தன்னுயிர்க் காத லனைப் பாராட்டி ஏனைச் சோதரர் முதலியோரையு மிகழாது உபசரித்தல் போல நாமும் நம்சமயத் தெய்வத்தைப் பாராட்டுத லோடு மற்றைத் தேவர்களையு மிகழாது அவரவர்க் கேற்றவாறு உபசரித்துப் போற்றுதல் கடனும். இவ்வாறு தத்தஞ் சமயத் தெய்வங்களிடத்து வைக்கும் விசேட அன்பே நல்லின்பந் துய்ப் பித்தற்குரியதாகும். இங்ஙனமின்றி யெல்லாஞ் சமஞ்சம மென்று கூறுவார் ஒன்றினும் நிலை பெருது தமக்குரிய ஆன்மலாபத்தை முடிவிலிழந்தவரே யாவர். சமய சாத்திர விசாரத்தால் தத்துவ நிலை யதிகாரநிலை முதலிய தாரதம்மியங்களைக் கண்டுகூறல் அவ ரவர் அன்பு நிலைப்படுதற் குபயோக மாதலானும், முன்னைய சமயாசாரியர்களெல்லாரும் அங்ஙனங் கூறிப் போந்தமை யானும், அது நிந்தையாகாது. நிந்தையாவது துரபிமானத்தால் உள்ளதை யில்லதாகவும், இல்லதை யுள்ளதாகவுங் கூறிப்பழித்

தலேயாம். "உள்ளேன் பிறதெய்வ முன்னையல்லா லெங்களுத்த மனே", "கற்றறியேன் கலைஞானங் கசிந்துருகே னாயிடினு, மற்றறியேன் பிறதெய்வம்" என்னுந் திருவாக்குகள் நிந்தையின்றி விசேட அன்பினிலக்கணத்தை வெளிப்படுத்துத லுணர்க. ஆகவே, நாம் நம்பதியாகிய சிவபிரானிடத்து விசேட பக்தியாகிய உண்மை யன்பு செய்தல் கடமையாம். இதர தெய்வங்களையும் உரியவாறு போற்றுதலைப் பற்றி விலக்கின்மையு முணர்தல் வேண்டும். அஃது அவரவர் மனநிலைக் கேற்ப மேற்கொள்ளத் தக்கதொன்றும்.

இனி, சைவர்களாகிய நாம் நம் இறைவனை முறைப்படி வழிபடுதற்கு இன்றியமையாது மேற்கொள்ளத் தக்கது தீக்ஷையே யாகும். தீக்ஷை யில்வழிப் பஞ்சாக்ஷர மகா மந்திர முதலியவற்றைச் செபித்தற்குக் கூடாமையானும், சரியை முதலிய நால்வகை நெறியொழுக்கம் பெறப்படாமையானும் அஃது இன்றியமையாத தொன்றேயாம். தீக்ஷையாவது ஆன்மாக்களிடத்துள்ள சிவ சக்தியை வெளிப்பட வொட்டாது தடையாக மறைத்து நிற்கும் மல சக்தியைக் கெடுத்துச் சிவத்துவத்தைக் கொடுப்பதாகிய சிவசக்திக் கிரியையாகும். இதனை,

"ययानुग्रहरूपिण्याशक्तेर्गतिनिरोधिका ।
मलस्यक्षीयतेशक्तिस्सादीक्षाशाम्भवीक्रिया ।
दीक्षैवमोचयेत्पाशान्शिवतत्वंददात्यणोः॥"

எனவரும் பௌஷ்கராகமத்தானு முணர்க. இன்னும் இத்தீக்ஷையினாலேயே மோக்ஷ முதலிய எல்லா நலன்களுஞ் சித்திக்குமென்னு முண்மையை வாயு சங்கிதை முதலிய புராணங்களானும், விரித்துக் கூறுஞ் சிவாகமங்களானு முணர்க. இத்தீக்ஷை பலதிறப்படும். அவற்றின் விளக்க விசேடங்களையெல்லாம் ஆகமகங்ளுட் டெளிவாக வுணரலாம். சமய தீக்ஷைபெற்று இறைவன் உருவத் திருமேனியைப் புறத்தொழின் மாத்திரையான் வழிபடுதலாகிய சரியையும், விசேட தீக்ஷைபெற்று அருவுருவத் திருமேனியை புறத்தொழிலகத் தொழிலிரண்டானும் வழிபடுதலாகிய கிரியையும், அருவத் திருமேனியை நோக்கியகத்தொழின் மாத்திரையான் வழிபடுதலாகிய யோகமும், நிரு

வாண தீக்ஷை பெற்று இம்மூன்றனையுங்கடந்த சச்சிதானந்தப் பிழம்பாகிய இறைவன் சொரூபத்தை வழிபடுதலாகிய ஞான நிலையும் ஆகிய இந்நால்வகை மார்க்கங்களுள், தந் தகுதிக்கேற்ப வியன்றதொன்றை யநுட்டித்து வருதல் ஒவ்வோ ரான்மாக்க ளுக்கு முரிய கடமையாகும். அறநூல்களிற் கூறப்பட்ட ஜீவதயை, கொல்லாமை, புலாலுண்ணாமை, கட்காம நீத்தன் முதலிய வுயர்ந்த ஒழுக்கங்க ளெல்லாம் ஈண்டுக் கூறிய சைவ நெறிக் கண் அடங்குமாதலின், வேறாக விரித்திலன். வைதிக குலத்திற் பிறந்தாருள்ளுஞ் சில நவீன அறிவுடையோர், கிரியைகள் கேவல மௌட்டியர்களுக்கே யன்றி யறிவுடையார்க்கில்லை யெனவும், அறிவுடையார் உண்மையுணர்ந்து அந்தக்கரணங்களை மாத்திரந் திருத்திக் கோடல் போதியதெனவுங் கூறி நித்திய கன்மங்களைப் பொருட்படுத்தாது காலத்தை வறிதே கழிக்கின்றனர். அவ ரெல்லாம், கன்மாநுட்டானங்களாலன்றிச் சித்த சுத்தியுண்டாகா தென்று அனுபவ ஞானிகளாகிய நம் பண்டையோர் கூறி யவ்வாறே யொழுகிய வுண்மையையொரு சிறிது முணர்ந்திலர். கீதையிற் கண்ணபிரான், தத்துவ ஞானியுங் கன்மத்தைவிடல் தவறெனவும், மேற்கோட லின்றியமையாத தொன்றெனவுந் தடை விடைகளா லருச்சுனற் குபதேசித்ததையு முணர்ந்திலர். உண்மை ஞானி யொருவர் எல்லாப் பந்தங்களையும் ஒருவிச் சுத்த ஞானப்பிரகாசத் தியைந்திருக்குங்காற் கன்மங்களவரைத் தாக்கா மற் றாமே யொழியும். அந்நிலையைப்பற்றி யீண்டுச் சங்கித்த லியைபின்று. கன்மந்தானே யொழியப் பெற்றவொரு மகா ஞானியைநோக்கி யொருவன் அடிகாள், தேவரீர் சந்தியோபா சனை செய்யாதிருத்தலென்னை ? என்ற வினாவினுக்கு, அவர்,

मृतामोहमयीमाताजातोवोधमयस्सुतः ।
सूतकद्वयसंप्राप्तोकथंसंध्यामुपास्महे ॥

(இதன் மொழி பெயர்ப்பு)

*அஞ்ஞானத் தாய்மரண மானா லகீதொன்றே*
*மெய்ஞ்ஞானக் கான்முளையு மேவினன்—இஞ்ஞாலந்*
*தன்னின் மரண சனனவிரு சூதகத்தேன்*
*உன்ன லெங்ஙன் சந்திசெய லோர்."*

(தொடரும்)

# கருவூர்த்தேவர்

[திரு. C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள்.]

(௩சஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

முருகப் பெருமானுக்கு இளவலாகிய வீரவாகுதேவராலே காளியினது செருக்கும் வீரமும் ஒடுக்கப்பட்டன. அவளது எட்டுக் கைகளையும் தனது ஒரு கையினல் இறுகப் பிடித்துக் கொண்டு அவளது மார்பிலே தேவர் தமது மற்றொரு கையினல் ஒரு குத்துக் குத்திய அளவிலே அவள் மார்பகம் பிளந்து இரத்தம் பெருகிற்று. அவள் வலிமைகெட்டு அவசமாய் வீழ்ந்து பின் தெளிந்தாள். "ஈறும் முதலும் இல்லாப் பரமனுகிய ஆறு முகன்றிருவருள் பெற்று அவன் ஏவலால் வந்த இவனேடு எதிர்த் தால் எனக்கு வெற்றி யுண்டாகுமோ? சிறிதும் புத்தி யில்லாமை யாலே இங்கு வந்தேன்" என்று தனக்குட் சிந்தித்துத் தன் செருக்கு எல்லாம் கெட்டு நின்று "இந்தச் சிறிய தீமுகன் என்னை அருச்சித்துப் பற்பல உயிர்ப்பலி முதலிய கொடுத்து வேண்டினன். அந்த நன்றி மறக்கலாகாதென நான் இங்கே வந் தேன். உனது வன்மையை உணர்ந்தேனில்லை. உன்னுடன் போர் செய்து இந்நிலைமையானேன். இனி எனது இருப்பிடம் செல் வேன் விடை தருக" என்று ஏத்திச் சென்றனள். இச் சரிதத் திலே நாம் என்ன உண்மை காண்கின்றோம் என்றால் காளி யானவள் ஒரு சிறு தெய்வம்; பரமசிவனுடைய அடியார்களாகிய ஏவலாள்களுக்கு முன்னர் இவள் எவ்வித ஆற்றலு மில்லாதவ ளாகித் தன் வன்மை குன்றி நிற்கிறுள் என்பதே. அடியார் இட்ட பணியிலே நிற்கத் தக்கன இச் சிறு தெய்வங்கள் என் பது உண்மை. எனவே காளிகோட்டத்து வாமிகளுக்கு உண்மை யறிவுறுத்தற் பொருட்டுக் காளியை மதுக் கொணரும்படி தேவர் இட்டத்தை நிறைவேற்றக் காளி நடந்துகொண்டமை நமக்கு யாதொரு வியப்பையும் தராது.

இனி அரங்கேசர் தமது மார்பில் அணிந்திருந்த முத் தணியை நமது தேவர் கேட்பக் கொடுத்தனர் என்ற வரலாற்

றைச் சிறிது பார்ப்போம். மேழேகண்ட சில உண்மைகளை சிறிது சிந்திப்போமானால் இதில் நமக்கு ஒரு வியப்பும் தோற்றாது. தேவர்கள் என்பவர்கள் ஒருவகைக் கூட்டத்தினர். அவர்கள் சில தவம்செய்து அமுதம் அருந்திப் பற்பல போகங்களைப் புசித்து இருந்து அவை கழியும் கடைநாளில் இறந்து மீண்டும் பிறக்கும் நியதி யுட்பட்டவர்கள். அவ்வகையிற் பட்டவரே விட்டுணு மூர்த்தியும் என்று சாத்திரங்கள் கூறும். திருமால் பிரமன் இந்திரன் முதலியோர் யாவரும் தேவர்களே. இவர்கள் பரமசிவத்தினோடு ஒன்றுபட்ட அடியார் பெருமக்களைப் பின்பற்றிச் செல்லக் கடவர்களேயாம். திருநாவுக்கரசு சுவாமிகள் திருவைந்தெழுத்தை ஓதிக் கடலிலே கல்லிலே மிதந்துவந்தபோது அவரைத் தன் கைகளிலும் சிரத்திலும் தாங்கிச் செல்ல வருணன் முன்னுளிலே தவம் செய்திருந்தனன் என்று ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் அழகாக அருளிச் செய்கின்றார்கள்.

"வருணனுஞ் செய்தனன் முன்பு மாதவம்"

சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் திருவஞ்சைக்களத்திலிருந்து மகா கைலாயத்திற்கு அழைத்துச் செல்ல வெள்ளையானையைக் கொண்டுவந்து "இந்திரன் மால் பிரமன் எழிலார் மிகுதேவர் எல்லாம் வந்தெதிர் கொண்டு" அவரை யானைமீதேற்றிச் சென்றார்கள் என்பதனையும் காண்கின்றோம்.

"........தொண்டர்கள் பின்னும்பர் குழாம்
மல்குதிருக் காளத்தி மாமலை வந்தெய்தினர்"

என்ற பெரியபுராணத்திலேயும்,

"அறுகெடுப் பாரய னும்மரியும்
அன்றியுமற் றிந்திர னோடமரர்
நறுமுறு தேவர் கணங்களெல்லாம்
நம்மிற்பின் பல்ல தெடுக்கவொட்டோம்"

என்ற திருவாசகத்திலேயும் இவ்வுண்மையே கிடைக்கின்றது. திருவாரூரிலே தேவாசிரியன் என்று ஒரு மண்டபம் இன்றும் விளங்குகிறது. தேவர்கள் அங்கு நெருங்கித் தாங்கள்

நலம்பெற வேண்டி அதனை அடுத்து ஆசிரயித்து நிற்கின்றாராக வின் தேவர்களாலே ஆசிரயிக்கப்பெற்றது என்ற பொருள் உள்ள தேவாசிரியன் எனும் பெயர் அதற்கு இடப்பெற்றிருக்கிறது. அங்கே யாரை அவர்கள் ஆசிரயித்து அடுத்து இருக்கின்றார்கள் எனில், அவ்விடத்து நிறைந்து விளங்கும் திருத்தொண்டத் தொகையிலே துதிக்கப்பெற்றிருக்கும்

"அளவிலாத பெருமையராகிய அளவிலா அடியார்"

களையல்லவா ? அங்கு வீற்றிருக்கும் அடியார்கள்

"கைத்திருத்தொண்டு செய்கடப்பாட்டினார்"

"மாசி லாத மணிதிகழ் மேனிமேற்
பூசுநீறுபோல் உள்ளும் புனிதர்கள்"

"பூதமைந்து நிலையிற் கலங்கினும்
மாதொர்பாகர் மலர்த்தாள் மறப்பிலார்
ஓது காத லுறைப்பின் நெறிநின்றார்
கோதி லாத குணப்பெருங் குன்றனார்"

"கேடு மாக்கமுங் கெட்ட திருவினார்;
ஓடும் செம்பொனு மொக்கவே நோக்குவார்;
கூடு மன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்"

"ஆரங் கண்டிகை யாடையும் கந்தையே
பார மீசன் பணியல தொன்றிலார்;
ஈர வன்பினர் யாதுங் குறைவிலார்"

என்றிவ்வாறெல்லாம் அருண்மொழித்தேவர் அருளியபடி உள்ள பேசவொண்ணாப் பெருமை பிறங்கினவர்கள். அளவற்ற வீரமும் விறலுங்கொண்டவர்கள். திருவாரூர்த் தியாகேசரே மறை மொழிந்த தமது திருவாக்கினாலே 'தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கு மடியேன்' என்று இவர்களது துதிக்கு முதலெடுத்துக் கொடுக்க நமது சைவ சமய பரமாசாரிய மூர்த்திகளாகிய திருநாவலூர் நம்பிகளாலே திருத்தொண்டத் தொகையாலே துதித்து வணங்கப்பெற்றவர்கள். இவர்களது தன்மையாலும்

வன்மையாலும் உலகமெல்லாம் உய்யும்பொருட்டு இவர்களை அடைகின்றது.

"அகில காரணர் தாள்பணிவார்கள் தாம்
அகில லோகமு மாடற்குரியர் என்று
அகில லோகத்துள் ளார்கள் அடைதலின்
அகில லோகமும் போல்வது: அதனிடை"

என்பது பிரமாணம். ஆகையினாலேதான்

"பூவார் திசைமுகன் இந்திரன் பூமிசை
மாவா ழகலத்து மான்முதல் வானவர்
ஓவா தெவரு நிறைந்துறைந் துள்ளது
தேவா சிரிய னெனுந்திருக் காவணம்"

என்று தேவர்கள் அதனை ஆசிரயித்து அடுத்து நிறைந்திருக்கின்ற தன் காரணத்தை ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் விளக்கியருளினர். மேற்கூறிப்போந்த நியாயங்களின் வழியே பார்க்கும்போது அரங்கேசராகிய திருமால் சிவயோகசித்தராய் விளங்கிய கருவூர்த் தேவர் கேட்டபோது தமது மார்பில் தரித்த இரத்தின மாலையைக் கொடுத்தார் என்பதும் ஒரு ஆச்சரியமாமோ?

சிவயோகங் கைவந்த அடியார்கள் எப்போதும்

"மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்"
"பரமே பார்த்திருப்பர்: பதார்த்தங்கள் பாரார்".

ஆகையினாலே அவர்கள்

"ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்" ஆகின்றார்கள். இரண்டு வெவ்வேறு தன்மையுள்ள பொருள்கள் தம்மிற் கூடி ஒன்றாய்க் கலந்து ஒரே பொருளின் தன்மையை அடைவதே ஒட்டு என்று சொல்லப்படும். "ஒட்டு மாமரம்" என்பதனை நாம் பார்க்கின்றோம்; இரண்டு செடிகளின் கிளைகளைச் சேர்த்துச் செம்மைபெறக் கட்டினால் சுவையாகிய ஒரேசெடியாக உண்டாகி இனிமை பயக்கின்றது. அதுபோலவே உயிரும் எப்போதும் கடவுளையே தன்னுட்கொண்டு நிற்குந் தன்மையாலே கடவுளோடு ஒட்டு இட்ட பண்பினை அதாவது சேர்ந்து

ஒன்றாக இணைந்த நிலையை உடையதாகின்றது. ஒட்டிய இறை வனது இனிய செம்மையே இதற்கும் தன்மையாகின்றது.

> "உயிரா வணமிருந்து உற்றுநோக்கி
> உள்ளக் கிழியி னுருவெழுதி
> உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தால்
> உணரப் படுவாரோடு ஒட்டிவாழ்தி"

என்பது பிரமாணம். இவ்வாறு இறைவன் ஒட்டி வாழும்போது அவனுக்குச் செய்யப்பெறும் வழிபாடுகள் அவர்க்கும் உரியன வாகின்றன. ஆதலின் இதனை இன்னும் விரிக்கவேண்டிய அவ சிய மில்லை. இனி, நமது தேவர் மதுவும் ஊனும் அருந்தி ஊரூர் திரிந்தார் எனவும், வேதியர்களால் வாமமார்க்கத்தவர் என்று இகழப்பட்டார் எனவும் இச்சரித்திரத்திலே கேட்கிறோமல்லவா? சிவனடியார்களுக்கு இது பொருந்துமா என்று பார்ப்போம்.

பரத்திலே சிந்தைவைத்த பரமயோகிகள் செயல்களைக் கேவலம் உலகமார்க்கத்திலே உழலும் எம்மனோர் செய்கை போலக் காணலாகாது.

> "எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
> முத்தர் மனமிருக்கும் மோனத்தே"

என்றபடி அவர்கள் என்ன செய்தாலும் அந்த அந்தத் தொழில் களிலே மனம் சிறிதும் பற்றுகின்றதில்லை. சீவன்முத்தர்களா கிய இந்த வித்தகர்களின் மனம் எப்போதும் சிவத்தையே யடைந்திருக்கும். ஆதலின் அந்த அந்தத் தொழில்களின் பலன் அவர்களைச் சென்றடையா. இத்தகையோர் விழித்திருந்தாலும் எதிரில் நிகழும் உலகத் தோற்றங்கள் அவர்கள் கண்ணுக்குப் புலப்படா. ஒருவன் அவர்கள் திருமேனிமேற் புடைப்பானாயி னும் அவ்வுணர்ச்சி அவர்களைத் தாக்காது. என்னெனில்,

> "விழித்தகண் குருடாய்த் திரிவீரர்"

எனவும்

> "சொரியினும் தாக்கினும் துண்ணென்றுணரார்"

எனவும் விவரிக்கப்பெற்ற தன்மையை யுடையவர்களாதலான். சண்டீசுவர நாயனார் தாம் செய்யும் சிவபூசையிடையிலே அவர் பிதா சென்று அவர் தம் திருமுதுகிற் புடைத்துக் கொடிதாம் மொழி கூறவும் அவர் பூசையின்மேல் உறைப்புடைய மனம் பதிய வைத்திருந்த தன்மையினால் அவைகளில் ஒன்றினையும் அவர் அறிந்தாரில்லை.

> "கண்ட போதே விரைந்திழிந்து கடிது சென்று கைத்தண்டு
> கொண்டு மகனார் திருமுதுகிற் புடைத்துக் கொடிதா மொழிகூறத்
> தொண்டு புரியும் சிறியபெருந் தோன்ற லார்தம் பெருமான்மேன்
> மண்டு காத லருச்சனையின் வைத்தார் மற்றொன் றறிந்திலரால்"

> "மேலாம் பெரியோர் பலகாலும் வெகுண்டோ னடிக்க வேறுணரார்
> பாலார் திருமஞ் சனமாட்டும் பணியிற் சலியா ததுகண்டு........."

என்று **பெரியபுராணம்** அருளியிருக்கின்றது. சாதாரணமாகவே மனம் ஒன்றிலே பதிந்துவிடுமானால் வேறு அனுபவங்களின் உணர்ச்சி மனதிற் புகுகின்றதில்லை என்பது மனோதத்துவ நூலார் கொண்ட முடிபாம். மனம் சேராமல் செய்கை நிகழுமா? என்று கேள்வி பிறக்கலாம். ஆம்: நிகழும். மனம் உடன் நிகழாமல் செய்கை தனித்து நிகழும்; செய்கை உடன் நிகழாமல் மனமும் நிகழும். உதாரணமாக: ஒருவன் தூக்கத்திலிருந்து விழிக்காமலே எழுந்து நடந்து செல்கின்றான். இஃது ஒருவகை நோயின் குண மென்பர். (Somnombulism) அப்போது கைகால் முதலிய புறக்கருவிகள் தொழில் செய்கின்றனவே யன்றி மனம் அவற்றோடு உடன் கலக்கின்றதில்லை. ஒருவன் தூங்கிக்கொண்டிருக்கும் போதே விழிக்காமலே விழித்ததாகவும் எழுந்து வேறு ஒரு இடத்திற்கு நடந்து போனதாகவும் கனாக்காண்கின்றான். இதிலே செய்கை உடன் நிகழாமல் மனம் மட்டும் தொழிற்படுகின்றது. இவ்வாறு சொல்லிய மூவகை நிகழ்ச்சிகளிலே மனம் உடன் நிகழச் செய்யப்பெறுகின்ற தொழில்களே அவ்வவற்றின் பலன்களை அந்த உயிருக்கு விளைத்துக் கொடுக்கின்றன என்பது நூற்றுணிபு. அதுவே அனுபவமுமாம். யுக்திக்கும் இஃது ஒத்ததே. ஈசுவர வழிபாடு செய்கின்ற காலத்திலே வேறொன்றையும் மனத்

தில் நினைக்காமல் அதே கருத்தாக இருக்க வேண்டுமென்று பெரியோர் விதித்திருக்கின்றதும் இவ்வுண்மையினையே வெளிப் படுத்துகின்றது. எனவே செய்கைக்குத் தனியே பலன் இல்லை. மனம் கலந்தவழியே உரியபலன் கிடைக்கின்றதாம். மனத்தோடு செயல் உடன் நிகழாத காலத்தும் மனத்தின் தனி நிகழ்ச்சிக் குப் பலன் உண்டாதலும் காண்கின்றோம். இது பலவகைக் கனு வின் நிகழ்ச்சியிலே வைத்து நன்றாக உதகரிக்கப்பெறும் உண் மையாம். ஆகவே மனங்கலவாத புறச்செய்கையின் பலன் உயி ரினைப்பற்றாது. மனநிகழ்ச்சியின் பலனே உயிரைச் சார்கின்றது என்பது ஒருதலை.

எனவே தேவர் சரிதத்திலே வரும் மதுவூனுதி யனுபவங் களின் இழுக்கு அவரைச் சாராவாயின அவைகளை அவர் நுகாது நுகர்ந்தனர் என்றே கொள்ளக்கிடக்கும். இத்தகைய உலக நடையில் இழிந்தனவாகத் தோற்றும் தொழில்கள் அடியார்க ளிடத்தே நிகழக் கண்டாலும் அவர்களது அடியார்தளிலக்கணத் திற்கு இழுக்கு அடைகின்றதில்லை. அடியார் தன்மைகளை அறிந்து அளவிடல் அரிது என்று ஸ்ரீ ஞானசம்பந்தமூர்த்திகள் ஆணையிட் டருளியிருக்கின்றார்கள்.

> "பொடியார் மெய் பூசினும் புறவி னறவங்
> குடியாவூர் திரியினும் கூப்பிடினும்
> கடியார்பூம் பொழிற்சோலைக் கள்ளின் மேயான்
> அடியார்பண் பிகழ்வார்க ளாதர்களே."

என்பது அவர்கள் திருவாக்கு.

இப்பிரமாணத்தினுலே அடியார்கள் இவ்வாறெல்லாம் இருத் தலும் கூடுமென்றும் அவ்வாறிருப்பினும், அவர்களின் உயர்ந்த பண்பிற்கு இழுக்கில்லை என்றும் உணர்கின்றோம்.

இனி இவர் சரிதப் பகுதிகளுக்கு எம்மட்டில் இவர் தந் திரு வாக்காகிய திருவிசைப்பாவிலே உள்ளுறைசான்று கிடைக்கின்ற தென்றும் அவ்வாறு கிடைக்கும் பகுதிகள் மேற்கூறப் போந்த கருவூர்த் தலபுராண வரலாற்றுடன் எம்மட்டிற் பொருந்தி நிற் கின்றன என்றும் ஒரு சிறிது ஆராய்வோம்.

இவர் தமது திருவிசைப்பாப் பதிகங்கள் ஒவ்வொன்றிலும் திருக்கடைக்காப்பிலே தமது திருப்பெயரைப் பொறித்து அருளுவது வழக்கம். திருஞானசம்பந்த சுவாமிகள் திருப்பதிகத் திருக்கடைக்காப்பிலே தமது திருப்பெயரைப் பொறித்து வைத்தமைபோல இப்பாட்டுகளிலே தம்மைக் "கருவூர்" என்றும் "கருவூரான்" என்றும் "கருவூரனேன்" என்றும் சொல்லி வைத்திருத்தலால் கருவூர்த் தேவர் என்பதே இவர் பெயரா யிருந்திருத்தல் வேண்டும். கருவூர் என்ற தலத்திற்கும் இவருக்கும் நெருங்கிய சம்பந்தமுமிருந்திருத்தல் வேண்டுமென்று ஊகிக்கக் கிடக்கின்றது.

"ஆரணமொழிந்த பவளவாய் சுரந்த வமுதமூறிய தமிழ்மாலை"
திருக்களந்தை ஆதித்தேச்சுரம். 10

"ஆரணம் பிதற்றும்" திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலம். 10

"ஆரணத்தேன் பருகியருந் தமிழ்மாலை கமழவரும்"
திரிலோக்கிய சுந்தரன். 11

"செழுமறை தெரியுந் திகழ்கரு வூரனேன்" திருப்பூவணம். 11

என்றுவரும் திருவாக்குகளாலே இவர் வேதம்பயின்ற மறையவர் என்று விளங்குவதோடு "ஆரணமொழிந்தபவளவாய் சுரந்த அமுத மூறிய தமிழ்மாலை" "ஆரணத்தேன் பருகி யருந் தமிழ்மாலை கமழவரும்" என்பனவற்றால் வேதவல்லமையோடு தமிழ் வல்லமையும் கூடினவர் என்றும், அக்கருத்துக்களைத் தமிழின் இன்னிசை கமழப்பாடவல்லவர் என்றும் தெரிகிறது. எப்போதும் வேதவசனங்களும் அவற்றின் கருத்துக்களடங்கிய தமிழ் வசனங்களுமே இவர் திருவாக்கிற் கமழ்ந்து விளங்கினவாம்.

"தருங்கரும் பனையதீந் தமிழ்மாலை" திருவிடைமருதூர். 11

"ஆலையம்பாகின் அனைய சொற்கருவூர் அமுதுறழ்தீந் தமிழ்மாலை"
திருமுகத்தலை. 10

"துறைவளர் தீந்தமிழ்மாலை" பெரும்பற்றப்புலியூர். 11

என்ற திருவாக்கினாலே இவரது தமிழ் மிகவும் இனிமை யுடையதும் இனிமை பயப்பதும் ஆம் என்பது வெளிப்படையாகின்றது.

இதனை வேறு எந்தக் காரணங் கொண்டும் நிச்சயிக்க வேண்டா. இவரது திருவிசைப்பாக்களை ஒரு முறை ஓதினவர்களும் அந்தத் தெய்வத் தீந்தமிழின் சுவைகளை அனுபவித்தறிவர். அவற்றிற் பொதிந்து கிடக்கும் அகப்பொருட் சுவையையும் அனுபவிப்பர். இவர் ஆரணமும் அருந்தமிழுமே யன்றி மற்றும் எல்லாக் கலை ஞானங்களும் கைவந்தவர் என்பது,

"காட்டிய பொருட்கலை பயில்கருவூரன்" திருச்சாட்டியக்குடி. 11

"நலமலி கலைபயில் கருவூர்" திருக்களந்தை ஆதித்தேச்சுரம். 11

என்பனவற்றுற் போதரும். இவர் பிச்சை யேற்று உண்டு திரிந்து செல்லும் துறவு வாழ்க்கை வாழ்ந்தனரென்றும் உலகத்தாரால் பித்தரென மதிக்கப்பட்டார் எனவும் அறியலாகும்.

"ஆரணம் பிதற்றும் பித்தனேன்"

திருக்கீழ்க் கோட்டூர் மணியம்பலம். 11

"அங்கையோ டேந்தித்திரி கருவூரன்"

கங்கைகொண்ட சோளேச்சுரம். 11

என்பன இதற்குப் பிரமாணமாம்.

"பாவியேன் செய்யும் பிழையெலாம் பொறுத்தென்
பிணி பொறுத்தருளாப் பிச்சரே"

திருக்களந்தை ஆதித்தேச்சுரம். 4

என அருளியவாற்றுல் இத் திருப்பதிகம் பாடும் சமயமோ அன்றி மற்றும் பலகாலமாகவோ இவர் பிராரத்த வசமான ஒரு நோயினுற் பீடிக்கப்பெற் றிருந்தாராதல் வேண்டுமென்று கொள்ளக்கிடக்கின்றது. "அருமருந் தருந்தி யல்லல்தீர் கருவூர்" என்றருளியதனுல் காயகற்பம் உண்டுத் துன்பநீங்கியவர் என்றும் ஊகிக்க இடமிருக்கின்றது. சீவன் முத்தராய் ஆகாமிய வினைகளைச் சிவபுண்ணியத்தினுல் ஒழித்த பெரியார்களும் பிராரத்த கருமங்களை அநுபவித்துக் கழிக்கும் வகையிலே சில அநுபவங்களை அடைவார்கள். "வினைகள் அனுபவித்தன்றிக் கழியா" என்பது பிரமாணம். இந்தவகையிலே பெரியோர்கள் சிலபோது நோய்களையும் அனுபவித்துக் கழிப்பர் என்பது ஸ்ரீ சுந்தரமூர்த்தி

சுவாமிகள் சரித்திரத்திலே காணலாம். அவரது திருமேனியில் தோன்றிய ஒரு நோயினைத் தீர்க்கும்படி திருத்துருத்தியிலே பரமசிவனைவேண்டி அவர் ஆணைப்படி அத்தலத்தின் வடகுளத்துக் குளித்து அந்நோய் நீங்கப்பெற்றார்என்றும் அது பழவினையான் வந்த பிணி என்றும் அதனைச் சிவபெருமான் இம்மையே ஒழித்தருளினர் என்றும் பெரிய புராணம் சாற்றுகின்றது.

"... ... ... ... ... திருவருளாற்போய்
விருப்பினொடுந் திருத்துருத்தி தனைமேவி விமலர்கழல்
அருத்தியினாற் புக்கிறைஞ்சி யடியேன்மே லுற்றபிணி
வருத்தமெனை யொழித்தருள வேண்டுமென வணங்குவார்"

"பரவியே பணிந்தவர்க்குப் பரமர்திரு வருள்புரிவார்
விரவியவிப் பிணியடையத் தவிர்ப்பதற்கு வேறாக
வரமலர்வண் டறைதீர்த்த வடகுளத்துக் குளிஎன்னக்
கரவிருத் தொண்டர்தாங் கைகுவித்துப் புறப்பட்டார்"

"மிக்கபுனற் றீர்த்தத்தின் முன்னணைந்து வேதமெல்லாந்
தொக்கவடி வாயிருந்த துருத்தியார் தமைத்தொழுது
புக்கதனின் முழுகுதலும் புதியபிணி யதுநீங்க
அக்கணமே மணியொளிசேர் திருமேனி யாயினார்"

ஏயர்கோன் கலிக்காம நாயனர் புராணம்.

இந்நோயானது பழவினை என்னும் பிராரத்த மாத்திரையான் வந்ததென்பதனையும் அதனை அனுபவிக்குமாறு செய்து திருவருளாற் பரமேசுவரன் இம்மையே ஒழித்தருளினர் என்பதனையும் சுவாமிகள் தமது தேவாரத்திருவாக்கிலே வகுத்தருளி யிருக்கின்றார்கள்.

"என்னுடம் படும்பிணி யிடர் கெடுத்தானை"

"பழவினை யுள்ளன பற்றறுத் தானை"

"தோடர்ந்தடுங் கடும்பிணித் தொடர்வறுத் தானை'

"அருவினை யுள்ளன வாசறுத்தானை"

"உற்றநோ யிற்றையே உறவொழித்தானை"

"இழித்தநோ யிம்மையே யொழிக்க வல்லானை"

"உலகறி பழவினை யற வொழித்தானை"

"அம்மை நோய் இம்மையே யாசறுத்தானை"

"மேலை நோய் இம்மையே வீடுவித்தானை"

எனவரும் அத்தலத் தேவாரங்கள் காணத் தக்கன. இன்னும்

"பண்புரி நற்றவத்துப் பழுதினளவு விறைவழுவுர் தொண்ட"

ராகிய வாகீசத் திருவடிகளை இம்மையிலே ஆளக்கருதிச்சூலை வேதனைதன்னைக் கண்ணுதலார் அருளினர் என்ற சரிதமும் இங்கே நமக்கு நினைவுக்கு வரத்தக்கதாம்.

"தோற்று தென் வயிற்றி னகம்படியே
குடரோடு தொடக்கி முடக்கியிட
ஆற்றேன் அடியேன் அதிகைக் கெடில
வீரட்டானத் துறை யம்மானே"

என்பது அவர் திருவாக்கு அல்லவா?

இத்தகைய பெரியார்க்குப் பிராரத்த அனுபவமாய் வரும் நோய்களையும் சிவபெருமானே தீர்த்தருளுவர் என்பது

"இடுக்கொன்று மின்றியெஞ் சாமையுன் பாத மிறைஞ்சுகின்றார்க்
கடர்க்கின்ற நோயை விலக்குகண்டாய்"

"சித்தத் துருகிச் சிவனெம் பிரானென்று சிந்தையுள்ளே
பித்துப் பெருகப் பிதற்றுகின் றார்பிணி தீர்த்தருளாய்"

என்று வரும் ஸ்ரீவாகீசர் திருவாக்குகளால் விளங்கும்.

"அடியேன்,

"உண்டவூண் உனக்காம் வகையெனது
உள்ள முள்கலந் தெழுபரஞ் சோதி"
(கங்கை கொண்டசோளேச்சரம்) 6

எனவும்

"கருங்கணின் றிமைக்குஞ் செழுஞ்சுடர் விளக்கும்
கலந்தெனக் கலந்துணர் கருவூர்" (திருவிடை மருதூர்) 10

எனவும்

"இருந்திரைத் தரளப் பரவைசூ ழகலத் தெண்ணிலங்
கண்ணில்புன் மாக்கள்
பொருந் துயிர்ப் பருவத் தறிவுற கருவூர்" (கோயில்) 11

எனவும்

வரும் திருவாக்குகள் பதியின் தன்மை வாய்ந்த இவரது அறிவு எங்கும் நிறைந்து எல்லாமறியும் சூக்குமமாகிய ஓர் நிறைவே யாம் என்பதை விளக்குவனவாம். இவர் உண்ட உணவு பரம சிவனுக்கேயாகும் என்னும் வகையிலே இவருக்குள்ளே பரம சிவன் கலந்து விளங்குகிறார்.

> "நடமாடுங் கோயில் நம்பர்க் கொன்றீயிற்
> படமாடுங் கோயிற் பரமர்க்க தாமே"

> "உண்டது மூன்று புவனமு முண்டது"

என்றுவரும் திருமந்திரக் கருத்துக்களை இங்கே நினைவு படுத்திக் கொள்ளலாம். கண்ணின் ஒளியுடன் கதிரின் ஒளிகலந்து காட்சித் தொழிற் படுதல்போலே இவரது தெய்வ வுணர்ச்சித் திறத்தி னாலே உலகம் யாவையும் கலந்து உணர்கின்றனர் என்றும். உலகிலே நிறைந்த மாக்களாகிய உயிர்த் தொகைகளுக்குள்ளே நிகழ்பவற்றைத் தமது சூக்கும உருவத்திலே நிறைந்து அறியும் அரிய திறமுடையார் என்றும் மேற்காட்டிய பிரமாணங்களால் தெரிகிறோம். இவற்றினாலே இவரது சிவயோக சித்தியின் பெருமை நன்கு விளங்குகின்றது. இவர் செயலை இறைவன் தன் செயலேயாகக் கொள்கின்றான். அதுவன்றியும் இறைவன் இலக் கணங்களாகிய எங்கும் நிறைதல், எல்லாமறிதல் என்பவை இவ ரிடத்தே பொருந்தி நின்றனவாம். எனவே பிரார்த்த அனுபோக மாத்திரம் உடலைத் தாங்கிநின்ற சிவன்முத்தர்களாய்ச் சிவத்தை யணைந்தோர் கூட்டத்திலே விளங்கியவர் நமது தேவர் என்பது பெறப்படுகின்றது.

தேவர் அருளிய மேலே காட்டிய திருவிசைப்பாக்களிலே உள்ளுறை சான்றுபற்றி அவர் சரிதப் பகுதிகளாக நமக்குக் கிடைத்தவை சில பொருள்களேயாம். அவற்றைத் தொகுத்துக் கூறுமிடத்து:—

அவர் கருவூரார் என்ற பெயரால் உலகத்திலே விளங்கினார். ஆரணம் பயிலும் வேதியமரபினர். அருந்திற் தமிழ்பாடும் ஆற்றலு டையவர். ஆரணமும் அருந்த தமிழுமேயன்றிப் பல்கலைகளும் பயின்றவர். உலகிலே காரணங்காட்டித் திரிந்த சித்தராகிய சிவ

யோகியார். அங்கையோடேந்திப் பலிகொண்டு திரியும் அரிய காட்சியர். பிராரத்தவகையாலே ஏதோ ஒரு பிணியின் வாய்ப் பட்டு ஒருகால் வருந்தியவர். அருமருந்து ஆகிய காயகற்பமுறை சாதித்துக் கைவரப்பெற்றமையால் தம உடலை வலியுடன் நீடித்து நிலைக்கச்செய்து கொண்ட பெரியார். சூக்குமமாகி எங்கும் நிறைந்த தமது வியாபக அறிவின் வல்லமையால் எல்லா உயிர் களின் நிகழ்ச்சிகளையும் அறியும் ஆற்றலுடையவர்.

என்னும் இச்சில உண்மைகளே தெரிகின்றன. ஆனால் இந்தக் கட்டுரையின் முற்பகுதியிலே விவரித்த கருவூர்ப் புரா ணத்திலே உள்ள அவர் சரிதக் குறிப்பிலே இன்னும் வேறு பல பொருள்களும் கிடைக்கின்றன. அவையாவன:—அறிவிலிகளா கிய சில பிராமணர்கள் இவரை மதுவூன் அருந்தும் வாமமார்க்கத் தவர் என்று சொல்லி யிகழும்படி இவர் நடை இருந்ததென்றும், இவருக்குக் காளி மதுவைக் கொணர்ந்தாள் என்றும், இவர் கட் டளையிட்டபடி வன்னிமரமானது மீன் மழை பெய்தது என்றும், தமது திருவாய்த் தம்பலத்தைக் கொண்டு அட்டபந்தன மருந் தாக்கிச் சிவப் பிரதிட்டைசெய்தார் என்றும், அரங்கேசர் தந்த மாணிக்கமாலையைப் பொதுமகளுக் கீந்தார் என்றும், வடக்கே, யுள்ள மாளவம் குருக்கேத்திரம் மாடம் இலாடம் முதலிய நாடுகளிலேயும் காசி, காஞ்சி, காளத்தி, அருணை, மதுரை, திருச் செந்தூர், கன்னியாகுமரி, திருநெல்வேலி, திருவானைக்கா முத லிய தலங்களிலேயும் சென்று தரிசித்துத் திருவிசைப்பா பாடி னர் என்றும் இன்னோன்ன பல குறிப்புக்களாம்.

பற்பல நாடுகளிலேயும் பொதிகைமலையிலும் தேவர் சஞ் சரித்தமை அவர் திருவிசைப்பாக்களாக இப்போது கிடைக்கும் பாட்டுகளிலே யாண்டும் குறிப்பிடப்படவில்லை. மேலே குறித்த தலங்களுக்கு இவர் பாடியதாகத் திருவிசைப்பாக்களுமில்லை. அதற்கு மாறாகக் கோயில் திருக்களந்தை, திருக்கீழ்க்கோட்டூர், திருமுகத்தலை, திரிலோக்கியசுந்தரர், கங்கைகொண்ட சோளேச் சுரம், திருப்பூவணம், திருச்சாட்டியக்குடி, தஞ்சை இராசரா சேச்சுரம், திருவிடைமருதூர் என்றபத்துத் தலங்களுக்குதான்

உள்ளன. மதுவூன் முதலிய வரலாறுகளும், மற்றும் சித்தமார்க்கத்திலே விளங்கும் பிறநிகழ்ச்சிகளும் இவர் பாட்டுகளிற் குறிப்பிடப்பெறவில்லை.

தம்மைப்பற்றிய பல குறிப்புகளைக்காட்டிச் செல்லும் வழக்கமுடைய தேவர் இவ்வாறு சித்தநிலையிலே கண்ட நிகழ்ச்சிகளிருப்பின் அவற்றையும் குறித்திருக்கக்கூடும். எனவே கருவூர்ப் புராணத்திலே அதிகமாகக் கண்ட இவ்வரலாறுகள் திருவிசைப் பாவினுலே உறுதிபெருது நிற்கின்றன. பதினெண்சித்தர்கள் என்ற தொகுதியிலே "கருவூரார்" என்ற பெயரோடு ஒரு சித்தர் பாகாயப் பிரவேசம், வைத்தியம், முதலியவை கைவந்த சித்து வல்லராய் விளங்கினுர் எனக் கேட்கின்றோம். அவர் தான் நமது திருவிசைப்பா அருளிய

"அருமருந்தருந்தி யல்லல் தீர்கருவூர்"த் தேவரோ?

தஞ்சை இராசரா சேச்சுரம் 11

இவாகள் முறை சாதித்து நோய் நீக்கமும் உடல் வன்மையும் பெற்ற சித்தராயிருக்கலாம் என்று சொல்ல இடமிருக்கின்றது. "காரணத்தின் நிலைபெற்ற கருவூரன்" திரிலோக்கிய சுந்தரன், 11 என்றபடி உலகத்திலே காரணபுருடராய் அனேக அற்புதங்கள் செய்து திரிந்தாதல் வேண்டும். இது மேற்கூறிய இத்தேவர் காய கற்பஞ்சாதித்த சித்த மூர்த்திகள் என்னும் கருத்தை வலியுறுத்து கின்றது. (தொடரும்)

---

## நிலங்களின் தட்பவெட்ப வேற்றுமையால் மொழிநடைமாறல்

(க. ப. சந்தோஷம் B. A., L. T.,)

(கலாசிந்தாமணியினின்றும் விரித்தெழுதியது)

மொழிகளின் தோற்ற வளர்ச்சிகளை ஆராயுங்கால் அவை எல்லா நாடுகளிலும் ஏறக்குறைய ஒரேமாதிரியாகத்தானிருக்கின்றன. உயரம் என்ற சொல், மரம், மலை முதலியவற்றின் மேல் நோக்கிய அளவை முதலிற் குறிக்கும். மேல்நோக்கிய அளவு என்ற கருத்திலிருந்து 'உயர்வு' என்ற பண்புப்பெயர் தோன்றி

மக்கள் பெரிதும் போற்றத்தகும் தன்மைகளெவைகளோ அவைகளைக் காட்டா நிற்கும். உயர்ந்தோர் எனப்படுவோர் மேலோர்; உயர்வு, மேல் என்பன ஒரு பொருட் பன்மொழிகள். நமது நாட்டில் மலைமுடிகளின்மீது கோவில்கள் கட்டப்பட்டிருப்பதும் இதுபற்றியே. எங்கும் நிறையும் இறைவன், மலையின்மீது மாத்திரம் சிறப்பாய் உறைபவனல்லன். ஆயினும், கடவுள் உயரவிருக்கின்றார் ;எனுங்கொள்கை மக்களுட் பெரும்பகுதியோருக்குளதாகையால் கோவில்கள் மலைகள் மீதமர்ந்தனவென்க. விவிலியம் (The Bible) எனுங் கிறித்துவநூலில் பத்துக்கட்டளைகள் என்று பெயர்பெறும் அறமுறை ஒரு மலையின்மீது ஆண்டவனால் அருளப்பட்டனவென்று எழுதியிருப்பதையும், கிறித்து மலைமீதமர்ந்து ஒரு சொற்பொழிவு நிகழ்த்தியதாகக் கூறியிருப்பதையும் ஒப்பிட்டு உண்மை யுணர்ந்துகொள்க. ஆங்கிலத்தில், High, Lofty, Elevated, Eminent என்ற கிளவிகளெல்லாம் அடிப்படையாக உயரத்தையே காட்டுவன. High Principles, Lofty Ideals, Elevated Thoughts, Eminent men. என வருவனவற்றை நோக்கின் உயரம் எங்ஙனம் உயர்வாயிற்றென்பது வெளிப்படும். இங்ஙனமே, பள்ளத்தாக்கு, குழி, ஆழம் முதலியவற்றினின்றும் தாழ்மை, கீழ்மை என்ற பண்புப் பெயர்கள் பிறக்கும். தாள், தலை என்பன எல்லா மொழிகளிலும் முறையே பணிவையும் சிறப்பையும் உணர்த்தும். அடியவர் என்ற தமிழ்ச் சொல்லை, To sit at one's feet என்ற ஆங்கிலச் சொற்றொடருடன் தூக்கிப் பார்க்க ஒருவாறு அவற்றினியைபு விளங்கும். தலை என்பது சிறப்பையுணர்த்துவது பற்றித் தாம் இறைவன் தலையிலிருந்து தோன்றியவர்களென்று சொல்லிக் கொள்வாருமுளர். Captain, Capital என்ற ஆங்கில மொழிகள் தலைமை பற்றி வந்தன. இவை 'கபாலம்' என்ற வடசொல்லுடன் கேண்மை யுடையவை. (கபாலம்=தலை) தலைவர்=உயர்ந்தோர்; தலைமைப் புலமை=உயர்ந்த அறிவு. நிறங்களில் வெண்மை குற்றமின்மையையும், கருமை குற்ற முண்மையையும், பசுமை இளமையையுங் குறிக்கும். 'பிள்ளைப் பருவத்து வெள்ளைநோக்கு' என்பதிலுள்ள குறிப்பை White-robed Saints என்ற ஆங்கிலத்

தொடரில் காணலாம்; பச்சைக்குழந்தை என்பதை A green fellow என்பதோடு ஒப்பிடுக. ''இன்னமுஞ் சொல்லவோ உன் மனங்கல்லோ, இரும்போ பெரும்பாரையோ'' என்பதன் கருத்து A stong-hearted step-mother, A man of iron will எனும் ஆங்கிலச் சொற்றொடர்களில் அமைந்திருக்கின்றது. இத்தகைய ஒற்றுமைகள் பல.

ஆனால், வையத்திலுள்ள நாடுகள் தட்பவெட்பங்களில் வேறுபட்டிருப்பதால் தண்மை, வெம்மை என்ற சொற்கள் நாட்டிற்கேற்ப வெவ்வேறு பொருள் கொள்கின்றன. கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்று நாம் பிரித்திருக்கும் ஆண்டை, இளவேனில், முதுவேனில், இலையுதிர் பொழுது, கூதிர் (spring, summer, autumn, winter) என்று ஆங்கிலர் வகுக்குகின்றனர். இந்த முறையில் முதுவேனிலை நாம் கருதுகின்றபடி கூதிரை அவர்கள் கருதுகின்றனர் என்பது தெரிகிறது. மேல்நாட்டார் எழுதும் நூல்களில் நிலக்கரி அல்லது தட்டைகொண்டு மூடப்பட்ட தீயருகில் தாய், தந்தையர், மக்கள், உறவினர் உட்கார்ந்து படித்துப் பேசிக் களிப்படையுங் காட்சியை அடிக்கடி நாம் பார்க்கலாம், இங்ஙனம் தீயின் வெப்பத்தை இனிமையாய் நுகரும் மக்களது உணர்ச்சி நெருப்பைக் கண்டு நடுங்கி விலகும் மக்களது உணர்ச்சியை ஒத்திருக்குமோ?

(தொடரும்)

---

## மதிப்புரை

சுக்கிரநீதி:—இந்நூல் வடமொழியினின்று தமிழில் மொழிபெயர்க்கப்பட்டதாகும். இதன்கண் திருக்குறளிலுள்ள பொருட் பகுதியின் கருத்துக்களே விளக்கமுறக் காணக்கிடக்கின்றன. இது திருவள்ளுவர் நூலுக்குப் பின்னெழுந்ததாகும். தமிழில் பொருட் பகுதியை விளக்கும் நூல் இல்லை என்னும் குறையை நிரப்புவான் கருதி இதனை மொழிபெயர்த் தச்சிட்டுதவிய பண்டிதமணி-திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்கட்குத் தமிழுலகு நன்றி செலுத்துங் கடப்பாடுடையது. இதன்கண் சேர்க்கப் பட்டிருக்கும் திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை எம். எ., எம். எல்., யவர்களும், திருவாளர் சோம சுந்தர பாரதி, எம். எ., வி. எல். அவர்களும் ஆராய்ந்து எழுதியிருக்கும் மதிப்புரை ஆராய்தற்கின்றியமையாதன. விலை ரூபா 4.

கிடைக்குமிடம்: காரியதரிசி, சன்மார்க்க சபை, மேலைச்சிவபுரி.

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்
திங்கள் தோறும் வெளிவருவது

| சிலம்பு ௪ | மெய்கண்டான் யாண்டு-எ௱௩. ஐப்பசித்திங்கள்<br>1926ஆ அக்டோபர்மீ—நவம்பர்மீ | பரல் ௰ |
|---|---|---|

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## ஆளுடைய பிள்ளையார்

[பண்டிதர் மு. வேங்கடசாமி நாட்டார்]

மதிமுடிப் பெருமான் திருவடி போற்றும் சைவ நெறியின் வழி வந்த வளவர்களின் சோழ மண்டலத்திலே, பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, சீகாழி, கொச்சைவயம், கழுமலம் என்னும் பன்னிரண்டு பெயர்களையுடைய திருப்பதியில், அந்தணர், குலத்திலே, கௌணியர் கிளையிலே சிவபாத விருதயரென்பார் ஒருவர் இருந்தனர். அவர் மனைவியார் கணவரின் கருத்திற் கிசைந்த

கற்பிற் சிறந்தவர்; பகவதியார் என்னும் பெயருடையவர். அவ் விருவருடைய தாய் மரபும் தந்தை மரபும் சைவ நெறி வழி வந்தனவேயாம். அதற் கேற்ப, அவர்கள் சிவபெருமானையன்றி மற்றோர் தெய்வத்தைக் கனவிலும் நினையாதவர்களாயும், திரு நீற்றின்பால் அன்பினை வளர்ப்பவர்களாயும் விளங்கினர்; அவர்க ளுடைய இல்லற வாழ்க்கை யாவரும் வியப் பெய்துமாறு சிறப் புற்றிருந்தது.

அவ்வாறிருக்கும் பொழுது, தமிழ் நாடெங்கும் சமண பௌத்தர்களின் பொய்ம்மை நெறிகள் பெருக, மெய்ச் சமய மாகிய சைவ நன்னெறி அருகுதலையும், திருநீற்றின் விளக்கம் குன்றுதலையும் சிவபாத விருதயர் கண்டு, கவலை கொண்டு, புற மதங்களின் தீமைகளைப் போக்கிச் சைவத்தைப் போற்ற வல்ல அரிய புதல்வரைப் பெறவேண்டி, இல்லறத்திலிருந்து கொண்டே, தோணியப்பரையும் பெரியநாய்ச்சியாரையும் நோக்கி மனைவியா ருடன் தவம் புரிந்தனர். அத் தவத்தின் பயனாக உலகமெல் லாம் உய்யும்படி பகவதியார் கருவுற்றனர். அதனை யுணர்ந்து, சிவபாத விருதயர், திருவருளைப் போற்றி, மூண்டெழுகின்ற மகிழ்ச்சியுடன், மறை நூன் முறையிற் செய்தற்குரிய சடங்கு களைப் பத்துத் திங்களினும் சுற்றத்தார்களோடு சிறக்கச் செய்து, பெரிதாகிய இன்பம் நுகரா நிற்கையில், திசைகளெல்லாம் விளக்க முறவும், பாசமயத் தருக்கொழியவும், வைதிகத்துடன் முதன் மையாகிய சைவ நெறி தழைத் தோங்கவும், தொண்டர்களின் மனம் களிப்படையவும், திருநீற்றின் பெருமை எண்டிசையும் நிலவவும், எல்லா வுலகங்களுள்ளும் நில வுலகமும், நில வுலகத்தி லுள்ள நாடுகள் பலவற்றினுள்ளும் தமிழ் நாடும் மேன்மை யெய்தவும், தமிழ் மொழியே ஏனை மொழிகளை வென்று விளங்க வும், மற்றும் இன்ன பல நலங்கள் பல்கவும், ஞாயிறு முதலிய கோட்களெல்லாம் நன்மையாகிய உச்சங்களிலே வலிமையுட னிருக்க, திருவாதிரை நாளிலே, சிறப்புடைய இலக்கினத்தில், பிள்ளையார் திருவவதாரஞ் செய்தருளினர்.

அப்பொழுது யாவருடைய உள்ளமும் இயற்கையாகவே மகிழ்ச்சி யுற்றன; நீர் நிலைகளெல்லாம் மிக்க தெளிவும் தட்பமும்

உடையவாயின; வானம் களங்கமின்றி விளங்கியது; தருக்களும் கொடிகளும் தழைத்து மல்கின; பறவைகளின் ஒலிகள் இன்பம் பயந்தன; வானோர்களும் மலர் மழை பொழிந்தனர்; மங்கல முழக்கமே எங்கணும் மலிந்தன; சீகாழிப் பதியினரும், அவருட் சிவபாத விருதயரும் உற்ற மகிழ்ச்சியை யாரால் அளவிட்டுரைக்க முடியும்? நெய்யணி விழாக் கொண்டாடினர்; சாதகன்ம முதலிய சடங்குகள் உரிய காலங்களில் மிகுந்த சிறப்புடன் செய்தனர். பகவதியார் பரமர் திருவடியைப் பரவும் அன்பினையே கொங்கை சுரந்து அமுது செய்தருளுவித்தார். பிள்ளையார் தாயருடைய மடித்தலமும் மணித்தவிசும் முதலியவற்றில் அமர்ந்து அவர்களாலே தாலாட்டப் பெற்றும், திருமுக மண்டலம் அசையச் செங்கீரை யாடியும், சப்பாணி கொட்டியும், மாளிகை முற்றத்திலே தவழ்ந்தும், வருக வருக வென்றழைக்கும் மாதர்கள் மனங் கரைந்துருக அணைந்து தழுவியும், தளர் நடை நடந்தும், சிறு தேர் உருட்டியும், சிறுமியர் மணற் சிற்றிலை அழித்தும் விளையாடிப் பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் பெருங் களிப்பினை விளைத்து வளர்ந்து, மூன்றும் ஆண்டு எய்தப் பெற்றனர். பண்டு சிவபெருமான் திருவடியை மறவாத பான்மையினராகிய அப் பிள்ளையார் தாம் அவ் விறைவரைப் பிரிந்திருக்கும் உணர்ச்சியானது ஓரோர்கால் உள்ளத்திற் றோன்ற வெருக் கொண்டாற் போலக் குறிப்பயலாய் அழுவர்.

இங்ஙனம் நிகழும் நாட்களில் ஒரு நாள், தந்தையாராகிய சிவபாத விருதயர் நீராடுவதற்குப் போம் பொழுது, பிள்ளையார், சிவ பெருமானுடைய திருவருள் கூட, அவரைத் தொடர்ந்து அழுது கொண்டு பின் சென்றார். பின் சென்ற பிள்ளையாரைத் தந்தையார் திரும்பி நோக்கி, வெகுண்டவர் போல விலக்கவும், அவர் கால் கொட்டி மீளாமையின், 'உன் செய்கை இது வாயில் வா' என்று உடன் கொண்டு சென்று, திருக் கோயிலுள்ளிருக்கின்ற வாவியின் துறையை அடைந்து, பிள்ளையாரைக் கரையில் வைத்து விட்டு, தீர்த்தத்திலே இறங்கிப் பல கடன்களும் இயற்றுகின்றவர் அகமருடணத்தின் பொருட்டு நீரிலே போது மூழ்கினர். அப்பொழுது, பிள்ளையார் அவரைக் காணாது இறை

யளவேனும் தரியார் என்னும் நிலைமை தலைக்கீடாக, இறைவருடைய திருவடிகளை வழிபட்ட முன்னுணர்ச்சி மூள, கண்களை நீர் ததும்பும்படி கைகளினாலே பிசைந்து, இதழ் துடிக்க அழுதின்றவர், தம்முடைய முற் சார்பை அறிந்தோ, பிள்ளைமையாலோ, இறைவருடைய திருத்தோணிச் சிகரத்தைப் பார்த்து, 'அம்மே அப்பா' என்று அழைத் தழைத்து அழுதார். அப்பொழுது, திருத்தோணியில் வீற்றிருக்கும் இறைவர் அவருடைய முற்றிருத் தொண்டை நினைந்து, அவருக்கு அருள் செய்யத் திருவுளங் கொண்டு, மலைமகளாருடன் இடப வூர்தியில் எழுந்தருளிப் பொய்கையின் மருங்கடைந்து, உமாதேவியாரை நோக்கி, 'இவனுக்குப் பாலடிசில் ஊட்டுவாய்' என் றருளிச் செய்ய, அனைத்துலகங்களையும் ஈன்ற அன்னையாகிய பிராட்டியார், தம்முடைய திருமுலைப் பாலைப் பொன் வள்ளத்திலே கறந்து, சிவஞானத்தைக் குழைத்து, பிள்ளையாருடைய கையிலே கொடுத்து உண்பித்தருளினார்; சிவபெருமானும் அவருடைய கண்ணீரைத் துடைத்து அழுகை தீர்த்து அருள் புரிந்தார். எல்லா வுயிர்களுக்கும் தந்தையும் தாயுமாகிய பெருமானும் பிராட்டியும் இவ்வண்ணம் அருள் புரிந்தமையால் ஆளுடைய பிள்ளையார் என்னும் பெயரும், தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் கிட்டுதற்கரிய சிவஞானத்தோடு சம்பந்த முற்றமையால் திருஞானசம்பந்தர் என்னும் பெயரும் அவர் உடையராயினார். எல்லா ஞானங்களும் அவரை யடைந்தன:

"சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்."

சிவபாத விருதயர் சிறிது பொழுதிலே தம்முடைய நியமங்களை முடித்துக் கொண்டு கரையேறி, மெய்யுணர்வுடன் பொலிகின்ற பிள்ளையாரை நோக்கி, 'நீ யார் தந்த பாலை உண்டாய்' என்று சினந்து, 'எச்சில் மயங்க உனக்கு இதனைத் தந்தவனைக் காட்டு' என்று சொல்லி, கையில் எடுத்த ஒரு சிறிய வளார்,

கொண்டு ஓச்ச, ஆளுடைய பிள்ளையார் ஆனந்தக்கண்ணீர் சொரிய, உச்சியின் மேல் எடுத்தருளிய ஒரு திருக்கை விரலி ஞலே சுட்டி, விசும்பின்கண் இடப வூர்தியின் மேல் உமாதேவி யாருடன் நின்றருளிய பரமசிவனைக் காட்டி, உள்ளே நிறைந்து பொங்கி யெழுந்த உண்மை ஞானத் திருமொழியினுலே, எல்லை யில்லாத மறைப் பொருளனைத்தையும் எவ்வுயிரும் உய்யுமாறு இனிமை வள மிக்க தமிழால் அருளிச் செய்தற்குத் திருவுளங் கொண்டு, மறைகட்கு முகலாகிய பிரணவத்தைத் தகர மெய்யு டன் புணர்த்தி, தம்முடைய பாடல் சிவபெருமானுடைய திருச் செவியில் ஏறும் பொருட்டு முன்னர் அத் திருச் செவியையே சிறப்பித்து,

"தோடுடைய செவியன் விடை யேறியோர் தூவெண் மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடி பூசியென் னுள்ளங் கவர்கள்வன்
எடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்தவருள் செய்த
பீடுடைபிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே"

என்று பாடத் தொடங்கி யருளினர். சிவபெருமான் தமக்குப் பிழை செய்தவர்களும் பின்பு தம்மை வந்தடையின் அவர்க ளுக்கு அருள் செய்வா ரென்பதை விளக்கும் பொருட்டு, தம்மை மதியாது தாம் வீற்றிருக்கும் திருக்கைலாய மலையை யெடுத்துத் தன் வலி யிழந்த இராவணன் பின்பு தம் மேல் இசை பாட அவ னுக்கு அருள் புரிந்த திறத்தை எட்டாந் திருப் பாட்டிலும், எவ்வகைப்பட்ட சிறப்பினரும் சிவபெருமானை அன்போடு வழி படி னன்றி அவரை அடையார்கள் என்பதை விளக்கும் பொருட்டு, அவரை வணங்காது வழுவாகிய மனத்தை மேற் கொண்டு மயங்கிய திருமாலும் நான்முகனும் பன்றியும் அன்னமு மாய்த் தேடியும் அடையாதவர்களாகிப் பின்பு, திருவைந்தெழுத் தைத் துதித்து உய்ந்த திறத்தை ஒன்பதாந் திருப்பாட்டிலும், வேத காரணராகிய கடவுளை அடையு நெறியை அறிந்து உய் யாத சமணர் புத்தர்களின் சமயங்கள் குற்ற முடையன என்னுந் திறத்தைப் பத்தாந் திருப்பாட்டிலும் அமைத்துப் பாடி, இங்ங னம் திருப்பதிகத்தை நிறைவித்து, திருப்பதிகப் பயன் கூறும்

திருக்கடைக் காப்புச் சாத்தித் தொழுதுகொண்டு நின்றார். சிவ பெருமானுடைய பெருங் கருணையைக் கண்டு தேவர்களெல்லா ரும் வானின்கண் ஆரவாரித்து மலர் மழை பொழிந்தனர். தேவ துந்துபிகள் முழங்கவும், கந்தருவர்களும் கின்னரர்களும் இசை பாடவும், இந்திரன் முதலிய இமையோர்கள் ஏத்தெடுக்க வும், சிவகண நாதர்கள் அர அர என்று பரவும் ஓசை தழைக்க வும், மறை முழக்குடன் முனிவர் குழாம் புடைசூழவும் சிவபெரு மான் உமாதேவியாருடன் திருத்தோணிக்கு எழுந்தருளினர். ஆளுடைய பிள்ளையார் அதனைக் கண்டு, அவரைத் தொடர்ந் தெழுகின்ற அன்பு மேலீட்டினாலே, தம்முடைய கண் வழியே சென்ற கருத்து நீங்காமற் கலந்து செல்ல, சிவபெருமான் எழுந் தருளிய திருக் கோயிலினுள்ளே புக்கார். எல்லையில்லாத பெருந் தவத்தினை முன் புரிந்து அவருக்குத் தந்தை யெனப்படும் பேற் றினைப் பெற்ற சிவபாத விருதயர் கை குவித்து ஆனந்தக் கூத் தாடி, வெருட்சியும் வியப்பும் விருப்பும் அடைந்து, அவர் திரு வாய் மலர்ந்தருளிய திருநெறித் தமிழின் பொருட் குறிப்பை உணர்ந்தார். சிவபெருமானைத் தனியேகண்டு தொடர்ந்த பிள்ளை யாரைப் போலக் காணப் பெற்றிலராயினும், அங்கு நிகழ்ந்த அற் புதத்தைக் கண்டு, அது தோணியப்பருடைய திருவருளெனத் துணிந்து, பேரார்வத்தோடும் முன் சென்ற பிள்ளையாருக்குப் பின் சென்றார். (தொடரும்)

---

## சீவகாருண்ணியம் பேணுச்சமயங்கள் தீப்பாலனவாம்

[ஸ்ரீசபாபதி நாவலர் அவர்கள்]

அவைதிக விவிலியர் ஆருயிரைக் கொன்று ஊன் அருந்தல் மறமாகாது, அறமேயாமென்பர். அங்ஙனமே அவைதிகராய பௌத்தரும் பிறர் ஆருயிரைக் கொன்று கொடுக்கும் ஊன் தின் றன் மறமாகாது, அறமேயாமென்பர். இனி வைதிகருட்பட்ட பூர்வமீமாஞ்சர் வேள்விக்கண் ஆருயிரைக் கொன்று கடவுட்குச் சமர்ப்பித்துக் கொள்ளும் அவி ஊன் உண்ணல் மறமாகாது, அறமேயா மென்பர். ஒருசார் அசுத்த சாக்தரும் சத்திக்குச்

சமர்ப்பித்த ஊன் தின்றல் மறமாகாது, அறமேயாமென்பர். இம்
மதத்தர் எல்லாரும் ஊன் உண்ணுதற்கண் இச்சை மீதூர்ந்து
அறிவின்றி அறனல்லதாகிய ஆருயிர்க்கொன்று ஊன் உண்ணு
தலை ஓர் அறமெனக் கொண்டு கூறுகின்றாராதலால், அவர் கூறும்
அப்பழி யுரைகளை அறிவுடைய நன்மக்களெல்லாம் மறமாகக்
கொண்டு விலக்குதலே செய்வர்.

மேற்சொல்லிய மதத்தர்கள் தாம் அங்ஙனம் தம் இச்சானு
கூலமாகச் சொல்லும் அப்பழி யுரைகளுக்கு ஓர் பலமாக்க
வெண்ணி அத் தம்முரைகள்தாம் பரம்பொருளெனக் கொண்டு
வழிபடுங் கடவுள் விதியாமென்பர். இப்பழிக் கொள்கையைக்
கடவுள் விதியாமென்று கொண்டு அங்ஙனம் சீவகாருண்ணியம்
பேணாது செல்லு நெறியினால் இவரெல்லாம் ஒத்த மாண்பினராயி
னும், அவைதிகராய விவிலியரும் பௌத்தரும், மற்றை வைதிக
ராய பூர்வமீமாஞ்சகர் அசுத்த சாக்தரென் றிவரைக்காட்டிலும்
மிகக் கொடியராகின்றார். யாதினாலெனின், பூர்வமீமாஞ்சகர்
அசுத்த சாக்தரென்பார் கொன்றுணல் பாவ மென்றலை ஒருவாறு
முன் உடம்பட்டாராய்ப் பின் அக் கொலையூன் கடவுட் பொருட்
டுச் சமர்ப்பிக்கப் படுதலின்; உண்ணத்தகும் நல்லூணாகின்ற
தென்று அறிவின்றிப் பிணக்குறுகின்றா ராதலினென்க. இனிப்
பௌத்தர் ஆருயிரைத் தாம் நேரே கொன்றுணல் பாவமென்று
முன்னுடம்பட்டாராகிப் பின் ஒருவர் ஆருயிரைக்கொன்று அத
னூன் கொடுப்பக்கொண்டு உண்ணுதல் பாவமாகாதென்று அறி
வின்றிக் கூறுகின்றாராதலால், தாமே ஆருயிர்களை வேண்டும்
பொழுதெல்லாங் கொன்று அவற்றின் ஊன் உண்ணலாம்; அது
நங்கடவுள் கட்டளையென்று கொடிய அஞ்ஞானங் கூறும் விவி
லிய மதத்தர்களைக் காட்டிலும், அப் பௌத்தர் மேம்பாடுடைய
ராவரென்பது சொல்லாதே அமையும். இனி அவைதிகருட்
பட்ட ஆருகதர் ஆருயிரைக்கொன்று ஊன் உண்ணுதல் எவ்வாற்
றானும் அறமாகாது; பெரியதோர் பாவமே யாமென்பர். மற்றை
வைதிகருட்பட்ட உத்தர மீமாஞ்சை வழிச்செல்வாராகிய வேதா
ந்த நற்சமயத்தாரும் அவ்வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்த
சற்சமயத்தாரும் ஆருயிர்க்கொன்று ஊன் உண்ணல் எவ்வாற்று

னும் அறமாகாது; கொடிய மறமேயாமென்பர். இவர்கள் சீவ காருண்ணிய அறிவுடையராய்ப் பழி ஊன் இச்சை கடிந்து நல் லறம்பட இவ்வாறு சொல்கின்றாராதலால், இவர் நல்லறவுரையை அறிவுடைய நன்மக்களெல்லாம் புகழுரையாகவே கொண்டு மிக வும் போற்றுதல் செய்வர். இனித் தெய்வப்புலமைத் திருவள் ளுவநாயனர் தந் திருக்குறளுள்ளே முற்பாலார் கொள்கையை மறுத்து இப் பிற்பாலார் கொள்கையையே மெய்ப்பாலாகக் கொண்டு நல்லறம் நன்கு நிறுத்துவர். நாயனர் திருக்குற ளுள்ளே முதற்கட் சீவகாருண்ணியமென்னும் அருளை நிறுத்தி இவ்வறம்பற்றிக் கூறிய நல்லற வுரைகளை அம்முறையால் இங்கு எடுத்துச் சொல்வாம்.

### 25 - ம் அதி. அருளுடைமை

அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள.

இதன்பொருள்:—பொருட் செல்வம் பூரியார் கண்ணும் உள- பொருளால் வருஞ்செல்வம் இழிந்தாரிடத்தும் உளவாம்; ஆதலால், செல்வத்துள்-செல்வங்கள் பலவற்றுள்ளும் ஆராய்ந்து எடுக்கப்பட்ட, செல்வம் - செல்வமாவது, அருட்செல்வம் - அரு ளால் வருஞ் செல்வமாம் என்றவாறு.

நல்லாற்ருனடி யருளாள்க பல்லாற்ருற்
றேரினு மஃதே துணை.

இ - ள். நல்லாற்ருல் நாடி - நல்ல வழிகளிலே நின்று அளவைகளாலும் யுத்தியாலும் நமக்குத் துணையாகும் அறம் யாதென்று ஆராய்ந்து, அருள் ஆள்க - அருளுடையராகக் கட வர்; பல் ஆற்ருல் தேரினும் - ஒன்ருேடொன் ருெவ்வாத பல சமய வழிகளால் ஆராய்ந்தாலும், துணை அஃதே - துணையாவது அவ்வருளே மற்ருென்றில்லை எ - று.

அருள்சேர்ந்த நெஞ்சினுர்க் கில்லை யிருள்சேர்ந்த
வின்ன வுலகம் புகல்.

இ - ள். இருள் சேர்ந்த - இருள் தங்கிய, இன்னு வுலகம் புகல் - துன்ப வுலகத்திலே போய்ப்புகுதல், அருள் சேர்ந்த - அருளைப் பொருந்திய, நெஞ்சினூர்க்கு - நெஞ்சினையுடையவர்க்கு இல்லை - இல்லை எ - று.

மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை.

இ - ள். மன்னுயிர் - நிலைபேறுடைய வுயிர்களை, ஓம்பி - பாதுகாத்து, அருள் ஆள்வாற்கு-அருளினை ஆளுகின்றவனுக்கு, தன் உயிர் - தனது உயிர், அஞ்சும் வினை - அஞ்சுதற்கேதுவாகிய வினைகள், இல் என்ப - மறுமையில் உளவாகாவென்று சொல்வர் அறிந்தோர் எ - று.

அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி.

இ - ள். அருள் ஆள்வார்க்கு - சீவகாருண்ணிய வறத்தினை யுடையவர்க்கு, அல்லல் - துன்பம், இல்லை - இம்மையினும் உள தாதலில்லை; வளிவழங்கு மல்லல் மாஞாலங் கரி - சான்று வழங்கு தற் கிடமாகிய வளம்பொருந்திய பெரிய உலகத்துள்ளார் இதற் குச் சான்றவர் எ - று

பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரருணீங்கி
யல்லவை செய்தொழுகு வார்.

இ - ள். அருள் நீங்கி - உயிர்களிடத்துச் செய்யும் அருளினைக் கைவிட்டு, அல்லவை - தவிரற் பாலனவாகும் கொடுமைகளை, செய்து ஒழுகுவார் - அவ்வுயிர்களிடத்துச் செய்து ஒழுகு கின்றாரை, பொருள் நீங்கி-முற்பிறப்பினும் தமக்குறுதிப் பொருளாகிய வறத்தினைத் தேடாமல், பொச்சாந்தார் என்பார் - தாந் துன்ப முற்றமையை மறந்தவரென்று சொல்வர் நல்லோர் எ-று.

அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லா கியாங்கு.

இ - ள். அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை - உயிர் கண்மேல் அருளில்லாதார்க்கு வீட்டுலகத்தின்பமில்லை, பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லாகியாங்கு - பொருளில்லாதார்க்கு இவ்வுலகத்தின்பம் இல்லையாயினாற்போல எ - று.

பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றார்
அற்றார்மற் றாத லரிது.

இ - ள். பொருள் அற்றார் - ஊழ்வலியால் வறுமை யெய்தினர், ஒருகால் பூப்பர் - அது நீங்கிப் பின்னொருகாலத்துச் செல்வத்தினாற் பொலிவெய்துவர்; அருள் அற்றார் - இனி உயிர்களிடத்து அருளில்லாதவர், அற்றார் - பாவமறாமையால் அழிந்தவரே, மற்று ஆதல் அரிது - பின்னொரு காலத்தும் ஆக்கமெய்துதல் இல்லை எ - று.

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேறி
னருளாதான் செய்யு மறம்.

இ - ள். அருளாதான் - உயிர்களிடத்து அருளைச் செய்யாதவன், செய்யும் அறம் - செய்கின்ற அறத்தினை, தேரின் - ஆராயின், தெருளாதான் - தெளிவு எய்தாதவன், மெய்ப்பொருள் - மெய்ந்நூலிற் சொல்லிய பொருளை, கண்டற்று - கண்டாற் போலும் எ - று.

வலியார்முற் றன்னை நினைக்க தான்றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.

இ - ள். தான் - சீவகாருண்ணிய மில்லாதவன்றான், தன்னின் மெலியார்மேற் செல்லுமிடத்து - தன்னின் மெலியவர்கண் மேல் அவர்தம்மை வருத்தச் செல்லுங்கால், வலியார் - தன்னின் வலியார் தன்னை வருத்த வருங்கால், முன் - அவர்முன், தன்னை - அஞ்சிநிற்குந் தனது நிலையை, நினைக்க - நினைக்கக் கடவன் எ - று.

தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனார் அருளுடைமை யென்னும் இவ்வதிகாரத்து அவ்வருளுடைமை என்னும் அறம்

மக்களுக்கு உறுதி பயக்கும் செல்வங்கள் பலவற்றுள்ளும் வைத்து ஆராய்ந்து எடுக்கப்பட்டதோர் சிறப்புடைய செல்வமாமென்றும், அவ் வருட்செல்வம் நன் மக்களிடத்திற் றானே உளதாவ தொன்றாதலின் மற்றைத் தீயோரிடத்தும் சென்றுளதாகும் பொருட் செல்வத்தின் வேறாகப்பிரித்து மிகமேலாக வைத்து நன்கு மதிக்கற் பாலதாமென்றும், முதற்கண் நிறுத்தி யருளினார். அதன் பின்னர் அங்ஙனம் மேற்கொண்ட தங் கொள்கை காட்சி அனுமானம் ஆகமமென்னும் அளவை மூன்றற்கும் யுக்திக்கும் ஒத்த துணிபாமென்றும், சமயங்களெல்லாம் கொள்கை வகைகளால் ஒன்றோடொன்று ஒவ்வாறு மாறுபாடுறினும் அருளுடைமை மாந்தர்க்குச் சிறந்த துணையாமென்னு மதன்கண் ஒத்து ஒரு வழிப்பட்டு நடக்குமென்றும், வலியுறுத் தருளினார். அதன் பின்னர் அருளினை அவ்வாற்றால் ஆட்சிசெய்யும் தூயோர் இருணிரயத் தெய்தித் துன்புறார் அவ்வீட்டுலக மெய்தி இன்புறுவரென்றும், அருளறமுடையார் மாட்டு அவரஞ்சுதற் கேதுவாம் பாவங்கள் யாவும் புகுதா மாட்டாவென்றும், அவ்வருளறமுடையார் அம்மையினன்றி இம்மையினும் துன்பமுறார் இன்பமே யுறுவரென்றும், அருளாட்சி செய்தற்பயன் மேலிட்டு அதன் பெருமை இனிது விளக்கி யருளினார். அதன் பின்னர் மக்களுள்ளார் தாம் கழிந்த பிறப்புக்களிலும் தமக்கு உறுதி நாடாது தீங்குசெய்து ஆங்கட் டுன்புற்றதனை மறந்தொழிய வந்த கழிபெரு மயக்கினால் இம்மைக் கண்ணும் அருளாட்சி செய்யாது உயிர்கட்குத் தீங்கு சூழுவாராயினார் என்று எடுத்து அம்மக்கட் பகுதியார் அருளாட்சி செய்யாமைக்கு ஏதுக்காட்டி யருளினார். அதன் பின்னர் இவ்வுலகத்துச் சிற்றின்ப நுகர்ச்சிக்குப் பொருள் இன்றியமையாத சாதனமாமாறுபோல அவ்வுலகத்துப் பேரின்ப நுகர்ச்சிக்கு அருள் இன்றியமையாத சாதனமாமென்று உவமையொடு படுத்து எதிர்மறை முகத்தினால் அருளாட்சி ஒரு தலையாகப் புருடரால் ஓம்பற் பாலதாமென்று உபதேசித் தருளினார். அதன் பின்னர் அருளற்ற கொடியர் அப்பெரும் பாவத்தால் விழுங்கப்பட்டுச் செல்லுதலின் மற்று நெடுங்காலம் தமக்குறுதி சூழுதல் செயப்பெறாராய் அவலப்படுவரென்னு முகத்தால் அரு

ளுடைமைப் பேற்றின் எய்தற் கருமை சாதித்தருளினர். அதன் பின்னர் அருளில்லாதவன் அறஞ்செய்தற் கமையினும் தன்வன் கண்மையால் அவ்வறத்தைத் தானே கெடுத்து விடுவதல்லது ஒரு ஞான்றும் ஆக்கமெய்தமாட்டானென்று கூறுமுகத்தினல் அறங்கட்கெல்லாம் அருளுடைமை மூலமாய் நிற்றலை இனிது நாட்டி யருளினர். அதன் பின்னர் அருளில்லாதபாவி தன்னினும் வலியாராயினர் முன்னர்த்தான் அஞ்சி நிற்கும் புலம்பு நிலையை எண்ணுமாயின் தன்னினும் மெலிய உயிர்களை வருத்திடத் தான் செல்லமாட்டானென்னு முகத்தால் அருளில்லார் அருளுடையராதற்கு உபாயம் கூறியருளினர் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனர் இங்ஙனம்.

'சீவகா ருண்ணியமே செப்பிறைமனத்தினுமன் சிறந்ததந்தச்
சீவகா ருண்ணியமே யறங்கட்கெல்லா மூலமாய்த் திகழுமாயிற்
சீவகா ருண்ணியமே மக்களுயி ருறுதியெனத் தேடுஞ் செல்வஞ்
சீவகா ருண்ணியரா மானிடரே மானிடரிச் செகத்தின் மீதே'

என்று நாட்டி, அவ்வியைபுபட எடுத்து அவ்வருளற மாருன புலாலூண்மறுத்தலை அதன் பின்னுக அதிகரித்து அருளிச் செய்யலுற்ருர். அது வருமாறு.

## புலால்மறுத்தல்

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்கன மாளு மருள்.

இ - ள். தன்னூன் - தன்னுடம்பினை, பெருக்கற்கு - வளர்த்தற்பொருட்டு, தான் பிறிதூன் உண்பான் - தான் மற்ருென்றின் உடம்பூனை உண்பவன், எங்ஙனம் அருள் ஆளும் - எவ்வகையால் அருளை ஆளுவான் எ - று.

பொருளாட்சி போற்ருதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு.

இ - ள்- பொருளாட்சி - பொருளினுலே பயன் கொள்ளுதல், போற்ருதார்க்கு - அதனைப் பாதுகாவாதார்க்கு, இல்லை -

இல்லையாம்; ஆங்கு - அதுபோல, அருளாட்சி - அருளினலே பயன் கொள்ளுதல், ஊன்றின்பவர்க்கு - புலால் உண்பவர்க்கு இல்லை - இல்லையாம் எ - று.

படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா
தொன்ற னுடல்சுவை யுண்டார் மனம்.

இ - ள். ஒன்றன் - பிறிதோ ருயிரினது, உடல் - உடலைச், சுவையுண்டார் மவம் - சுவைபட யுணடவாது மனம், படை கொண்டார் நெஞ்சம்போல் - கொலைக் கருவியைத் தன் கையி லே கொண்டவாது மனம்போல, நன்றூக்காது - கொலையை நோக்குவதல்லது அருளை நோக்காது எ - று.

அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல.

இ - ள். அருள் யாது எனின் - அருள் எதுவென்று ஆரா யின், கொல்லாமை - கொலைசெய்யாமையாம்; அல்லது யாது எனில் - அவ்வருளல்லாத பாவம் யாதென்று ஆராயின், கோறல்- கொலைசெய்தலாம்; (ஆதலால்) அவ்வூன் தினல் - அக்கொலையால் வந்த ஊனைத் தின்னுதல், பொருள் அல்லது - பாவமாம் எ - று.

உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாதல் செய்யா தன்று.

இ - ள். உயிர்நிலை - உயிர்கள் உடம்புகளிலே நிற்றவ், உண் ணாமை உள்ளது - புலாலை உண்ணாமை என்னும் அறத்தினிடத் தது; (ஆதலால்) உண்ண - அந்நிலை குலைய அதனை உண்பா னுயின், அளறு - அவனை விழுங்கிய நரகம், அண்ணாதல் செய் யாது - பின் உமிழ்தற்கு வாய் திறவாது எ - று.

தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின்
யாரும் விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.

இ - ள். தினற் பொருட்டால் - தின்னுதல் காரணமாக, உலகு கொள்ளாதெனின் - உலகத்தார் ஊனைக் கொள்ளாராயின்

விலைப் பொருட்டால் - விலைப்பொருள் காரணமாக, ஊன் தரு வார் - ஊனை விற்பவர், இல் - யாரும் இல்லை எ - று.

உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) புலால் - புலாலானது, பிறிதொன்றன் புண் - பிறிதோருடம்பின் புண்ணும்; அது உணர்வாப் பெறின் - அது அசுத்தமா யிருத்தலை உணர்வாரைப் பெற்றால், உண்ணாமை வேண்டும் - அப்புலாலை உண்ணாதொழிதல் வேண்டும் எ - று.

செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன்.

(இ - ள்.) செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் - குற்றத்தி னின்றும் நீங்கிய அறிவினை யுடையார், உயிரின் தலைப்பிரிந்த ஊன் - உயிரினின்றும் நீங்கிவந்த ஊனை, உண்ணார் - தின்னார் எ - று.

(தொடரும்)

---

## நிலங்ளிகன் தட்ப வெட்ப வேற்றுமையால் மொழிநடை மாறல்

[க. ப. சந்தோஷம் B. A., L. T.]

[கலாசிந்தாமணியினின்றும் விரித்தெழுதியது]

(சகூச-ம் பக்கத் தொடர்ச்சி)

நெஞ்சில் ஈரமுடையவனென்று ஒருவனை நாம் கூறினால் அவனுக்கு இரக்கம், ஈகை முதலிய தன்மைகளுண்டென்பது கருத்து. இதே பொருளை ஆங்கிலத்தில் வெளியிடுவதனால் 'வெப்ப நெஞ்சுடையவன்' என்றுதான் சொல்ல வேண்டும். (He has a warm heart) என்பதை நோக்குக. அன்றியும், 'கதிரவன் ஒளியிற் காய்தல்' (To be in the sun shine) என்ற

சொற்றொடர் இடுக்க ணில்லாமையையும் வளமையையும் மேனாட்டார்க்கு உணர்த்தும். அதே கருத்தை நாம் 'நிழலி விருத்தல்' (To be in the shade) என்ற சொற்களால் வெளி யிடுகிறோம்.

> ''என்பி லதனை வெயில்போலக் காயுமே
> யன்பி லதனை யறம்''

என்ற குறள் வெப்ப மிகுந்த நாட்டிற்குத் தகுமே யன்றி, ஊதை வீசும் நாடுகளுக்குப் பொருந்தாது. குளிர்ந்த முகம் என்பது நன்மையின் வேறுபட்டதொன்றையும் நமக்கு உணர்த்தாது. ஆங்கிலத்தில் (A cold face) என்றால் அது வெறுப்புக் கறிகுறி யாகும். முகிலெழுந்து விண்ணிற்கூடுவது நமக்கு உவப்பையே தரும். ஐரோப்பியர்களுக்கோ அது இனியதாகாது. ஆதலின் (clouds) என்ற சொல்லை ஆங்கிலர் 'துன்பம்' என்ற பொருளில் வழங்குகின்றார்கள். இவற்றால் குளிர்ந்த பார்வை, மழைக்கண், திருவடிநிழல், தண்ணருள் ஆகிய இவை தமிழர்பெரிதும் போற்று வனவாயின. ஆறுதல் என்பது நாம் மிகுதியும் நாடுபவற்றுள் ஒன்று. 'ஆறுதல்' என்றால், சூட்டை இழத்தல். 'சோற்றை ஆற்று' என்று நாம் சொல்வதால் அது விளங்கும். பசி ஆறல் இளைப்பாற்றல் என்பவற்றையும ஒப்பிடுக.

வெப்பமும் தட்பமும் பற்றிவந்த எண்ணங்களால் மக்களுக் குத் தக்கவையுந் தகாதவையும் வகையறுக்கப் படுகின்றன. தீயின் பண்பு சுடுதல். ஆகலின், அதிலிருந்து தீமை என்றொரு சொல்லுண்டாக்கி மக்களுக்கு இன்னாதவற்றை எல்லாந் தமிழர் அதிலடக்கினார். தீமை எனினும், வெம்மை எனினும் ஒக்கும்; வெம்மை=சூடு; ஆனால் வெங்கண், வெய்யகாலன் எனவருவனவற் றில் 'சூடு' என்ற முதற்பொருள் சிறிது திரிந்து, கொடுமை என்ற கொள்பொருள் தோன்றிநின்றது. கொடுமை=கோணியதன்மை; செங்கோல், கொடுங்கோல் என்றவற்றானுணர்க. சுடுவதனாலுண் டாகும் வடுப்போல பிறர் உளம் புண்படும்படி செய்வன, சொல் வன, நினைப்பன யாவும் தீமையே. ஆதலின், மக்கள் உளங் குளி ரச்செய்யும் செயல், சொல், நினைவு ஆகிய இவற்றையே தமிழர்

நன்னெறி எனக் கொண்டனர். இதையே "எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகல்" என்றார் வள்ளுவனார். இஃதன்றிப் பொருள் இயல் வகுத்த பெரியோர் ஐம்பகுதியாகிய நிலங்களில் பாலையைப் பிரிதலொடு பொருத்தி அதற்கு நண்பகலும் முதுவேனிலும் முறையே சிறுபொழுது பெரும்பொழுதென உரைத்தார். அடிசுடும் நிலமும், தீய்ந்த செடிகளும், வாடிய மாமும், நிழலின்மையால் வருந்தும் பறவைகளும், நீர்வேட்கையால் தவிக்கும் விலங்குகளும், கொதிக்கும் பாறைகளும் பிரிவின் தன்மையைக் காட்டுதற்குக் கருப்பொருளாய் வருவதைப் பாலைக்கவியுள்ளும் பிறவற்றிலுங் காண்க. இதன் சார்பாக 'அகம்புறம்' என்ற உரையுள் விரித்தெழுத நேர்ந்ததால் இவண் பெருகக் கூறவேண்டுவதில்லை. இவ்வாறு தட்பவெப்பத்தை யொட்டிப்பிறந்த வேற்றுமைகள் இவ்வையகத்தோடு நில்லாது இறந்தபின் மக்கள் புகும் நிலைமைக்குஞ் சென்றிருக்கின்றன. 'திருவடிநிழல்' என்று நாம் கூறுவதால் இது ஒருவாறு விளங்கும். தீமை செய்தவர் தமது தன்மைக்கேற்பத் தீ மிகுந்தவிடத்திற் சேர்வர் என்பதுபற்றிப் பொல்லார்புகும் இன்னாவிடமாகிய அளறு (நரகம்) கொழுந்துவிட்டெரியும் நெருப்பிற் கிடமாயிற்று. வெப்பநிலத்தவர் கருத்திற்கு இதுமிகுதியும் பொருத்தமுடைத்து. ஆனால், சாலவும் குளிருடைய மேனாட்டார் கொள்கையிலும் இத்தகைய கருத்தே இருக்கின்றது. அது எவ்வாறு பொருந்தும் எனின், மேனாட்டார் தழுவிய கிறித்துவக் கொள்கையும் வெப்பமிகுந்த பலத்தீன் (Palestine) என்னும் நாட்டிற்றோன்றி ஐரோப்பாவிற்குச் சென்றதாதலால், அது தோன்றிய நாட்டில் உண்டாகிய எண்ணங்கள் மாறுதலின்றிக் குளிர் நாடுகளுக்குச் சென்றனவென்று கொள்க. கிறித்துவக் கொள்கை ஐரோப்பாவில் தலைகாட்டுதற்கு நெடுநாள் முன்னிருந்த தொல் ஆங்கிலர் (The Anglo Saxon) வெப்பமிகுந்த இடமாக அளறைக் கொள்ளவில்லை. அவர்கள் அதைப் பல் கிடுகிடுக்கக் குளிர்பெருகிப் பனி மூடியிருக்கும் இடமாகவே கொண்டார்களென்பது அறிஞர்கண்ட உண்மை.

(தொடரும்.)

# திருவள்ளுவர் சித்தாந்த சைவர்

[ஸ்ரீலஸ்ரீ வாலையானந்தசுவாமிகள்]

"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில."

கடவுளால் உதவப்பட்ட தநு கரண புவன போகங்களை அடைந்த ஆன்மாக்கள், தமது வினைக்கீடாகப் பலதிறப்பட்ட அறிவு விளங்கப்பெறும். (பல அறிவுபேதத்தால் உயிர்கள் அனுபவிக்கும் இன்பநிலைகளும் பலதிறப்படும். அவ்வின்ப நிலைகளை யடைந்து இன்பநுகர்ச்சியுறுங் காலமே சமய மெனப்படும்.

சமயம் புறப்புறம், புறம், அகப்புறம், அகம் என நான்கு வகைப்படும்.

புறப்புறச் சமயமாவது:—வேத சிவாகமங்களையும், அவைகளின் விதி விலக்குகளையும் உடம்படாது, அற்பகால அனுபவ இன்ப நிலைகளை உறுதியாகக் கொண்டது.

புறச்சமயமாவது, சிவாகமங்களை யுடம்படாது, வேதத்தை மட்டும் உடம்பட்டு, அதிற் கூறப்படும் நிலையில்லாத இன்ப நிலைகளை உறுதியாகக் கொண்டது.

அகப்புறச் சமயமாவது, வேத் சிவாகமங்களை யுடம்பட்டு, அவற்றோடு ஒரோர் காலங்களில் மோகத்தினாற் சில சீவர்கள் செய்த தந்திர கலைகளையும் உடம்பட்டு, அவற்றிற் கூறப்படும் நிலையுதலிலவான இன்ப நிலைகளை உறுதியாகக் கொண்டது.

அகச் சமயமாவது, வேத சிவாகமங்களை யுடம்பட்டு, இன்ப நுகர்ச்சி முறையிற் பேதப்படும் இன்ப நிலைகளை உறுதியாகக் கொண்டது.

புறப்புறச் சமயங்கள்:—உலோகாயதம், பௌத்த பேதங்கள் நான்கு, ஆருகதம் எனும் ஆறும் அவற்றின் உட்பிரிவுகளுமாம்.

பௌத்த பேதங்கள் நான்காவன:—மாத்தியமிகம், யோகாசாரம், சௌத்திராந்திகம், வைபாடிகம் என்பன.

உலோகாயதத்தின் உட்பிரிவுகள்-தேகான்ம வாதம், இந்திரியான்ம வாதம், பிராணான்ம வாதம் என்பன.

ஆருகதத்தின் உட்பிரிவு நிகண்ட வாதமாம்.

புறச் சமயங்கள்:—தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் எனும் ஆறும் அவற்றின் உட்பிரிவுகளுமாம்.

தருக்கத்தின் உட்பிரிவுகள் வைசேடிகம், நையாயிகமென்பன.

மீமாஞ்சையின் உட்பிரிவுகள் பட்டம், பிரபாகரம் என்பன.

ஏகான்ம வாதத்தின் உட்பிரிவுகள் மாயாவாதம், பாற்கரிய வாதம், கிரீடாப் பிரமவாதம், சத்தப் பிரமவாதம் என்பன.

அகப்புறச் சமயங்கள் :—பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், ஐக்கவாத சைவம் என ஆறு.

அகச் சமயங்கள் :—பாடாணவாத சைவம், பேதவாத சைவம், சிவசமவாத சைவம் சிவசங்கிராந்தவாத சைவம், ஈசுரவ விகாரவாத சைவம், சிவாத்துவிதவாத சைவம் என ஆறு.

இங்ஙனங் கூறிய சமய பேதங்களுள் நமது திருவள்ளுவ நாயனார் எச்சமயத்தைச் சார்ந்தவரென ஆராய்வோம்.

## (1) உலோகாயதரல்லர்

(1) உலோகாயதர்கள் காட்சியளவை ஒன்றே கொள்வர்; அனுமானம், உரையெனும் அளவைகளை யுடம்படார்.

நாயனாரோ.

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன்முதற்றே யுலகு"

என்றும்,

"குடம்பை தனித்தொழிய புட்பறந் தற்றே
யுடம்போ டுயிரிடை நட்பு"

என்றும்,

"ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணென்னு
நன்மை குறித்தது சால்பு"

என்றும்,

"உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு"

என்றும், கூறுமாற்றால் காட்சியளவை, அனுமான அளவைகளை யும்,

"மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு"

என்று கூறுமாற்றால் உரையளவையையும் உடம்படுகின்றார்.

(2) உலோகாயதர் காட்சியளவைக் கெய்துகின்ற நிலம், நீர், தீ, வளியெனும் நான்கு பூதங்களையே கொள்வர்.

நாயனர்

"வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும்"

எனக் கூறுமாற்றால் ஐம்பூதங்க ளுண்டெனக் கொள்கின்றார்.

ஆகையால் நாயனர் உலோகாயதரல்லரென்பதொருதலை.

(2) தேகான்மவாதியல்லர்

(1) தேகான்மவாதியர் தேகமே ஆன்மாவென்றும், தேகத்தின் வேறாய் ஆமா இல்லையென்றுங் கூறுவர்.

பொய்யில் புலவர்

"அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று." என்றும்,

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்போ டுயிரிடை நட்பு"

என்றும் கூறுமாற்றால் தேகத்தின் வேறாய் உயிருண்டென்பதை யுடம்படுகின்றார்.

(2) தேகான்மவாதிகள் அன்னையையும் பிதாவையுமே தெய்வமாகக் கொள்வர்.

நாயனூர் ஆதிசத்தியோடு கூடிய பகவானுகிய சிவபரம் பொருளைத் தெய்வமாகக் கொண்டு வாழ்த்து கூறினூர். ஆகலின் நாயனூர் தேகான்மவாதியல்லர். ஆதியாகிய தாயையும் பகவனுகிய தந்தையையும் கூறி வழிபட்டார் எனச் சிலர் கூறுவர். உலகமுதலாவான் ஆதிபகவனென உபமானத்துடன் கூறியதனுல் ஆதிபகவனென்ற சொற்கள் தாய்தந்தையை உணர்த்தின் உபமானத்துடன் ஒருவாற்ருனும் பொருந்தாமையானும்,

"சீர்கொளிறை யொன்றுண்டத் தெய்வமீ யென்ருெப்பாற்
சோர்விலடை யாற்றெளிந்தோஞ் சோமேசா"

என்ற முதுமொழி அகாமுதலவெழுத்தெல்லாம் என்ற ஒப்பினுலும், ஆதியென்ற அடையினுலும் உலக முதற்பொருள் சிவபரம் பொருளே யென முதற் றிருக்குறள் உணர்த்துகின்றது என்று கூறுகின்றதனுனும், பகவனென்ற சொல் மாயோன் முதலியோரையும் குறிக்குமாகலின், அவர்பாற் செல்லாது சகத்துக்கு நிமித்த காரணனுகிய பதிப்பொருளை யுணர்த்தும் பொருட்டு, ஆதியென்ற அடைகொடுத்து, அதனை மேலும் மேலும் வலியுறுத்தவே, "வாலறிவு" "வேண்டுதல் வேண்டாமை யின்மை" "தனக்குவமை யின்மை" "அறவாழி யந்தணனுந் தன்மை" "எண்குணமுடைமை" முதலிய சிற்குணங்களை விதந்தெடுத்து வகுத்துந் தொகுத்தும் ஓதியதனுனும் அவர் கூற்றுப் போலியாமாறுணர்க.

## (3) இந்திரியான்மவாதியல்லர்

இந்திரியான்ம வாதிகள் மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் பஞ்சேந்திரியங்களே சுவை யொளி யூ றோசை நாற்றமெனு மைம்புலன்களை நுகர்தலால் அவ்விந்திரியங்களே ஆன்மாவென்பர்.

பொய்யில்புலவர்

"உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து"

என்றும்,

"ஐந்தவித்தா னாற்றலகல் விசும்புளார் கோமா
னிந்திரனே சாலுங் கரி"

என்றும்.

"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு"

என்றும் கூறுமாற்றால் பஞ்சேந்திரியங்களுக்கு வேறாக உயிருண் டென்பதை யுடம்படுதலால், அவர் இந்திரியான்மவாதியல்லர்.

## (4) பிராணான்மவாதியல்லர்

பிராணான்மவாதிகள் பிராணவாயு சரீரத்தினின் றியங்குங்கால் தேகத்தில் உணர்ச்சியிருந்தும், பிரிந்தபோது உணர்ச்சியில்லாமலும் இருக்கக் காண்கையினாலே பிராணவாயுவே உயிரென்பர்.

செந்நாப்போதார் தமது தெய்வநூலில்,

"எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு"

என்றும்,

"இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண்ட னள்"

என்றும் கூறியதனால், மறுபிறப்புக்களுண்டென்று கொள்வதனாலே, எடுத்த பிறப்பின் பாற்பட்ட பஞ்சபூதங்களி லொன்றாகிய வாயுவின் கூறான பிராணவாயுவை உயிரெனக்கொள்ளும் பிராணான்மவாதியல்லர்.

## (5) பௌத்தரல்லர்

(1) பௌத்தர் ஞானத்தின் வேறாய்க் கடவு ளின்றென்றும், ஞானமே ஆன்மாவென்றுங் கூறுவர்; அவர்கள் பதமுத்திகளுண் டெனக் கொள்வதில்லை.

திருவள்ளுவதேவர்

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

"மலர்மிசை யேகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

என்னுந் திருக்குறள்களால் ஞானத்தின் வேருய்க் கடவுளுண்டென்றும்,

"அறிதோ றறியாமை கண்டற்றுற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு"

என்னுந் திருக்குறளால் ஞானத்தின் வேருய் ஆன்மா வுண்டென்றும்,

"தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
ருமரைக் கண்ணு னுலகு"

என்னுந் திருக்குறளால் பதமுத்தித் தானங்களாகிய மேலுலகங்களுண்டென்றும் கூறுவதனல், திருவள்ளுவ தேவர் பௌத்தரல்லர்.

## (6) மாத்தியமிகர் (சூனியவாதி) அல்லர்.

(1) மாத்தியமிகர் உலகத்துப் பொருள்கள் அகப்பொருள் புறப்பொருள் என இருதிறப்படுமென்றும், அவ் விருதிறப் பொருள்களும் உள்ளவும், இல்லவும், உள்ளவுமில்லவும், இரண்டுமல்லவுமாகிய நான்குமில்லை யாகலான் சூனியமென்றும், மயக்கத்தால் உள்ளனபோற் றோன்றுகின்றனவென்றுங் கூறுவர்.

நாயனர் தமது வாயுறை வாழ்த்தில்,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்ற முதற்றிருக்குறளாலேயே உலகு உண்டென்றும், அதற்கு ஒரு முதல் உண்டென்றும் உடம்படுகின்றதனலே சூனிய வாதியாகிய மாத்தியமிக ரல்லர்.

## (7) யோகாசாரர் (விஞ்ஞானவாதி) அல்லர்.

யோகாசாரர், அகப்பொருளாகிய ஞானம் உண்டென்றும், புறப் பொருள்கள் சூனிய மென்றுங் கூறுவார்.

பொய்யில் புலவர்

"பொருளல்ல வரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்"

என்றும்,

"அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்".

என்றும்,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்றும் வருந் திருக்குறள்களால் புறப்பொருள்க ளுண்டெனக் கொள்வதனாலே, புறப்பொருள்க ளெல்லாம் சூனிய மென்கின்ற விஞ்ஞானவாதியாகிய யோகாசார ரல்லர்.

## (8) சௌத்திராந்திக ரல்லர்.

சௌத்திராந்திகர் புறப்பொருள்கள் வழியளவையா னறியப்படு மென்பர். மேலும், சாதிபேதம், உயிர்கள், அடிசேர் முத்தி முதலியன இவர்களுக் குடம்பாடில்லை.

செந்நாப் போதார்,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு'

என்பதனாலும்,

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள"

என்பதனானும் வாயிற் காட்சியையும்,

"யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்
தோஒ வுளரே யவர்"

என்பதனால் மானதக் காட்சியையும்,

"உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது"

என்பதனால் தனி வேதனைக் காட்சியையும் உடம்பட்டு இவ்வளவைகளினாலே புறப் பொருள்கள் காணப்படுகின்றன வென்றும்,

"தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை"

என்றும்,

"உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்"

என்றுங் கூறுவதால் உயிருண்டென்றும்,

"மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்"

எனக் கூறுவதால் சாதியுண்டென்றும்,

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்"

எனக் கூறுவதால் அடிசேர் முத்தி யுண்டென்றுங் கொள்கின்றார். ஆகையால் செங்நாப்போதார் சௌத்திராந்திக ரல்லர்.

## (9) வைபாடிக ரல்லர்

வைபாடிகர் மஞ்சளும் சுண்ணும்புங் கூடினவிடத்து ஓர் சிவப்பு நிறந் தோன்றுமாபோல, காணப்பட்ட பொருள்களும் இந்திரிய விடயமான அறிவும் கூடினபோது பிரபஞ்சப் பொருள்கள் பொருந்தித் தோன்றுவது ஞானதரிசினமென்றும், அதைத் தெளிந்தவர்க்குப் புத்தர் வீடு தருவரென்றுங் கூறுவர். திருவள்ளுவர்,

"உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து"

என்றும்,

"ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி"

என்றும் கூறுவதால் பஞ்சேந்திரியங்களை யடக்கிப் புறப்பொருள்களை யுணராது இருப்பது ஞானசாதனமென்றும்,

"அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது"

என்று கூறுவதால் இறைவனடி சேர்தலே முத்தி யின்ப மென்றும் உடம்படுகின்றார்.

ஆகையால் திருவள்ளுவதேவர் வைபாடிக ரல்லர்.

## (10) ஆசீவகரல்லர் (ஆசீவகம்—அமணம்)

ஆசிவகர் நிலவணு நீரணு தீயணு வளியணு ஆகிய நான் கணுக்களின் கூட்டுறவால், சீவ அணுவினைக் கிடான உடலை யெடுக்கு மென்றும், இவ்வணுக்களுக்கு வேறாய்க் கடவுள் உண் டென்றுங் கூறுவர்.

பெருநாவலர் தமது உத்தர வேதத்தில்,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்று கூறுவதனால் உலகுக்குக் கருத்தாவாகிய ஆதிபகவ னுண் டென்றும்,

"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது"

என்று கூறுவதனால் கன்மபலன்களைச் சீவர்களுக்குக் கடவுளே கொடுப்பனென்றும் உடம்படுகின்றார்.

ஆகையால் தேவர் ஆசிவக ரல்லர்.

## (11) நிகண்டவாதி யல்லர்

கண்டம்=உடை. நிகண்டம்=உடையின்மை.

நிகண்டவாதிகளுக்கு உடையில்லை. இவர்கள் முக்குணங் கள் கெடுவதே முத்தி யென்பர்.

தேவர்,

"உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு"

என்ற திருக்குறளால் உடையுண்டென்றும்,

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்"

என்ற திருக்குறளால் இறைவனடிசேரும் முத்தி யுண்டென்றுங் கூறுகின்றார்.

ஆகையால் தேவர் நிகண்டவாதி யல்லர்.

### (12) தார்க்கிக ரல்லர்

தார்க்கிகர் பரமாணு காரணவாதங் கூறுவர்.

நாயனார்,

'அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்ற திருக்குறளால் உலகுக்கு முதற் காரணம் துணைக்காரணம் நிமித்த காரணங்க ளுண்டெனக் கூறுகின்றார்.

ஆகையால் நாயனார் தார்க்கிக ரல்லர்.

### (13) வைசேடிக ரல்லர்

வைசேடிகர் - திரவியம், குணம், தொழில், சாதி, விசேடம், சமவாயம், இன்மை எனும் எழுவகைப் பொருள்களின் சிறப்பியல்பு பொது வியல்பு வேற்றியல்புகளை புணர உடம்பு முதலியவற்றின் வேறாகிய ஆன்மாவி னியல்பு விளங்கும்; விளங்கவே உடம்பு முதலியவற்றை நானென்று எண்ணிய மித்தையுணர்வு கழியும். அது கழியவே முயற்சியின்மையின் நல்வினை தீவினைகளில்லையாய்ப் பிறவி ஒழியும். அங்ஙனம் ஒழியவே வரக்கடவனவாகிய துன்பங்களின்மையின் உடம்பு முகந்துகொண்ட வினைப்பயன் நுகர்ச்சியாற் கழிவுழி, இறுதித் துன்பங் கெட்டு மனத்தோடு கூடுதற் கேதுவின்மையின் அறிவின்றிப் பாடாணம் போற் கிடப்பதே முத்தி யென்பர்.

மாதானுபங்கியார் தமது பொது மறையில்,

"தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
லாமரைக் கண்ணா னுலகு"

என்ற திருக்குறளில் பதமுத்தியையும்,

"மலர்மிசை யேகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

என்ற திருக்குறளில் முடிந்த முத்தியையுங் கூறுவதால் மாதானு பங்கியார் வைசேடிக ரல்லர்.

## (14) நையாயிக ரல்லர்

நையாயிகர் முத்தியில் ஆனந்த முண்டென்று கூறினும் இறைவனடிசேரும் முத்தியை யுடம்படார்.

நாயனர்,

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவனடி சேரா தார்"

என்ற திருக்குறளால் அடிசேர் முயற்சியை யுடம்படுதலால் அவர் நையாயிக ரல்லர்.

## (15) மீமாஞ்சக ரல்லர்

மீமாஞ்சகர் வேதத்தின் ஞானகாண்டத்தை யிகழ்ந்து கருமகாண்டத்தையே கொள்வர். ஆன்மாக்கள் பலவாய், நித்தமாய், வியாபகமாய், அநாதியே காமக் குரோதாதிகளாகிய பாசத்தை யுடையவைகளாய், வினைக்கீடாகப் பிறந் திறந்து வினைகளைச் செய்து வினைப் பயன்களை நுகர்ந்து வரும்; இவ் வான்மாக்களுக்கு வேறாய்ப் பரமான்மா ஒருவன் உண்டென் பதும், உலகந் தோன்றி யழியு மென்பதும் பொய்; உலகம் என்றும் இவ்வாறே நிலைபெறும் என்பர்.

நான்முகனர்,

"ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு"

"உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து"

"ஐந்தாவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி"

"யாதனின் யாதனி னீங்கியா னோத
லதனி னதனி னிலன்"

"வேண்டி னுண் டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல"

"அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு"

"இயல்பாகு நோன்பிற் கொன்றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து"

என்னுந் திருக்குறள்களில் ஞானசாதனமாகிய துறவு, ஐம்பொறி யடக்கல் முதலியவைகளைக் கூறுதலானும்,

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்னுந் திருக்குறளில் ஆன்மாக்களுக்கு வேறாய் முதல்வ னுண் டென்றும்,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்னுந் திருக்குறளில் உலகுக்கு முதல்வராய் அதனை ஆக்கி நிறுத்தி அழித்து வருபவராய் ஒரு கடவு ளுண்டென்றும் கூறுத லானும் திருவள்ளுவ நாயனார் மீமாஞ்சக ரல்லர்.

### (16) பட்டரல்லர்

பட்டர் கன்மமானது தானே பயன்கொடுக்குமென்று கூறு வர்.

தேவர்,

"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்த லரிது"

என்ற திருக்குறளில் கன்மபலனைக் கொடுப்பவன் கடவுளென்று கூறுவதால் அவர் பட்ட ரல்லர்.

### (17) பிரபாகர ரல்லர்

பிரபாகரர் கன்மநாசத்தில் அபூர்வமென ஒன்று தோன்றி நின்று பயன் கொடுக்கு மென்றும், பாடாணம் போற் கிடப் பதே முத்தி யென்றுங் கூறுவர்.

முதற் பாவலர்,

"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது"

"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்."

என்னுந் திருக்குறள்களில் கன்மபலனைக் கொடுப்பவன் முதல்வ னென்றும், முதல்வன் திருவடியைச் சார்ந்தின்புற்று என்றும், வாழ்வதே முத்தி யென்றும் கூறுதலால், அவர் பிரபகார ரல்லர்.

## (18) ஏகான்மவாதி யல்லர்

ஏகான்மவாதியர் சச்சிதானந்தரூபமான பரப்பிரமம் ஒன்றே உள்ளது, அதற் கன்னியமான உயிர்கள், உலகம், உலகத்துப் பொருள்கள் எல்லாம் கானல்நீர் போற் காணப்படுவனவேயன்றி உண்மையில் இல்லையென்பர்; வேதத்தின் கருமகாண்டத்தை இவர்கள் இகழ்வர்.

நாயனார் முதற்றிருக்குறளில் உலகும், உலகமுதற்பொரு ளும் உண்டெனக் கொள்வதனாலும்,

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று"

என்ற திருக்குறளில் பலவுயிர்களும் உண்டெனக் கொள்வதனா லும்,

"அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று"

என்ற திருக்குறளில் யாகாதி கருமங்க ளுண்டெனக் கொள்வத னாலும் ஏகான்மவாதியல்லர்.

## (19) மாயாவாதியல்லர்

மாயாவாதிகள் அத்தியாசவாதம் கூறுவர்; பரமான்மாவுக்கு வேறாகச் சீவான்மாவில்லை யென்பர். ஜெகஜ்ஜீவ பாதத்துவ விசா ரத்தில் தோன்றும் வேதாந்த ஞானத்தால் பிரமரூபம் யானென அறிவதே முத்தியென்பர்.

தேவர்,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்பது முதலிய திருக்குறள்களால் சற்காரியவாதங் கூறுகின்றார்;

"பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை"

என்பது முதலிய திருக்குறள்களால் பரமான்மாவுக்கு வேருகச் சீவான்மாக்கள் உண்டென்கின்றார்;

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்"

என்ற திருக்குறளால் இறைவனடி சேர்கின்ற முத்தியைக் கூறுகின்றார்.

ஆகையால் தேவர் மாயாவாதியல்லர்.

## (20) நிரீச்சுரசாங்கியரல்லர்

நிரீச்சுரசாங்கியர் திரிகுணங்களும் அடங்குவதே முத்தியென்பர்.

சேந்நாப்போதார்,

"அறவாழி யந்தணன்றாள் சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது"

என்பது முதலிய திருக்குறள்களால் இறைவனடியைச் சேர்வதே முத்தி யென்கின்றார்.

ஆகையால் அவர் நிரீச்சுரசாங்கியரல்லர்.

## (21) பாற்கரியவாதியல்லர்

பாற்கரியவாதிகள் சச்சிதானந்த ரூபமான பிரமமே சடமுஞ் சித்துமாகிய உலகங்களாய்ப் பரிணமித்தது. அங்ஙனம் பரிணமித்து விகாரப்பட்டமையை அறியாமையினாற் பந்தமாயிற்று; பரமார்த்தத்தில் ஒரு பொருளே உள்ளது. வேதாந்த

ஞானத்தால் பரப்பிரமம் விளங்கும். அதில் இலயித்தலாகிய உயிர் கெடுமுத்தியே முத்தியென்பர்.

முதற்பாவலர்,

"இறந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்"

என்ற திருக்குறளால் முதல்வன் தானே யுலகாகாமல் உலகை யியற்றினனென்றும்,

"மலர்மிசை யேகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

என்ற திருக்குறளால் முதல்வனடியைச் சேர்ந்து நீடுவாழ்வதே முத்தியென்றுங் கூறுகின்றார்.

ஆகையால் நாயனர் பாற்கரியவாதியல்லர்

### (22) கிரீடாப்பிரமவாதி யல்லர்

கிரீடாப்பிரமவாதிகள் பிரமமே நான் என்றும், நான் ஒரு படித் தன்றிப் பல வேறு வகைப்பட்ட விகாரப் பொருள்களோடு கூடிப் பலவாற்றான் விளையாடுகின்றேன் என்றும், அங்ஙனம் விளையாடுகின்றேன் என அறிவதே முத்தியென்றுங் கூறுவர்.

திருவள்ளுவதேவர் பிரமத்துக்கு வேருய் உலகும், உயிர்களும் உண்டெனக் கூறுவதாலும், அடிசேர் முத்தியை உடம்படலாலும் கிரீடாப்பிரமவாதியல்லர்.

### (23) சத்தப்பிரமவாதி யல்லர்

சத்தப்பிரமவாதிகள் காரணமாகிய பரப்பிரமம் இறுதிக் காலத்திற் சத்த வடிவிற்றாயிருக்கும்; அஃது அவிச்சையினாற் சடமுஞ் சித்துமாய உலகங்களால் விரியும்; முடிவில் சத்தமாத் திரமே உள்ளது; இவ்வாறு அறிவதே முத்தி யென்பர்.

தெய்வப்புலவர்,

"இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்"

என்றும் "ஆதிபகவன் முதற்றே யுலகு" என்றும் அருளியிருத் தலினலே பிரமத்துக்கு வேருய் உலகு உண்டென்றும், அவ்வுல

கத்துக்குக் கருத்தா ஆதி சத்தியோடு கூடிய எண்குணனாகிய பகவனென்றும்,

> "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
> ரிறைவ னடிசேரா தார்"

என்றும் அருளியிருத்தலினாலே அடிசேர் முத்தியே முத்தியென்றும் உடம்படுகின்றார். அன்றியும் தமது தமிழ் மறையில் ஓரிடத்திலாவது சத்தவடிவப் பிரமத்தைப் பற்றிக் கூறவில்லை.

ஆகையால் தெய்வப்புலவர் சத்தப்பிரமவாதியல்லர்.

## (24) சாங்கிய ரல்லர்

சாங்கியர் மூலப்பகுதி 24-ம் தத்துவம்; புருடன் 25-ம் தத்துவம்; மூலப் பகுதியின் பரிணாமம் புத்தி, அதுவே மான் என்றும் அந்தக்கரணம் என்றும் பெயர் பெறும்; மூலப்பகுதியையும் புருடனையும் பகுத்துணர்வதால் அவிச்சை நீங்குவதே முத்தியென்பர்.

உத்தரவேதமுடையார் தமது தெய்வ நூலில் மண்முதல் நாதமீறாகிய முப்பத்தாறு தத்துவங்களுக் கதீதராகிய "ஆதி பகவனை" வாழ்த்துதலினாலும்,

> "தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
> மனக்கவலை மாற்ற லரிது"

என்றும்,

> "அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
> பிறவாழி நீந்த லரிது"

என்றும் அருளுதலினால் சாங்கியர் கூறும் அவிச்சை நீங்குவதே முத்தியென்பதை உடம்படாமையினாலும் சாங்கியரல்லர்.

## (25) யோகமதத்தரல்லர்.

யோகமதத்தர் நிலம் முதல் புருடனீறான இருபத்தைந்து தத்துவங்களுக்கு மேல் இருபத்தாறும் தத்துவம் இறைவன்; அவனே சாத்திரங்களை அருளி புருடருக்கு ஞானத்தை அறிவுறுப்பன் என்பர்.

தமிழ்மறை யுடையார், தமது வாயுறைவாழ்த்தில், நாதாதீத பரசிவனாகும் "ஆதி பகவனை"

"கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை"

என்பது முதலிய திருக்குறள்களால் வலியுறுத்தி வாழ்த்தியிருத்தலால் யோக மதத்தாரல்லர்.

## (26) பாஞ்சராத்திரி யல்லர்.

பாஞ்சராத்திரிகள் 24-ம் தத்துவம் குணதத்துவம், 25 - ம் தத்துவம் வாசுதேவனாகிய பரம்பொருள்; அவனிடத்திற் றோன்றிய கண்ணன், அநிருத்தன், மகாத்துவசன், இரௌகிணேயன் எனும் நான்கு வியூகர்களால் சடமுஞ் சித்துமாகிய எல்லா வுலகங்களும் படைக்கப்பட்டன; ஆகலான் எல்லாம் வாசுதேவன் பரிணாமமே யென்றறிந்து, பாஞ்சராத்திர முறையே தீக்கை பெற்று, வாசுதேவனை வழிபட்டு வாசுதேவ னுருவில் இலயமாதலே முத்தியென்பர்.

திருவள்ளுவ நாயனார், உலக காரணன் தத்துவாதீதனாகிய "ஆதிபகவ" னென்றும் அவன் வாசுதேவனிடமில்லாத சிவ குணங்களாகிய தன்வயமாதி "எண்குண" முடையவனென்றும் அவனடியிற் சார்ந்து இன்புற்று நிற்பதே முத்தி யென்றும் அருள்கின்றமையினாலே அவர் பாஞ்சராத்திரி யல்லர்.

## (27) பாசுபத ரல்லர்.

பாசுபதர் ஆன்மாக்கள் பல; ஆணவமல மென்ப தொன்றில்லை; மாயா கன்மங்களே உண்டு; இவற்றின் உவர்ப்பாற் றீக்கை யுற்றவனை ஈசன் ஞானம் பற்றும்; அப்போது ஈசன் தன் குணங்களை அவன்பாற் பற்றுவித்துத் தான் அதிகாரத்தின் ஒழிவு பெற்றிருப்பன் என்பர்.

நாயனார்,

*"இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"

என்ற திருக்குறளால் இருளெனப் பெயரிய ஆணவமலம் உண்டென்றும்,

"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில"

"தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது"

எனும் திருக்குறள்களால் ஈசனுடைய அதிகாரத்தைப் பெறாது அவனடியிற் சார்ந்தின்புற் றிருப்பதே முத்தி யென்றுங் கூறுகின்றார்.

ஆகையால் நாயனார் பாசுபத ரல்லர்.

(28) மாவிரத ரல்லர்.

மாவிரதர் பாசுபதர் கூறிய முறையே ஆன்மாக்களி னியல்பைக் கூறி, தங்கள் சாத்திர முறையே தீக்கை பெற்று எலும்பு மாலை யணிதல் முதலிய சரியைகளின் வழுவா தொழுகின் முத்தி யுண்டென்றும், முத்தருக்குச் சிவனோடு சமமான எல்லாக் குணங்களும் உற்பத்தியாமென்றுங் கூறுவர்.

(தொடரும்)

---

* "ஏக னநேக னிருள்கரும மாயையிரண்
டாகவிவை யாறு மில்."

என்ற திருவருட் பயன் திருக்குறள் இருள் என்றது ஆணவமல மெனவுணர்த்துதலைக் காண்க.

# நால்வர்

[மா. வே. நெல்லையப்பபிள்ளை]

'நால்வர்' என்னும் பெயர் மாத்திரையானே பெறப்படும் பொருள்களை இயன்றவாறு விரித்துக் கூறுவது இக்கட்டுரையின் கருத்தாம்.

நால்வர் என்னும் சொல் நான்கு என்னும் எண்ணுப் பெயரடியாற் பிறந்த உயர்திணைப் பலர்பாற் படர்க்கைப் பெயர் ஆகும். அர் என்பது பலர்பாற் படர்க்கைப் பெயர் விகுதி. நான்கு என்னும் நிலைமொழியுடன் அர் என்னும் விகுதி சேரும்பொழுது "எண்ணிறை யளவும் பிறவு மெய்தின்" என்னும் நன்னூல் உயிரீற்றுப் புணரியல் சூத்திரத்தில் "ஆறேழல்லவற்றின் ஈற்றுயிர் மெய் ஏகும்" என்ற விதிப்படிக்கு நான்கு என்பதிலுள்ள 'கு' என்னும் உயிர் மெய் கெட்டு "நான்கன் மெய்யே லறவாகும்மே" என்னும் சூத்திர விதிப்படி னகர வொற்று லகர வொற்றாக மாறி நால் என்பதற்கும் அர் என்பதற்கும் இடையில் உடம்படு மெய்யல்லாத வகர வொற்றுத் தோன்றி நான்கு+அர் என்பது நால்வர் என்றாயிற்று.

நால்வர் என்னும் உயர்திணைப் பலர்பாற் படர்க்கைப் பெயர் செம்பொருளானே மக்களுள் அல்லது தேவர்களுள் எண்ணால் நால்வர்கள் என்பதைக் குறிக்குமாயினும் சிறப்புப்பற்றிக் காரண இடுகுறிப் பெயராய் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் நான்கு சைவசமய குரவர்களையும் குறிக்கும். மூவர் என்பது பிரமன், விட்டுணு, உருத்திரன் என்னும் மும்மூர்த்திகளையுங் குறிப்பது போல.

> வேதம் பசுவதன்பால் மெய்யாகம நால்வர்
> ஓதுந் தமிழதனி னுள்ளுறுநெய்—போதமிகு
> நெய்யினுறு சுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
> செய்ததமிழ் நூலின் றிறம்.

சைவத்தின் மேற்சம யம்வே றில்லையதிற் சார்சிவமாந்
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு நான்மறைச் செம்பொருள்வாய்
மைவைத்த சீர்திருத் தேவார மூந்திரு வாசகமும்
உய்வைத் தரச்செய்த நால்வர்பொற் றாளெம் முயிர்த்துணையே.

எனப் பெரியோர் பாடிய இந்த இரண்டு பாட்டுக்களிலும் 'நால்வர்' என்னும் சொல் நான்கு சைவ சமய குரவர்களையும் குறிப்பது காண்க.

நிழலுக்காக ஒரு பந்தல் அமைப்பதற்குக் குறைந்தது நாலு கால்கள் வேண்டப்படும், ஒரு பலகையை உயரத்தில் இருப்பிடமாய் அமைப்பதற்கும் நான்கு கால்கள் வேண்டப்படும். மூன்று கால்களால் அமைக்கப்படும் முக்காலிப் பலகை யுளது ஆயினும் அது நாற்காலிப் பலகைபோல வலிமை யுடையது ஆகாது. "நாலு பேர்கள் சேர்ந்து சொன்ன நியாயத்தை நான் ஒப்புக் கொள்கிறேன்" என்றும் "நாலுபேர்கள் போன வழியில் நானும் நடக்கிறேன்" என்றும் உலக வழக்கில் வழங்கும் நீதி மொழிகளும் நான்கு என்னும் எண்ணுக்கு உள்ள வலியைக் காட்டுகின்றன. "நாலுகொ லாமறை பாடினதாமே" என்று திருநாவுக்கரசு சுவாமிகள் கூறியபடி உலகில் மக்கள் உணர்ந்து உய்யும்பொருட்டுச் சிவபெருமானாற் கூறப்பட்ட வேதங்கள் நான்கு. திருமூலரும் தாம் அருளிச் செய்த திருமந்திரத்தில் இதனை "ஒன்றவன்றானே யிரண்டவ னின்னருள், நின்றனன் மூன்றினு ணான்குணர்ந்தான்" என்று கூறினர். இடத்தின் நிறைவு எல்லையைக் குறிப்பது நான்கு திசைகளும். உலக வாழ்க்கையில் மக்கள் அடையும் உறுதிப் பொருள்கள் நான்கு. இந்த உறுதிப் பொருள்களின் முடிவைச் சிவபெருமான் சனகர் முதலிய நான்கு முனிவர்களுக்கும் வடவாலின் கிழிருந்து உணர்த்தி அருளினர். இதனைத் திருமூலர்

நால்வரு நாலுதிசைக் கொன்று நாதர்கள்
நால்வரு நானுவிதப் பொருள் கைக்கொண்டு
நால்வரு நான்பெற்ற தெல்லாம் பெறுகென
நால்வருந் தேவராய் நாதரா னர்களே.

என்று திருமந்திரத்தில் கூறியருளினர்.

பிரமதேவருடைய முகங்கள் நான்கு. சிவபெருமானுக்கும் மேல் முகம் நீக்கி நாலு திசைகளும் நோக்கிய முகங்கள் நான்கு. இதனைத் திருநாவுக்கரசு சுவாமிகள் 'நாலுகொலாமவர் தம்முகமாவன' என்று கூறியருளினர். சாதி என்று கூறப்படுகின்ற இயற்கையிலுள்ள மக்கள் வகை நான்கு; மக்களில் ஒவ்வொருத்தருடைய உலக வாழ்க்கை நிலைகளைக் குறிக்கின்ற ஆச்சிரமங்கள் நான்கு; முத்திநிலைகள் நான்கு (சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம்), அம் முத்தி நிலைகளை அடைவிக்கின்ற தவநெறிகள் நான்கு (சரியை, கிரியை, யோகம், ஞானம்).

மேலே கூறியவாற்றால் எண்ணில் தத்துவங்கள் அடங்கியுள்ளன என்பது விளங்கும். சிவத்தினிடத்தில் அபின்னமாகிய சத்தி சிவத்தில் ஒடுங்கின பொழுது சிவம் ஒரு பொருளே யுள்ளது. சூரியனிடத்தி லொடுங்கின கிரணம் அவனிட மிருந்து விரிந்து எங்கும் வியாபித்தல்போலச் சிவத்திலிருந்து சத்தி வெளிப்பட்ட பொழுது அச்சிவம் ஒன்றுதானே இரண்டு பொருள் ஆயின. அச் சத்தியிட மிருந்து பஞ்ச பூதங்களையும் சூரிய சந்திரர்களையும் தேவர்கள் மக்கள் முதலியவர்களையும் படைத்தற்கும், காத்தற்கும், அழித்தற்கும் பிரம, விட்டுணு, உருத்திரன் ஆகிய திரிமூர்த்திகள் தோன்றினர்கள்.

"ஓருருவாயினை மானாங்காரத், தீரியல்பா யொருவிண் முதல் பூதலம், ஒன்றிய விருசுடரும்பர்கள் பிறவும், படைத்தளித்தழிப்பமும் மூர்த்திகளாயினை" என்று திருஞானசம்பந்த சுவாமிகள் கூறியதும்; "ஒருவனா யுலகேத்தநின்ற நாளோ ஓருருவே மூவுருவமான நாளோ" என்று திருநாவுக்கரசு சுவாமிகள் கூறியதும் காண்க. இறைவன் ஆணையின்வழி முத்தொழில்செய்ய மும்மூர்த்திகள் தோன்றிய பின் ஆன்மாக்கள் இறைவனை அடைதற்கு வேண்டிய சாதனமாகிய ஞானத்தை அடைதற்கு நான்கு வேதங்களும், ஏழு, நான்கு (உஅ) ஆகமங்களும் தோன்றின: நான்கு என்னும் எண்களையுடைய உறுதிப் பொருள்கள், தவநெறிகள், முத்தி நிலைகள் முதலியன வெல்லாம் வேதாகமங்களிற் கூறப்பட்டனவேயாகும். ஆகையால் மக்களுக்கு ஞானத்தைப் பயப்பிக்கும்

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய தவநெறி நிலையங்கள் மூன்றுயிராமலும் ஐந்து முதலிய எண்களா யிராமலும் நான்கா யிருப்பது எத்துணை பொருத்த முடையதா யிருக்கிறது என்பது யாருக்கும் தெள்ளிதின் விளங்கும்.

வேதாகமங்களில் முடிந்த துணி பொருளாய்க் கூறப்படுவது சிவம் என்னும் பொருளே. அச் சிவத்தை அடையச் செய்விக்கும் நெறியே சைவ சமயம் ஆம். சைவ சமயத்தில் உயிர் வளர்ச்சியைக் (Soul Evolution) குறிக்கிற உலகநெறி, வீட்டுநெறி என்னும் இரண்டு பெருநெறிகள் கூறப்பட்டுள்ளன. உலக நெறி போகமார்க்கம் என்றும், பிரவிருத்தி மார்க்கம் என்றும் கூறப்படும். வீட்டுநெறி முத்தி மார்க்கம் என்றும் நிவிர்த்தி மார்க்கம் என்றும் கூறப்படும். உலகநெறியில் ஆன்மாக்கள் இம்மை மறுமைப் போகங்களை அடையுங்கருத்து உடையவராய்த் தீவினைகளை விலக்கி நல்வினைகளைப் பயன் கருதிச் செய்கிறார்கள். வீட்டு நெறியில் ஆன்மாக்கள் இம்மை மறுமைப் போகங்களில் வெறுப்புடையவர்களாயும் வீட்டின்பத்தை அடையும் கருத்து உடையவர்களாயும் யாதொரு பயனும் கருதாது தாங்கள் செய்யுஞ் செயல்களெல்லாம் இறைவன் பணியாகச் செய்கிறார்கள். இந்த உலக நெறியில் உலக அறிவுதான் (சுட்டறிவு) ஆன்மாக்களுக்கு உண்டாகும்; பிறவிக்குக் காரணமாயுள்ள அவிச்சை நீங்காது. வீட்டு நெறியில் அவிச்சை நீங்கி மெய்யுணர்வு உதிக்கும். சரியை கிரியை யோகம் ஞானம் ஆகிய நான்கும் வீட்டு நெறியின் படிமுறைகள். இவை ஒவ்வொன்றிலும் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் படிமுறைகள் உண்டு. பொதுவாகக் கூறுமிடத்து சரியையில் கால் ஞானமும் கிரியையில் அரை ஞானமும் யோகத்தில் முக்கால் ஞானமும் ஞானத்தில் முழு ஞானமும் உண்டாகும். சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் இந் நான்கும் முறையே தாத மார்க்கம் புத்திர மார்க்கம், சகமார்க்கம் சன்மார்க்கம் என்றும் கூறப்படும். நூல்களிற் கூறப்பட்டுள்ள இந்தச் சைவ சமய நாலு மார்க்கங்களையும் ஆன்மாக்கள் அறிந்து உணர்ந்து உய்யும் பொருட்டுத் திருநாவுக்கரசு சுவாமிகள், திருஞான சம்பந்தசுவாமிகள், சுந்தரமூர்த்திசுவாமிகள், மாணிக்கவாசக

சுவாமிகள் ஆகிய நால்வர்களும் தூல உலகத்தில் தூல உருவின்கண் நேர்பெற அவர்கள் முன் அவர்கள் ஐம்பொறி அளவினும் எளிவந்து விளக்கிக் காட்டினார்கள். காட்டினதனால் அவர்கள் நால்வர்களும் சைவசமய குரவர்கள் ஆனார்கள். அந்தோ ஆன்மாக்கள்மேல் அவர்கள் கருணையிருந்தவாறு என்னே என்னே !!

திருநாவுக்கரசு சுவாமிகள் முதலிய நால்வர்களும் சைவசமயத்திற் கூறப்படும் பரமுத்தியை அடைதற்குச் சாதனமாகிய ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் ஆகிய தாத மார்க்கம், புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்னும் நாலு மார்க்கங்களையும் மேலே கூறியவண்ணம் ஆன்மாக்களுக்கு உணர்த்தின சைவசமய குரவர்களானார்கள். அவர்கள் மூவராயிராமலும் ஐவர் முதலியவர்களாயிராமலும் நால்வர் ஆயினமைக்கு நாலு மார்க்கங்களே காரணமானது காண்க. அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மார்க்கத்தை உணர்த்தினாலும் அவர்களுடைய ஞானநிலையில் ஏற்றத்தாழ்வுகளிருப்பதாக நாமெண்ணுதல் கூடாது. அவர்களெல்லாரும் மேலான ஞான நிலையில் நின்றாலும் ஆன்மாக்கள் கண்டு உய்யும் பொருட்டு கீழான ஞான நிலையைக் காட்டினார்கள் என்றே நாம் கொள்ளத் தக்கது. இக்கருத்தினையே,

> "ஞான யோகக் கிரியா சரியை நான்கும்
> நாதன் றன்பணி ஞானி நாலினுக்கு முரியன்"

என்னும் சிவஞான சித்தியாரிலுள்ள கஉ-வது சூத்திரச் செய்யுள் கூறுகின்றது.

திருநாவுக்கரசு சுவாமிகள் "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்னுங் கருத்துடன் இறைவனுக்குப் பாடற்றொண்டுடன் உழவாரத் தொண்டுஞ் செய்தமையும் யாதொருபொருளும் தமக்கு வேண்டும் என்று இறைவனிடத்தில் கேளாதிருந்தமையும்

> "நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சே நீவா
> நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
> புலர்வதன்மு னலகிட்டு மெழுக்கு மிட்டுப்
> பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்

தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல் சேர் செஞ்சடையெம் மாதியென்று
மாரூரா வென்றென்றே யலறா நில்லே ”

என்பது போன்ற அவர் பாடல்களும் அவர் தாத மார்க்கத்தை (சரியை) ஆன்மாக்களுக்கு உணர்த்தி அருளினர் என்பதைக் காட்டும்.

திருஞானசம்பந்த சுவாமிகளுக்கு உமாதேவியார் தமது திருமுலைப்பாலைப் பொன் வள்ளத்துக் கறந்து அதனுடன் சிவஞானத் தின்னமுது குழைத்து 'உண் அடிசில்' என ஊட்டி யருளினதும் இறைவன் அவர் மெய்வருத்தம் தீர்தற் பொருட்டு மகனர் உரிமையில் முத்துச் சிவிகை, முத்துப் பந்தர், முத்துக்குடை முதலியன அருளினதும் அவர் மகனர் உரிமையில் தந்தையார் கொடுக்கு முத்திப்பேற்றினைத் தம்முடைய திருமணம் சேவிக்க வந்த அடியார்களுக்கு அருளினதும் அவர் புத்திர மார்க்கத் (கிரியை) தை ஆன்மாக்களுக்கு உணர்த்தி விளக்கினர் என்பதைக் காட்டும்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்தில் இறைவனர் வந்து வல்வழக்குப் பேசி வலிய ஆட்கொண்டதும் அவர் இறைவனரிடத்தில் தோழனர் என்னும் நெருங்கிய தொடர்பில் பலகாலத்தில் பல பொருள்களைப் பரவையாருக்காக வேண்டுமென்று கேட்டு வாங்கினதும் "மகத்திற் புக்கதோர் சனியெனக் காணுய்", "திருவாரூரில் வாழ்ந்து போதிரே","பிழைத்தது பொறுத் தொன்றீகிலராகிலிவராதில்லையோ பிரானர்" என்பன போன்ற அன்பினற் பாடும் வல்லுரைகளும் அவர் சகமார்க்கத்=(யோகம்) தை ஆன்மாக்களுக்கு விளக்கி அருளினர் என்பதைக் காட்டும்.

மாணிக்கவாசக சுவாமிகள் மதுரையில் அரிமர்த்தன பாண்டியனுக்கு முதன் மந்திரியாய்க் கண்ணுமிடு கவசமும் போற் காரியஞ் செய்தொழுகும் நாளில் அவர் இம்மை யாசையும் மறுமை யாசையு மிழந்து இருட்பிணி அவிழ்த்துத் தம்மைப் பாகதியிற் சேர்ப்பிக்கவல்ல ஒரு குருபரன் எப்பொழுது கிடைப்பான் என்ற

ஒரே நாட்டமுடையவரா யிருந்ததும் அவரை அரசன் குதிரைகள் வந்து இறங்கும் திருப்பெருந்துறைக்குப் பெருநிதியுடன் போய் குதிரைகள் வாங்கி வரும்படி ஆணை தந்த பொழுது அவர் திருப்பெருந் துறைக்குத் தாம் கொண்ட கருத்துடன் போய் அங்கே தம்மை ஆட்கொள்ள அடியார் கூட்டத்துடன் குருந்த மரத்தடியி லெழுந்தருளி யிருந்த குருமூர்த்தத்தைக் கண்டு அழலிடைப்பட்ட மெழுகு போல உள்ளங் குழைந்து நெக்கு நெக்கா யுருகிப் பணிந்து நின்று குருபரனுடைய திருவருட் கமலம் தமது சென்னிமேல் சூட்டப் பெற்றதும் அவர் அப்பொழுது தாம் கொண்டுவந்த பெருநிதியம் தமது உடல் உயிர் எல்லாம் குருபரனுக்குச் சமர்ப்பித்து மெய்யடிமை பூண்டதும் அவர் சன்மார்க்க (ஞானம்) நிலையைக் காட்டும்.

இத்தகைய சைவசமய குரவர்கள் நால்வர்களையும் பொதுவாக எல்லாரும் சிறப்பாகச் சைவர்களும் பத்தி செய்து வழிபட்டு அவர்கள் மூலமாய் எல்லாம் வல்ல இறைவனுடைய அருள் பெற்று உய்வார்களாக.

---

# குழந்தைகளின் நல்வளர்ப்பு

III

[பு. முத்துசுவாமிப் பிள்ளை]

இவ்வுலகில் பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் தனது தாயின் வயிற்றில் கருவாகத் தோன்றிய நாண்முதல் அடையும் வளர்ப்புக்களும், இக்கருவோடு சேர்க்கப்படும் ஏனைய குணங்களும், அக் குழந்தையின் செயற்கையின்பாற் படுமென்றும், அதன் முன்னோரிடமிருந்து அதற்குக் கிடைத்துள்ள குணங்களும் அது கருவாகத் தோன்றியகாலத்து அதற்குக் கிடைத்த பல குணங்களும் அக்குழந்தையின் இயற்கையின்பாற் படுமென்றும், நல்ல செயற்கையின்றி இயற்கையும், நல்ல இயற்கையின்றிச் செயற்கையும் பயன்படா என்றும் இவ்வுலகில் நல்வாழ்வையும்

நன்மக்கட் பேற்றையும் விரும்பும் ஒவ்வொருவரும் தனது மணக் காலத்தை மிகத்தூயதாகக் கருதவேண்டுமென்றும், பெற்றோரிட மிருந்து பிள்ளைகளையும் தொடரக்கூடிய நஞ்சாகிய குடியை அறவே ஒழித்துவிடுதல் மிகுந்த நலமென்றும், இக்குடியையும் இதனையொத்த பல தீயசெயல்களையும் தங்களிடமிருந்து நீக்கியுள்ள யூதரையும்பற்றி முன் செல்விகளில் தெரிவித்தோம்.

இவ்வகை நல்வளர்ப்பைப் பெரிதும் விரும்பும் நல்வளர்ப் பாளன் ஒவ்வொருவனும் மணங்களை ஒழுங்குபடச்செய்து அதன் பயனாக நன்மணத்தையும் நன்மக்கட்பேற்றையும் மிகுதிப்படுத்து வான். இன்றைக்குக் குழந்தைகளாயிருப்பவர்களே இனிவரும் நாட்களில் தந்தையோ தாயோ ஆவதால் அத் தந்தை தாயின் நலம் விரும்புவோர் இக்குழந்தையின் நலம் விரும்பவேண்டுவது இன்றியமையாத தன்றோ?

எனெனின், மரங்கள் பருத்து உயர்ந்து பலமுடையதாக வளர்தல் அவைகளின் வித்து நலத்தையும் செடிகளின் வளர்ப்பு நலத்தையும் பொருத்ததே. முட்டையிடும் மற்றை உயிர்களைப் போலல்லாமல் இம்மக்கட்கூட்டம் தனது முதல் வளர்ச்சிக்குத் தாயின் முலைப்பாலையே பொறுப்பாகக் கொண்டுள்ளது. தாய் நலமாயிருந்தாலன்றி இப்பால் நன்றாயிராது. ஆதலால் இத்தாயின் நலத்தை நாம் கருதுதல் மிகவும் இன்றியமையாதது.

கிறித்து பிறப்பதற்கு எட்டு நூற்றாண்டுகளுக்கு முன் நல் வளர்ப்பைக் கைக்கொண்டுவந்த (Sparta) ஸ்பார்ட்டா என்னும் நாட்டிலுள்ள (Lycurgus) லைக்கர்கஸ் என்பவரோ, அல்லது நாம் முன் குறிப்பிட்ட யூதர்களோ, அல்லது தற்காலத்திலுள்ள காட்டுமிராண்டிகளில் மிகநேர்த்தியான சிலவகுப்பாரோ, அல்லது மிகவும் முன்னேற்றமடைந்த இப்பொழுதுள்ள நாகரிகமுள்ள வகுப்பினரில் சிலரோ எவராயினும் இத்தாயின்நலம் கருதுதலின் இன்றியமையாமை உணராதா ரில்லை.

கொலைக்குற்றம் விதிக்கப்பட்ட மாது கர்ப்பிணியாயிருந்தால் அத் தண்டனையினின்றும் தப்புகின்றாள். இஃது எவ்வாறு சரி

எனின் அவள்தான் ஒருயிரைக் கொன்றபோதிலும் ஒரு மகவைக் கருவுயிர்க்க இருப்பதால் அவளுக்காக அல்லாமல் அவளிட மிருந்து இனித் தோன்ற இருக்கும் குழந்தைக்காகவே விட்டு வைக்கப் படுகின்ருள். அன்றி அவளது கொலைக் குற்றத்தின் தண்டனையாக நாம் அவளைக் கொல்லும்பொழுது தாயின் உரிமையை நாம் ஒப்புக்கொள்ள மறுத்தவர்களாவோம்.

மனிதவாழ்க்கையின் நிலையாமையையும் தாயின்றி இம்மக்கட் கூட்டம் இவ்வுலகில் தழைப்பதற்கில்லை என்னும் உறுதியையும் தெரிந்த எவர்தான் இவ்வகைய தோற்றத் தொழிலைச்செய்யும் தாயின் மேன்மையான உரிமையை ஒப்புக்கொள்ளார். உலகிலுள்ள எவ்வகை உரிமைகளிலும் இது மேலானது. இதற்கிணை யான உரிமை பிறிதொன்றில்லை. இதனைத் தாய்க்குக் கொடுக்க மறுக்கும் புற்பூண்டுகளும், விலங்கினங்களும், மக்கட் கூட்டமும் இவ்வுலகில் வாழையடி வாழையாய்ச் செழிப்புற் றிருத்தல் கூடாது. ஆங்கிலேயர்களால் நாகரிகமற்ற வகுப்பினர் என்று கருதப்படும் ஜூலுஸ் மௌரிஸ் என்பவர்களுங்கூட இந்தத் தாயின் நலம் கருதுவதில் அக்கறையுள்ளவர்களா யிருக்கின்ருர்கள். நாம் ஆயிரக்கணக்காக இறக்கும் நமது குழந்தைகளைக் காப்பாற்ற வழியறியாதிருக்கின்ருேம். கூட்டம்கூட்டமாக ஆலைகளில் வேலைக் குச்செல்லும் தாய்மார்களுக்குத் தகுந்த ஊதியம் கிடைக்கும் வேறு நல்ல தொழில்களை உண்டாக்கிக் கொடுக்கமுடியாம லிருக் கின்ருேம். எண்ணிறந்த ஒதுக்கிவைக்கப்பட்ட தாய்மார்களையும் கணக்கிலடங்காத விதவைகளையும் திக்கற்ற குழந்தைகளையும் நம் ஜனசமூகத்தில் வைத்துக்கொண் டிருக்கின்ருேம். இவை எல்லாம் நம்மவர்க்கு இழிவன்ருே?

பெண்களுக்கென்று ஒரு உரிமை கொடுக்கவேண்டு மென்ருவது அல்லது மனைவிமார்களுக்கென்று ஒரு உரிமை கொடுக்க வேண்டுமென்ருவது நாம் சொல்ல முன்வரவில்லை. ஆனல் தாய் மார்களின் தேவைகளை நன்கு ஆராய்ந்து அதன்வழியாக இனி வரும் நம் வழியாளரைக் காக்கவேண்டு மென்பதே நமது கொள்கை.

கலியாணமாகாது தாயாவோருக்கும் முன்குறித்த கொலை பாதகிக்குக் கொடுக்கப்பட்ட உரிமைகள் கொடுக்கவேண்டு மென்று சிலர் விரும்புகிறார்கள். ஜூலுஸ் மெளரிஸ் என்பவர்கள் இச்செய்தியில் ஒருவாறு நடந்து வருகிறார்கள். அஃதாவது அவர்களுக்குள் ஒருபெண் கலியாணமாவதற்கு முன்னர் ஒருவனைச்சேர்ந்து கர்ப்பிணியானால் அச்செய்திதெரிந்ததும் எல்லாரும் கூடி இப்பெண்ணின் நிலைமையை எல்லாருக்கும் எடுத்துரைத்து இப்பெண்ணையும் அவளிடம் இனித்தோன்ற இருக்கும் குழந்தை யையும் காத்தற்பொருட்டு அவளைத் தற்சமயம் மணந்துகொள்ள யாவராயினும் முன்வருவார்களாவென்று பார்த்து அவனிடத்தில் அவளை ஒப்புவித்து அவளை முன்சேர்ந்த ஆடவனைத் தங்கள் வாளால் வெட்டிக்கொன்று விடுவார்களாம். எவ்வகைப்பட்ட நியாயத்தீர்ப்பும் பழக்கத்துக்கு முரட்டுத்தனமாய்த் தோன்றப் பட்டாலும் ஒருவகைக்குப் பொருத்தமெனவே சொல்லலாம். இச்செய்தியில் நம்மவர் எவ்வாறு நடந்துகொள்கிறார்கள் என் பதை உற்று நோக்குவோம். இவ்வகைப்பட்ட பெண்ணைக் கற் பழித்த ஆடவன் எவ்வித தண்டனையுமின்றித் தப்புகின்றான். அப்பெண் எல்லாவகைத் தண்டனைக்கும் உள்ளாகித் தன் குழந் தையைக் கொல்லவோ அல்லது தற்கொலை செய்துகொள்ளவோ தலைப்படுகின்றாள். ஒரு குற்றத்திற்கு உரிமைப்பட்ட இருவரில் ஒருவருக்குத் தண்டனையின்மையும் மற்றொருவருக்குப் பல்வகைத் தண்டனையும் கொடுப்பது ஒருவாற்றானும் பொருந்தாது.

---

# தென்காசி சிவாலயமும் தேவாரப் பணியும்

சென்ற மாதம் சென்னை எண்டோமெண்ட்போர்டு தலைவர் அவர்கள் எல்லாச் சிவாலயங்களிலும் தேவார பாராயணம் செய்த பின்தான் விபூதிப்பிரசாதம் யாவருக்கும் கொடுக்கவேண்டு மென்று அனுப்பிய தீர்மானத்தை சிவகமிட்டி மெம்பர்கள் தென்காசி தேவஸ்தானத்திற்கும் அனுப்பினார்கள். தருமகருத்

தர்கள் அதை அமுலுக்குக் கொண்டுவர ஆலோசித்திருக்கையில் சிவகமிட்டி இன்ஸ்பெக்டர் அவர்கள் மேற்படி தீர்மானத்தை சரிவர நடத்துமாறு ஏற்பாடு செய்தார்கள். நவராத்திரி உற்சவத்தில் ஒருநாள் தரணிபீடத்தில் தேவார பாராயணம் நடக்கும்பொழுது பிராமணர்கள் சுண்டலுக்கு அடிபிடி சண்டையிட்டுப் பாராயணம் நடக்கத் தடைசெய்தார்கள். அதன்மேல் அன்று தேவாரம் நடந்தபின்னரே நைவேத்யம் வழங்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. அதன்பின் அங்குவந்திருந்த சைவ நன்மக்கள் வேண்டுகோட்படியும் கமிட்டி இன்ஸ்பெக்டர் உத்திரவுப்படியும் போர்டு உத்தரவு ஊர்ஜிதத்திற்குக்கொண்டுவரப்பட்டது. அங்குவந்திருந்த பிராமணர்களிற் பலர் விபூதிப் பிரசாதம் வாங்காது வெளியே போய்விட்டார்கள். சிலர் பெற்றுச் சென்றார்கள். பின் சென்றமாதக் கடைசி வெள்ளிக்கிழமையன்று அவர்கள் பலர் ஒன்றுகூடி ஆலோசித்து போர்டு உத்திரவை உல்லங்கனம் செய்யுமாறு ஆலயத்திற்கு வந்திருந்தார்கள். அவர்கள் வேதபாராயணம் முடிந்தவுடன் அருச்சகர்களை விபூதி அளிக்குமாறு வற்புறுத்த, அவர்கள் தருமகருத்தர்கள் உத்திரவின்றியில் ஒன்றும் செய்யமுடியாதென்று கூற கோபங்கொண்டு விபூதிக்கப்பரையைப் பிடுங்கி எறிந்துவிட்டு, தேவாரம் நடக்கத் தடைசெய்தார்கள். அதன்மேல் அருச்சகர்கள் கலவரை நடக்குமோவென்று பயந்து அம்மன்கோவில் அளிக்கதவை அடைத்து வெளியே வந்துவிட்டார்கள். பின் ஊஞ்சல் மண்டபத்தில் வைத்து விவகாரஞ் செய்தார்கள். இந்தச் சமாசாரத்தை அறிந்து சைவர்களிற் பலர் ஒருங்குதிரண்டு வந்தார்கள். முடிவில் சைவர்கள் ஆதரவின் பேரில் தருமகருத்தர்கள் போர்டு உத்திரவின்படியே தாங்கள் நடப்பதாயும் அதுவே தங்கள் கடமை என்றும் பிராமணர்கள் தங்கள் ஆக்ஷேபனையைப் போர்டுக்குத் தெரிவித்துப் பரிகாரம் பெறவேண்டுமென்றும் வீண்கலவரை செய்யக்கூடாதென்றும் சொல்லிவிட்டார்கள். அதன்பின் பிராமணர்கள் கோவிலுக்குப்போகும் வழக்கத்தை நிறுத்தி தாங்களே தெய்வமாகையால் ஆலயவழிபாடு அவசியமில்லை என்றும் கேவலம் சாம்பலுக்கு அடிபிடி செய்வதில்லை

என்றும் தங்கள் இளைஞர்களுக்கும் உபதேசித்து நிறுத்திவிட்டார்கள். பின் ஐப்பசி விஷு இரவு ரிஷபவாகன தரிசனத்தை அவர்கள் தாங்கள் அறவே நிறுத்தினதோடன்றி வக்கீல் கனம் சகஸ்ரநாமய்யரவர்கள் விபூதிப்பிரசாதம் வாங்கினவர்களையும், போர்டு ஹைஸ்கூல் ஆசிரியர் கனம் மீனாக்ஷிசுந்தரமய்யர் அவர்கள் திருக்கண் சாத்தினவர்களையும் பலவாறு நிந்தித்து இனிமேல் அவ்வாறு செய்யக்கூடாதென்று கண்டித்துவிட்டார்கள்.

பின் பிராமணர்கள் ஐப்பசிமீ 5வ இரவு தெற்குமாசி வீதிப்பிள்ளையார் கோவிலில் ஒரு கூட்டம் கூடி மாமூல்படி விபூதி கிடைக்காவிட்டால் மறுநாள் நடக்கும் ஐப்பசி உத்ஸவக் கொடி எற்றுக்கு ஒருவரும் செல்லக்கூடாதென்றும் அம்பாள் எழுந்தருளி வருங்காலத்து ஆராதிக்கக்கூடாதென்றும் அப்படி யாரேனும் செய்தால் அவர்களை சாதிப்பிரஷ்டம் செய்யவேண்டுமென்றும் தீர்மானித்ததுமன்றி ஆதிசைவர்களையும் பரிசாரகர்களையும் தடுத்தார்கள். ஆதிசைவர்கள் உடன்படாது மறுத்துவிட்டார்கள். அவர்களைப் பலவாறு பயமுறுத்துகிறார்கள். பரிசாரகர்கள் தங்களுக்கு சம்பளப்பாக்கி வந்தவுடனும் உத்ஸவம் முடிந்தவுடனும் நின்றுவிடுவதாய்ச் சொல்லியிருக்கிறார்கள். நீதிமன்றத்தில் வழக்காடுவதற்கு தலைக்கட்டுக்கு ரூ 0—8—0 வீதம் வரிவிதித்து வசூலிக்கிறார்கள். தங்கள் தீர்மானப்படி ஆலயஞ் செல்லவாவது வீதிவலம் வரும் அம்பாளை ஆராதிக்கவாவது இல்லாமல் கதவுகளை அடைத்துக்கொள்கிறார்கள். ஒரு சிலர் தங்கள் வீடுகளிலே தேங்காயை உடைத்து தாங்களே கற்பூரம் காட்டுகிறார்கள். அக்கூட்டத்திலிருந்த வக்கில் கனம் T. V. கிருஷ்ணசுவாமி ஐயர் அவர்கள் அவர்களைக் கண்டித்து தேவாரத்திற்குப் பின் விபூதி பெறுவதால் வரும் அகௌரவம் என்னவென்றும் அவ்வாறு வாங்குவது சரிதான் என்றும் சொல்ல அவர்களை போர்டு தலைவரவர்களோடு சேர்த்து நிந்திக்கத் தலைப்பட்டு அவர்களையும் ஒருவாறு இணக்கிவிட்டார்கள். அவர்கள் சொற்படி புரோகிதர்களும் வாத்தியார்களும் ஆலயஞ்

செல்வதை நிறுத்திவிட்டார்கள். அவர்கள் சம்பந்தமின்றி அருச்சகர்களே அவ்வேலைகளைத்தாங்களே செய்துவருகிறார்கள். அருச்சகர்கள் இப்பொழுதுதான் தாங்கள் இன்னாரென்று உணர்ந்திருக்கிறார்கள். பிராமணர்களால் சுமக்கப்பட்டுவந்த ஆவாஹன ஸ்ரீபலிநாயகர் சைவநன்மக்களால் சுமக்கப்பட்டார். இப்பொழுது ஆலயதரிசனம், நந்திபெருமான் தொழிலை நடத்திவரும் பின்பாகங் காட்டும் பிராமணப் பெண்களில்லாமையால், அழகாய்க் கிடைக்கின்றது. ஆலயம் அமைதிகொண்டு விளங்குகின்றது. திருவிழா மத்தியில் திருக்குறள் தொண்டர் திருவாளர் சுப்பிரமணியதாஸ் அவர்கள் "தமிழர் கடமை" என்ற பொருள் பற்றியும், போர்டு ஹைஸ்கூல் தலைமைத் தமிழாசிரியர் திருவாளர், அ. நாறும்பூநாத தேசிகர் அவர்கள் "சைவர் கடமை" என்ற பொருள்பற்றியும் இரண்டுதினம் பெருஞ்சொற்கள் நிகழ்த்தினார்கள். தேவாரத்திற்குப்பின் விபூதி கொடுக்கும் வழக்கம சுமார் 12 வருடகாலமாக கடையத்திலும் திருக்குற்றாலத்திலும் அவ்வாலய தருமகருத்தர்கள் உறுதியுடன் நடத்திவருவதை ஒவ்வொரு ஆலய தருமகருத்தர்களும் நன்கு கவனிப்பார்களாக.

உண்மையுரைப்போன், தென்காசி.

அறிவுடைய நன்மக்களே!

மேலே குறிப்பிட்ட செய்தி அதனைக் கண்ணுற் பார்த்து அறிந்த ஒரு அறிஞரால் எழுதப்பட்டது. இதனை வாசித்துப் பார்த்து நியாயம் யார்பாலது என்று நிதானித்து உங்கள் கருத்துக்களை பத்திரிகைகளுக்கு எழுதியனுப்புங்கள். திருநெல்வேலி ஜில்லா ஆலயங்களில் ஆகம விதிக்கும் சாதாரண அறிவுக்கும் மாறாக வேதபாராயணம் செய்தபின்னும் தமிழ்வேத பாராயணத்துக்குமுன்னும் விபூதியும் சுண்டல் முதலிய நிவேதனங்களும் பிராமணர்களுக்கு வழங்கப்பட்டும் தமிழ்வேத பாராயணத்துக்குப்பின் பிராமணரல்லாதார்களுக்கு விபூதியும் நிவேதனங்களும் வழங்கப்பட்டும் வந்தன. இந்தச் சர்க்கேட்டை நீக்கவேண்டி சமயஸ்தாபனப் போர்டார் (Religious Endowment Board)

செய்த உத்தரவை அனுசரித்து தருமகருத்தர்கள் தமிழ்வேத பாராயணம் செய்தபின்பே யாவருக்கும் விபூதியும் நிவேதனமும் வழங்கல்வேண்டும் என்று பிரயத்தனம் செய்தால் பிராமணர்கள் இவ்வளவு கடுமையான ஆக்ஷேபனை செய்கிறார்களே. இப்படி பிராமணர்கள் என்ன காரணத்தையிட்டு ஆக்ஷேபனை செய்கிறார் கள்? அவர்களுக்கு முதலில் விபூதி முதலியன கொடுக்கவேண் டாம் என்று சொன்னால் அவர்களுக்கு முன்னிருந்த முதன்மை யும் பெருமையும் கெட்டுப்போம் என்று நினைக்கலாம். இறை வனுக்குச் செய்கிற எல்லா உபசாரங்களும் முடிந்த பிற்பாடு விபூதி முதலியன எல்லாருக்கும் வழங்கி வருவதனால் பிராமணர் களுக்கு என்ன அகௌரவம் உண்டாகும்? தமிழ்வேத பாராய ணத்துக்கு முன் ஒரு வகுப்பினர்களுக்கு மாத்திரம் விபூதி முதலி யன வழங்கல் இறைவனுக்கும் தமிழ்வேதம் சொன்ன சைவசமய ஆசாரியர்களுக்கும் அபசாரம் ஆகும் என்றும் தமிழ்வேத பாரா யணத்துக்குமுன் பிராமணருக்கும் பின் பிராமணரல்லாதாருக் கும் விபூதி முதலியன வழங்கல் இருவகை வகுப்பினர்களுக்கும் பேத புத்தியையும் பிளவையும் உண்டுபண்ணி நாட்டுநலத்துக் கும் கேடு உண்டாக்கும் என்றும் பிராமணர் பெரும்பாலார் அறிந்து நடவாமலிருக்கிறதைக்கேட்டு நாங்கள் மிக்க பரிதாபப் படுகிறோம். உயிர்களுக்கு உறுதிபயப்பதற்காக முன்னோர்க ளால் நமது நாட்டில் ஏற்படுத்தப்பட்ட ஆலயங்களிலும் மடங் களிலும் உள்ள சீர்கேடுகளை நீக்குகிறதற்காக சட்டசபையில் பிராமணரல்லாதார் பகீரதப்பிரயத்தனம் செய்து சமய ஸ்தாபன மசோதாக் கொண்டுவந்தால் அது முடிவுபெறக்கூடாது என்ற கருத்துடன் அவர்கள் எவ்வளவோ ஆக்ஷேபனையும் தடங்கலும் செய்தார்கள். நாட்டின் முழுநலத்தைக் கருதும்படியாயுள்ள விரிந்த மன அறிவை அவர்களுக்கு இறைவன் அளிக்கவேண்டு மென்று நாங்கள் மனமொழி மெய்களால் அவனைத் துதிசெய்கின் றோம்.

தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தார்,

1—11—26 திருநெல்வேலி.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது

| சிலம்பு ச | மெய்கண்டான் யாண்டு-எ௱௩ கார்த்திகைத்திங்கள்<br>1926ஆம் நவம்பர்மீ—டிசம்பர்மீ | பரல் கக |
|---|---|---|

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## சம்பந்தர் ஞானப்பால் உண்டு அருள்பெறல்

சோழ நாட்டிலே, பிரமபுரம் முதலிய பன்னிரு திருப்பெயருடைய சீகாழியிலே, பார்ப்பன குலத்திலே, கவுணியர் வகுப்பிலே சிவபாத விருதயர் என்பார் ஒருவர் சைவப்பற்று மிக்குடையரா யிருந்தார். அவர், அந்நாளில் சமணம், புத்தம் முதலிய புறப்புறச் சமயங் களை மிகுந்து சைவ வான்பயிர் குன்றுதலை நோக்கி உளம் வருந்திச் சைவத்தை நிலை நாட்டுதற்குரிய மகப்பேறு கருதிப் பெரியநாயகியாரோடு ஆண்டெழுந்தருளிய திருத்தோணி யப்பரைக் குறித்து நோற்பாராயினர். அந்

நோன்பு வழியாக அவ்வம்மையப்பருடைய திருவருட் பெருக்கி னாலே, அவரது மனைவியார் பகவதியம்மையாருடைய மணிவயிற் றிலே சித்திரைத் திங்களிலே திருவாதிரை நாளிலே திருமகனார் ஒருவர் தோன்றியருளினார். அவர் தமது மூன்றாம் ஆண்டிலே ஒரு நாள் திருக்கோயிலினுள்ள திருக்குளத்திலே நீராடச்சென்ற தந்தையோடு அழுதுகொண்டு பின் செல்ல, சிவபாதவிருதயர் அவரை அக்குளக் கரையிலே இருத்தி நீரின்மூழ்கி, மறமகற்றும் மந்திர சிந்தனையிலிருந்தார். அப்போது பிள்ளையார் திருத்தோ ணிக் கோபுரத்தைப் பார்த்து, "அம்மே, அப்பா" என்று அழைத்து அழத் திருத்தோணியப்பர் அவருக்கு அருள்புரியு மாறு அம்மையாரோடு விடையூர்ந்து எழுந்தருளிவந்தார். அம் மையார் தம்முடைய ஞானத் திருமுலைப்பாலைப் பொற்கிண்ணத் திலே கறந்து, கண்ணீர் துடைத்துப் பிள்ளையாருடைய கையிலே கொடுத்து ஊட்டத், தோணியப்பர் அவரது அழுகை தீர்த்து ஆண்டருளினார். பிள்ளையார் எல்லா உலகங்கட்கும் இருமுது குர வாகிய இறைவன் இறைவி இருவராலும் ஆட்கொள்ளப் பெற்ற மையால் 'ஆளுடைய பிள்ளையார்' எனவும், சிவஞானசம்பந்தம் பெற்றமையால் 'திருஞானசம்பந்தப் பெருமான்' எனவும் திருப் பெயர் உடையவராயினார்.

சிறிது நேரத்திலே சிவபாதவிருதயர் செய்கடன் முடித்துக் கரையேறி ஆளுடைய பிள்ளையாரைப் பார்த்து, 'நீ யார் தந்த பாலை உண்டாய்?' என முனிவுற்று, 'எச்சில் மயங்க உனக்கு இப் பாலை இட்டாரைக் காட்டு' என ஒரு மாறுகொண் டோச்சிக் கேட்பப் பிள்ளையார் இன்ப வெள்ளத் தாழ்ந்து, உச்சிமேல் எடுத்த தந்திருக்கை விரலினாலே சுட்டி வானிலே உமையம்மை யாரோடு விடையூர்ந்து நின்றருளிய பெருமானைக் காட்டி, உலக முய்யப் பாடுந் தமது திருப்பாடல் சிவபெருமானது திருச்செவி யில் ஏறும் பொருட்டு முதலில் அத்திருச்செவியைச் சிறப்பித்துத் திருவடையாளங்களைச் சாற்றி, மறை முதலாகிய ஓங்காரத் திரு வெழுத்தைத் தகரமெய்யொடு புணர்த்தித் 'தோடுடைய செவி யன்' என்னும் மெய்ம்மொழித் திருப்பதிகத்தைப் பாடியரு ளினார்.

# ஆளுடைய பிள்ளையார்

[பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டார்]

(சஙஅ - ம் பக்கத் தொடர்ச்சி)

அப்பொழுது அங்கே நிகழ்ந்ததனைக் கேள்வியுற்றமறையோரெல்லாரும் உடல் புளகங்கொண்டு, 'இதனை யொப்பதாகிய அற்புதம் எங்கே நிகழ்ந்தது' என்று சொல்லிக்கொண்டு, திருக்கோயிலின் வாயிலில் வந்து சூழ்ந்தனர். பிள்ளையார், விடைமீது போந்து திருத்தோணியில் வீற்றிருந்தருளிய பெருவாழ்வின் திருமுன் பெய்தித் திருப்பதிகம்பாடி, குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழிசையுடன் கூடிய இனிய தமிழ்ப் பாடல்களால் சிவபெருமானைப் பாடுதலே திருத்தொண்டாக அருள்பெற்ற தொடக்கோடும் திருக்கோயிலினின்று புறப்பட்டார். அதுகண்ட காழியில் வாழும் அந்தணர் முதலிய திருத் தொண்டர்கள் எதிர்கொண்டு நின்று துதிப்பாராய்,

"காழியர் தவமே கவுணியர் தனமே கலைஞானத்
தாழிய கடலே யதனிடை யமுதே யடியார்முன்
வாழிய வந்திம் மண்மிசை வானோர் தனிநாதன்
ஏழிசை மொழியாள் தனதிரு வருள்பெற் றனையென்பார்"

"மறைவளர் திருவே வைதிக நிலையே வளர்ஞானப்
பொறையணி முகிலே புகலியர் புகலே பொருபொன்னித்
துறைபெறு மணியே சுருதியி னொளியே வெளியேவந்
திறையவ னுமையா ளுடனருள் தரவெய் தினையென்பார்"

"புண்ணிய முதலே புனமணி யரைஞா ணொடுபோதும்
கண்ணிறை கதிரே கலைவளர் மதியே கவின்மேவும்
பண்ணியல் கதியே பருவமதொருமூ வருடத்தே
எண்ணிய பொருளாய் நின்றவ ரருள்பெற் றனையென்பார்"

என்று இத்தன்மையன பலவற்றைக் கூறி வழுத்தி, அவருடைய திருவடிகளில் விழுந்து வணங்கி யெழுந்தார்கள். சிவபாத விருதயர் தெய்வஞானக் கன்றாகிய பிள்ளையாரை எடுத்துத் தோளின்

மேல் வைத்துக்கொண்டு, மங்கல தூரியங்கள் ஒலிக்கவும் மறைகள் முழங்கவும், காழி நகரை வலஞ் செய்துகொண்டு தம்முடைய திருமாளிகையை அடைந்தார்.

ஆளுடைய பிள்ளையார், அன்றிரவு இடையறாப் பெருங் காதலுடன் தோணியப்பர் திருவடிகளைச் சிந்தித்திருந்து, மற்றைநாட் காலையில், திருக்கோயிலையடைந்து, தம் திருத்தந்தையாகிய பெருமானையும், திருத்தாயாகிய பிராட்டியையும் வணங்கித் துதித்து,அருள் பெற்று, திருக்கோலக்கா என்னும் திருப்பதியை அடைந்து, திருக்கோயிலை வலஞ்செய்து முன்னின்று, கையினால் ஒத்தறுத்துத் திருப்பதிகம்பாடத்தொடங்கினார்; பாடும்பொழுது சிவபெருமானுடைய திருவருளினாலே, திருவைந்தெழுத்து எழுதப்பெற்ற பொற்றாளம் பிள்ளையார் திருக்கையில் வந்திருந்தது; பிள்ளையார் திருவருளை வியந்து, அதனைத் திருமுடிமேல் வைத்துக் களிகூர்ந்து, ஏழிசையும் தழைத்தோங்கத் திருப்பதிகத்தைப் பாடி முடித்துத் திருக்கடைக் காப்புச் சாத்தி நின்றார். தும்புரு நாரதர் முதலாகிய இசைப் புலவோர்கள் விண்ணுலகும் வியப்ப வெழுந்த இன்னிசையின் உண்மையை நோக்கித் துதித்து மலர்மழை பொழிந்தனர்.பிள்ளையார் மீண்டு,தாம்நடந்து செல்லுதலைத் தரிக்கலாற்றாத தந்தையாரின் தோளின்மேல் எழுந்தருளிச் சீகாழியை அடைந்து, திருக்கோயிலிற் சென்று வலஞ்செய்து திருமுன் நின்று பதிகம்பாடி வணங்கிக்கொண்டு, அப்பதியிலுள்ளவரனைவரும் வாழ் வெய்தும்படி, அங்கே தம் இளந்திருக் கோலக்காட்சியை அளித்து வீற்றிருந்தருளினார்.அங்ஙனம் இருக்கும்பொழுது, அவருடைய தாயாராகிய பகவதியார் பிறப்பதற்குத் தவம்புரிந்த திருநனி பள்ளியில் உள்ள மறையோரெல்லாரும் பெரு மகிழ்ச்சியுடன் அவ்விடத்திற்கு வந்து சேர்ந்து கவுணியர் பெருமான் திருவடிகளை வணங்கி யிருந்தனர். பிள்ளையார் உலக முய்யும்படி சிவஞானம் பெற்ற பெரு வார்த்தையைக் கேள்வியுற்று, வேறு திருப்பதிகளிலுள்ள திருத் தொண்டர்களும் மறையோரும் ஏனையரும் குழாங் கொண்டுவந்து, காழியிள வேற்றின் கழல்களை வணங்குஞ் சிறப்பினைப் பெற்றனர். அங்கே வந்து திரண்ட திருத் தொண்டர் முதலாயினர்கட்கு

உவகையுடன் திருவமுது அளித்தல் முதலிய செய்கைகளை யாவ ரும் புரியாநிற்க, சீகாழிப் பதியானது சிவலோகம்போல விளங்கு வதாயிற்று.

இவ்வணம் நிகழும் பொழுது, திருநனி பள்ளியோர்கள் பிள்ளையாரை வணங்கி, 'தேவரீர் அடியேங்கள் பதியில் வீற்றிருக் கும் சிவபெருமானை வணங்கும் பொருட்டு அவ்விடத்திற்கு எழுந் தருளல் வேண்டும்' என்று விண்ணப்பிக்க, ஆளுடைய பிள்ளை யார் அதற் கிசைந்தருளி, தோணியப்பரை வணங்கி அருள் பெற்று, பிறபதிகளையும் வணங்குவதற்குச் செல்லா நிற்புழி செந் தாமரை மலரினுஞ் சிறந்த அருமைத் திருவடிகள் தரையின்மேல் நடப்பதனையும், பிறரொருவர் தாங்குவதனையும் பொறாத அன் பினையுடைய தாதையாகிய சிவபாத விருதயர் வந்து எடுத்துத் தோளின்மேல் வைத்துக்கொள்ள, ஞானமுண்ட பெருந்தகை யார் தம் பெருமானுடைய திருவடிகளை முடிமேற்கொண்ட கருத் துடன் போந்தருளினர். திருநனி பள்ளிக்கு அருகாக அணைந்த பொழுது, பிள்ளையார், வானளாவிய மலர்ச் சோலையுடன் தோன் றும் அப்பதி யாதென்று வினவியருள, தந்தையார் 'திருநனி பள்ளி' என்றார். என்றலும், திருப்பதிகம் பாடிக்கொண்டு, திருக் கோயிலை அடைந்து பணிந்து போற்றி, அப்பதியில் அமர்ந்திருந் தார். பின் அப்பதியை நீங்கி, தலைச்சங்காடு, திருவலம்புரம், பல் லவனீச்சரம், திருச்சாய்க்காடு, திருவெண்காடு, திருமுல்லைவாயில் என்னும் திருப்பதிகளுக்குச் சென்று இறைஞ்சி, பதிகம் பாடிக் கொண்டு, மீண்டு சீகாழியை அடைந்து தோணியப்பரை வணங்கி, நாளும் அவரைக் கும்பிடும் விருப்பத்துடன் அங்கு எழுந்தருளியிருந்தார். இருக்கு நாளில் திருமயேந்திரப் பள்ளி, திருக்குருகாவூர் முதலாகிய பதிகளை இறைஞ்சியேத்தித் தமிழ் மாலை பாடினர்.

இங்ஙனம் நிகழு நாளிலே, திருநீலகண்டப் பெரும்பாணர் ஆளுடைய பிள்ளையாரின் திருவடிகளை வணங்குதற் பொருட்டு, யாழ்கொண்டு பாடினியாருடன் சீகாழிக்கு வந்து சேர்ந்தார். பிள்ளையார் அவருடைய வரவை அறிந்து, அவரை எதிர் கொள்

ளாநிற்க, அவர் பிள்ளையாருடைய திருவடிகளைப் பேரார்வத்துடன் வணங்கி ஏத்தி மகிழ் சிறந்தார். பிள்ளையார் அவரை அழைத்துக் கொண்டு திருக்கோயிற் புறமுன்றிலே அடைந்து, கும்பிடுவித்து, 'உங்கள் பெருமானுக்கு யாழ் வாசிப்பீராக' என்றார். பெரும்பாணர், பிள்ளையாரை வணங்கி, சிவபெருமான் மேலதாகிய (தேவ) பாணியை விறலியாரோடும் பாடி, யாழ் வாசிக்க, பிள்ளையார் மகிழ்ச்சி யடைந்து, அவர் பாடிய பின் அவரைக் கொண்டுபோய் உறைவிடங் கொடுத்து இருக்கச்செய்து, விருந்தளித்தார். திருநீலகண்டப் பெரும்பாணர்,ஆழிவிடமுண்ட பெருமான் மீது 'திருஞான சம்பந்தப் பிள்ளையார் பாடிய திருப்பதிகங்களைக் கேட்டு, அமிழ்தம் அருந்தினவர்போலச் சிந்தைகளித்து, அவற்றின் இசைகளை யாழிலே இட்டு வாசித்து எவ்வுயிர்களையும் மகிழ்வித்து, பிள்ளையாரை நோக்கி 'தேவரீர் பின்னும் அருள் செய்யும் திருப்பதிகங்களின் இசையை அடியேன் யாழில் இட்டு வாசித்துக் கொண்டு, தேவரீரைப் பிரிவின்றிச் சேவிக்கப் பெறவேண்டும்' என்று விண்ணப்பித்து, பிள்ளையார் அதற்கு இசைந்தருளப்பெற்று, அற்றை நாள் தொடங்கி அவர் பாடும் திருப்பதிகங்களின் இசைகளை யாழிலே இட்டு வாசித்துக் கொண்டு, என்றும் அகலாத நண்புடனிருந்தார்.

திருஞான சம்பந்தப் பிள்ளையார், தில்லைத் திருச்சிற்றம்பலத்திலே திருநடம் புரிந்தருளும் அம்பலவாணரைப் பணிந்து ஏத்துதற்குப் பெருங்காதலுடையராய், தோணியப்பரை வணங்கி அருள் பெற்றுக்கொண்டு, தந்தையாரோடும், யாழ்ப்பாணரோடும், அடியார்கள் பக்கத்திலே சூழ்ந்துவர, சீகாழியைக் கடந்து சென்று, தில்லையின் எல்லையை அடைந்து வணங்கிக் கொண்டு, பொய்கைகளும், பூஞ்சோலைகளும், கரும்பும், செந்நெலும், கமுகுடன் கலந்து உயர்ந்திருக்கும் கழனிகளும், திருநந்தனவனங்களும் முதலியவற்றைக் கடந்து சென்று, அத்திருப்பதியைச் சூழ்ந்த திருமதிலின் தெற்கு வாயிலை அடைந்து, தில்லைவாழந்தணர்களும், மற்றையடியார்களும் பேரலங்காரத்துடன் எதிர்கொண்டு வாழ்த்துரைக்கச் சென்று, அன்பர்களின் சிந்தைபோல் விளங்குகின்ற திருவீதியைத் தொழுது, தூலலிங்க

மாகிய எழுநிலைக் கோபுரத்தை வணங்கி எழுந்து, உள்ளே புகுந்து, திருமாளிகையை வலஞ்செய்து, பேரம்பலத்தை வணங்கிக்கொண்டு, கனகசபையை அடைந்தார்; கைகள் சென்னியின் மேல் ஏறிக்குவிய, விழிகள் களிகொள்ள, உருகும் அன்புடன் திருவணுக்கன் றிருவாயிலிற் புக்கார்; அண்ணலார் தமக்கு அளித்த மெய்ஞ்ஞானமேயாகிய அம்பலத்தையும், அந்நிறை ஞானத்தெழுந்த ஒப்பற்ற ஆனந்தக் கூத்தையும் கண்ணின்முன் புறக் கண்டார்; 'மெய்யுணர்வின் அநுபவமாக வரும் சிவபோகத்தை உடம்பின்கண் உள்ள ஐம்பொறியளவினும் எளிவருமாறு அருளினை' எனப் போற்றி, சிவானந்தவாரிதியில் அமிழ்ந்து நின்று, "கற்றாங் கெரியோம்பி" என்னும் திருப்பதிகத்தைப் பாடி யருளினர்.

(தொடரும்)

---

# காரியசித்தி

## மனோவசியத்தால் அதை அடையும் முறை

[மயிலை. சீனி. கோவிந்தராசன்]

(கலாசிந்தாமணியினின்றும் எடுக்கப்பட்டது)

நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும்—நிலையினும்
மேல்மேல் உயர்த்து நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான். —நாலடியார்.

உலகத்தில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரியத்தில் தலையிட்டுக்கொண் டிருக்கிறார்கள். நியாயவாதி, வியாபாரி, உழைப்பாளி என்னும் இப்பெயர்கள் யாவும் தொழில்பற்றி வந்தனவே. இப்படி ஒவ்வொருவரும் ஒவ்வொரு தொழிலை மேற்கொண்டிருத்தல் உலகம் நடைபெறுதற்கு மிகவும் அவசியமாக இருக்கின்றது. தொழிலாளிகள் அல்லாதவரும் ஒரு காரியத்தைக் கையகன்று இருத்தலில்லை. ஒவ்வொருவரும் ஒருகாரியமும்

கையுமாயிருத்தல் பொருள் தேடுதற்பொருட்டே என்று நினைத்தலாகாது. கோடானு கோடியாகப் பொருள்கூட்டி வைத்திருப்பவரும் ஏதேனும் ஒரு காரியத்தில் முயன்றுகொண் டிருப்பார். இதற்குக் காரணம் யாதென்று ஆராய்வோமானல், ஒவ்வொருவரும் தாந் தாம் உள்ள நிலையினின்றும் தம்மை உயர்த்திக் கொள்ள விரும்புகின்ருர்கள் என்பதை அறியலாம். இந்த விருப்பம் யாவருக்கும் இருக்க வேண்டியதே! இதை இல்லாதவர் இப்பூமியிலே இருந்தும் பயனில்லை; இதை இல்லாதவர் இங்கே ஒருவரும் இல்லை. இது மனிதருக்கு உரிய குணம்.

சிலர் இவ்விருப்பம் இல்லாமலே இருக்கின்ருர்களே என்ருல், அஃது உண்மையன்று. அவர்களும் ஒருகால் இவ்விருப்பம் உடையராயிருந்து ஒரு காரியத்தில் ஒருவாறு முயன்று அக்காரியங் கைகூடாதபடியினல், விதியை நொந்து மனம் சோர்ந்து கிடப்பவர். அவருக்கு அந்தக் காரியம் பலியாது போனதற்குக் காரணம், முடியக்கூடிய வழியிலே அதனை முயலாது விட்டது தான்! எடுத்த காரியத்தில் பூரண சித்திபெற்ற ஒருவனைக் கண்டு அவன் வெற்றி பெற்ற விதத்தை விசாரிப்போமானல், கீழ்க் கண்டபடி அவன் சொல்லுவான்.

1. யான் நியமம் தவறுவதில்லை; மனவுறுதியைக் கைவிடுவதில்லை; அதனலே தான், எனக்குக் காரியம் கைகூடுகின்றது.

2. என் தொழில் செழித்து வளரச்செய்யும் முயற்சியில் யான் பின்னிடுவதில்லை; அதற்கு நேரிடும் இடையூறுகளைக் கவனிப்பது மில்லை.

3. என் தொழிலில் ஆசைவைத்து, அதில் மகிழ்வுற்று, அதைச் சார்ந்த ஒவ்வொன்றிலும் கண்ணும் கருத்துமாயிருக்கின்றேன்.

"ஓ! அவன் கொண்டு நடத்தும் ஆற்றலும் முன்னேக்கமும் உடையவன் காண்; ஆதலால், அவன் வெற்றி பெறுகின்ருன்; அது யாவரும் அடையக் கூடியதா?" என்று சிலர் வாதிக்கலாம்.

அப்படி வாதிப்பவர் 'முடிக்கும் வன்மையும் முன்னேக்கமும் யாவரும் பயின்று பழகிக் கொள்ளலாம்' என்று அறியாதவர்.

தான் இருக்கின்ற நிலையிலே திருப்தி அடையாமல், உயர வேண்டு மென்னும் உண்மை விருப்ப முடையவன், இந்த விருப்பம் சித்திக்கும் பொருட்டு நிலையான நியமம் உடையவனாக இருத்தல் வேண்டும். இந்த சித்திக்கு இடையே உண்டாகும் இடுக்கண்களைப் பொருட்படுத்தாமல் போக்கிக்கொள்ள உத்தேசமும் வேண்டும். உத்தேசமாவது தான் (Self) என்பதில் ஊன்றிய நம்பிக்கை. நீ விருத்தியாவதற்கு விரோதமாகிய தடைகளைப் பொருட்படுத்துவாயானால், மனம் தளர்ந்துபோவாய். ஆகையின், அவ்வகைத் தடைகளைத் தாண்டிச் செல்லுகின்ற பலத்தை உன் சித்தமானது உனக்குத் தருமென்றும், நீ வெற்றியடையக் கூடுமென்றும் துணிந்திரு.

அவசரப் பட்டேனும் ஆரவாரத்தோடேனும் ஆரம்பிக்கும் செயல்கள் ஒரு பயனையும் தாரா. அந்த ஊக்கம் ஊதியம் இழந்துபோம்.

தான் என்பது யாது? அதன் தொழில் யாது? தான் என்பதே மெய்யான மைந்தன். அதுவே அழியாத பொருளாகிய ஆன்மா; தேகம் அதன் கவசம். ஆன்மாவானது கைக்கு எட்டாத நெடுந் தூரத்தேயுள்ள ஒரு பொருளென்று சிலர் கருதுகின்றார்கள். அது வெறும் தவறு; சீவனில் அதுவே மிகவும் சத்தியுள்ள பொருள் என்று நீ அறிந்து கொள்வாயாக. அதைக் கொண்டு ஆன்ம குணம் மனோகுண மாகிய எப்படிப்பட்ட சிறந்த குணத்தையும் வளர்த்துக் கொள்ளலாம்; அதைக்கொண்டு சித்தியையும் நீ பெறலாகும். ஆனால், நீ நேராக நடப்பது மன்றி உனக்குள்ள சக்திகளை நற்காரியத்துக்கே செலவிட வேண்டும்.

உன்னுடைய தத்துவத்தின் தெய்வீகபாகமே ஆன்மா; பாரமார்த்திக பாகமும் அதுவே. மனிதருள் பெரும் பாலாரிடத்து அது மறைந்து கிடக்கின்றது. ஏனெனில், அவர், தமக்குள்ளே இருக்கும் கடவுட்சத்தி இன்னதென்று அறியாதவர்; அதைத் தட்டி எழுப்பும் ஆற்றலையும் அறியாதவர்.

அதை எழுப்புகின்ற விதம் எப்படி என்று கேட்பாயாயின், சொல்கிறேன்; கேள். தினந்தோறும் சிறிதுநேரம், முப்பது அல்லது இருபது நிமிஷமாயினும், உன் மனத்தைச் சிதறவிடாமல் நிறுத்தி, அந்தரங்கத்துள்ள ஆன்மாவோடு ஒன்று படுத்தி, அதைக் கூடியிரு. இப்படியிருந்தால், இஃது உன்னைக் குன்றிலும் வலியனாக்கி விடும். உன் தளை அவிழ்த்துவிடும். நீயே நாயகனென்று உணருவாய். உன்னை மறுக்கின்ற சத்தியோ பலமோ ஒன்றில்லை என்று தெரிவாய்; உன்னுடைய விதியை விதிப்பவன் நீயே என்று அறிவாய். கடந்த காலம் போகட்டும். இனி எதிர்காலம் எல்லாம் உன்னுடையதே! உன் சித்தத்தில் சிந்தித்தபடியே நீ நடக்கலாம்! வெற்றியை இலகுவாகச் சேர்த்துக் கூட்டலாம்! உன் சொல்லின் வழியே வெற்றியும் தோல்வியும் நடக்கும், உனக்கு ஆண்மை உண்டென்று உடன்படு; நீ வெற்றியாளனென்று துணிந்திரு. நீ தனி ஆடவனென்று நினைத்துத் தேறியிரு; நீ தனி ஆடவனாக நடக்கவும் தேறியிரு; மற்று மன்பதையில் ஒருவனாக உன்னை மதியாதே, மன்பதையில்(?) ஒருவனாக நீ நடவாதே. நீயே தானாக இரு. உனக்காகவே எண்ணு. அப்போது உன்னுடைய இடுக்கண் யாவும் சூரியன் முன் பனியெனக் கரைந்துபோகக் காண்பாய்.

மேலும் ஆன்மா ஒரு காந்தம்; உன் எண்ணம் எந்த எந்தப் பொருளைச் சென்று பற்றுகின்றதோ அந்த அந்தப் பொருளையும், உனது எண்ண இயக்கத்தின் தன்மைக் கேற்க அது கவருகின்றது. இதை நன்கு உணரு. சுருங்கச் சொல்லின் நீ எண்ணுதற்குப் பழகிக்கொண்ட எண்ணமெல்லாம் உருவமைந்து தானென்பதன் காரியத்தால் மூலப் பொருளாகி விடுகின்றன.

இதனால் "எண்ணங்களே பொருள்கள்" என்று தெரிவிக்கின்றோம், தியானம் செய்யும் பழக்கத்தில் நாம் பழகிக்கொண்டால் அது பழைய நிலைமையினின்றும் நம்மைப் புதிய நிலைமைக்குக் கொண்டுவந்து விடும்.

நீ வெற்றியை விரும்பிச் சங்கல்பித்த சங்கல்பத்திலே, நிலையான ஆக்குமெண்ணத்தை நிறுத்தினால், காரிய சித்தி உனக்கு

வாய்க்கும். ஆனால் உன்னுடைய தற்கால உண்மை நிலைமையைக்காட்டிலும் அந்த சங்கல்பம் உயர்ந்ததாயிருக்க வேண்டும். இஃது அவசியம்.

உள்ளதிலே நான் திருத்தியுடையேனென்று நீ எண்ணுவதில் பயனில்லை. ஏனெனில் திருத்தியாவது அசைவற்றுத் தங்கிய தன்மை. அது மேலொன்றையும் கூட்டவும் கூட்டாது; இனி உள்ளதையும் ஒழித்து விடும். ஆகையின் எப்போதும் முன்னிலும் நல்லதாகிய ஒன்றையே நாடியிரு. இந்த நாட்டமே வேணவா. இவ்வகையான வேணவாவும் இதைத் தடையின்றித் தியானித்தலும் புதுப் புது எத்தனத்தை உனக்கு ஊட்டும்படி கண்ணுற் காணப் படாததும் உனக்குள்ளே இருப்பதுமாகிய சக்தியைத் தூண்டுகின்றன.

ஆக்கு மெண்ணமானது ஆக்கத்தையே உனக்கு இடைவிடாது உரிமையாக்குகின்றது; உன் உழைப்பு வீணுக்காதபடி உனது சாக்கிரதையால் அழிக்கு மெண்ணத்தை நீ காத்துக் கொள்ள வேண்டும்.

காரியம் சித்தியாம் என்னும் நம்பிக்கை, தைரியம், வெல்வோம் என்னும் உறுதி, முதலானவை ஆக்கு மெண்ணத்தைச் சார்ந்தவை.

பயம், தோல்வி யுறுவோம் என்னும் எண்ணம், திடமின்மை, விடா முயற்சியின்மை, முதலானதை அழிக்கு மெண்ணத்தைச் சார்ந்தவை.

ஆக்கு மெண்ணத்தின் தன்மையானது எடுத்தது முடிக்கும் ஆற்றலுள்ளவனுக உன்னை ஆக்கிவிடுவது ஆகையால், அதற்கு அநுகூலமாக நீ நடந்துகொள். அநுகூலமாக நடத்தலாவது உனக்குள்ள தொழிலை இதுதான் என்று நன்ருகத் தெரிந்து கொண்டு ஒரு தினத்தில் இந்த இந்தக் காலத்தில் இது இது செய்யவேண்டும் என்று நீ வகுத்துக்கொண்டபடி நடத்துதல்.

இந்த முறையிலே சுட்டிச் சொல்லுதலால் நீ சுகம் அடையலாம். சுட்டிச் சொல்லுதலாவது 'நான் நடத்தும் ஆற்றலுள்ளவன்' என்று உடன்பட்டுக் கூறுதல். ஒழுங்குபாட்டின் சக்திமுன்னமே உனக்கு உரியதென்று உறுதியாய்த் துணிந்து கூறு. நீ செய்ய நினைத்ததைச் செய்து முடிக்கக் கூடியவனாக உன்னைச் செய்துகொள். அரை குறையாக முயலாதே. அடைந்தால் பயன் இழந்தால் உயிர் என்று ஒன்றைச்செய் இந்த சக்தியைக் கைகூடுவதிலே நீ முழுவதும் முயற்சி யுடையவனாயிரு.

உன்னுடைய தான் என்பது அதன் வேலையை அது நிறைவேற்ற வேண்டுமென்று உனக்கு இஷ்ட மிருந்தால் அதன் வல்லமையில் நீ நம்பிக்கை உடையவனாயிருக்க வேண்டும். உன்னிடத்து ஊன்றிய பக்தி இதுவே. 'என் காரியத்தை நன்கு முடிக்க வல்லேன்' என்னும் நம்பிக்கை, 'இந்தத் தொழிலின் பொருட்டே என்னைத் தெய்வம் படைத்தது' என்னும் நம்பிக்கை (தெய்வம் படைத்தது-விதிநியமித்தது) நாம் எடுக்கும் காரியங்களும் விதியும் ஒன்றுக்கொன்று முரணுடையதென்று அறிவற்ற சிலர் நினைக்கின்றார்கள். அஃது அப்படி அல்ல பணத்தைப் பெருக்கித் தருவதும் தோஷமற்ற தொழிலைச் சார்ந்ததுமாகிய கபடமற்ற காரியங்கள் யாவும் விதியோடு முற்றும் இயைந்தனவே. அவை நமது வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாதன. வேறு சிலர் நமது காரியங்களை (உலக விவகாரம்) அதிக இழிவாக நினைக்கின்றார்கள். அப்படி நினையலாகாது. தன் அலுவலில் ஆசைவைத்த ஒருவன் ஆனந்த மடைகின்றான். நிற்க, நல்ல காரியத்தை நடத்த வல்லவன் அதி புத்திமான். நாடு செழுமையுற்று நடை பெறுதற்கு சிற்பியும் சிங்காரப் பாடகனும்போல் இவனும் இருந்தே ஆகவேண்டும். தன் வேலையை ஆசைப் படுகிறவனுக்கு காரியம் சுவையற்றதாகக் காணப்படாது. அவன் அதைச் சிறிது சிந்தித்துப் பார்ப்பானாயின் அது சலியாத சந்தோஷம் நிறைந்த தென்றும் சிருஷ்டியின் விந்தைகள் (இயற்கையின் அதிசயங்கள்) நிறைந்ததென்றும் அவன் காண்பான்.

உன்னிடத்தில் உள்ளவற்றில் உயர்ந்ததையே கொடு; நீயும் உயர்ந்ததையே அடைவாய்; மட்டுப்படுத்தாதே; உன் வேலையை

நீ ஆசைப்படு; வேறுவிதத்தில் நீ உயரமுடியாது. நீ கோரிய சங்கல்ப மெல்லாம், உனக்கு வாய்த்திருப்பதாக உடன்பட்டு இதிலிருந்து உன் காரியத்தை உயர்த்திக் கொண்டேபோ. பொருளாளி ஒவ்வொருவனும் இவ்வண்ணமே செய்திருக்கிறான். ஆகையினால் இந்த ஆசை வேர் இல்லாவிட்டால் சித்திமரம் செழித்து வளராது.

உன்னிடத்து நீ பக்தி யுடையவனாயிரு; கடவுட் சக்தியே ஆன்மாவுக்குப் பின்னே நிற்கின்றதெய்வீக ஜீவன். இதுவே உன்னைத் தகுந்தபடி நாம் உணர்ந்து கொண்டபோது ஆன்மாவுக்குச் சர்வ சக்தியையும் ஊட்டுகின்றது. நீ திடனற்றவனா யிருந்தால் வெற்றி அடைய முடியாது. உன்னையே ஒரு சக்தியாக முதலில் ஆக்கிக்கொள். நீ ஒரு வஸ்துவாக இருப்பதைவிட்டு ஒரு புருஷனாக இரு, உன் தன் நம்பிக்கையை வளர்த்துக்கொள்; தனிமையுற்று நிற்க, உனது உள்ளம் உபதேசிக்கிறபடி நடக்கக் கற்றுக்கொள். உன்னை உயர்த்திக்கொள்ள உழைக்கின்ற போதே நற்குணத்தையும் வளர்த்துக்கொள், அங்கும் இங்கும்போய் ஆலோசனை கேட்பதைவிட்டு உனக்குள் நீயே ஊன்றியோசி, உனது உள்ளம் உபதேசிக்கின்ற வண்ணம்நட. நாள் அடைவிலே இந்தப் பழக்கம் உனக்கு உரிமையாகிப் பிறரைச் சார்ந்திராதபடி உன்னைச் சுதந்தரனாக்கிவிடும். அற்ப போகங்களை எல்லாம் வெறுத்து மறுத்து உன்னை நீயே அடக்கி ஆண்டு கொள்ளவேண்டும். அல்லாவிடின், அவை ஒன்றுகூடி உன் வெற்றி யீனத்துக்கே வேராகிவிடும். ஆன்மாவை ஆளவல்ல ஒருவன் அயலவரை ஆளவல்லவன். எல்லா நிலைகளுக்கும் மேலாக உயரவும் வல்லவன். உன் வாழ்க்கையில் தோல்வியைப்பற்றிய எண்ணம் சிறிதும் தோன்றாதிருக்க வெண்டுமென்று உணரு. ஆய்ந்து அறிந்த தொன்றையே எண்ணு. பயத்தை நீ முற்றிலும் புறங்காண வேண்டும். அஃது உன்னிடத்தே தலைகாட்ட வொண்ணாது. பேய்க்கு அஞ்சாதவனைப் பேய் அஞ்சும்; அதுபோல பயத்திற்கு நீ அஞ்சாவிட்டால் பயம் உனக்கு அஞ்சிவிடும்.

உன் ஆன்மாவும், எண்ணமும், சித்த சுத்தியும் மூன்றும் ஒன்றாகக் கூடியிருந்து நீ தேடி வேண்டுகின்ற வெற்றியைப் பெறு

தற்குக் காரணமான பலத்தை உனக்குக் கொண்டு கூட்டுகிறது. நீ வெற்றியை விரும்பினுல் உன்னிடத்தே அவசியம் இருக்க வேண்டிய பொருள் மூன்று. அவற்றுள்,

முதலாவது **கோரிக்கை:**—நீ வேண்டுகின்ற பொருள் யாதென்றும், அஃது எதன் பொருட்டென்றும் அறிந்து கொண்டு,அதை எவ்விதத்திலும் நீ அடையலாமென்றும், அதை அடையாதபடி தடைசெய்வது யாதுமில்லை என்றும் துணிந்திரு.

இரண்டாவது நம்பிக்கை:—உன் கோரிக்கை முற்றுப்பெற வேண்டுமோயின். உனது வல்லமையில் நீ நம்பிக்கை வைத்தல் வேண்டும். ஏனெனில், குறை பொருளுக்கு ஏற்கவே நிறை பொருள் உண்டென்று உனக்குத்தெரியும். அன்றியும், அப் போது விதியானதும் உனக்கு மாருக நடப்பதைவிட்டுத் துணை புரியும்.

மூன்ருவது உடன்பாடு:—கலங்காதே உறுதி மொழியின் (உடன் பாட்டின்) மன நிலைமையை நீ ஏற்றுக் கொள்ள வேண் டும். பிரதிகூலங்களைக் கவனித்தலாகாது. உன் சித்தத்தின் பலமே கோரிக்கை. உன் கோரிக்கையின் உண்மையை உறுதியாக உடன் பட்டுக் கொள். அதினின்றும் யாதும் உன்னைத் தடைப் படுத்தா திருக்கட்டும்.

நீயே யன்றி, வேறுயாரும் நின்னை மறுப்பாரும் தடுப் பாரும் இல்லை.

உனது கருத்து வெற்றியே என்று நினைந்துகொள்; அந்த வெற்றியினின்றும் வேறு பிரிக்கின்ற தெதனையும் நீ காணவும் கேட்கவுங் கருதவும் வேண்டாம்.

உனது உரிய சக்தியை உடன்படு, முயற்சியாளனுக்குக் கடவுள் கைகொடுக்கின்ருர் என்று கருது.

ஐயப்பாட்டில் இருந்துகொண்டு ஒன்றையும் செய்யாதே. கஷ்ட நஷ்டங்கள் நேரிடும்போது உனது அந்தரங்கத்து மன

சாட்சியோடு ஆலோசிக்கும் பழக்கம் உனக்கு வந்துவிட்டால், அப்பழக்கம் அந்தத் தருணத்திலே ஒரு உபாத்தியாயன் போலும், உற்ற நண்பன் போலும், உறுதி மந்திரிபோலும் உதவி புரியும்.

விடியலுக்கு முன்னே அமைவான நேரத்தே ஓடி உழலும் எண்ணங்களை ஒருவழி நிறுத்தி ஒருவன் உற்றுக்கேட்பானுயின், அவன் தன் வாழ்க்கையை வசித்தியாக்கிக் கொள்ள என்ன செய்யவேண்டுமென்பதை, மறைந்திருக்கிற அந்த மௌனமுனி உள்ளேயிருந்தே உணர்த்துவான். இவ்வாறு தினந்தோறும் அவன் செய்தற்குரிய வேலை இது இதுவென்று விரிவாக விளக்கிக் காட்டப் பெறுவான்.

ஏதேனும் சங்கடமோ கஷ்டமோ சம்பவித்தபோது செவி சாய்த்துக்கேள். உள்ளம் உணர்த்தும் முன்னே என்றைக்கும் நடத்தாதே. அல்லாக்கால், இனி ஒன்று செய். இரவில் நித்திரைக்குப் போம்போது, முற்றறிவுள்ள உனது ஆன்மாவானது, உனக்கு விளங்காத விஷயத்தை உறக்கத்திலே தெளிவித்துக் காட்டுமென்று உறுதியாக நினைந்துகொண்டு படுத்துறங்கு. மறுநாள் உதையத்தில், இதுசெய்ய உத்தமமென்றும் உணர்ச்சியுடன் எழுந்திருப்பாய்.

இதுவே உண்மையான தன் நம்பிக்கை.

உன் ஆன்மாவை உறுதி மொழியத் தெளிந்தபோதே, நீ வெல்லப்படாதவனுகின்ருய். உன்னை ஒன்றும் தீங்குசெய்யாது; உன் வெற்றியை ஒன்றும் தடுக்காது.

ஆன்மா, எண்ணம், சித்தம் என்பன மூன்று மொன்ருய் ஏகோபித்து இசைந்து நடக்கும்போது, நீ கோரிய யாவற்றையும் உனக்கு அவை வசியப்படுத்தவல்லன என்று நன்கு தெளி. இதைச் செய்யுமாறு அவற்றின் சக்தியிலே நீ பக்தியும் நம்பிக்கையும் வைத்திரு.

இந்த மூன்றொரு பொருளாகிய உனது மெய்யான தான் (மைந்தன்) வெல்லப்படாதவன் என்பதை நீ என்றும் மறவாதே, அவனை ஒன்றும் தடுக்கமுடியாது.

உன் முதல் எத்தனத்தில் உனது உத்தேசத்தை நீ முடியப் பெருவிடால் ஊக்கம் இழந்துவிடாதே. உடன்பாட்டுத்தன்மை இருக்கவேண்டிய காலம் இதுவே. தைரியத்தைத் தளரவிடாதே கடவுள் உனது நித்திய பிரசன்னமாகிய உதவி, "யானே வெற்றி" என்று பலமுறை சொல்லிக்கொள். பிரதிகூலங்களைப் பொருட் படுத்தாதே. உனக்கு நேரிடும் இக்கட்டுக்களை எள்ளளவும் கவனியாமல், உனது கோரிக்கையின் மேன்மையான உத்தேசத்தின் மேல் உன் கண்ணையும் கருத்தையும் நாட்டு.

சங்கட காலத்திலே தான் வெற்றியை நாம் மிகவும் வேண்டித்தேடவேண்டும். அது நம்மை விட்டு விலகாத நமது நல்ல காலத்திலே அதைத் தேடவேண்டுவது இல்லை. ஆகையின், நல் கூர்ந்தபோது உனது வெற்றியின் சங்கல்பத்தைக் கடைப்பிடி. சங்கல்பம் உனக்கு மிகவும் வேண்டியகாலம் இதுவே.

உன்னைப் பற்றியும், உன் வல்லமையைப்பற்றியும் நன்மதிப் புக்கொண்டிரு. அந்த மதிப்புக்கு நீ தகுதியுள்ளவனாக இருக்க முயலு. தன்னடக்கத்தைக்கொண்டு சக்தியுள்ளவனாக ஆகிவிடு. ஏனெனில், தன்னடக்கத்தைக் கொண்டே திரவிய சித்திக்குக் காரணமாகிய மனோசித்தியை வேறுபடுத்திக்காட்டவும் வசியப் படுத்தவும் உனக்குக்கூடும். இதுவே மநுஷ்ய வசியத்தின் (Personal Magnetism) இரகசியம். தன்னடக்கம் கைவரப்பெற்றவனிடத்தே சனங்கள் சுற்றிச் சூழ்ந்திருக்கிறார்கள். அவர்கள் அவனுடன் அளவளாவி இருக்க அவாவுகிறார்கள். சனங்களே யாயினும், சக்திகளேயாயினும் தம்மிடத்துள்ள மிக நல்லவற்றையே அவனுக்கு அளிக்கின்றனர்.

பிரபஞ்சத்திலே சித்தமே மனிதன்; எண்ணமே மிகவும் வல்லமையுள்ள வஸ்து; உன் மனமேஒருபெரிய காந்தம் அதைத் தக்கபடி உபயோகித்தால், உலக உக்கிராணத்திலே சிருஷ்டியால் சேகரிக்கப்பட்ட பொருள்களில் நீ கோரிய யாவற்றையும் உனக்கு அது வசியப்படுத்தித்தரும்.

(தொடரும்)

# சீவகாருண்ணியம் பேணுச்சமயங்கள் தீப்பாலனவாம்

[ஸ்ரீசபாபதி நாவலர் அவர்கள்]

(௪௪௯-ம் பக்கத் தொடர்ச்சி)

"அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணுமை நன்று"

(இ - ள்.) அவிசொரிந்து - தீயின்கண் அவிகளைப்பெய்து, ஆயிரம் வேட்டலின் - ஆயிரம் யாகம் செய்தலினும், ஒன்றன் உயிர் - ஒரு மிருகத்தின் உயிரைச், செகுத்து - வதைத்து, உண்ணுமை - அவ்வுயிர் நின்ற ஊனை உண்ணு தொழிதல், நன்று - நன்றும் எ - று.

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா வுயிருந் தொழும்"

(இ - ள்.) கொல்லான் - ஓ ருயிரையும் கொல்லா தவனு மாய்ப், புலாலை மறுத்தானை - புலால் உண்ணுதல் செய்யாதவனு மாயினானை, எல்லா உயிரும் - எல்லா உயிர்களும், கைகூப்பி - கைகுவித்து, தொழும் - வணங்கும் எ - று.

தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனர் புலான் மறுத்த லென்னு மிவ்வதிகாரத்துப் புலால் உயிர்கள் வருந்த அவற்றினைக் கொன்று கொள்ளப்படுவ தொன்றுதலால் அப்புலாலை உண்பவன் அருளுடைமை யென்னும் அறத்தினை யுடையனுதல் எவ்வாற்றுனும் இசையாதென்று கூறு முகத்தால் அப்புலால் உண்ணுதல் அருளறமாருய் நிற்பதோர் மாபாதகமென்று முதற்கண் நிறுத்தினர். பின்னர் பொருளைப் போற்றுதார் அதனை ஆளப்பெருத காட்சி உவமைமேல் வைத்துப் புலால்உண்பார்க்கு அருள் ஆட்சி செல்லாத அசம்பவத்தினை இனிது விளக்கி யிட்டனர். பின்னர் புலால் உண்பாரும் அருள் ஆட்சிசெயக் கண்டாமென்று பூர்வ பக்க நிகழ்ந்துழிக் கொல்லும் படைக்கலத்தினைக் கொண்டவர் கொலையையே சூழ்தரும் பிறழாக்காட்சி உவமைமேல் வைத்து உயிருடலைச் சுவைகண்டு உண்டு போதருவார் நெஞ்சம் அப்

புலால் வேட்கை மீதூர்ந்து கொலையையே நோக்குவதல்லது அருளை நோக்கமாட்டாது என்று மறுக்குமேலது நிலையிட்டனர். பின்னர் புலால் ஊண் வாழ்க்கையனுயும் சாத்தன் ஆவிற்கு நீரிட்டும் ஆதுலார்க்கு அன்னமிட்டும் அருளாட்சிசெய்து போதரக் கண்டா மாகலின், படைகொண்டார் நெஞ்சம் நன்றாக்காக் காட்சியேபற்றிப் புலாலை உண்பார் அருளாட்சி செய்தல் இசையாதென்பது கூடாதென்று மீட்டும் பூர்வபக்கம் நிகழ்ந்திட, அருள் கொலை செய்யாமையும் அருளல்லாத பாவம் கொலை செய்தலு மாதலால், ஒளியும் இருளும்போலத் தம்முள் முரணி நிற்கும் அருளும் அருளாமையும் ஒருவன்மாட்டு ஒருங்குளவாதல் ஓராற்றானும் செல்லுமாறில்லை; இனி அக்கொலையால் வரும் புலால் உண்ணுதல் செய்வான் அருளை ஆளின், அஃது ஓர் நாடகமே யாவதல்லது அருளாட்சி யாமாறில்லையென்று மறுத்து மேலது வலி யுறுத்தினர். பின்னர் ஒருசார் உயிர்கள் உடம்பகத்து நிலை யுற்று வாழ்வுகூறுதல் புலால் உண்ணுமையாகும் அறம்பற்றியே யாதலால் உயிர் இச்சுகவாழ்வு தவிர்ந்து வருந்தி நீங்கிட அதனை நிலை குலைத்து ஊனுண்பான் அக்கொடிய பாவச்செயல் காரண மாக நெடுங்காலம் நரகத்தில் வீழ்ந்து துன்புறுதல் தப்பாது என்று புலால் உண்பாருக்கு மறுமைக்கண் துன்பம் வருதல் ஒரு தலையென்று சாதித்திட்டனர்.

இவை சிவகாருண்ணியம் பேணுச் சமயங்களுக் கெல்லாம் பொதுவாக யெடுத்துக் காட்சி அநுமான அளவைகள் பற்றிப் புலால் உண்ணுதல் பாவமாமாறு சாதினைவாறும்.

பின்னர்க் கொன்று ஊன்றருவார்க்கன்றி அவ்வூன்கொண்டு தின்றிடுவார்க்குப் பாவம் யெய்துமாறு சொல்லாதென்னும் புத்தர் முதலியோர் கொள்கைபற்றி ஆசங்கித்துத் தின்னுதற் பொருட்டால் ஊன்கொள்ளுந ரில்லையாயின் உயிரைப் பலபடக்கொன்று ஊன்விற்பா ரில்லையாமாதலால். ஊன் தின்றிடுவார்க்கும் கொலைப் பாவம் ஒரு தலையாகவுண்டு என்றும், அவரும் அப்பாவங் காரண மாக மறுமைக்கண் கொடுநிரயத் துன்பமுறக்கடவரே யாவரென்றும், துணிபுநிலை யிட்டனர். பின்னர்ப் புலால் பிறிதோருடம்பின்

புண்ணேயாமாதலால், தம்முடம்பின் கண் அங்ஙனந் தோன்றும் புண்ணினை அருவருத்திடு மனிதர் அப்புண் புலாலையும் அங்ஙனமே அருவருத் தொழிக்காது உண்டிடல் அவருக்குக் கழி பெரும் பழியேயாமென்றும், தம்மனோர் உயிரிற்பிரிந்த வுடலைப் பிணமென்று அதன் குற்றந்தேர்ந்து ஒதுக்கும் அறிவுடைய மனிதர் அங்ஙனமே பிறவுயிர்களின் நீங்கிய உடல்களையும் பிணமெனக் கண்டு உவர்க்காது உண்ணுதல் அவர் தமக்கு அறியாமையாவ தல்லது அறிவாக மாட்டாதென்றும், புலாலின் இழிவு மேலிட்டு அதனை உண்ணுதல் அடாதென்று மறுத்திட்டனர். பின்னர் பசுவைக் கொன்று அதன் அவிசொரிந்து தேவர் உவப்ப வேட்டல் அறமாமென்று கருமகாண்டமாகிய வேதத்துள் விதித்த வின், வேள்விக்கண் கடவுளர்க்கு நிவேதித்துக் கொள்ளும் அவி யூன் தின்றல் பாவமாக மாட்டாதென்னும் பூர்வமீமாஞ்சகர் கொள்கைபற்றி ஆசங்கித்து போக விச்சையுடைய ஒருசார் அதி காரிகள் பொருட்டுக் கரும காண்டச் சுருதிகள் அங்ஙனம் விதிப் பினும் வேதத்தில் ஞானகாண்டமாகிய உபநிடதச் சுருதிகளும் அவ்வேத வேதாந்த சாரமாகிய சிவாகமங்களும் பரிபக்குவ முடைய அதிகாரிகளுக்கு அப்பசுவேட்டெரி யோம்புஞ் செய்தி சீவகாருணிய விரோதமாவதோர் பெரும் பாதகமே யாமென்று விலக்குமாதலானும், அங்ஙனம் காமுற்றுப் பசுவைக் கொன்று வேட்டுப்பெறும் பயன்றானும் சிறிதேயா மாகலானும், அவ்வேள் விகள் ஆயிரஞ்செய்து பெறும்பயன்களினும் ஒருயிரைச் செகுத்து உண்ணாமையால் வரும்பயன் பெரிதாமாகலானும், மெய்யுணர் வுடையார் அதனை நன்றென வேண்டிடாரென்று அவர் பக்கம் மறுத்திட்டனர். இஃது அசுத்த சாத்தர்கோன் மறுப்பு மாமாறு தெளிக. பின்னர் உயிர்க்கொலை செய்யாமலும் புலால் உண்ணா மலும் இவ்வுலகத்திருந்து அருளாட்சி செய்வானை இம்மைக்கண் உயிர்களெல்லாம் அறத் தெய்வமெனக் கண்டு வழிபடுமென்று கூறுமுகத்தால் புலான் மறுத்தல் அவ்வருளாளர்க்கு எய்தும் இம் மைப் பெரும்பயன் அருளிச் செய்தனர். கொல்லானும் புலா லுண்ணுதலை மறுத்தானும் என்று நாயனர் ஓதுதலின் கொலை செய்தும்; புலால் உண்பாமல்லே மென்றும், கொலைசெய்யாம்;

புலால் உண்பேமென்றும், புரை அறங்கூறுவாரும் பாதகரேயாய் மறுக்கப்படுவரென் றுணர்க.

இவை புத்தர், மீமாஞ்சகர், அசுத்தசாக்தரென்றிவர் கொள்கைகள் பொருந்தாவாறு காட்சி, அனுமானம், ஆகமமென்னும் அளவைகள் பற்றியும் பொருந்துமாறென்னும் யுக்திபற்றியும் விதந்து மறுத்து மேலது சாதித்தவாறும்.

தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனர் புலால் உண்ணுதல் பெரும்பாதகமாமாறு அளவை மூன்றானும் யுக்தியானும் இவ்வதிகாரத்து இங்ஙனம் இனிது நனி விளங்கவெடுத்து அருளிச் செய்து அதனை மறுத்தருளினர். இனிக்

"கங்கையிற் படிந்திட்டாலும் கடவுளைப் பூசித்தாலும்
மங்குல்போற் கோடிதானம் வள்ளலாய் வழங்கினாலும்
சங்கையில் லாதஞான தத்துவ முணர்ந்திட்டாலும்
பொங்கிய புலால்புசிப்போன் போய்நர கடைவனன்றே"

என்று மேலோர் கூறுவாரதலின், புலாலுண்ணுஞ் சிவகாருண்ணியமில்லாப் பாவிகள், பிராயச்சித்தங்களால் அப்பாவந் தீர்க்கப் பெறுவமென்று சித்தசமாதானம் செய்தல் புத்தியாகாமை அறிக.

## கொல்லாமை

"அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்."

இ-ள். அறவினை - அறங்களெல்லா மாகிய செய்கை, யாதெனின் - எதுவெனின், (அது) கொல்லாமை - (ஒருயிரையும்) கொல்லாமையாம், கோறல் - (அவற்றைக்) கொல்லுதல், பிறவினையெல்லாம் - பாவச்செய்கைக ளெல்லாவற்றையும், தரும் - (தானே) தரும் (ஆதலால்) எ - று.

"பகுத்துண்டு பல்லுயி ரோம்புத லூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை."

இ - ள். பகுத்து - (உண்ணப் படுவதை)ப் பசித்த உயிர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்து, உண்டு - உண்டு, பல்லுயிர் - பல உயிர்களையும், ஓம்புதல் - காப்பாற்றல், நூலோர் - அறநூலுடையோரால், தொகுத்தவற்று ளெல்லாம் - (துறந்தவர்க்குத்) தொகுத்து வைக்கப்பட்ட அறங்களெல்லாவற்றினும், தலை - முதன்மையான அறமாம் எ - று.

"ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று."

இ - ள். (நூலோராலே தொகுக்கப்பட்ட அறங்களுள்) ஒன்றாக - (தன்னோடு இணை யாதும் இல்லாமல்) தானேயாக. கொல்லாமை - கொலை செய்யாமை, நல்லது - நல்லது, (அது நீங்கினால்) பொய்யாமை—பொய் சொல்லாமை, பின்சார - (அதன்) பின்னே நிற்க, நன்று - நல்லது எ - று.

"நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி."

இ - ள். (மேற்கூறியும் முத்தியும் பெறுதற்கு) நல்லாறெனப் படுவது - நல்வழியென்று சொல்லப்படுவது, யாதெனின் - எதுவென்றால், (அது) யாதொன்றும் - யாதொரு உயிரையும், கொல்லாமை - கொல்லாமையாகிய அறத்தினை, சூழும் - (காக்க) நினைக்கும், நெறி - வழியாம் எ - று.

"நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை."

இ - ள். நிலை - (பிறப்பு நின்ற) நிலைக்கு, அஞ்சி - பயந்து, (பிறவாமைப் பொருட்டு) நீத்தாரு ளெல்லாம் - (மனைவாழ்க்கையைத்) துறந்தவ ரெல்லாருள்ளும், கொலை - கொலைப்பாவத்திற்கு, அஞ்சி - பயந்து, கொல்லாமை - கொல்லாமையாகிய அறத்தை, சூழ்வான் - மறவாதவன், தலை - உயர்ந்தோன் எ-று.

"கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண் ணுங் கூற்று."

இ - ள். உயிருண்ணுங் கூற்று - உயிரைக் கொண்டுபோகும் இயமனானவன், கொல்லாமை - கொலை செய்யாமையாகிய விரதத்தை, மேற்கொண்டு - மேலாகக் கொண்டு, ஒழுகுவான் - நடப்பவனது, வாழ் நாள் மேல் - ஆயுளின்மேல், செல்லாது - செல்லான் எ - று.

"தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை."

இ - ள். தான் - தான், பிறிது - வேறொன்றனது, இன்னுயிர் - இனிய உயிரை, நீக்கும் - (அதனுடம்பிலிருந்து) நீக்குதலாகிய, வினை - தொழிலை, (அது செய்யாவிடத்து) தன்னுயிர் - தனது உயிரானது, நீப்பினும் - உடம்பைவிட்டு நீங்கிப் போமாயினும், செய்யற்க - செய்யாதிருக்கக் கடவன் எ - று.

"நன்றாகு மாக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை."

இ - ள். (யாகத்திலே கொன்றால்) நன்றாகும் - இன்பமிகுவதாகும், ஆக்கம் - செல்வமானது, பெரிது - பெரிதாகும், எனினும் - என்று சொல்லப்பட்ட தாயினும், சான்றோர்க்கு - (துறவினாலே) நிறைந்தோர்க்கு, கொன்று - ஒரு உயிரைக் கொன்று, ஆகும் - (அதனா) லுண்டாவதாகிய, ஆக்கம் - செல்வமானது, கடை - இழிந்ததாம் எ - று.

"கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து."

இ - ள். கொலை வினையராகிய - கொலைத் தொழிலையுடையராகிய, மாக்கள் - மனிதர், (அத்தொழிலினது இழிவை அறியாத நெஞ்சினராயிருந்தாலும்) புன்மை தெரிவாரகத்து - அவ்விழிவை அறிவோரது நெஞ்சிலே, புலை வினையர் - புலைத் தொழிலாய்த் தோன்றுவர் எ - று.

"உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்."

இ - ள். செயிருடம்பின் - பார்க்கக் கூடாத நோயுடம்புடனே, செல்லாத் தீவாழ்க்கை யவர் - வறுமையோடுகூடிய இழி தொழில் வாழ்க்கை யுடையவரை, (இவர் முற்பிறப்பிலே) உயிர் - உயிர்களை, உடம்பின் - (அவை நின்ற உடம்புகளிலிருந்து, நீக்கியார் - நீக்கினவர், என்பர் - என்று (விளைவுகளை அறிந்தோர்) சொல்லுவார் எ - று.

---

## வைதிக சைவ மகத்துவம்

[ஸ்ரீ சபாபதிநாவலரவர்கள்]

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

மழைவ ழங்குக மன்னவ னோங்குக
பிழையில் பல்வள னெல்லாம் பெருகுக
தழைக வஞ்செழுத் தோசை தரையெலாம்
பழைய வைதிக சைவம் பரக்கவே. கோயிற் புராணம்

அயன், அரி, உருத்திரன் என்னும் தலைவர்கள் மூவரையும் தம் விபூதிகளாக விதித்து நிறுத்தி அவர் தம்மை அதிஷ்டித்து நின்று சிருட்டி, திதி, சங்காரம் என்னும் மூன்று தொழில்களையும் சங்கற்பரூப சந்நிதியானே இயற்றுது இயற்றும் துரிய மூர்த்தியாகிய பரமசிவனொருவனே சகல புவனங்களுக்கும், சர்வான்மாக்களுக்கும் பரமகாரணனுன முழுமுதற்கடவுளாம்.

அங்ஙின் கெனுதபடி எங்கும் பிரகாசமாய் விளங்கும் பரமகாரணனுன அப்பரமசிவன், பக்குவான்மாக்கள் பலரும் ஓதித் தன்னுண்மைதேறி, இம்மை மறுமை இன்பங்களும், பரவீட்டின்பமும், தன்னருளால் முறையாக வெய்தி மேம்படுமாறு, சிருட்டியாரம்பத்தில் அருளிச்செய்த வேதாகமங்களிரண்டுமே மெய்யான முழுமுதல் நூல்களாம். அவ்வேதாகமங்களிரண்டும்

அவ்வான்மாக்கள் பக்குவபேதங்கட்கு ஏற்ப நிறுத்திய பலகோடி சமயங்களுள்ளே, சிவசத்திநிபாதகர்களாகிய உத்தமர்களுக்கு மெய்ஞ்ஞான சாதனங்கள் கடைப்பிடித்து உபதேசிக்கும் வைதிக சைவமே அதீத சன்மார்க்கமாம். அவ்வைதிக சைவ சன்மார்க்கம் எடுத்துக் கூறும் முத்தி மார்க்கங்கள் சரியைமார்க்கம், கிரியைமார்க்கம், யோகமார்க்கம், ஞானமார்க்கம் என நால் வகையாம். பகுத்தறிதலின்றிச் சிவலிங்க முதலிய திருமேனியே சிவமெனக்கண்டு அச்சிவபிரானை ஆண்டு வழிபடுமாறு போதிப்பது சரியைமார்க்கமாம்.

அருவப் பொருளாகிய சிவபிரான் ஈசானாதிமந்திரங்களால் சிவலிங்கமுதலிய திருவுருக் கோலினனெனக் கருதி மந்திர நியாஸத்தால் அச்சிவபிரானை ஆண்டு வழிபடுமாறு போதிப்பது கிரியை மார்க்கமாம்.

யோகிகளுள்ள மெங்கணும் இல்லமாக வாழுஞ் சிவபிரான் இச்சிவலிங்க முதலிய திருமேனியிலுமிருந்து பூசைகொண்டருளுவனெனக் கருதிச் சாத்திய மந்திரங்களால் அச்சிவபிரானை ஆண்டு வழிபடுமாறு போதிப்பது யோகமார்க்கமாம். அங்ஙனம் ஏகதேசமாகக் குறித்தலின்றி ஆங்கிங்கெனாதபடி எங்கும் வியாபியாய் நீக்கமற நிறைந்து நிற்கும் சச்சிதானந்தப் பழம்பொருளான சிவபிரானை, அவன் திருவருட் பரஞானத்தால் வேறறக் கண்டு, அன்பு மிகுதியால் அச்சிவலிங்க முதலிய திருமேனிகளிலும், சிவனடியார் திருவேடங்களிலும், அகண்டாகாரமாகக் குறித்து, வழிபடுமாறு போதிப்பது ஞானமார்க்கமாம்.

உருத்திரகணங்களும், தேவர்களும், அகத்தியர், உபமன்னியர் முதலிய முனிவர்களும், ஆளுடைய பிள்ளையார், வாகீசர், நம்பியாரூரர், வாதபுரீசர் என்னும் பரமாசாரிய சுவாமிகள் நால்வரும், மற்றை அறுபத்துமும்மை நாயன்மார்களும், அரத்தாசாரிய சுவாமிகள், பட்டணத்தடிகள், மெய்கண்ட சிவாசாரியசுவாமிகள், அருணந்திசிவாசாரிய சுவாமிகள், மறைஞான சம்பந்தசிவாசாரிய சுவாமிகள், உமாபதி சிவாசாரிய சுவாமிகள், தாயுமான சுவாமிகள் முதலிய பரம ஞானிகளும், மற்றைச் சிவஞானயோகிகளும்

இந்தச் சமயாதீத வைதிக சன்மார்க்கத்தின் வழியொழுகியே, சிவசாலோகம், சிவசாமீபம், சிவசாரூபம். சிவசாயுச்சியம் என்னும் அபரமுத்திகளும், பரமுத்தியும் பெற்றுய்ந்தார்கள். அவர் தாம் அந்நெறியால் வீடுபெற்றுய்ந்தவாற்றினை வடமொழியிலும் தென்மொழியிலும் உண்மை பல நூல்களால் நாம் அறிந்துய்ய வெளியிட்டருளினார்கள்.

ஆதலால்,

"சைவசமயமே சமயஞ் சமயாதீதப் பழம்பொருளைக்
கைவந்திடவே மன்றுண்வெளி காட்டுமிந்தக் கருத்தைவிட்டுப்
பொய்வந்துழலுஞ் சமயநெறி புகுதவேண்டா முத்திதருந்
தெய்வசபையைக் காண்பதற்குச் சேரவாரும் சகத்தீரே."

"காகமுறவு கலந்துண்ணக் கண்டீரகண் டாகாரசிவ
போகமென்னும் பேரின்பவெள்ளம் பொங்கித்ததும்பிப் பூரணமாய்
ஏகவுருவாய்க் கிடக்குதையோ வின்புற்றிடநா மினியெடுத்த
தேகம்விழுமுன் புசிப்பதற்குச் சேரவாருஞ் சகத்தீரே."

வைதிக சைவர்களாகிய நமது அன்பர்களே! விவிலியர்களாகிய கிறிஸ்துமதப் பாதிரிமார்கள் இத்துணைப் பெருஞ்சிறப்பினை யுடைய நமது சுத்தாத்வித சித்தாந்த சைவசமயத்தின் மகிமை வரலாறு ஒரு சிறிதும் அறியாமல் அனியாய தூஷணங்கள் பல செய்து நம்மவர்களைத் தங்கள் கிறிஸ்துமத வலையில் அகப்படுத்தப் பல உபாயங்கள் சூழ்ந்து அங்கங்கே துர்ப்போதனை பல செய்து திரிகின்றார்கள். இனி நீங்கள் அவர்கள் அஞ்ஞான போதனைக்குட்பட்டு நம் சற்சமய நெறியைக் கைவிட்டுக் கேடுறாது, பரசிவ பாதாரவிந்த பத்தியில் நிலைநின்று உய்ய எண்ணி இம்மெய்ஞ்ஞான உபதேசத்தை உங்களுக்கு எடுத்து வெளியிட்டோம்.

---

# திருவள்ளுவர் சித்தாந்த சைவர்

[ஸ்ரீலஸ்ரீ வாலையானந்தசுவாமிகள்]

(௪௯௯-ம் பக்கத் தொடர்ச்சி)

தெய்வப்புலவர்

"கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை"

என்பது முதலிய திருக்குறள்களால் சிவாகம நெறியே மூர்த்தி வழிபாடும்,

"தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது"

என்பது முதலிய திருக்குறள்களால் அடிசேர் முத்தியும் கூறுகின் றதனால் மாவிரத ரல்லர்.

## (29) காபாலி யல்லர்

காபாலிகள் ஆன்மாக்க ளியல்பும் பந்த வியல்பும் மாவிரதரை யொப்பக்கொண்டு, தங்கள் சாத்திர முறையே தீக்கைபெற்றுப் பச்சைக்கொடி ஒன்றைக் கைக்கொண்டு நாடோறும் மனிதர் தலையோட்டில் ஐயமேற்றுண்டு செயலற்று உன்மத்தராய் நிற்பவரிடத்தே சிவனாவேசித்தலால் எல்லாக் குணங்களும் பெற்றுச் சிவசமமாதல் முத்தி யென்பர்.

நாயனர் காபாலிகள் கூறுகின்ற சரியை நெறியை உடம்படாமையானும், அடிசேர் முத்தியையே சிறப்பாகக் கொண்டிருத்தலானும் அவர் காபாலி யல்லர்.

## (30) வாமி யல்லர்

வாமிகள் சடமுஞ் சித்துமாகிய அனைத்துலகும் சத்தியின் பரிணாமமே யென்றும், வாம நூலில் விதித்த முறையே ஒழுகிச் சத்தியில் இலயித்தலே முத்தியென்றுங் கூறுவர்.

நான்முகனுர்

"மலர்மிசை யேகினுன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

என்றும்,

"தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது"

என்றும், தமது முப்பனூலில் முதல்வனை வாழ்த்திய தனுனும்,

"இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்"

என்றும்,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்றும் கூறியதனுல் சத்தியின் பரிணுமம் உலகென்பதனை உடம்படாமையானும், அடிசேர் முத்தி கூறுதலானும்,

"உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார்"

"உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
னெண்ணப் படவேண்டா தார்"

"துஞ்சினுர் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்று
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்"

என்பன வாதிய திருக்குறள்களால் வாமிகளுக் குடம்பாடான கள்ளுண்ணலையும்,

"அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்"

என்பது முதலிய திருக்குறள்களால் கொலையையும்,

"தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள்"

என்பது முதலிய திருக்குறள்களால் புலாலுண்ணலையும்,

"எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு"

என்பது முதலிய திருக்குறள்களால் களவாடலையும் மறுக்கின்றத னுனும் நாயனுர் வாமியல்லர்.

வாமிகளுக்குக் கொலை களவு முதலியவை உடம்பாடென் பதற்குப் பிரமாணம்:

"வாழவே வல்லை வாமி வலக்கைதா வென்னு யிர்க்குத்
தோழனீ யுன்னை யொப்பார் சொல்லிடி னில்லை கண்டாய்
கோழைமா னுடர்தீ தென்னுங் கொலைகள வாதி கொண்டே
சூழும்வார் குழலார் மொய்ப்பச் சுடரெனத் தோன்றி னுயே"

சித்தியார் பாபக்கம்—15.

## (31) வைரவ ரல்லர்

வைரவர் பெரும்பாலும் வாமமதத்தோ டொத்துச் சிறு பான்மை ஆசாரங்களான் வேறுபட்டு வயிரவனே பரம்பொருள் எனக் கொண்டு வைரவபதத்திற் சேர்வதே முத்தி யென்பர்.

பெருநாவலர் வைரவர் கூறுகின்ற ஆசாரங்களை மறுக்கின்ற மையானும், வைரவர்க்கு வேருகிய "ஆதிபகவனை" வாழ்த்துகின் றதனுனும் அவர் வைரவரல்லர்.

## (32) அயிக்கவாதசைவ ரல்லர்

அயிக்கவாத சைவர் ஆணவமலமென்ப தொன்றில்லை; மாயா கன்ம மலங்களே உள்ளன; ஆன்மாக்களின் இருவினைகளுக் கிடான சரீராதிகளை யடைந்து வினைகளை யார்ச்சித்து வினைப்பயன் களை யருந்தி வருகின்ற காலத்திலே இருவினை யொப்பு வந்த ஆன்மா கடவுளருளாலே பந்தமெலாங் கழிந்து தனக்கு முன் புள்ள மாசற்ற நிலையை அடையு மென்பர்.

நாயனுர் இருண்மலமாகிய ஆணவ மலத்தை யுடம்பட லானும், இறைவனடி சேர்ந் தின்புறுமுத்தியை உடம்படலானும் அயிக்கவாதசைவ ரல்லர்.

## (33) பாடாணவாதசைவ ரல்லர்

பாடாணவாத சைவர் ஆணவமலம் ஆன்மாவுக்குக் குணம் போலச் சகசமா யநாதியே வுள்ளது. அதனல் மாயை கன்மங் கள் ஆன்மாவைத் தலைக்கூடும்; பாசஞான மெல்லாந் தன்கீழ் வியாப்பியமென் றறிந்து நீங்குதன் மாத்திரையே முத்தி; முத்தி பெற்றவழியும் சகசமலமாகிய ஆணவமலம் நீங்குத லின்றிச் சுட் டறிவும், சுகதுக்காநுபவங்களு மற்று, ஆன்மா பாடாணம்போற் கிடக்கு மென்பர்.

பெருநாவலர்

"இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"

என்ற திருக்குறளில் இறைவன் புகழை விரும்பினரிடத்தே ஆண வத்தின் காரணமாகப் பொருந்துகின்ற இருவினைகளும் நீங்கு மென்றதனல், காரணம் நீங்காதபோது அதனல் வருகின்ற உபா திகள் முற்றிலும் பின் செனிப்பின்றி நீங்கா வாகையாலும், கார ணமாகிய ஆணவமலசத்தி கெட்டாலன்றி அதனுற் சார்ந்து வரு கின்ற வினைகள் கெடாவகையாலும், வினைகள் நீங்கு மென்றத னனே வினைகளுக்குக் காரணமாயுள்ள ஆணவமல சத்தி நீக்கமும் நாவலருக்கு உடம்பாடென்றும்,

"மலர்மிசை யேகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

என்ற திருக்குறளால் இறைவனடி சேர்ந்தின்புற்று வாழ்தலாகிய முத்தியே உடம்பாடென்றும் பெறப்படுவதால், நாயனர் பாடாணவாதசைவ ரல்லர்.

## (34) பேதவாதசைவ ரல்லர்

.பேதவாத சைவர் மும்மலங்களும் அநாதி; காணங்களிற் சென்ற தன்னறிவு பக்குவத்தில் தன்மாட்டொன்றி நிராதார மாய் நிற்கும்; இறைவனருளால் மும்மலங்களும் நீங்கிய ஆன்மா

பெறுவானும் பேறுமா யிருக்கும்; அதன்மேலும் அடிமையாத லில்லை யென்பர்.

முதற்பாவலர்
"இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"

என்ற திருக்குறளால் மாயாகன்ம மலங்கள் ஆகந்துக மென்றும்,

"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்"

என்ற திருக்குறள்களால் இறைவனடியிற் கலந்து அவனருளிய ஆனந்தத்தை யுண்டு வாழ்தலே முத்தியென்றுங் கூறுதலால், நாயனார் பேதவாதசைவ ரல்லர்.

## (35) சிவசமவாதசைவ ரல்லர்

சிவ சமவாத சைவர், பதி ஞான, பசு ஞான, பாச ஞானங்கள் அநாதியேவுள்ளன; புழு வேட்டுவனை நினைந்து வேட்டுவனாகி அதன் றொழிலையும் இயற்றி நிற்றல்போல, ஆன்மா பதியை நினைந்து அதன் வடிவுற்று அதன் றொழிலை இயற்றி நிற்பதே முத்தி யெனக்கூறுவர்.

தேவர் இறைவனடி சார்ந்தின்புற்று வாழ்தலே முத்தி யென,

"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

என்ற திருக்குறளால் வலி யுறுத்திக் கூறுவதால், அவர் சிவசமவாதசைவ ரல்லர்.

## (36) சிவசங்கிராந்தவாதசைவ ரல்லர்

சிவசங்கிராந்தவாதசைவர் ஆன்மாவின் சந்நிதியிற் காந்த பசாசம் போல உடல் இயங்குழி அதன்கணின்று கருவிகளை

விடயங்களை யனுபவிக்கும், மலம் நீங்கும்வழி, கண்ணாடியின் முக வொளி தோற்றுமாறு போல முதல்வன் திருவருள் ஆன்மாவின் மாட்டுச் சங்கிரமித்துத் தோன்றும். அவ்வழி உப்பளத்தி லிட்டவையெல்லாம் உப்பாமாறுபோல ஆன்மா சிவமேயாய் அவ்வான்மாவின் சந்நிதியில் அறிவனவாகிய பசுக்ரணங்களுஞ் சிவகரணங்களாய் மாறுஞ் சித்தியுற்றுச் சிவத்தை அறியு மென்பர். இவர் கூறும் முத்தி சித்திமுத்தியாகும்.

திருவள்ளுவ நாயனார்,

"ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி"

என்றும்,

"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு"

யென்றுங் கூறுமாற்றல் சடவஸ்துக்களாகிய இந்திரியங்களுக்கு வேறாய ஆன்மாவே யறியு மென்றும்,

"சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்"

என்று கூறுமாற்றல் உயிர்களுக்கு முதல்வன் சார்பில்வழி அறிவு விளங்கப் பெறுவதில்லை யென்றும் சிவசங்கிராந்தவாத சைவர் கூறும் சித்திமுத்தியை யுடம்படாது

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்"

என்று கூறுமாற்றல் அடிசேர் முத்தியே முத்தி யென்றும் கூறுவதால் திருவள்ளுவ நாயனார் சிவசங்கிராந்தவாதசைவ ரல்லர்.

## (37) ஈசுரவவிகாரவாதசைவ ரல்லர்

ஈசுரவவிகாரவாத சைவர், பல துளைக்குடத்துத் தீபம் போல நவத்துவார சரீரத்தில் அறிவாய் நிற்கின்ற ஆன்மா, மலபரிபாகஞ் சத்தினிபாத முற்ற வளவில் முதல்வன் திருவருளால்

ஞானத்தைப் பெற்று, வெய்யிலிற் றுன்புற்ற வொருவன் மா நிழலடைந் தாறுவதுபோல அம்முதல்வன் றிருவடி நிழலைத் தலைகூடிப் பின் முதல்வனது உபகாரத்தை அவாவாது என்பர்.

நாயனார்

*"விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு"

என்ற திருக்குறளால் எள்றும் இறைவ னுபகார மவசியமென உய்த்துணரக் கூறி யிருத்தலால் நாயனார் ஈசுரவவிகாரவாத சைவரல்லர்.

## (38) சிவாத்துவிதசைவ ரல்லர்

சிவாத்துவித சைவர் மரத்தில் வியாப்பியமான கவடு கோடு முதலியன வெல்லாம் மரமே யாமாறுபோலச், சத சத்துக்களாகிய உயிர்களும் அசத்துக்களாகிய பாசக் கூட்டங்களும் குண குணிகட்குத் தம்முள் உளதாகிய வேற்றுமையைப்போல சத்துக்கு உட்பேதமே யன்றி, புறப்பேத மின்மையான் அவையனைத்தும் சத்தெனவேபடும். படவே, பதித் தன்மையின் வேறாய் உயிருக்கு அறியுந்தன்மை யுண்டென்னிற் றனித்த முதலெனப் பட்டு வழுவாமாகலிற் சத்தாகிய பதிப்பொருளே உயிர்களினிடமாக நின்றறியும் என்பர். ஆகவே இவர்கூறுவது நிமித்தகாரணம்,

நாயனார்,

"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

என்பது முதலிய திருக்குறள்களால் கடவுள் வாழ்த்தென்னும் அதிகாரத்தில் முதல்வனின் வேறாக உயிர்களுண்டென்றும்,

"அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு"

---

* விளக்கு - சிவஞானம். இருள் - ஆணவம்.

என்று கூறுமாற்றால் உயிர்களுக்கு முறை முறையாக விளங்கப் பெறும் அறியுந்தன்மை யுண்டென்றும் கூறுவதனாலும், சிவாத் துவிதசைவர் கூறும் நிமித்தகாரண பரிணாம வாதம் யாண்டுங் கூறாமையானும் நாயனார் சிவாத்துவிதசைவ ரல்லர்.

## 39. சுத்தசைவ ரல்லர்

சுத்தசைவர் சித்தாந்த சைவரொப்பப் பதிபசு பாச வியல்பு களைக் கொண்டாலும் முத்தியில் உயிரானது சிவபரம் பொரு ளிடத் தயிக்கமுற்று ஒரு பயனும் ஓரானந்தமு மின்றி நிற்கு மென்பர்.

செந்நாப் போதார்,

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பினும் வித்து"

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்"

"இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்"

"ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்"

என்றும்,

"இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு"

என்றுங் கூறுமுகத்தால் பெத்த நீக்கமும் முத்திப் பேறாகிய சிவானந்தப் பிராப்தியும் உடம்படலால் தெய்வப்புலவர் சுத்த சைவரல்லர்.

## 40. திருவள்ளுவ நாயனார் சித்தாந்த சைவரே

சித்தாந்த சைவர், சற்காரிய வாதங்கொண்டு, காட்சி, அனு மானம், ஆகமம் எனும் மூவித பிரமாணங்களால் கடவுளொருவ

ருண்டென்றும், அவர் சித்தாந்தத் தெய்வமாகிய சிவபரம்பொரு ளே யென்றும், அக்கடவுளுக்கு வேருய் எண்ணில்லாத உயிர்க ளுண்டென்றும், அவைகளைப் பந்தித்த ஆணவமல மொன்றுண் டென்றும், அம்மலத்தின் காரணமாக உயிர்களுக்குக் கன்மமலம் அநாதியே உண்டென்றும், மல சம்பந்திகளான உயிர்களுக்கு உறைவிடமாக மாயாமலமொன் றுண்டென்றும், மலத்தைச் செலுத்துகின்ற ஆதிசத்தியாகிய திரோதான மலமும், அதனு லான மாயாகாரியங்களாகிய மாயேய மலமும் உண்டென்றும், கன்ம மலமானது ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என முத் திறப்படுமென்றும், கன்ம பலபோகங்களை அனுபவிக்குந் தானங்க ளாகிய சுவர்க்க, நரக லோகங்க ளுண்டென்றும், அங்ஙனம் அனுபவிக்குங்கால் அடையத்தக்க சுரர், அலகை முதலிய யோனிபேதங்களுண்டென்றும், இங்ஙன மிறந்து பிறந்து வருவ தால் மறு பிறப்புக்க ளுண்டென்றும், சங்காரம் இளைப்பொழித்த லாகுமென்றும், பிறவிப் பெருங்கடலைக் கடக்கத்தக்க உபாயங்களை அறிவிக்கும் விதி நூல்களாகிய வேத சிவாகமங்களுண்டென்றும், அவைகளில் விதிக்கப்பட்ட வருணச்சிரம பேதங்க ளுண்டென் றும், அவற்றிற் கீடாக ஒழுகுங்கால் செய்யப்படுங் கன்மங்கள் நல்வினை தீவினைகளென இருதிறப்படூஉ மென்றும், இவைகளும் திருஷ்டசன்ம போக்கியம், அதிருஷ்டசன்ம போக்கியம், திருஷ் டாதிருஷ்டசன்ம போக்கியமென மூவகைப்படு மென்றும், அக் கன்ம பேதங்களால் போகபேதங்களுண் டென்றும், கன்மபலன் கள் அனுபவமாவது நிச்சய மென்றும், அப் பலன்களையும் இறை வனே உயிர்களுக்குக் கொடுப்ப னென்றும், அங்ஙனமாயினும் சிவாகமங்களின்வழி ஒருவினைக்கு மற்ருேர் வினையால் அழிவுண் டென்றும், தருமங்களைச் செய்யவேண்டு மென்றும், அவற்றை பாத்திராபாத்திர மறிந்து செய்யவேண்டுமென்றும், தருமங்க ளுள்ளே வேள்வி சிறந்ததென்றும், அதனினும் சீவகாருணி யம் மிகச் சிறந்த தென்றும், அதுவும் அருளில்லாத வழி கூடாதாகையால் உயிர்கள்மாட்டு அருள்வேண்டு மென்றும், அவ்வருள் இல்லாதவர் எத்தகையரானும் அவர்க்கு மோட்ச லோகானுபவ மில்லை யென்றும், அங்ஙனஞ் செய்கின்ற வினை

களும் ஒருவன் செய்தது அவனைச் சார்ந்தார்க்கு மாகுமென்றும், முத்தி யுலகமானது தேவலோகத்துக்கு மேலுள்ள தென்றும், அதனை யடைவதற்கு நித்தியா நித்திய வஸ்து விவேகம் முதற்சாதன மென்றும், வேறு சிறந்த சாதனங்களு முண்டென்றும், அவைகளைக் கடைப்பிடித்து மனோவாக்குக் காயங்களால் முதல்வனை வழிபடவேண்டு மென்றும், அங்ஙனம் வழிபட்டார்க்குப் பெத்தநீக்கமும் முத்திப்பேறும் உண்டென்றும், முத்தியிலும் முப்பொருள்களும் உயிர்களுக்கு முதல்வன் உபகாரமுமுண்டென்றும், முதல்வனின் அடிசேர் முத்தியே சித்தாந்த முத்தி யென்றுங் கூறுவர்.

நாயனர்,

"அகாமுதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்ற திருக்குறளால் சற்காரியவாதங் கூறுகின்றதனுனும், மேற்படி குறளில் உலகு என்றதனல் காட்சிப் பிரமாணத்தையும், ஆதிபகவன் முதற்றே யுலகு என்றதனல் அனுமானப் பிரமாணத்தையும்,

"கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு"

"மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு"

என்ற திருக்குறள்களால் ஆகமப் பிரமாணத்தையும் உடம்படுதலானும், கடவுள்வாழ்த்து என்ற அதிகாரம் கூறியதனுனும்,

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்"

என்பது முதலிய திருக்குறள்களானும் கடவு ளொருவரே உண்டென்றும்,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்ற திருக்குறளால் அக்கடவுள் சித்தாந்த தெய்வமாகிய ஆதிசத்தியாரோடு கூடிய சிவபரம் பொருளே என்றும் கூறுதலானும்,

"தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை"

"ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணொன்று
நன்மை குறித்தது சால்பு"

"பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை"

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று"

என்ற திருக்குறள்களால் எண்ணில்லாத உயிர்களுண்டென்று கூறுதலானும்,

"இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"

"இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு"

"சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்"

"காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்"

என்ற திருக்குறள்களால் ஆணவமல மொன்றுண்டென்று கூறுதலானும்,

"பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்"

என்ற திருக்குறளால் கருமமலத்தை உடம்படுதலானும்,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்ற திருக்குறளால் உலகுக்கு முதற் காரணமாகிய மாயாமலத்தையும் "ஆதிபகவன்" என்றதனால ஆதி சத்தியாகிய திரோதான மலத்தையும் "உலகு" என்றதனால் மாயா காரியமாகிய மாயேய மலத்தையும் உடம்படுதலானும்,

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து"

"அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேற்
றவாஅது மேன்மேல் வரும்"

"இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்"

"ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்"

என்ற திருக்குறள்களால் ஆகாமிய கன்மத்தையும்,

"அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை"

என்ற திருக்குறளால் சஞ்சித கன்மத்தையும்,

"ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி"

"துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால
வூட்டா கழியு மெனின்"

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்"

"தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்"

"ஊழையு முப்பக்கங் காண்ப ருலேவின்றித்
தாழா துஞற்று பவர்"

"அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
பலாறியார் பாக்கியத் தால்"

என்ற திருக்குறள்களால் பிராரத்த கன்மத்தையுங் கூறுதலானும்,
(தொடரும்.)

---

# திரிபதார்த்த சிந்தனை

## காப்பு

"நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்"

## நூல்

"ஏக னனேக னிருள்கரும மாயையிரண்
டாகவிவை யானு தியில்*"

ஏ - து. ஏகன் - சிவனும், அனேகன் - ஆன்மாவும், இருள் - ஆணவமலமும், கருமம் - கன்மமலமும், மாயை இரண்டு - சுத்த மாயை அசுத்தமாயையும், ஆக இவை - ஆக இந்த ஆறு பொருளும், அனுதியில் - அனுதியிலே உண்டான பொருளாம்.

சிவனுக்கெண்ணிறந்த தன்னியல்புக் குணங்களுள. அவற்றுளிரண்டு குணங்கள் சொல்லுகிறேம்.

க. தானே அறிகிறகுணம். உ. ஆன்மாவிற்கு அறிவிக்கிற குணம்.

**மேற்கோள்**

பொறிபுலன் கரணமெல்லாம் புருடனு லறிந்தான் மாவை
அறிதா வவையே போல வான்மாக்க ளனைத்து மெங்குஞ்
செறிதருஞ் சிவன்ற னுலே யறிந்திடுஞ் சிவனைக் காணு
அறிதருஞ் சிவனே யெல்லா மறிந்தறி வித்து நிற்பன்

சித்தியார், சூ. ங, செ. ஈ.

---

(பா - ம்.) * ஆறுதியில்.

என்றது. ஆன்மாக்களுக் கெண்ணிறந்த தன்னியல்புக் குணங்க ளுள. அவற்றுளிரண்டு குணங்கள் சொல்லுகிறோம்.

க. அறிவித்தாலறிகிற குணம். உ. தானாகப் பிறருக்கறிவிக்க மாட்டாத குணம்.

மேற்கோள்

அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்
செறியுமா முன்பின் குறைக—ணெறியிற்
குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடென்
குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு

சிவஞானபோதம், சூ. அ.

என்றது. ஆணவமலத்திற் கெண்ணிறந்த தன்னியல்புக்குணங்க ளுள. அவற்றுளிரண்டு குணங்கள் சொல்லுகிறோம்.

க. ஆன்மாவிற்கு வேண்டும் பேரின்பத்தையு மதற்குத் தாரக மாயுள்ள திருவருளையு மறைக்கிற குணம். உ. அதற்குத்தேகாதி பிரபஞ்சத்திலே விருப்பத்தைக் கொடுக்கிற குணம்.

மேற்கோள்

அந்நியமா னவையுணர்த்தி யகந்நியமாய் நிறைந்த
வறிவறியா மையினுனு மருணிலவுங் காலந்
தன்னிலவ னேயாவு மாய்நின்ற தொன்மை
தாமுணர்த லானுமுயிர் தானெனவொன் றிலதா
மன்னியிடு மலமாயை கன்மங்கண் மாறி
வந்திடுமிங் கிதுவமுவா தாதலினுன் மனத்தால்
உன்னரிய திருவருளை யொழியமல முளதென்
றுணர்வரிதா மதனுண்மை தெரிவரிதா முனக்கே.

சிவப்பிரகாசம், பொது உச.

என்றது.

கன்ம மலத்திற் கெண்ணிறந்த தன்னியல்புக் குணங்களுள. அவற்றுளிரண்டு குணங்களைச் சொல்லுகிறோம்.

க. ஆன்மா ஆணவ மலத்தைப் பொருந்தி மலத்தொழிலி லிருக்கிறபோது, அத்தொழில்மயமா யிருக்கிற குணம்.

உ. அஃது அருட்டொழிலைப் பொருந்தின லருட்டொழிலா யிருக்கிற குணம்.

மாயைக் கெண்ணிறந்த தன்னியல்புக் குணங்களுள. அவற்றுளிரண்டு குணங்கள் சொல்லுகிறோம்.

க. ஆன்மா ஆணவமலத் தொழிலைப் பொருந்தினால் மலத் தொழிற்குத் தாரகமான கருவியாயிருக்கிற குணம்.

உ. அஃது அருட்டொழிலைப் பொருந்தின லவ்வருட் டொழிற்குத் தாரகமான கருவியா யிருக்கிற குணம்.

மேற்கோள்

மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
யாயவா ருயிரின் மேவு மருளினி லிருளாய் நிற்கும்
மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
யாயவா ருயிரின் மேவு மருளினி லொளியாய் நிற்கும்.

சிவப்பிரகாசம், உண்மை உ௰.

மேற்கூறிய ஆறுபொருளுந் திரிபதார்த்தத்தி லடங்கும். இது தன்னியல்பு.

ஆன்மா அனாதியில் லாணவமலத்தி லழுந்தினன். ஆணவ மலம் ஆன்மாவிற்குக் கன்மத்தில் இருப்பத்தைக் கொடுத்தது. அந்தச் செய்தியைக் கர்த்தா இரக்கத்தினலறிந்து, கன்மத்துக் கேற்ற தனுவைக் கொடுத்து அத்தனுவிற்கேற்ற புவனத்தில் விட்டு விரும்பிய கன்மத்தைக் கூட்டிப் புசிப்பித்தார். இஃது அனாதியிலே பிரபஞ்ச முண்டாகிய முறைமை. இது பொது வியல்பு.

ஆன்மாவிற்கு, ஆணவமலம் அனாதி யியற்கையோ ? செயற் கையோ? இயற்கையானல், பாலுக்கு வெளுப்புங், கரிக்குக் கருப்பும் ஒருகாலத்திலு நீங்காததுபோல், ஆன்மாவிற்கு ஆணவ மலமும் ஒருகாலத்திலும் நீங்காது. ஆனதின லியற்கையன்று.

செயற்கையானல், வெள்ளைப் புடவைக்கு அழுக்கேறுதல் போல மோட்சத்திலும் ஆணவ மலம் வந்து பொருந்தும். ஆனதி

னல் செயற்கையுமன்று. இனித் திருஷ்டாந்த மெப்படியானல் நெல்லிற்குமியும், செம்பிற் களிம்பும்போல் அனுதிசெயற்கை அனுதி சையோக மென்றலுமாம்.

மேற்கோள்

நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா
ளலர்சோகஞ் செய்கமலத் தாம்.

சிவஞானபோதம் சூ. உ.

ஆன்மாவிற்கு ஆணவமலத்தைக் கர்த்தா கூட்டினரோ? அல்லது மலந்தானே வந்து கூடிற்றே?

கர்த்தா நின்மலராகையினுல் அவர் கூட்டினதன்று.

மலந் தானேவந்து பிடித்ததென்றுலோ, ஆணவமலஞ் சடமாகையினுல் அது தானே வந்து பிடிக்க மாட்டாது. இனித் திருஷ்டாந்த மெப்படியெனில் ஆன்மாவே ஆணவமலத்தி லழுந்தினனென்று வேதாகமங்களிற் சொல்லியிருத்தலால் அவனே ஆணவமலத்தி லழுந்தினன்.

மேற்கோள்

எண்ணரிதாய் நித்தமா யிருண்மலத்தி லழுந்தி
　　யிருவினையின் றன்மைகளுக் கீடான யாக்கை
அண்ணலரு ளானண்ணி யவைபவா யதனு
　　லலகினிகழ் போகங்க ளருந்து மாற்றுற்
புண்ணியபா வம்புரிந்து போக்குவா வுடைத்தாய்ப்
　　புணருமிருண் மலபாகம் பொருந்தியக்கா லருளால்
உண்ணிலவு மொளியதனு லிருளகற்றிப் பாத
　　முற்றிடுநற் பசுவர்க்க மெனவுரைப்ப ருணர்ந்தோர்.

சிவப்பிரகாசம், பொது எ.

ஆன்மாவிற்குச் செய்தியுண்டோ? வில்லையோ?

ஆன்மா சுதந்தர ஹீனனுனபடியால் சிவனுக்கே செய்தியல்லாமல் ஆன்மாவிற்குச் செய்தியில்லையெனில், வேதாகமங்களில்

விதிவிலக்குச் சொல்லவேண்டியதில்லை. நரக தண்டனை வேண்டியதில்லை. ஆனலிவைகள் வேதாகமங்களிற் சொல்லப்பட்டிருத்தலினலேயும், போகத்தை விரும்புதலினலேயும் ஆன்மாவிற்குச் செய்தியுண்டு.

மேற்கோள்

அருளின லுரைத்த நூலின் வழிவாரா ததன்மஞ் செய்யி
னிருளுலா நிரயத் துன்பத் திட்டிரும் பாவந் தீர்ப்பன்
பொருளுலாஞ் சுவர்க்க மாதி போகத்தாற் புணியந் தீர்ப்பன்
மருளுலா மலங்க டீர்க்கு மருந்திவை வயித்திய நாதன்.

சிவஞானசித்தியார், சூ. உ. செ. ௩௩.

ஆன்மாவிற்குக் கன்மத்திலே யுண்டாகிய விருப்பஞ் சிவன் கொடுத்த விருப்பமோ, அல்லது ஆன்மாவிற்குள்ள விருப்பமோ?

'ஏன் பாவத்தைச் செய்தாய்' என நரகத்திலிட்டு வருத்துவதாலும், கன்ம நிவர்த்தி வந்த காலத்தில் விருப்பத்தைக் கொடாதபடியினலேயுஞ் சிவன் கொடுத்த விருப்பமன்று.

நல்வழி யிருக்கத் தியவழியிலும் நடத்தலால், ஆன்மாவிற்குள்ள விருப்பமுமன்று. இனிச் சித்தாந்த மெப்படியெனில் ஆணவமலமே ஆன்மாவிற்குக் கன்மத்தில் விருப்பத்தைக் கொடுத்ததென்பதாம். ஆணவமலஞ் சடமாகையினலே அதற்குச் செய்தியில்லையெனில், கள், பாஷாணம், தீ, காற்று, நீர் முதலிய சடங்களுக்குச் செய்தி யுண்டாதலால், ஆணவமலத்திற்குஞ் செய்தியுண்டு. விருப்பத்தைக் கொடுத்த ஆணவமலமும், ஆன்மாவிற்குக் கன்மத்தை யறிந்தெடுத்துக் கொடுக்கமாட்டாது. விரும்பின ஆன்மாவுங் கன்மத்தையறிந் தெடுத்துக்கொள்ளமாட்டான். விரும்பப்பட்ட கன்மமும், ஆன்மாவை யறிந்துவந்து பொருந்தமாட்டாது. ஆனல் கர்த்தா இரக்கத்தினலறிந்து விருப்பத்திற் கேற்ற தனுவைக் கொடுத்து அந்தத் தனுவினிடமாகக் கன்மத்தைக்கூட்டிப் புசிப்பிப்பார். சூ

ஆணவமலமே ஆன்மாவிற்குக் கன்மத்தில் விருப்பத்தைக் கொடுத்ததென்பதற்குக் காட்டும் உவமைகள் வருமாறு:—

க. குழந்தைக்குப் பாலிலேயுண்டாகிய விருப்பந் தாய் கொடுத்த விருப்பமோ ? குழந்தைகளுக்குள்ள விருப்பமோ?

தாய் பால்கொடுத்த நேரமெல்லாங் குழந்தைகுடியாதபடியினாலே தாய்கொடுத்த விருப்பமன்று. பாலை எந்நேரமு மிடைவிடாமற் குடியாதபடியினாலே குழந்தைக்குள்ள விருப்பமுமன்று. இனி உண்மையாதெனில், பசியே குழந்தைக்குப் பாலிலே விருப்பத்தைக் கொடுத்ததென்பதாம். விரும்பின குழந்தையும் பாலை அறிந்தெடுத்துக் குடிக்கமாட்டாது.விரும்பப்பட்ட பாலுங் குழந்தை வாயிலேவந்து பொருந்தமாட்டாது. ஆனால் தாயானவள் இரக்கத்தினா லறிந்து பாலை யெடுத்து பாலடையில் விட்டுக் கொடுப்பாள்.

குழந்தை, பசி, பால், தாய், பாலடை ஆக ரு.

உ. குழந்தையைப்போலும் ஆன்மா, பசியைப்போலும் ஆணவமலம், பாலைப்போலுங் கன்மம், தாயைப்போலுஞ் சிவன், பாலடையைப்போலும் உடம்பு. எ

பிணியாளிக்கு மருந்திலேயுண்டாகிய விருப்பம் வைத்தியன் கொடுத்த விருப்பமோ ? அல்லது பிணியாளிக்கே யுள்ள விருப்பமோ? மருந்து கொடுத்த நேரமெல்லாங் கொள்ளாதபடியினால் வைத்தியன் கொடுத்த விருப்பமன்று. மருந்தை எந்நேரமு மிடைவிடாமற் குடியாதபடியினால் பிணியாளிக்குள்ள விருப்பமுமன்று. இனி உண்மை யாதெனில் வியாதியே பிணியாளிக்கு மருந்தில் விருப்பத்தைக் கொடுத்ததென்பதாம்.

விருப்பத்தைக்கொடுத்த வியாதியும் பிணியாளிக்கு மருந்தை அறிந்தெடுத்துக் கொடுக்கமாட்டாது. விரும்பின பிணியாளியும் மருந்தை யறிந்தெடுத்துக் குடிக்கமாட்டான். விரும்பப்பட்ட மருந்தும் பிணியாளிவாயி லறிந்து வந்து பொருந்தமாட்டாது. இந்தச் செய்தியை வைத்தியன் இரக்கத்தினா லறிந்து மருந்தை ஒரு பாத்திரத்தில் விட்டுக்கொடுப்பான்.

பிணியாளி, பிணி, மருந்து, வைத்தியன், பாத்திரம் ஆக ரு.

பிணியாளியைப்போலும் ஆன்மா, பிணியைப்போலும் ஆணவமலம், மருந்தைப்போலுங் கன்மம், வைத்தியனைப் போலுஞ் சிவன், பாத்திரத்தைப்போலும் உடம்பு. அ

ந. குருடனுக்குக் கோலிலேயுண்டான இச்சை கோல் கொடுத்திழுக்கிறவன் கொடுத்ததோ? அல்லது குருடனுக்கேயுள் ளதோ?

கொடுத்த நேரமெல்லாங் கோலைப் பிடியாதபடியினாலே கோல் கொடுத்திழுக்கிறவன் கொடுத்த இச்சையன்று. கோலை விடாமற் பிடியாதபடியினாலே குருடனுக்குள்ள இச்சையுமன்று. இனி யுண்மையாதெனில் குருடே குருடனுக்குக் கோலிலே இச்சையைக் கொடுத்ததென்பதாம்.

இச்சையைக் கொடுத்த குருடுங் குருடனுக்குக் கோலையறிந்து எடுத்துக் கொடுக்கமாட்டாது. இச்சித்த குருடனுங் கோலையறிந் தெடுத்துக்கொள்ள மாட்டான். இச்சிக்கப்பட்ட கோலுங் குரு டனை யறிந்து அவன் கையில்வந்து பொருந்தமாட்டாது. இந்தச் செய்தியை குருடனுக் குரிமையுள்ளவன் இரக்கத்தினாலறிந்து கோலைக் கொடுத்து குருடன் கொண்டுபோகச் சொன்ன இடங் களுக்கு இழுத்துக்கொண்டுபோய் விடுவான்.

குருடன், குருடு, கோல், கோல்கொடுத்திழுக்கிறவன், இடம் ஆக ரு.

குருடனைப்போலும் ஆன்மா, குருடைப்போலும் ஆணவ மலம், கோலைப்போலுமுடம்பு, கோல் கொடுத் திழுக்கிறவனைப் போலுஞ் சிவன், இடங்களைப்போலும் புவனங்கள். கூ

ஆன்மாவிற்கு உடம்பி லுண்டாகிய விருப்பஞ் சிவன்கொ டுத்த விருப்பமோ? அல்லது ஆன்மாவுக்கேயுள்ள விருப்பமோ?

சிவன் உடம்பு கொடுக்க நினைத்தபோதெல்லாம் பற்றாதபடி யினாலே சிவன் கொடுத்த விருப்பமுமன்று. சரீரத்தை மோட்சத் திலும் இடைவிடாமற் பற்றாதபடியினாலே ஆன்மாவிற்குள்ள விருப்பமுமன்று. இனி உண்மையாதெனில், ஆணவமலமே ஆன் மாவிற்கு உடம்பில் விருப்பத்தைக் கொடுத்ததென்பதாம்.

விருப்பத்தைக் கொடுத்த ஆணவ மலமும் ஆன்மாவிற்கு உடம்பை யறிந்தெடுத்துக் கொடுக்கமாட்டாது. விரும்பின ஆன்மாவும் உடம்பை யறிந்தெடுத்துக்கொள்ளமாட்டான். விரும்பப்பட்ட உடம்பை ஆன்மாவை யறிந்து பொருந்தமாட்டாது. இந்தச் செய்தியை கர்த்தா இரக்கத்தினலறிந்து விரும்பின புவனங்களில் விட்டு விரும்பின கன்மங்களைக் கூட்டிப் பிசிப்பிப்பார். ய

பிறவிக்கு ஆன்மா காரணனே? அல்லது சிவன் காரணனே?

சிவன் ஆன்மா நினைத்தபடி தனுவைக்கொடுத்து கன்மங்களை கூட்டிப் புசிப்பிக்கையினல் ஆன்மாவே காரணன். கக

குயவன் தன்னிச்சைப்படி பாண்டங்களைவனைவானே? அல்லது பிறரிச்சைப்படி வனைவானே?

குயவன் ஒருவடிவாக வனையாது பலவடிவாக வனைகிறபடியினலே தன்னிச்சைபடியே வனைவானல்லன். பிறருடைய நினைவின்படியே வனைவான். குயவன், மண், பாண்டம், பிறர் ஆக ௨.

குயவனைப்போலுஞ் சிவன், மண்ணைப்போலுமாயை, பாண்டங்களைப்போலும் உடம்புகள், பிறரைப்போலும் ஆன்மாக்கள். கஉ

கர்த்தா தம்முடைய நினைவின்படி ஆன்மாக்களுக்கு உடம்புகளைப் படைப்பாரோ? அல்லது ஆன்மாவின் நினைவின்படி படைப்பாரோ?

(தொடரும்)

---

## நிலங்களின்தட்பவெப்பங்களால்மொழிநடைமாறல்

[க. ப. சந்தோஷம் B.A., L.T.]

(கலாசிந்தாமணியினின்றும் விரித்தெழுதியது)

(௬௬அ-ம் பக்கத் தொடர்ச்சி)

தட்ப வெப்பங்களால் பிறக்கின்றமொழி நடைவேற்றுமைகளை ஒருவாறு ஆராய்ந்து, அவை இம்மையோடு நில்லாது மறுமைக்குஞ் செல்கின்றன வென்பதைக் கண்டோம். இனி, இவ்

வாழ்க்கையில் அவற்ருல் வரும் ஒழுக்க மாறுதல்களைத் தூக்கிப் பார்ப்போம்.

பெரும்பட்டினங்களில் வாழும் ஒரு சிலரைத்தவிர நமது நாட்டுமக்கள் பொழுது விடியும்போது உறக்கத்திலாழ்ந்திருப்பவ ரல்லர். விடிவதற்கு நெடுநேர முன்னெழுந்து வீட்டை விளக்கி மெழுகி கலங்களைத் துலக்கி, காலிலுள்ள தண்டைகள் ஓசையிட மாதர் நடமாடுவது நாம் ஒவ்வொரு நாளுங்காணும் காட்சியா கும். பொழுது புலர்வதற்கு முன்னே ஆற்றிலோ ஊற்றிலோ குளித்துப் பூக்கொய்து இறைவனை வணங்குவது நமது மக்கள் பெரிதும் பயிலும் ஒரு பழக்கமாகும். அதனாலன்றோ, கோவி லும், குளமும், நம்மவரால் ஒன்ருகச் சேர்த்தெண்ணப் படுகின் றன. குளிர் நிலங்களில் உள்ளோர் விடியும் வேளையில், அழலைக் கண்டு நாம் அஞ்சுமாறு புனலைக்கண்டு விலகுவார். திருப்பள்ளி எழுச்சியைப் போன்றதொரு பாடல் மேனுட்டார் நூல்களிற் காண்பதரிது. ஈர உடையுடனிருந்து இறைவனடி எத்துதல் அவர் கனவிலுங் கருதாததாகும். அன்றியும், அடிகள் நிலத்திற் படாமல் காத்துக்கொள்ளும் மேனுட்டார், தொழுகையிற் காலிற் செருப்பணிவதை இழுக்கென்றெண்ணுர். நாமோ, அதைப் பெருங்குற்றமாகக் கருதி மற்ருேரிடத்திற் புகும்போதும், செருப் புடன்போகத் துணியோம். குளிர் பொறுக்கமாட்டாது முகந் தவிர மற்றெல்லா உறுப்புக்களையும் மூடிக்கொள்கின்றவர்களு டைய ஆடையணிகள், அவர்களை முகங் குப்புறவிழுந்து வணங் கவும், குனியவும், தரையிலமரவும் ஒட்டா. இதுபற்றியே மேனுட் டாரும், அவர்கள் வழக்கங்களை ஆராயாது ஆவலாய் எற்றுக் கொள்ளும் இந்நாட்டாருந்தொழுகின்ற கோவில்களில் ஒருவருந் தரையிலமர்வதில்லை. இருக்கைகளிற் சாய்ந்துகொண்டு கடவுளைப் போற்றுவது தமிழர் கண்டு இறும்பூதெய்தும் காட்சியாகும்.

நிற்க, ஆங்கிலப்புலவரால் இயற்றப்பட்ட உயர் நூல்களில், உளக்கண்ணுல் நாம் பார்க்கும் ஆடவர், மகளிரின் தன்மை யொன்றை ஆழ்ந்து நோக்கின், தட்பவெப்பத்தாலாகும் மற்ருெரு வேற்றுமை புலனுகும். புலவரது ஆற்றலால் இயற்றப்பட்டு விளங்கும் இம்மக்களின் தன்மையிலிருந்து மேனுட்டார் விருப்பு

கின்ற மக்கட்டன்மை இதுவென்று நாமறியலாகும். மேனுட்டார் நூலில் வெளிப்படுகிறவர்களிற் பெரும்பான்மையோர், பொங்கி எழுகின்ற சினத்தாலோ, காதலாலோ, ஆவலாலோ பொருமையாலோ ஏவப்பட்டவர்களா யிருக்கின்றனர். **Shakespeare** இயற்றிய கூத்துக்களில் முதன்மைபெற்று நிற்பவரெல்லாம் பற்றி எரிகின்ற ஒருணர்ச்சியால் ஆட்கொள்ளப்பட்டு நடக்கின்ருர்கள். Hamlet, Othello, Lear, Macbeth முதலியோர் முறையே, இறந்த தந்தைக்காகப் பழிவாங்க வேண்டுமென்ற சினத்தாலும், மனைவி நெறிதவறி நடந்ததாகக் கருதியதை ஆற்றெணுமையாலும், பிள்ளைகளின் கொடிய நன்றியற்ற செய்கையால் எழுந்த புழுக்கத்தினுலும், தான் மன்னவனுக வேண்டுமென்ற பேராவலாலும் மூட்டப்பட்டவர்களாய்க் கொலைசெய்து இறக்கின்றனர். இவ்வாறு கொதித்து எழுந்து பொங்கி வடிவது குளிரால் வருந்தும் இயற்கையுடையார் நச்சுங் காட்சியாகும். இதனுலேயே, ஒரு கூத்தின் தலைவன் தான் கொண்ட உணர்ச்சியின் வன்மையால் தூண்டப்பட்டு இறக்குங் காட்சியை இறுதியிலுடைய துன்பக்கூத்து (Tragedy) மேனுடுகளில் மிகவும் பெருகி வளரலாயிற்று. நம்மவர்கட்கு, இத்தகைய ஆட்டங்களில் விருப்பமிருப்பதில்லை. எவ்வளவு தான் எரிமூண்ட உளத்தோடு ஒருவன் வெட்டி வீசி இன்னுத பல செய்பினும், இறுதியிலவன் ஆறுதல் பெற்றுக் குளிர்ந்திருப்பதையே நம்மவர் நாடுகின்ருர். அரிச்சந்திரன் வரலாற்றைக் கூத்து முறையில் மேனுட்டுப்புலவ னெழுதுவானுயின், மகன் இறந்தபின் மனைவியைக்கொன்று அயோத்தி மன்னன் தன்னையே வெட்டி விழுவதுடன் நிறுத்திவிடுவான்; நல்லதங்கையின் வரலாறும் அவள் தன் மக்கள் எழுவரோடும் கிணற்றில் விழுந்து உயிர்துறப்பதுடன் முடிவடைந்து விடும். நாமோ இவர்களெல்லாம் உயிர்பெற்று அமைதியாய் வாழ்வதைக் காண விழைகின்ருேம், மேனுட்டாருடைய துன்பக்கூத்தை யொருவாறு ஒத்திருக்குங் கோவலன் செய்தியும் ஆங்கிலப் புலவர் கருத்திற்கிசையாது. நாம் கற்பதுங் கேட்பதுமாகிய எல்லாவற்றிலும் நல்லவர் வாழ்வதையும் தீயவர் தாழ்வதையும் எதிர்பார்க்கின்ருேம்.

குளிர் நாட்டாருடைய நூல்களிலும், இத்தகைய முடிவு உண்டு ஆயினும், அவர்கள் பெரிதும் விழைகின்ற நூல்கள் துன்பக் கூத்தையொத்தனவே. இதன் நன்மை தீமைகளை நேயர்கள் ஆராய்ந்தறிந்து கொள்வார்களாக.

ஞாயிற்றின் வெப்பம் மலிந்திருக்கும் நிலங்களில் மக்களுடைய முயற்சி எளிதில் எழுந்து அடங்கிவிடும். பகல் முப்பது நாழிகையும் விடாமல் வேலைசெய்து உழைப்பவரை நம்மவரிற் காண்பதரிது. தட்ப நாடுகளிலோ, நாளுக்கு நாற்பத்தைந்து நாழிகைக்குமேல் உழைப்பவருளரென்று தெரிகிறது. காங்கை மிகுந்த நிலங்களில் உணவளிக்கும் பயிர் முதலியவை மக்களது சிறு முயற்சியால் அவர்கட்கு வேண்டிய பயனைத்தருகின்றன. உறைபனி மூடியிருக்கும் நாடுகளிலோ மிகுந்த வருத்தத்தோடு உழைத்தாலும் ஏற்றபயன் கிடைப்பதில்லை. அன்றியும், குளிரின் மிகுதியால் இடுக்கணுற்றவர் சூடுண்டாக்கிக் கொள்ளும் பொருட்டு, யாதாயினுமொன்று செய்ய வேண்டியதாயிருக்கிறது. ஒன்றுஞ் செய்யாது வாளாவிருந்தால், குரக்குவலி முதலியவற்ருலவர் துன்புறுவர். இதனால் உடல் தளராமல் நெடுநேரம் உழைப்பது அவர்கட்கு இயற்கையாய் வருகிறது. தாம் கொண்ட நோக்கங் கைகூடாமற்போயினும் பிறிதும் பலமுறை முயன்று பார்ப்பது அவர்களுக் கியற்கையாகிவிட்டது. ஆதலால், விடாமுயற்சி என்ற உயர்பண்பு அவர்களில் நம்மிலுமதிகமாயுளது. இதற்கிணையாக வெப்பநிலத்தோரிடம் ஒரு பண்புண்டு. வெயிலில் நின்று நெடுநேரம் வேலைசெய்வதால் வெப்ப நிலத்தவருடைய வன்மை குறையுமாயினும், அவர் தமக்கு இன்னுதவற்றைப் பொறுத்துக் கொள்ளுந் திறமையுடையவராயிருக்கின்றார். இங்ஙனமே தட்பத்தால் வரும் இடையூறுகளை அவர்கள் முயன்றுமுயன்று மேற்கொள்ள, நாம் வெப்பத்தால் வருந் தீங்குகளைத் தாங்கிக்கொள்ளும் ஆற்றலுடையவர்களா யிருக்கின்றோம். இதுபற்றி மேனாட்டார் விடாமுயற்சியைக் கைப்பற்றியவர்களாகவும், நாம் பொறுமையைக் கடைப்பிடித்தவர்களாகவும் விளங்குகின்றோம்.

(தொடரும்)

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

**திங்கள் தோறும் வெளிவருவது**


| சிலம்பு ச | மெய்கண்டான் யாண்டு-எாசு மார்கழித் திங்கள்<br>1926ஆ டிசம்பர்மூ—1927ஆ ஜனவரிமூ | பரல் கஉ |
|---|---|---|


திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

---

## ஆளுடைய பிள்ளையார்

[பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டார்]

(சஅள-ம் பக்கத் தொடர்ச்சி)

பின்பு திருமாளிகையை வலஞ்செய்து புறம் போந்து, திருமுன்றிலில் வணங்கி யெழுந்து, கோபுர வாயிலை யடைந்து பணிந்து, நான்கு திருவீதிகளையுந் தொழுது, அங்கே எழுந்தருளி யிருத்தற்கு அஞ்சி, திருவேட்களத்தை அடைந்து தொழுது பதிகம்பாடி, அங்கெழுந்தருளி யிருந்து கொண்டே, தில்லைக்கும்

வந்து அம்பல வாணருடைய திருக்கூத்தினைக் கும்பிடுவார். கும்பிடுநாளிலே அங்கிருந்து திருக்கழிப்பாலைக்குச் சென்று வணங்கிப் பதிகம் பாடினர். இங்ஙனம் தாம் பாடும் திருப்பதிக விசைகளை யாழ்ப்பாணர் யாழிலிட்டு வாசிக்கும் பேற்றை யளித்து, நாள்தோறும் திருக்கூத்தினைப் போற்றிவரும் திருஞான சம்பந்தர், ஒருநாள், தில்லை யந்தணர்கள் மன்றுளாடும் சேவடிக்கு அணுக்கராம் பேற்றினை வியந்து, அவர்கள் சிலத்தின் அளவின்மையையும் நினைந்து, பொங்கி யெழுகின்ற காதலுள்ளத்துடன் திருவேட்களத்தைக் கடந்து தில்லையை அணையும் பொழுது, அண்ட நாயகர் திருவருளாலே தில்லைவா ழந்தணர் மூவாயிரவரும் சிவகண நாதராய்த் தோன்றக் கண்டு, அப்பரிசினைத் திருநீலகண்டப் பெரும்பாணர்க்கும் காட்டி, தாம் அவர்களை வணங்கினர். அந்தணர்கள், அவர் வணங்குமுன் தாமும் உடன் வணங்கிச் சூழ்ந்து வந்தனர். பிள்ளையார் திருமுடிமேற் குவித்த செங்கையுடன் திருக் கோயிலினுட் புகுந்து, மன்றில் நிறைந்தாடும் மாணிக்கக் கூத்தரெதிரே சென்று பணிந்து; "ஆடினாய் நறுநெய் யொடு பாறயிர்" என்னுந் திருப்பதிகத்தைப்பாடினர். அப்பதிகத்திலே "நீலத்தார் கரிய மிடற்றார்" எனனுந் திருப்பாட்டிலே தில்லைவா ழந்தணரைத் தாம் கண்டபடிகூறி, அவர்கள் "தொழுதேத்து சிற்றம்பலம்" என்று அருளிச் செய்தார். இங்ஙனம் பணிந்து பதிகம்பாடி நிலைபெற்ற இன்ப வெள்ளத்திற் றிளைத்து, பிரியாவிடை பெற்றுப் புறம்போந்த காலையில், பாணர், பிள்ளையாருடைய திருவடிகளை வணங்கி, 'அடியேன் பிறந்த திருவெருக்கத்தம் புலியூர் முதலாக நிவா என்னும் நதியின் கரையிலிருக்கின்ற பதிகளை வணங்குதற்கு எழுந்தருள வேண்டும்' என்று வேண்டினர்.

ஆளுடைய பிள்ளையார் அதற் கிசைந்தருளி, தந்தையார் முதலிய யாவருடனும் புறப்பட்டுச் சென்று, எருக்கத்தம் புலியூரின் மருங் கணைந்து, 'அடியேன் பிறந்தபதி இது' எனப் பாணர் கூறக்கேட்டு இன்புற்று, 'ஐயரே, நீர் அவதரித்திட இப்பதி அளவில் மாதவம் முன்பு செய்தவாறு என்' எனச் சிறப்புரை வழங்கி, திருக்கோயிலினுட் புக்கு, வணங்கிப் பதிகம் பாடினர்.

பின் அங்கு நின்றும் அவருடன் எழுந்தருளிப் பல திருப்பதி களும் பணிந்து பரவிக் கொண்டு, திருமுதுகுன்றினை அடைந்து, நம்பர் சேவடிகளை ஆராத காதலுடன் வணங்கிப் பதிகங்கள்பாடி சிலநாள் அங்கிருந்து, பெண்ணாகடத்தை யெய்தி, அங்கே திருத் தூங்கானைமாடம் என்னும் கோயிலில் வீற்றிருக்கும் சுடர்க் கொழுந்தாகிய பெருமானைப் பணிந்து தமிழ்மாலை பாடி, நெல் வாயிலரத்துறைக்குச் செல்ல விரும்பி, தந்தையாரின் தோள்மே லிருத்தலை ஒழிந்து, அவர் மனம் வருந்தும்படி, அந்தணர் முத லாயினோர் சூழ்ந்து செல்ல விரைந்து ஏகினார். அவர் திருவடித் தாமரையும் பையப்பைய நொந்தது. இவ்வாறு சென்று, மாறன் பாடி என்னும் பதி நேர்பட, வழி நடந்த வருத்தத்தினாலே திரு வைந்தெழுத்தை ஓதிக்கொண்டு அங்கே எய்தினர். அப்பொழுது வெய்யோன் மேல் கடலில் மூழ்கினான்.

அன்றிரவு பிள்ளையார் அடியார்களோடும் அப்பதியிலேயே தங்கினார். திருவரத்துறையில் வீற்றிருக்கும் சிவபெருமான் காழிப் பிள்ளையாரின் வழி வருத்தத்தைத் திருவுளத் தடைத்து, அவர் ஏறுதற்கு முத்துக் குடையும், ஊதுதற்கு முத்துச் சின் னங்களும் கொடுத்தருளத் திருவுளங் கொண்டு, திருநெல்வாயிலி லிருக்கின்ற மறையோரெல்லாருக்கும் தனித்தனியே கனவிலே தோன்றி, 'ஞான சம்பந்தன் நம்பால் அணைகின்றான்; நீங்கள், முத்துச் சிவிகையும் முத்துக் குடையும் முத்துச் சின்னங்களும் நம்மிடத்தில் எடுத்து அவனை யடைந்து கொடுங்கள்' என்று அரு ளிச் செய்தனர். உடனே அந்தணரெல்லாரும் விழித்தெழுந்து, ஒருங்கு கூடி, மகிழ்ந்து, அற்புதமெய்திய சிந்தையோடும் கோ யிலை வந்தடைந்து, திருக்கோயிற் பணியாளர்களுக்கும் அவ்வரு ளுண்டானமை யறிந்து வியந்து, திருப்பள்ளி யெழுச்சிக் காலம் வர, திருக்காப்பை நீக்கி, முத்துச் சிவிகையையும் முத்துக் குடையையும் முத்துச் சின்னங்களையும் கண்டு, களிப்பு மிகுதி யால் ஆரவாரித்து, பலவகை வாத்தியங்களும் ஒலிக்க, அடியார்க ளுடன், அவற்றைச் சுமந்து கொண்டு ஆளுடைய பிள்ளையாரிடத் திற்குப் போனார்கள். அதற்கு முன், பரமசிவன் பிள்ளையார்க்கும் கனவிலே தோன்றி 'அரத்துறையில் வீற்றிருக்கும் வள்ளலாகிய

நாம் மகிழ்ந்து அளிக்கும் முத்துச் சிவிகை முதலியவற்றை நீ ஏற்றுக் கொள்ளுதல் தகும்' என்று உள்ளவாறு அருளிச்செய்ய, பிள்ளையார் விழித்தெழுந்து, தாம் கனவிற்கண்ட பேரருட் பண்பினைத் தந்தையார்க்கும் அடியார்களுக்கும் அருளிச்செய்து, வைகறையிலே செய்வினை முற்றி, வெண்ணீறு அணிந்து, திருவைந்தெழுத்தை ஓதிக்கொண்டு எழுந்தருளினர். பரிதி வானவனும் புகலி வேந்தரைச் சிவிகையின்மேல் ஏற்றிடக் காதலித்தவன் போலத் தேரின்மீது வந்து தோன்றினன். அப்பொழுது அந்தணர்களும் சிவனடியார்களும் அர அர என்னும் முழக்கத்துடன் முத்துச் சிவிகை முதலியவற்றைத் தாங்கிக்கொண்டு எதிரே வந்து, 'இவை திருவரசத்துறையில் வீற்றிருக்கின்ற முதல்வர் தந்த பேரருளாகும், ஏற்றருள்வீர்' என்றுகூறி, இறைவர் தங்களுக்கு அருளிச் செய்தவற்றை ஒன்றும் ஒழியாமல் உரைத்தார்கள். பிள்ளையார் அவற்றைக் கேட்டு, அக்கடவுளின் திருவருளை "எந்தையீசனெம் பெருமான்" என்னுந் திருப்பதிகத்தினுலே பாடி,

> "சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்
> மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்
> றோதியா ரருள் ஆதலின் அஞ்செழுத்
> தோதி யேறினர் உய்ய உலகெலாம்"

ஆளுடைய பிள்ளையார் முத்துச்சிவிகையை வலம்வந்து நிலமிசை விழுந்து வணங்கி யெழுந்து, திருவைந் தெழுத்தை ஓதிக் கொண்டு, உலகமெலாம் உய்யும்படி, அதில் ஏறியருளியபொழுது சிவனடியார்க ளெல்லாரும் ஆரவாரித்தார்கள்; மறையோர்கள் வேத முழக்கஞ் செய்தார்கள்; வானோர்கள் ஆரவாரித்து மலர் மழை பொழிந்தனர்; பலவகைப்பட்ட மங்கல வாத்தியங்கள் ஒலித்தன. வளர் மதியானது பாற்கடலில் உதித்தாற்போல முத்துச் சிவிகையில் ஏறியருளிய கருணை வள்ளலாகிய **திருஞான சம்பந்தப் பிள்ளையார்**, மேலே முத்துக்குடை நிழற்றவும், அடியார்களும் மறையோர்களும் முதலாயினோர்கள் நெருங்கி உவகை மிகுதியாற் கூத்தாடித் தங்கள் தங்கள் கண்களினின்றும் பொழிகின்ற புனல் வெள்ளத்திற் குளிக்கவும், முத்துச் சின்னங்கள் "ஏழுலகங்களும் அடியார்களும் மறைகளும் உய்யும்படி ஞான சம்பந்தர்

வந்தார்; உலக முழுதும் நிறைந்திருக்கின்ற உமா தேவியார் ஞானப்பாலூட்ட உண்டருளிய பாலறுவாயர் வந்தார்; வேதமுதலிய கலைகளனைத்தையும் ஓதா துணர்ந்த முத்தமிழ் விரகர் வந்தார்'' என்று ஊதவும், சென்று, திருவாத் துறையை அடைந்து, கோபுர வாயிலுக்கு தூரத்திலே முத்துச் சிவிகையினின்றும் இறங்கி, வணங்கி யெழுந்து, திருக் கோயிலினுள்ளே புகுந்து, வலஞ்செய்து திருமுன் பணிந்து, இறைவன் றிருவருளைப் பலவாறு பரவிப் பதிகம்பாடி, சிலநாள் அப்பதியிலே எழுந்தருளி யிருந்தார். இருக்கு நாளிலே, திருநெல் வெண்ணெய் முதலிய பதிகளுக்கு அன்பர்களுடன் சென்று தொழுது திரும்பினர்.

(தொடரும்)

---

# திருவள்ளுவர் சித்தாந்த சைவர்

[கோரடாச்சேரி - ஸ்ரீலஸ்ரீ வாலையானந்தசுவாமிகள்]

(ருகஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

"பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு"

"செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது"

"புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற"

"நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று"

"நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு"

"கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு"

"தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
றாமரைக் கண்ணா னுலகு"

"புலத்தலிற் புத்தே ணாடுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து"

என்ற திருக்குறள்களால் துறக்கம் உண்டென்று கூறுதலானும்,

"அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்"

"அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்"

"அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
வின்னா வுலகம் புகல்"

"உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல் செய்யா தளறு"

என்ற திருக்குறள்களால் நிரயத்தைக் கூறுதலானும்,

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்"

"பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு"

"அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்"

"செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா
னல்விருந்து வானத் தவர்க்கு,"

"அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்"

"அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ
டவ்வையைக் காட்டி விடும்"

"நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு"

"கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட் டவர்க்கு"

"கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று"

"மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு"

"அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொன் மாலுமென் னெஞ்சு"

"பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு"

என்ற திருக்குறள்களால் தேவர்க ளுண்டெனக் கூறுதலானும்,

"உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்"

என்ற திருக்குறளால் அலகை யுண்டெனக் கூறுதலானும்,

"எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு"

"உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு"

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து"

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்"

"ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து"

"இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும்"

"இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்"

என்ற திருக்குறள்களால் மறுபிறப்புக்கள் உண்டெனக் கூறுதலானும்,

"மன்னுயி செல்லாந் துயிற்றி யளித்திரா
வென்னல்ல தில்ல துணை"

என்ற திருக்குறளால் சங்காரமும் அநுக்கிரகத்தின் பொருட்டே யெனக் கூறுதலானும்,

"மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்"

என்ற திருக்குறளால் வேதத்தை யுடம்படலானும்,

"பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்"

என்ற திருக்குறளால் சிவாகமத்தை யுடம்படலானும்,

"அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்"

"குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்"

"கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்"

என்ற திருக்குறள்களால் வருண பேதங்களைக் கூறுதலானும்,

"இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை"

"அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிப்
போஒய்ப் பெறுவ தெவன்"

"அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று"

"வேண்டி னுண்டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல"

"தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்"

என்ற திருக்குறள்களால் ஆச்சிரம பேதங்களை உடம்படலானும்,

"அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின்"

என்ற திருக்குறளால் கன்ம பேதங்களாகிய நல்வினை தீவினை களைக் கூறுதலானும்,

"ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு
மெண்ணிற் றவத்தான் வரும்"

"வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்"

என்ற திருக்குறள்களால் திருஷ்டஜன்ம போக்கிய கன்மமும்,

"சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந் தரும்"

என்ற திருக்குறளால் திருஷ்டாதி திருஷ்டஜன்ம போக்கிய கன்ம மும்,

"தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது"

என்ற திருக்குறளால் அதிருஷ்ட ஜன்ம போக்கிய கன்மமும் உண்டெனக் கூறுதலானும்,

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை"

"இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்"

என்ற திருக்குறள்களால் கன்ம பேதத்தால் போகபேதங் கூறுதலானும்,

"எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும்"

"பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்"

"துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால
வூட்டா கழியு மெனின்"

"எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகு மாந்தர் பலர்"

என்ற திருக்குறள்களால் கன்மபலன்கள் அனுபவமானது நிச்சயமென்று கூறுதலானும்,

"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது"

என்ற திருக்குறளால் இறைவனே கன்மபலனைக் கொடுப்பனெனக் கூறுதலானும்,

"அல்லவை தேயவறம் பெருகு நல்லவை
நாடி யினிய சொலின்"

என்ற திருக்குறளால் ஒருவினைக்கு மற்றோர் வினையால் கூறுதலானும்,

"அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை"

"வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்"

என்பது முதலிய திருக்குறள்களால் தருமத்தைச் செய்ய வலி யுறுத்தலானும்,

"இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
றுணைத்துணை வேள்விப் பயன்"

"உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து"

"தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்"

என்ற திருக்குறள்களால் தருமத்துக்குப் பாத்திரா பாத்திரத்தை யுடம்படலானும்,

"இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
றுணைத்துணை வேள்விப் பயன்"

"அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று"

"செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி
னான்றாரோ டொப்பர் நிலத்து"

என்ற திருக்குறள்களால் வேள்வியை யுடம்படலானும்,

"மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு"

"உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல் செய்யா தளறு"

"அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று"

"பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு"

என்ற திருக்குறள்களால் சீவகாருணியம் அவசிய மென்றும், வேள்வியினுஞ் சிறந்த தென்றுங் கூறுதலானும்,

"அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல்"

"அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லா கியாங்கு"

என்ற திருக்குறள்களால் மோட்ச லோகத்தை யடைய உயிர்க ளிடத்து அருள் பாலித்தல் அவசியமெனக் கூறுதலானும்,

"எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்"

"தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு
டந்தம் வினையான் வரும்"

"குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு
நாணுடையான் கட்டே தெளிவு"

"தோரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்"

"கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும்"

என்ற திருக்குறள்களால் ஒருவன் செய்த வினை அவனைச் சார்ந் தார்க்கு மாகு மெனக் கூறுதலானும்,

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்"

என்ற திருக்குறளால் தேவலோகங்களுக்கு அப்பாற்பட்டு மேலுள்ளது முத்தியுலக மெனக் கூறுதலானும்,

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானா மாணாப் பிறப்பு"

என்ற திருக்குறளால் நித்தியா நித்திய வஸ்து விவேகங் கூறுதலானும்,

"யாதனின் யாதனி னீங்கியா னோத
லதனி னதனி னிலன்"

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்"

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

"இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு"

"காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்"

"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி"

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்"

"இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்"

"ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்"

"உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து"

"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு"

"ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து"

"அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு"

"சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு"

"தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்"

என்ற திருக்குறள்களால் முத்தி யடைதற் குரிய சிறந்த சாத னங்களைக் கூறுதலானும்,

"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

என்பது முதலிய திருக்குறள்களால் மனதாற் செய்யப்படும் வழி பாட்டையும்,

"இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"

என்ற திருக்குறளால் வாக்காற் செய்யப்படும் வழிபாட்டையும்,

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்"

"கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை"

என்ற திருக்குறள்களாற் காயத்தாற் செய்யப்படும் வழி பாட்டையும் கூறுதலானும்,

"சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்"

"காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்"

"இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு"

என்ற திருக்குறள்களால் பெத்தநீக்கமும் முத்திப்பயனுங் கூறுதலானும்,

"விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு"

என்ற திருக்குறளால் முத்தியிலும் முப்பொருளும் முதல்வன் உபகாரமு முண்டென்று கூறுதலானும்,

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவனடி சேரா தார்"

"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

என்ற திருக்குறள்களால் அடிசேர் முத்தியாகிய சித்தாந்தமுத்தியைக் கூறுதலானும் திருவள்ளுவ நாயனார் சித்தாந்தசைவ ரென்பது தேற்றம்.

முற்றும்

---

# த னி த் த மி ழ்

[ராமசுப்பிரமணிய நாவலர்]

தமிழ் பிறமொழிகளின் உதவி சிறிதுமின்றி இயலுந் தன்மைத்தாய தெய்வமொழியே யென்பது முற்றக்கற்ற வல்லுநர்க்கு எவ்வாற்றானு முடன்பாடே. ஆயினும், இஞ்ஞான்று நந்தமிழ் அடைந்துள்ள நிலைமையை நோக்கித் தனித்தமிழ் எனக் கூற வேண்டுவ தாயிற்று. பண்டை இலக்கியங்களில் தமிழ்மொழி இயல்பிற் றவழ்ந்தது என்பதும் அஞ்ஞான்று வடசொற்கள் மிகவும் அருகி வழங்கின என்பதும் ஆய்ந்துணர்வார்க்குத் தெள்ளிதிற் புலப்படும். பிற்றை ஞான்று எழுந்த இலக்கியங்களில் வடசொற்கள் உரிமை பெற்று வழங்குவனவாயின. இஞ்ஞான்று வரையப்பட்டுள்ளனவாய நூல்களின்கண் வடசொற்கட்கு மிக மிக உரிமை ஏற்பட்டுள்ளன. சில நூல்கள் 'இவை தமிழ் மொழியா னியன்றனவோ வடமொழியா னியன்றனவோ இன்

றேல் அவ்விரு மொழியுங் கலந்த ஒருமொழியா னியன்றன வோ' என ஐயுறும் வண்ணந் திகழ்கின்றன. ஆகலின், இஞ் ஞான்று 'தமிழ்' எனப் பொதுப்படக் கூறின் 'அஃது எத்தமிழ்? தனித் தமிழா, வடசொற்கலந்த தமிழா?' என ஐயுறுதற் கிட னுண்டா மாகலின் 'தனித்தமிழ்' எனப் பொருள் கோடலும் பொருந்து மென்க.

தமிழ் என்னுஞ்சொல் முறையே வல்லின மெல்லின இடை யினங்களைப் பெற்ற ஓர் பெயர். இச்சொற்கு 'இனிமை' என் னும் பொருள் மிகப் பொருத்த முடைத்து. இதனைத் 'தமிழ்ப் பாட்டிசைக்குந் தாமரையே' எனக் கம்பர் கூறியவாற்றானு முணர்க. தமிழ்மொழி எனின் இனிமையான மொழி, இனி மையைப் பயக்கு மொழியெனப் பொருள்படும். அத்தகைய இனிமையைப் பயக்கு மொழிக்குப் பிறமொழிச் சொற்கள் பொருந்துவன வல்ல. பிறமொழிகள் இத்தமிழே போன்று இன் பம் பயக்க வல்லன வாயின் அவையும் இன்மொழி என்னும் பெயர்க் குரிமையுடையனவாம். அஃதின்றாகலினானும் தமிழ் ஒன்றனையே இன்மொழி எனக் கூறுப வாகலானும் அவை இன் மொழிகளல்ல வென்பதும், ஆகவே அவற்றினியலுஞ் சொற் கள் எவ்வாற்றானும் நந்தமிழ்க்கு இயைவனவாகா என்பதும் பெறப்படும். கூறுதற்கெளிய வல்லாத வடசொற்கள் தமிழில் இடம் பெறுவது தமிழுக்கே இழுக்கை உண்டு செய்யுமாகலின் அவற்றை நீக்குதன் முறைமையாகும். இன்னும், தமிழ்மொழி எனின் தனிமொழி எனப் பொருள் படுமாகலின் அத்தனிமொழி யைக் கலப்புமொழி யாக்கல் பொருத்த முடைத்தன்று. தமிழ் மொழி தனித்தியலுந் தன்மை உடைத்து என்பது முற்படக் கிளந்த பொற்புடைநூல்கள் பலவற்றானு முணரப்படும்.

தொன்னூலாசிரியர்கள் செய்த நூல்களினும் வடசொற்கள் அருகிவந்துள்ளனவேனும் அவையெல்லாம் ஒவ்வோர் கருத் தைக்கொண்டு எழுந்தனவாம். இலக்கணக் குறியீடுகளிற் சில வும் பிறசில சொற்களும் வடமொழியினின்றும் எடுக்கப் பட்டுள் ளன. அவற்றைத் தொல்லாசிரியர்கள் மாற்றத் துணிந்திலராகலின்

அவ்வாறே வழங்கிவருவனவாயின. அவற்றையுந் தமிழ்ப் படுத்துதல் பலவாற்றானும் நன்றே எனினும் தொன்னூலோர் அது கருதிற்றிலர். 'சிவம்' என்னுஞ் சொல் வடசொல்லாயிருப்பவும் அதனைத் திரிபு படுத்தற்குத் தமிழ்நூலோர் கருதிற்றிலர். அஃது இறைவனது பெருமைகளையும் பிறவற்றையும் ஆற்றலின் விளக்குவதாகலினானும் உண்மை உணர்ந்த பெரியார்க்கெல்லா மதுவே உடன்பாடாய் முடிந்தமையானும் பிறவற்றானு மதனைத் தமிழ்ப் படுத்தல் செய்திலர். இதுபோன்ற சொற்கள் பலவுள. அவையெல்லாம் வடமொழிநெறிக் கியைந்து கூறுதற்கண்ணே இயைவன வாகலான் அவற்றை அங்ஙனமே தமிழில் எழுதுவதாயிற்று. அவை நீக்கற் குரியனவல்ல என்பது கருதற் பாற்று. நீக்கினும் நலம் பயப்ப தாயினும் அவற்றிற்கு மாறாக இடப்படுந் தமிழ்க் குறியீடுகள் அவற்றின் பொருண்மையை விளக்குமாறு செய்தல் எளிதன்று. அவைகள் அப்பொருண்மை பட்டு நிலவுதற்குப் பெருமுயற்சியும் நீண்ட காலமும் இன்றியமையாதனவாம். நிற்கத், தமிழ் மொழியின் நெறியே தமிழ் மக்கள் ஒழுக்க முறைமைகளைக் குறித்து எழுதப்படும் நூல்களில் வடசொற்கள் எவ்வாற்றானுங் கலத்தற்கிடனின்று. இந்நுட்பம் முன்னூல்களினும் வடமொழி வழக்குக் கூறப்படாத அஃதாவது தமிழ் மக்கள் கடைப்பிடித்த வழக்க ஒழுக்கங்களைக் குறித்துக் கூறப்பட்ட இடங்களில் நன்காராயின் வெளிப்படு மென்க.

இஃதிவ்வாறாக, இஞ்ஞான்று எழுகின்ற நூல்களில் ஒரு நெறியின்றி வடசொற்கள் கலப்ப வாயினவாறு காண்பாம். வடசொற்கட்குத் தகுந்த தமிழ்ச்சொற்கள் இருப்பவும் அவற்றை இயையாதன போன்று நீக்கிவிட்டு வடசொற்களை மிக முயன்று தேடித் தீட்டுதல் இஞ்ஞான்று பெரும்பான்மையோருக்கும் வழக்கமாயிற்று. சீவிதம், ஞானம், சுகம், கருணை, புத்தகம் முதலிய வடசொற்கட் கியைந்த வாழ்க்கை, அறிவு, இன்பம், அருள், நூல் என்னுந் தமிழ்ச் சொற்க ளிருப்பவும் சிலர் அவற்றை நோக்குகின்றிலர். வடசொற்களை நீக்க வேண்டுமிடத்து நீக்கித் தமிழைத் தூய்மைப்படுத்தல் கடமையாகவும் அதனை எண்ணாது மேன்மேலும் வடசொற்களையே கொண்டு நூல்களை முடிக்க

விரும்புகின்றனர் சிலர். இது நந்தமிழுக்குற்ற இடுக்கண் என்றே கூறவேண்டும். திருக்குறள் முதலிய தொன்னூல்களிலும் வட சொற்கள் கலந்துள்ளன என்று அவர் கூசாது கூறுமொழிகள் அவர்க்கேற்ற உரையே யாமன்றி எல்லாரானும் ஏற்றுக்கொள் ளத் தக்கனவல்ல. திருக்குறள் முதலிய நூற்களில் கலந்துள்ள வடசொற்கள் இடநோக்கிச் சேர்க்கப்பட்டன வென்பதும் அவற்றை நீக்கி எழுதல் எளிதன்று என்பதும் நோக்கத் தக்கன. திருக்குறள் முதலிய நூற்களில் வடசொற்கள் எத் துணை அருகிவந்துள்ளன என்பதும் பிற்காலத்தாரது நூல்களில் அவை எத்துணைப்பெருகி வந்துள்ளன வென்பதும் ஆராயத் தக் கன. ஆகலின், திருக்குறளையும் அதுபோன்ற நூல்களையும் பின் ஞேர் எடுத்துக் காட்டுவது பொருத்த முடைத்தன்று. சிலர், 'இஞ்ஞான்று வடசொற்கள் மிகப் பயிலத் தொடங்கின வாகலின் அவற்றை நீக்காது பேணுவதே நன்று' என்கின்றனர். அதனி னும் அவற்றை நீக்கி நந்தமிழைப் பேணுவதன்றோ மேல்?

வடசொற்களைத் தமிழினின்றும் நீக்குவது நினைந்த அப் போழ்தே முடிவதன்று. எனெனில், பெரும்பான்மையோரும் அவற்றிற் கேற்ற தமிழ்ச்சொற்களையே அறியாதிருக்கின்றனர். ஆயினும், எளிதில் நீக்கத் தகுவனவற்றை முதன் முதல் நீக்கிக் கோடல் வேண்டும், பின்னர், முந்தை நூல்களில் வரக்கண்ட வடசொற்களை மட்டுமே வழங்குதற்கும் பிறவற்றை நீக்குதற்கும் முயறல் வேண்டும். முந்தையோர் வழங்கிய வடசொற்கள் பெரும்பான்மையும் தற்சமம் தற்பவம் என்னும் குறியீடுகளினுள் தற்பவத்துள் அடங்கியுள்ளன. சிறுபான்மையே தற்சம சொற் களாயுள்ளன. "பொதுவெழுத் தானுஞ் சிறப்பெழுத்தானு— மீரெழுத் தானுமியைவன வடசொல்" எனக் குறிக்கப்பட்டவற் றுள் பொதுவெழுத்தானும் ஈரெழுத்தானு மியைந்தன வற்றையே பண்டையோர் பெரும்பான்மையுங் கொண்டனர். சிறப் பெழுத் தானியைந்தன மிக மிக அருகியுள்ளன. மேற்போக்காய் நோக்குவார்க்கு அவை புலப்படா வென்க. ஏனையிரண்டும் ஈண் டுக் காண்பாம்.

'காமம் வெகுளி மயக்கம்' 'நாமங் கெடக்கெடுநோய்' 'அமராமைக் காரண மின்றிவரும்' 'மதி நுட்ப நூலோடுடையார்க்கு, 'அதி நுட்பம் யாவுள முன்னிற்பவை' எனத் திருக்குறளில் தற்சம வடசொற்கள் வந்தன. 'ஆதி பகவன்' 'குண மென்னுங் குன்றேறி நின்ருர்' 'சமன் செய்து சீர்தூக்குங் கோல்போல்' எனத் தற்பவ வடசொற்கள் வந்தன. இன்னும் ஆராய்ந்து காண்க. 'எரிவாய் நிரயத்து வீழ்வர் கொல்' 'காரண மின்றிப்பலவு முள, என்றும் 'மதுர மிலாளர்தொடர்பு' 'பந்தமிலாளர்தொடர்பு' என்றுந் தற்சம தற்பவ வடசொற்கள் நாலடியாரிற் கூறப்பட்டன. 'மொழி முதற் காரணம்' 'விகார மனைத்தும்' 'நாமங் குறிப்பின்' எனவும், 'பதம்புணர்பு' 'தான முயற்சி' 'குணத்தொகை' எனவும் நன்னூலிற் கூறப்பட்டன. 'அந்தமில் சிலதியர்' 'மதிவளர்சடைமுடி மழுவலாளன்' 'கமலங்கள் பலவுங்கண்டார்' 'மேருமால் வரையையும்போன்ருன்' எனவும் 'சந்தனவனமல' 'பூமியுமயோத்திமா நகரம் போலுமே' 'மகிதலத் திடை.' 'பள்ளி நீங்கிய பங்கயப் பழனம்' எனவும் கம்பராமாயணத்துக் கூறப்பட்டன. இவ்வாறன்றி வடசொற்கள் மிகச் சிதைந்தும் வரும். 'அமிழ்தினுமாற்ற வினிதே' 'விச்சைமற்றல்லபிற' என்பன சிதைந்து வந்தன. புன்ருெழிலரக்கன்' 'மண்ணிற் றீய மானுயர்' 'அமுதேழக் கடைந்த தோளான்' கன்மத்தை ஞாலத்தவ ராருளரே கடப்பார்' என்பனவும் அவ்வாறு வந்தன. 'அரங்கமானகருளான்' 'இரவிதன் குலத்து' 'உருவத்தானீண்ட' என்பன 'ரவ்விற்கம் முதலாமுக் குறிலும்' என்னுஞ் சூத்திரவிதி பற்றிவந்தன. 'அற்புதனுராயணன்' 'கற்பகச் சோலை' என்பனவற்றுள் தகர லகரங்கள் றகரமாகத் திரிந்தன. இன்னும் வடசொற்கள் பலவாருகவுந் திரிந்து வழங்கும். அவற்றையெல்லாம் இலக்கியங்களிற் கண்டு தெளிக. அவற்றுட் சிலவற்றிற்கு இலக்கண நூலார் விதியுங் கூறினுர். அது கண்டு கொள்க.

பண்டை நூல்களில் தற்பவச்சொற்களே பெரும்பான்மையும் வந்துள்ளன வென்பது அவற்றைக் கூர்ந்தாய்வார்க்கு எளிதின் விளங்கும். ஆகலின், தற்சம சொற்களை நீக்கி எழுதல் நன்றெனக. தற்பவத்தினும் சிறப்பெழுத் தானே இயைந்த

மொழிகளு மவ்விலக்கியங்களில் மிக மிகக் குறுகியே வந்துள்ளன வாகலின் அவற்றையும் நீக்கி எழுதுதல் வேண்டும். நன்மை பயக்கும் நெறிகள் பலவும் முந்தையோரால் கண்டுபிடிக்கப் பட்டன. அவற்றின் வழியே சேறல் பிற்காலத்தவர்க்கும் நன்றென்க. பிற்கால இலக்கியங்களாய கம்பராயணம், மகாபாரதம் முதலியவற்றில் வடசொற்கள் பல்கியுள்ளன. பாரதத்தினுள் வடசொற்கள் மிகவுரிமை பெற்றுள்ளன. ஆகலின், அக்கால முதற்கொண்டே வடசொற்கள் தமிழில் இயல்பாய் வந்து வழங்கத் தொடங்கின என்பது போதரும். இக்காலத்து வடசொற்கள் பல்கிவிட்டன. வடமொழித் தொடர்களிலுஞ் சில அவ்வாறே எழுதப்படுகின்றன. இனிச் சின்னாட்கட்குள் தமிழ் என்பதின்றி வடமொழியே ஒருவாற்றாற் றிரிந்து நிலவக் கூடிய நிலைமை வந்துவிடும் போலும்! வடசொற்களை நீக்கவேண்டுமிடத்து நீக்கித் தமிழைத் தூய்மைப் படுத்துதலே இனித் தமிழ்ப் புலவர்க்குரிய இன்றியமையாக் கடப்பாடாகும். தமிழின் மேன்மையைக் கருதுவார் அதிற் கருத்திறக்கு வாராக.

---

# தம்பிரான் றோழர்

[இ. மு. சுப்பிரமணிய பிள்ளை]

(ஙாரு - ம் பக்கத் தொடர்ச்சி.)

அங்கே இறைவர் திருமுன் சென்று அவரடிக் கீழ் மும்முறை வணங்கி, உமையாள் கொண்ட தவங்கண்டு, குறிப்பினுடன் சென்று, அவள்தன் குணத்தினை நன்கறிந்து விரும்பு வரங் கொடுத்து அவளை வேட்டருளிச்செய்த விண்ணவர்கோன் செருமேவு சலந்தரனைப் பிளந்த சுடராழி செங்கண் மலர் பங்கயமாச் சிறந்தானுக்கு அருளி, இருள் மேவும் அந்தகன்மேல் திரிசூலம் பாய்ச்சி இந்திரனைத் தோள் முறித்த இறைவன், இண்டை மலர் கொண்டு மணலால் இலிங்கம தியற்றி இனத்தாவின் பாலாட்ட இடறிய தாதையை தாள் துண்டமிடு தண்டியடி அண்டரெலாம் தொழுதேத்த தொடர்ந்தவனைப் பணிகொண்ட விடங்

கன், மலே மடந்தை விளேயாடி வளேயாடு காத்தால் மிக மகிழ்ந்து அவன் கண் புதைத்தலுமே உடன் உலகெங்கும் வல்லிருளாய் மூட அவ்விருளோமெ் வகை நெற்றி ஒற்றைக் கண் படைத்து வந்த உத்தமன், ஊர் வினவில் சொற்பால பொருட்பால சுருதி ஒரு நான்கும் தோத்திரமும் பல சொல்லித் துதித்து இறை தந் திரத்தே கற்பாரும் கேட்பாருமாய் எங்கும் நன்கார் கலேபயில் அந்தணர் வாழும் கலேய நல்லூர் காணே பெற்றிமை யொன்றறி யாத தக்கனது வேள்வியிற் சேர்ந்த பெருந் தேவருள் எச்சனது சிரமும் இந்திரன் தோளும் ஞாயிற்றின் பல்லும் அங்கியின் கர மும் பகனின் கண்ணும் பீடழியச் செற்று திருவிரலால் மதிக்கலே சிதையத் தேய்வித்து அருள் பெருகு சிவபெருமான், இலங்கை யர் கோன் சிரம் பத்தோடு இருபது திண்தோளும் இற்று அலற ஒற்றை விரல் வெற்பதன்மேல் ஊன்றி நிலமும் நீரும் நெருப் பொடு கால் விண்ணுகி நிற்பனவும் ,நடப்பனவுமாம் பெருமான், பொரும் வலியதுடை யசுரன் தாருகனேப் பொருது பொன்று வித்த பொருளினே முன் படைத்து வந்த புனிதன், எழுந்தருளும் ஊர் வினவில் முல்லேயொடு மல்லிகை செண்பகமும் விரைபொ ருது வருபுனல் சேர் அரிசிலாற்றின் தென் கரைமேல் சோலே மலி குயில்கூவ கோல மயிலால சுரும்பொடு வண்டிசை முரல பசுங்கிளி சொற்றுதிக்க காலேயிலும் மாலேயிலும் கடவுளடி பணி ந்து கசிந்த மனத்தவர் பயிலும் கலேய நல்லூர் காணே'' என்று திருப்பதிக மெய்ம்மைப் புராணம் பலவும் மிகச் சிறப்பித்து இசையின் விளம்பினர். அங்கு நின்று புறப்பட்டு திருக்குடமூக் கணேந்து பணிந்து பாடிப்போய், திருவலஞ் சுழியை மருவி பெருகும் அன்புருகத் தங்கு காதலுடன் வணங்கி சொல்லரசாம் அப்பருக்குப் பெருமானர் அடியளித்த திரு நல்லூரைச் சென் றடைந்தார்.

திருநல்லூ ரிறைவர் திருவடி போற்றி வழியே இருந்த நம் பர் பதி பலவும் இறைஞ்சித் திருச்சோற்றுத் துறையைச் சேர்ந் தார். அங்கே திருக்கோவிலே வலங்கொண்டு உள்ளேபோய் அன்பு மீதூர, "கோல அரவும் கொக்கின் இறகும் மாலே மதியும் வைத்தான், ஓதக்கடல் நஞ்சினே யுண்டிட்ட பேதைப் பெரு

மான் பேணும் பதியாம் சிறந்தார் சுற்றம் திரு என்றின்ன துறந்தார் சேரும் சோற்றுத் துறையே.

"இலையா லன்பால் ஏத்து மவர்க்கு
கிலையா வாழ்வை நீத்தா ரிடமாம்
தலையாற் றாழும் தவத்தோர்க் கென்றும்
தொலையாச் செல்வச் சோற்றுத் துறையே"

என்று அம் சொற் பதிகம்பாடி யருளிக் காதல் கூரப் பரவினர். அங்கே எம்பெருமானுடைய திருவருள் பெற்றுப் போந்து, சுந்தரனர் தேவர் பெருமான் மகிழ்ந்துறையும் திருக் கண்டியூர், திருவையாறு, திருப்பூந்துருத்தி முதலிய பதிகளை வணங்கிக் கொண்டு திருவாலம் பொழிலை யடைந்து பணிந்து இரவில் அங்கே பள்ளி கொண்டிருந்தார். அப்போது சிவபெருமானர் அவருடைய கனவிலே தோன்றி "மழ பாடியினில் வருவதற்கு நினைக்க மறந்தாயோ" என்று கூறித் தம்முடைய குழகாகிய கோலத்தை எதிரே காட்டி யருளினர். உடனே நம்பியாரூரர் விழித்தெழுந்து தம்பெருமான் திருவருளை வியந்து காவிரியாற்றின் வடபாலேறி நெடுமாட அழகார்வீதி மழபாடி யணைந்தார்.

(தொடரும்)

---

# திரிபதார்த்த சிந்தனை

(௪௨௫ - ம் பக்கம் தொடர்ச்சி)

தம்முடைய நினைவின்படி படைப்பாரானல் ஒரேவித வடிவமாகப் படைக்கவேண்டும். அப்படிப் படையாமல் பலவித வடிவமாகப் படைக்கிற படியினலே தம்முடைய நினைவின்படியே படைப்பாரல்லர். ஆன்மாக்கள் நினைவின்படியே படைப்பாராயினர். ௧௩

வண்ணான் புடவையிலுள்ள அழுக்கை உவர், சாணி இவைகளைக் கூட்டிப் போக்குகிறதுபோல் சிவன் ஆன்மாக்களுக்குத் திரும்பத் திரும்ப மாயா கருவிகளைக் கொடுத்துக் கன்மத்தைக் கூட்டி ஆணவமலத்தைப் போக்குவார். ௧௪

மலபரிபாகமாவது: மலம் - ஆணவமலம், பரி - உபசர்க்கம், பாகம் - வேறுபடுதல், ஆன்மாவுக்குப் பக்குவம் வந்த காலத்தில் மலசத்தியானது ஆன்ம ஞானத்தை மறையாதிருத்தலாம். கரு

சத்திநிபாதமாவது : சத்தி - சிவசத்தி, நி - உபசர்க்கம், பாதம் - பதிதல், மலம் நீங்கின ஆன்மாவில் சிவஞானம் விளங்கித் தோன்றுதல். கசு

இருவினையொப்பாவது: உலகத்தார், திரணம், பதர் முதலியவற்றைக் கண்டாற்போல் பக்குவ ஆன்மாவானவன் நல்வினையிலும் விருப்பு வெறுப்பின்றி யிருத்தலாம்.

உலகத்தார் விரும்பப்பட்ட பதார்த்தங்கள்: பொன், பால், சீனி, பழம், பட்டு, பெண் முதலியன. வெறுக்கப்பட்ட பதார்த்தங்கள்: புலி, பாம்பு, தரித்திரம், சயவியாதி முதலியன. விருப்பு வெறுப் பில்லாத பதார்த்தங்கள்: திரணம்,பதர் முதலாயின. கஎ

இருவினை யொப்புக்கு மேலும் ஒருவமை வருமாறு:

ஒருவன் தன் வைப்பாட்டிக்கு வேண்டியயாவுமுதவி அவள் வீட்டில் பதினைந்து நாளும், தன் இல்லாளுக்கு வேண்டியன உதவி அவள் வீட்டில் பதினைந்து நாளுமாகவிருந்து அனுபவித்து வருகையில், அறநூல் கேட்டுத் தன் மனைவியுடன் கூடி வாழ்வதே முக்கிய மென்றறிந்து வைப்பாட்டியை விட்டு நீங்கி, தன் இல்லாளோடு கூடி நெடுநாள் இல்லறம் நடத்திக் கொண்டு வருநாளில், துறவற நூல் கேட்டு அவ்வறமே முக்கியமென்றுணர்ந்து தன் மனைவியையும் விட்டு நீங்கிப் பின் இருவரையுஞ் சரியாகக் கண்டதுபோல் ஒருவன் நெடுங்காலம் பாவத்தையும் புண்ணியத்தையுஞ்செய்து கொண்டு வருகையில் அறநூல் கேட்டு, புண்ணிய முக்கியமென்றறிந்து பாவத்தை விட்டு நீங்கி, புண்ணியத்தை மாத்திரம் செய்து கொண்டு வரும்போது ஞானசாத்திரங் கேட்டுப் புண்ணியத்திற்கும் இறப்பு பிறப்பு உண்டென்றறிந்து புண்ணியத்தையும் பாவத்திற்குச் சரியென்றறிதலாம். ()

சிவன் ஆசாரிய மூர்த்தமாய் எழுந்தருளி வருவது எவ்வாறு?

விலங்குகள், பறவைகள் முதலியவற்றை அவ்வவற்றின் பார்வையாற் பிடித்தல்போல் மனிதரையும் தன் வயத்தாக்கிக்கொள்ளுதற் பொருட்டு அவர் மானிட வடிவம்போன்ற அறிவு மயமாகிய அருட்டிரு மேனிகொண் டெழுந்தருளுவர். ஆகையால் மானிட.வுருவாகிய அக்குருவடிவினைச் சப்ததாதுக்களாகிய நம் முடல் போலக் கருதல்கூடாது. கக

ஆன்மாவிற்கு மலநீங்குவது ஆசாரியர் சந்நிதானத்திற்கு வந்தபின்னோ? அல்லது வருவதற்கு முன்னோ? ஆசாரியர் சந்நிதானத்திற்கு வந்த பேருக்கெல்லாம் மலநீங்காதபடியினாலே வந்தபின் மலநீங்குவதன்று. வருமுன்னே மலநீங்கினால் ஆசாரியர் வேண்டுவதில்லையெனில் படலம் நீங்கின கண்ணுக்கு ஆதித்தன் காட்டுகிறதுபோல் மலநீங்கின பக்குவான்மாவிற்கு ஆசாரியரறிவிப்பார். ஆகையினாலே ஆசாரியர் சந்நிதானத்திற்கு வருமுன்னே மலநீங்கினதாம். உம

ஞானவான்களுக்குப் பிராரத்துவவினை யில்லை யென்பதற் கோருவமை வருமாறு:

ஒருவன் ஓரூரில் வெகுநாள் மணியம் பண்ணிக் கொண்டிருந்து வெகுவாய்த் தவசதானியங்களும் வாழை கரும்பு முதலானவைகளும் பெற்று அனுபவித்துக் கொண்டிருக்கையில் மணியமாறிப் புதுமணியகாரன் வந்தவிடத்துப் பழையமணியகாரன் முன்னனுபவித்ததில் ஒரு சிறிது மனுபவிக்க விசையாத தன்மைபோலாம். பழையமணியகாரன், ஊர், பதார்த்தம், புதுமணியகாரன் ஆக ச.

பழைய மணியகாரனைப்போலும் ஆன்மா, புதுமணியகாரனைப் போலுஞ் சிவன், ஊரைப்போலும் உடம்பு, பதார்த்தங்களைப் போலுஞ் சுகதுக்கங்கள். உக

ஆன்ம ஞானத்திற்கோ ருவமை வருமாறு:

கண், கண்ணொளி, கண்ணொளிக்குக் காணுங்குணம், காணுந்தொழில், இருள், பதார்த்தம், விளக்கு, விளக்கைச் செய்பவன் ஆக அ.

கண்ணைப்போலும் ஆன்மா, கண்ணொளியைப் போலும் ஆன்மஞானம், கண்ணொளிக்குக் காணுங் குணத்தைப்போலும் ஆன்மஞானத்திற் கறியுங்குணம், கண்ணொளிக்குக் காணுந் தொழிலைப் போலும் ஆன்ம ஞானத்திற் கறியுந்தொழில், இருளைப்போலும் ஆணவமலம், பதார்த்தங்களைப் போலுஞ் சுகதுக்கங்கள், விளக்கைப்போலும் உடம்பு, விளக்கை யுண்டாக்குகிற வனைப்போலுஞ் சிவன், விளக்கு நீங்கினபோது ஒழிந்தது காணுந்தொழி லொன்றுமே. விளக்குங் காணுந்தொழிலும் நீங்கினவாதலால் எஞ்சிநின்றவை யாறு பதார்த்தங்கள். உஉ

ஆன்ம வியாபகத்திற்கோ ருவமை வருமாறு:

படிகமலை, படிகமலைக்கு ஒளி, படிகஒளிக்குப் பற்றுங்குணம், படிக ஒளிக்குப் பற்றுந்தொழில், வன்னம், வன்னத்தைக் காண்பிக்கிறவன் ஆக ஆறு.

படிக மலையைப்போலும் ஆன்மா, அதன் ஒளியைப்போலும் ஆன்மஞானம், அந்த ஒளிக்குப் பற்றுங் குணத்தைப்போலும் ஆன்ம ஞானத்திற் கறியுங்குணம், அந்த ஒளிக்குப் பற்றுந் தொழிலைப்போலும் ஆன்மஞானத்திற் கறியுந்தொழில், வன்னத்தைப்போலு மாயாகருவி, வன்னத்தைக் காண்பிக்கிறவனைப் போலுஞ் சிவன்.

படிகமலையானது எந்தப் பக்கத்திலே வன்னத்தைக் காண்பித்தாலும் பற்றிக்கொள்வதுபோல் எல்லாப் புவனங்களிலும் வியாபிக்கும். ஆன்மாவிற்குக் கர்த்தா எந்தப் புவனத்தில் உடம்பைக் கொடுத்தாலும் அந்தப் புவனத்திலே பற்றிக்கொண்டறிவான். உங

ஆன்மவியாபகத்திற்கு மேலுமோ ருவமை வருமாறு:

அக்கினிமலை, அக்கினிமலைக்கு ஒளி, அந்த ஒளிக்குச் சுடுங்குணம், சுடுந் தொழில், பஞ்சு, பஞ்சைப் பற்றுவிக்கிறவன் ஆக ஆறு.

அக்கினிமலைபோலும் ஆன்மா, ஒளிபோலும் ஆன்மஞானம், ஒளிக்குச் சுடுந்தொழிலைப் போலும் ஆன்மஞானத்திற் கறியுந்

தொழில், பஞ்சைப்போலு மாய உடம்பு, பஞ்சைப் பற்றுவிக்கிற வனைப் போலுஞ் சிவன்.

அக்கினி மலையானது எந்தப்புறத்திலே பஞ்சைக் கொடுத்தாலும் பற்றிக்கொள்ளும். அதுபோல், எல்லாப் புவனங்களிலேயும் வியாபகமாயிருக்கும் ஆத்மாவிற்கு, கர்த்தா எந்தப் புவனத்திலே தனுவைக் கொடுத்தாலும் அந்தப் புவனத்திலே பற்றிக் கொண்டறிவான். உ௪

ஆன்மா சார்ந்ததின் வண்ணமாயிருப்பதற்கோருவமை வருமாறு:

ஆகாயமானது இருளோடுகூடினல் இருளாய்நிற்கும், ஒளியோடுகூடினல் ஒளியாய்நிற்கும். அதுபோல், ஆன்மா மலத்தோடு கூடினல் மலமாய்நிற்கும், சிவத்தோடுகூடினல் சிவமாய்நிற்கும்.()

சமுத்திர வியாபகத்திலே, வியாத்தமாயிருக்கிற தண்ணீரும், உப்பும் வியாப்பியமா யிருத்தல்போல, சிவனுடைய வியாபகத்திலே, வியாத்தமாயிருக்கிற ஆன்மாவும், மலமும் வியாப்பியமா யிருக்கும்.

சிவனுடைய வியாபகத்திலே சிவசத்தி வியாப்பியம், சிவசத்தியிலே ஆன்மாவும்,மலமும் வியாப்பியம். ஆன்மாவிலே ஆன்மசத்தி வியாப்பியம். மலத்திலே மலசத்தி வியாப்பியம். ஆன்மபோதத்திலே மாயை வியாப்பியம். மாயையிலே மாயாகாரியம் வியாப்பியம். மாயாகாரியத்திலே கன்மம் வியாப்பியம், கன்மத்திலே கன்மகாரியம் வியாப்பியம்.

வியாபகம்-நிறைவு, வியாத்தி-சமநிறைவு, வியாப்பியம்-அடங்கின நிறைவு. உரு

ஆன்மாவிற்கு கேவலம், சகலம், சுத்தமென்று மூன்று அவத்தைகளுள. அவற்றுள் ஒவ்வொன்றும் காரணம், காரியமென இருதிறப்படும்.

காரணகேவலம் அனுதிதொடுத்து மோட்சபரியந்தம் ஆன்மா அறிவுகெடாமல் ஆணவமலத்திலே அழுந்திக்கிடத்தலாம். அது கண்ணனது இராக்காலத்தில் இருளிலே ஒளிகெடாமல் விழித்

திருத்தல்போலும். ஆணவமலம் இராக்காலம்போலவும், கேவலா வத்தை இருள்போலவுமாம் கேவலம்-மறைப்பு.

காரியகேவலம், அறிகருவிகள் நீங்கிற் சாக்கிரமுதல் ஐந்த வத்தைப்படுதலாம்.

காரணசகலம், அநாதிதொடுத்து மோட்சபரியந்தமுண்டா கிய எண்ணிறந்த சிருஷ்டிகாலங்களிலே, ஆன்மா தான் எடுக்கும் மாயா உடம்புகளைப்பற்றி முப்பத்தாறு தத்துவங்களையும் பொருந்தி நின்று சுகதுக்கங்களையறிதலாம். அஃது இராக் காலத்தில் இருளிலே அழுந்திக்கிடந்த கண்ணானது விளக்கினால் இருள் நீங்கப்பெற்று, பதார்த்தங்களைக் காண்டல்போலும்.

காரிய சகலம் இலலாடஸ்தானத்தில் ஆன்மா துரியாதீதமுதல் சாக்கிரமீறாகவுள்ள மத்தியாலவஸ்தை ஐந்தையுமடைதலாம்.

காரணசுத்தம், ஆன்மா பஞ்சமலங்களையு நீங்கி அருளைப் பொருந்திச் சிவானந்தத்தை யநுபவித்தலாம். அது கண்ணானது இராக்காலம், இருள், விளக்கு இவைகளைவிட்டு நீங்கிச் சூரியன் உதயஞ் செய்தவிடத்துச் சூரியகிரணத்தினாலே சூரியனைக் கண்டு கொண்டிருத்தல்போலும்.

(தொடரும்.)

---

# கலிகாலக் கொடுமைகள் எவ்வெவை?

(மறைமலையடிகள் எழுதியது)

இக்காலத்தில் தம்மைப் பார்ப்பனரெனக் கூறித் தம்மைத் தாமாகவே உயர்த்திப் பேசிக்கொண்டும், தமது உயர்வினைக் கல்வி யறிவும் ஆராய்ச்சி யுணர்வும் இல்லாப் பொது மக்களின் உள்ளத்தில் எளிதாக நுழைந்து விடும் பொருட்டு, அதற்கேற்ற கட்டுக் கதைகளைப் பல்லாயிரக் கணக்காகப் படைத்து, வழக்கில் இல்லாது இறந்துபட்ட 'சமஸ்கிருத' மொழியில் அவைகளை எழுதிவைத்தும், அங்ஙனம் எழுதிவைத்த கட்டுக் கதைகளுக்

கும் பாட்டுகளுக்கும் 'இதிகாசம்' 'புராணம்' 'வேதம்' எனப் பெயர் தந்தும், அவைதம்மை யெல்லாங் கடவுளே அருளிச் செய்தாராதலின், அக்கதைகளில் தேவர்களோடு இனமுடை யவராகச் சொல்லப்படும் பார்ப்பனருக்கே உலகத்தின்கண் எல்லா உரிமைகளும் எல்லா மேம்பாடுகளும் உண்டென வாய்ப் பறை யறைந்தும், அக்கதைகளை நம்பி மற்றைப் பொது மக்க ளெல்லாரும் பார்ப்பனருக்கே அடிமைகளாகி ஒழுகக் கடமைப் பட்டிருக்கின்றார்களென வற்புறுத்தி அப் பொதுமக்களை ஏமாற்றியும், அங்ஙனம் நெடுக ஏமாற்றி வருவதோடு, நெற்றித் தண்ணீர் நிலத்தில் விழப் பாடுபட்டு அப் பொதுமக்கள் வருந் தித் தொகுக்கும் பொருளிற் பெரும் பகுதியை, அவர் பிறந்தது முதல் அவர் இறக்கும் வரையிலும், இறந்தபின் அவர் தம் பிள்ளைகள் பேரப்பிள்ளைகள் இருக்கும் வரையிலும் அவர்கட்குப் பற்பல சடங்குகளை வகுத்து அம்முகத்தாற் கொள்ளைகொண்டும், அங்ஙனங் கொள்ளைகொண்ட பொருளைத் தமதில்லத்திருந்து விலாப்புடைக்கத் தின்று வறிதே காலங் கழித்தல் ஒன்றின் மட் டுஞ் செலவிடாது அருவருக்கத் தக்க தீய துறைகள் பலவற் றிற் செலவு செய்தும், இங்ஙனமெல்லாம் அடாத செய்தும் தம்மை என்றும் உயர்த்தே பேசியும், தமக்குப் பலவகையானும் உதவி புரிந்துவரும் மற்றைப் பொதுமக்களை விலங்கினங்களினுங் கடைமைப் பட்டவராக்கி அவர்தம்மை இழித்துப் பேசியும், அப் பொதுமக்களிற் கல்வியினும் ஆராய்ச்சி யுணர்வினும் மிக்காரெவ ரேனும் அரிதிற் றோன்றித் தம்மவரை நாகரிகத்தின் முன் னேற்றுதற் பொருட்டு அவர் முன்னேறுதற்காம் வழிவகை களை உண்மையாக எடுத்துக் காட்டுவாராயின் உடனே அவ ரது முயற்சியைத் தடை செய்து, அவரை அப்பொது மக்களே தமக்குப் பகைவராகக்கருதி அவர்க்குத் தீங்கிழைக்கு மாறு மறைவிலே கயிறு முடிந்து கிளறிவிட்டுத் தாம் ஏதும் அறி யார்போல் இருந்தும், இன்னோரன்ன தம்முடைய காவொழுக் கங்களால் இந்தியா இலங்கையிலுள்ள இந்துக்கள் நாளுக்குநாள் ஒற்றுமை குன்றிக், கல்வியும் பகுத்துணர்வும் இலராய் விலங் கினங்களினுங் கடைப்பட்ட நிலையிற் காலங்கழிக்கத், தாம் மட்

டும் அரசாட்சித் துறைகளிலும் மற்றையவற்றிலும் முன்னேறி நின்று எல்லா நலங்களையும் எய்தியும், இவ்வாறு நம் இந்து மக்களைப் பல நூற்றாண்டுகளாகக் கீழறுத்து அவர்கட்குப் பல தீங்குகளைப் புரிந்து அயல் நாடுகளிலுள்ள ஆங்கிலர், சீனர், ஜப்பானியர் முதலான மக்கட் பகுப்பின ரெல்லாரும் எல்லாத் துறைகளிலுஞ் சீருஞ் சிறப்பும் எய்தி இனிது வாழா நிற்க, நம்மிந்துக்கள் மட்டும் நாகரிகமில்லாத் துன்பச் சகதியிற் கிடந்து தத்தளிக்குமாறு விட்டுத் தாம் அதனைக் கண்டு இரக்கமின்றி உள்ளுக்குள் மகிழ்ந்தும் வருவாரான பார்ப்பனச் சிறு கூட்டத்தார் இமயமலை தொட்டு ஈழம் வரையில் ஆங்காங்குக் காணப்படுகின்றனர்.

இக்கூட்டத்தாருள் மீன், ஆடு, கோழி என்பவற்றின் இறைச்சியை உணவாகக் கொண்டு வட இந்தியாவின்கண் உயிர் வாழும் பார்ப்பனக் குழுவினர் மட்டுமே ஆரிய ராகுவானன்றி, தக்கணத்தினும் தென்னாடு இலங்கையினும் உள்ள பார்ப்பனர் ஆரியர் அல்லர். இவரெல்லாந் தமிழரிற் கீழ்ப்பகுதியாய் நின்றார்க்கும், வடக்கிருந்து சிறு தொகையினராய்க் குடியேறிய ஆரியர்க்கும் பிறந்தவரும், தமிழரிலிருந்தே பிரிந்து தம்மை ஆரிய இனத்திற் சேர்த்துக்கொண்ட வரும் ஆவர்.

இனி, அறிவாலும் நல்லியல்பு நற்செய்கைகளாலும் இறைவனிடத்து வைத்த அன்பாலும் உயிர்களிடத்து வைத்த இரக்கத்தாலும் உயர்ந்தோரே உயர்ந்தோராவரன்றி, ஒருவர் தம்மைத் தாமே வறிதே உயர்ந்தோரெனச் சொல்லிக்கொண்டால், அவர் அவ்வளவில் உயர்ந்தவராகி விடமாட்டார். இங்ஙனமே, புலால் உடம்புடைய மக்களுள் ஒரு சிறு பகுதியாரான ஒரு கூட்டத்தார் தம்மைத் ‘தேவர்’ எனவும் ‘பார்ப்பனர்’ எனவும் ‘பிராமணர்’ எனவுந் தாமாகவே தம்மை உயர்த்திப் பேசிக் கொண்டாலும், தாம் புனைந்து கட்டிய வடமொழி நூல்களில் அதனை எழுதிவைத்துக் கொண்டாலும், அவர்தம் சொற்களைக்கேட்டு ஆராய்ச்சி யுணர்வில்லாதார் மயங்கி அவரைக் கொண்டாடி ஏமாறுவரே யல்லாமல், ஆராய்ச்சி யுணர்வு சிறிதேனும் உடையார் அவர் சொற்களை ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ளார்.

அதுவேயுமன்றிப், பார்ப்பனர் என்று தம்மைக் கூறிக்கொள் வோர் எல்லாரும் உண்மையிலே பார்ப்பனராயிருந்தால், அவ ரெல்லார்க் குள்ளுமாவது ஒரே வகையான கருத்தொற்றுமை காணப்படுதல் வேண்டும்.

மற்று இந்தியாவில் உள்ள பார்ப்பனர் இலங்கையிலுள்ள பார்ப்பனரைச் சூத்திரரென்றே சொல்கின்றனர். அவரோடு உண்ணல் கலத்தல்களைச் செய்கின்றார்களும் இல்லை. இனி இந்தி யாவிலுள்ள பார்ப்பனருள்ளும் தென்னாட்டிலுள்ளோர் வடநாட் டிலுள்ள பார்ப்பனர், புலாலுணவு கொள்கின்றனராதலின் அவர் சூத்திரரே யல்லாமற் பார்ப்பனர் அல்லரெனப் புகல்கின்றனர். வடநாட்டிலுள்ள பார்ப்பனரோ 'நாங்கள் வேதங்களிலும் ஸ்மி ருதிகளிலுஞ் சொல்லியபடி புலாலுணவு கொண்டு சாஸ்திரப்படி நடக்கின்றோம், தென்னாட்டி லுள்ளவர்கள் சாஸ்திரங்களுக்கு முரணாகச் சைவராகிச் சைவ தந்திரங்களின்படி நடத்தலால் அவர்கள் சூத்திரரே யல்லாமற் பிராமணர் ஆகார்' என்கின்றனர். இனித், தென்னாட்டினுள்ளும் மலையாளத்திலுள்ள நம்பூரிப் பார்ப்பனர்கள், தமிழ் நாட்டிலுள்ள பார்ப்பனரைச் சூத்திரரென இகழ்ந்து அவரைத் தம்மருகில் அணுகுதற்கும் இடங்கொடுக்கின் றிலர். தமிழ் நாட்டவரோ, நாயரென்னும் சூத்திரவகுப்பிற் பிறந்த பெண்பாலரை நம்பூரிகள் தமக்கு வைப்பாட்டிமாராக வைத்துக் கொண்டு காலங்கழித்தலின், அவர்கள் சூத்திரரே யல்லாமற் பார்ப்பனர் ஆகார் என்கின்றனர். இனித், தமிழ் நாட்டவருள் ளும் ஸ்மார்த்தப் பார்ப்பனர் என்போர் ஐயங்கார்ப் பார்ப்பன ரைச் சூத்திர வகுப்பினின்று தோன்றினவரென இகழ்ந்து ஒதுக்குகின்றார். ஐயங்கார்ப் பார்ப்பனரோ தமது வீட்டுத் திண் ணையில் ஸ்மார்த்தர் வந்திருந்தாலுந் தீட்டுப்பட்டுப் போமென்று தூரத்துகின்றனர். இனிக், கன்னடந் தெலுங்கு முதலான நாடு களிலுள்ள மாத்துவப் பார்ப்பனர் என்போர் மேற்கூறிய ஸ்மார்த் தரையும் ஐயங்காரையும் சூத்திரர் என்கின்றனர். இனி, ஸ்மார்த் தார்க்குள்ளும் ஐயங்கார்க்குள்ளும் பற்பல பிரிவினர் உளர். இவ ருள் ஒரு பிரிவினர் மற்றொரு பிரிவினரைப் பார்ப்பனர் என்று ஒரு சிறிதும் ஒப்புக்கொள்கின்றிலர். இனிச், சிவபிரான் திருக்

கோயில்களிலுந் திருமால் திருக்கோயில்களிலும் வழிபாடு ஆற்றும் பார்ப்பனக் குருக்கண்மாரைச், சூத்திரரென்று ஏனைப்பார்ப்பன ரெல்லாரும் ஒரு முகமாய் ஒத்துரைக்கின்றனர். இவ்வாருக, ஆங்காங்குத் தம்மைப் பார்ப்பனரெனச் சொல்லிக் கொண்டிருக்குஞ் சிறு மக்கட் கூட்டத்தாருள் இன்னவர்தாம் பார்ப்பனர் என்னும் உறுதிப்பாடு அவர் தமக்குள்ளேயே பெறப்படக் காணுமையின், இவருள் எவரும் பார்ப்பனர் அல்லரென்பது உள்ளங்கை நெல்லிக் கனிபோல் இனிது விளங்கற் பாலதேயாம். இவர்கள் பிரமாவின் முகத்திற் பிறந்தவர்களென்பது உண்மையாயின், இவர் தமக்குள் எதொரு வேறுபாடுங் காணப்படாமல் இவரெல்லாரும் ஓரினத்தவராய் இருத்தல் வேண்டுமன்ருே ? மற்றை மக்களுக்குள்ள பசிதாகங்களும், விருப்பு வெறுப்புக்களும், ஒன்பது வாயில்களில் ஒழுகும் மலங்களும், நரை திரை மூப்புப் பிணி சாக்காடுகளும் அல்லாதவராய் இருத்தல் வேண்டுமன்ருே ? தேவரிற் கடைப்பட்டவர்களுக்குள்ள ஒரு சிறு அடையாளந் தானும் இல்லாமலும், மக்களுள்ளும் உயர்ந்தோர் மாட்டுக் காணப்படுஞ் சிறந்த இயல்புகளுள் ஒரு தினையளவு தானுந் தம்மாட்டு அமையப்பெருமலும் இருப்போர், தம்மைத் தாமே 'பார்ப்பனர்' என உயர்த்திப் பேசி, பெரிதும் பயன்படுவாரான ஏனைமக்களை, 'வேசிமக்கள்' 'மூடர்' 'அடிமைக்காரர்' எனப் பொருள் படுஞ் 'சூத்திரப்' பெயர் வைத்துப் பேசுதலினும் பெரியதொரு கலிகாலக் கொடுமை வேறுண்டோ சொல்லுமின்!
இத்தகைய பார்ப்பனரின் கலிகாலக் கொடுமையை உணர்ந்தன்ருே சைவ சமய ஆசிரியராகிய திருநாவுக்கரசு நாயனர்,

"கோலும் புல்லும் ஒருகையிற் கூர்ச்சமுந்
தோலும் பூண்டு துயரம்உற்று என்பயன்
நீல மாமயிலாடு துறையனே
நூலும் வேண்டுமோ நுண்உணர்ந் தோர்கட்கே"

என்று அருளிச்செய்தனர். இங்ஙனமே திருமூல நாயனரும்,

"சத்தியம் இன்றித் தனிஞானந் தானின்றி
ஒத்தவிடயம் விட்டு ஓரும் உணர்வு இன்றிப்
பத்தியும் இன்றிப் பரன் உண்மை இன்றிஊன்
பித்தேறும் மூடர் பிராமணர் தாம் அன்றே"

என அருளிச் செய்தமையுங் காண்க. எனவே, இக்காலத்திற் சிறந்த இயல்புகள் ஏதும் இன்றி, எல்லாக் குற்றங்களும் உடையராய்த் தம்மைப் பார்ப்பனரென உயர்த்துப் பேசிக்கொண்டு திரிவோரெல்லாருந் தாம் பாடுபட்டுப் பணந்தேடாமற், பாடுபட்டுப் பணந்தேடும் மற்றைப் பொதுமக்களை ஏமாற்றிப் பொருள் பறிக்கும் நீரராய், மற்றை மக்களை நாகரிகத்தில் முன்னேற விடாமற் றடைபுரிவோராய், அவர்களையெல்லாம் பெரிதும் இழிவான சூத்திரப்பெயர் கொண்டழைத்து ஈரநெஞ்சம் இலராய் இருத்தலின், இவர்தம்மைப் பார்ப்பனரென மயங்கிக்கொண்டு அவர்க்குச் சிறப்புச் செய்தலே பெரியதொரு கலிகாலக் கொடுமையாம் என்க.

## பார்ப்பனர் காலத்தை இகழ்வதன் நோக்கம்

மக்களாவார் எல்லாரும் எண்ணிறந்த நன்மைகளைப் பெற்று உயிர் வாழும் இச்சிறந்த காலத்தைப், பார்ப்பனரெனத் தம்மைத் தாமே உயர்த்து அழைத்துக்கொள்ளும் இச்சிறு கூட்டத்தார் 'கலிகாலம்' என இழித்துப் பேசுகின்றார். இப்பார்ப்பனர் தம்மைத் தேவர் எனச் சொல்லிக் கொள்ளுதலால், இவர்கள் இக் கொடிய கலி காலத்தில் இம்மண்ணுலகத்தில் இருந்து இடர்ப்படுவானேன்? இவர் தமக்குரிய வானுலகத்திற் சென்று இனிது வைகலாமே? ஆனல் இவர்கள் உண்மையிலே தேவர்கள் அல்லாமையாலும் அதனாற் கூற்றுவன் உதவியின்றி இவர்கள் வானுலகத்திற் செல்லுதல் ஏலாமையாலும், தம்மைத் தேவர்கள் என்னும் நிலையில் உயர்த்து வைத்துக்கொள்ளுதற்கு ஏற்ற ஒரு சூழ்ச்சியாகவே அவர்கள் இதனைக் கலிகாலம் எனப் பழித்துப் பேசுகின்றார்கள். "ஆடமாட்டாத தேவடியாள் வாசல்கோணல்" என மொழிந்து, தான் ஆடுதற்குப் புகுந்த இடத்தைப் பழித்துப் பேசுதல் என்றால் மட்டுமே தனக்கு ஆடுந்திறன் உண்டென்பதை உறுதிப்படுத்த விரும்புதல்போலப் பார்ப்பனர் என்போருந் தாம் செய்யும் ஏமாற்றங்கள் இனிப் பயன்படா என்பது கண்ட அளவானே, இக்காலத்தைக் கலிகாலம் எனவும், இதன்கண் நடைபெறும் உயர்ந்த அறிவு நிகழ்ச்சிகளைக் கலி

காலப் புதுமைகள் எனவும் இகழ்ந்துபேசி ஆரவாரஞ் செய்யா நிற்பர்.

## காலம் கலியானது பார்ப்பனராலேயே

இனிக், 'காலம் என்பதற்குக் கையுங் காலும் அறிவும் இல்லாமையின் அதுதானே நல்ல தொன்றையேனுந் தீயதொன்றையேனுஞ் செய்துவிட மாட்டாது. அவ்வக்காலங்களில் இருக்கும் மக்களே நன்மைதீமைகளைச் செய்து தாந்தாம்செய்த அச்செயல்களைத் தாம் உயிர்வாழுங் காலங்களின்மேலேற்றிவிடுவார். ஆகையால் ஒரு காலத்தைப் பழித்துப் பேசுதற்குமுன், அக்காலத்திலிருக்கும் மக்களுள் எவருடைய தீயசெய்கையால் அதற்குப் பழிச்சொல் வந்தது, எவருடைய நற்செய்கையால் அதற்கு நற்சொல் வந்தது என்று பகுத்தாராய்ந்து அறிவது முன்னேற்றம் அடையவேண்டுவார் ஒவ்வொருவர்க்கும் இன்றியமையாத கடமையாம். ஆகவே, யாம் உயிர்வாழும் இக்காலத்தில் எவருடைய செயல்கள் உலகத்திற்கு நன்மையைப் பயந்து வருகின்றன, எவருடைய செயல்கள் தீமையைப் பயந்து வருகின்றன என்பதை ஒரு சிறிது ஆராய்வாம்.

நம் இந்தியா இலங்கையென்னும நாடுகளிலுள்ள மக்களிற் பெரும்பாலார் சென்ற எட்டு ஒன்பது நூற்றாண்டுகளாகத், தம்மிலிருந்து பிரிந்த பார்ப்பன ரென்னுஞ் சிறு சிறு கூட்டத்தாராக ஆங்காங்கு விரித்து வைக்கப்பட்ட ஏமாற்றவலையிற் சிக்குண்டு, கல்வியும் ஆராய்ச்சியுணர்வும் ஒற்றுமையும் இலராய், முன்னிருந்தமது வலிமை யெல்லாம் இழந்து, தாம் வருந்தித் தேடிய பொருளிற் பெரும்பான்மையையும் அப் பார்ப்பனருக்கே அவர் வேண்டியபடியெல்லாங் கொடுத்து வறியராகிக் காலங்கழித்து வருதலால், நம் இந்துமக்கள் தமக்காவது உலகத்துள்ள பிறர்க்காவது ஏதொரு நன்மையுஞ் செய்யத் தக்கவராயில்லை. தமக்கிருந்த வலிமையெல்லாம் அழிந்தமையின், இந்திய நாட்டுக்குப் புறம்பேயிருந்து வந்த துலுக்க அரசர்களாற் பெரிதும் அலைப்புண்டு சிறகிழந்த பறவைபோல் ஒடுங்கிக் கிடக்கின்றனர்! ஆங்கில அரசர் இந்நாடுகளைக் கைப்பற்றிக்கொண்டு செங்கோல் செலுத்தா

திருப்பராயின், நம் இந்துமக்களின் நிலை இன்னும் வருந்தத்தக்க பதத்தினை அடைந்திருக்கும்! எல்லா அருளுக்கும் இருப்பிடமான இறைவன் திருவருளால் ஆங்கில அரசு இங்கு வரவும், அதனால் நம்மனோர் தாமிருக்கும் இழிந்த நிலையினின்று சிறிது மேலேற வும் இடம் வாய்ந்தது.

எனவே, இஞ்ஞான்று நம் இந்தியா இலங்கை என்னும் நாடுகளுக்கும், இவற்றிற்குப் புறத்தேயுள்ள நாடுகளுக்கும் இது காறும் வந்திருக்கும் நலங்களெல்லாம் வெள்ளைக்காரரால் விளைந் தனவேயாம் என்று உணரல் வேண்டும். இவர்களால் விளைந்த நலங்களிற் சிலவற்றை இங்கெடுத்துக் காட்டுதல் இன்றியமை யாததாயிருத்தலின் அவற்றை இங்கே சிறிது கூறிப் பார்ப்பன ரால் விளைந்த தீமைகளையும் அவற்றை யடுக்கக் காட்டுவாம். வெள் ளைக்காரர் தாம் சென்ற இடங்களிலெல்லாம் பள்ளிக்கூடங்கள் திறப்பித்து ஏழையெளியவர்கள் முதல் எல்லாருக்கும் ஏதொரு வேற்றுமையும் இன்றிக் கல்வி புகட்டி எங்கும் அறிவைவிளங்கச் செய்து வருகின்றனர்.

(தொடரும்)

குறிப்பு:—இக்கட்டுரைத் தமிழன் என்னும் பத்திரிகையில் வந்துள தாகும்.

---

## தமிழின் முற்காலச்சிறப்பும், தற்காலக்குறையும்

(திரு. கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள்)

உலகத்திலே மக்களால் பேசப்படும் மொழிகள் எண்ணள. வில் ஆயிரத்துக்குக் குறைவில்லை. அவற்றுள் ஏழெட்டு மொழி களே மிகவும் சிறப்பாகக் கூறப்படுகின்றன. அவையாவன:— **கிரீக், லத்தீன், சீனம், எகிப்தியம்,** அரபியம், பாரசீகம், ஹீபுரு **ஆரியம், தமிழ்** என்பனவாம். அவைகள் ஒவ்வொன்றிற்கும் உரிய சிறப்பு யாதெனில், பண்டைக் காலத்திலேயே மக்களது நாகரீக வளர்ச்சிக்கு இன்றியமையாத சிறந்த இலக்கண இலக்கி யங்களையும், பல நுண்கலைகளையும், தத்துவ நூல்களையும் உடைத் தாயிருத்தலோடு பல கிளைமொழிகளுக்குத் தாயகமாய்த் தன்னில் தானே இயங்கவல்லதாய் இருத்தலே யாமென்க. நமது தமி

ழானது, செவ்விதின் அமைந்த இலக்கணமும், அரிய உண்மைகளைத் தொகுத்தினிது விளக்கும் விழுமிய இலக்கியமும் அன்பும் அறிவும் பொங்கித் திகழச்செய்யும் அருட்பாடல்களும் மெய்நூல்களும் உடையதாய், மலையாளந் தெலுங்கு கன்னடம் துளுவம் முதலிய பல கிளைமொழிகளைப் பெற்றுள்ளதாய்த் தனித்தியங்க வல்லதாய் இருத்தலோடு, ஏனைய உயர்மொழிகள் பலவற்றிற்கு மில்லாததோர் சிறப்பினையுடையதாய் விளங்குகின்றது. அச்சிறப்பு நயம் யாதெனில்: தொன்மை மொழிகளுள் தொன்மையதாய் இன்றும் என்றும் பேச்சு வழக்குடைமையால் இறந்தொழியாது புது மொழிகளின் புதுமை வாய்ந்திருப்பதேயாம். இப்போது தமிழ் வழங்கும் நன்னாடானது உலகந் தோன்றிய காலந்தொட்டு மக்கள் வசித்திருந்த இடமாய் அறியப்படுகின்றது. அஃது இதற்கு முன் ஒருகாலத்திலும் கடலுள் அமிழ்ந்திடாத மேம்பாடுடையதென்று நிலநூல் வல்லார் கூறுகின்றார்கள். விந்தியத்துக்கு வடபாலுள்ள நிலப்பரப்பும் இமயமலையும், எகிப்து முதலிய நாடுகளும் நீருணின்று வெளிப்போந் திலங்குவதற்கு முன்னேயே தமிழ் நாடானது மக்கள் வாழ்தற்குரிய உயர்நிலமாகத் திகழ்ந்தது. குமரிமுனைக்குத் தென்பாலும் ஆதியிற் பெரியதோர் நிலப்பரப்பு தமிழ் மன்னர்க் குரியதாய் அகன்று கிடந்து பின்னரே கடல் கோட்பட்டது. பண்டைக் காலத்திலே, வங்காளக் குடாக்கடல் நிலமாயிருந்து தென்னாட்டையும் சீனதேசத்தையும் இணைத்து நின்றது. பிற்காலத்திலே ஹீப்புரு மொழி வழங்கிய மேலை ஆசிய தேசத்துடன் தமிழ்நாட்டு வணிகர் வியாபாரப் போக்கு வரவு செய்ததாக அறிகின்றோம். ஹீப்புரு மொழியில், தோகை, அரிசி முதலியவற்றைக் குறிக்குஞ் சொற்கள் தமிழாகவே காணப்படுகின்றன. சாலடியா நாட்டில் வழங்கும் ஊர், எருது முதலிய சொற்களும் தமிழே என்பாரும் உளர். கிரீக் மொழியில் அரிசியைக் குறிக்குஞ் சொல் தமிழே. இருக்கு வேத முதலியவற் றுள்ளும் தமிழ்ச் சார்பாகிய ஒலிகள் காணப்படுகின்றனவென்று புரொபசர் ராபிசன் என்பார், பண்டை இந்தியாவென்னும் தம்முடைய நூலில் இயம்பி யுள்ளார். சீனமொழிக்கும் தமிழ் மொழிக்கும் பொதுவாய சொற்கள் சில புலப்படுகின்

றனவென்று காலஞ்சென்ற கனம் கனகசபைப்பிள்ளை யவர்கள் கூறிப் போந்தனர். இவ்வாறு பண்டை மொழிகள் பலவற்றுட னும் ஒருபுடை ஒற்றுமை யுடையதாய தமிழின் தொன்மையை யாவர் அளவிடுதல் கூடும்? லத்தீனும், பழைய கிரீக், ஆரியம் முத லிய பண்டை மொழிகள் பலவும் இப்பொழுது பேச்சு வழக்கற் றமையால் இறந்த மொழிகளாகக் கருதப்படுகின்றன. தமிழோ, ஏனைய மொழிகள் வழங்கிய ஞான்றும் வழங்கி, இன்னும் பேச்சு வழக்கிற் றலைநிற்பதால் பழையவற்றுட் பழையதாய்ப் புதியவற் றுட் புதியதாய்த் தனிப்பெரு மாண்புடைய தமிழினைத் தாய் மொழியாகப்பெற்ற நாம் அதனை உயர் மொழிகள் எல்லாவற்றுள் ளும் உயர்ந்ததோர் தனிமொழியாகப் பாராட்டிப் போற்றுங் கடப்பாடுடையோ மென்க.

இக் கருத்துப் பற்றியே, நமது தாய்மொழியைக் 'கன்னித் தண்டமிழ்' என்றும், சீர் இளமைத் திறம் வியந்து செயன் மறந்து வாழ்த்துதுமே' என்றும், "என்றுமுள தென்றமிழ்" என்றும் பெரியோர் கூறுவாராயினர். தமிழானது இத்துணைப் பெருமை வாய்ந்ததாயினும் இக்காலத்துத் தமிழ் மக்களுட் பெரும்பான்மையரைப் போல மொழிப்பற் றில்லாதவர்களை ஏனைய மொழிக்குரியாரிடத்துக் காண்டலரிது. அன்னோர்க்குத் தம்மொழியின் கண்ணுள்ள ஆர்வம், தமிழ் மக்கட்குத் தமிழின் கண் இல்லையென்றே கூறலாம். இதற்குக் காரணம்: தமிழ் நூல் களைத் தமிழ் மக்கள் செவ்விதிற் கல்லாமையும், அவைகளைத் தக்கவாறு போற்றாமையும், பிறமொழிக் கலப்பினால், தமிழ்ப் பெருமை நம்மவர்களுக்கு விளங்காமையுமா மென்க. பிழைத் தற்கு வழி தேடுவதிலேயே மிகுந்தநேரஞ் செலவிடுந் தமிழ் மக் களுக்கு, தமிழ்க் கல்விப் பயிற்சி எளிதாக இயலுவதில்லை. தமிழ் கருத்துக்களை அவர்களுக்கு எடுத்துரைக்கும் போதகர்களும் சிலரே. தமிழ்க் கல்வி பயின்றோரை யாதரிப்பா ரில்லாமையால், தக்க போதகாசிரியர்கள் குறைவு பட்டனர். ஏட்டிலுள்ள தமிழ் நூல்களை ஒருங்கு சேர்த்து ஆய்ந்து அச்சியற்றிப் பாதுகாத்த லும் அரிதானமையால் தமிழ் நூல்களில் பலப்பல மாய்ந்தொ ழிந்தன. தமிழ ரென்பார் உத்தியோகத்தின் பொருட்டு ஆங்கி

லத்தையும், கடவுள் வழிபாட்டின் பொருட்டு, வடமொழி நூல் களையுமே தழுவிக்கொண்டமையால், பிறமொழிக் கலப்பாலும், பிறநூற் கலப்பாலும் தமிழின் பெரும்பயன் தமிழர்க்குப் புலனாக வில்லை. சமயமானது, பிற யாவற்றினும் மிகுந்த வன்மையோடு மக்கள் மனத்தைக் கவருந் தன்மையதாதலால் வடமொழியி லுள்ள சமய நூல்களைச் சிறந்த ஆதாரமாகக் கொள்ளுகின்றவர் கள், அம்மொழியிலும், அதன்கண் ணுள்ள நூல்களிலும், ஈடு பட்டவராய்த் தமிழ்ச் சிறப்பினை அறியும் பான்மையிலராயினர். இவ்வாறு தமிழ்மக்களுட் பலர் தமிழின் மெய்மாண்பினை அறியா மையால் தமிழ்ப்பற்றுக் குறைந்து தமிழினை வளர்த்தற்குரிய வாயில்கள் தடையுற்றன. ஆதலின், இவ்வியாசத்தின் முதற்கண் தமிழின் தனிமாட்சியை ஒருவாறு சுட்டிக்காட்டி, பின் தமிழின் முற்காலச் சிறப்பினையுங், தற்காலக் குறைவினையும் தொகுத் துரைக்க முயல்கின்றேம்.

தமிழ் மொழியின்கண் இலக்கணநூல் சிறப்பாக ஆதியி லமைந்திருப்பது போல வேறெந்த மொழிக்கும் அமையவில்லை. வடமொழி முதலிய பிறமொழிகளிலே எழுத்திற்கும் சொல்விற் குமே இலக்கணம் ஏற்பட்டுள்ளது. தமிழ் மொழியிலே, இலக்கி யத்துட் பேசப்படும் பொருளுக்கும் இலக்கணம் அமைந்து பண்டைத் தமிழரது உயர் நலமிக்க வாழ்க்கைக் கொள்கை களுக்கு ஓர் கண்ணாடியாக இலங்குகின்றது. தமிழ் இலக்கணமா கிய **தொல்காப்பியம்** வடமொழி இலக்கணமாகிய பாணினீயத் திற்கு முற்பட்டது. பாணினீயம் (கி. மு.) நாலாவது நூற்றாண் டிற்குப் பின் எழுதப்பட்டது. அகத்தியர் காலம் இராமாயண காலத்திற்கு முற்பட்டதாய் இருக்கு வேதகாலத்தோ டொத்த தாதலின் அவரது இலக்கணநூலும், அவரது மாணாக்கராகிய ஆசிரியர் தொல்காப்பியரது இலக்கணநூலும் பாணினீயத்திற்கு நெடுங்காலத்திற்கு முன்னேயே தோன்றித் திகழ்ந்தன என்பது தெளியப்படும். இதனால் மிகப் பழமையான இலக்கணம் பண்டை மொழிகள் எல்லாவற்றுள்ளும் தமிழுக்கே சிறப்பாக ஏற்பட்டு இன்னும் நிலைபெற்றிருத்தலை அறிக. உலகத்திலே பேசப்படும் எல்லா மொழிகளிலே உள்ள எல்லாப் பேச்சொலிகளும் உண்

டாவதற்கு முதற்காரணமான மூல எழுத்தொலிகளும் சார்பெழுத் தொலிகளும் தமிழின் கண்ணேயே வடிவம் பெற்றிருப்பதால், தமிழ் எழுத்துக்களைக் கொண்டே எல்லா மொழிகளையும் எழுதி விடுதல் கூடுமென்று கனம் திருவாளர். பி. வி. மாணிக்கநாய்க்க ரவர்கள் தமது ஆழ்ந்த எழுத்ததிகார ஆராய்ச்சியால் நிறுவியுள் ளார்கள். தமிழ் எழுத்துக்கள், எப்பொருளுந் தோன்றுவதற் கேதுவாகிய கருவின் வடிவமான ஓங்காரத்தின் பகுதிகளாக அமைக்கப்பட் டுள்ளனவென்றும், கனம் நாய்க்கரவர்கள் இனிது விளக்கி யுள்ளார்கள். இத்தகைய ஆராய்ச்சியால் உலகத்திலுள்ள பல மொழிகட்கும் பொதுவான வரிவடிவு தமிழெழுத்துக்களா லமைப்பதே சிறந்த முறையாகு மென்பது அறிஞர் பலருக்கும் புலனாகுங் காலை தமிழெழுத்துக்களே உலகெங்கும் பரவி யழி யாது நிலை நிற்குமென்பது போதரும். தொல்காப்பியத்துள், சொற்களின் பகுதியின் பகுதியைப் பற்றிய ஆராய்ச்சி விரிவாகக் காணப்படாவிடினும் அவ்வாராய்ச்சியை இயற்றுவதற்கு அந்நூல் இடந்தந்து நிற்கின்றது. சில புலவர்கள் அவ்வாராய்ச்சியை இற் றைக் காலத்திலே செய்து வருகின்றார்களெனினும் அஃது இன் னும் முற்றுப் பெறவில்லை. வருங் காலத்தில் அது முற்றுப்பெறு மென்றே தோன்றுகிறது.

இனி, நமது மொழியானது, பாட்டிலக்கியத்தில் மிக்க வள முடையது. சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய பண்டைத் தொடர் நிலைச்செய்யுள் நூல்களும், பெரியபுராணம், சிந்தாமணி, கம்பராமாயணம் முதலிய முதற்றரப் பெருங்கதை நூல்களும், பாரதம், நைடதம், காஞ்சிப்புராணம், திருவிளையாடற் புராணம், இரகு வம்சம், பிரபுலிங்க லீலை முதலிய பிற்காலக் காப்பியங் களும், எண்ணிறந்த தலபுராணங்களும், தேம்பாவணி சீராப் புராணங்களும், பிறவும் பெருங்காப்பியத்துக்குச் சிறந்த இலக்கி யங்களாக அமைந்துள்ளன. தனிமக்கள் மாண்பினையும், பொது மக்கள் வாழ்க்கையினையும், பலபல வகையாகப் பாட்டு நூலு ளமைத்துக் காட்டுவதற்கு அந்தாதி, பிள்ளைத்தமிழ், கோவை, உலா, கலம்பகம், குறவஞ்சி, பள்ளு, மடல் முதலிய தொண்ணூற் றாறுவகைச் சிறு காப்பியங்கள் எத்துணையோ உள்ளன. சொல்

நயமிக்க சித்திரக்கவிகளும் வண்ணக்கவிகளும் தமிழிலே எண்ணிறந் திலங்குவன. ஆதலால் தமிழ் மொழியானது, பாவளத்தில் எம்மொழிக்கும் பின்னடையாத பெற்றியுடைத்து. தொல்காப்பியத்திற்குப் பின்னெழுந்த நன்னூல், நேமிநாதம் தண்டியலங்காரம், யாப்பருங்கலம், இலக்கண விளக்கம், புறப்பொருள் வெண்பாமாலை, இறையனாரகப்பொருள், நம்பியகப்பொருள், இலக்கணக் கொத்துரை முதலிய இலக்கண நூல்களும் ஒருவர் பலவாண்டுகளாகக் கற்பதற்குப் போதியனவாய் இன்றுமுள்ளன.

ஆதியிலே, தமிழிலே இசைநூல்கள் ஒருபெரும் பிரிவாகத் தொகுக்கப்பட்டு இசைத்தமிழென்று வழங்கி வந்தன. பிற்காலத்திலே, ஆரியரது தொடர்பு காரணமாகத் தமிழிசையானது, ஆரியர் நூல்களிற் பயின்று ஆரியப்பேர்கள் பலவும் பெற்று இன்றும் விளங்குகின்ற தென்பதை இருமொழி இசை நூல்களையும் இனிதாராய்ந்து முடிவு கட்டிய தஞ்சை, ஆபிரகாம் பண்டிதர், தாம் வெளியிட்ட பெருநூலில் விளக்கியுள்ளனர், பண்டைத் தமிழர்களுள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகை நிலங்களில் வசித்தவர்கள் தத்தமக்குரிய யாழினையும் பறையினையும் உடைத்தாயிருந்தமையாலும் இயல் இசை நாடக மென்னும் முத்தமிழ் வழக்குத் தொன்றுதொட்டு நிகழ்வதாலும், வடமொழி வேதத்திற்கு உச்சாரண வேறுபாடுகளே ஆதியில் ஏற்பட்டிருந்தமையாலும், தமிழ் மக்களே ஆதியில் இசை நயங்களைக் கண்டு தேர்ந்து இந்நாட்டிலுள்ள பிறர்க்குங் கற்பித்தாரென்பது ஊகிக்கப்படும்.

கூத்திலக்கணமும், தமிழிலே இசைபோலச் சிறப்பாக ஆதியில் விரிவுற்று விளங்கிற்று. பிற்காலத்தில் ஆதரிப்பாரின்றி,நாடகமானது தமிழ் நயத்தை இழக்கலாயிற்று. சிறிது காலத்திற்கு முன்னே, கிறித்தவ கலாசாலைத் தலைமைத் தமிழ்ப்பண்டிதராகிய வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் 'நாடகவியல்' என்னும் நாடக இலக்கணமொன் றியற்றினர். இக்காலத்தில் எழுந்துலவும் நாடக நூல்களிற் பலவும் தமிழ் நாடக இலக்கணம் நன்கு அமையப்பெறுதெனவே அவை யாவற்றையு மாராய்ந்து நல்லன

இவை என்றும் அல்லன இவை என்றும் தீர்மானிக்கும் பொருட்டுக் கற்றறிஞர் கழகமொன்று நிறுவப்பெறுமாயின், நாடகக் கலையானது தமிழிலே, நன்கு சீர்திருத்தம் பெற்று முன்போல வளர்ந்தோங்கு மென்பதற்குத் தடையில்லை.

இவ்வாறே நமது மொழியிலே, கற்றோரும் மற்றோரும் தமது அறிவிற் கெட்டிய அளவில், எழுதிவெளிப் படுத்தியுள்ள நாவல்களென்னும், புதுக்கதைகளையும், சீர்திருத்துவதற்கு, ஓர் ஆராய்ச்சிக் கழக மமைத்தல் இன்றியமையாததே. தமிழிலே உரை நடை நூல்கள், ஆசிரியர் தொல்காப்பியர் காலத்திலே நான்கு வகைப்பட்டிருந்தன. பாட்டுகளின் பொருளை இணைத்துக் காட்டுவதற்கும் பாக்களின் பொருளை இனிது விளக்குவதற்கும் கட்டுக் கதைகள் தெரிப்பதற்கும், இக்காலத்துச் சிறந்த நாவல்கள் போன்ற பொருள் நயமுடைய கதைகளும், வியாசங்களும் எழுதுவதற்கும், உரைநடையானது ஆதியிற் பயன்பட்டுவந்தது. இற்றைக் காலத்திலே எழுதப்பட்டுள்ள உரைநடை நூல்களை ஆய்ந்தறிந்து தகாத நூல்களைக் கழித் தொதுக்குவதற்கு மேலே குறித்த ஆராய்ச்சிக் கழகம் பயன் படுதல் வேண்டும். தற்காலத்திலே, பல கல்விமான்கள், நாடோறு மாதல்,வாரந்தோறுமாதல், திங்கள் தோறு மாதல் வெளிப்போந்துலவும் பத்திரிகைகளிலும் சிறந்த வியாசங்கள் எழுதியுள்ளார்கள். அவற்றைத் தொகுத்துச் சிறு நூல்களாக வெளியிடுவதற்கும் தக்க அறிஞர்கள் நியமிக்கப்படவேண்டும். அவ்வாறு செய்யா தொழியின் உரைநடையானது எளிதிற் சீர்திருத்தம் பெறாது. தமிழ் வசனமானதுவளமுற்று விரிவெய்துவதற்குத் தக்கவாறே, எல்லாக் கருத்துக்களையும் தமிழ் மொழியிலேயே செம்மையாக இடர்ப்பாடின்றி வெளிப்படுத்துதல் எளிதாதல் கூடுமென்க.

(தொடரும்)

# தமிழும் சைவமும்

[சி. மு. நடேசமுதலியார் அவர்கள்]

இது நிகழும் அட்சய ஆண்டு மார்கழித்திங்கள் 25 - ம் நாள் (9 - 1 - 27) ஞாயிற்றுக் கிழமை பிற்பகல் 5 - 30 - மணிக்குச் சென்னை, லிங்கசெட்டி தெரு, 306 - வது எண்ணுள்ள சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக மேடையில் நிறுவப்பட்டு, திருவாளர் கா. சுப்பிரமணியபிள்ளை, எம். ஏ., எம். எல்., அட்வகேட் அவர்கள் தலைமையின் கீழ்த், தமிழ்ப் புலவரும் மருத்துவாசிரியருமாகிய திருவாளர் மா. வடிவேலுமுதலியாரவர்கள் 'தமிழும், சைவமும்' என்ற பொருள்பற்றி ஓர் அரிய சொற் பொழிவு நிகழ்த்தினார்கள். அவ்வமயம் திருவனந்தபுரம் T. A. இராமலிங்கபிள்ளை எம். ஏ., அவர்களும், டுடுல் ஆசிரியர் திரு. R. பாலசுந்தர முதலியார் பி. ஏ., எல். டி., அவர்களும், சிதம்பரம் தேவாரம் இராமலிங்க ஓதுவாமூர்த்தியவர்களும், திருவாரூா முனிசிபல் கௌன்சிலர் திரு. தி. க. சபாபதிமுதலியாரவர்களும், கான்சியாபீசு திரு. குமாரசாமிமுதலியாரவர்களும், கலாசிந்தாமணி பதிப்பாசிரியர் திரு. மாணிக்கவேல் முதலியாரவர்களும், திரு. R. A. கபூர் அவர்களும் சட்ட நூல் மாணவர் சிலருமாக நூறு அறிஞர்களுக்குமேல் வந்திருந்தார்கள்.

சொற்பொழிவாசிரியர், தமிழ், தொன்மையான மொழியென்றும், பல அரிய மேற்கோள்களால் 'ஓம்' என்னுஞ் சொல் தமிழே என்றும், பிள்ளையார் என்று தோன்றினரோ அன்றே தமிழும் தோன்றிற்றென்றும், ஆகலான் தமிழ் மொழியின் உற்பத்தியான காலம் சொல்ல முடியாதென்றும், தமிழ் இயற்கை மொழி என்றும், 'அ' என்ற எழுத்து வாயைத் திறந்த அளவில் இயற்கையா யெழுகின்ற தென்றும், தாய்க்கு அன்னை என்றும், அம்மை என்றும் அமைந்தது போல வேறெம்மொழியிலும் அமையவில்லை யென்றும், மாடு முதலிய விலங்குகள் கூட 'அம்மா' என்று கூப்பிடுவதே அதனை வற்புறுத்துமென்றும், தமிழ் நாட்டிலுள்ள சித்தர்களைப் போலிச் சித்தர்கள் என்றும், அவர்கள் நூல்களைப் போலிநூல்களென்றும், சில தமிழ் மக்களே

பழிக்கின்ருர்கள்; அது பெருந் தவருகுமென்று அரிய மேற்கோள்கள் காட்டி அவற்ருல் சித்தர்கள் பேரறிவாளர்களென்று பெறப்படுகிறதென்றும், சைவத்திற்கும், தமிழிற்கும் பெரிய ஒற்றுமை உண்டென்றும், தமிழைச் சரியாகப் படித்துப்போற்ருமல் அதன்கண் வழங்கும் அறிவுரைகளெல்லாம் திரித்துப் பொருளற்று வழங்கப்படுகின்றன வென்றும் இன்னேரன்ன பிறவும் நன்கு பேசினர்கள்.

பின்னர் தலைவரவர்கள் தமிழ் மிகத்தொன்மையான மொழியென்றும், 'ஓம்' என்ற சொல் ஓம்பு (=பாதுகாத்தல்) என்ற சொல்லின் பகுதியாய தமிழே என்றும், சங்க நூல்களிலும், தேவார திருவாசகங்களிலும், 'ஓம்' என்ற சொல் வழங்கப்படுகிறதே யல்லாமல் 'பிரணவ' மென்ற வடசொல் யாண்டும் வழங்கப்படவில்லை யென்றும், 'பிரணவம்' என்ற சொல் 'பாதுகாப்பு' என்னும் பொருளுடையதன்றென்றும், பின்னர் வடநூலார் 'பாதுகாப்பு' என்னும் பொருளுடைய 'அவ' என்னுஞ் சொல்லிலிருந்து 'ஓம்' என்னுஞ் சொல் வந்ததாகப் புரட்டு செய்துவிட்டனர் என்றும், தமிழ்நாடு ஓர் ஊழியில் குமரிக்குத் தெற்கே நெடுந்தூரம் பரவியிருந்ததென்றும், அவ்வமயம் விந்தியமலைக்கு வடபாலுள்ள இமயமலை முதலிய இடங்கள் கடலாக இருந்தனவென்றும், விந்தியமலை முதல் குமரிவரையுமுள்ள தென்னடு என்றுமுளநாடென்றும், குமரிக்குத் தென்பாகம் கடலால் மூழ்கப்பட்டபோது விந்தியமலைக்கு வடபாகம் நிலமாக வெளிக்கிளம்பியதென்றும், ஆகலான் தென்னடு பண்டைநாடென்றும், அந்நாட்டினரே பழங்குடிகளென்றும், ஆண்டு பேசப்படுகிற மொழியாய தமிழே தொன்மையான மொழி என்றும், தமிழ் மக்கள் நூல்களைப் பாதுகாவாமையால் பழைய நூல்கள்யாவும் இறந்துபட்டன என்றும், இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்னுள்ள சைவசித்தாந்த சண்டமாருதம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரநாயகர் எழுதிய நூற்றுக்கு மேற்பட்ட நூல்களில் இப்போது கிடைக்கப்பெறுவன பத்து நூல்களே என்றும், எண்பது புத்தகங்களுக்கே பேர் தெரிகின்றனவென்றும், மிகுதி நூல்களுக்குப் பேர் கூடத் தெரிவதற்கில்லை யென்ருல் தமிழ் மக்கள் நூல் பாது காவாது

வாளாயிருப்பது பெரிதும் வருந்தத் தக்கதென்றும், தொல் காப்பியம், 7000-ஆண்டுகட்கு முற்பட்ட தமிழ் இலக்கணநூலென்றும், இச்சிறந்ததொரு இலக்கணநூல் எழுதப்படவேண்டுமாயின் அதற்குமுன் எண்ணிறந்த தமிழிலக்கிய நூல்கள் திண்ணமாய் இருந்திருக்கவேண்டுமென்றும், நாடக வழக்கு, செய்யுள் வழக்கு, என்மனார் புலவர் என்ற சொற்றொடர்கள் அதன்கண் காணப்படுவதால் பல அரிய நூல்கள் கட்டாயம் அதற்குமுன் இருந்திருக்கவேண்டுமென்று புலப்படுகிறதென்றும் பின்னர் உண்டாய தொல்காப்பிய உரைகளில் காணப்படும் பல மேற்கோள்களுக்கே இப்போது மூல நூல்கள் இவை எனத் தெரிவதற்கில்லையென்றும், ஒரு லட்சம் பாட்டுக்களுக்கு மேலடங்கிய தேவாரம் சிதம்பரத்தில் ஓர் அறையில் வைத்தடைக்கப்பட்டுக் கையடையாளம் வைக்கப்பட்டிருந்த விபரம் அபயகுலசேகர சோழரால் தற்செயலாய்க் கிடைக்கப்பட்டதென்றும், அப்போது எண்ணாயிரம் பாட்டுக்களே கிடைத்தனவென்றும்,மிகுதி செல்லரிக்கப்பட்டன என்றும்,அச்சோழவாசர் முயற்சி செய்யாராயின் அதுவும் கிடையாது, பின் தேவாரம் என்ற ஒரு நூல் இருந்ததாக இப்போது தெரியாமலே போகுமென்றும், இது தமிழுக்குப் பிறரால் ஏற்பட்ட ஒரு சூழ்ச்சி என்றே நம்பவேண்டியிருக்கிறதென்றும், 'திராவிடர்கள் ஆரியர்களுடைய மொழியைத் தங்களதாக்கினர்களென்றும், ஆரியர்கள் திராவிடர்கள் கருத்துக்களைத் தங்களதாக்கிக் கொண்டார்கள்' என்று சிலேட்டர் முதலிய மேனாட்டுப் புலவர்கள் இருமொழிகளையும் நன்கு கற்று எழுதியுள்ளார்களென்றும், பண்டைத் தமிழ் நாட்டுக் கருத்துக்கள் அமெரிக்கா, ஜாவா, கிரீஸ், ஈஜிப்ட் முதலிய இடங்களுக்குப் போயிருக்கின்றனவென்றும், சையாம் என்ற இடத்தில் அந்நாட்டு லிபியில் நமது தேவாரம் எழுதப்பட்டிருக்கிறதென்றும், ஆங்கிலம் ஆங்கிலோ சாக்ஸன் மொழியை விட்டு லத்தீனாக எவ்வாறு திரிபுற்றதோ அவ்வாறே தமிழ் ஆரியமாகத் திரியலாயிற்றென்றும், ஓசைப் பொலிவு பற்றித் தமிழ் மக்கள் 'சுடுதல்' என்றதைத் 'தகனம்' என்றும், 'பூ' என்றதைப் 'புஷ்பம்' என்றும், 'வணக்கம்' என்றதைப் 'பூசை' என்றும்,

'தண்ணீர்' என்றதை 'ஜலம்' என்றும் சொல்லத் தலைப்பட்டார்களென்றும், பல மேற்கோள்களால் ஆரியர் வேறு, தமிழர் வேறு என்றும், ஆதி சைவராகிய பட்டர் தமிழரே என்றும், சுமார்த்தராகிய ஆரியர் சிவ வழிபாட்டிற்குரியரல்லர் என்றும், சரித்திர ஆராய்ச்சியால் இவற்றின் உண்மைகளைத் தெளிவாக அறியலாமென்றும், வேதம், பழையநூல், எல்லார்க்கும் பொது நூல் என்றால் திருக்குறளில் அதனைக் குறித்திருக்க வேண்டுமென்றும், ஞானம், ஆன்மா, ஈஸ்வரன், முதலிய வடமொழிச் சொற்கள் அதன்கண் காணப்படவில்லையென்றும், 'எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிது' என்றும், 'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும், அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு' என்றும் குறளில் குறிக்கப்பட்டனவேயல்லாமல் 'எல்லார்க்கும் பொதுவாய வேதத்தை நம்பு, அதன் வழி நட' என்று அதன்கண் யாண்டும் குறிக்கப்படவில்லையென்றும், ஆகலான் திரிபுணர்ச்சியாலும், கேடான பழக்கத்தாலும் வேதம் பொது என்று நம்பி நம்மவர் மோசம் போதல் தவறென்றும், இப்போதுள்ள ஆகமங்களும் 1500 - ஆண்டுகட்கு முன்னர் ஏற்பட்டனவே யென்றும், முன்னர் தமிழில் அவை இருந்திருக்கவேண்டுமென்றும், ஆகமக் கருத்துக்கள் தமிழ்க் கருத்துக்களே யென்றும், தமிழில் மந்திரங்கள் உண்டென்பதற்கு 'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழிதானே மந்திரமென்ப' என்ற திருவள்ளுவர் மொழியே போதிய சான்றாகுமென்றும், சித்தர்களின் குழூஉக் குறிப்பாஷையே இப்போதுள்ள ஆரியமாகத் திரிந்ததென்று ஓர் அறிஞர் ஆராய்ச்சி செய்து வைத்திருக்கின்றார் என்றும், ஆகலான் தமிழ்க் குழூஉக் குறிமொழிகள் ஆரியத்திற் கலந்துள்ளன வென்றும், தமிழ் நாட்டில் நடந்த திருவிளையாடற் கதைகள், பெரிய புராணக் கதைகள் எல்லாம் வடமொழியில் எழுதப்பட்டு அதனை மூலநூலாக வைத்துப் பின்னர் திருவிளையாடற் புராணமும், பெரிய புராணமும் தமிழில் எழுதப்பட்டனவென்று கூறும் கொள்கை புரட்டாகுமென்றும், தமிழை வளர்த்த மூவேந்தர் காலத்தில் நடந்த கதைகள் முதன் முதல் தமிழில் எழுதப்படா

மல் வேறு மொழியில் எழுதப்படும் என்பது அறிவுடையார் நகையாடற் பாலதே யாகுமென்றும், தமிழ்மொழி ஒரு காலத்தில் வளம்பெருகியும், இடையிற் குறைந்தும் இப்போது மீண்டும் பெருகத் தோன்றியும் வருவதே 'என்று முளதென்றமிழ்' என்பதை உறுதிப்படுத்துகின்றதென்றும், இன்னும் வேறு சில அரிய பொருள்களும் பேசிப் பசுமரத்தாணிபோல் பதியச் செய்து எல்லாரையும் மகழுமாறு செய்தார்கள்..

இவ்வாறு ஒவ்வொரு தமிழ்த்திங்கள் கடைசி ஞாயிறன்று சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெறுமென்றும். அன்பர்களனை வரும் அவ்வமயங்களினெல்லாம் வந்து கேட்டின்புறுதல் வேண்டுமென்றும் காரியாளர் வ. சுப்பையாபிள்ளை யவர்கள் தெரிவித்ததும் இரவு 8 - 15 - மணிக்குக் கூட்டம் கலைந்தது.

---

## சிதம்பரத்தில் விபூதி கொடுக்கும் முறை

[ஆ. சு. இராமலிங்க ஓதுவாமூர்த்தியவர்கள்.]

தென்காசிச் சிவாலயத்தில் பூஜாகாலத்தில் தேவாரம் ஓதும் சமயத்தில் பிராமணர்களுக்கு விபூதி முதலிய பிரசாதங்கள் கொடுத்த காரணத்தால் தேவாரம் ஒதமுடியாதபடி பெருங் கூக்குரலிட்டுக் கலகம் விளைத்த ஸ்மார்த்த பிராமணர்களின் கொடுஞ் செயல்களை செந்தமிழ்ச் செல்வி என்னும் பத்திரிகையின் வாயிலாக உணர்ந்து இச்சிறு கட்டுரை எழுதத் தொடங்கினேன்.

உலகிலுள்ள ஆலயங்களுள் சிவாலயங்களே சிறந்தன. சிவாலயங்களுள் தேவாரப்பாடல் பெற்ற திருத்தலங்களே சிறந்தன. (அவை ரிஜிஸ்டர் செய்த பத்திரங்களே போல்வன) அவைகளுள் பஞ்சபூத தலங்களே சிறந்தன. பூதங்களுட் சிறந்தது ஆகாயம் அந்த ஆகாய தலமே சிதம்பரதலம். இம்மட்டோ, கோயில் என்ற பொதுப் பெயரானே அறியப்படுந் தலம் சிதம்பரம். பாடல்பெற்ற திருத்தலங்களுக்கெல்லாம் முதலாவதாக வைத்து ஸ்தலமுறையில் எண்ணப்படும் தலம். பஞ்சகிருத்தியங் காட்டும் பரமர்பதி பொன்னம்பலத்தில் இறைவன் தன் மூவுருவங் காட்

டும் மூவாமுது நகரம். "புவலோக நெறிபடைத்த புண்ணியங்கள் நண்ணிய சீர்ச் சிவலோகமாவதூந் தில்லைச் சிற்றம்பலம்" என்னும் இன்னோரன்ன அளவிலாச் சிறப்புவாய்ந்த தலம் சிதம்பரம், தில்லை வட்டந்திசை கைதொழுவார்வினை, யொல்லைவட்டங் கடந் தோடுத லுண்மையேயென, ஆளுடைய அரசர் பெருமான் கூறி அருளுவரேயானுல் அத்தலத்தின் பெருமையை யார் அளவிடற் குரியார்?

இனி அந்தணர்களுட் சிறந்தார் தில்லைவாழந்தணர்களே யாவார். யாங்ஙனமெனின் ஸ்ரீ நடராசப் பெருமானே "நாமி வரிலொருவர்" என்று அருளின பெருமை பெற்றுர். அறு பத்து மூன்று நாயன்மார்களுள் முதலடியாராக வைத்தெண்ண வேண்டித் திருவாரூர்த் தியாகராஜப் பெருமான் சுந்தரமூர்த்தி நாயனுருக்கு அடி. எடுத்துக் கொடுக்கு முன்னிலையில் "தில்லை வாழந்தணர் என்றருளிய வகையிலும் சிறந்தா ராவர். இனிப் பெரும்பேறுென் றில்லாராய் திருவுடைத் தில்லை வாழந்தணர்கள் பெருமையை யார் அளவிட வல்லார்?

இனிச் சிவாலயங்களுட் சிறந்த சிதம்பரத்தில் அந்தணர்க ளுட்சிறந்த தில்லைவாழந்தணர் மூவாயிரவர் விபூதிப் பிரசாதத்தை எப்பொழுது வழங்குகிறுர்கள் எனின், "தேவாரம் ஓதிய பின் னரே. அம்முறையாவது நட்டப் பெருமானுக்கு நாடோறும் சாயங்கால பூஜா காலத்தில் சிற்சபைக்கு எதிரில் விளங்கும் கனக சபையில் பஞ்சாக்ஷரப்படிக்குச் சோடசோபசாரஞ் செய்வார் கள். செய்ததும் வேதமுதலிய ஓதி முன் பூஜை முறை தீக்ஷித ரவர்கள் நின்று புஷ்பாஞ்சலி பஞ்சாக்ஷரப்படி எறி சிற்சபைக் குட் சென்று குஞ்சிதபதத்திலருச்சித்து நின்று கட்டியங் கூறு பவர் கூறியபடியே தேவார திருவாசகம் முதலிய ஓதியதும் பெரிய கர்ப்பூர ஆராதனை செய்து காட்டிப் பின் இரகசிய தெரி சனம் மும்முறைகாட்டிப் பூஜை முடிந்ததும் விபூதியை மடவி னின்றும் எடுத்து முறைப்படி பிராமணர் முதலியோர்களுக்கு வழங்குகிறுர்கள். இவ்வழக்கம் இன்று தொடங்கியதன்று. ஆல யமுந் தேவாரமும் தோன்றிய காலத்திலுள்ள பழக்கம் என்று அறியக் கிடக்கின்றதோர் தக்க காட்சிப் பிரமாணம்.

இனி தேவாரம் ஓதி முடிந்தாற்றான் பூஜை முடிகிறது. இன்றேல் குறையுடைப் பூஜையாம். தேவாரம் ஓதுதற்கு முன் பூஜை நடுவில் விபூதியை யளித்தாலும் பெற்றாலும் எவ்வளவு பெருங் கொடும்பாவம்? ('பூஜை முடியுமுன் நிவேதனத்தை நுகர்தலோடொத்த பெரும் பாதகமாம்') இன்னும் பாண்டி நாட்டு ஆலயங்களில் யார் பழக்கிய பழக்கமோ அறியோம். மந்திர புஷ்பமானதும் ஒரு கர்ப்பூரங் காட்டும் வழக்கம். அதுவே இப் பிளவையுங் கலகத்தையும் உண்டுபண்ணியதெனத் தெரிகிறது. அந்த இடைக் கர்ப்பூரம் இங்கே காட்டப்படவில்லை. ஆதலின் தேவாரம் ஓதிய பின்னர் ஒரே படியாக இறுதியில் கர்ப்பூராராதனை செய்தலே தகுதியென இங்குள்ள சில அறிஞர் கருத்து. இவ்விஷயத்தைக் கோயிலதிகாரிகள் தெரிந்து செய்வித்தால் மிக நலனாகும். தென்காசி அப் பிராமணர்களும் மேலே குறித்தபடி சிரேஷ்ட ஸ்தலத்தில் சிரேஷ்ட அர்ச்சகர்களால் சிரேஷ்டவிதிப்படி செய்து வரும் பழக்க வழக்க அநுட்டானத்தைக் கடைப்பிடித்து அறிந்து அடங்கித் தேவாரம் ஓதிய பிறகு விபூதிப் பிரசாதம் பெற்றுப் பேணி யணிந்து சிவபுண்ணியம் பெருஞ் செல்வத்தைப் பெற்று இனிது வாழ்வார்களென எண்ணுகின்றோம்.

இன்றேல் அப் பிராமணர்கள் முன்பு விபூதி மடலைப் பிடுங்கி யெறிந்து மகதைஸ்வரியமான திருவெண்ணீற்றைச் சிவ சந்நிதானத்தில் சிதறிப் பிராயச்சித்தம் இல்லாத சிவாபாராதத்தைச் செய்ததும் கருணாநிதிக் கடவுள் ஆன்மாக்களுக் கருள்புரியுமாறு வீதிவலம் வரும்போது நாஸ்திகரோடொப்ப வீட்டுக் கதவுகளை அடைத்தலும் இவைபோல்வன இன்னும் அளவிலாச் சிவா பாராதங்களைச் செய்து செய்து அவைகளாலாம் பயன்களை எய்தட்டும். நாம் என் செய்வது. இறைவன் அவர்களுக்கு மனதிலுண்டாம் மயல் தீர்த்தருள் புரிவாராக.

---

## ஓர் ஐய வினா

நுண்ணிய பல தமிழ் நூல்கள் கற்றறிந்த நுவலரும் பேராற்ற லுடையீர், இச் சிறியேன் மாட்டுத் தோன்றிய ஓர்

ஐயத்தை இச் 'செல்வி'யின் வழியாகத் தீர்ப்பீரென்று கேட்டுக் கொள்ளுகிறேன். அது:

பாண்டி வளநாட்டில் பாய்கின்ற ஆறு சில நூல்களில் 'வையை' எனவும், சில நூல்களில் 'வைகை' எனவும் வழங்கப் பெறுவதே. தமிழாராய்ச்சி மிகப் பெரிதும் பரவி வந்துகொண் டிருக்கிற இக் காலத்தும் இவ் வோராற்றின் பேர் இருவகை ஆட்சிகளாக வழங்கப் பெறின் அதன் உண்மை விளங்காமலும் எவ்வாட்சி குற்ற மில்லது, எவ்வாட்சி குற்றமுள்ள தென்றும் என்போலியர்க்குத் தோன்றுமலு மொழிகின்றது.

ஆகலின், அதன் சரியான ஆட்சி இஃதென அன்பு கூர்ந்து வெளியிடுமாறு வேண்டுகிறேன். ஓர் கல்லூரிச் சிறுவன்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிட்டெட்
ஆதரவில் நடைபெறும்,

## தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம்

## 5, 6-ஆண்டுகளின் நிறைவு விழா அழைப்பு.

இச்சங்கத்தின் ஐந்து ஆறு ஆண்டுகளின் நிறைவு விழா திருவருளால் நிகழும் மெய்கண்டான் யாண்டு 704 தைத் திங்கள் 9, 10-ம் நாட்களில் (1927-ம௵ ஜனவரி௴ 22, 23-உ களில்) இந்நகர் தெப்பக் குளத்தெரு, தாயம்மையம்மாள் பெண்கல்விச் சாலையில் அமைக்கப் பெறும் கொட்டகையில் நடைபெறுவதாகும்.

அப்போது, கொரடாச்சேரி 'சித்தாந்த நிலையம்' பஞ்சாட்சரபுரம், ஸ்ரீலஸ்ரீ வாலையானந்த சுவாமிகள் தலைமை வகிக்க இணங்கியுள்ளார்கள். இவ்விரு நாட்களிலும் சமயம், ஒழுக்கம், தமிழ் மொழி இவைகளின் பெருமைகளைப்பற்றி அறிவாளர் பலர்சொற்பொழிவுகள் செய்வார்கள்.

திருமுறை, திருக்குறள், சமய பாடங்களின் பரீட்சையில் தேர்ச்சி பெற்ற மாணவர்கட்குப் பரிசும், தகுதிச் சீட்டும் வழங்கப்பெறும்.

தாங்கள் தங்கள் நண்பர் குழாங்களுடன் வந்திருந்து சொற்பொழிவுகளைச் செவி மடுத்து இன்புற்றுய்ய வேண்டுகிறோம்.

M. V. நெல்லையப்ப பிள்ளை, B.A., தலைவர்.

V. திருவரங்கம் பிள்ளை } அமைச்சர்கள்.
D. கணபதியப்ப பிள்ளை }

---

Printed by Sivakami Vilasam Press: Published by V. Subbiah, for The S I. S. S. W. P. Society, Ltd. Madras.